# கண் மருத்துவம்

(OPHTHALMOLOGY IN SIDDHA MEDICINE)

பதிப்பாசிரியர்:
வே. இரா. மாதவன்
Editor :
V. R. MADHAVAN




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. டி. டி. ஐ. தரமணி
சென்னை – 600 113
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
T.T.T.I., Taramani
MADRAS - 600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | — | Kaṉ Maruttuvam |
| Editor | — | V. R. MADHAVAN, B.Sc., M.A., B.Ed., Diploma in Manuscriptology, Diploma in Cartooning, Research Scholar, International Institute of Tamil Studies, Madras-600 113. |
| Publisher | — | International Institute of Tamil Studies, Madras-600 113. |
| Publication Number | — | 56 |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | October, 1982 |
| Papar used | — | 18 kg & 16 kg D / Demy White Printing |
| Size of the book | — | 21×18 Cms |
| Printing types used | — | 10 Point |
| Number of copies printed | — | 1200 |
| Number of Pages | — | 16+128+852=996 |
| Price | — | Rs. 50 (Rupees Fifty) |
| Printers | — | Novel Art Printers Madras-600 014. Phone : 82731 |
| Cover printing | — | Ponmani Art Printers 6, Theetharappan Street, Madras-600 005 |
| Binding | — | Half Calico |
| Artist | — | V. R. Madhavan. |
| Subject | — | OPHTHALMOLOGY IN SIDDHA MEDICINE |

செ. அரங்கநாயகம்
கல்வி அமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை-600009
8-11-82

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு 'சுவடியியல்' கல்வியைத் தொடங்கினோம். டாக்டர் உ. வே. சா. அவர்கள் தமிழ் நூல்களைப் பதிப்பித்த பின்பு அது போன்ற ஓலைச்சுவடிகளைப் படிக்கவும் பதிப்பிக்கவும் உள்ள சூழ்நிலை குறைவாக அமைந்தது. தமிழக அரசு உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனத்தின் வழி ஓலைச் சுவடிகளைப் படிக்கவும் பதிப்பிக்கவும் ஏற்பாடு செய்தது. அதன் காரணமாக இன்று அத்துறையில் பல வெளியீடுகள் தோன்றுகின்றன. இதுவரை ஓலைச் சுவடிகளில் இருந்து 10 நூல்களுக்கு மேல் இந்த நிறுவனம் வெளியிட்டுள்ளது. அதை அறிந்து மகிழ்கின்றேன். அதோடு 'சித்த வைத்தியம்' பற்றிக் கூறும் பல சுவடிகள் உலகத்தின் பல பாகங் களிலும் இருப்பதை அறிகிறோம். அதில் 'கண் மருத்துவம்' பற்றி தமிழகத்தின் கீழ்த்திசைச் சுவடி நூல் நிலையத்தில் இருந்து 7 சுவடிகளும், தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் இருந்து 3 சுவடிகளும், கேரளப் பல்கலைக் கழக சுவடி நூலகத்தில் இருந்து 4 சுவடிகளும் பெறப் பெற்று அவைகளில் உள்ள 'நயன விதி' பற்றிய செய்திகள் அனைத்தையும் தொகுத்து இதுவரை வெளிவராத 'சித்த வைத்திய கண் மருத்துவம்' பற்றிய செய்தி களை ஒரு ஆண்டு காலமாக ஆழ்ந்து நுணுகிப் பார்த்து ஆய்ந்து தொகுத்துத் தந்த ஆய்வாளர் திரு. மாதவனைப் பாராட்டு கிறேன். இதுபோன்று சமுதாயத்திற்குப் பயன்படும் பல நல்ல நூல்களை உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிடவும் நிறுவனத்தின் பணிகள் மேலும் சிறக்கவும் என் நல்வாழ்த்துகள்!

செ. அரங்கநாயகம்

# முன்னுரை

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பலவகையான நூல்களை வெளியிட்டு வருகின்றது தமிழ் இலக்கியக் கொள்கை பற்றி இது வரை 7 நூல்கள் வெளி வந்துள்ளன. தமிழ்ப் பண்பாடு பற்றி 10 நூல்களுக்கு மேல் வந்துள்ளன.

தமிழ் ஓலைச் சுவடிகளினின்றும் இதுவரை 10 நூல்களுக்கு மேல் பதிப்பிக்கப்பட்டு உரையோடு வெளியிட்டுள்ளோம். தற்போது சித்த மருத்துவம் பற்றிய நூல்களையும் வெளியிட வேண்டுமென்ற நோக்கில் 'கருவூரார் பல திரட்டு' என்ற நூலை இந்த ஆண்டு வெளியிட்டுள்ளோம் இப்போது 'கண் மருத்துவம்' பற்றி ஏறத்தாழ 14 சுவடிகளில் உள்ள கருத்துக்களையும் அது போகப் பல சுவடிகளில் வந்துள்ள 'கண்மருத்துவம்' பற்றிய செய்திகளையும் தொகுத்து இப்போது வெளியிடுகிறோம்.

திரு. மாதவன் என்ற ஆய்வாளர் மிகவும் ஆர்வத்தோடு ஒரே ஆண்டில் செய்திகள் அனைத்தையும் தொகுத்து ஆழ்ந்த நுண் அறிவோடு நுணுகி ஆய்ந்து பல விளக்கங்களோடு தந்துள்ளார். 'கண்' என்ற சொல்லைப்பற்றி எங்கெங்கு வருகின்றதோ அதை யெல்லாம் அவர் தந்துள்ளார். பொது நிலையில் கண் மருத்துவம் பற்றிய நூலாக இருந்தாலும் கண் என்னும் சொல்லாட்சி, மக்கட் பெயர்களில் கண், பழமொழிகளில் கண், விடுகதைகளில் கண், சாமுத்திரிகா லட்சணங்களில் கண் போன்ற கண் தொடர்புடைய எல்லாச் செய்திகளையும் தொகுத்துத் தந்துள்ளார். அவருடைய உழைப்பும், ஆர்வமும் மிகவும் பாராட்டத்தக்கது. திரு. மாதவன் போன்ற தமிழ் இளைஞர் சிலர் கிடைத்தால் தமிழுலகுக்குப் பல நல்ல காரியங்களைச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படுகிறது. அந்த நம்பிக்கையை அவர் என்றும் பாதுகாப்பார்

என்று நம்புகிறேன். இன்னும் இதுபோன்ற பல அரியதேவையான நல்ல நூல்களைத் திரு. மாதவன் எழுத வேண்டும் என்று நான் விரும்புகிறேன். வாழ்த்துகிறேன்.

நிறுவனப்பணிகள் அனைத்திற்கும் ஆக்கமும், ஊக்கமும் எப்போதும் தருகின்ற மாண்மிகு கல்வி அமைச்சர் திரு செ. அரங்கநாயகம் அவர்களுக்கும் எங்கள் நன்றி.

குறிப்பிட்ட காலத்திற்குள் நல்ல முறையில் அச்சிட்டுத்தந்த நாவல் ஆர்ட் உரிமையாளர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கும் நன்றி உடையேன்.

அன்பன்

9-11-1982 ச. வே. சுப்பிரமணியன்

# ஆய்வுரை

**Dr. R. THYAGARAJAN,** L. I. M.

Member, Central Council of Indian Medicine, Govt. of India, New Delhi
Hon. Consultant, Central Research Institute (Siddha), Madras-29.
Member, Scientific Advisory Board (Siddha), Central Council for Research in Ayurveda and Siddha, Govt. of India, New Delhi.
Ex-Chairman, Siddha Science Development Committee, Govt. of India, New Delhi.
Ex-Chairman, Siddha Science Development Committee, Govt. of Tamil Nadu, Madras
President, Arulmigu Palani Dhandayuthapani Swami Tirukkoil Siddha Books Publication Committee, Madras-29.
Member, Local Advisory Committee, Dr. A. Lakshmipathy Unit for Research in Indian Medicine, Madras-20.

*Res* : 58, Ayyavoo Naidu Street, Shenoy Nagar, MADRAS-600 030.

உலக மருத்துவ முறைகளில் தமிழ் மருத்துவம் மிகவும் பழமையானதும் அனுபவ பூர்வமானதும் இயற்கையானதும் ஆகும். தமிழ் மருத்துவம் பற்றிய நூல்கள் யாவும் மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்னும் நோக்கிலேயே நம் முன்னோர்கள் இவற்றைச் செவி வழியாகவும், சுவடிகளில் எழுதி வைத்தும் பாதுகாத்துள்ளனர். இடைக் காலத்தில் தோன்றிய இயற்கைச் சீற்றத்தாலும், அந்நியர் ஆட்சியாலும், தமிழரின் பாதுகாப்பு இன்மையாலும் சுவடிகள் பல மறைந்தன. சுவடிகளைப் படித்தறியும் பழக்கமும் பயிற்சியும் வர வர குறைந்தது. இதனால் சில மருத்துவ முறைகளும் வழக்கற்றன. ஆயினும் கிராமப் புறங்களிலும் சில நகர்ப் புறங்களிலும் இத்தகைய மருத்துவ முறைகள் சிறப்பாக வழக்கிலுள்ளதை அறியலாம்.

இம் மருத்துவத்தைப் பற்றிய முழு உண்மைகளும் நுணுக்கங்களும் கூறும் சுவடிகள் யாவும் இதுகாறும் நன்முறையில் அச்சிடப் படவில்லை. இவை எல்லாம் செய்யுள் வடிவிலேயே இருக்கின்றன. உரை நடையில் காண்பது மிக அரிது. ஆதலால், இந் நூல்களை எளிய உரை விளக்கங்களுடன் வெளியிட்டாலன்றி

தற்கால சித்த மருத்துவ மாணவர்களும் மேலை நாட்டு மருத்துவம் பயின்ற பேரறிஞர்களும் இவற்றை அறிந்து, மேற் கொண்டு ஆராய்ச்சி செய்து, நடைமுறையில் பெரும்பான்மை யான மக்களின் நோய் நீக்கத்திற்குப் பயன்படுத்த இயலாது. மேலும், இத்தகைய அருமையான மருத்துவ இலக்கியங்களைக் கொண்ட ஓலைச் சுவடிகள் சிதலையால் அழிந்தும் மக்கி மடிந்து கொண்டும் உள்ளன. இன்னும் சில காலம் சென்றால் இவை முழுதுமாக அழிந்துவிடக் கூடிய ஒரு நிலை காணப்படுகிறது. இது தமிழுக்கும் தமிழ்ச் சமுதாயத்திற்கும் பேரிழப்பாகி விடும். எனவே சித்த மருத்துவத்தின் தனிச் சிறப்பைப் பலரும் அறிய வேண்டு மானால் இது பற்றிய நூல்கள் பலவும் அச்சில் வெளிவர வேண்டியது அவசியமாகும். இதனால் இம் முறைகளை மற்ற மருத்துவ முறைகளோடு ஒப்பிடவும் நடைமுறைப் படுத்தவும் முடியும். இவ்வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளி யிடும் 'கண் மருத்துவம்' என்னும் இந்நூல் மிகவும் வரவேற்கத் தக்க ஒன்றாக அமைந்துள்ளது.

ஆய்வாளர் திரு. வே. இரா. மாதவன் அவர்கள் அரும்பெறும் முயற்சியுடன், கண் மருத்துவம் பற்றிய 14 சுவடிகளை அடிப்படை யாகக் கொண்டும், மிக்க பிரயாசையுடன் 300க்கும் மேற்பட்ட சித்த மருத்துவச் சுவடிகளிலுள்ள செய்திகளைத் திரட்டிச் சேர்த்தும் இந்நூலைத் தொகுத்தளித்துள்ளார்.

நூலின் உள்ளே, கண்நோய்கள் தோன்றக் காரணங்கள், அவைகளின் பெயர்கள், கருவிழி வெள்ளைவிழி, இமை, குவளை முதலிய நோய்களுக்கு மருத்துவம், மாத்திரை, குழம்பு, மை போன்ற மருந்து வகைகள் என ஒவ்வொரு பகுதியையும் தனித் தனியாக அமைத்திருப்பதுடன், குறிப்பிட்ட செய்திகளைத் தொடர்ச்சியாகவும் ஒரே இடத்திலும் அறியத் தக்க வகையில் அமைத்திருப்பது ஆராய்ச்சிக்குப் பயன்படும் வகையில் உள்ளது. இவ்வாறே ஒவ்வொரு பகுதிக்குமான விளக்கங்களைத் தொகுத் தளித்திருப்பதும் சிறப்பாக அமைந்துள்ளது.

இந்நூலில் கூறப்படும் கண் நோய்கள் பலவும் தற்கால ஆங்கில மருத்துவ நூல்களிலுள்ள கண் நோய்களின் விளக்கங் களைப் போலவே அமைந்திருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். உதாரணமாக, நாகப்படலம்- (டெரீஜியம்-pterygium), மயிர்ப்புழு

வெட்டு - (அல்சரேடிவ் ப்ளபரைட்டிஸ்-Ulcerative Blepharitis), அமரம்-(ஆப்தால்மியா நியனடோரம்-ophthalmia Neonatorum) முடமயிர்- (டிரிக்கியாசிஸ் - Trichiasis), காசம் - (காடராக்ட்-cataract) போன்றவை குறிப்பிடத்தக்கன. இவற்றை மேலும் ஆராய்ந்தால், தமிழர்கள் பல்லாண்டுகளுக்கு முன்பாகவே இந் நோய்களைப் பற்றி அறிந்து வெளியிட்டிருப்பது நன்கு புலனாகும்

இந்நூலில் காணும் மருந்துகளும் அதனைப் பயன்படுத்தும் முறைகளும் பல்லாண்டு காலமாகத் தமிழகத்தில் வழக்கில் உள்ள வையே. மேலும், யாழ்ப்பாணம், மலையாளம் போன்ற பிற நாடுகளிலும் இவை இன்றும் வழக்கிலுள்ளதை அறியலாம். தஞ்சை அரச பரம்பரை மருத்துவர் திரு. டி. எஸ் அமிர்தலிங்கம் பிள்ளை மற்றும் மேஜர் எம். ஏ. நாயர் போன்ற சிறந்த மருத்து வர்கள் சென்னை, கீழ்ப்பாக்கம் முன்னாள் இந்திய மருத்துவக் கல்லூரியில் கண் மருத்துவத் துறையில் இம் மருந்துகளைச் செய்து நோயாளிகளுக்கு அளித்து வெற்றி கண்டுள்ளனர். தற்போது இந்திய மருத்துவக் கூட்டுறவு மருந்துசெய் நிறுவனமும் சில மருந்துகளைச் செய்து வருகிறது. எனவே, இம் மருந்துகள் சக்தி வாய்ந்தவை என்பதுடன் தற்காலத்திற்கும் ஏற்றவை என்பதில் ஐயமில்லை. ஆயினும், இவற்றை மிகுந்த அனுபவத்துடன் முறைப்படி செய்தளித்துத் தக்க முறையில் பயன்படுத்துவது கவனிக்க வேண்டியதாகும்.

பொதுவாக நோக்குமிடத்து, இந்நூல் சித்த மருத்துவ ஆராய்ச்சியாளர்களுக்கும், மாணவர்களுக்கும் உதவும் வகையில் அமைந்துள்ளது. சிறப்பாக, புதுதில்லி ஆயுர்வேத, சித்த மைய ஆராய்ச்சிக் கழகம் நடத்தும் ஆராய்ச்சி நிலையங்களில் இந்நூலில் கூறப் பெற்ற மருந்துகளைத் தயாரித்து நோய்களுக்குப் பயன் படுத்தி ஆராய்ச்சி செய்தளித்தால் மருத்துவர்களுக்கும் மக்களுக் கும் மிகப் பயன்படும் எனக் கூற விழைகிறேன்.

தமிழில் கண் மருத்துவம் பற்றிய சுவடிகள் சில முன்பே பதிப் பிக்கப்பட்டிருப்பினும், இன்று கிடைக்கக்கூடிய பல சுவடிகளையும் தேர்ந்தெடுத்து, ஒப்பிட்டு, தேவையான செய்திகள் எல்லாவற்றை யும் முறைப்படிச் சேர்த்து இந்நூல் பதிப்பிக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். சுமார் 45 ஆண்டுகளுக்கு மேலாகத் தமிழ் மருத்துவத்துறையில் பழகி இருப்பதுடன், நூல்கள் பல வற்றிற்கும் உரை எழுதிப் பதிப்பிக்கும் பணியினையும் யான்

செய்துள்ளதால், இந்நூல்களைச் சுவடிகளிலிருந்து பதிப்பிப்பதில் உள்ள சிக்கல்களையும் இடர்ப்பாடுகளையும் நான் நன்கறிவேன். அடிப்படை மருத்துவப் புலமையோடு சுவடிகளைப் படித்தறியும் தமிழ்ப் புலமையும் உள்ளவர்களாலேயே இத்தகைய நூல்களை உருவாக்க முடியும். இவ்வகையில் இந்நூலினை மிகவும் சிறப் பான முறையில் பதிப்பித்துள்ள திரு. வே. இரா. மாதவன் அவர் களை நான் பாராட்டுகிறேன்.

இந்நூலின் சிற்சில பகுதிகளில் சில எழுத்துப் பிழைகளும் சொற் பிழைகளும் கலந்துள்ளன. இவற்றை இனி வரும் பதிப்பில் தவிர்ப்பது நலம் எனக் கருதுகிறேன்.

இது போன்று பயன்படக் கூடிய பல நூல்களை திரு மாதவன் உலகிற்கு உருவாக்கித் தருவார் என நம்புகிறேன்.

சென்னை-600 030
13-11-1982

**இரா. தியாகராஜன்**

முன்னாள் துணை முதல்வர்,
இந்திய மருத்துவக் கல்லூரி
பாளையங்கோட்டை

பொறுப்பு அலுவலர்,
சித்த மருத்துவ மைய ஆராய்ச்சி நிலையம்
அரும்பாக்கம், சென்னை - 600 106.

71

# வாழ்த்துரை

**Dr. LALITHA KAMESWARAN**

M.B., B.S., Ph.D. (LOND)., F.C.A.I.
FELLOW TAMIL NADU ACADEMY OF SCIENCES
DEAN
MADRAS MEDICAL COLLEGE
AND
GOVERNMENT GENERAL HOSPITAL
MADRAS - 600 003.

ஒரு நாட்டின் வரலாற்றை வைத்து அந்த நாட்டு மக்களின் நாகரிகத்தை அளவிடும் போது, பண்பாடு, கலாச்சாரம் இவைகளின் முன்னேற்றத்திற்கான சான்றாக, சிற்பம், நாடகம், இலக்கியம், இசை, நடனம் ஆகியவற்றின் வளர்ச்சியைக் கணிப்பது போல், மருத்துவத்துறையின் வளர்ச்சியும் மிக முக்கியமான ஒரு அளவு கோலாகும். தென்நாட்டைப் பொருத்த வரையில் தமிழர் பண்பாட்டின் சாரமாக உருவாகிய மருத்துவ வழக்கு "சித்த மருத்துவம்". உலகின் மற்ற மருத்துவ வழக்குகளுடன் அவ்வப் போது கலந்துறவு பெற்று மருத்துவக் கருத்துகளை ஈந்தும் கடன் வாங்கியும் தனக்கே உரித்தான பாணியில் வளர்ச்சியடைந்திருக்கிறது இந்தத் தமிழர் மருத்துவம். சித்த மருத்துவத்தின் வளர்ச்சிக் குறிகள், புதுக்கருத்துகள், இவைகளைப்பற்றிய ஆராய்ச்சி தமிழர் வரலாற்றையும் பண்பாட்டையும் உணர ஒரு முக்கியமான வழியாகும். இத்துறையில் ஆராய்ச்சிக்கு வேண்டிய மூலப்பொருள் நூல்கள். ஆதாரப்பூர்வமாக இடைச்செருகல்கள் இன்றி பழைய ஓலைச்சுவடிகளைத் துருவி ஆராய்ந்து தமிழ் தெரிந்த ஆராய்ச்சி மாணவர்கள் மேற்பார்வையில் பழந்தமிழ் சித்த மருத்துவ நூல்களை வெளியிடும் முயற்சி ஒரு சிறந்தமுயற்சி. அதிலும் ஒவ்வொரு உறுப்பாக, அல்லது ஒரு நோயாக, அல்லது ஒரு நோய்க்குறியாகத் தேர்ந்தெடுத்து, அதுபற்றி செய்திகளைச் சேகரித்து நூல்வடி

வாக்கித் தருவது ஆராய்ச்சியாளர்களுக்குப் பெரிதும் பயனுள்ள ஒன்றாகும், பதிப்பாசிரியர் வே. இரா. மாதவன் அவர்களின் சீரிய முயற்சியும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முயற்சியும் பாராட்டப்படவேண்டியதாகும். தொடர்புடைய செய்யுள்களைச் சேகரித்து வழங்கியதுடன், பொருள் தெளிவுபெற விளக்கங்களைச் சேர்த்திருப்பதை மிகவும் வரவேற்கிறேன். மேலும் நூல் ஆய்வு என்ற தலைப்பில் நூலின் முதல் பகுதியிலேயே நூலைப்பற்றிய பல குறிப்புகள். வரலாற்றுச் செய்திகள், ஆசிரியர்களாகிய சித்தர் களைப்பற்றி பரவலாக வழங்கும் வரலாற்றுச் செய்திகள், கல் வெட்டுகள், பிற இலக்கியங்களில் வரும் மருத்துவச் செய்திகளைத் தொகுத்துத் தந்திருப்பது பெரும் பயனை அளிக்கும். இதே பாணியில் இன்னும் பல நூல்கள் வரவேண்டும் என்று விழை கிறேன்.

வாழ்க நிறுவனத்தின் முயற்சி.

சென்னை-600 003
17-11 1982

**லலிதா காமேசுவரன்**

# நன்றியுரை

தமிழ் மருத்துவத்தையே என் முன்னோர் தொழிலாகக் கொண்டிருந்தனர். அவர் வழி வந்த என்னையும் மருத்துவம் பற்றிய நூலையே முதன் முதலாகப் பதிப்பிக்கு மாறு பணித்த திருவருளை இறைஞ்சுகின்றேன்.

'கண் மருத்துவம்' என்னும் இந்நூல் வெளிவர முதற் காரண மாக விளங்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன். எம். ஏ., பிஎச். டி., அவர் களுக்கு என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கான சுவடிகளைத் தேடுவதிலும், தொகுப்பதிலும் முறைப்படுத்துவதிலும் உதவிய திரு பூ. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.லிட்., பி. டி, அவர்களுக்கும், இந்நூலைச் செம்மைபடுத்துவதில் உதவிய பேராசிரியர். திரு. ஆ. சிவலிங்கனார் அவர்களுக்கும் பெரிதும் நன்றியுடையேன்.

இந்நூலில் அவ்வப்போது ஐயங்களை எழுப்பி, ஐயம் அறுத்த பாலகவி. திரு. மு. கோ. ராமன் அவர்களுக்கும், திருவனந்தபுரம் சுவடிகள் சிலவற்றைப் படியெடுத்துதவிய செல்வி. இரா. நிர்மலா தேவி, எம். ஏ., அவர்களுக்கும், நூல் நிறைவுறும் தருவாயில் சொல்லடைவு போன்ற தொகுப்புகளுக்கு உடனிருந்து உதவிய செல்வி. வே. இரா. பத்மினி, எம். ஏ., அவர்களுக்கும் என் நன்றி உரித்தாகிறது.

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள மருத்துவச் சுவடிகளைப் பார்வையிடவும், குறிப்பிட்ட சில வற்றைப் படியெடுக்கவும் இசைவு தந்து உதவிய நூலகக் காப் பாட்சியர் திரு. ரா. பாஸ்கரன், எம். ஏ, அவர்களுக்கும் நூலகப் பணியாளர்களுக்கும் மிகவும் நன்றி கூறக் கடமைப் பட்டுள்ளேன்.

இந்நூலுக்கு ஆய்வுரை அளித்துச் சிறப்பித்துள்ள டாக்டர் இரா. தியாகராஜன், எல் ஐ எம்., அவர்களுக்கும், வாழ்த்துரை வழங்கிப் பாராட்டியுள்ள டாக்டர் லலிதா காமேசுவரன், எம். பி., பி.எஸ்., பிஎச்.டி., (லண்டன்) எப்.சி.ஏ.ஐ., அவர்களுக்கும் மிக்க நன்றியுடையவனாவேன்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிச் சிறப்பித்திருக்கும் தமிழ் நாடு கல்வியமைச்சர், மாண்புமிகு. செ. அரங்கநாயகம் அவர் களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூலை உரிய முறையில் சிறப்பாக அச்சிட்டு உதவிய 'நாவல் ஆர்ட்' அச்சகத்தார்க்கும் என் நன்றி உரித்தாகிறது.

சென்னை 600 113<br>17-11-1982

**வே. இரா. மாதவன்**

# உள்ளே


| | | |
|---|---|---|
| | அணிந்துரை | iii |
| | முன்னுரை | v |
| | ஆய்வுரை | vii |
| | வாழ்த்துரை | xi |
| | நன்றியுரை | xiii |
| | பதிப்புரை | க—கரு |
| | நூல் ஆய்வு | கச — கஉரு |
| | நூல் | |
| 1. | பொதுச் செய்திகள் | 1— 10 |
| 2. | கண் நோய்கள் தோன்றக் காரணங்கள் | 11— 21 |
| 3. | கண் நோய்களின் பெயர்கள் | 22— 39 |
| 4. | கருவிழி நோய்களும் மருத்துவமும் | 40—146 |
| 5. | வெள்ளைவிழி நோய்களும் மருத்துவமும் | 147—160 |
| 6. | இமை நோய்களும் மருத்துவமும் | 162—193 |
| 7. | குவளை நோய்களும் மருத்துவமும் | 194—230 |
| 8. | பொது நோய்களும் மருத்துவமும் | 231—340 |
| | பொது மருந்து வகைகள் | |
| 9. | மாத்திரை வகைகள் | 343—457 |
| 10. | குழம்பு வகைகள் | 458—481 |
| 11. | தைல வகைகள் | 482—543 |
| 12. | நெய் வகைகள் | 544—549 |
| 13. | மை வகைகள் | 550—575 |
| 14. | பொடி வகைகள் | 576—583 |
| 15. | புகை வகைகள் | 584—578 |
| 16. | வேது வகைகள் | 579—588 |
| 17. | பொட்டண வகைகள் | 589—592 |

18. நசிய வகைகள் 594—599
19. காதிலிடும் மருந்து, புறவளையம் 600—602
20. பத்திய முறைகள் 603—631
மருந்துப் பொருள் குணம் 633—778
நோயும் மருந்தும் 779—785
மருந்துப் பொருள்கள் 786—799
பிற்சேர்க்கை 1 800—811
பிற்சேர்க்கை 2 812—817
பாடல் முதற்குறிப்பு 818—831
அருஞ்சொற்கள் 832—845
துணைநூற்பட்டியல் 846—849
பிழை திருத்தம் 850—852

# குறியீடுகள்: சுருக்கெழுத்துகளின் விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | — | அகநானூறு |
| ஐங். | — | ஐங்குறுநூறு |
| கம்ப. | — | கம்பராமாயணம் |
| கலி. | — | கலித்தொகை |
| கலிங். | - | கலிங்கத்துப்பரணி |
| குமர. | — | குமரகுருபரர் |
| குறள். | — | திருக்குறள் |
| குறுந். | — | குறுந்தொகை |
| சிலப். | — | சிலப்பதிகாரம் |
| சீவக. | — | சீவகசிந்தாமணி |
| தாயு. | — | தாயுமானவர் |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நற். | — | நற்றிணை |
| பக். | — | பக்கம் |
| பரி. | — | பரிபாடல் |
| பதிப். | — | பதிப்பாசிரியர் |
| பதிற். | — | பதிற்றுப்பத்து |
| பா. எண். | — | பாடல் எண்கள் |
| பா. வே. | — | பாட வேறுபாடு |
| புறம். | — | புறநானூறு |
| ... | — | சிதைந்தவை நிரப்பப்படாது விடப்பட்டன |
| (   ) | — | பதிப்பாசிரியரால் இடப்பட்டவை |

# பதிப்புரை

தமிழர் நாகரிகத்தின் மேன்மைக்கோர் எடுத்துக் காட்டாய் விளங்குவது தமிழ் மருத்துவக்கலை. இக்கலைத் தொடர்பான நூல்கள் பலவும் சுவடி வடிவில் வழி வழி பாதுகாக்கப்பட்டு வந்துள்ளன. தமிழில் இன்று கிடைக்கக் கூடிய ஏட்டுச் சுவடிகளில் அறுபது விழுக்காட்டிற்கும் மேலாக மருத்துவ நூல்களே உள்ளன. இவற்றுள், ஐந்து விழுக்காட்டிற்கும் குறைவான ஏடுகளே அச்சில் பதிப்பிக்கப்பட்டுள்ளன எனலாம். மற்றவை சுவடி வடிவிலேயே பலவிடங்களிலும் இருக்கக் காணலாம்.

பல்லாண்டு காலமாகப் பழக்கத்தில் உள்ள, அரிய மருத்துவ முறைகளைக் கொண்டுள்ள இந்நூல்களைப் பதிப்பித்து வெளியிடுவதால் மருத்துவத் துறையில் அரிய பல உண்மைகள் புலனாகக் கூடும். மேலும், இன்றைய அறிவியல் உலகில் எவ்வொரு செய்தியையும் ஒருங்கே திரட்டிக் காண்பதென்பதும் மிகவும் தேவையாக உள்ளது.

தமிழ் மருத்துவத்துறையில், மனிதனின் 'கண்' என்னும் ஓர் உறுப்பினை மட்டும் ஆராய்ந்து, அதில் தோன்றக் கூடிய நோய்களையும் அவற்றிற்கான மருத்துவ முறைகளையும் விளக்கும் பல சுவடிகளையும் ஒப்புநோக்கி, அவற்றை ஒருங்கே தொகுத்தளிக்கும் முறையில் இந்நூல் முதலாவதாகப் பதிப்பிக்கப்படுகிறது.

## சுவடிகளைப் பற்றிய செய்திகள்

கண் மருத்துவம் என்னும் இந்நூலின் பதிப்பிற்காக மூன்று சுவடி நூலகங்களிலிருந்து செய்திகள் தொகுக்கப்பட்டன. அவை,

1. அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.
2. தஞ்சை சரசுவதி மகால் சுவடி நூலகம், தஞ்சாவூர்.
3. கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகம், திருவனந்தபுரம்.

இவற்றுள், கண் மருத்துவம் பற்றி மட்டுமே கூறும் சுவடிகள் 14 ஆகும். அவை,

| | தலைப்பு | சுவடி எண் | பா. எண்ணிக்கை |
|---|---|---|---|
| **1.** | **அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.** | | |
| 1. | அகத்தியர் நயன விதி | R. 7588 | 291 |
| 2. | அகத்தியர் நேத்திர வாகடம் | R. 2542 | 250 |
| 3. | அகத்தியர் சஞ்சீவி | R. 5805 | 94 |
| 4. | நயன வைத்திய விதி | D. 1956 | 95 |
| 5. | நயன விதி | R. 1803 | 189 |
| 6. | கண் வைத்தியம் | R. 2516 | 198 |
| 7. | கண் வைத்தியம் | R. 413 | 105 |
| **2.** | **தஞ்சை சரசுவதி மகால் சுவடி நூலகம், தஞ்சாவூர்.** | | |
| 8. | அகத்தியர் நயனவிதி | M. 10 | 345 |
| 9. | அகத்தியர் நயனவிதி | M. 11 | 3[illegible]3 |
| 10. | நயன சாத்திரம் | 143b | 54 |
| **3.** | **கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நூலகம், திருவனந்தபுரம்.** | | |
| 11. | நயனவிதி | 3239b | 50 |
| 12. | நயனவிதி வாகடம் | 8867a | 92 |
| 13. | நயனவிதி | 1451b | 14 |
| 14. | நயனவிதி | 8873 | 22 |

இவற்றுடன், மருத்துவம் பற்றிப் பொதுவாகக் கூறும் 300க்கும் மேற்பட்ட சுவடிகளிலிருந்தும் செய்திகள் தொகுக்கப்பட்டுள்ளன. அவை,

**அரசினர் கீழ்த் திசைச் சுவடிகள் நூலகம், சென்னை.**

1. அகத்தியர் சூத்திரம், அகத்தியர் வாகடம், அகத்தியர் வைத்தியம், அகத்தியர் குழம்பு, அகத்தியர் சஞ்சீவி போன்ற தலைப்புகளிலுள்ள சுவடிகள்—150.
2. அனுபவ வைத்தியம், அனுபவ வைத்திய வசனம், அனுபவ வைத்திய ரத்தினச் சுருக்கம், வைத்தியம் போன்ற தலைப்புகளிலுள்ள சுவடிகள்—100.

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | தன்வந்திரி | வைத்தியம் | 21 | சுவடிகள் |
| 4. | திருமூலர் | ,, | 10 | ,, |
| 5 | தேரையர் | ,, | 12 | ,, |
| 6. | போகர் | ,, | 26 | ,, |
| 7. | கருவூரார் | ,, | 4 | ,, |
| 8. | இராமதேவர் | ,, | 16 | ,, |
| 9. | புலிப் பாணி | ,, | 10 | ,, |
| 10. | யூகி முனி | ,, | 2 | ,, |

## சுவடிகளின் புற அமைதி

மேற்கண்டவற்றுள் ஓலைச் சுவடிகளே மிகுதியாக உள்ளன. சில தாள்களில் எழுதப்பட்டவையாகவும் உள்ளன.

**ஓலைச் சுவடிகள்:** எல்லாச் சுவடிகளும் ஒரே அமைப்பினை உடையனவல்ல. சில மிக நீளமான ஏடுகளாகவும், சில மிக குட்டையான ஏடுகளாகவும் உள்ளன. இவற்றுள், பல சுவடிகள் நல்ல நிலையிலிருப்பினும், சில மிகவும் சிதைவுற்ற நிலையிலும் காணப்படுகின்றன. சில சுவடிகளில் சில ஏடுகள் விடுபட்டும் சில ஏடுகள் முறை மாறியும் காணப்படுகின்றன.

**காகிதச் சுவடிகள்:** இவை பெரும்பாலும் சிதைவுற்ற பழைய ஓலைச் சுவடிகளிலிருந்து பிரதி செய்யப்பட்டவையாகவே உள்ளன. இவை மிகவும் அண்மையில் (30 அல்லது 40 ஆண்டுகளுக்கு முன்பாக) எழுதப்பட்டவையே. இவை யாவும் நல்ல முறையில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன.

## சுவடிகளின் அக அமைதி

ஓலைச் சுவடிகளைப் பொறுத்தவரையில் எல்லா ஏடுகளிலும் முறையாக இருபக்கங்களிலும் தொடர்ச்சியாகப் பாடல்கள்

எழுதப்பட்டுள்ளன. சில சுவடிகளில் எழுத்துக்கள் தெளிவாகவும் ஓரே சீராகவும் அமைந்துள்ளன. சிலவற்றில் எழுத்துக்கள் தெளிவில்லாமல் கிறுக்கலாகவும்காணப்படுகின்றன. ஏடுகளின் ஓரங்களில் இடம்விட்டு எழுதுதல், பாடல்களுக்கு எண்கள் இடுதல் போன்றவை எல்லாச் சுவடிகளிலும் முறையாகப் பின்பற்றப் பட்டுள்ளன.

தவறாக எழுதப்பட்ட சில எழுத்துக்கள் அடிக்கப்பட்டும், விடுபட்டுள்ள சில எழுத்துக்களும் சொற்களும் அங்கங்கே சேர்க்கப் பட்டும் உள்ள நிலைகளையும் பல சுவடிகளில் காணமுடிகிறது.

**எண்கள்:** ஏடுகளின் பக்க எண்கள், பாடல் எண்கள், சில அளவு முறைகள் இவை யாவும் தமிழ் எண்களில் எழுதப்பட் டுள்ளன. ஏடுகளின் ஒவ்வொரு பக்கத்திலும் இத்தகைய எண்கள் உள்ளன. இவ்வாறே, ஒவ்வொரு பாடல் முடிவிலும் எண்கள் குறிக்கப்பட்டுள்ளன.

காகிதச் சுவடிகளைப் பொறுத்தவரையில் அவை அளவில் பெரியனவாக இருப்பினும், ஓலைச் சுவடிகளில் உள்ளவற்றை அப்படியே பிரதி செய்யும் முறையிலேயே எழுதப்பட்டுள்ளன. இவற்றில் உள்ள எழுத்துக்கள் தெளிவாக இருக்கின்றன. ஆயினும் ஓலைச்சுவடியில் புரியாத சில எழுத்துக்களும், விடுபட்ட சொற் களும் அப்படியே எழுதப்பட்டுள்ளன.

**தலைப்புகள்:** ஓலைச் சுவடிகளில் ஏடுகளின் இடது பக்க ஓரங்களில் நூலிலுள்ள செய்திகளுக்கான தலைப்புகள் எழுதப் பட்டுள்ளன. இவை, நோய்களின் பெயர்கள் (அமரம், பில்லம், வெள்ளெழுத்து போன்றவை), மருந்துகளின் பெயர்கள் (சந்தனாதித் தைலம், புடலாதி கிருதம் போன்றவை), இன்ன நோய்க்கு இன்ன மருந்துகள் (காசத்திற்கு மாத்திரை, பற்பரோக மாத்திரை போன்றவை) என்ற முறையிலும் பொருள் நிலைக் கேற்றவாறு எழுதப்பட்டுள்ளன. இத்தலைப்புகளைக் கொண்டு அந்தந்த பக்கங்களிலுள்ள தொடர்பான செய்திகளை நன்கு அறியமுடிகிறது.

**எழுத்தமைதி:** பெருப்பாலான சுவடிகளில் மெய்யெழுத்து களுக்குப் புள்ளி இடப்படவில்லை. ெ, ே, ா, ர இவற்றிற்கான வேறுபாடுகளை அறியமுடியவில்லை. க, ச; க, த; ப, ம; ய, ப; போன்ற எழுத்துக்கள் ஒன்றற்கொன்று மயங்கும்படியான நிலை யிலேயே பல சுவடிகளிலும் எழுதப்பட்டுள்ளன.

மெய்யெழுத்துக்களை அடுத்து வரும் எழுத்துக்கள் (க்க, த்த, ட்ட, ப்ப, ச்ச போன்றவை) இணைந்து கூட்டெழுத்துகளாகவே எழுதப் பட்டுள்ளன. இடத்திற்கேற்பப் பொருளுணர்ந்தே இவற்றை அறிய முடிகிறது.

**யாப்பமைதி:** பெரும்பாலான சுவடிகளில் உள்ள மருத்துவச் செய்திகள் செய்யுள் நடையிலும், சிலவற்றுள் உரை நடையிலும் உள்ளன.

எண்சீர், ஆறுசீர், ஏழுசீர்கள் உள்ள விருத்தப்பா வகைகளே மிகுதியாக உள்ளன. வெண்பா, அகவல் போன்ற வகைகளும் உள்ளன. இவ்வகைகளுள் அடங்காத சில பாடல்களும் இடை யிடையே காணப் படுகின்றன.

பல பாடல்களும் அந்தாதித் தொடையிலேயே அமைந் துள்ளன. மருந்து செய்முறைகளைத் தொடர்ச்சியாகக் கூறு வதற்கு இது மிகவும் பயனுள்ளதாக இருப்பதால் இதையே பல சுவடிகளிலும் பின்பற்றப் பட்டுள்ளன.

பாடல்கள் யாவும் அசை, சீர், அடி என்னும் வேறுபாடு இல்லாமல் ஏடுகளின் இடது கோடி முதல் வலது கோடி வரை ஒரே தொடர்ச்சியாகவே பல சுவடிகளிலும் எழுதப் பட்டுள்ளன.

**பொருளமைதி:** இதுவரை கிடைத்துள்ள 14 சுவடிகளில் 'கண்மருத்துவம்' என்னும் பொருளிலேயே செய்திகள் தொகுத்துக் கூறப்படுகின்றன. மற்ற சுவடிகளில் இது தொடர்பான செய்திகள் இடையிடையே கூறப்பட்டுள்ளன.

**காலம்:** இங்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள சுவடிகள் எதிலும் அவற்றின் காலத்தை அறியக் கூடிய சான்றுகள் எழுதப் படவில்லை. அவற்றில் காணப் பெறும் மொழிநடை, சில குறிகள், எண்கள் மற்றும் சில வழக்காற்றுச் சொற்கள் போன்ற வற்றைக் கொண்டே சுவடிகளின் கால நிலையை நாம் ஒருவாறு அறிய முடியும்.

## பதிப்பில் நிகழ்ந்தவை

தமிழ் மருத்துவத் துறையில் கண் மருத்துவம் தொடர்பான செய்திகளைப் பல சுவடிகளும் விரிவாகக் கூறக் காணலாம். ஆயினும், கண்ணில் நோய் தோன்றக் காரணம், நோய்களின் பெயர்கள், தன்மைகள், அவற்றைத் தீர்க்கும் மருத்துவ முறைகள் போன்றவற்றைச் சில சுவடிகளில் மட்டுமே முறையாக அறிய

முடிகிறது. வேறு சில சுவடிகளில் மேற்காணும் செய்திகள் சில விடுபட்டும் வேறுபட்டும் காணப்படுகின்றன. பொதுவாக நோக்கு மிடத்து, தமிழில் இதுவரை அறியக் கூடிய கண் மருத்துவம் தொடர்பான விளக்கங்கள் யாவும் ஒரே சுவடியில் காணப்பட வில்லை. அவை யாவும் பல சுவடிகளிலும் பலவாறு சிதறியே காணப் படுகின்றன.

'அகத்தியர் நயனவிதி' போன்ற கண் மருத்துவம் பற்றிய சுவடிகளே இந்நூலுக்கு அடிப்படையாக அமைகின்றன. அத் துடன், தமிழ் மருத்துவத்தில் பொதுவாகக் கூறப்படும் மருத்துவ முறைகளில் கண் மருத்துவம் பற்றிய சில அனுபவ முறைகள் மிகவும் பயனுள்ளவாக இருக்கும் என்னும் நோக்கில், இத்தகைய மருத்துவச் சுவடிகள் பலவும் ஆராயப்பட்டு அவற்றில் கண் மருத்துவத்திற் கென்றே கூறப்படும் பல செய்திகளும் இந்நூலுள் தொகுக்கப்பட்டுள்ளன. இதனால், தொடர்பான செய்திகள் பலவற்றையும் தெளிவாக அறிய முடிகிறது.

மேற்காணும் சுவடிகளிலுள்ள செய்திகளை முழுவதுமாகத் தொகுத்துக் காணுமிடத்து 2500க்கும் மேற்பட்ட பாடல்கள் கண் மருத்துவம் தொடர்பாகக் கிடைக்கின்றன. இவற்றுள், ஒரே செய்தியைப் பற்றி விளக்கும் ஒரே மாதிரியான பாடல்கள் பலவும் உள்ளன. இவற்றை முறைப்படி ஒழுங்கு படுத்தி இந்நூல் பதிப்பிக்கப் படுகிறது.

**நூல் தலைப்பு:** அகத்தியர் நயனவிதி, அகத்தியர் நேத்திர வாகடம் என ஆசிரியர் பெயரிலும், நயனவிதி, நயனசாத்திரம், கண் வைத்தியம் எனப் பொதுவான பெயரிலும் சுவடிகளில் தலைப்பு கொடுக்கப் பட்டுள்ளன. இவை அனைத்துச் சுவடிகளின் தொகுப்பாகவும், கண் என்னும் உறுப்பில் தோன்றும் நோய்களுக் கான மருத்துவச் செய்திகளை விளக்குவதாகவும் இந்நூல் விளங்குவதால் இந்நூலுக்குக் 'கண் மருத்துவம்' என்றே தலைப்பை அளித்துள்ளேன். கண் என்னும் சொல்லும், மருத்துவம் என்னும் சொல்லும் தமிழில் மிகவும் பொருத்த முடையனவாயும் பொருளுடையனவாயும் காணப் படுவதால் இத் தலைப்பு இந்நூலுக்குப் பொருந்தும்.

**உள் தலைப்புகள்:** சுவடிகளில்கூறப்படும்மருத்துவச்செய்திகளை யாவரும் தெளிவாகத் தொகுத்தறியும் வகையில் உள் தலைப்பு களை அமைத்துள்ளேன். எடுத்துக் கொள்ளப் பட்டுள்ள இத்

தலைப்புகளுக்கேற்றவாறு செய்திகளை முறைப்படுத்தி அந்தந்த உள் தலைப்புகளின் கீழே இணைத்துச் சேர்த்திருக்கிறேன். சான்றாக, பல சுவடிகளில் காணப்படும் கண் நோய்களுக்கான காரணங்கள், கருவிழி, வெள்ளைவிழி, இமை, குவளை போன்றவற்றில் தனித்தனியே தோன்றும் நோய்கள், அவற்றிற்கான மருந்துகள் போன்றவற்றை அந்தந்த தலைப்புகளின் கீழே ஒன்றாகத் தொகுத்திருக்கிறேன்.

**சிறு தலைப்புகள்:** சில சுவடிகளில் சிறு தலைப்புகள் காணப்படுவதை அப்படியே அமைத்தும், சில பகுதிகளுக்குப் பொருத்தமான தலைப்புகளை அங்கங்கே புதிதாக சேர்த்ததைப் பிறை வடிவ அடைப்புக் குறிக்குள்ளும் அமைத்துள்ளேன்.

இதே வகையில் நோய்கள் கூறப்படுமிடங்களிலும் அமைத்துள்ளேன். சான்றாக, 'வெள்ளெழுத்து' என்னும் நோய்க்கான மருந்துகளைக் கூறுமிடத்து, பல சுவடிகளிலுள்ள செய்திகளையும் அத்தலைப்பின் கீழேயே ஒன்றாகத் தொகுத்துள்ளதைக் காண்க.

பெரும்பாலான சுவடிகளில் இன்ன நோய்க்கு இன்ன மருந்து எனத் தனித்தனியே கூறப்பட்டிருப்பினும், வேறு சில சுவடிகளில் 'கண் நோய்கள் குணமாவதற்கான மருந்துகள்' என்னும் முறையிலேயே சில மருந்து வகைகள் கூறப்படுகின்றன. சில சுவடிகளில் கண் நோய்கள் தீர மாத்திரை, மை, தைலம் போன்றவை தனித்தனியே கூறப்படுகின்றன. இவற்றையும் தொகுத்து, மாத்திரை குழம்பு, தைலம், நெய், மை, புகை, போன்ற பொருத்தமான உள் தலைப்புகளின் கீழ் ஒன்றாக இணைத்து அமைத்துள்ளேன்.

**பாடல் எண்கள்:** இந்நூலுள் மொத்தம் 20 தலைப்புகளில் செய்திகள் தொகுக்கப் பட்டுள்ளன. இவற்றில் காணும் பாடல்களுக்கான எண்கள் தொடர்ச்சியாகக் கொடுக்கப் பட்டுள்ளன. பாடல் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு எண்ணும், இடையிடையே ஒவ்வொரு மருந்தைக் கூறும் உரைநடைப் பகுதி ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு எண்ணுமாக வரிசை எண்ணை 1 முதல் 1780 வரை தொடர்ச்சியாக அளித்துள்ளேன்.

## பதிப்பில் திருத்தங்கள்

முன்னோர் மொழிப் பொருளைப் பொன்னே போல் போற்றிக் காப்பது சுவடிப் பதிப்பில் மிகவும் இன்றியமையாதது. சுவடி

பதிப்பிப்போர் ஓர் எழுத்தையும் மாற்றுதல் என்பது பெருந் தவறாகும் என்றும் கூறுவர்.[1]

இவ்வகையில் பதிப்பிக்குமிடத்து சில இடங்களில், ஏடு எழுதுவோரால் நேர்ந்த பிழை என உறுதியாக நம்பிய சில இடங்களில் சில எழுத்துக்களை, அல்லது சில சொற்களைப் பிறை வடிவ அடைப்புக் குறிக்குள் அமைத்தும் சில பதிப்பாசிரியர்கள் பதிப்பித்துள்ளனர். இம்முறை மிகவும் பொருத்த முடையதே ஆகும். ஆயினும், இதுபற்றிய வேறு சில கருத்துக்களும் பதிப்புத்துறையில் தற்போது பின்பற்றப் படுவதைக் காணலாம்.

''பிழைபட எழுதப்பட்ட தொடர்களை அப்படியே பதிப்பிப்பதோ, அடைப்புக் குறிகளைப் பயன்படுத்திப் பதிப்பிப்பதோ நூலை முழுமையாக்கித் தரும் பதிப்பு முறையாகாது. கற்போர் முறையே எளிதில் பொருள் விளங்கிக் கொள்ள இயலாத நிலையையும், மிக ஆழ்ந்து படித்துச் சொற்களை முழுமையாக அறிந்து கொள்ளக் கூடிய நிலையையும் இது உண்டாக்கி விடுகிறது. இதனால், நூல்களில் வெறுப்புணர்ச்சி தோன்றி விடுவதையும் அறிகிறோம். பதிப்பிக்கும் நூலைச் சிறந்த முறையில் பொருள் விளங்கிப் பயன்படுத்தும் அளவிற்கு மக்களிடையே முழுமையாக்கித் தருவது பதிப்பாசிரியரின் கடமை யாகும்''[2] என்பாரும் உளர்.

இக் கூற்றிற் கேற்பப் பின்வரும் சில எளிய முறை திருத்தங்களை மட்டும் இந்நூலில் செய்துள்ளேன்.

## பாடல் அமைப்பு

சுவடியிலுள்ள பாடல்கள் அசை, சீர், வரி என்ற வேறுபாடுகள் இல்லாமல் உரைநடை போலவே தொடர்ச்சியாக எழுதப்பட்டுள்ளன. அவற்றைப் பாடல் அமைப்புக் கேற்றவாறு சீர், வரி பிரித்து அமைத்துள்ளேன்.

---

1. திரு. சி வை. தாமோதரம் பிள்ளை,
   கலித்தொகை - பதிப்புரை. பக். 23
   வீரசோழியம் - பதிப்புரை பக். 24.
2. திரு பூ. சுப்பிரமணியம் மனைநூல் - பதிப்புரை. பக். 36.

பெரும்பாலான பாடல்கள் நான்கு அடிகள் கொண்டவையே. சில பாடல்கள் ஓரடி குறைந்தும்[1], சில மிகுந்தும்[2] இருக்கின்றன. சில பாடல்களில் சீர் குறைந்தும்[3], சிலவற்றில் சீர், தளை, ஒழுங்கில்லாமலும்[4] இருக்கின்றன.

இவையாவும் ஏடு எழுதியோர் செய்த பிழை என்றே கொள்ளலாம். படியெடுப்போரின் கவனக் குறைவும், இடைச் செருகல்களும்கூட இவற்றிற்குக் காரணங்களாகும்.

இப்பாடல்களுக்கான பொருள் அடிப்படையைக் கருத்தில் கொண்டு உள்ளதை உள்ளவாறே இந்நூலில் பதிப்பித்துள்ளேன்.

வெண்பா போன்ற வடிவமைப்புள்ள சில பாடல்கள் சீர் தளை தவறியும் காணப்படுகின்றன. பாடலின் பொருளை நோக்கி அவற்றையும் சுவடியில் இருந்தவாறே பதிப்பித்துள்ளேன்.

நோய்களின் பெயர்களைக் கூறும் இரண்டு பாடல்களின் தலைப்பில் 'உலா' என்ற சொல் சுவடியில் எழுதப்பட்டுள்ளது. இப் பாடல்களின் முடிவிலும் 'உலா முற்றும்' என்றே எழுதப் பட்டுள்ளது. பாடலை ஆழ்ந்து நோக்குமிடத்து இப்பாடலில் 'கண் நோய்களின் பெயர்களை'யே வரிசையாகக் கூறக் காணலாம். 'உலா' என்னும் தமிழ்ச் சிற்றிலக்கிய வகைக்கும் இதற்கும் எவ்விதத் தொடர்புமில்லை என்பதும் புலப்படும். 'உலா' என்னும் சிற்றிலக்கியம் 'கலி வெண்பா' என்னும் யாப்பில் அமையும் மேற்கூறப்பட்ட பாடல்களையும் இந்த யாப்பு முறையில் அமைக்க வேண்டி இவற்றிற்கு இப்பெயரை அளித்திருக்கலாம். ஆயினும், இப்பாடல்கள் 'கலி வெண்பா' யாப்பிற்கு முற்றிலும் பொருந்துவன அல்ல. பலவிடங்களில் சீர், தளை சிதைந்தே காணப்படுகின்றன. இவற்றின் பொருளமைதியைக் கருத்தில் கொண்டு இப் பாடல் அடிகளை உள்ளவாறே பதிப்பித்துள்ளேன்.

---

1. பா. எண் : 351, 1100, 1290, 1337, 1346, 1531, 1616
2. பா. எண் : 365, 375, 1017, 1082, 1141, 1203, 1204, 1277 1159, 1477, 1648.
3. பா. எண் : 158, 331, 973, 1112, 132[illegible], 1331, 1338, 1373 1416.
4. பா. எண் : 162, 176, 1040, 1056, 1058, 1137, 1172-76, 1281, 1310, 1351-53, 1386, 1422, 1477.

## மலிந்திருந்த பிழைகள்

மூல ஏட்டிலிருந்து பல ஏடுகளும் வழி ஏடுகளாக எழுதப் பட்டுள்ளதால் பிழைகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. மேலும், ஏடு எழுதுவோரின் கவனக் குறைவு, விரைவு, பேச்சுவழக்கு எழுத்து வழக்கு இவற்றினிடையே வேறுபாடின்மை போன்ற பல காரணங்களாலும் இத்தகைய பிழைகள் சுவடிகளில் மலிந்திருக்கக் காணலாம்.

பல சுவடிகளின் செய்திகளையும் ஒன்றாகத் தொகுக்க வேண்டியிருந்ததாலும், எல்லாச் சொற்களும் முடிந்த அளவு திருத்தம் பெற வேண்டியிருந்ததாலும், சில சொற்களில் பின்வரும் மாற்றங்களை மட்டும் செய்து, அந்தந்த இடத்திற்கேற்றவாறு பொருள் மாறுபாடு இல்லாத வகையில் சொற்களைத் திருத்தி அமைந்துள்ளேன். சான்றாக,

**த-ற வேறுபாடு:-**

புத்து (புற்று)
சுத்தி குலைவு (சுற்றுக் குலைவு)
தேத்தான் (தேற்றான்)
கத்தாழை (கற்றாழை)
பத்து (பற்று)
காத்து (காற்று) இப்படிப் பலவிடங்கள்

**ழ-ள வேறுபாடு:-**

இமைப் புளுகடி (இமைப்புழுக்கடி)
முளிமுளிங்கி (விழிவிழுங்கி)
குமிள் (குமிழ்)
இளிகண் (இழிகண்)
இழநீர் (இளநீர்)
களஞ்சு (கழஞ்சு)
அளிகண் (அழிகண்) இப்படிப் பலவிடங்கள்.

**ர-ற வேறுபாடு;-**

விப்புறுதி (விப்புருதி)
திறிபலை (திரிபலை)

---

பிறை வடிவ அடைப்புக் குறிக்குள் உள்ளவை திருத்தம் பெற்ற வடிவங்களாகும்

கிறிகை (கிரிகை)
சொற்னாதிக் குளிகை (சொர்ணாதிக் குளிகை)
கிறாம்பு (கிராம்பு)
உருத்தல் (உறுத்தல்) இப்படிப் பலவிடங்கள்.

ந-ன வேறுபாடு:-

னாளி (நாழி)
பூனாகம் (பூநாகம்)
வென்னீர் (வெந்நீர்) இப்படிப் பலவிடங்கள்.

பேச்சு வழக்கில் உள்ளதை அப்படியே ஏட்டில் எழுதியுள்ளதாலும் பல பிழைகள் மலிந்துள்ளன. அவற்றையும் இயன்றவரை திருத்தி அமைத்துள்ளேன். சான்றாக,

கருமுழி (கருவிழி)
குமுளம் (குமிளம்)
முழி முழுங்கி (விழி விழுங்கி)
கெற்ப காசம் (கற்ப காசம்)
சிக தலம் (செகதலம்)
எண்ணை (எண்ணெய்)
படத்தி (படர்த்தி)
சிகப்பு (சிவப்பு)
விரை (விதை)
வேதினை (வேதனை)
புளுகு (புனுகு)
சாந்திர பேதி (சாத்திரவேதி)
வெண்ணை (வெண்ணெய்)
அமுர்தம் (அமிர்தம்)
பணவிடை (பண எடை)
பிற வளையம் (புற வளையம்)
தற்கோலம் (தக்கோலம்)
மொடக் கொத்தான் (முடக்கொத்தான்)
செங்கழனீர் (செங்கழுநீர்)
தாம்புராதி (தாம்பிராதி)
துலையும் (தொலையும்)
சக்கிரம் (சக்கரம்)
பூளை (பீளை)
சாயங்காலம் (சாயுங்காலம்)

பவழக்குன்னி (பவளக் குன்றி)
கிஷாயம் (கசாயம்)
நெரிஞ்சி (நெருஞ்சி)
காக்சோனான் (காக்கணான்)
நிழலுலத்தல் (நிழலுலர்த்தல்)
விராகன் (வராகன்)
அதிமருதம் (அதிமதுரம்)
பெலம் (பலம்)
நால் (நான்கு)
துரிசி (துருசு)
காச்சி (காய்ச்சி)
முசு முசுக்கே (முசுமுசுக்கை)
தேக்கில் (தேய்க்கில்) இப்படிப் பலவிடங்கள்.

சுவடிகளில் மெய்யெழுத்துகளுக்குப் புள்ளி இல்லாமலும், ெ ே போன்ற கொம்பு எழுத்துகளினிடையே வேறுபாடு இல்லாமலும் எழுதப்பட்டுள்ளதால் பலவிடங்களிலும் பொருள் நோக்கி அச்சொற்களைத் திருத்தி எழுத வேண்டியதும் தேவையாயிற்று. சான்றாக,

பூசாநதாஙகள (பூசாந்தரங்கள்)
பெநதெ பொமெ (பெயர்ந்தே போமே)
தெககில (தேய்க்கில்)
கொடடம (கோட்டம்)
பெரமுடடி (பேரா முட்டி) இப்படிப் பலவிடங்கள்.

வடமொழி எழுத்துக்கள் கலந்த சொற்களைச் சுவடியில் உள்ளவாறே அமைத்துள்ளேன். சான்றாக,

விஷ்ணு—விஷ்ட்டுணு—விட்டுணு
கொஷ்ட்டம்—கோட்டம், தோஷம்-தோடம்,
பாஷாணம்—பாடாணம், விஷம்—விடம்
கஸ்த்தூரி—கத்தூரி இப்படிப் பலவிடங்கள்

## தடுமாற்றம் தந்த சொற்கள் சில

ஏடுகளில் மிகவும் கிறுக்கலாக எழுதியுள்ளதால், பல எழுத்துகளை மிகவும் கூர்ந்து கவனித்தும் மற்ற சுவடிகளை ஒப்பிட்டு உணர்ந்தும் திருத்தம் செய்ய வேண்டியிருந்தது. சான்றாக, லாமிச்சுவேர்' என்னும் சொல் பல சுவடிகளிலும் எழுதப்பட்டுள்ளது. இது விலாமிச்ச வேர், இலாமிச்ச வேர் என இரண்டு வகையிலும் அகராதிகளில் இருக்கக் காணலாம். சில சுவடிகளில்

இவ்விரண்டையுமே வழங்கக் காணலாம். எனவே, இவற்றையும் அந்தந்த சுவடியிலுள்ளவாறே பதிப்பித்துள்ளேன். ரணம்-விரணம்-இரணம் போன்ற சொற்களையும் இதற்குச் சான்றாகக் கூறலாம்.

சில சுவடிகளில் சில சொற்களை உணர்வதே கடினமாக இருந்தது. சான்றாக, ஒரு சுவடியில் ஒரு சொற்றொடரிலுள்ள எழுத்துக்கள் ஒன்றன்மீது ஒன்று அமைந்து மிகவும் நெருக்கமாக வும் கிறுக்கலாகவும் எழுதப்பட்டிருந்ததால் அது என்ன தொடர் என்றே அறிய இயலவில்லை. அதை மீண்டும் மீண்டும் படிக்கத் தலை கிறுகிறுப்பே உண்டாயிற்று. பிறகு வேறு சில சுவடிகளின் பாடல்களுடன் இதே சுவடியை ஒப்பிடும்போது இத் தொடர் 'தலை கிறு கிறுப்பு' எனத் தெளிவாயிற்று. இவ்வாறே பல சொற்களும் தொடர்களும், தொடர்புள்ள சுவடிகளின் ஒப்பீட்டாலும், பொருளடிப்படையினாலும் உணர்ந்து பதிப்பிக்க வேண்டியதாயிற்று. பொருளறியத் துணை புரிந்த அனைத்து நூல்களையும் துணை நூற்பட்டியலில் கொடுத்திருக்கிறேன்.

**தொகுப்புரை:-** பெரும்பாலான சுவடிகளில் பாடல்கள் மட்டுமே கிடைத்தன. அவற்றிற்கான உரைவிளக்கம் கிடைக்க வில்லை, சில சுவடிகளில் உரைநடையிலேயே செய்திகள் கிடைத் தன. இந்நூல் ஒரு தொகுப்பு நூலாக அமைந்துள்ளதால் தொடர்புள்ள சுவடிச் செய்திகள் யாவும் அந்தந்த தலைப்புகளின் கீழ் ஒன்றாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

ஒரே தலைப்பிலுள்ள அனைத்துச் செய்திகளுக்குமான விளக் கங்களைத் தொகுத்து அவற்றின் முற்பகுதியில் தொகுப்புரையாக அமைத்துள்ளேன். இவை, நூலிலுள்ள செய்திகளை யாவரும் தெளிவாக அறிய உதவும்.

தமிழ்ச் சுவடிகளில் கண் மருத்துவம் தொடர்பாகக் கிடைக்கும் செய்திகள் அனைத்தும் இயன்றவரை திருத்தி இந் நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இனியும் சில சுவடிகள் கிடைக்கு மாயின் அவற்றாலும் சில பகுதிகள் மேலும் விளக்கம் பெறக் கூடும். இந்நூலில் இனியும் சேர்க்க வேண்டிய பகுதிகளும், திருத்தம் பெற வேண்டிய பகுதிகளும் இருக்குமாயின் அவற்றைச் சான்றோர்கள் தெரிவிப்பின் மிகவும் நன்றியுடையவனாவேன்.

**வே. இரா. மாதவன்.**

# நூல் ஆய்வு

## கண் எனும் சொல்

தமிழில் 'காண்' என்ற சொல்லின் அடியாகவே கண் எனும் சொல் பிறந்திருக்க வேண்டும். காண்பது கண்; அதாவது காட்சி களைக் காண்பதற்குக் கருவியாக இருப்பது கண் ஆகும். வெல்வ தற்குக் கருவியாக இருப்பது வேல் எனப்பட்டது போலக் கொள்ள லாம்.

## அகராதிகளில்

கண் எனும் சொல் பீலிக்கண், முலைக்கண், புண்ணின்கண், மரக்கணு, முரசு முதலியவற்றில் அடிக்கும் இடம், ஞானம் உணர்த்துவது, பீசம், பாயின் நெட்டிழையாகிய நூல், முன்பு, பற்றுக் கோடு, உடம்பு, ஏழன் உருபு, ஓர் அசை, அறிவு, அக்கம், அக்கி, அம்பகம், உலோசனம், குவளை, கோ, சங்கு, தாரை, திட்டி, திருக்கு, திருட்டி, நயனம், நாட்டம், நேத்திரம், நோக்கு, நோக்கம், பார்வை, விலோசனம், இடம், ஒரு விகுதி, ஓலைக்கண், கணு, கண்ணென்னேவல், கண்ணோட்டம், குழி, துவாரம், தேங்காய் முதலியவைகளில் முளை கிளம்பும் இடம், நுங்குக்கண், பெருமை, மயிற்றோகைக்கண், மூங்கில், விழி, அகக்கண், புறக்கண் எனப் பல்வேறு பொருள்களில் வழங்கக் காணலாம்.[1]

---

1. கழகத் தமிழகராதி.

## நிகண்டுகளில் கண்ணின் பெயர்

நாட்டம், நயனம், நேத்திரம், விலோசனம், நோக்கம், தாரை, அம்பகம், பார்வை, அக்கம், விழி, கோ, கண் என்னும் 12 பெயர்களைத் **திவாகர நிகண்டு** கூறுகிறது.

திட்டி, விலோசனம், நேத்திரம், நயனம், தாரை, அம்பகம், விழி, நாட்டம், அக்கம், நோக்கு, சக்கு, திருட்டி, பார்வை, கோ, கண் என்னும் 15 பெயர்களைப் **பிங்கல நிகண்டு** கூறுகிறது.

நயனம், நேத்திரம், அக்கம், நாட்டம், கோ, நோக்கம், சக்கு, பார்வை, தாரை, விலோசனம், விழி, அக்கி, திருக்கு, திட்டி, திருட்டி, அம்பகம் என்னும் 16 பெயர்களைச் **சூடாமணி நிகண்டு** கூறுகிறது.

நயனம், விலோசனம், நாட்டம், விழி, நோக்கம், சக்கு' அம்பகம், நேத்திரம், தாரை, கண், கோ, பாவை என்னும் 12 பெயர்களைக் **கயாதர நிகண்டு** கூறுகிறது.

விழி, அம்பகம், தாரை, நோக்கு, சக்கு, நேத்திரம், பார்வை. நயனம், நாட்டம், திட்டி, அக்கம், விலோசனம், உலோசனம், கோ, திருக்கு, திருட்டிஎன்னும் 16 பெயர்களை **ஆசிரிய நிகண்டு** கூறுகிறது.

கண்ணின் கருமணியைத் 'தாரை' என்றும், இமையை 'விளிம்பு' என்றும் நிகண்டுகள் கூறுகின்றன.

## 'கண்' எனும் சொல்லாட்சி

கண் எனும் சொல், சிறப்புப் பொருளிலும் பொதுப் பொருளிலுமாகத் தமிழ் இலக்கியங்களிலும் பேச்சு வழக்கிலும் மிகுதியாக வழங்கப்படுவதைக் காணலாம்.[1]

## மக்கட் பெயர்கள்

தமிழில் மக்கட் பெயர்கள் பலவும் காரண, இடுகுறிப் பெயர்களாகவே அமைந்துள்ளன, அவற்றுள் 'கண்' எனும் உறுப்பால் பெயர் பெறும் மக்கட் பெயர்கள் பல வழக்கிலுள்ளன, 'கண்ணம்மை' 'கயற்கண்ணி' போன்ற மகளிர் பெயர்களையும் 'கண்ணன்' 'செங்கண்ணன்' போன்ற ஆடவர் பெயர்களையும்

---

1—6, பிற்சேர்க்கை 1 இல் காண்க.

சான்றாகக் கூறலாம். இவ்வாறு பல பெயர்களும் வழக்கி லுள்ளன.[2] இத்தகைய பெயர்களுடன் வாழ்ந்த சங்க காலப் புலவர்களையும் நாம் நூல்களின் வாயிலாக அறிய முடிகின்றது.[3]

## மரபுத் தொடர்கள்

'கண் காட்டி விடுதல்' 'கண்கொள்ளாக் காட்சி' போன்ற மரபுத் தொடர்கள் பல கண்ணின் சிறப்புணர்த்தக் காணலாம்.[4]

## பழமொழிகள்

பழமொழிகள் என்பவை நீண்ட நெடுங்காலமாக மக்களின் வழி வழி வந்தவை. அவர்களது பட்டறிவின் பயனாய் விளைந் தவை. கண் எனும் உறுப்பின் சிறப்பால் வழங்கப்படும் பழ மொழிகள் பல உள்ளன. 'கண் குற்றம் கண்ணுக்குத் தெரியுமா?' 'பூனைக் கண்ணை மூடிக் கொண்டால் பூலோக மெல்லாம் இருட் டென எண்ணிக் கொள்ளுமாம்' போன்ற பழமொழிகள் இன்னும் வழக்கிலுள்ளன. இவ்வாறே பிறவற்றையும் காணலாம்.[5]

## விடுகதைகள்

தமிழ் இலக்கிய வகைகளுள் ஒன்றான விடுகதை என்பது பாமர மக்களின் விருப்பமான விளையாட்டு ஆகும். விடுகதைகள் பிறவி எளிமை உடையவை. அவை பெரும்பாலும் ஒப்பிட்டுக் காணும் போக்கு, உருவகம், பண்பு, தன்மை, உறுப்புக்கள், செயல்கள், பயன்படுத்தும் பொருள்கள் ஆகியவற்றைக் கொண்டு உருப்பெறுகின்றன என்பர்.

கண், கண்மணி, இமை. கருவிழி, கண்ணீர் எனத் தனித் தனியே விளக்கும் விடுகதைகள் பலவும் தமிழில் வழங்கக் காண லாம்.[6]

## தொல்காப்பியர் கூறும் கண்

தொல்காப்பியர் கண் என்னும் சொல்லைப் பலவிடங்களிலும் குறிக்கக் காணலாம். எழுத்ததிகாரத்தில் 'மாத்திரை அளவு' கூறுமிடத்து,

'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே'[1]

எனக் கண்ணிமைத்தலின் நுண்மை அளவினை உரைப்பர்.

---

1. தொல். எழுத். 7.

## ஐயம் நீக்கும் கருவி

பொருளதிகாரத்தின் களவியற் பகுதியில் தலைவன் தலைவியரிடையே முதன் முதலில் நிகழ்வது 'காட்சி' என்பர். இக்காட்சியில், 'கண் பிறழுதலும், அசைவுடைமையும், கண் இமைத்தலும் கொண்டு இவள் மானிடப் பெண்' என்று தலைவன் துணிகிறான். இத்துணிவிற்குத் துணையாக நிற்கும் கருவிகளுள் 'கண்ணும் இமையும்' இவண் குறிப்பிடத் தக்கன.

''வண்டே இழையே வள்ளி பூவே
கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று
அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ
நின்றவை களையும் கருவி என்ப''[1] என்பது நூற்பா.

## கூட்டி உரைக்கும் குறிப்புரை

இவ்வாறு 'காட்சி' பெற்ற போது அவர்களின் கண்ணொடு கண் இணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் பயனிலாது போகும் ஒருவருடைய குறிப்பு மற்றொருவர் குறித்த பொருளை அறிந்து கொள்ளும், அவ்விடத்துக் கண்ணினால் வரும் குறிப்புரையே நிகழும் எனப் பின் வருமாறு விளக்குவர்.

''நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி உரைக்கும் குறிப்புரை யாகும்''[2]

## காமஞ் சொல்லும் கண்

''காமஞ் சொல்லா நாட்டம் இன்மையின்
ஏமுற இரண்டும் உளவென மொழிப''[3]

என்னுமிடத்து, அகத்து நிகழ் வேட்கையைக் கண்ணினால் அறியலாம் என்பர். இங்கு, வேட்கையை உணர்த்தாத கண் உலகத்து இல்லை என்று கூறியுள்ளது அறியத்தக்க தாகும்.

## மெய்ப்பாடு விளக்கும் கண்

'கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே''[4]

---

1. தொல். பொரு களா. 4.
2. தொல். பொரு. களா.5
3. தொல். பொரு. களா. 19
4. தொல். மெய்ப். 27

என்னும் நூற்பாவில், மெய்ப்பாடுகளின் அருமைகளை ஆராயும் அறிவுக் கருவிகளுள் முதன்மையானதாகக் கண்ணைக் குறிப்பிடுவது எண்ணத்தக்கதாகும்.

## இலக்கியத்தில் கண்

கவிதை தோன்றிய நாள் முதல் இன்று வரையிலும் கண்ணை வருணித்துப் படாத கவிஞனே இல்லை எனலாம். சங்க இலக்கியங்கள் பலவற்றிலும் 'கண்' என்னும் உறுப்பின் வருணனையை உவமை, உருவகம், தற்குறிப்பு, உயர்வு நவிற்சி என்னும் பல்வேறு அணி நயங்களின் வாயிலாக உணர்த்தக் காணலாம்.

சங்க இலக்கியத்தில் பெரும் பகுதியும் இலக்கிய இன்ப உத்திகளுடன் நுண்ணிய அறிவியற் செய்திகளையும் சுவை குன்றாமற் கூறுவதால் நிலையான முன்னிடத்தைப் பெற்றுவிட்டன என்பர் அறிஞர்.[1] இக்கூற்றிற்கேற்ப இந்நூல்களில் காணப்படும் கண் பற்றிய செய்திகள் சில இவண் குறிப்பிடத்தக்கன.

## ஐம்புலன் சார்ந்த உவமை

உவமை என்பது வினை, பயன், மெய், உரு என்னும் நான்கின் அடிப்படையில் தோன்றும் என்பர் தொல்காப்பியர்[2] இந்நான்கும் ஐம்புலன்களால் அறியப்படுபவை.

ஐம்புலன் சார்ந்த உவமைகளைச் சங்க இலக்கியத்தில் மிகுதியாகக் காணலாம். அவை அக்காலப் புலவர்களின் கூரிய புலனுணர்வையும் வாழ்க்கையில் ஆழ்ந்த அனுபவமுடைமையும் வெளிப்படுத்துவன என்பர்.[3]

இத்தகு உவமைகளில் பலவும் உயர்திணை மற்றும் அஃறிணைப் பொருள்களின் கண் பற்றி விளக்கக் காணலாம்.

## அஃறிணை உயிரினங்களின் கண்கள்

### நண்டின் கண்

நண்டின் தலைப்பகுதியில் இரண்டு சிறு தண்டுகளின் நுனியில் கண்கள் அமைத்திருத்தலின், அது நாற்றிசையும் காணக் கூடிய

1. டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம். முன்னுரை, சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்
2. தொல். 1222
3. டாக்டர் தமிழண்ணல். சங்க இலக்கியக் கொள்கைகள் ப. 45.

நோக்குடையது. தண்டின் நுனியில் கண் இருத்தலின், கண்களை வேண்டும்போது நீட்டவும், சுருக்கவும், ஒடுக்கவும் கூடும். கண்ணைச் சுமந்து நிற்கும் இத்தண்டு வேப்பம்பூவை ஒத்தது என்பதை

"வேம்பு நனை யன்ன நெடுங்கட் கள்வன்"[1]

"வேம்பு நனை யன்ன நெடுங்கணீர் ஞெண்டு"[2]

எனச் சங்க இலக்கியங்கள் கூறக் காணலாம்.

## வெள்ளெலியின் கண்

வெள்ளெலியின் கண்கள், கருமையும் சிவப்பும் கலந்து சிறு மணி போல் தோன்றுவதற்கு இணையாகக் குன்றி மணியை உவமித்துக் கூறுவது மிகவும் பொருத்தமாகும்.

"குன்றியன்ன கண்ண குரூஉ மயிர்ப்
புன்றாள் வெள்ளெலி மோவாய் ஏற்றை"[3]

## முயலின் கண்

'சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்'[4]

என்னுமிடத்து நெல்லியின் இளஞ்சிவப்புப்பழம் முயலின் கண்ணுக்கு உவமிக்கப் பட்டிருப்பதைக் காணலாம்.

## எருமையின் கண்

கருமையான காட்டெருமையின் கண் செம்மை நிறமுடையது என ஐங்குறு நூறு காட்டும்.

'கருங்கோட் டெருமைச் செங்கண்'[5]

## பன்றி, யானையின் கண்கள்

காட்டுள் வாழும் பன்றிக்கும் யானைக்கும் அவற்றின் உருவத்திற்கேற்றபடி கண் அமைந்திருப்பதில்லை. இவைகளுக்குக் கண்கள் மிகவும் சிறியனவாகவே காணப்படும். இதனை,

'சிறு[illegible]ன்றி'[6] 'சிறுகண் யானை'[7] எனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

---

1. ஐங். 30
2. அகம். 176
3. ,, . 133
4. ,, . 284
5. ஐங். 92
6. ,, . 267
7. ஐங். 327, 355, 362

## பசியால் வறண்ட கண்

பசித்த யானையின் உடலில் முதலில் வாடி இருப்பவை அதன் கண்களே. பாலை நிலத்தின் வறட்சியைக் கூறுமிடத்து,

'பசித்த யானைப் பழங்கண் அன்ன
வறுஞ்சுனை முகத்த கோடைத் தெள்விழி'[1]

எனப் பசியுள்ள யானையின் அழகிழந்த கண்ணை, நீர் வறண்டதாகிக் காய்ந்து கிடக்கும் சுனைக்கு ஒப்புமையாகக் கூறுவர்.

இவ்வாறு அஃறிணை உயிரினங்களின் கண்கள் பலவாறு விளக்கப்படுவதை இந்நூல்களில் நன்கு அறியலாம்.

## பெண்களின் கண்கள்

பெண்களின் கண்களை வருணிக்குமிடத்து அவற்றை நெய்தல் குவளை போன்ற பூக்களுடன் ஒப்பிடுவர். தலைவியின் முகமும் கண்ணும், தாமரையும் குவளையுமாகப் பிணைந்து நிற்கும் காட்சியை அகநானூறு காட்டும்.

'தூமலர்த் தாமரைப் பூவின் அங்கண்
மாஇதழ்க் குவளை மலர்பிணைத் தன்ன
திருமுகத்து அலமரும் பெருமதர் மழைக்கண்'[2]

நீலோற்பலம், நீலம், கருநெய்தல், கருங்குவளை, பானல் எனப் பல பெயரால் அழைக்கப்படும் 'நெய்தல்' என்னும் பூவில் கருநீல நிறமுடையதையே பெண்களின் கண்களுக்கு உவமையாகக் கூறப்படுவதைச் சங்க நூல்களில் காணலாம்.

'இருங்கழி மலர்ந்த கண்போல் நெய்தல்'[3]
'கண்ணேர் இதழ் தண்நறுங் குவளை'[4]
'பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீன் இருங்கழி ஓதம் மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்'[5]

போன்ற பாடலடிகளில் இத்தகைய உவமைச் சிறப்பினை அறியலாம்.

---

1. அகம். 321
2. அகம். 361
3. அகம். 170
4. அகம். 358
5. குறுந். 9

'கண்ணெனக் கருவிளை மலர'[1] என்னும் பாடலடியில் கருவிளைஅல்லது கருங்காக்கணம்பூ மகளிர் கண்போல் மலரும் என விளக்கக் காணலாம்.

## பசலை பாய்ந்த கண்

தலைவனின் பிரிவால் துயரடைந்த தலைவியின் கண்களில் பசலை பாயும் என்பர். அப்போது அவள் கண்கள் நெய்தல், குவளை போன்ற மலர்களை நிகர்த்தற்குரிய உவம உரிமையை இழந்து ஆம்பல், கொன்றை போன்ற பூக்களின் வண்ணம் பெறும் என்பர்.

'அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பொய்கைப் பூத்த புழைக்கா லாம்பல்
தாதேர் வண்ணங் கொண்டன
ஏதி லாளர்க்குப் பசந்தவென் கண்ணே'[2]

என்னும் பாடலடிகள் இதை விளக்கும்.

தலைவியின் இத்தகைய கண்ணின் நிற மாற்றத்திற்கு மருந்து, அவள் தலைவன் தேர் வருதலே யாகும் என்பதைத் தோழி,

'பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்குமருந் தாகிய கொண்கன் தேரே.'[3]

எனக் கூறுகின்றாள்.

வினை முற்றி வந்த தலைவனிடத்தும் தோழி இதைப் பின் வருமாறு எடுத்துக் கூறுகின்றாள்.

'கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்
குன்றக நெடுஞ்சுனைக் குவளை போலத்
தொல்கவின் பெற்றன விவட்கே வெல்போர்
வியனெடும் பாசறை நீடிய
வயமான் தோன்றல்நீ வந்த மாறே.'[4]

தலைவன் வரைதற் பொருட்டு வருதலால் தலைவியின் கண்கள் நோய் நீங்கி நல்லனவாய் மலர்ச்சியுற்றன என்பதை,

---

1. ஐங். 494
2. ஐங். 34
3. ஐங் 101
4. ஐங். 500

'மெல்லம் புலம்பன் வந்தென
நல்ல வாயின தோழியென் கண்ணே'[1]

எனத் தலைவியும் கூறக் காணலாம்.

## கண்ணின் ஒளி

ஒளிமிக்க தலைவியின் கண்கள் தலைவன் பிரிவால் நோயுறுவதல்லாமல், அவன் வரவை நோக்கி நோக்கியும் ஒளி இழந்த தாகவும் கூறுவர்.

'காலே பரிதப் பினவே; கண்ணே
நோக்கி நோக்கி வாள்இழந் தனவே'[2]

இவ்வாறு தலைவன் பிரிந்தவிடத்துத் தலைமகள் கண்கள் நலனிழந்து, தோன்றிக் கூடியவிடத்து அந்நலனைப் பெற்றுத் திகழ்வதை பின்வரும் பாடல் அடிகள் சுட்டும்.

'தொடிநிலை கலங்க வாடிய தோளும்
வடிநல னிழந்தவென் கண்ணும் நோக்கி'[3]
'தோள்கவி னெய்தின தொடிநிலை நின்றன
நீள்வரி நெடுங்கண் வாள்வனப் புற்றன'[4]

இவ்வாறு உள்ளத்திலும் உடலிலும் ஏற்படும் துன்பத்தால் கண்ணில் உண்டாகும் நிறமாற்றங்களையும் ஒளி வேறுபாடுகளையும், அவை நீங்கும் முறைகளையும் உளநூல் அடிப்படையில் இந்நூல்கள் குறிப்பிடுவது அறியத் தக்கதாகும்.

## உருக்காட்சி (Imagery)

ஐம்புலனுணர்வுக்கு உறுவன அனைத்தும் உருக்காட்சியாகும் கட்புலன் உருவே (Visual Image) தலைமையானது; பெரும் பான்மையானது என்பர். இத்தகு உருக்காட்சிகளைச் சங்க நூல்கள் பலவும் காட்டுகின்றன.

'எஃகு உற்று
இருவேறு ஆகிய தெரிதரு வனப்பின்
மாவின் நறுவடி போலக் காண்தொறும்
மேவல் தண்டா மகிழ்நோக்கு உண்கண்'[5]

---

1. ஐங். 189
2. குறுந். 44
3. ஐங். 475
4. ஐங். 498
5. அகம் 29.

என்னும் பாடலடிகளில், அரிவாளால் வெட்டிய மாவடுவில் உள்ள விதைப்பகுதி கருத்து விடுவதையும், அதைப் பெண்களின் விழிக்கு உவமை கூறி உருக்காட்சியாக அளிப்பதையும் காணலாம். இவ்வாறே,

'தண்கயம் பயந்த வெண்காற் குவளை
மாரி மாமலர் பெயற்குஏற் றன்ன
நீரொடு நிறைந்த பேரமர் மழைக்கண்'[1]

என்னும் பாடலடிகளில், மாரிக்காலத்து மழையால் நனைந்த மலர் அசையுந்தோறும் அதன்கண் நின்ற நீர் துளிப்பது போல கண் இமைக்குந் தோறும் கலுழ்ந்து நின்று நீர் துளிக்கும் என்பதை அப்படியே படம் பிடித்துக் காண்பித்துள்ளதை அறியலாம்.

## கண்களில் சிவப்பு நிறம்

பெண்களின் கண்களில் செவ்வரி படர்ந்து இருத்தல் அழகு என்பர்.

'சேயரி மழைக்கண் செவ்வாய்க் குறுமகள்'[2]
'பொங்கரி பரந்த வுண்கண்'[3]

போன்ற பாடலடிகள் இதைச் சுட்டுகின்றன. மேலும், காமக் குறிப்பினாலும், புனலாடுவதாலும், பிரிவுத்துயராலும் பெண்களின் கண்கள் சிவக்கும் என்பதை இந்நூல்கள் கூறக் காணலாம்.

'கடைமணி சிவந்தநின் கண்ணே'[4]

எனக் காமக் குறிப்பினாலும்,

'அரிமதர் மழைக்கண் சிவப்ப நாளைப்
பெருமலை நாடன் மார்புபுணை யாக
ஆடுகம் வம்மோ - காதலம் தோழி'[5]
'புதுப்புனலாடி யமர்த்த கண்ணள்'[6]

எனப் புனலாடலாலும்,

'உண்கண் சிவப்ப வழுதுநின் றோளே'[7]

---

1. அகம். 395
2. ஐங். 52
3. ஐங். 174
4. நற். 39
5. அகம். 312
6. ஐங் 79
7. ஐங். 125

எனப் பிரிவுத் துயராலும் பெண்களின் கண்கள் சிவப்பதை அறியலாம். மேலும், கள்ளுண்டவர்களின் கண்கள் சிவப்புற்றுக் கலங்குதல் போலத் தன் காதலனின் பிரிவினுக்கு ஆற்றாது அவள் கண்கள் கலங்கி சிவந்து நிற்பதாகவும் பின்வரும் பாடலடி உணர்த்தக் காணலாம்.

'கள்ளின் மகிழின் மகிழ்ந்த அரிமதர் மழைக்கண்'[1]

## மை தீட்டும் மரபு

'மாதருண்கண் மகன் விளையாட'[2]

போன்ற பாடல் அடிகள், குழவிப் பருவத்திலேயே கண்ணில் மையெழுதும் மரபைக் காட்டுகின்றன. மேலும்,

'ஓங்குபூ வேழத்துத் தூம்புடைத் திரள்காற்
சிறுதொழு மகளி ரஞ்சனம் பெய்யும்'[3]

என்னும் பாடலடிகளில், மருத நிலத்துச் சிறுதொழு மகளிர் அஞ்சனத்தை வேழத்தின் தண்டிற் பெய்து வைத்துப் பயன்படுத்தினர் என்பதும், மை தீட்டும் மரபு நெடுங்காலமாகவே தமிழகத்தில் வழங்கப்பட்டுள்ளதையும் அறியலாம்.

## ஆண்களின் கண்கள்

ஆண்களின் கண்கள் மிகுகோபத்தாலும், வீரத்தாலும், தூக்கமில்லாத நெடும்பயணத்தாலும், கடுமையாகவும் சிவப்பாகவும் காணப்படும் எனச் சங்க இலக்கியங்கள் கூறக்காணலாம்.

'கடுங்கண் மழவர்'[4]
'கடுங்கண் ஆடவர்'[5]
'கனையிருங் கங்குலுங் கண்படை இலனே'[6]
'செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆறாவே'[7]

போன்ற பாடல் அடிகள் இதை உணர்த்துகின்றன.

---

1. அகம். 343
2. ஐங். 406
3. ஐங். 16
4. அகம். 337
5. அகம். 365
6. நற். 348
7. புறம். 100

## கண் துடித்தல்

மகளிர்க்கு இடக்கண் துடித்தல் நன்னிமித்தம் என்றும், வலக் கண் துடித்தல் தீநிமித்தம் எனவும் கூறுவர்.

'நல்லெழி லுண்கணும் ஆடுமா விடனே[1]
'பூங்கண் இடமாடுங் கனவுந் திருந்தின'[2]

எனச் சங்க இலக்கியங்கள் இதைச் சுட்டுகின்றன.

'... ... ...நந்திநின்
திருவரு நெடுங்கண் சிவக்கும் ஆகின்
செருநர் சேரும் பதிசிவக் கும்மே
நிறங்கிளர் புருவம் துடிக்கின் நின்கழல்
இறைஞ்சா மன்னர்க் கிடந்துடிக் கும்மே'[3]

என நந்திக் கலம்பகம் ஆடவர்க்கு வலக்கண் துடித்தல் நன்னி மித்தமாகக் கூறக் காணலாம்.

## வள்ளுவர் கூறும் கண்கள்

திருக்குறளின் முப்பாலிலும் கண் பற்றிய செய்திகளைக் காணலாம் ஒருவரின் கண் குறிப்பால் அவர்தம் உள்ளக்கருத்தை வள்ளுவர் உய்த்துணரலாம் என்னும் உளவியற் கோட்பாட்டை விளக்குவர்.

'பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்
வகைமை உணவார்ப் பெறின்'[4]

என்னும் குறளில், வேந்தர் தம் கண் பார்வையின் வேறு பாட்டை அறியவல்ல அமைச்சரைப் பெற்றால் பகைமையையும், நட்பை யும் அவர் கண்களே சொல்லும் என்பர். மேலும், உள்ளக்கருத்தை நுட்பமாக அளந்தறியும் கருவியாகப் பயன்படுவன கண்களே என்பதை,

'நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற.'[5]

என்னும் குறளில் விளக்குவர்.

1. கலி. 10
2. ஐங். 71
3. நந்திக்கலம்பகம். 65
4. குறள். 709
5. குறள். 710

## காமத்துப் பாலில் கண்கள்

வள்ளுவர் கூறும் தலைவனும் தலைவியும் வெளிப்படுத்தும் உணர்வு வெளிப்பாடுகளிலெல்லாம் புலன்களின் மாறுபாடும், புதுமையும் காணக்கிடைக்கின்றன. இவற்றுள் கண்கள் பெரும் இடத்தைப் பெறுகின்றன. கண் கொண்டு ஒளிரும் காதல ராய்ச்சியை இவர் கூறும் காமத்துப் பால் முழுக்கக் காணலாம். இத்தகைய அருங்காட்சிகளை இவருக்கு முன்பும் பின்பும் எவருமே அளிக்கவில்லை எனலாம்.

## காதலியின் கண்ணழகு

உண்கண்[1], கயலுண்கண்,[2] பெருமழைக் கண்,[3] மலரன்ன கண்ணாள்,[4] ஒள்ளமர்க் கண்ணாள்,[5] பிணைஏர் மடநோக்கு,[6] வேல் உன் கண்[7] எனக் காதலியின் கண்ணைப் பலவாறு விளக்குவர்.

## கண்பற்றிய கற்பனை

'காணிற் குவளை கவிழ்ந்து நிலன் நோக்கும்[8], 'கருமணியில் பாவாய்[9]' 'கண்ணுள்ளின் போகார்[10]' போன்றகற்பனை நயங்கள் பலவும் இவரது கண்பற்றிய எண்ணங்களை விளக்கும்.

## கன்னியரின் கண் கூர்மை

கன்னியரின் கண் பார்வைக்கு வேலும் வாளும் ஒப்புமையாகக் கூறப்படுகின்றன.

> கண்ணும் கழியச் சிவந்தன; அன்னவகை
> ஆட்டயர்ந்து அரிபடும் ஐவிரை மாண்பகழி
> அரத்தின்வாய் போன்ம் போன்ம் போன்ம்
> பின்னும் மலர்க்கண் புனல்'[11]

---

1. குறள். 1091, 11 72,11,74
2. ,, 1212,
3. ,, 1239
4. ,, 1119, 1142,
5. ,, 1125,
6. ,, 1089,
7. ,, 1113
8. ,, 1114
9. ,, 1123
10. ,, 1124
11. பரி. வையை. 10

என்னும் பாடல் அடிகளில், புனலிடத்தே நீர்விளையாட்டயர்ந்து விளங்கிய பெண்களின் கூர்மையான மலர்க்கண்கள், அரத்தால் அராவிக் கூர்மை செய்யப் பெற்ற மன்மதபாணமாகிய மலரம்புகள் எனக் கூறுவது அறியத்தக்கது.

## நோக்கின் கொடுமை

இத்தகைய கூர்மையான நோக்கிலிருந்து எவரும் தப்ப முடியாது என்றும் கூறுவர்.

சோழ மன்னனின் படைத்தலைவன் பழையன் என்பவன். அவன், களத்திலே தனக்கு எதிர் வருவார்மேல் எறிந்த வேல் எப்பொழுதும் தவறுவதில்லை. அது போல, அவள் நோக்கிய வரிடத்தும், அவள் கண்கள் சென்று தைத்தலில் என்றும் தவறு வதேயில்லை என்பதைப் பின்வரும் பாடலடிகள் உணர்த்தும்.

'பழையன் ஒக்கிய வேல் போற்
பிழையல கண்ணவள் நோக்கியோர் திறத்தே'[1]

## பிணியும் மருந்தும்

காதலை முதல் முதல் ஊட்டுவது கண்களின் பார்வை. அந்நோக்கே நோயாகவும் மருந்தாகவும் அமையும் என்பர் வள்ளுவர்.[2]

'பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே'[3]

எனத் திருக்கோவையாரும் விளக்குவர்.

மேலும், நோய் தரும் பொருளுக்கு எதிர் பொருளாக அமை வதே மருந்து எனப்படும். ஆனால், காதலியின் கண்கள் தரும் நோய்க்கு அவளே மருந்தாவாள் என்பதை,

'பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து'[4]

என வள்ளுவர் குறிப்பிடுவர்.

காதல் நோயைத் தருவது காதலியின் கண்கள். அதனை நீக்கி இன்புறுத்துவது கொங்கை இணைகள் எனப்பெருங்கதைகாட்டும்.

---

1. அகம். 326
2. குறள். 1091
3. திருக்கோவையார். 5
4. குறள். 1102

''முந்துபந் தெறிந்தோர் முறைமையிற் பிழையாப்
பந்துவிளை யாட்டினுள் பாவைதன் முகத்துச்
சிந்தரி நெடுங்கண்என் நெஞ்சகங் கிழிப்பக்
கொந்தழற் புண்ணொடு நொந்துயிர் வாழ்தல்
ஆற்றேன் அவ்வழல் அவிக்குமா மருந்து
கோற்றேன் கிளவிதன் குவிமுலை ஆகும்
பந்தடி தானுறப் பறையடிஉற்ற என்
சிந்தையும் நோயும் செப்புதற்கரிது''[1]

என உதயணன்,வாசவதத்தையின் நலத்தை விவரிக்கக் காணலாம்.

இவ்வாறு வேது கொடுத்துப் புண் ஆற்றும் முறைகளை,

'தங்கு கண்வேல் செய்த புண்களைத்
தடமுலை வேது கொண்டு ஒற்றியே'[2]
'பொரும் கண்வேல் இளைஞர் மார்பின் ஊடுருவு
புண்கள் தீர, இரு கொங்கையின்
கரும் கண்வேது படஒற்றி, மென்கை கொடு
கட்டும் மாதர் கடை திறமினோ'[3]

என்னும் கலிங்கத்துப் பரணியின் பாடலடிகளும் காட்டுகின்றன.

## கம்பர் காட்டும் கண்

தலைவன் தலைவியரிடையே நிகழும் காதற் குறிப்பை, அவர் தம் கண் கொண்டே காட்டும் திறமை கம்பருக்கே உரியதாகும்.

'எண் அரும் நலத்தினாள் இனையள் நின்றுழி
கண்ணொடு கண்இணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலை பெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்'[4]

என்னும் பாடலில் காதல் நோக்கில் கண்களின் வன்மையை நன்குணர்த்தக் காணலாம்.

## கம்பர் காட்டும் கண்ணன்

திருமாலின் பெயர்களுள் ஒன்று கண்ணன் என்பதாகும். இப் பெயர்க் காரணத்தை விளக்கும் கம்பர் பின் வருமாறு விளக்குவர்.

1. பெருங்கதை. வத்தவ. முகவெழுத்து 68-75
2. கலிங். 55
3. கலிங். 56
4. கம்ப. பால மிதிலைக் காட்சிப் படலம் 159

"வீதிவாய்ச் செல்கின்றான் போல்
விழித்திமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே
வாவுமான் தேரின் செல்வான்
யாதினும் உயர்ந்தோர் தன்னை
யாவர்க்கும் கண்ணன் என்றே
ஓதிய பெயர்க்குத் தானே
உறுபொருள் உணர்த்தி விட்டான்'[1]

இப்பாடலில் கண்ணன் என்னும் பெயர் பொருத்தத்தைக் கூறுவது அறியத்தக்கதாகும்.

## கண்ணும் மீனும்

சேல் என்னும் மீன் வகை, நடுபருத்தும் இருநுனிகள் சிறுத்தும் காணப்படும்; நீரில் பிறழ்ந்தும் ஓடும். எனவே, பெண்களின் கண் களுக்குச் சேலை உவமையாகக் கூறுவர்.

கயல் என்னும் மீனும், கெண்டை எனும் மீனும் துள்ளித் துடித்துப் புரண்டு கொண்டே இருப்பன. எனவே, இவற்றையும் பெண்களின் கண்களுக்கு உவமையாகக் கூறுதல் மரபாகும்.

'சேல் வாங்கு கண்ணியர்'[2]
'பந்தாடு மங்கையர் செங்கயற்பார்வை'[3]
'சிறுவள்ளை தள்ளித் துள்ளிய கெண்டையை'[4]

போன்ற பாடலடிகள் இதனைச் சுட்டும்.

மீன் தன் கருவைத் தண்ணீரில் இட்டு அதை மிகவும் பாதுகாப் பாக, வைத்தவிழி வாங்காமல் நோக்கி இருக்கும். அப்போது, அதன் கண் ஒளியால் அம்முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் பிறக் கும் என்பர்.

'தண்ணீரிலிருக்கும் மீன்கள் தண்ணீரிற் கருவைப் பித்திக்
கண்ணினாற் பார்க்கும்போது கயலுறு வானாற்போல'[5]

என்னும் பாடலடிகள் இதைச் சுட்டும்.

---

1. கம்ப. பால. உலாவியற் படலம் 330
2. கந்தரலங்காரம்-77
3. ,, ,,-79
4. ,, ,,-94
5. கணபதி சித்தர். நெஞ்சறி விளக்கம்-16

இவ்வாறு மீன் தன் குஞ்சுகளைக் காப்பது போல, மக்களைக் காப்பாற்றும் தன்மையுடையவள் என்னும் பொருளில் இறைவியை 'மீனாட்சி' என்றே அழைப்பர்.

மேலும், அன்புமிகு விழிக் கன்னி என்னும் பொருளில் 'காமாட்சி' எனவும், விரிந்த பார்வையை நல்குபவள் என்னும் பொருளில் 'விசாலாட்சி' எனவும் இறைவியை அழைப்பர்.

'கயல் மாண்ட கண்ணிதன் பங்கன்'[1]
'காளவுருக் காமவிழிக் கன்னி'[2]
'கயலார் தடங்கணாள்'[3]

என்னும் பாடலடிகள் இதை உணர்த்தும்.

## கண்ணும் எண்ணும்

'கண் இரண்டே யாவர்க்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணும்விழி ஏழுஆகும் ஈவோர்க்கு-நண்ணும்
அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்கு
அநந்தம் விழிஎன்று அறி'[4]

என நீதிவெண்பா கண்ணும் எண்ணும் கூறும். மாந்தர்க்குக் கண் என்பன இரண்டே. கற்றவர்களுக்கு 'அறிவுக் கண்' ஒன்றுடன் மூன்றாகும். கொடை கொடுப்போர்க்கு 'நகக்கண்' ஐந்துடன் ஏழாகும், அருள் ஞானம் பெற்றோர்க்கு எல்லாப் பொருளும் எவ்விடமும் கண்களாகும் என்பர். இதில் 'ஞானம்' என்பது ஒளி மயமானது என்பதும் பெறப்படும்.

## கண்ணும் கடவுளும்

'கண்ணின் பயன் கடவுளைக் காண்பது' என்னும் வகையிலேயே பல நூல்களும் கூறக் காணலாம்.

'பொருள் எனப்போழ்ந்து அகன்று, பொன்மணி போன்று எங்கும்
இருள்அறக் காண்பன கண்அல்ல; மருள்அறப்
பொய்க் காட்சி நீக்கி, பொருஅறு முக்குடையான்
நற்காட்சி காண்பன கண்'[5]

என அறநெறிச்சாரம் கூறும்.

---

1. திருவாசகம். திருத்தெள்ளேணம்-11
2. கச்சிக் கலம்பகம்-90
3. ,, ,, 5
4. நீதிவெண்பா-11
5. அறநெறிச்சாரம்-198

'கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே'[1]

எனச் சிலப்பதிகாரம் கூறும்.

## கண் மணி

இத்தகு இறைவனைக் 'கண் மணி' என உருவகமாகவும் காட்டுவர்.

'கம்பத் திருந்துவுங் கண்மணியைச் சிந்தித்து
நம்பத் திருந்துவீர் நானிலத்தீர்'[2]
கண்மணியை நெஞ்சே கருது'[3]

என்பர்.

## கண்களுக்குத் துணை

கண்ணுக்குள் உள்ள கண்மணிக்கு ஒளி உறைவிடம் ஆனதால், ஒளிமயமான ஞானத்தையே இறைவனுடைய திருவடியாகக் கொண்டு, அத்திருவடிகளே கண்களுக்குத் துணை என்பதை அருணகிரிநாதர்,

'விழிக்குத் துணை திருமென் மலர்ப்பாதங்கள்'[4]

என விளக்குவர்.

கதிர், மதி, கனல் என்னும் மூன்று ஒளிகளே உலகங்களுக் கெல்லாம் ஒளியைத் தருவன. இவை மூன்றையும் தம் கண் களாகக் கொண்டுள்ள இறைவனை முக்கண்ணன் என்றும், இறைவியை முக்கண்ணி என்றும் கூறுவது மரபு.

இவை அனைத்தும் கண்ணுக்கும் ஒளிக்கும் உள்ள தொடர் பினை மேலும் வலியுறுத்துவனவாம்.

## சித்தர் தரும் தத்துவம்

கண்மணியைக் கடவுளுடன் ஒப்பிடும் போக்குச் சித்தர்கள் பலரிடையேயும் காணப்படுகிறது.

'கண்ணுள் மணியைக் கருதிய பேரொளியை
விண்ணின் மணியை விளக்கொளியைப் போற்றீரே'[5]

என்றும்,

1. சிலப். ஆய்ச்சியர் குரவை. 36
2. கச்சிக் கலம்பகம்-97
3. திருவருட்பா. நெஞ்சுறுத்த திருநேரிசை
4. கந்தரலங்காரம். 70
5. இடைக்காட்டுச் சித்தர் பாடல். 42

'கண்ணுக்குக் கண்ணானவொளி கண்டுகொள்ளவே
கட்டறுத்து வாழ்ந்திட நின்று ஆடு பாம்பே'[1]

என்றும்,

'கண்ணுள் மணியாகிக் காரணமாய் நின்றான்'[2]

என்றும் இவர்கள் விளக்கக் காணலாம்.

இத்தகு ஒளித்தொடர்பை இவர்கள் அறிவியல் கண் கொண்டு காட்டுவது குறிப்பிடத் தக்க தாகும்.

"வாறான பிரமத்தில் நடுவே மைந்தா
வந்ததடா ரவிமதியுஞ் சுடர்மூன் றாகிக்
கூறாகப் பின்னியடா கீழே பாயுங்
கூறுகிறேன் இருக்கண்ணில் ஒளிவைக் கேளு
வீறான அண்டவுச்சி முளைக்கப் பாலே
வெற்றியுடன் நரம்பதுதான் விழுது போலே
நேராக இருகண்ணிற் பின்ன லாகி
நிச்சயமா யொளிவாகி நிறைந்தார் பாரே."[3]

"பாரப்பா பரப்பிரமம் ஒளிவி னாலே
பத்தியே நரம்புவழி பாயும்போது
ஆரப்பா இருகண்ணில் ஒளிவ தாகி
அண்டமெல்லாம் ஏகமாய்த் தெரியலாச்சு"[4]

என வரும் பாடல் அடிகளில் கண்ணின் ஒளியைப் பற்றிச் சித்தர் தரும் தத்துவத்தையும் உணரலாம்.

## நெற்றிக் கண்

சிவபெருமானுக்குக் கனலுருவிலான நெற்றிக் கண் ஒன்றுண்டு என்பதை'

'கண்ணொன்று திருநுதலிற் கனலுருவ
மாப்படைத்த காசி நாதா'[5]

என்னும் பாடலடிகள் விளக்குகின்றன.

1. பாம்பாட்டிச் சித்தர் பாடல். 74
2. காக புசுண்டர் பாடல் - 8
3. ,, ,, ,, - 1
4. ,, ,, ,, - 2
5. காசிக் கலம்பகம் - 9

இதுபோன்றே கரிகாற் சோழன் காலத்திருந்த 'பிரிதாப ருத்திரன்' என்னும் சிற்றரசனுக்கும் நெற்றிக்கண் ஒன்று இருந்ததாகக் கூறுவர். ஒரு சமயம், காவிரிக்குக் கரை அமைக்கும் அவன் பணிக்கு வராதிருந்தான். அப்போது சினங் கொண்ட கரிகாலன் பிரிதாப ருத்திரனின் ஓவியம் வைத்து அதிலிருந்த அவனது நெற்றிக் கண்ணை அழிக்க அவனுக்கு 'நெற்றிக்கண்' அழிந்தது என்பர்.

'தொழுது மன்னரே கரைசெய் பொன்னியில்
தொடர வந்திலா முகரியைப் படத்து
எழுதுக! என்றுகண்டு இதுமிசைக் கண்என்று
இங்கு அழிக்கவே, அங்கு அழிந்ததும்[1]

எனக் கலிங்கத்து பரணியும்,

'மண்கொண்ட பொன்னிக் கரைகட்ட வாராதான்
கண்கொண்ட சென்னி கரிகாலன்'[2]

எனக் குலோத்துங்க சோழன் உலாவும் இதை விளக்கும்.

## கண்ணின் பெருமையும் சிறுமையும்

'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' என விளக்கும் நூல்கள் யாவும் கண்ணின் பெருமையை உணர்த்தும். மற்ற உறுப்புகளுக்குப் பொன் முதலியவைப் புனையினும் தராத அழகை வெறும் கண்கள் நல்கும் என்பதை நன்னெறி விளக்கும்.

'மின்னுமணி பூணும் பிறவுறுப்புப்
பொன்னே அதுபுனையாக் காணுங்கண் ஒக்குமோ காண்[3]

இத்தகு சிறப்பு கண்ணுக்கு உண்டென்றாலும் தீயோரின் கண்களின் பார்வை மிகவும் கொடியது என்பர்.

'கொம்பு உளதற்கு ஐந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்பு கரிக்கு ஆயிரம்தான் வேண்டுமே - வம்புசெறி
தீங்கினர் தன்கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி'[4]

என்னும் நீதி வெண்பா இதை விளக்கும்.

1. கலிங். 198
2. குலோத்துங்க சோழன் உலா. 35 - 36.
3. நன்னெறி - 40
4. நீதி வெண்பா - 21

—C—

இவ்வாறே, தீமை பயக்கும் மகளிரின் கண்ணையும் சிறுமை என்பர்.

'மலஞ்சொரி கண்ணைவடி வாளுக் கொப்பாக
வருணித்துச் சொல்வார்மதி வன்மை இல்லாதார்'[1]
'கண்களில் வெண்பீளை சுரப்பக் கருமைஇட்ட
பெண்கள் மயல் தப்பிப் பிழைக்குநாள் எந்நாளோ'[2]

என்னும் பாடலடிகள் இதை உணர்த்தும்.

## கண்ணும் கருமமும்

செயலே கண்ணாகக் கொண்டவர்க்குத் தூக்கமும், பசியும், மெய் வருத்தமும், பிறர் செய் தீமையும் அணுகா என்பர்

'மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்'[3]

என்னும் பாடல் இதை நன்குணர்த்தும்.

தமிழர் வாழ்வில் காதலும் வீரமும் இரு கண்களாக அமைந்தமையை பண்டைய இலக்கியங்கள் காட்டுகின்றன. காதலாலும் வீரத்தாலும் கண்களில் ஏற்படும் மாற்றங்களை ஒவ்வொரு நூலும் விரிவாக விளக்கக் காண்கிறோம். பின் வந்த நீதி நூல்களும், சிற்றிலக்கியங்கள் பலவும் கண்ணின் சிறப்புணர்த்தும் வகையில் செய்திகளை அளிக்கின்றன. அவற்றை அந்நூல்களின் இடையிடையே படித்து அறியலாம்.

## சாமுத்திரிகா லட்சணம்

மனித உடலின் ஒவ்வொரு உறுப்பின் அமைப்பிற்கேற்ப அவரவர் குணநலன்கள் அமைந்துள்ளதைச் சாமுத்திரிகா லட்சணம் போன்ற நூல்கள் விளக்குகின்றன. மிகுந்த பயிற்சியும் ஆராய்ச்சி நோக்கும் கொண்ட முன்னோர்கள் தாம் அனுபவத்தில் கண்டவற்றை ஆதாரமாகக் கொண்டே இவற்றை வழங்கியுள்ளனர். இவற்றுள் ஆடவர், மகளிர் இலக்கணத்தில் 'கண்' என்னும் உறுப்பு சிறப்பிடம் பெறுகின்றது. கண்ணின் அமைப்பு,

---

1. பாம்பாட்டிச் சித்தர் பாடல். 53
2. தாயுமானவர் பாடல். எந்நாள் கண்ணி. 2.
3. நீதிநெறி விளக்கம். 53.

அளவு, வடிவம், நிறம், நோக்கு இவற்றை அடிப்படையாக கொண்ட இவை யாவும் பொதுவான இலக்கணங்களாகும். இக் விலக்கணங்களைக் கொண்டு அவரவர் குணநலன்களை ஒருவாறு அறியலாம்.[1]

## புலனுறுப்புக்களில் 'கண்' பெறுமிடம்

"உலகிலுள்ள உயிர்கள் யாவும், புலன்கள் வாயிலாகவே வெளியுலக அறிவினை—சூழ்நிலையைப் பற்றிய (environment) தகவல்களை அறிகின்றன. புலன் உணர்ச்சிக்கு (sensation) அடிப்படையாக இருப்பவை உயிர்ப் பிராணிகளிடம், அமைந்துள்ள பொறிகளாகும், 'மெய், வாய், கண், மூக்கு. செவி என்ற ஐந்தும் 'பொறிகள்' எனப்படும் 'சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்' என்ற ஐந்தும் 'புலன்கள்' எனப்படும். எல்லா மனச் செயல்களும் பொறிகளின் தூண்டல்களால் நடைபெறுகின்றனவாதலின், உயிர் களின் வாழ்க்கையில் பொறிகள் மிகச் சிறப்பிடம் பெறுகின்றன. அவற்றின் செயல்கள் யாவும் பொறிகளைப் பொறுத்தே அமை கின்றன[2]" என்பர்.

புலனுறுப்பு (Sense organ) குறிப்பிட்ட சூழ்நிலை மாற்றத் திற்கு எதிர்வினையாக நரம்பு உணர்வினை உருவாக்குவதற்கு ஏற்ற தகவமைப்புப் பெற்ற அமைப்பே உணர் உறுப்பு அல்லது புலனுறுப்பு எனப்படும். சூழ்நிலையில் தோன்றும் மாற்றத்திற்கு இவ்வுறுப்பு மிகுதிறன் உடையது.

இவ்வகையில், உயிர்களின் ஒருங்கிணைப்பு அமைப்பின் முக்கிய பகுதியாகப் புலனுறுப்புக்கள் அமைந்துள்ளன. மாறும் சூழ்நிலையைப் பற்றிய அறிவும், அதனை யொத்த தகவமைப்பும், உயிர் வாழ மிகவும் தேவை. சூழ்நிலையின் மாற்றத்தை எளிதில் உணரும் உயிரே மிகவும் வெற்றிகரமாக வாழும். புலனுறுப்புக் கள் ஒவ்வொன்றும் தனித்தனியாகக் காணப்பட்டாலும் அவை அனைத்தும் உயிர்களின் வாழ்வில் பொதுவாக ஒன்றோடொன்று இணைக்கப்பட்டுள்ளன என்பதை நாம் அறிய முடியும்.

ஐம்புலனுறுப்புக்களில் முகர்தல் உறுப்புகளுக்கும், செவிக்கும் இடைப்பட்ட இணையான உணர்வு உறுப்பாகக் 'கண்' அமைந் துள்ளது.

---

1. பிற்சேர்க்கை 2 இல் காண்க.
2. டாக்டர் ந. சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை. பக். 466-67

## தமிழரின் அறிவியற் கொள்கை

உலகிலுள்ள உயிர்த் தொகுதிகளை ஐம்பொறிகளின் அடிப் படையில் ஆராய்ந்து, அவற்றின் படி வளர்ச்சி முறையில் (evolution) வகைப்படுத்திய பண்டைத் தமிழ்ச் சான்றோர் திறன் போற்றற்குரியதாகும்.

தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னரே தமிழர்கள் இத்தகைய பாகுபாடுகளை உணர்ந்திருந்தனர் என்பதற்குத் தொல்காப்பியம் கூறும் மரபியல் செய்திகளே சான்றாகும்.[1]

''ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே
ஆறறி வதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே''[2]

எனத் தொல்காப்பியர் உயிரினங்களின் பாகுபாடு அவற்றின் பொறிகளின் அடிப்படையில் அமைந்துள்ளதைச் சுட்டுவர்.

இக்கருத்து இன்றைய அறிவியலாரின் கொள்கைக்கு ஏற்றதே யாகும்,

## உரையாசிரியர் தரும் விளக்கம்

''நண்டும் தும்பியும் நான்கறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே''[3]

என்னும் நூற்பாவிற்கு இளம்பூரணர் தரும் விளக்கமாவது, ''உடம்பினால் வெப்பம், தட்பம், வன்மை, மென்மை அறியும். நாவினால் கைப்பு, காழ்ப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, மதுரம் என்பன அறியும். மூக்கினால் நன்னாற்றம், தீயநாற்றம் அறியும். கண்ணினால் வெண்மை, செம்மை, பொன்மை, பசுமை, கருமை, நெடுமை, குறுமை, பருமை, நேர்மை, வட்டம், கோணம், சதுரம் என்பன அறியும். செவியினால் ஓசை வேறுபாடும், சொற்

1. தொல்காப்பியம்: மரபியல் நூற்பா 27-34; 86-90
2. ,, ,, ,, 27
3. ,, ,, ,, 31

பொருளும் அறியும். மனத்தினால் அறியப்படுவது இதுபோல்வன வேண்டும் எனவும், இது செயல் வேண்டும் எனவும், இஃது எத்தன் மைத்து எனவும் அனுமானித்தல்...''

மேற்காணும் உரையை நோக்குமிடத்தும் மற்றபொறிகளை விட கண்ணின் பயனே மிகுந்திருப்பதை நன்கு அறியலாம்.

## பொறியுணர்வு-ஒற்றுமையில் வேற்றுமை

ஐம்பொறிகளின் இயக்கங்கள் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டனவாயினும் உணர்வைப் பெறுவதில் அவை ஒவ்வொன் றும் தனித்தன்மை வாய்ந்தவையே. எடுத்துக் காட்டாக, தேனாகிய சுவைப் பொருளை நா என்னும் பொறி யுணர்ந்தவழி இன்புறுதலும், அதனையே கண்ணுள் பெய்து மெய்யுணர்ந்த வழித் துன்புறுதலும், கத்தூரியினை மூக்கு உணர்ந்த வழி இன் புறுதலும், அதனையே கண் உணர்ந்தவழி இன்பம் கொள்ளாமை யும் உடைமையால் அவை அவ்வப் பொறியுணர்வு எனப்படும்.

இவ்வகையில், கண் என்னும் பொறி தரும் உணர்வுகள் தனித் தன்மையும் சிறப்பும் பொருந்தி விளங்குவதை நாம் நம் வாழ்க்கை யில் நன்கு உணரலாம்.

## கண்ணின் தோற்றம், அமைப்பு, செயல்பாடு

கண்ணின் தோற்றமும் அமைப்பும் அது செயல்படும் விதமும் மிகவும் சிக்கலானவை. உடலிலுள்ள வேறு எந்த உறுப்பும் இந்த அளவிற்குச் சிக்கலானதன்று.

## தோற்றமும் வளர்ச்சியும்

கருவிலுள்ள ஓரணுவே பல அணுக்களாகப் பிரிந்து பெருகி வளர்ந்து மனித உடலாகிறது. இவ்வணுக்கள் மூன்று அடிப்படை அடுக்குகளாகப் பிரிகின்றன. அவை,

1. உட்புற அணுக்கள் (endodermal cells)—வயிறு, குடல், உணவுப்பாதை, மூச்சுப் பாதை, கழிவுப் பாதை போன்ற உறுப்புகளை அமைக்கின்றன.
2. நடுநிலைஅணுக்கள் (mesodermal cells)—எலும்பு, தசை, இரத்த ஓட்ட மண்டலம் போன்ற உறுப்புகளை அமைக் கின்றன.
3. வெளிப்புற அணுக்கள் (ecto dermal cells)—தோல்,கண், நரம்பு மண்டலம் போன்ற உறுப்புகளை அமைக்கின்றன.

இத்தகைய அடிப்படை அணுப்பிரிவின் காரணமாகவே பிறவிப் பிணிகள் அனைத்தும் கண்ணைத் தாக்குகின்றன எனலாம்.

முதலில், நரம்பு செல் தொகுதிகளிலிருந்தே (neuro mast) முதுகெலும்பிகளின் கண் தோன்றியிருக்கக் கூடுமெனக் கருதப்படு படுகிறது. மேலும், முதுகெலும்புள்ள பிராணிகளின் குல வளர்ச் சியில் வேறு இரண்டு ஒளியுணர் தன்மையுடைய உறுப்புகள் தொடக்க காலத்தில் செயல்பட்டன என்று கருதப்படுகிறது. இவை இரண்டும் முதுகுப் பக்கமாக அமைந்த பரைட்டல் உறுப்பு (parietal organ), பினியல் உறுப்பு (pineal organ) என்பன. இவை மூளையினின்றும் புறப்பிதுக்கமாக வளர்ச்சியுறும் கண் ணின் பகுதிகளாகும். இவை இரண்டும் பார்வை உறுப்பாகிய கண் தோன்றிய போதே தோன்றியிருக்கக் கூடும் என்பர்.[1]

தொடக்க நிலையில் பல பார்வை அமைப்புகள் தோன்றின. இவற்றில் செயல்திறன் மிக்க அமைப்பினையே இயற்கை தேர்ந் தெடுத்துள்ளது. முதலில் தோன்றிய முதுகெலும்புப் பிராணி களின் வாழ்க்கை முறை இணையாக அமைந்த கண்களைப் பெரிதும் சார்ந்து விளங்கியதால் இவை நன்கு வளர்ச்சி யுற்றும், விரைவாகத் தேர்வுற்றும், வளர்ந்தும் நிலை பெற்றன எனலாம்.

பொதுவாக, மூளையின் ஒளி உணர் பகுதியும், புறவுறையின் ஒளி ஊடுருவும் பகுதியும் இணைந்து கண் உருவாகியிருக்கக் கூடும் என்பர்.

## கண்ணின் புற, அக அமைப்பு

கண் ஏழு எலும்புகளால் ஆன ஒரு குழியில் மிகவும் பாதுகாப் பாக வைக்கப்பட்டுள்ளது. மூக்கும் கன்ன எலும்புகளும் அதற்கு மேலும் பாதுகாப்பு அளிக்கின்றன. அது எலும்பில் பட்டு உராய்ந்து புண்ணாகாதவாறு சுற்றிலும் தழுவணையாகக் கொழுப்பு வைக்கப்பட்டிருக்கிறது. கண்ணுக்கும் அதன் குழிக் கும் (Socket) இடையே மேற்பாகத்தில் ஒன்றும் அடிப்பாகத்தில் ஒன்றும் பக்கங்கள் ஒவ்வொன்றிலும் சாய்வாக இரண்டுமாக மொத்தம் ஆறு சிறுதசைகள் உள்ளன. அவை ஒவ்வொன்றின் ஒரு நுனி கண்ணிலும் மற்றது குழியின் சுவரிலும் தொடுக்கப்

---

1, வே. சேது. முதுகு தண்டுடையவைகளின் ஒப்பு உறுப் புமைப்பியல் பக். 172

பட்டுள்ளன. இத்தசைகள் கண்ணை எத்திசையிலும் திருப்பக் கூடிய வண்ணம் அமைந்துள்ளன. இவை இரண்டு கண்களையும் இணைக்கோடுகளில் (parallel lines) இயங்கச் செய்கின்றன. ஆனால், எக்காரணத்திலேனும் ஒரு கண்ணின் தசைகள் மற்றக் கண்ணின் தசைகளை விடப் பலத்தில் குறைந்தனவாக இருந்தால், அவை ஒன்று போல இயங்க முடியாது.

## துணைப் பகுதிகள்

கண்ணைச் சுற்றியுள்ள துணைப் பகுதியில் காப்புப் பகுதி, கண்ணீர்ப் பகுதி, இயக்கும் பகுதி என மூன்று பகுதிகள் உள்ளன. காப்புப் பகுதியில் கண் புருவங்கள், கண் இமைகள், இமையின் ஓரமுள்ள உரோமங்கள் (Eye lashes) ஆகியவையுள்ளன. புருவங்கள் நெற்றியில் வழியும் வியர்வை கண்ணுக்குள் போகாத படி காக்கின்றன. இமையின் ஓரமுள்ள உரோமம் கண்ணுக்கு நிழல் தருவதோடு தூசி போன்ற பிற பொருட்கள் கண்ணுக்குள் செல்லாதவாறு பாதுகாக்கின்றன.

## கண் இமை

மேலிமை; கீழிமை என்னும் ஒவ்வொரு இமையும் அடர்ந்த இணைப்புத் திசுவாலானது. வெளிப்பகுதி தோலினாலும் உட் பகுதி இளஞ்சிவப்பு நிறமான சவ்வினாலும் மூடப்பட்டுள்ளது. இது கண்ணில் அதிக வெளிச்சம் படாமல் தடுப்பதோடு அதைச் சுத்தமாகவும் வைத்துக் கொள்கிறது. தூங்கும்போது கண்ணை மூடி வைப்பதற்கு ஒரு போர்வை போலவும் உதவுகிறது. இமையின் உட்பரப்பில் பிறை வடிவமுள்ள ஒரு சவ்வு இருக்கிறது. இதிலுள்ள நுண்ணிய சுரப்பிகளின் (Glands) வழியே ஊறி வரும் எண்ணெய் போன்ற திரவமே தூக்கத்தில் இமையைக் கண்விழியோடு ஒட்டிக் கொள்ளச் செய்கிறது. இது போன்று மேலும் பல சுரப்பிகள் இமை ஓரத்தில் உள்ளன. அவற்றின் துவாரம் அடைப்படுவதன் காரணமாகவே 'கட்டி' போன்ற கொப்புளங்கள் தோன்றுகின்றன.

## கண்ணீர்ச் சுரப்பிகள்

கண்ணீர்ப் பகுதியில் கண்ணீர்ச் சுரப்பியும் கண்ணீர் நாளமும் உள்ளன. கண்ணீர்ச் சுரப்பி விழி வட்டத்தின் (orbit) மேற் புறத்தில் அமைந்துள்ளது. இது நீர் போன்ற ஒரு திரவத்தைச் சுரக்கிறது. இது அதிகமானால் கண்ணீராகச் சொரிகிறது.

கண்ணீர் சில துளைகளின் வழியே கண் முழுவதும் பரவி, அதைப் பசுமையாகவும் பளபளப்பாகவும் வைத்துக் கொள்கிறது. கிருமி களைக் கொல்கிறது. அது பரந்து பாய்கையில் இமை கொட்டு வதால், சற்று வேகமடைந்து, அங்குள்ள தூசுகளை அடித்துக் கொண்டு வெளியேறுகிறது. கண்ணீர் எப்போதும் சுரந்து கொண்டே இருப்பதுடன் விழிக்கோளத்தின் மீது வடிந்த பிறகு இரு நாளங்களில் சேர்க்கப்பட்டு ஒவ்வொரு கண் இமையின் ஓரத் திலும், கண்ணின் உள்மூலையினருகில் திறக்கின்றன. இரு நாளங் களும் ஒன்று சேர்ந்து ஒரு கண்ணீர் நாளமாகி மூக்கறைக்குக் கடத்தப்படுகிறது.

கண்ணில் அழற்சி காணும் பொழுதும், மனத்தில் துயரம் உண் டாகும் போதும் கண்ணீர் இக் குழல்களில் செல்லக் கூடியதற்கு மிகுந்து ஊறி, இமைகளைக் கடந்து புரண்டு கன்னத்தில் வழியும்.

## உறைகள்

கண் விழிக் கோளத்தை மூன்று உறைகள் அல்லது சவ்வுகள் ஒன்றன் மேல் ஒன்றாக மூடிக் கொண்டிருக்கின்றன.

### 1. விழிப்புறப் படலம் அல்லது ஸ்கிளிரா (Sclera)

இது மேலே காண்பது. மிகவும் கடினமானது. வெண்ணிற முள்ளது. இதில் கருவிழிப்படலம் அல்லது கார்னியா (Cornea) என்னும் இடத்தின் வழியாக மட்டும் ஒளி உட்புக முடியும். கரு விழிப்படலம் குமிழ் வடிவமுள்ளது கண்ணின் முற்பகுதியில் புடைத்து நிற்பது. அதன் வழியேதான் கருவிழி வெளியே தெரி கிறது. நாம் பார்க்கும் பொருள்களிலிருந்து பிரதிபலித்து வரும் ஒளிக் கதிர்கள் முதன் முதலில் அதனிடத்திலேயே கோட்டமடை கின்றன. அதில் ஏதேனும் மாற்றம் ஏற்படின் பொருள்கள் உரு மாறிக் காணும்.

### 2. விழியடிக் கரும்படலம் அல்லது கோராய்டு (Choroid)

இரண்டாவது சவ்வாகிய இது வெகு தடிப்பும் கறுப்பு நிறமு முடையது. இரத்தக் குழாய்களினால் ஒரு வலையைப் போல அது பின்னப்பட்டிருக்கிறது. அதன் நடுவில் (Pupil) ஒரு சிறிய துளையும் பாவையைச் சுற்றிலும் விழித்திரை அல்லது ஐரிஸ் (Iris) என்னும் வட்டமான திரையும் உள்ளன. அதில் இரு வகையான தசை இழைகள் அமைந்துள்ளன. இவற்றால் பாவை சுருங்கி விரியும். பாவை அதிக வெளிச்சத்தில் சுருங்கும். குறைந்த வெளிச்சத்தில் விரியும்.

விழித்திரை கறுப்பாகவோ நீல நிறமாகவோ அல்லது புகை கப்பிய நிறமாகவோ இருக்கும்.

பொதுவாக மனிதனின் உடல் உறுப்புகளுக்கு நிறத்தைக் கொடுப்பது நிற அணு (Pigment) ஆகும். இவற்றிலுள்ள மேலானின் (Malanin) என்னும் இரசாயனப் பொருளே நிறத்தை கொடுப்பது. இந்த மேலானின் அதிகமாக இருந்தால் கண் கறுப்பாக இருக்கும். இந்நிற அணுவின் அளவுக்குத் தக்கபடி கண்ணின் நிறம் மாறுபடும்.

குழந்தைகள் பிறந்தவுடன் கண் நீலமாக இருந்து பின்னர் மாறுவதைக் கவனிக்கலாம். பிறந்த புதிதில் குழந்தைகளின் கண் பாப்பாவைச் சுற்றியுள்ள கருவட்டத்தின் பின்புறத்தில் மட்டுமே கருநிற அணு பரவியிருக்கிறது. வட்டத்தின் வெளிப்பகுதி மட்டும் எவ்வித நிறமுமின்றி பளிங்குபோல் தெரிகிறது. உள்ளே படிந்துள்ள நிற அணு இதன் மூலம் தெரியும் போது வட்டம் மொத்தத்தில் நீலமாகக் காட்சியளிக்கிறது. கருவட்டம் இளவயதில் வளர்ச்யடையும்போது சிறிதுசிறிதாக பின்னாலுள்ள நிறம் முன்னே படிந்து அடர்ந்த கருநிறமாகிறது.

### 3. பார்வைப் படலம் அல்லது ரெட்டினா (Retina)

இது மிக்க நுண்மையும் வெண்மையுமுள்ளது. கண் குழியின் இறுதியிலிருக்கும் துளையின் வழியாகக் கண்ணில் புகுந்து, சிறு நார்களாகப் பிரிந்து பரவிக் கிடக்கும் பார்வை நரம்பினால் (Optic nerve) அது ஆக்கப்பட்டுள்ளது. கருவிழிப்படலம், முன் கணீர் (Aqueous humor), படிக வில்லை (Crystalline lens), பின்கணீர் (Vireous humor) என்னும் இந்நான்கு பொருள்களின் வழியாக ஊடுருவி வரும் ஒளிக்கதிர்கள் இந்தத் திரையின் மீது விழுகின்றன. கண்ணில் மிகவும் வியப்பான பாகம் பார்வைப் படலமே இது ஓர் அங்குலத்தில் நூற்றில் ஒரு பங்கு பருமனே இருந்த போதிலும் அதிலேயே பத்து அடுக்குகள் உள்ளன. அதில் ஓர் அடுக்குக் கூம்பு வடிவமுள்ள அணுக்களாலும் கோல் போன்ற அணுக்களாலும் ஆனது. அதனால் அந்த அடுக்கைக் கோல்-கூம்பு (Rods and cones) என்பர்.

## முன் கணீர்

முதலாவது கருவிழிப் படலத்தின் பின் புறமாக முன்கணீர் இருக்கிறது. கருவிழிப் படலத்தை முன்னால் தள்ளிக்கொண்டு

வரச் செய்வதும், அதற்கு உணவளிப்பதும் இந்த உவர் நீரே. ஒளிக்கதிர்கள் கருவிழிப் படலத்தில் முதலில் கோடி, பிறகு இதனிடத்திலே கோடுகின்றன.

## பின்கணீர்

கண் குழியின் கடைசியில், முட்டையின் வெள்ளைக் கருவை யொத்த நிறமும் தடிப்பும் வாய்ந்த வேறொரு கூழ்நீர் நிறைந்து நிற்கிறது. அதைப் பின்கணீர் என்பர். கண்ணின் சவ்வுகள் உலர்ந்து போகாமலிருக்க இது உதவுகிறது.

## படிகவில்லை (விழிலென்ஸ்)

முன்கணீருக்கும் பின்கணீருக்கும் நடுவே, விழித்திரைக்குப் பின்பக்கத்தில் கண்ணின் கண்ணாடியாகிய படிகவில்லை தொங்கு கிறது அது நீர் நிறமும், தெளிவும், சிறிது தடிப்பும், குவிந்த வடிவமும் உள்ளது. முன்புறம் சிறிதாகவும் பின்புறம் சற்று அதிக மாகவும் குவிந்துள்ளது. இதில் இரத்தக் குழாய்கள் இருப்பதில்லை ஒளிபுகுந்தன்மையுடையதால் ஒளிக்கதிர்களை விலகடையச் செய்ய வல்லது.

## சிலியாத் தசை

படிகவில்லை கடினமான பொருளாக இருந்தால், பல வில்லை கள் வேண்டியிருக்கும். ஆனால், சிலியாத்தசை என்னும் தசைகள் உருவங்கங்கள் இருக்கும் தொலைவிற்குத் தகுந்தபடி வில்லையின் வடிவத்தை மாற்றி விடுகின்றன. படிக வில்லை சிலியாத்தசை களுடன் ஒரு சிறப்பான பந்தகத்தால் இணைக்கப்பட்டுள்ளது. லென்ஸின் வளைவு அல்லது குவித்தூரம் மாற்றப்படுவதால், வெவ்வேறு தூரங்களில் பொருட்கள் இருப்பினும், கண்ணால் தெளிவாகப் பார்க்க முடிகிறது. படிக வில்லையிலும் சிலியாத் தசைகளிலும் உண்டாகும் மாற்றங்களினாலேயே தொலைப் பார்வை (Long sight), கிட்டப்பார்வை (Short sight) போன்ற கேடுகள் உண்டாகின்றன.

## கண்ணின் செயல்பாடு

கண்ணின் செயல்பாடு முழுவதும் நரம்பு மண்டலத்தின் துணையால் நிகழ்வது. கண் அசைவுக்கான கருக்களும் (Nuclei

for eye movements) நரம்புத் தடங்களும் நடுமூளையிலும் பால மூளையிலும் உள்ளன. இவை பெருமூளையின் கட்டுப்பாட்டிலுள்ளதாலேயே இரு கண்களும் ஒன்றுபட்டியங்க முடிகிறது.

மூளையிலிருந்து 12 இணை நரம்புகள் பிரிகின்றன. அவற்றுள் நான்கு கண்ணுடன் தொடர்புடையனவாகும். அவை 1) பார்வை நரம்பு, 2) கண்ணசைவுப் பெருநரம்பு, 3) கண்ணசைவுச் சிறுநரம்பு 4) கண்ணசைவுத் துணை நரம்பு. இவை யாவும் கண்களை அசைக்கும் சிறுதசைகளையும், பாவைத் துவாரத்தின் அளவை மாற்றும் தன்னியக்கத் தசைகளையும் கட்டுப்படுத்துகின்றன. இவற்றின் மாறுபாட்டாலும் மாறுகண், இரட்டைப்பார்வை போன்ற நோய்கள் தோன்றக் கூடும் என்பர்.[1]

## செயல் வரையறை (Functional Limitation)

கண் ஒரே நேரத்தில் பல லட்சக்கணக்கான செய்திகளைக் கையாள வல்லது. ஆயினும், இது ஒவ்வொரு விலங்கினங்களிலும் அவற்றின் வளர்ச்சிக்கேற்ப மாறுபடும்.

உணர் உறுப்புக்களின் தேர்வுத்திறன் அதன் பொறியமைப்பைச் சார்ந்து, செயல்படுவதாம். 0.0004 முதல் 0.0008 மில்லி மீட்டர் வரை ஒளிஅலை நீளமுடைய ஒளியினை மட்டுமே உணரும் தன்மையது மானிடக்கண். ஒளி அலை நீளம் மிகுந்த அகச்சிவப்பு (infrared) ஒளியினையும், ஒளி அலை நீளம் குறைந்த புற ஊதா ஒளியினையும் உணரும் தன்மையற்றது மானிடக்கண். மின் அலைகளையும், புற ஊதா ஒளியினையும், X-கதிர்களையும் நம் கண்களால் காண முடியாது.[2]

## பார்வையுணர்வு

பொருள்களினின்று கிளம்பும் ஒளிக்கதிர் கண்ணின் பாவைத் துவாரத்தின் வழியே கண்ணாடி வில்லைக்குட் புகுந்து கண் திரையில் படுகின்றது. இதனால் கண்திரையிலுள்ள நரம்பணுக்களிலெழும் உணர்ச்சி பார்வை நரம்பின் வழியே மண்டையோட்டினுள் செல்கின்றது. இருபக்கப் பார்வை நரம்புகளும்

1. டாக்டர் கா லோகமுத்துக் கிருட்டிணன். நரம்பு மருத்துவம். பக். 22-25
2. வே. சேது. முதுகு தண்டுடையவைகளின் ஒப்பு உறுப்பமைப்பியல். பக். 173

தலையினுள், மூளைக்கடியில் அடித் தலைச் சுரப்பிக் கருகில் ஒன்றுடனொன்று குறுக்கிட்டு பார்வைப் பாலத்தை (Optic Chiasm) அமைக்கின்றன. இப்பாலத்தில் கண்ணின் உட்புறம் எழும் நரம்பு நார்கள் மறுபுறத்திற்குத் தடம் மாறுகின்றன. எனவே பார்வைப் பாலத்தின் பின் தொடர்பான பார்வைத் தடத்தில் (Optic tract) ஒரு புறத்திலெழும் உணர்ச்சியே செல் கின்றது எடுத்துக்காட்டாக, வலதுபார்வைத் தடத்தில் வலக்கண் திரையின் வெளிப்புறத்திலெழும் நார்களும் இடக்கண் திரையின் உட்புறத்திலெழும் நார்களும் செல்கின்றன. இப்பார்வைத் தடங் களிலிருந்து நார்கள் நடுமூளையிலுள்ள கண்ணசைவு மையத் திற்குச் செல்வதால் ஒளியெழும் திசைக்கு கண்களைத் திருப்பவும் ஒளியின் செறிவிற்கேற்ப கண் பாவைத் துவாரத்தின் அளவைச் சரி செய்யவும் முடிகின்றது. இந்நார்கள் தவிர மிகுந்த பார்வைத் தடம் பெருமூளையின் பின் பகுதிக்கு செல்கின்றது. எனவே, வலப் பெருமூளை வலக்கண் திரையின் வெளிப் புறத்திலெழும் உணர் வையும், இடக்கண் திரையின் உட்புறத்திலெழும் உணர்வையும் பெறுகின்றது. இதன் விளைவாக, வலதுமூளை நமக்கு இடப்புற முள்ள பொருட்களைத் தெளிவுறக் காண்கிறது. அதே போல, இடது மூளை நமக்கு வலப்புறமுள்ள பொருட்களைத் தெளிவுறக் காண்கிறது. எனினும், இருமூளைக் கோளங்களுக்குமிடையே பாலம் போன்ற நரம்பு நார்கள் உள்ளமையால் பார்வையுணர்வு ஒருங்கமைக்கப்படுகிறது. இவ்வமைப்புக் கெடும்போது நம் பார்வையுணர்வு பலவாறு கெடுகின்றது. எடுத்துக்காட்டாக வலப் பக்கம் பக்கவாத நோயுற்ற சில நோயாளிகட்கு வலப்புறமுள்ள பொருட்கள் சரிவரக் கண்ணுக்குத் தெரிவதில்லை.

## பார்வை நிகழும் விதம்

கண்ணின் தொழில் சிறப்படைவதற்கேற்ப அதன் அமைப்பும் சிறந்து சிக்கலாகவும் விரிவாகவும் ஆகின்றது. இதற்கேற்ப நரம்பு மண்டலமும் சிக்கலாகிறது.

பார்த்தல் முதலில் விழிவெண் படலத்தில் ஆரம்பமாகிறது. விழி வெண்படலம் தன்மீது விழும் ஒளிக்கதிர்களை வளைத்து ஒழுங்கு படுத்துகிறது. ஒழுங்கு படுத்தப்பட்ட ஒளிக்கதிர்கள் பின்னர் கண்மணியின் வழியாக உள்ளே செல்கின்றன. கண்மணி ஒளித்திறனுக்கு ஏற்ப மாறுபாடு அடையக் கூடியது. ஒளி அதிக மாக இருக்கும்போது சிறியதாகவும் ஒளி குறைவாக இருக்கும் போது பெரியதாகவும் மாறும். கண்மணியைச் சூழ்ந்

துள்ள கருவிழி ஒளிக்குத் தக்கவாறு கண்ணைச் சிறியதாகவும் பெரியதாகவும் மாற்றுகிறது. கண்மணியின் விட்டம் ஒளிக்குத் தகுந்தாற்போல 2 முதல் 8மி. வரை மாறுபாடு அடையும்.

அடுத்து அமைந்துள்ள படிகவில்லை ஒளிக் கதிரை விழித்திரை யின் மீது குவிக்கிறது. படிகவில்லை பார்க்கும் பொருளின் தூரத் திற்கு தகுந்தாற்போல் மாற்றப்படும். படிக வில்லையினால் குவிக்கப்பட்ட ஒளிக்கதிர்கள் முட்டை வெண்கருவைப் போன்ற ஒருவகைத் திரவத்தின் வழியாகச் சென்று விழித்திரையில் விழு கின்றன.

விழித்திரையில் உருளை மற்றும் கூம்பு வடிவில் மொத்தம் 13.7 கோடி ஒளியுணரும் திறனுள்ள ஒளி வாங்கும் செல்கள் உள்ளன. இவற்றுள் உருளை வடிவமுள்ள செல்கள் கருப்பு வெள்ளை பார்வைக்குக் காரணமாக உள்ளன. கூம்பு வடிவ செல்களால் வண்ணங்களை உணர முடிகிறது.

விழித்திரையின் நடுவில் பார்வை நரம்புகள் மட்டுமே உண்டு அங்கு உருளை மற்றும் கூம்பு செல்கள் கிடையாது. எனவே, இப் பகுதியில் பார்வை நிகழுவதில்லை. இது குருட்டுப்புள்ளி எனப்படும்.

உருளை மற்றும் கூம்புச் செல்கள் விழித்திரையிலுள்ள இதர செல்களுடன் பார்வை நரம்பின் மூலம் மூளையுடன் நேரடியாக இணைக்கப்பட்டுள்ளன. ஒளி இச்செல்களிலுள்ள ஒளியுணரும் பொருட்களைத் தூண்டியதும் ஒரு தொடர்ச்சியான வேதியில் மாற்றம் ஏற்படுகிறது. இதன் விளைவாக மின் ஆற்றல் வெளியிடப் படுகிறது. இந்த வேதியல் மாற்றங்களின் விளைவாக மின் திறன் மாற்றமாக குறியீடு செய்யப்படுகிறது. இக்குறியீடுகள் நரம்புத் திசுக்களின் மூலமாக மூளையை அடைந்தவுடன் காட்சிகளாக மாற்றப்படுகின்றன. இதையே நாம் பார்வை என்கிறோம்.

பொதுவாக, காட்சியானது கண்ணின் வழியே வரப்பெற்ற தரவுகளைக் (Data) கொண்டு மூளையில் செய்யும் முடிவுகளாகிய (Judgements)பாவ ரூபங்களாகிய உளவியற் பொதுமைக் கருத்துக் களாக(Psychological Concepts) இருக்கின்றது என்பர்.[1]

1. கலைக்களஞ்சியம். தொகுதி-8 பக். 92-97

## நனவில் கண்

நனவு நிலையிலேயே கண்ணின் செயல்பாடு பற்றி அறிய இயலும். கண்கள் சாதாரண நிலையில், அதிகமாக விழித்தல் இல்லாமல், பார்வை மிகவும் தெளிவாக அமைவதே நனவில் கண்ணின் சிறந்த அமைப்பாகும்.

## மயக்கத்தில் கண்

மயக்க நிலையில் கண் இருளடையும். பார்வை நன்கு தெரியாது. சில நேரங்களில் கண்கள் முழுதும் மூடியும், சில நேரங்களில் பாதி மூடியும் இருக்கும். இத்தகைய குறிகளைக் கொண்டும் மயக்கம் ஏற்பட்டிருப்பதை நாம் உணரலாம்.

## தூக்கத்தில் கண்

நனவு நிலைக்கும் மயக்க நிலைக்கும் மாறுபட்டது தூக்கம், தூக்கத்தின் போது மூளை முழுக்க ஓய்வு பெறுவதில்லை. தூக்கத்தின் போது சில வேளைகளில் நம் கண்கள் விரைவாக அசையும். இதன் அடிப்படையிலேயே நம் தூக்கத்தை விரைந்து கண்ணசையும் தூக்கம் (Rapid eye movement Sleep or REM Sleep), விரைந்து கண்ணசையாத் தூக்கம் (non REM Sleep) என்று இருவகைகளாகப் பிரித்துள்ளனர். குழந்தைகளுக்குப் பெரும்பாலும் பின் வகைத் தூக்கமே ஏற்படும். பெரியவர்கட்குப் பெரும்பாலும் பின்வகையும் முப்பது சதவிகிதம் முன்வகையும் ஏற்படுகின்றன. நம் தூக்கத்தில் முன்வகை கலந்திருந்தால்தான் தூங்கி விழித்தவுடன் நாம் சுறுசுறுப்பாயிருப்போம். பின் வகையாயிருப்பின் தூங்கிய பயனே இல்லாதது போல இருக்கும்.

## கனவும் கண்ணும்

விரைந்து கண்ணசையும் தூக்கத்திலேயே கனவுகள் தோற்று கின்றன என்பர். கண்கள் முன்பே கண்ட பொருள்களின் அடிப் படையிலும் அவற்றின் தொடர்புள்ளவற்றின் வடிவாகவுமே கனவுகள் எழுகின்றன எனலாம். அவற்றின் வடிவம், நிறம், அளவு போன்றவை வெவ்வேறு நிலைகளில் வெவ்வேறாகக் காட்சியளிப்பன. இவை அவரவர் மனநிலை, பழக்கவழக்கம், நோய், சூழ்நிலை இவற்றின் அடிப்படையாகவும் அமையும்.

## விலங்குகளின் கண்

இன்று உலகில் வாழும் விலங்குகளை அவற்றின் கண்ணின் அமைப்பில் காணும் திருத்தங்களை அடிப்படையாகக் கொண்டு மேலும் மேலும் சிறப்படைந்து வரும் தொடராக வரிசைப் படுத்தலாம். ஓர் உயிரணுவில் கண் ஒரு நிறமிப் புள்ளியாக இருக்க, பாலூட்டிகளின் கண் மிகவும் சிக்கலும் விரிவு முள்ளதாக இருக்கின்றது.

பரிணாமத்தின் பயனாகப் பிராணிகளின் உடல் எளிய நிலைகளிலிருந்து படிப்படியாகச் சிக்கலான நிலைகளுக்கு முன்னேறி வந்திருக்கின்றது என்பர். இம் முன்னேற்றம் கண்ணின் அமைப்பிலேயே மிகவும் திருத்தமாகத் தெரிகின்றது.

உயிருள்ள ஓர் உயிரணுவில் உள்ள உயிர்பொருளுக்கே (Protoplasm) ஒளியை உணரும் ஆற்றல் உண்டு. பல ஓரணுத் தாவரங்களிலும் பிராணிகளிலும் நிறமிப் புள்ளிகள் உள்ளன.

மண் புழுவின் தோலின் அடிப் பகுதியில் ஒளியுணரணுக்கள் இருக்கின்றன.

ஒளியின் ஒரு குறித்த வீச்சுக்குள்ளேயே உயிர்கள் தங்கள் வாழ்க்கைச் செயல்களை நடத்துகின்றன. இரவில் உலவும் ஆந்தை, வௌவால், விட்டில் ஆகியவற்றின் கண்கள் விளக்கமான பகல் ஒளியில் சரியாகக் காண முடியாது. புறா, வண்ணத்துப் பூச்சி போன்ற பகலில் உலவும் உயிர்களுக்கு இரவில் பறப்பதற்குக் கண் தெரிவதில்லை. பூனை, சில மீன்கள், இறால்கள் நாள் முழுதும் காணக் கூடியவை. ஒளி வீச்சிக்கு ஏற்றவாறு அவற்றின் கண்கள் பொருந்திக் கொள்ளும்.

**கண் தகவமைப்பு :** சுறா மீன்களில் கண்ணின் படிகவில்லை குவிதல் என்பது முடியாது. எனவே கண்ணின் குவியத் தூரத்திற்குள் வரும் அளவு சுறாவானது பொருளை நெருங்கிச் சென்றே அதைக் காண முடியும்.

நீர், நிலம் வாழ்வன (தவளைபோன்றவை) வற்றுள் கருவிழிப் படலம் மீனில் இருப்பதை விடக் குவிவு (convexity) அதிகமாக உள்ளது. ஆனால், படிகவில்லை உருண்டையாக இருக்கும். எனவே, தவளை படிகவில்லையை முன்னுக்குக் கொண்டு வந்து கிட்டப் பார்வைக்குக் கண்ணைத் தகவமைத்துக் கொள்ளும்.

இவ்வாறே இது கண்ணை உள்ளுக்கும் இழுத்துக் கொள்ளும். இதன் கண்குழி எலும்பாலானதன்று. சவ்வால் ஆனது. இவ்வமைப்பும் இதற்குத் துணையாகின்றது,

ஊர்வனவற்றில் கண் உருண்டையாக இருக்கும். படிகவில்லை தட்டையாகவும் ஆகும். பாம்புகளில் படிகவில்லை முன்பின் அசைவதால் தகவமைப்பு நேருகிறது.

பறவைகளில், முக்கியமாக இரவில் உலவும் பறவைகளில் கண் குழாய்வடிவாக உள்ளது. பார்வைப் படலத்தில் விசிறி போன்ற ஒரு மடிப்பு இருக்கும். அது கண்ணின் உள்ளே இருக்கும் திரவப் பொருளின் அழுத்தம் ஒரு நிலையில் இருப்பதற்கும் கண் தகவமைப்புக்கும் உதவுகிறது.

## கண்கள் இருக்குமிடம்

செனோப்பஸ் (xenopus) என்னும் ஆப்பிரிக்கத் தேரைக்குக் கண்கள் தலையின் மேலே உச்சியில் அமைந்துள்ளன.

மீன், மாடு போன்ற முதுகெலும்பிகளுக்கு தலையின் இரு பக்கங்களிலும் பொருந்தியிருக்கிறது. பூனை, குரங்கு, ஆந்தை, மனிதன்இவற்றிற்கு முகத்தின் முன்னால் உள்ளன. இவற்றிற்கு இரு கண்களாலும் ஒரு பொருளைப் பார்க்கும் தன்மை (Stereoscopic Vision) உண்டு.

நண்டு, இறால் போன்றவற்றில் கண் ஒரு காம்பின் முனையில் இருக்கும். நத்தையின் கண்ணும் பெரிய உணர் கொம்பின் உச்சியிலுள்ளது. இந்த உணர் கொம்பை அது சுருக்கி உள்ளிழுத்துக் கொள்ளும்.

**பருமன்:** கண் திறமையாகத் தொழில் செய்வதற்கு ஒரு மிகு அளவும் ஒரு குறைஅளவும் இருப்பதாகத் தெரிகிறது. யானையின் பருமனுக்குரிய விகிதத்தில் கண் பெரிதாக இருப்பதில்லை. மனிதனின் கண்ணை மற்றப் பாலூட்டிகளின் கண்ணுடன் ஒப்பிட்டால் விழித்திரை என்னும் ஐரிஸ் விகிதத்தில் பெரியது. அவற்றில் வெள்ளை விழி காண்பதில்லை. கண்ணை உருட்டும் போதுதான் சிறிது வெள்ளை தெரியும்.

**கண் பாவை:** இதன் வடிவிலும் அளவிலும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. மனிதனிலும் பெரும்பாலான பறவைகளிலும்

இது வட்டமாக இருக்கும். பூனைகளில் செங்குத்தாக இருக்கும். ஆந்தையிலும் பல்லியிலும் அவ்வாறே. புல் மேயும் ஆடு மாடுகளில் கிடைமட்டமாக நீள சதுர வடிவில் இருக்கும். இதனால் இவை அகன்ற இடத்தைக் காணக்கூடும். திமிங்கிலத்தில் முந்திரிப்பருப்பு வடிவினது. அவ்வடிவின் பள்ளமான பாகம் மேற்புறமிருக்கும்.

**பார்வை நுட்பம்:** மிக விரைவாக ஓடும் மான், குதிரை, ஒட்டகச் சிவிங்கி, கங்காரு போன்றவற்றின் கண்கள் பெருந்தடங் கண்கள்; பார்வை நுட்பம் மிக்கவை.

எலும்பு மீன்கள், ஆமைகள், பல்லிகள், பறவைகள் மற்றும் பாலூட்டிகளில் சில வண்ணப் பார்வையினை உடையன. ஆனால், இவற்றில் வண்ணத்தினை உணரும் அளவு வேறுபடுகிறது. மனிதன் வண்ண வேறுபாட்டினை மிகத் தெளிவாக உணர்கிறான். நீர்நில வாழ்விகள் மிகக் குறைந்த வண்ண வேறு பாட்டினை அறிவன என்பர். பெரும்பான்மையான முதுகெலும்பிகள் உலகிலுள்ள பொருள்களைச் சாம்பல் நிறத்திலேயே காண்கின்றன என்பர்.[1]

**கண்ணீர்:** நீர் வாழ்வனவற்றிற்குக் கண்ணீர் சுரப்பி தேவையில்லை. நீர்நில வாழ்வன, நில வாழ்வனவற்றிற்குக் கண்ணீர் சுரப்பிகள் உள்ளன.

**இமை:** மீன்களில் இமைகள் கிடையாது. நீர்நில வாழ்வனவற்றில் மேலிமை, கீழிமை என்பன தெளிவாகத் தெரிகின்றன. பின் தோன்றிய எல்லா முதுகெலும்பிகளிலும் இவை வளர்ச்சியுற்றுள்ளன. ஆனால், பாலூட்டிகளில் மட்டுமே இவற்றில் அசைவது மேலிமையாக மாற்றமடைந்துள்ளது.

பாலூட்டிகளில் கண்ணின் மூன்றாம் இமை அவ்வளவுவாக வளர்ச்சி பெறவில்லை. அது ஒரு சிறு பிறை வடிவ மடிப்பாகக் கண்ணின் உட்கடையில் உள்ளதைக் காணலாம்.

## நோயும் மருந்தும்

இன்றைய அறிவியல் உலகிலும் நோயில்லாத மனிதனையும் மருந்துண்ணா மனிதனையும் காண்பதரிது. உயிர் எப்போதும்

---

1. வே. சேது. முதுகு தண்டுடையவைகளின் ஒப்பு உறுப்பமைப்பியல் பக். 184.

சூழ்நிலையோடு போராடி வருவதும், அதில் வெற்றி என்பது உடல் நலமாகவும் தோல்வி என்பது நோயாகவும் இருப்பதை நாம் நன்கு உணரமுடிகிறது.

## நோய்

இச்சொல் 'நொ' என்னும் வேரின் அடிப்படையாகப் பிறந்திருக்கவேண்டும். 'நொ' என்னும் பகுதி நொவ்வு, நோதல் என்னும் பொருள் தரும் தொழிற் பெயராகும். இறந்த காலத்தில் நொந்து, நொந்த, நொந்தான் முதலியனவாய் வரும். மற்றைக் காலங்களில் நோகின்ற, நோக, நோவ முதலியனவாய் வரும். நோவு எனப் பெயர் தோன்றும். நொய்மையைச் செய்வதே நோய் எனலாம்.

நோய் என்பது தளர்ச்சி, மெலிவு, துன்பம், வருத்தம், வியாதி, குற்றம், அச்சம், துக்கம், நோவு என்னும் பல பொருள்களிலும் வழங்கப்படுவதிலிருந்தும் இச்சொல்லின் பொருள் புலனாகும்.

## தொல்காப்பியர் கருத்து

"பையுளும் சிறுமையும் நோயின் பொருள" என்பர் தொல்காப்பியர்.[1]

உடல் மற்றும் உள்ளத்தை வருத்துவது 'பையுள்' எனவும் துன்பத்துடன் கூடிய உளநோயைச் 'சிறுமை' எனவும் கொள்ளலாம்.

'நோய்' அல்லது 'துன்பம்' என்பது பிறரால் எடுத்துக் காட்ட இயலாதப் பொருட்களுள் ஒன்றென்பதும் இவரது கூற்றாகும். அத்துடன், நோயென்பது எங்கும் எவ்விடத்தும் இலங்குவது என்பதும் காப்பியர் தம் கொள்கையாகும்.

"ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா
கற்பும் ஏரும் எழிலும் என்றா
சாயலும் நாணும் மடனும் என்றா
நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு
ஆவயின் வரூஉங் கிளவி எல்லாம்
நாட்டியல் மரபின் நெஞ்சுகொளின் அல்லது
காட்ட லாகாப் பொருள் என்ப"[2]

---

1. தொல். சொல். உரி. 45.
2. தொல். பொருள். பொருளியல் 51.

''இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்
அவையில் காலம் இன்மை யான''[1]

என்பர் தொல்காப்பியர்.

மனிதனுடைய உடலையும் உள்ளத்தையும் தாக்குவதே நோய் என்னும் அடிப்படை உண்மையும் இதன் வழிப் புலனாகும்.

## இலக்கியங்களில்

தமிழ் இலக்கியங்களில் 'நோய்' என்னும் சொல் துன்பம் என்னும் பொருளிலேயே பலவிடங்களிலும் வழங்கப்படுவதைக் காணலாம்.

கலித்தொகை, நற்றிணை போன்ற சங்க நூல்களில் இச்சொல் பல பொருட்களில் வழங்கப்படுகின்றன.

ஆற்றல்நோய், அவலநோய், அருநோய், இன்னாநோய், உள் நோய், கரந்தநோய், காமும்நோய், தணியாநோய், துன்பநோய், துஞ்சாநோய், தொடர்நோய், படர்மணிநோய், பசப்புநோய், பாயல்நோய், பிரிதல் நோய், பைதல்நோய், மருள்றுநோய், மயங்கு நோய், விளியாநோய், வெப்பநோய் என்பன குறிப்பிடத் தக்கன.

இச்சொல்லைத் 'துன்பம்' என்ற பொருளிலேயே வள்ளுவரும் பலவிடங்களில் குறிப்பிடுகின்றார்.[3]

## பிணி

பிணித்தல் எனும் சொல் கட்டுதல் என்னும் பொருள் தரும் தொழிற் பெயராகும். பிணியாவது நோய்; உடம்பின் உறுப்புக் களை இயல்பாக இயங்க வொட்டாமல் கட்டி வைத்தாற் போலச் செய்தலின் அஃது அப்பெயர் ஆயிற்று.

பிறவிப்பிணி, பசிப்பிணி எனப் பலவாறு தமிழிலக்கியங்களில் கூறக் காணலாம்.

நோய் அல்லது பிணி என்று சொல்லும் நிலை மனித வாழ்க் கையில் ஒரு செயற்கை நிலை, நோயற்ற வாழ்க்கையே இயற்கை நிலை ஆகும்.

---

1. தொல். பொருள் பொருளியல். 52
3. குறள்-315, 320, 360

நோய் என்பது உடலை மட்டும் பற்றியதென்று இல்லாமல் நோய் உண்டாவதற்கு மனமும் முக்கிய காரணமென்பதைப் பல்லாயிரமாண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் உலகிற்கு உணர்த்தியுள்ளமையும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும்.

'நோயற்ற வாழ்வே' வாழ்க்கையின் அடிப்படையாக அமைகின்றது.

'நோய்க்கிடங் கொடேல்' 'நோய் கொண்டார் பேய் கொண்டார்' 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' போன்ற முதுமொழிகளும் இவ்வுண்மையைத் தெளிவுறுத்துகின்றன.

## மருந்து

இச்சொல் 'மரு' என்னும் வேரின் அடிப்படையாகப் பிறந்திருக்க வேண்டும். மரு என்னும் சொல் மணம்; மருக்கொழுந்து மலை; வனம்; தளிர் போன்ற பொருள்களைக் கொண்டதாகும்.

மலை, காடு, போன்ற இடங்களில் கிடைக்கக் கூடிய வெவ்வேறு மணமும் குணமும் உள்ள மூலிகைகளைக் கொண்டு செய்யப்படும் பொருள்கள் நோய்க் கெதிராக உந்துவதினால் 'மருந்து' எனப் பெயர் வழங்கப்பட்டது எனலாம்.

மருந்து என்னும் சொல்லிற்கு அமுதம்; ஓடதி; ஔடதம்; நஞ்சு போன்ற பல பொருள் உண்டு.

இச்சொல் உடன்பாடு, எதிர்மறை ஆகிய இரண்டிற்கும் பொருந்திவரும் ஒரு சொல்லாகும். நோயைப் போக்கி வாழ்விக்கும் காரணத்தால் 'அமிழ்தம்' என்ற பொருளிலும், நோயைக் கொல்லும் தன்மையைப் பெற்றிருப்பதால் 'நச்சு' என்ற பொருளிலும் இச்சொல் வழங்கக் காணலாம்.[1]

**மருத்துவர்:** இத்தகைய மருந்தளித்து உடலைப் பாதுகாப்பவர்களையும் மருத்தன்; மருத்துவச்சி; மருத்துவர்; மாமருத்துவ நூலோர்; மாமாத்திரர் என்னும் பெயர்களாலேயே அழைக்கக் காணலாம்.[2]

---

1. விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
   மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று'(குறள். 82)
   கடல் கலக்கி மருந்து கைக்கொண்டு (கல்லா. 41.26)
   இருமருந்து விளைக்கு நன்னாட்டுப் பொருநன் (புறம். 70)
2. ஆசிரிய நிகண்டு. பக். 148.

**மருத்துவம்:** மருந்து + அம் — மருந்தம் < மருத்துவம் என்பதாயிற்று. இச்சொல் வைத்தியம், பரிகாரம், பிரசவம் பார்க்குந் தொழில் எனப் பல பொருள்களிலும் வழங்கப் படுகின்றது.[1]

## இலக்கியங்களில்

தமிழ் இலக்கண இலக்கிய நூல்களில் மருந்து, மருத்துவத் தொடர்பான செய்திகள் பரவிக் கிடக்கக் காணலாம்.

'வேம்பும் கடுவும்' பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுவர்[2] கடுவும் கைபிழி எண்ணெய்யும் கலந்தமையால் மயிர் நல்லவாயின என்று சேனா வரையர் தம் உரையில் குறிப்பிடுவர்.

அறுபத்துநான்கு கலைகளில் மருத்துவமும் ஒன்றாகும்.

## சங்க இலக்கியங்கள்

'உறையூர் மருத்துவன் தாமோர்தரனார்' 'மருத்துவன் நல்லச்சுதனார்' போன்ற சங்க காலப் புலவர்களின் பெயர்களை அறியுமிடத்து அக்காலத் தமிழரின் புலமையும் மருத்துவ நூலறிவின் தொடர்பும் நன்கு விளங்கும்.

அகநானூறு, புறநானூறு போன்ற நூல்களில் மருத்துவச் செய்திகள் பலவும் அடங்கியுள்ளன. 'நீரும் உணவுமே' இன்றியமையாத மருந்தென தமிழர் கொண்டிருந்ததைப் பல பாடல்கள் சுட்டுகின்றன.[3]

உயிர் காப்பது மருந்து எனவும், நோய் போக்குவது மருந்து எனவும், துன்பத்தைத் தீர்ப்பது மருந்தெனவும் பல பாடல்கள் கூறுகின்றன.[4]

சங்க இலக்கியங்களில் கூறப்படும் தாவரங்கள் பல இன்றும் மருத்துவத் துறையில் கையாளப் படுவது குறிப்பிடத் தக்கது என ஆய்வாளர் கூறுகின்றனர்.[5]

---

1. TAMIL LEXICON.
2. தொல். பொருள். செய்யு. 108
3. புறம் - 18, 70; நற் - 53; பரிபாடல் - 1-4
4. பாலைக்கலி - 31-14-15; குறிஞ்சிக்கலி 8-20-21; மருதக்கலி - 16-34-39; நற்றிணை - 140
5. Dr. C. K. Sampath, Elements of Medical Science in Sangam Literature,

## சாவா மருந்து

விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று[1]

என்னும் குறளுக்கு இலக்கணமாகத் திகழும் அதியமானைப் பாடும் ஔவையார்,

'பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே''[2]

எனக் கூறுமிடத்து அம்மன்னனின் விருந்தோம்பலைச் சிறப்பிப்பர்

அமிழ்தம், சாவாமருந்து போன்ற வற்றையும் அக்காலத் தமிழர்கள் உணர்ந்திருந்தனர் என்பதற்கு இவை சான்றாகும்.

## நோயற்ற வாழ்வு

மக்களுக்கு நோயற்ற வாழ்வை அளிப்பதே அக்கால மன்னர்களின் கடமை என்பதையும் இப் பாடல்களின் வாயிலாக நாம் அறியலாம்.

''மழைவேண்டு புலத்து மாரிநிற்ப
நோயொடு பசியிகந் தொரீஇப்
பூத்தன்று பெருமநீ காத்த நாடே''[3]

''நீ புறந்தருதலின் நோய்இகழ்ந்து ஓரீஇய
யாணர் நன்னாடு''[4]

என இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் சிறப்பை விளக்கும் குமட்டூர் கண்ணனாரின் பாடலடிகளிலும் இது நன்கு விளங்கும்.

'மீன்தேர் கொட்பின் பனிக்கயம் மூழ்கிச்
சிரல்பெயர்ந் தன்ன நெடுவெள் ஊசி
நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்''[5]

என்னும் பாடலடிகளை நோக்குமிடத்து பண்டைத் தமிழர்கள் கருவி மருத்துவத்திலும் சிறந்து விளங்கியமை நன்கு புலனாகும்.

---

1. திருக்குறள் - 82
2. புறம் -91
3. பதிற். 2:3:26-28
4. பதிற் 2:5: 33-34.
5. பதிற். 5

சங்க இலக்கியங்களில் கூறப்படும் திணை அடிப்படையிலான பாகுபாடுகளையும் அவற்றில் கூறப்படும் கருப்பொருள்கள் பலவற்றையும் தொகுத்து ஆராயுமிடத்து மேலும் பல உண்மைகள் விளங்கும் எனலாம்.

## காப்பியங்கள்

சிலப்பதிகாரம் 32 ஓமாலிகைகளைக் குறிப்பிடுகிறது. நீராடும் முன்னர் நீருக்கு மணமூட்ட இவற்றைச் சேர்ப்பர். மாதவி ஓமாலிகையின் பயனை அனுபவித்ததாகக் கூறுவர். அவற்றுள் ஒன்றான துத்தம் எனப்படும் சுரிஞ்சான் ஆப்கானிஸ்தானத்தில் கிடைப்பது. அது யவன, சீன, பாரசீக நாடுகளில் சிறந்த மருந்தென மதிக்கப்படுகிறது.

'வீழ்குடி உழவரொடு விளங்கிய கொள்கை
ஆயுள்வேதரும் காலக் கணிதரும்'[1]

மதுரையில் வாழ்ந்திருந்தனர் என்பதும், அவர்கள் இத்தகைய பொருட்களின் பயனை அறிந்து பெற்று மற்றவர்க்கும் வழங்கினர் என்பதும் அறியத்தக்கதாகும்.

சீவக சிந்தாமணி, மணிமேகலை போன்ற காப்பியங்களிலும் நோய் நீக்கும் மருத்துவர் பற்றிய செய்திகளைக் காணலாம்.

மனிதனின் முன்னேற்றத்திற்கும் நலத்திற்கும் மேன்மையளிப்பதே சமயங்களின் அடிப்படையாகும். இதனுள் மருத்துவமும் அடங்கும். இச் சமயங்களின் தொடர்பால் விளைந்த காப்பிய இலக்கியங்கள் பலவும் இத்தகைய மருத்துவம் தொடர்பான செய்திகளைக் கூறக் காணலாம்.

## பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்

மனிதனின் உடலும் உள்ளமும் தூய்மையாக, நலமாக இருக்குமிடத்தே ஒழுக்கம் நிலை பெறும். இக் கருத்தை உள்ளடக்கியே தமிழிலுள்ள நீதி நூல்கள் பலவும் எழுந்துள்ளதைக் காணலாம். மருத்துவம் என்பது வாழ்க்கையோடு இயைந்ததென்றே இவை நமக்குக் காட்டுகின்றன.

திரிகடுகம், ஏலாதி, சிறுபஞ்சமூலம். ஆசாரக் கோவை, பழமொழி நானூறு போன்ற தலைப்புகளில் காணப்படும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் இக்கருத்தை நன்கு விளக்குகின்றன.

---

1. சிலப். புகார். 5. இந்திர. 43-44.

திரிகடுகம்: சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று மருந்துப் பொருட்களும் உடல்நோயை அகற்றுவன. இவ்வாறே இந்நூலி லுள்ள ஒவ்வொரு பாடலிலுள்ள மும்மூன்று கருத்துகளும் உளநோயை அகற்றுவன என்பர்.

ஏலாதி: ஏலம், இலவங்கம், நாகசேரம், மிளகு, திப்பிலி என்னும் மருந்துப் பொருட்கள் உடல் நோயைப் போக்குவது போலவே இந்நூலின் ஒவ்வொரு பாடலிலுள்ள கருத்துக்கள் உள நோயைப் போக்கும் என்பர்.

சிறுபஞ்சமூலம்: கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெருஞ்சி என்ற ஐந்தும் சிறுபஞ்சமூலம் என்னும் மருந்துப் பொருட்களாகும். (வில்வம், பெருங்குமிழ், தழுதாழை, பாதிரி, வாகை இவற்றின் வேர்கள் - பெரும்பஞ்சமூலம் என்பர்) இம்மருந்துப் பொருட்கள் உடல் நோயைப் போக்கும் அடிப்படை யிலேயே இந்நூற் கருத்துக்களும் உளநோயை அகற்றும் வகையில் கூறப்படுகின்றன.

ஆசாரக்கோவை: இந்நூல் ஒழுக்க நெறிகளை வற்புறுத்து வது. ஒழுக்கம் பிழையாதவர் அடையும் பயன்களில் நோயின்மை யும் ஒன்று. வைகறை துயில் எழுதல், அந்திப் பொழுதில் கிட வாமை, நீராடி கால் கழுவி வாய் பூசி உண்ணுதல் முதலிய வற்றைக் கூறுவதால் நோய் வராது காக்கும் நெறி முறைகளில் கவனம் செலுத்தியதை அறியலாம்.

திருக்குறள்: ஆங்கில மருத்துவர்களுக்கு கிரேக்க நாட்டு இப்பொகிரட்டீஸ் முன்னோடி ஆவது போல் தமிழர்க்கு வள்ளுவர் முன்னோடி ஆகின்றார் என்பர்.[1]

நூலோர் உணர்த்திய கருத்தின் அடிப்படையில் மருத்துவம் பற்றிய சில கோட்பாடுகளை வள்ளுவர் உருவாக்கித் தந்திருப்பது அறியத்தக்கது.

வளி (வாதம்), தீ (பித்தம்), நீர் (கபம்) எனும் மூன்றின் நிலை பிறழ்ச்சியால் நோய்கள் வரும். இப் பிறழ்ச்சிக்கு உணவுப் பழக்க மும் இடமளிக்கும். எனவே உணவுக் கோட்பாடுகளை வள்ளுவர் விரிவாகப் பேசுகிறார்.

---

1. டாக்டர். தே. ஆண்டியப்பன். இரா. குமாரசாமி, சித்த மருத்துவம். பக் 9.

"மிகினும் குறையினும் நோய்செய்யும்; நூலோர்
வழிமுதலா எண்ணிய மூன்று"[1]

என்று கூறுமிடத்து, உணவும் செயலும் ஒருவனுக்கு மிகுந்தாலும் குறைந்தாலும், மருத்துவ நூலோர் எண்ணிய மூன்று நோயும் துன்பம் தரும் என்பர்.

மேலும், ஒருவன் முன் உண்ட உணவு நன்கு செரித்த பின்பே மீண்டும் உணவு உண்டால் அவனுக்கு மருந்து என ஒன்று தேவையில்லை என்றும் கூறுவர்.

"அற்றால் அளவறிந்து உண்க; அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கும் ஆறு"[2]

"மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்"[3]

"அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து."[4]

மேற்கண்ட மூவகை மாறுகோளும் இல்லாத உணவைத் தன் உள்ளம் விரும்பிய அளவின்றிப் பிணிவாராத அளவு ஒருவன் உண்டு வந்தால் அவன் உயிர்க்குப் பிணிகளால் துன்பம் உண்டாகாது என்பதையும் வள்ளுவர் வலியுறுத்துவர்.

"மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு"[5]

இதற்கு மாறுபாடாக அளவுமீறி உண்பவனிடத்தில் நோய் நீங்காது நிற்கும் என்பதையும் விளக்குவர்.

"இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான் கண்நோய்"[6]

"தீயளவு அன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயளவு இன்றிப் படும்."[7]

---

1. குறள் - 941.
2. குறள் - 944
3. குறள் - 942
4. குறள் - 943.
5. குறள் - 945
6. குறள் - 946
7. குறள்-947

இச்செய்திகளை நோக்கும் போது Dr.எட்வர்டு ஜே. பெட்டிக் என்பவரின் கூற்றும் ஒப்பு நோக்கத் தக்கது. புற்று நோய்க்கு உணவுப் பழக்கமே பெருங்காரணமாக இருக்கிறது என்பது இவர் கூற்று. இது இக்கால ஆய்வு ஒப்பிடுவதற்கு உகந்தது என்பர்.[1]

## மருத்துவர் இலக்கணம்

நோயும் மருந்தும் விளக்கிய வள்ளுவர் மருத்துவர்களுக்கான இலக்கணத்தையும் விளக்குவர். இன்றைய நடைமுறை உலகில் காணும் மருத்துவர்களுக்கான பயிற்சி முறைகளும் இவ்விலக்கணத்தை அடிப்படையாகக் கொண்டே அமைந்துள்ளமையும் குறிப்பிடத் தக்கதாகும்.

''நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்''[2]

உணவுசெயல், ஒவ்வாமை ஆகிய இரண்டின் நிதானம் அறிந்து, நோயின் அறிகுறிகள், அதுவந்த காரணம், அதை நீக்கும் வழி ஆகிய மூன்றையும் ஐயம் அறத் தெளிந்த பின்னர், அதைத் தணிக்கும் வாயாகிய அகமருந்து புறமருந்து என்பனவற்றினை முறையாக அறிந்து கொடுத்தல் வேண்டும் என்பதை மருந்துவர்களின் முதல் இலக்கணமாக வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

நோயறிதல்(Diagnasis), நோயின் காரணத்தைக் கண்டறிதல் (Determning the cause of disease), நோய் தீர்க்கும் வழிமுறை அறிந்து மருத்துவம் செய்தல் (Treatment) போன்றவை நடைமுறையில் இருப்பவையே ஆகும்.

இவ்வடிப் படையிலேயே மேலும் சில கருத்துக்களையும் மருத்துவர் இலக்கணமாக வள்ளுவர் குறிப்பிடுவர்.

''உற்றான் அளவும் பிணியளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்''[3]

நோயாளன் இயல்பு வயது, நோயின் அளவு, நோயின் தொடக்கம், நடுநிலைமை, முடிவு நிலைமை ஆகியவற்றையும், தீரும் நோய், தீரா நோய் என்னும் குறிப்பினையும், நோய் ஏற்பட்

1. டாக்டர் தே. ஆண்டியப்பன். இரா. குமாரசாமி சித்த மருத்துவம் பக் 9-10
2. குறள் - 948.
3. குறள் - 949.

டுள்ள கால நிலையையும் மருத்துவன் ஆராய்ந்து பார்த்து முன்னோர் கூறிய முறைப்படி தவறின்றி மருந்தளிப்பது மருத்து வனின் இலக்கணம் என்பதே இவர் கருத்தாகும்.

மருந்தால் நோய் தீரும் என்பது நான்கு அடிப்படைகளைக் கொண்டதென்பர்.

> 'உற்றான் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று
> அப்பால்நாற் கூற்றே மருந்து'[1]

நோயுற்றவன், அதனைத் தீர்க்கும் மருத்துவன், அதற்குரிய மருந்து, அதனைத் தவறாமல் செய்பவன் என்று நான்கு வகை யாகச் சொல்லப்படும்

இவை ஒவ்வொன்றும் நான்கு வகைப்படும் என்று கூறுவர்[2]. அவை,

**உற்றவன் வகை 4**

1) செல்வமுடைமை, 2) மருத்துவன் கூறியபடி நடத்தல்
3) நோயின் நிலையை யெடுத்துக் கூறும் திறமை.
4) மருந்து உண்பதால் வரும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்வது.

**தீர்ப்பான் வகை 4**

1) மருத்துவன் நோயைக் கண்டு அஞ்சாமல் இருத்தல்.
2) குருவினிடமிருந்து கற்றுக்கொண்ட மருத்துவக் கல்வியில் நுண்ணிய அறிவுடையவனாக இருத்தல்.
3) பலமுறை நோய்களைக் குணப்படுத்திய அனுபவம் பெற்றிருத்தல்.
4) மனம், மொழி, மெய் தூய்மையாக இருத்தல்.

**மருந்தின் வகை 4**

1) பல பிணிகளுக்கும் ஏற்கக்கூடிய மருந்து.
2) சுவை, வீரியம், விளைவு ஆற்றல்களால் மேம்பட்ட மருந்து.
3) எளிதில் கிடைக்கும் மருந்து.
4) நோயாளியின் இயல்புக்குப் பொருந்திய மருந்து.

---

1. குறள். 950.
2. டாக்டர் மு. சௌரிராசன் - (பதிப்.) சரபேந்திரர் சித்த மருத்துவச்சுடர் பக். 31-33

**இயற்றுவான் வகை 4**

1) நோயாளிகளிடத்தில் அன்பு.
2) மனம், மொழி, மெய் தூய்மையாக இருத்தல்.
3) சொல்லியபடி செய்யும் திறமை.
4) குறிப்பறிந்து நடக்கும் அறிவு.

மேற்கூறிய நான்கும் ஒன்றுபடும் போதே நோய் தீரும் என்பர்

மருத்துவம் பற்றி வள்ளுவர் கூறும் செய்திகளை நோக்கு மிடத்து அவர் காலத்திற்கும் முன்பே தமிழரின் மருந்தறிவும், மருத்துவக் கல்விப் புலமையும் சிறப்புற்றிருந்தமை நன்கு விளங்கும்.

இவ்வாறே, காலந்தோறும் தோன்றி வளர்ந்த தமிழ் இலக்கி யங்கள் பலவும் தமிழரின் மருத்துவ அறிவைப் பற்றி ஆங்காங்கே விளக்கக் காணலாம்.

## கல்வெட்டுச் செய்திகள்

தமிழர்தம் பழமையும் பெருமையையும் அறிய துணை புரிவன வற்றில் கல்வெட்டுக்கள் சிறப்பிடம் பெறுகின்றன. மருத்துவத் துறையில் தமிழர்கள் சிறப்பிடம் பெற்றிருந்ததையும், தமிழ் நாட்டை ஆண்ட பல மன்னர்களும் இக்கலைக்கு பல்வகையிலும் உதவியதுடன் இதை ஒரு பொதுத் தொண்டாகவே செய்துவந்த தையும் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

## சோழர் கல்வெட்டு

இராசராசனின் தமக்கை குந்தவை தமது பாட்டன் பராந்தகன் நினைவாகக் குடந்தையிலும், தந்தை சுந்தரச் சோழன் நினைவாகத் தஞ்சையிலும் ஆதுலர் சாலை அமைத்தார் என்பர்.

## தென் ஆர்க்காடு திருமுக்கூடல் கல்வெட்டு

வீரராசேந்திரன் (கி.பி. 1063-70) ஆணைக் கேற்பத் திருமால் ஆலயத்தில் மருத்துவக் கல்லூரி நிறுவப் பட்டது. மாணவர் களுக்கு விடுதியும் பதினைந்து படுக்கை அமைந்த மருத்துவ மனையும் உண்டு. மருத்துவம் பயின்ற ஒரு மருத்துவன், அறுவை சிகிச்சைக்கு ஒரு சல்லிய கிரியை, மூலிகைதர இருவர், பணிபுரியும் செவிலியர் இருவர், சித்தாந்த ஆசிரியர், ஏவலாளர் என்போர் பணிபுரிந்த அறிவு நிலையமாக ஆலயம் விளங்கியது என்பர்,

## கோவிந்தபுத்தூர் கல்வெட்டு

இராசேந்திரன் திருவிசய மங்கையில் இலவச மருத்துவத்திற்கு வழிகோலினான் என்று அறிவிக்கும். அரசு மானியங்களும் அவ்வப் போது கொடுக்கப் பட்டன.

இவ்வாறே கருவூரார் போன்ற மருத்துவர்கள் இராசராசனின் நண்பர்களாக இருந்த வரலாற்றுச் செய்திகளும் கவனிக்கத் தக்க தென்பர்.[1]

## மருத்துவத் துறையின் வளர்ச்சி

மனிதன் தோன்றிய நாள் முதல் அவனுக்கு நோய் தோன்றி யதை ஆதி மனிதனுடைய பாசில்களிலிருந்து அறிவோம். அழி யாமற் காக்கப் பெற்ற ஆதி எகிப்திய உடல்களிலும் இக்காலத்தில் தோன்றுகிற பல நோய்களின் குறிகள் இருப்பதைக் காண்கிறோம். விலங்குகளுக்கும் நோய் என்ற உணர்ச்சி உண்டு. நோய்க்குப் பரிகாரம் தேடும் இயற்கை இயக்கமும் உண்டு. நோயுற்ற நாய் பல், பூண்டு கடித்துத் தின்னுவதும், இரணத்தை நக்கிக் கொடுப் புதும் இதற்கு எடுத்துக் காட்டுகள் என்பர்.[2]

இயற்கையோடு இயைந்த வாழ்வின் காரணமாக ஆதி மனிதன், சிறந்த உணவுப் பொருட்களுடன், மருந்தாகப் பயன் படுவன வற்றையும் அறிந்து ஏற்றுக் கொண்டு வாழ முற்பட்டி ருக்கிறான். மனிதனின் இத்தகைய நுண்ணறிவே மருத்துவத் துறையின் அடிப்படை எனலாம்.

கி.மு. 3000 ஆண்டுகளுக்கு முன்னரே இந்தியா, எகிப்து, சீனம் போன்ற நாடுகளில் மருத்துவ அறிவு வளர்ந்திருந்த தென்பர்.

பண்டைக்கால மக்கள் மண்டையோட்டைக் குடைந்து மருத்துவம் செய்தனர் என்பது புதைந்து கிடக்கும் மண்டைகளிலி ருந்து தெரிய வருகிறது. சுமேரியர் செப்புக் கத்திகள் பயன்படுத்தி இரண சிகிச்சை செய்ததாகச் சான்றுகள் கிடைக்கின்றன. சீன மருத்துவமும் ஐயாயிரம் ஆண்டுகளாகச் சீனப் பரம்பரையில் இருந்து வருகிறது என்பர்.[3]

---

1. டாக்டர் தே. ஆண்டியப்பன். இரா. குமாரசாமி. சித்த மருத்துவம் - பக். 10-11.
2. கலைக் களஞ்சியம். தொகுதி - 8 - பக். 135.
3. கலைக் களஞ்சியம். தொகுதி - 8 - பக். 135-143.

## சமயத் தொடர்பு

ஆதி எகிப்திய நாகரிக நாள் முதல் இப்பாக்கிரட்டீஸ் (Hippocrates கி.மு. 460-357) நாள் வரை மாந்திரிகம், சமய வழிபாடு இவைகளோடு மருத்துவம் நெருங்கிய தொடர்புடைய தாக இருந்தது.

யூதர்களுடைய மருத்துவம் பெரும்பாலும் சமய சித்தாந்தங் களோடு தொடர்புடையதே. நோய் தோற்றுவிப்பதும் நோய் தீர்ப்பதும் கடவுளின் செயலே என்று எண்ணினார்கள். சில சுகாதார விதிகள் சமய நெறிகளுடன் சேர்ந்திருந்த போதிலும் தொற்று நோய்கள் போன்றவற்றைத் தடுப்பதற்கான சில வழி முறைகள் இத்தகைய சமயத் தொடர்பினால் ஏற்பட்டன எனலாம்.

இத்தகைய சமயத் தொடர்பு இந்திய மருத்துவத்திலும் உண்டு.

## கிரேக்க மருத்துவநூல்கள்

மருத்துவத்தின் தந்தை என அழைக்கப் படும் இப் பாக்கிரட்டீஸ் என்பார் கிரேக்க நாட்டில் புகழ் பெற்றிருந்த மருத் துவக் குறிப்புக்களை யெல்லாம் தொகுத்துப்பகுத்தறிவு முறையில் வகுத்து நூல்களாக இயற்றினார். இவர்விளக்கிய பல உண்மைகள் பெரும்பாலும் இன்றுவரை நிலைத்து வருகின்றன. மருத்து வர்க்கான நெறிமுறைகள், தொற்று நோய்கள் பரவும் விதம், இரண சிகிச்சையில் ஆயுதத் தூய்மை, நோய்களைப் பற்றிய வர்ணனைகள் போன்றவற்றைக் கூறுவது இவரது சிறப்பு. இவருக்குப் பிறகு, அரிஸ்டாட்டில் (Aristotle - கி.மு. 384-322) என்பாரும் மருத்துவ உலகிற்கு அரிய தொண்டுகளைச் செய் துள்ளார்.

## மறுமலர்ச்சி

கி.பி. 15ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே ஐரோப்பிய நாடு களில் மருத்துவத் துறையில் பல புதிய உண்மைகள் உணரப் பட்டன. இத்தாலிய ஓவியக் கலைஞர் லியனார்டோ - டா - வீன்சி (1452-1519) மருத்துவத் துறையில் பல உண்மைகளை வகுத் தார். உடல் உள்ளுறுப்புகளை ஆராய்ந்து வெளியிட்டார்.

கலிலீயே (Galileo 1564 - 1642) டெலிஸ்கோப்பைக் கண்டு பிடித்த பின்னரே பல மருத்துவ உண்மைகள் வெளிவரத் துவங்கின எனலாம்.

நோயுற்ற உறுப்புகளுக்கும் நோய்க் கூறுகளுக்கும் இருக்கும் தொடர்பை அறியாது மருத்துவம் செய்தல் சிறப்பல்ல என இவர்கள் அறிந்தனர். மோர்கானியீ (Morgagni 1682-1771) என்பார் இறந்த நோயாளிகளின் உடல்களை அறுத்து நோயுற்ற உறுப்புகளின் தோற்றங்களைக் குறித்து முதன் முதல் ஒரு நூலாக்கினார்.

## கண் ஆய்வுக் கருவி

பௌதிக நிபுணர் ஹெல்ம்ஹால்ட்ஸ் (Helmholtz 1821-1894) என்பார் கண்ணுக் குள்ளே அமைப்புக் கேடுகளைக் காண்பதற்கேன்றே ஒரு கருவியை 19ஆம் நூற்றாண்டில் கண்டு பிடித்தார்.

## செயற்கை மருந்துப் பொருள்கள்

இரசாயனப் பொருள்களைச் செயற்கை முறையில் செய்து மருத்துவத்திற்கு முதன் முதல் பயன் படுத்தியவர் ஏர்லிக் (Ehrlich 1854-1915) என்பவராவார். இவரது முயற்சிக்குப் பின்பே இத்தகைய செயற்கை மருந்துப் பொருள்கள் அதிகமாக பயன் படுத்தப் படுகின்றன எனலாம்.

பொதுவாக விஞ்ஞான அறிவு வளர வளர மருத்துவ அறிவும் தெளிவுபடும். அவ்வப்போது நிகழும் விஞ்ஞான ஆராய்ச்சி உண்மைகள் நோயறியப் பயன்படுகின்றன. நோயறியப் புதிய கருவிகளை வகுக்கவும் பயன்படுகின்றன என்பர்.[1]

இத்தகைய விஞ்ஞான அறிவும் மருத்துவ நூலறிவும் அண்மைக் காலமாகவே அதாவது ஒரு சில நூற்றாண்டுகளாகவே மேலை நாடுகளில் வளர்ந்து வந்துள்ளமையை நன்கு அறியலாம். அடிப்படை மருத்துவ அறிவுடன் பல்தொழில் நுட்ப அறிவும் ஒருங்கே கலந்த நிலையிலேயே இன்றைய மருத்துவத் துறை வளர்ந்து வரும் நிலையையும் நாம் உணரலாம்.

---

1. கலைக் களஞ்சியம். தொகுதி 8. பக். 135-143.

## இந்திய மருத்துவம்

இந்தியாவின் நில அமைப்பு உலகில் மிகவும் பழமையுடைய தாகும். இந்திய நாட்டில் மிகப் பழங்காலத்திலேயே உயிரினங்கள் வளர்ச்சியடைந்து பெருகின என்றும் மனிதனும் இங்குதான் தோன்றியிருத்தல் கூடும் என்றும், நிலநூல் அறிஞர்கள் கூறு கின்றனர். மேலும், ஆசிய கண்டத்தின் வேறு பகுதிகளில் வாழ்ந் திருந்த ஆரியர்கள் இந்திய நாட்டில் குடியேறுவதற்குமுன் திராவிடர்களே இந்நாட்டின் பழம்பெரும் ஆதிகுடிகளாக வாழ்ந் திருந்தனர் என்றும், அவர்கள் பல கலைகளில் உயர்ந்திருந்ததோடு விஞ்ஞானத்திலும் வல்லுனர்களாக இருந்தனர் என்றும் அறிய முடிகிறது என்பர்.[1] இத்தகைய அறிவியற் கலைகளில் மருத்துவக் கலையும் ஒன்றாக வளர்ந்த நிலையை நாம் காணலாம்.

பொதுவாக, இந்திய மருத்துவம் எனில் ஆயுர் வேதம் மற்றும் தமிழ் மருத்துவமாகிய சித்த மருத்தும் இரண்டும் கொள்ளப்படும். பின்னால் அராபியரின் வருகையின் காரணமாக அறியப்பட்டதே யுனானி மருத்துவமாகும்.

இம்மூவகை மருத்துவ முறைகளிலும் வேற்றுமையைக் காட்டி லும் ஒற்றுமைக் கூறுகளே அதிகமாக இருப்பதாலும், இயற்கை யாகக் கிடைக்கக் கூடிய மருந்துப் பொருட்களைக் கொண்டே இவை ஆக்கப்பெறுவதாலும் இந்திய மருத்துவத்தில் இவை இணைந்து செயல் படுகின்றன எனலாம்.

## ஆயுர்வேதம்

வேதவுணர்வு இந்தியாவிற்குப் பொதுவானதாகும். ஆயுள் பேணுதல் என்பது எல்லா மருத்துவமுறைக்கும் உரிய நோக்க மாகும். இக்கருத்தின் அடிப்படையிலேயே பிரமன் படைத்த வேதத்திற்கு நிகராக வடமாநிலத்தாரும் தமது மருத்துவத்தை ஆயுள் வேதம் என்றனர்.[2]

இந்தியாவில் ஆயுர்வேதம் உருவானது சுமார் கி. பி. 700-இல் என்று தெரிய வருகிறது. இக் கால கட்டத்தில் எகிப்திய நூல்களி லிருந்து உறுப்புக்களுடைய அமைப்பை அறிந்திருந்ததாயும், கண்.

---

1. வி. பலராமய்யா. சித்தர் மெய்ப்பொருள். பக். 1—3.
2. டாக்டர் தே. ஆண்டியப்பன். இரா. குமாரசாமி. சித்த மருத்துவம். பக். 35

தலை, பல் முதலிய பகுதிகளுக்கு மருத்துவம் தனியாக வகுக்கப் பட்டதாயும், பொதுவில் மருத்துவம் ஓங்கி விளங்கியதாயும் தெரிய வருகிறது.[1]

## தமிழ் மருத்துவம்-சித்த மருத்துவம்

பண்டைக் காலத்தில் இந்தியா முழுவதிலும் பல சித்தர்கள் வாழ்ந்திருந்தன ரெனத் தெரிகிறது. அவர்களில் சிலர் வகுத்ததே சித்த மருத்துவம் என்பது. அவ்வாறு வகுத்தவர்கள் தமிழ் நாட்டிலிருந்தவர்களாதலாலும், சித்த மருத்துவ நூல்கள் தமிழில் மட்டுமே அதிகமாகக் காணக் கிடைப்பதாலும், சித்த மருத்துவ முறை பண்டை நாள் முதல் இன்றுவரை தமிழ் நாட்டிலேயே பயிலப்பட்டு வருவதாலும் சித்த மருத்துவத்தைத் தமிழ் மருத்துவம் என்பர்.[2]

**தொன்மை**

சித்த மருத்துவக் கலை மேனாட்டு நாகரிகம் தோன்றுவ தற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்பே தோன்றியதாகக் கூறப் படுகிறது.

**உலக மருத்துவ நெறிகள்:-**

1. ரோமர் மருத்துவம் கி.பி. 300லும்
2. யுனானி மருத்துவம் கி.பி. 600லும்
3. கிரேக்க மருத்துவம் கி பி.9)0லும்
4. அஷ்டாங்க ஹிருதயம் கி. பி. 900லும்
5. சாரங்க தாரஸம்ஹிதை கி. பி. 1300லும்
6. பரப்பிரகாசம் கி.பி. 600லும்
7. அலோபதி என்னும் ஆங்கில மருத்துவம் கி.பி. 1775லும்

தோன்றியதாக அறிஞர்கள் முடிவெடுத்துள்ளனர். இவற்றை நோக்குமிடத்து, சித்த மருத்துவம் மேற்கூறப் பெற்ற வைகளி லிருந்து மிகத் தொன்மையான தென்றே கூறுகின்றனர்[3]

மேலும், நாகரிக வளர்ச்சியில் முதலிடம் பெறும் தமிழர்களி டையே சிறந்த மருத்துவக் கலையும் வளர்ந்திருத்தல் வேண்டும்

1. கலைக் களஞ்சியம் தொகுதி-8. பக். 135-143
2. ,, ,, ,,-4, பக் 642-643
3. டாக்டர் மு. சௌரிராசன். சித்த மருத்துவச் சுடர் பக்.2

என்பர். ஆரியர்களின் வருகைக்கு முன்பாகவே நாகரிக வளர்ச்சி பெற்று விளங்கிய தமிழர்களின் சித்த மருத்துவம் தனித்தன்மை யுடன் சிறப்பிடம் பெறுவதை அறிஞர் சுட்டுவர்.[1]

**சித்தர்கள்:-** சித்-அறிவு. சித்தை உடையவர்கள் சித்தர்கள். அறிஞர்கள், மேதைகள், நுண்ணறிவினர், விஞ்ஞானிகள் எனலாம்.[2]

சித்தர்கள் செய்ததால் இம் மருத்துவ முறைக்குச் சித்த மருத்துவம் எனப் பெயர் வந்தது என்றும், உடலையும் உயிரையும் அழியாமல்காத்து சித்தி பெறச் செய்யும் மருந்து என்பதால் சித்த மருத்துவம் ஆயிற்று என்றும் கூறுவர்.[3]

சங்க காலத்திற்கு முன்பிருந்தே சித்தர்கள் பலர் தோன்றி மருத்துவ நூல்களைச் செய்துள்ளனர் என்றும், தொல் காப்பியர், திருவள்ளுவர், ஔவையார் போன்றோரையும் சித்தர் என்றே கூறலாம் என்றும் கூறுவர்.[4]

## சித்த மருத்துவத்தின் சிறப்பு

தமிழ் மருத்துவமாகிய சித்த மருத்துவத்தின் சிறப்பை அதில் காணும் நூல்களும் அவற்றின் வரலாறுகளும் நமக்கு அறிவிக் கின்றன. ஆயின், சித்த மருத்துவத்தின் தனித்தன்மையை விளக்க அதன் அடிப்படை அமைப்பும், மருந்து அளிக்கும் சிறப்பும் மிகவும் குறிப்பிடத் தக்கனவாகும்.

---

1. A civilized society must naturally have had a system of medicine which catered to the health needs of its people. This was the Siddha system.
   It is well established that before the Aryans occupied the Sind region and the Gangetic plain, there existed in the south, on the banks of the rivers cauvery, Vaigai and Tamiraparani, a civilized which was highy organised. This civilization had a system of medicine to deal with thc problems of Sanitation and treatment of diseases. This is the Siddha system... From the beginning the Siddha system has maintained its identity
   —Dr. V. Narayana swami
   Introduction to the Siddha system of Madicine. P.2-3
2. திரு. சாமி. சிதம்பரனார். சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் தத்துவம். பக்.21
3. டாக்டர் தே ஆண்டியப்பன், இரா. குமாரசாமி சித்த மருத்துவம் பக். 35
4. திரு வி. பலராமய்யா. சித்தர் மெய்ப் பொருள். பக். 8

**அடிப்படை அமைப்பு :** சித்த மருத்துவத்தின் அடிப்படை மிகவும் அறிவியல் அமைப்பிலான ஒன்று. ஆழ்ந்து நோக்கும் போது நவீன விஞ்ஞானத்தின் அளவை இயலில் (Logic) நின்று எவ்விதத்திலும் வேறுபடாதது. காண்டல் (Observation), கருதல் (Inference), உரை (Hypothesis) என்ற மூன்று பிரமாணங்களை (Factors) அடிப்படையாகக் கொண்டதே சித்த மருத்துவம், மேலும், அனுமானங்களை அடிப்படையாகக் கொண்டு ஒப்புறை, எதிருறை, கலப்புறை என்ற மூன்று நிலைகளிலும் சிகிச்சை அளிக்க வல்லது என்பர்.[1] இதனை ஓர் எடுத்துக்காட்டால் விளக்கலாம்.

சித்த மருந்தியல் தத்துவப்படி உடலானது ஐம்பூதங்களாலும் (மண்,விண்,வெளி,நீர்,தீ) அப்பூதங்களின் தொகுதியான மூன்று உயிர்த் தாதுக்களாலும் (வாத,பித்த,கபம்) ஆனது. இந்த மூன்று தாதுக்களும் இயற்கைப் பிறழ்ச்சியாலும், உணவாதிக் குறைகளாலும், கிரக பேதங்களாலும் தம்நிலை பிறழும் போது முக்குற்ற நிலை அடையும். வளி (வாதம்), தீ (பித்தம்), நீர் (கபம்) எனும் மூன்றின் நிலை பிறழ்ச்சியால் நோய்கள் வரும். வளி இயக்கும் (Starter), தீ இயங்கும் (accelarator), கபம் நிறுத்தும் (break) மூன்றில் எது பழுதடைந்தாலும் வாழ்வின் பயணம் தடைபடும். இந்நிலை பிறழ்ச்சியால் உடலில் ஏற்படும் மாறுதல்களை அனுமானமாகக் கொண்டு நோயின் நிலை கணிக்கப்படும், இந்த அனுமானங்களே இன்ன நோய் என்று தீர்மானிக்க உதவும். மருந்தைத் தீர்மானிக்கும்போதும் இத்தகைய அளவையியல் தத்துவமே பயன்படுத்தப்படுகிறது. மருந்துகளிலும் வாத மருந்து, பித்த மருந்து, கப மருந்து என்ற பிரிவுகள் உள்ளன. இக்கருத்து இன்றைய அறிவியலோடு ஒத்ததே. எனவே, சித்த மருத்துவமும் சிறந்த தருக்க நெறியில் அமைந்த அறிவியல் என்பதை இக்கால அறிவியலாரும் ஒப்புக்கொள்வர்.

**நோய்களின் வகைப்பாடு :** மேற்கூறப்பட்ட முக்குற்ற அடிப்படையிலேயே நோய்கள் வகைபடுத்தப்படுகின்றன. ஆயினும் உடல் நோய், உளநோய், உயிர்நோய் என மூன்று வகையாகவும் நோய்களை வகைப்படுத்துவர். இவற்றுள்,

---

1. டாக்டர் தே. ஆண்டியப்பன். இரா. குமாரசாமி, சித்த மருத்துவம் பக்.3.

உயிர்நோய் என்பது பிறப்பும் இறப்பு மாகும்
உளநோய் என்பது நொடிக்கு 100 என்ற கணக்கில்
தோன்றும் என்பர்.

உடல் நோய் என்பது 4448 என்று வகைப்படுத்தியுள்ளனர். இவற்றுள், உடலின் அக,புற உறுப்புக்களின் நோய்கள் பலவும் அடங்கும்,

மருந்து: இம்மூவகை நோய்களைத் தீர்க்கவுமே தமிழ் மருத்து வத்தில் மருந்து என்பது பயன்படுவதாகக் கூறுவர்.

''மறப்பதுடல் நோய் மருந்தென லாகும்
மறப்ப துளநோய் மருந்தெனற் சாலும்
மறப்ப தினிநோய் வாரா திருக்க
மறுப்பது சாவை மருந்தென லாமே.

என்பர் திருமூலர்,

உடல் பெறும் நோய்களைத் தவிர்ப்பதும், தீர்ப்பதும்; உளம் பெறும் நோய்களைத் தோற்றா திருக்கத் துணிவதும், துணிப்ப தும்; உயிர்நோய் வாராதிருக்க வகுப்பதும் வழியிடுவதும் மருந்து என்பது இதன் பொருள். எனவே, மருந்தியல் அடிப்படையிலும் சித்த மருத்துவத்தின் சிறப்பு நன்கு விளங்கும்.

## மூன்று பிரிவுகள்

சித்த மருத்துவம் முப்பெரும் பிரிவுகளை உடையது என்பர்.[1]

1. தேவ மருத்துவம்: இரசம், கந்தம், பாடாணம், உப்பு, உலோகங்களால் சித்த மருத்துவ முறைப்படி தயாரித்து கட்டு, மாத்திரை, களங்கு, செந்தூரம், பற்பம், சுண்ணம், மெழுகு முதலிய உயர்ந்த பொருளால் செய்யப்படுவது.

2. மனித மருத்துவம்: முன்கூறிய முறைப்படியே தாவரங் களைக் கொண்டே செய்யப்பட்ட குடிநீர், சூரணம், இரசம், பிட்டு வடகம், இளகம், மனப்பாகு, மாத்திரைகளைக் கொண்டு செய்யப் படுவது

---

1. டாக்டர் எம். பி. தங்கவேல். சித்த மருத்துவ கருந்தரங்கு சிறப்பு மலர் பக். 23

3. இரசச மருத்துவம்: மேற்கூறிய மருந்துகளால் தீராத நோய்களை அறுவை, கீறல், அட்டைவிடல், சூடுபோடுதல், இரத்தம் வாங்குதல், சலாகை போடுதல், கொம்பு கட்டுதல் முதலியவைகளால் குணப்படுத்துவது.

ஐந்து முறைகள்: சித்த மருத்துவத்தில் நோய்களைத் தீர்க்க ஐந்து முறைகளும் பின்பற்றப்படுகின்றன. அவை, 1. மூலிகை முறை, 2. உலோக வர்க்க முறை, 3. பாடாணமுறை, 4. உயிர்ச் சத்து முறை, 5. அறுவை முறை

இத்தகைய சிறப்பான தத்துவ அடிப்படையும் பிரிவுகளும் முறைகளுமே சித்த மருத்துவத்தின் மேன்மைக்குக் காரணங்கள் எனலாம். இவற்றை மற்ற மருத்துவ முறைகளோடு ஒப்பிட்டும் அறியலாம்.

ஆயுர்வேதமும் சித்த மருத்துவமும்: மூலிகை முறை, இரச வர்க; உலோகவர்க்க முறை என்னும் இரண்டு வகைகளும் இரு மருத்துவத்திலும் உண்டு. ஆயினும், சித்த மருத்துவத்தில் உலோக வகைகள் இரச வகைகளைப் பயன்படுத்தும் தாந்திரிக முறையானது வடமொழியிலுள்ள ஆயுர்வேதம் காணும் தாந்திரிக முறைகளுக்கு வேறுபட்டதாகவே காணப்படுகிறது என ஆயுர்வேத மருத்துவ வல்லுநர் பண்டித டி. கோபாலாச் சாரியார் போன்றோர் கூறுகின்றனர்.[1]

இத்தகைய உலோக வர்க்கங்களை மருந்தாகப் பயன்படுத்தும் முறை ஆயுர்வேத முறைக்கும் முற்பட்டது என்றும், சித்த மருத்து வத்திற்கே உரியது என்றும் கூறுகின்றனர்[2]

---

1. கலைக் களஞ்சியம் தொகுதி 4. பக் 645-643
2. The thearapeutics of Siddha Medicine consists mainly of the use of metals and minerals, where as in the earlier Ayurvedic texts there is no mention of metals and minerals. In the Siddha texts from the earlier times, mercury, sulphur, copper, arsenic and a variety of other metals and minerals figure prominently as therapeutic agents.

—Dr. V. Narayana swami. Introduction to the Siddha System of Medicine. p. 4

உலோகங்களையும் இரச வர்க்கங்களையும் தமிழ்முறைப்படி நீற்றி பஸ்மங்களாகவும் செந்தூரங்களாகவும் செய்வதும் மிக எளிதாகும்.

அப்பிரக பஸ்மம் செய்ய ஆயுர்வேத முறையைக் கையாள்வதினால் அப்பிரகத்தை நூற்றுக் கணக்கான புடங்கள் எரிக்க வேண்டும். அப்போதும் அதிலுள்ள சந்திரிகை என்னும் மினுமினுப்புப் போவதில்லை. ஆனால், தமிழ் மருத்துவர் அப்பிரகத்தை நாய்ப்பாகையிலையின் சாற்றினால் 10முறை அரைத்துப் புடமிட்டு மினுமினுப்பில்லாத அப்பிரக பஸ்மமாகச் செய்வர். இது மிகவும் வீரியம் உடையதாகவும் இருக்கிறது.

இது போலவே சித்த மருத்துவர்கள் மயில் துத்தம் என்னும் துருசைப் பல மூலிகைகளைக் கொண்டு செய்யும் வெண்மையான பஸ்மமும் மிகுந்த ஆற்றலை உடையது; மிகக் கடுமையான நோய்களுக்கு மிகவும் சிறிய அளவில் 2 வேளை மட்டும் கொடுத்தால் போதும். இதை குருபஸ்மம் என்றும் கட்டுமருந்து என்றும் கூறுவர்.

சித்த மருத்துவர் சாரங்கள், உப்பு வகைகள் ஆகியவற்றைப் பூமிக்குள் சில காலம் அடக்கம் செய்து வைத்து ஒருவகைத் திராவகம் செய்வர். அதற்குச் செயநீர் என்று பெயர். இந்த நீரால் பாடாணம் முதலிய நெருப்பில் எரிந்து போகும் சரக்குகளுக்கு ஒரு வகை சுருக்குக் கொடுப்பர். செயநீரால் சுருக்குக் கொடுத்த இரச வகை மருந்துகள் நெருப்புக்குப் புகைந்து போகாமல் கட்டும். இத்தகைய மருந்துகளைத் தேன் முதலிய அனுபானங்களுடன் கலந்து வாதம், சன்னி வாதம் போன்ற மிகக் கடுமையான நோய்களுக்குக் கொடுக்கக் குணம் பெறுவர். இத்தகைய சிறந்த முறைகள் சித்த மருத்துவத்தில் பல உள்ளன.

பௌத்த சமயத்தவர் தமிழ் நாட்டில் அரசாண்ட காலத்தில் சித்த மருத்துவ முறை மலேயா, பர்மா முதலிய நாடுகளுக்கும் பரவியதாகத் தெரிகிறது. பௌத்த முனிவர்கள் தேரர் என்று பண்டைக் காலத்தில் அழைக்கப் பட்டனர். அகத்திய மருத்துவ முறைகளைக் கூறும் நூல்களுள் சிறந்தவை தேரையர் என்பவர் இயற்றிய நூல்கள் என்பர். ஆயுர் வேத மருத்துவர்கள் இரச

மருந்துகளின் பெருமைகளை அறிந்து கொண்டது தென்னாட்டுச் சித்தர்களில் ஒருவராகிய சித்த நாகார்ச்சுனர் என்னும் தெலுங்கரால் என்றும் தெரிகிறது[1]

## ஆங்கில மருத்துவமும் சித்த மருத்துவமும்

இவ்விரு வகை மருத்துவமும் அறிவியல் அடிப்படையிலானவை. சித்த மருத்துவம் பழமையும் அனுபவச் சிறப்பும் மிக்கது. இயற்கையானது. ஆங்கில மருத்துவம் பல மருத்துவக் கூறுகளை உள்ளடக்கியது, நவீனபல்தொழில்நுட்பக் கருவிகளின் துணையுடன் இயங்குவது ஆயினும், நூல்வகை, மருந்து செய்முறை, நோய் கணிப்பு போன்ற சில மருத்துவக் கோட்பாடுகள் இரு மருத்துவ நெறியாளர்க்கும் ஏற்றவையே எனலாம்.

நோய் கணிப்பு முறையில் நாடித் துடிப்பு, கண், நாக்கு, உடம்பு, ஒலி முதலியவற்றை ஆராய்ந்து கணித்தல் (Physical findings) என்பதும் சிறுநீர், மலம் முதலியவற்றை ஆராய்ந்து கணித்தல் (Laboratory findings) என்பதும் இரு மருத்துவ முறைகளுக்கு ஏற்றவையே எனலாம்.

மேலும் நோய் அணுகா முறை (Preventive Hygiene) என்பது இரண்டிலுமே உண்டு.

## அறுவை மருத்துவம் (Surgery)

இன்றைய ஆங்கில மருத்துவ முறையின் சிறப்பிற்கு எடுத்துக்காட்டாக விளங்குவனவற்றுள் அறுவை மருத்துவமும் ஒன்று.

அகத்தியர் சத்திராயுத விதி, அகத்தியர் கிரியை நூல், குடோரி வைத்தியம் என்பவை சித்த மருத்துவத்தின் அறுவை (Surgery) முறையின் சிறப்பை விளக்குவன. அகத்தியர் சத்திராயுதவிதி என்னும் நூலில் தலை உரோமத்தையும் இரண்டாய் வகுக்கும் கத்தி இருந்ததாகக் கூறப்படுகிறது. மேலும், கத்தி, முள் வாங்கி, பிறைக்கோல், கத்தரிக் கோல், ஒட்டுக் கோல், ஊசி, அட்டக்கோல், வட்டகை போன்ற அறுவைக் கருவிகளின் விளக்கமும் சித்த மருத்துவத்தின் அறுவைப் பகுதியின் பெருமையைப் புலப்படுத்தும்.

---

1. கலைக் களஞ்சியம் தொகுதி 4. பக். 643.

கீறல் (Incession), குருதி வாங்கல் (Blood letting), ஒற்றடம் (Fomentation), பஞ்சு வைத்து கட்டும் முறை (Bandaging), தொக்கணம் (Physio theraphy), பற்று (poultice) போல்வன ஆங்கில மரபிலும் சித்த மரபிலும் உண்டு.

மருந்து: ஆங்கில மருத்துவத்தில் செயற்கை முறையிலான சில இரசாயனப் பொருள்கள் மருந்தாகப் பயன்படுத்தப் படினும் ஆங்கில மருத்துவம் பயன்படுத்தும் மருந்துகளின் 60 விழுக்காடு மூலிகை தந்த மூவா மருந்துகளே என்பர்.[1]

ஆயினும், ஆங்கில மருந்துகளில் பலவும் குறிப்பிட்ட நாள் (Date of expiry) தவறிடின் பயன்படாது. அவை நஞ்சாகத் தள்ளப்படும். ஆனால், சித்த மருத்துவ முறையில் புடமிடும் வகையில் உப்பு, சுண்ணம், செந்தூரம், பஸ்மம் முதலியவற்றை சில தலைமுறை வரையிலும் மருந்து ஆற்றல் குறையாமல் பயன்படுத்தலாம். சில மருந்துகளை வெவ்வேறு பொருத்தமான துணை மருந்துகளில் கூட்டிக் கொடுக்க வெவ்வேறு நோய்கள் தீர்ப்பதும் சித்த மருத்துவத்தில் சிறப்பான தாகும்.

இத்தகைய சித்த மருத்துவத்தின் செய்முறைகள் இன்றைய அறிவியலாரையும் வியப்பில் ஆழ்த்துவன வாகும்,

## சில உண்மைகள்

1. சித்த மருத்துவம் வரலாற்று முறையிலும் பிறமுறையிலும் சிறப்பிடம் பெறுவது

2. லெமூரியா மருத்து முறையோடு தொடர்புடையது.

3. நாகர், கோண்டு மருத்துவர், சித்தர் எனும் சிறந்த மூவரில் அறிவால் மிக உயர் நிலையை எய்தியவர்கள் சித்தர்களே. எனவே அவர்கள் மருத்துவமும் அறிவிலோங்கியதே.

4. மருந்து என்னும் ஒன்றோடு நிற்காமல் வாதம், யோகம், ஞானம் எனும் பிற துறைகளையும் இணைத்து வளர்ந்தது சித்த மருத்துவம்.

5. உடலுக்கும் உள்ளத்திற்கும் உயிருக்கும் மருந்தளிக்கும் சித்தர் நெறி சிறந்த அறிவியல் அடிப்படையிலானது.

---

1. டாக்டர் தே. ஆண்டியப்பன், இரா. குமாரசாமி சித்த மருத்துவம் பக். 44

6. காலப்போக்கில் இத்தகைய சிறந்த அறிவியல் மருத்துவ நெறிகளுடன் வேதகால சடங்குகளையும் தத்துவங்களையும் இணைத்ததால் வலிமை குன்றியது எனலாம்,

7. வேத அடிப்படையில் பிறந்த ஆயுள் வேதம் குரு சீடர் உரையாடல் வழியாகப் புலப்படும், கற்பிக்கப்படும். சித்த மருத்துவம் சிவ - உமை உரையாடல் முறையில் அமைவது இதன் தனிச் சிறப்பிற்கு ஓர் அடையாளமாகும்.

8 சித்தமருத்துவ நூல்கள் முதன்முதலாக அம்மையாருக்கு அரனும், பின்னர் அவர் வழி முருகன், நந்திதேவர், அகத்தியர், ஏனைய சித்தர்கட்கும் போதிக்கப் பெற்று வழிவழி வரலாயின. இவர்கள் அனைவரும் தொன்மைத் தமிழ் மரபினரே யாவர்.

9. சித்த மருத்துவ நூல்கள் பெரும்பாலும் எளிய பாடல் உருவிலேயே இயற்றப்பட்டுள்ளன. சில பரிபாஷைகள் கலந்திருப்பினும் நூல் முழுமையும் இவை அருகியே காணப்படுகின்றன. பொதுவாக, அக்கால மக்கள் நன்கு அறிந்த சொற்களிலேயே நூல்கள் அமைந்துள்ளன. இந்நூல்களின் பெருக்கமும், மரபும், எளிமையுடன் கூடிய சிறப்பும் சித்த மருத்துவத்தின் பொதுவுடைமைப் போக்கை எடுத்துக்காட்டும் எனலாம்.

## பதினெண்மர்

சித்த மருத்துவ நூல்களை ஆராய்தவர்கள் சித்தர்கள் பதினெண்மர் என்றே கூறுகின்றனர். ஆயினும் அவர்கள் குறிப்பிடும் பெயர் வரிசை வேறுபட உள்ளதைக் காணலாம்.[1] இந்நூல்களைப் பற்றிய முறையான வரலாற்றுக் குறிப்புகள் இன்மையாலேயே இவ்வாறு கூறப்படுகின்றன எனலாம்.

தமிழ் மருத்துவ முறையை வகுத்த பதினெண்மர்களுள் தலையாயவர் அகத்தியர் என்பர். எனவே, சித்த மருத்துவ முறையை அகத்திய மருத்துவ முறை என்றும் கூறுவதுண்டு. அகத்தியர் ஆயுர் வேத சூத்திரங்களுக்கும் விரிவுரை எழுதியிருப்பதாகத் தெரிகிறது.

---

1. சாமி. சிதம்பரனார். சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம் பக்.23.24

ஆயுர்வேத சூத்திரங்களுக்கு விரிவுரை எழுதியுள்ள யோகானந்தர், சித்தமருத்துவ நூல்கள் இயற்றிய சித்தர்களில் ஒருவர் என்பதும் தெரிகின்றது.[1]

எனவே, இச்சித்தர்கள் மொழி இனவேறுபாடுகளைக் களைந் தவர்கள் என்பதும், அருள் உணர்வும், யோக நெறியும் கலந்த நிலையில் மருத்துவக்கலையை வெளியிட்டவர்கள் என்பதும் பெறப்படுகின்றன.

இச்சித்தர்களின் சிறப்பாலேயே சித்த மருத்துவம் இன்றும் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வதும் குறிப்பிடத் தக்க தாகும்.

## சித்த மருத்துவ நூல்கள்

அகத்தியர், தேரையர், போகர், புலிப்பாணி, திருமூலர், புலத்தியர் போன்ற சித்தர்களின் பெயரிலேயே சித்தமருத்துவ நூல்கள் வழங்கப்படுகின்றன. பதினெண் சித்தர் நூல்கள் எனவும் சில நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம் மற்றும் தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்திலும் நூற்றுக்கணக்கான சித்த மருத்துவ நூல்கள் சுவடி வடிவிலேயே கிடைக்கக்காணலாம். இவை தவிர, தனி நிறுவனங்களிடமும் சில சித்த மருத்துவர்களிடமும் இத்தகைய நூல்கள் பாதுகாப்பாக இருந்து வருகின்றன.

## சித்த மருத்துவ நூல்களின் காலம்

இந்நூல்களின் கருத்து அடிப்படையையும் வடிவ அமைப்பை யும் கொண்டே இவற்றின் காலத்தை ஒருவாறு அறிய முடியும். நமக்குக் கிடைக்கும் சித்த மருத்துவ நூல்களின் பாடல்கள் இன்றைய மக்கள் பேசும் தமிழ் மொழியிலேயே காணப்படு கின்றன. அவற்றை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் வழங்கிய தமிழ் நடையென்று கூற முடியாது.

ஆயினும், அகத்தியர் போன்றோரால் இயற்றியதாக வழங் கப்படும் நூல்கள் அவர்கள் வாயாலேயே பாடப்பட்டவை அல்ல என்பதே உண்மை இவை, அச் சித்தர்களின் மருத்துவ முறைகளை கொள்கைகளைப் பரம்பரையாக அறிந்தவர்கள் பாடி வைத்தவை; அல்லது அவர்கள் பரம்பரையைச் சேர்ந்தவர்கள்

1. கலைக்களஞ்சியம். தொகுதி 4. பக்.642-43.

பாடி வைத்தவை. சுமார் நானூறு அல்லது ஐந்நூறு ஆண்டு களுக்கு முன்பு தான் அவை பாடப்பட்டிருக்க வேண்டும். ஆனால் சித்த மருத்துவ முறைகள் ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்டவை; காலங் கணக்கிட முடியாத சித்தர்கள் கண்டறிந்த உண்மைகள் என்றே கூறுகின்றனர்.[1]

மேலும் பண்டைக்கால மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர்கள் சித்த மருத்துவத்திற்குப் பேராதரவு தந்து பேணி வந்தனர் என்பதைப் பல இலக்கியங்களாலும் கல்வெட்டுகளாலும் அறிகிறோம். அத்துடன், சித்தமருத்துவம் தமிழ் நாட்டில் மட்டும் பரவி இருப்பதல்லாது, பர்மா, இலங்கை, பினாங்கு, சிங்கப்பூர், தென்னாப்பிரிக்க நாடுகள், கீழைத்தீவுகள், மடகாஸ்கர், பிலிப் பைன்ஸ் முதலிய பல அயல்நாடுகளிலும் பரப்பப்பட்டுள்ளதை அறி கிறோம்.[2] எனவே, சித்த மருத்துவம் பல ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே உலகெங்கும் பரவி இருந்தது என்றும், இதற்கான சித்த மருத்துவ நூல்களும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வழிவழியே தமிழில் வழங்கி வந்துள்ளனஎனவும் அறிய முடிகிறது.

## நூல்களின் பெருக்கமும் மறைவும்

பல்வேறு சித்தர்களையும் அவர்தம் நூல்களையும் பார்க்கும் போது சித்த மருத்துவக் கலை கடல்போல் விரிந்து கவிதைவடிவில் கட்டுண்டு கிடப்பதைக் காண்கிறோம். ஆயிரக்கணக்கிலும் நூற்றுக் கணக்கிலுமாக சித்தர்கள் தம் நூல்களைத் தமிழில் வழங்கியுள்ளனர். ஆயினும், இவற்றுள் பலரும் அறிந்தவை ஒரு சில. மற்றவை மறைந்தன. இயற்கை அழிவும், அன்னியர் படையெடுப்பும் ஒரு புறம் இருக்க, தாமறிந்த இரகசியத்தைப் பிறர் அறிந்து விடலாகாது என்ற சுயநல உணர்ச்சி கொண்ட சில ராலும் இந்நூல்களுள் பல மறைந்தன எனலாம்.

சித்த மருத்துவர்களுள் பெரும்பாலோர் பரம்பரை மருத் துவர்கள். இவர்கள் அனுபவம் வரயிலாகவே மருத்துவம் செய்து வந்தனர். இவர்களுக்குச் சித்தர்கள் எழுதி வைத்துள்ள மருத்துவ நூல்களைப் படித்தறியும் பழக்கமும் கிடையாது.

---

1. திரு.சாமி சிதம்பரனார். சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம் பக்.11
2. டாக்டர் மு. சௌரி ராசன், சித்த மருத்துவச் சுடர் பக் 4-5

இது போலவே தமிழ்நாட்டுப் புலவர்களிலே பலருக்குச் சித்த மருத்துவ நூல்களைப் பற்றித் தெரியாது. இதற்கான ஒரே காரணம், சித்த மருத்துவ நூல்களிலே மிகுதியான வழக்குச் சொற்கள் காணப்படுவதும், உவமை, உருவகம் போன்ற இலக்கிய நயங்கள் அருகிக் காணப்படுவதுமாகும். எனவே, புலவர்களிலே பலர் மருத்துவ நூல்களைப் புறக்கணித்து வந்துள்ளனர் எனலாம்.

சித்த மருத்துவக் கலையில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களும் தாம் கண்ட உண்மைகளை வெளிக் காட்டாமல் மறைவாகவே வைத்துள்ளனர். சில மருத்துவர்கள் தம் மக்கட்குக்கூட இவற்றை வெளியிடாமல் இறந்தொழிந்தார்கள்.

மேலும், போதிய தெளிவோடு சித்த மருத்துவ நூல்கள் அச் சேறி எல்லோர்க்கும் கிடைத்தற்கு வாய்ப்பில்லாமையாலும், புதிய மேல்நாட்டு மருத்துவம் கற்றவர்கள் சித்த மருத்துவம் முறையற்றது பயனற்றது என்ற ஒரு கொள்கையை உருவாக்கிய தாலும், மக்களிடையே ஆங்கில மருத்துவத்தில் மோகம் அதிகரித்ததாலும் இடைக் காலத்தில் இக்கலை குன்றியது. சித்த மருத்துவ நூல்களைப் பற்றியும் பலரும் ஆராயப் முற்படவில்லை எனலாம்.

## பகுப்பும் தொகுப்பும்

மருத்துவத் துறையில் தனிப்பட்ட பகுதிகள் வெகு கால மாகவே ஏற்படத் தொடங்கிவிட்டன எனலாம். மருத்துவ முறைகள் புதிது புதிதாய் அறிவுக்கு எட்டும்போது மருத்துவர்கள் எல்லாவற்றையும் ஒருங்கே தெரிந்து கொள்ள இயலாது. சாதாரண மருத்துவம், இரண மருத்துவம், பிள்ளைப் பேறு, செவி, கண், மூக்கு, மூளை, நரம்பு, ஊட்டம் என்று தனிப் பகுதிகள் பிரிந்து ஒவ்வொன்றிலும் நூல்கள் தோன்றுவது தேவை யாயிற்று.

மேலை நாடுகளில் இப்பாக்கிரட்டீஸ், லியனார்டோ-டா-வீன்சி, மோர்கானியீ போன்றோர் இத்தகைய நூல்களைப் பகுத்தும் தொகுத்தும் அளித்துள்ளதை மருத்துவ உலகம் நன் கறியும். டாலமி என்ற கிரேக்க மன்னன் அந்நாட்டு மருத்துவ நூல்களைத் தொகுத்துப் பேணியதாக அறிகிறோம் சுசுருதர், சரகர் பெயரில் மருத்துவத் தொகை நூல்கள் வடநாட்டில் தொகுக்கப் பெற்றுள்ளன.

## தமிழில்

தமிழ் மருத்துவ நூல்கள் பலவும் தனித்த தலைப்புகளிலும் தொகுப்பு நூல்களாகவும் வழங்கப்பட்டு வந்துள்ளன. பின்னால் வந்தவர் பலரும் தம் பயனிற்கேற்ப அவற்றைக் குறித்து வைத்த போது அவற்றுள் சில மறைந்தும் அழிந்தும் போயின எனலாம். எனவே இத்தகைய நூல்களின் பகுப்பும் தொகுப்பும் மிகவும் தேவையானதே.

சோழ மண்டலத்தை ஆண்ட சரபோஜி மன்னரின் ஆதரவில் (1798-1832) தமிழ் மருத்துவ நூல்கள் சில தொகுக்கப்பட்டுள்ளன இவர் அரிய பல மருத்துவச் செய்திகளைச் சுவடிகளில் எழுதி வைத்துள்ளார். இவற்றுள் சில தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாக வெளிவந்துள்ளன.

இலங்கையை ஆண்ட பரராச சேகரன் என்ற அரசனின் ஆதரவில் 12, 000 செய்யுட்கள் மருத்துவம் தொடர்பாக இயற்றப் பட்டன. மூளை, செவி, மூக்கு, கண், வாய் போன்றவற்றில் தோன்றும் நோய்கள், சில விதிகள், விளக்கங்கள் இச்செய்யுட்களில் கூறப்படுகின்றன. இச் செய்யுட்கள் 7 பாகங்களாக பரராசசேகரம் என்ற பெயரில் வெளி வந்திருக்கின்றன. தமிழில் இத்தகைய நூல்கள் பல இனியும் வெளியிடப்பட வேண்டியுள்ளன.

## நூலறிமுகம்

அறிவியல் முன்னேற்றம் அடைந்துள்ள இந்நாளிலும் பல நோய்கள் மிகவும் பரவி இருக்கக் காண்கிறோம். மனிதனின் சிறப்பு உறுப்பான கண்ணில் பல நோய்கள் தோன்றி வளர்வதுடன் பலருக்கும் பார்வை இல்லாமல் போகின்ற நிலைமையையும் காண் கிறோம்.

இன்று இந்திய நாட்டில் மட்டும் சுமார் ஏழு மில்லியன் பேருக்குப் பார்வை சரியில்லை என்றும், தமிழ்நாட்டில் மட்டும் சுமார் ஆறு லட்சம் பேருக்கு இந்நோய் உள்ளதாகவும் தமிழ்நாடு சுகாதார அமைச்சர் மாண்புமிகு டாக்டர் எச். வி. ஹண்டே அவர்கள் கூறுகின்றார்.[1] இதற்கான மருத்துவ உதவிகளை அரசு நிறுவனங்களும் தனியார் நிறுவனங்களும் தொடர்ந்து செய்துவரு கின்றன. இது ஒரு சிறந்த சமூகசேவையாகவும் கருதப்படுகின்றது.

---

1. தினமணி நாளிதழ். ஜூன். 16. 1982

## உடல் நோய்களும் கண்ணும்

பிறவியில் ஏற்படும் நோய்கள் பல நேரிடையாகக் குழந்தையைத் தாக்கி அதனால் கண்கள் பாதிக்கப்படுகின்றன. மேலும், மனித உடலில் பல்வேறு காரணங்களால் உண்டாகும் அம்மை, சுரம், பாண்டு, சோகை, காமாலை, இருமல், வெட்டை, விக்கல், மாந்தம், குட்டம் போன்ற வெவ்வேறு நோய்களின் கிளை நோயாகவும் கண் நோய் தோன்றி, கண்கள் பாதிக்கப் படுகின்றன. இவ்வாறே, கண்நோய்களும் சில கிளை நோய்களை உடலில் உண்டாக்கக் கூடும். இதன் அடிப்படையிலேயே மருத்துவத் துறையினரும் இவற்றிற்கான மருத்துவ முறைகளை அவ்வப் போது ஆராய்ந்து வருகின்றனர்.

தமிழில் கண் மருத்துவம் பற்றி மட்டுமே விளக்கும் சுவடிகளையும் நூல்களையும் நோக்குமிடத்து, தமிழ் மருத்துவத்தில் இத்தகு நுட்பங்களை உணர்ந்தும் மருத்துவம் செய்யப் பட்டமையை நன்கு அறிய முடிகிறது.

## நூல் பெயர்

கண் மருத்துவம் தொடர்பான செய்திகளை மட்டும் தொகுத்துக் கூறுவதால் இந்நூல் 'கண் மருத்துவம், என்னும் பெயர் பெறுகின்றது.

## நூலமைப்பு

இந்நூலில் மொத்தம் 20 தலைப்புகளில்செய்திகள் அமைந்துள்ளன. ஒவ்வொரு தலைப்பிலும் பாடல்களுடன் இடையிடையே உரைநடையிலான செய்திகளும் கலந்து அமைந்துள்ளன.

பொதுச் செய்திகள்:- முதலில், நல்ல கண்ணின் இயல்பு, கண்ணின் நீளம், அகலம், ஆழம், பார்வைத்திறன், நோய்க் குறிகள், மருந்து தீட்ட விதிகள் போன்றவைப் பொதுச் செய்திகளாகக் கூறப்படுகின்றன.

காரணங்கள்:- இரண்டாவது பகுதியில் கண்நோய் தோன்றுவதற்கான காரணங்கள் பலவும் கூறப்படுகின்றன.

நோய்ப் பெயர்கள்:- மூன்றாவதாக, கண் நோய்களின் பெயர்கள் தனித்தனியே கூறப்படுகின்றன.

நோயும் மருந்தும்:- நான்கு, ஐந்து, ஆறு, ஏழு என்னும் பகுதிகளில் முறையே கருவிழி, வெள்ளை விழி, இமை, குவளை

போன்ற கண்ணின் ஒவ்வொரு பாகத்திலும் தோன்றும் வெவ்வேறு நோய்களும் அவற்றிற்கான மருத்துவங்களும் மிகவும் விரிவாகக் கூறப்படுகின்றன.

மேற்காணும் நால்வகைப் பகுப்பில் கூறப்படாது, தனித் தனியே கூறப்படும் கண் நோய்களும் அவற்றிற்கான மருத்துவங் களும் எட்டாவது பகுதியில் தொகுக்கப்பட்டுள்ளன.

## பொது மருந்து வகைகள்

பொதுவாக, இன்ன நோய்க்கு இன்ன மருந்து என்றே மேற் காணும் பகுதிகள் விளக்குகின்றன. ஆயினும், கண்நோய்களுக் கென சில பொது மருந்து வகைகள் ஒன்பது முதல் பத்தொன்பது வரையிலான பகுதிகளில் முறையே மாத்திரை, குழம்பு, தைலம், நெய், மை, பொடி, புகை, வேது, பொட்டணம், நசியம், காதி விடும் மருந்து, புறவளையம் என்னும் தலைப்புகளில் தனித் தனியே அமைந்துள்ளன.

உடலில் தோன்றும் எல்லா நோய்களுக்கும் அக மருந்து, புற மருந்து என இருவகைகள் உள்ளன. இவை ஒவ்வொன்றும் 32 வடிவங்களைக் கொண்டது என சித்த மருத்துவ நூல்கள் கூறு கின்றன. கண் மருத்துவத்தில் கூறப்படும் பெரும்பாலான மருந்து வடிவங்கள் புற மருந்துகளாகவே உள்ளன.

## பத்திய முறைகள்

நோய்க்கு மருத்துவம் கூறுமிடங்களில் நோயாளிகள் பின்பற்ற வேண்டிய சில பத்திய விதிகள் குறிக்கப்படுகின்றன. இவற்றுடன் சில பொதுவான பத்திய முறைகள் இருபதாவது பகுதியில் விளக்கப் படுகின்றன.

## மருந்துப் பொருள் குணம்

மருந்துப் பொருள்கள் பல இயற்கையிலேயே கிடைக்கின்றன. இவை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தனித்தன்மை உண்டு. இவற்றின் குணமறியாது பயன்படுத்தினால் பல கேடுகள் விளையக் கூடும்.

மருத்துவர்கள், நோய்க்கெதிராக அளிக்கப்படும் மருந்துப் பொருள்களின் பெயர், வடிவம், குணம் போன்றவற்றை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். அவற்றை முறைப்படி தூய்மை செய்து,

மருத்துவ நூல்கள் கூறும் விதிப்படி மருந்துகளாகச் செய்து முடித்து, நோய்க்கேற்றவகையில் கொடுப்பவரே சிறந்த மருத்துவர் எனப்படுவர். 'மருந்துப் பொருள் குணம்' என்னும் தலைப்பில் இவை அகர வரிசையில் தொகுக்கப்பட்டுள்ளன.

## நோயும் மருந்தும்

இந்நூலில் வெவ்வேறு பகுதிகளில் கூறப்படும் நோய்களின் பெயர்களையும் அவற்றிற்கான மருந்துகளையும் உடன் அறியும் நோக்கில் நோய்ப் பெயர்கள் யாவும் அகர வரிசையில் பாடல் எண்களுடன் இத்தலைப்பில் அமைக்கப் பட்டுள்ளன.

இவ்வாறே இந்நூலிலுள்ள மருந்துப் பொருள்களும் அவற்றிற்மான பட்டியலில் குறிக்கப்பட்டுள்ளன.

## பாடப்பட்டுள்ள முறை

பாடல்கள் பலவும் எளிய நடையில் உள்ளன. பெரும்பாலான பாடல்கள் மகடூ முன்னிலையில் அமைந்துள்ளன. சான்றாக,

அம்பு விழியாய் 1095
அன்னமே 343, 420, 528
ஆயிழையே 1175
உண்கண் மடவாய் 1076
ஏந்திழையே 90
ஒண்டொடியே 482
கருந்தடக் கண்ணினாளே 19
காவியனைய கண் மடவீர் 555
கொடியிடை மானே 427
கோதையே 13, 125, 187
செங்கயற் கண் மடவாய் 1637
நெடுவேற் கண்ணாய் 512
பூவையே 341, 441, 478
பொற்கொடியே 914
மானே 190, 199, 220, 323, 329, 419
மைவிழி மாதே 1275
வாளைவென்றடருங் கண்ணாய் 251
வேல் வரி விழியினாளே 194

என முன்னால் உள்ள ஒரு பெண்ணை விளித்துப் பாடுவதாக அமைந்துள்ளன. மேலும்,

அப்பனே 463, 1229, 1335, 1635
உத்தமனே 1029, 1332
சுந்தரனே 1335
பாலகனே 1334
புண்ணியனே 1330
புத்திரனே 1397
புலத்தியனே 1326, 1336
மைந்தனே 1029, 1327, 1334, 1634

என முன்னால் உள்ள ஒரு மாணவனை விளித்துப் பாடுவதாகவும் சில பாடல்கள் அமைந்துள்ளன.

'நினைவுட னுரைக்கக் கேளாய்' 80
'கருத்துட னுரைக்கக் கேளாய்' 83

போன்ற தொடர்கள் பாடலாசிரியர் சிலவற்றை வலியுறுத்திச் சொல்லும் பாங்கை விளக்குகின்றன.

## உவமைகள்

கண் நோய்களின் தன்மைகள் பல உவமைகளால் விளக்கப் படுகின்றன. இவையாவும் அனைவரும் எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய முறையில் கூறப்படுகின்றன. சான்றாக,

அதிமாங்கிசம்—ஊச்சியின் சதையே போல 197
அந்திரகாசம்—இந்திர கோபம் போலச் சிவக்கும் 664
அமரம்—அலர்ந்த பூப்போல் சிவந்திருக்கும் 665
அழிகண்—கண்ணுதலில் கடுகுபோலப் படருமே நொய் நொய்யாய் பருவன் காணும் 672
அன்ன கோபம்—உலையினில் மெழுகு போல 683
அனல் கோபம் —தீப்போ லெரியும் 680
இரத்தகாசம் —இரத்தக் கட்டி போல 92
இரத்தக் குமிழ்—செங்குன்றி வடிவதாகும் 428
சங்கம் பழம் போலாகும். 428
இரத்தப் பாய்ச்சல்—குரங்கினது வாசனம் போல் சிவக்கும் 701
இமைத்தடிப்பு—தாமிரத்தினிறம்போல சோரி தங்கும் 481
இமையோடுறுத்தல்—வீணைபோல தெறித்திழுக்கும் 700
உடைந்தெழுகாசம்—கடைந்திடுங் கருவிபோலக் கடைக்கண் குத்தி வாங்கும் 727

---

எண்கள் பாடல் எண்கள்

உந்த லெழுச்சி— அழலெழுபருத்திக் காய்போல 408
ஊறுகாசம்—கட்டைப் பட்ட புண் போலாம் 736
எழுச்சி—மீன்விழி போலத் தோற்றும் 07
ஐயகாசம்—உயர்ந்த மாணிக்கந் தன்னில் உற்றவெண்ணெய்ப் பட்டாற்போல 91
கண்கட்டி—காணம் போல 742
கண் குரு—மருப்போல கண்ணில் தோன்றும் 745
கண் கூச்சம்—கடல் நுரைபோல வெளுக்கும் 746
கண் சிவப்பு —சிவந்த பூவது போலாகும் 750
கருங்குமுதம்—நள்ளிருள் போல மூடும் 217
கருநாகப் படலம்—இந்திரன் தனுவே போல இயல் நிறம் பலதுமுண்டாய் 196
குந்தம் அமரம்—சிலாகையினாற் குத்துவது போலக் குத்தும் 779
குடப் பில்லம் - சனத்திடும் நாங்கு போல 444
குவளை நெரிதல்—நீட்டுங் கருவிதனைப் போலச் சிக்கிப் பருக்குமிமை வீங்கும். 800
குவை எழுச்சி—உளுந்தது போல வாகும் 406
சிலேத்தும காசம்—கொட்டினாற் போலே நெற்றி குலையவே வலிக்கும் 102
,, —மழை முகில் சொரிந்தாற் போல 102
சுக்கிரப் படுவன்—முயல்போலப் பாய்ச்சலுடனீரே பொங்கும் 818
சுடுவளர்த்தி —சர்பம் போல்சிறியதோர் மூச்சுண்டாகும் 827
,, — தணலுடனே தீபம் போல 827
சுழற்றிடு பில்லம்—கழற்றிடு மணிபோலாகும் கருமணி குவிந்து நிற்கும் 437
செங்குமுதம்—உற்பலம் மலர்போ லுண்டாம் 216
சோதிகா விரணம்—நண்டின் கண்கள் போல நடுவிழி தன்னிற் காணும் 840
நயன வாதம்—கயமொத்து நீர்த் ததும்பும் 537
நாக படலம்—செந்நூலது வொப்பாகும் 849
நீர்நெரிசல்—மைதோளின்வடிவு போல 228
நீர்ப் படலம்—முகில் போல் மயக்க முண்டாம் 194
நீர்ப்புற்று —வெண் குமிழ் போல 421
நீர்வரி—வெண்மையாய் நெடிகிக் காணும் 232

நீராம்பற்கட்டி—பம்பரம் போலாடும் 1331
நீரெழுச்சி—அம்பினிற் துளிபோலகும் 406
நீரொளிகாசம்—காந்தளம் பூபோ லொக்கும் 856
நீலகாசம்—மறுளுவூமத்தம் பூ வண்ணாம் 86
நீலவரி—துருசு மேனி 431
பசுவிழிப் படலம்—தழலது போலக் காந்தும் 198
,, —கறுப்பினுள்ளே மரகதம் போன்றும் காட்டும் 198
பித்தகாசம்—மயிலின் கழுத்தது போல 91
,, —பிணங்கிய பச்சை போலாம் 85
,, —கருவிழியில் உளுந்து போல வெண்மையாய்த் தோன்றும் 106
,, —பல பலவாம் வர்ணம் போல 106
,, பெருகிடும்மேகம் போலும் 115
,, மாசு போலாம் 105
,, வளைசங்கு நிறமதாகும் 115
பில்லம்—ஒள்ளிய விதழ்போலுதித்திடும் 65
பூப்படலம் —நற்கமலத் தளிர் போன்ற படலம் 914
பூப்படல அதிமாங்கிசம்—செவ்வலரிப் பூப்போல் மாறும் 917
பொங்கிய விதனம்—அங்கிபோலெரிந்து நோகும் 921
மதன மாந்தரம்—உதிரம் போலச் சிவந்திருக்கும் 933
மந்தார காசம்—சேர்கரு மணியினுள்ளே செரிந்திடு மஞ்சி போல 250
,, செம்பஞ்சு மேகம் போல 86
மலங்குழி—நீரருவி யோடை போல 941
மாங்கிசக் குமிழ்—பனைத் தெழுங் கருமையாமே 428
வரிப்படர்த்தி—வலையென வுலைந்து காட்டும் 515
வரியெழுச்சி—சுணங்கு போலுருட்டிக் காட்டும் 405
வாத காசம்—மணிதனில் வண்டு போலே வர்ணங்கள் பலவுமுண்டாய் 85

மேகம்போற் கறுத்து நீண்ட நீலம்போற் தோன்றி நிறமும் பார்வை சிவப்பாகும்.

வரியெழுச்சிப் படலம்—கருவிழியதனின் மீது கயறு போல் வளைந்து காட்டும் 195

வாரெழு காசம்—கார்முகில் போல வெங்கும் கனத்தது யிருண்டு தோற்றும் 955

வாலகாசம்—கொழும்புவகை யார்த்தல் போல 86

விரணயெழுச்சி —கருங்குன்றி போன்று காட்டும் 406

விழிகண் குருடு—இலந்தையின் வித்தைப் போல அடிகனத்து திரண்டு கட்டி காணும் 957

விழிவிழுங்கிச்சுக்கிரன் இடிபோல குத்தலாகும் 317

வீங்கி விழித்தல்—மூங்கில் முளைபோற் கடைக்கண்ணில் முதிர்ந்த தசைதான் காணும் 962

வெண் குமுதம்—சீறிடும் பஞ்சு போலச் சிதறிடும் புள்ளியாகும் 218

வெண் வரி—மீன்சிலாம் பெழுதல் போல 4 1

வெள்ளெழுத்து—காண்பது மஞ்சள் போலாம் ?49

,, —கூர்விழி மணியினுள்ளே குழம்புமை முகிலே போல 249

அலரிப் பூப்போல் அதுசில சிவப்பு 65
உளுத்தம் பயறுபோல் ஒருதர முளைகள் 65
கரணை முளைபோல் கண்டிடும் நிமையில் 65
கருகின புகைபோல் கறுத்த சிவப்பு 65
சிதறின புள்ளிபோல் சிறிய பூக்கள் 65
சிறிய பயறுபோல் சிதறின முளைகள் 65
நத்தைத் தூறு போல் நடுவிழி புடைத்தல் 65
புடலம் பூப்போல் பிரிந்து பூப் படர்தல் 65
மாதுளம் பூப்போல் வலித்திடும் சிவப்பு 65

என்னும் இவைபோன்ற உவமைகள் பலவும் கண் நோய்களின் தன்மைகளை விளக்குகின்றன.

கண் நோய்களுக்கு ஏற்ற இன்ன மருந்தை அளித்தால் இவ்விவ்வாறு நோய்கள் விலகும் என்பதையும் சில உவமைகளின் வாயிலாகக் கூறப்படுகின்றன. சான்றாக,

கண்ணை இழந்த பசுப்போலே
கத்தி ஓடுவர் கண்டீரே 1281

கதிர்முன் பனியாகுமே 158, 519, 999, 1476
ஆதவன் கண்டயிருள் போலவே தீரும் 997
பஞ்சிலிட்ட தீப்போல பறந்து போகும் 755

'உண்மை யிலங்கை சிங்க முன்னே
உரைத்த மன்னர்ப் பெரும் படைகள்
மண்ணில் விழுந்து புலக்கவ்வி
வணங்குங் களம்போல வெளியாமே 1265

என இவ்வாறு பல உவமைகளைக் காணலாம்.[1]

## மருந்துகளின் வன்மை

விசைபட வுறுத்தி நொந்த
விழிசுக மாகுந் தானே 473

பறந்தது போகுந் தானே 457
பதைபதைத்தே யோடும் பயந்து 450
குலை குலைந் தோடிப்போமே 413, 787,
அலறிப் போமே 4 2
நிலை விட்டோடும் நிச்சயமே 1611
ஓடியே போகுந் தானே 122
நடுங்கி யோடுங் கண்டீரே 109
பாய்ந்து பின்னோடுங் கண்டாய் 159
கலங்கியே மயங்கிக் கருங்கடல் புகுமே 1022
பன்னிரு யோசனைக் கப்பாலே 556
வடகடலிற் செல்லும் நோய் மாண்டு 1187
இது கை கண்டது 381, 642, 7୬7, 1314, 1569
அப்பனே கைகண்ட வித்தை பாரு 1204
தேசிகனே கைகண்ட வித்தை பாரே 346
வைத்த மருந்து தவிராதே 369

போன்ற தொடர்கள் பலவும் மருந்துகளின் வன்மையை வலியுறுத்துவனவாகும்.

## மருந்துப் பொருள் அளவுகள்

மருந்துகளைச் செய்யும்போது அதில் சேர்க்கப்படும் பொருள்களைக் குறிப்பிட்ட அளவுகளிலேயே சேர்க்க வேண்டுமென்பது எல்லாப் பாடல்களிலும் விளக்கப்படுகின்றன. சில அளவு முறைகள் மிகவும் குறிப்பிடத்தக்கன. சான்றாக,

1. பா. எண். 1220, 1221, 1265-69, 1606, 1643, 1644

அரிசி எடை 1 73
எள் எடை 388, 502, 1569
நெல் எடை 387, 399, 722
காசெடை 587
வராகன் எடை 112
பலம் 140
படி 114
வீசம்படி 878
புட்டி 822
குத்து 1512
குன்றி 385
சிரங்கை 139
மாடை 1571
சேர் 1333

என இவ்வாறு கூறப்படுகின்றன. மேலும்,

சணல் விதையளவு 124
தேற்றான் விதையளவு 1556
நார்த்தங் காயளவு 637
நெல்லிக் காயளவு 400
பயறளவு 348, 609
பாக்களவு 148, 752
மத்தம் பூவின் நடுவல்லித் தண்டின் அளவு 128, 424
விளாங்காயளவு 525, 901
உருத்திராட்சம் கனியளவு 1506
எள் அளவு 148, 267, 423, 504, 709
எலுமிச்சங்காயளவு 1539
கரண்டியளவு 1323

போன்ற பல அளவு முறைகளும் குறிப்பிடப்படுகின்றன.

## மருந்து செய்யும் பக்குவம்

மருந்துப் பொருள்களை அளவுடன் சேர்த்து, அவற்றை முறையாகச் செய்யும் பக்குவங்களையும் பல பாடலடிகள் விளக்குகின்றன. சான்றாக,

களகளெனக் காய்ச்சி 1274
கலத்தொடு கலம் தேய்த்து 1285
பதத்தில் வடித்திறக்கி 857
மெழுகு பதத்திறக்கி 144
நைய மத்தித்தல் 429
குழைய ஆட்டுதல் 1519
ஒன்றித்து அரைத்தல் 151
மை போலாட்டல் 1327
மெழுகு போலரைத்தல் 710

மயனம் போலாட்டல் 1529
குழம்பு போலரைத்தல் 808
களிம்பு போலரைத்தல் 491, 749
எட்டொன்றாகக் காய்ச்சல் 172, 484
சுண்டக் காய்ச்சல் 1704
நான்கு சாமம் ஆட்டவும் 146
அக்கினிபுடம் 1570
காட்டுவிராட்டிப்புடம் 1554
தானியப்புடம் 356, 1394, 1436, 1464
நெற்புடம் 543, 549, 1382
மந்தாக்கினி 1356
குகை 524, 525, 1505, 1565

என இவ்வாறு பல பக்குவ முறைகள் கூறப்படுகின்றன.

## மருந்தரைக்கும் கலங்கள்

வெண்கல வட்டில் 547
செம்புக்குழவி 1546
கலங்கொம்பு கொண்டு இழைத்தல் 1553
வெண்கலத்திட்டுச் சங்கால் அரைக்க 1549
வடிகலசம் 1435
வட்டில் 1533
இரும்புக்குழவி 749, 829
இரும்புத்தடி 242
கிண்ணி 1262
செப்புவட்டில் 1262
செப்பு வட்டகை 295

என்னும் இது போன்றவை மருந்தரைக்கப் பயன்படும் கலங்களாகக் கூறப்படுகின்றன. இவ்வாறே தைலம் போன்ற வேறு மருந்துகளைச் செய்யப் பயன்படுத்தப்படும் கலங்களும் தேவையான இடங்களில் கூறப்படுகின்றன.

## மருந்துகளின் வடிவம், அளவு

மாத்திரை போன்ற மருந்துகளைச் செய்யவேண்டிய அளவு முறைகள் பல இந்நூலில் கூறப்படுகின்றன. சான்றாக,

காசுபோல வில்லைத் தட்டி 148, 1576
ஆனைத்திப்பிலி மாத்திரம் கலிக்க உருண்டை 1264

கடலைப் பிரமாணம் மாத்திரை 1259
ஒரு விரல் நீளங் கயிறு 1634
குன்றி மணியளவு உருட்டிக் கொள்ளவும் 1108
திப்பிலி பிரமாணம் உருண்டை 275
பயறளவு உருட்டவும் 1066, 1617
பெருவிரல் அளவு உருண்டை 1119
நெடு மாத்திரை 1235
நீண்ட மாத்திரை 1247

கொண்டதோர் மருந்தை நன்றாய்க்
குறுக்கி நீண்டிடாத வண்ணம்
உண்டைசெய் திரும ருங்கும்
சுழிவிழ வுருட்டித் திரட்டி 152

போன்ற தொடர்கள் மருந்துகளின் வடிவம், அளவு போன்றவற்றை வலியுறுத்துகின்றன.

## மருந்துகளைப் பாதுகாத்தல்

முறைப்படி செய்து முடித்த மருந்துகளை மருந்துகளின் தன்மைகளுக்கேற்றவாறு வெவ்வேறு கலங்களில் சேர்த்து வைத்து பாதுகாக்க வேண்டுமென கூறப்படுகின்றது. சான்றாக,

கொம்புச் சிமிழ் 1312, 1575
சிமிழ் 148, 209, 348, 400
தாமிரச் சிமிழ் 1529, 1561, 1562
பீங்கான் சிமிழ் 1574
மயிலரகு குப்பி 1119
மாட்டுக் கொம்புச் சிமிழ் 1519
மான்கொம்புச் சிமிழ் 1519

போன்றவை குறிப்பிடத்தக்கன.

## மருந்திடும் அளவு

மிகவும் பக்குவமாகச் செய்யப்படும் இம்மருந்துகள் வன்மை வாய்ந்தவை. இவற்றைக் குறிப்பிட்ட அளவே பயன்படுத்த வேண்டுமென்பதை நூலின் பல பாடல்களும் குறிப்பிடுகின்றன. சான்றாக,

கடுகளவு இடவும் 209, 400, 1499, 1511, 1546
கொள்ளுப் பருப்பளவு இடவும் 814, 1517
கொள்ளின் பருப்பில் பாதியளவு 719
சிறிய பயறளவு இடவும் 611, 1213
வெந்தயப் பிரமாணம் இடவும் 1539
எள்ளுப் பாதியளவ்வு இடவும் 634

என இவ்வாறு மருந்திடும் அளவுகளைக் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கதாகும்.

## மருந்திடும் காலம், பகுதி

கண்ணில், மேல் மருந்தாக உள்ளவற்றை எந்தெந்த பகுதிகளில் எவ்வளவு நாட்கள் போட வேண்டும் என்பதும் பலவிடங்களில் குறிக்கப்பட்டுள்ளன. சான்றாக,

கண்ணிமை, நடுக்கண், கடைக்கண்
இவைகளில் போடவும் 1539
ஒவ்வொரு கண்ணிற்கும் பயறளவு இடவும் 1541
21 நாட்கள் போடவும் 545, 734
20 நாடகளுக்கிடவும் 1251
15 நாளிடவும் 1244
40 நாட்கள் போடவும் 901

காலையும் மாலையும் இடவும் 377, 398
மாலையில் 10 நாட்கள் போடவும் 1327
அந்தி சந்தி நடுகண்ணிற் தீட்டவும் 1292
இருநேரமும் 7 நாள் போடவும் 1526
ஒருபொழுது அம்மருந்து ஒருநாளாமே 1194
ஒருநாளைக்கு 3 நேரம் போடவும் 897
ஆறு திங்கள் 1531
நாற்பத்தோர் நாள் 476

என இவ்வாறு நோயின் தன்மைக்கேற்ப மருந்து அளிக்க வேண்டிய முறைகள் பலவும் வகுத்துக் கூறப் படுகின்றன.

## துணை மருந்துகள்

கண்ணில் தீட்டப்படும் மருந்துகள் பலவற்றிற்கும் துணை மருந்தாக முலைப்பால், எலுமிச்சம் பழச்சாறு போன்றவை பயன்

படுத்தப்படுகின்றன. இவை மருந்துடன் கலந்து நோயை நீக்குவதுடன் கண்ணுக்கும் உடன் நலம் பயக்கும் என்னும் நோக்கிலேயே வலியுறுத்தி கூறப்படுகின்றன.

## பத்தியம்

*பத்தியமில்லை 1559*
*நிகமையாய்ப் பத்தியங்கள் நீ கூட்டாதே 1338*

என இவ்வாறு பத்தியங்கள் தேவையில்லை என சில பாடல்களில் குறிப்பிடப் பட்டிருப்பினும், பெரும்பாலான பாடல்கள் பத்தியத்தை வலியுறுத்துகின்றன. சான்றாக,

*புளி புகை பெண்ணுந் தள்ளு*
*மச்ச மாமிசமும் தள்ளு 1377*
*இறைச்சி, புளிப்பு நீக்கவும் 543*
*காரம், புகை நீக்கவும் 1460*
*உப்பு, புளியும் விலக்கிடு 1535*

போன்ற தொடர்கள் குறிப்பிடத் தக்கன.

## வேறு நோய்கள்

கண் நோய்களை நீக்கும் மருந்துகள் சில உடலில் தோன்றும் வேறு நோய்களையும் நீக்க வல்லன என்பதைப் பல பாடல்களும் கூறுகின்றன. சான்றாக.

*அத்திசுரம் 1378*
*அத்திவெட்டை 1378, 1438*
*அட்ட குன்மம் 1379*
*ஆசனக் கிரந்தி 987*
*இராஜப் பிளவை 987*
*இலிங்கப் புற்று 987*

*இளைப்பு 1422,* *உச்சிப் பிளவை 987*
*உடற்துர்க்கம் 1768,* *ஒரு தலைவலி 830, 1623*
*கண்டங்கம்மல் 134,* *கண்டமாலை 987*
*கபால சூலை 1587, 1588, 1593, 1607, 1624*
*காதடைப்பு 1337,* *காதிரைச்சல் 768, 1422*
*காதுநோய் 1358, 1402, 1778*
*காமாலை 1365, 1439*
*கால் வெடிப்பு 1343,* *கிறுகிறுப்பு 1385, 1439*

கும்பிவலி 1336, குன்மம் 1336, 1337, 1379
கை கால் மெய்யெரிவு 1378, 1397
சுரம் 761, 956, 970, 1422, சுதக வெட்டை 1337
சூலை வாய்வு 1439, தலை கிறுகிறுப்பு 175, 1408
தலை குடைச்சல் 835, 1593, தலைக் குத்து 584
தலை நடுக்கம் 772, 805, நீரழிவு 1379, 1422
பக்கப் பிளவை 987, படர்தாமரை 987
படர் மேகம் 1329, பல்லுளைவு 1422
பிடரிவலி 255, 315, 317, 514, 745, 751, 830
பெரும்பாடு 1331, 1336, மண்டையிடி 1379
மலக்கட்டு 49, 52, மூக்கு நீர்ப்பாய்ச்சல் 1348
மேக நோய் 1421, வாந்தி 480, 756, 772
விக்கல் 807, 1336, வெப்பு 38, 47, 1458

போன்ற நோய்கள் குறிப்பிடத் தக்கன.

## சொல் வழக்கு

பாடல்களில் காணப்படும் சொற்களில் பெரும்பான்மையும் தமிழிலுள்ள வழக்குச் சொற்களே. சிறுபான்மையாக உள்ள வடசொற்களில் பலவும் தமிழாக்கம் பெற்றே வழங்கப் பட்டுள்ளன. சான்றாக,

அக்கினி 49, 1572, அமுதம் 1307, 1665
ஆக்குரோசம் 983, ஆயிசு 1648, 1732, 1760
இரட்சை 77, 202, 330, இரணம் 52, 986
இலட்சுமி 1161, உட்டிணம் 41, 62
கசாயம் 30, 178, கடாட்சம் 273, 1227
கசப்புடம் 1573, சலம் 52, 94, சாயரட்சை 255
சிகிச்சை 343 764
திட்டாந்தம் 1229 பதார்த்தம் 39, 50, 127

போன்ற சொற்கள் குறிப்பிடத் தக்கன.

கண் எனும் சொல் நூல் முழுதும் கூறப்படுகின்றன. மேலும், நயனம் 1, 2, 3, 6, 7, 13, 19, 88, 304, 581; நேத்திரம் 43,393, 474, 514, 888; விழி 17, 22, 35, 156, 370, 1215, 1307, 1747 போன்ற சொற்களும் கண்ணை உணர்த்தும் சொற்களாக அமைந்துள்ளன.

பேச்சு வழக்குச் சொற்கள் பலவும் இடையிடையே காணப் படுகின்றன. சான்றாக,

அஞ்செழுத்து 1729
ஆசை 37
உதய காலம் 911, 1193
உள்ளுக்கு 166, 549, 942
கர்மம் 58, 60, 1161
கியாழம் 1217, 1368
கிழி 374, 555
கிறுகிறுப்பு 1[illegible]85, 1439
குட்டிப் பந்து 1599
கொட்டாங்கச்சி 1586
கொழு கொழுத்தல் 528
கோணிப் பட்டு 636
சண்டாளக் கோபம் 945
சண்டாளப் பாவம் 61
சண்டாளப் பூ 450
சதாகாலம் 255, 766
சபலச் சித்தம் 730
சாயுங்காலம் 141, 256
சினேகம் 1743
சீசா 1541
சேற்பனம் 38
தட்டான் 1325
தயவு 57, 1330
திமிர் 74, 134, 1112
நசிப்பு 1621
படபடப்பு 805
பாழான கண் 397
மத்தித்தல் 235, 370
மத்தியானம் 26, 27
மாணாக்கள் 680, 730
மினுமினுப்பு 91, 818
விறுவிறுப்பு 482

போன்ற சொற்கள் குறிப்பிடத் தக்கன.

## கடவுளர் பெயர்கள்

அகிலாண்டேஸ்வரி 1161
அங்கயற் கண்ணி 1636
அறுமுகன் 379, 1326
ஆனை முகத்தோன் 1216
உமையாள் 28
சடையோன் 28
சிவன் 59, 1457
செந்தமிழ் உமையாள் 21
தெய்வானை 1441
நான்முகன் 1
கந்தன் 614

போன்ற கடவுளர் பெயர்களும் இந்நூலில் கூறப் படுகின்றன.

## சில நம்பிக்கைகள்

கண் நோய்கள் தோன்றக் காரணங்களைக் கூறுமிடத்து, செய்யக் கூடாத சில பாவங்களைச் செய்வதாலும் கண் நோய்கள் தோன்றுவதாகக் கூறப்படுகின்றது சான்றாக,

உறுப்புக் குறைந்தோரைப் பழித்தல் 57
தயவு அற்றிருத்தல் 57
சிவாலயங்கள் தனை விரும்பாதாலும் 58
பொய், அழிவழக்குச் சொல்கையாலும் 58

என இவ்வாறு பல காரணங்கள் சுட்டப் படுகின்றன. இப் பாவங்களிலிருந்து மீள, தானதர்மம் செய்தல், கோவில் குளம் தீர்த்த வாசம், பஞ்சகர்த்தா தரிசனம், பூசை, கோவில் குளம், கிணறு வெட்டல் வேதியர்க்குத் தானம், உயிர்க்கொலை நீக்கல், குருவை வணங்கல், சிவபூசை போன்றவற்றை மேற்கொள்ள வேண்டுமெனவும் கூறப்படுகிறது. இவை, அந்நூலாசிரியரின் பொதுவான கொள்கை யாகும். எனினும், அவையே சில நம்பிக்கைகளாக மக்களுக்கு அறிவுறுத்தப் பட்டுள்ளன எனலாம். மேலும்,

'ஊழ்வினையால் வந்த ரோகமாச்சு 344
முந்தித் தீவினையால்வந்த பூ' 374
'விதிவசத்தில் வந்ததொரு காசம்' 945

போன்ற தொடர்கள் நல்வினை, தீவினை என்னும் கொள்கைகளை வலியுறுத்துகின்றன.

சில வேர்களைப் பிடுங்க சனிக்கிழமை காப்புக் கட்டவேண்டும் (1615) எனவும், மருந்துகளைச் செய்து முடித்து ஐங்கரன். அறு முகன் போன்றவர்களுக்குப் பூசை செய்ய வேண்டும் (1338, 1376) என்றும் கூறப்படுகின்றன.

இவற்றால், மருத்துவத்துடன், சோதிடம், நாள், கோள், சில சமய ஒழுக்கங்கள் போன்றவையும் பிணைந்துள்ள நிலையை உணர முடிகின்றது.

## மருந்துகளின் அருமை

'இதுபோலே மருந்தொன்றிவ் வுலகிலுண்டோ 1600
'இதைப்போல நேத்திரத்துக் கேறாதொன்றும்' 1205
'சிறந்ததடா சந்தனாதி தைலம் போலே'
தேசத்திற் கிட்டாது தெளிவாய்ப் பாரு
திறந்தரு மிம்மருந்தோதான் மண்ணிய புண்ணியஞ்
செய்தவர்க்கே யெய்துங்காண் தேர்ந்து பாரே 1380
'விரைந்துபோ மிம்மருந்தல்ல வேறே வேண்டாம்' 1195

போன்ற தொடர்கள் அம்மருந்துகளின் அருமையை உணர்த்து கின்றன.

இத்தகைய மருந்துகளின் அருமையைக் கருத்தில் கொண்டு மருத்துவர்கள் சிலர் இவற்றை மறைவாகவே வழங்கினர் எனத் தெரிகிறது. இவற்றின் செய்முறை போன்றவற்றைப் பிறருக்கு எளிதாகக் கூறுவதும் தவறு என்னும் எண்ணமும் சிலரிடம் இருந்ததுள்ளது எனலாம்.

'வாரிட்ட யின்னூலை வெளிவிடாதே
வாங்காதே தோடத்தை வாங்கிடாதே' 1338

போன்ற தொடர்கள் இதைச் சுட்டுகின்றன.

## மிருக விழிநோய்

மனிதன் கண்ணில் தோன்றும் நோய்களுக்கே இந்நூலில் மருத்துவம் கூறப்படுகிறது. ஆயினும், நாற்கால் மிருகங்கள், பறவைகள் போன்றவற்றின் கண்களில் தோன்றும் நோய்களுக்கும் சில மருந்துகள் 1265-69 கூறப்பட்டுள்ளன.

## சில குறிப்புகள்

சில மருந்துகளை வெவ்வேறு துணை மருந்துகளில் இடும்பொழுது வெவ்வேறு நோய்கள் நீங்குமெனப் பல பாடல்களிலும் கூறப்படுகிறது.

திமிரம் என்னும் நோய்க்குக் கூறப்படும் மாத்திரையே (299, 300), பூ என்னும் நோய்க்கும் மாத்திரையாகக் கூறப்படுகிறது (364, 365)

ஒரு பாடலில் முன்னிருவரி குளிகை செய்முறையையும் பின்னிருவரி புறவளையம் இடும் முறையையும் கூறுகின்றது. எனவே, இப்பாடல் மாத்திரை என்னுமிடத்திலும் (1230), புறவளையம் என்னுமிடத்திலும் (1632) இருமுறை கூறப்பட்டுள்ளது. இவ்வாறே வேறு ஒரு பாடலும் இரு இடங்களில் (1614, 1635) அமைந்துள்ளது.

பளிங்காதி உருண்டை (1140), சங்கானா உருண்டை (1050) என்னும் இரண்டும் ஒரே செய்முறையைக் கொண்டவை. ஆயினும் இவற்றின் தலைப்பில் காணும் வேற்றுமையைக் கொண்டு இவை இரு இடங்களிலும் கூறப்பட்டுள்ளன.

மருந்து செய்முறைகளில் பல விரிவாகக் கூறப்படுகின்றன. ஆயினும், மருந்து சுத்தி முறைகள், புடமிடும் முறைகள் போன்ற

குறிப்பிட்ட சில மருத்துவ விதிகள் விரிவாக விளக்கப் படவில்லை. இத்தகு விதிகளை நன்கு உணர்ந்த பின்பே இம்மருந்துகளைச் செய்து முடித்தல் மருத்துவர் கடமையாகும்.

## நூலசிரியர்

தமிழ் மொழியையும், தமிழிலுள்ள கலைகளையும் இறைவனே படைத்தளித்ததாகக் கூறுவது மரபு. தமிழ் மருத்துவக் கலையினையும் இறைவனே படைத்ததாக பல மருத்துவச் சுவடிகளிலும் கூறக் காணலாம்.

கண் மருத்துவம் பற்றிய இந்நூலில், குறிப்பிட்டுள்ள அனைத்து சுவடிகளிலும் இறைவன் முதலில் இதை அறிவித்ததாகவும், அதன்வழி முனிவர் பலர் வழிவழியாக அறிந்த தாகவுமே அறிய முடிகிறது. இந்நூலிலுள்ள பாடல்களிலும் இதற்கான சான்றுகளைக் காணலாம்.

''இயம்பினா ரிறைவன் தானே'' 469
''இறையவ ருரைத்த வாறே'' 1049

## சிவபெருமான்

இறைவன் எனப் பொதுவாகக் கூறப்படினும், சிவபெருமானே அவ்விறைவன் என்ற பொருளில் பல தொடர்கள் காணப்படுகின்றன. சான்றாக,

'மாதுமை பாகன் சொன்ன' 1
'சங்கர னருளிச் செய்தாரே' 1164
'சிவனா ருரைத்தார்' 602
'ஆல முண்ட மிடற்றண்ணல்
ஆனா ருரைத்தா ருரைத்தாரே 558
'மழவிடை யமர்ந்தோன் சொன்ன' 533

என்னும் தொடர்களைச் சுட்டலாம்.

## சிவன் - உமை உரையாடல்

தமிழ் மருத்துவ நூல்கள் பலவற்றிலும் மகடூ முன்னிலையாகப் பாடப்பட்டுள்ள பாடல்களைக் காணலாம். இவை அனைத்தும் சிவன் - உமை இவர்களுடைய உரையாடலாகவே காணப்படுவது தமிழ் மருத்துவத்திற்கே உரியது என்பர். இதற்கேற்ப, இந்

நூலில் பல பாடல்கள் மகடூ முன்னிலையாகவும், குறிப்பாக சிவ பெருமான் உமையம்மைக்குக் கூறுவது போலவும் பல தொடர் களைக் காணலாம். சான்றாக,

ஈசன் ஒண்டொடிக் குரைத்த வாறே' 1052
'சடையோ னாறும் கூறிட யுமையாள் கேட்க' 28
'மூரியவெண் முருவ லீசன் மொழிந்திட யுமையாள் கேட்க'31
'கிளிமொழி யுமையாட் கீசன்
நாட்டமா யுரைத்த யுண்மை' 426
'உமைக் குரைத்திட்ட வாறாம்' 1727

என்னும் தொடர்களைக் கூறலாம்.

## நந்தி தேவர்

சிவபெருமான் உரைத்த இத்தகு மொழிகளை உமையம்மை வழியே நந்தி முதலான பலரும் பெற்றனர் என்றே வேறு சில நூல் களும் கூறுகின்றன.[1] இதற்கேற்ப சில தொடர்புகளையும் இந்நூலில் காணலாம். சான்றாக,

''நம்பா நந்திக் குரைத்த மொழி
நாமும் புவியோர்க் குரைத்தோமே' 1095
''பாட்டாக நாரென மூலர் நந்திசொல்ல
பாடி வைத்த தன்வந்திரி யசுவனிக்குச் சொல்ல
நீட்டமுட னசுவனியும் யூகிக்குச் சொல்ல
யூகியென்ற முனிதானும் நிகழ்த்திட் டாரே.' 499

போன்ற பாடல்களைக் கூறலாம்,

---

1. சொல்லிடவே தேவிக்குச் சதாசிவன் சொல்ல
சொல்லவே தேவியும் நந்திக்குச் சொல்ல
நல்லிடவே நந்திதன் வந்திரிக்குச் சொல்ல
நயமுடனே தன்வந்திரி யசுவினிக்குச் சொல்ல
அல்லிடவே யசுவனியும் தேவர் தாமும்
அகத்தியருக் குரைத்திடவே யம்முனிவர் தாமும்
புல்லிடவே புலத்திய ருக்குப தேசிக்க
புலத்தியரும் தேரையர்க்குப் புகன்றிட் டாரே.
புகன்றிட்டார் தேரைய மாமுனிவர் தாமும்
பூதலத்தில் யூகியா மெனக்குச் சொல்ல
உகன்றிட்டார் யூகியென்ற முனிவர் தாமும்
உலகத்தோர் பிழைக்கவே யுரைக்க லானேன்'

-யூகிமுனி —சிகிச்சா சாரம்
கண்ணோய் தொகுப்பு வரலாறு.

## அகத்தியர்

தமிழ் மருத்துவத் துறையில் அகத்தியர் பெயரால் வழங்கும் நூல்களே மிகுதியாகும். கண் மருத்துவம் பற்றிய பெரும்பாலான நூல்களும் அகத்தியர் பெயராலேயே வழங்கப்படுகின்றன. இதற்கான சான்றுகள் பலவற்றையும் இந்நூலினுள் காணலாம். சான்றாக,

'பொதிகை மலைமுனி யோதிய நூலே' 989
'தென்திசை வாழு மகத்திய முனிவர்
திறமுட னுரைத்தனர் பரிந்தே' 1490
'மூதறி முனிவன் சொன்ன மொழிப்படி' 1664
'குறுமுனி யுரைசெய் தாரே' 434, 599
'மாமுனிவ ருரைத்த நூலே' 34
'மலைமுனிவர் இயம்பி னாரே 370
'மலைமுனிவர் பகர்ந்த நூலே' 1062

போன்ற தொடர்களைக் கூறலாம்.

## அகத்தியர் வரலாறு

அகத்தியர் என்ற பெயர் கொண்ட புலவர்களும், முனிவர்களும், சித்தர்களும், மருத்துவர்களும், அறிஞர்களும், சாதாரண மனிதர்களும், அரசியல் தூதுவர்களும் பலராவர். பொதியமலை அகத்தியர் என்கிற குறுமுனியின் காலம் 16,000 B.C என்றும் இவருக்குப் பிறகு கி பி.19 ஆம் நூற்றாண்டு வரை 37க்கும் மேற்பட்ட அகத்தியர் வாழ்ந்திருந்தனர் என்றும், அவர்கள் பல்வேறு இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும் கூறுவர்.[1]

எனவே, அகத்தியர் ஒருவரே அல்லர் என்றும் பல்வேறு கால கட்டத்தில் பலரும் அகத்தியர் பெயரால் இருந்தனர் என்பதும் அறியத்தக்கதாகும்.

## அகத்தியர் பெருமை

அகத்திய முனிவரைப் பற்றிய செய்திகள் வியாச முனிவரால் உரைக்கப்பட்ட புராணங்களிலும், இராமாயணம், பாரதம் போன்ற இதிகாசங்களிலும் உள்ளன.

---

1. அ.சிதம்பரனார். அகத்தியர் வரலாறு.

வானில் நட்சத்திர வடிவாயுள்ள சப்த ரிஷிகளில் அகத்திய முனிவர் முதன்மையினர். இவருக்கு அகத்தியர், குறுமுனி, கும்ப முனி, குடமுனி, பொதியை முனி, தமிழ் முனி என்ற தொடர்பிற் பல பெயர்கள் வழங்குவதுண்டு. பேரகத்தியம், சிற்றகத்தியம் என்னும் இரண்டு தமிழ் இலக்கண நூல்கள் இவரால் இயற்றப் பட்டன என்றும், அவை கடைச்சங்க காலத்தில் மறைந்தன என்றும், தொல்காப்பியரின் ஆசிரியராக விளங்கியவர் அகத்தியர் என்றும் அறிஞர் கூறுவர். மருத்துவம், இரச வாதம், சோதிடம், யோகம், ஞானம், நிட்டை முதலிய பல துறைகளைப் பற்றியும் இவர் நூலியற்றியுள்ளார் என்றும் அகத்தியர் பெருமையை விளக்குவர்.[1]

## அகத்தியர் நூல்கள்

அகத்தியர் பெருந்திரட்டு, ஆயுர்வேதம், ஆயிரத்திருநூறு விரிநூல் மூவகைக்காண்டம், வைத்திய காவியம் 1500, வைத்திய வல்லாதி 300, வைத்திய ரத்தினாகரம், அகத்தியர் 21,000, அகத்தியர் 2000, பதார்த்த குண சிந்தாமணி போன்ற பல பெரு நூல்களும் சிறுநூல்களும் தமிழ் மருத்துவத் துறையில் அகத்தியர் நூல்களாகக் கூறப்படுகின்றன. அகத்தியர் பெயரால் வழங்கும் இத்தகைய நூல்கள் யாவும் மற்றையோரால் எழுதப்பட்ட நூல்களே என்றும் கூறுவர்.[2]

இந்நூல்களில் அமைந்துள்ள யாப்பையும் மொழி நடையையும் ஆராய்ந்தால் இதற்கான காரணம் நன்கு புலனாகும். தமிழிலக்கணத்திற்கு முதன்மை ஆசிரியராகக் கூறப்படும் அகத்திய முனிவர் இத்தகைய இலக்கண வரம்பு மீறிய பாடல்களை இயற்றியிருக்க இயலாது என்றே பலரும் கூறுகின்றனர்.

வால்மீகி காலம் முதற் கொண்டு, கம்பன் காலம் வரை அகத்தியர் மரபு இருந்து வந்திருக்கிறது ஆதிசங்கரர் மரபு, தருமை யாதீன மரபு போன்று வளர்ந்து நின்ற சங்கிலித்தொடரில் ஏதோ ஓர் அகத்தியர் மருத்துவம் எழுதியிருக்கலாம் என்றும்

---

1. தி.மு செந்தினாயகம் பிள்ளை - அகத்திய மகா முனிவர் பக்.8
2. டாக்டர். ஆர். தியாகராசன். கலைக்களஞ்சியம். தொகுதி-8

கருதுவர். அகத்தியர் கருத்து செவிவழிப் பேணப்பட்டு பிற்காலம் எழுதப் பெற்றதால் நூலின் நடை பழைமைப் பொலிவைப் பெற வில்லை என்பாரும் உளர்.[1]

அறுநூறும், இருநூறும். மூன்று பத்து ஐந்தும் எழுதியதாக வும் முந்துநூல்களையும் குறிப்பிடுவது இவரது இயல்பு. ஆகவே, அகத்தியரின் பணி அளவில் அடங்காதது என்றும் கூறுவர்.

இத்தகைய அகத்தியர் நூல்கள் பலவும், அகத்திய முனிவரது திருவுருவ வழிபாடு கொண்டு தவமியற்றி அவ்வடிவும் கிருபையும் பெற்றுள்ள சித்தர்களாகிய உப அகத்தியர்களால் உலக நன்மையைக் கருதி இயற்றப் பட்டவை எனக் கொள்வது மிகவும் பொருத்தமாகும்.

கண் மருத்துவத்தைப் பொறுத்தவரை மற்ற ஆசிரியர்களை விட அகத்தியர் பெயரிலேயே மிகுதியான பாடல்கள் கிடைக் கின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## தன்வந்திரி

பண்டிதரில் தன்வந்திரி பகவான் ஆவான் என்று அகத்திய ரால் குறிக்கப் பெற்றவர். கருக்கிடை, சிமிட்டு, இரத்தினச் சுருக்கம், தைலம், குறுநூல், வாகடம், சிந்தாமணி போன்ற பல தலைப்புகளிலும் இவரது நூல்கள் வழங்கப் படுகின்றன.

தன்வந்திரியின் பாடல்களாகக் கிடைப்பவை சில இந்நூலில் உள்ளன.[3]

## திருமூலர்

இவர் நந்தி தேவர் மாணவர் ஆவார். தமிழ் இலக்கியத்தில் தனித்த பெருமித நடையைக் கொண்ட அறிஞர். அகப்புறச் சான்றுகளால் இவருடைய காலம் கி.பி 9 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்படாததாக இருக்க வேண்டும் என்பர். இவர் திருமந்திரம் 3000 எழுதியவரல்லர் என்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

---

1. டாக்டர். தே. ஆண்டியப்பன். இரா. குமாரசாமி சித்த மருத்துவம். பக். 14.
2. தி. மு. செந்தினாயகம் பிள்ளை. அகத்திய மகா முனிவர் பக். 18
3. பா. எண். 57-61, 499, 1306, 1307, 1313-53. 1448-50

திருமூலரின் பாடல்களாகக் கிடைப்பவை சில இந்நூலில் உள்ளன.[1]

## தேரையர்

இவர் தொண்டை நாட்டின் திருமலைச் சேரியில் பிறந்தவர்; வேளாள மரபைச் சேர்ந்தவர். இளம் வயதிலேயே 18 மொழிகளையும் கற்று, வாள், வில் முதலிய பயிற்சிகளிலும் தேர்ச்சி பெற்றவர். தமிழில் சோதிடம், இசை, இலக்கணம், மருத்துவம் போன்ற துறைகளில் ஈடுபாடு கொண்டவர். இவர் 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்று கூறுவர்.[2] சிகாமணிவெண்பா அஷ்டசார நிகண்டு, சேகரப்பா, நீர் நிறக்குறி, நெய்க்குறி, நோய் மருந்தளவை போன்ற பல நூல்கள் இவரது பெயரால் வழங்கப் படுகின்றன.

தேரையின் பாடல்களாகக் கிடைப்பவை சில இந்நூலில் உள்ளன.[3]

## யூகி முனிவர்

தேரையரின் மாணவர் இவர் என இவரது பாடல்களால் அறியலாம். இவரது மருத்துவ நூல்கள் பல நோய்களின் தொகுப்பாகவும் தனித்தனியாகவும் காணப்படுகின்றன. இவர் வடமொழி நூல்களையும், அரிய பல மருத்துவர்களையும் அறிந்தே நூல்களை இயற்றியளிப்பதாகக் கூறுவதை இவரது நூல்களில் காணலாம்.[4]

---

1. பா. எண்: 51, 52, 53, 1516
2. டாக்டர் ஆர். தியாகராசன். கலைக்களஞ்சியம். தொகுதி 8.
3. பா. எண்: 1396-97, 1451-53, 1602, 1605.
4. அகன்றிட்ட வடமொழியைப் பிரித்துப் பார்த்து
 மகத்தான பெரியோரை வணங்கிக் கேட்டுத்
 துகன்றிட்ட சூத்திரத்தின் சூட்சம் பார்த்துத்
 துறையெல்லாம் சோதித்துச் சொல்லு வேனே
 சொல்லுவேன் மாந்தருக்குக் கண்ணோய் கோர்வை
 சுருக்கியே வடநூலைப் பெருக்கிப் பார்த்து
 புல்லுவேன் நயனவிதி தொண்ணூற் றாறும்
 பூட்டுவேன் மாணாக்கர் பிழைக்க வென்று
 அல்லவே வியாதியின் பேதா பேதம்
 அறியவே சாத்திரங்கள் பிரித்துப் பார்த்து
 வல்லவா யுறுவேதம் வணங்கி யானும்
 வகுத்திட்டேன் யூகிசிகிச்சா சார மாமே.
 — யூகிமுனி சிகிச்சா சாரம்—கண்நோய் தொகுப்பு வரலாறு

'விளம்பினார் யூகியென்ற முனிவர் தாமே' 106
'தெளிவாகப் பாடினார் யூகி யாமே' 134
'ஒப்புடனே யூகிமுனி சொன்ன நீதி' 435
'திறமுடனே பாலித்தார் யூகி யாமே' 870

போன்ற தொடர்கள் இந்நூலில் காணப்படுகின்றன.

இவரது பாடல்கள் பலவும் இந்நூலில் அமைந்துள்ளன.[1]

## போகர்

திருமூலருடைய மாணாக்கராகிய காலாங்கி நாதருடைய மாணவர். இவர் சீன நாட்டு பௌத்த மதத்துறவி என்றும், இந்தியாவில் பாடலீபுரம், கயா போன்ற பதிகளைக் கடந்து பின், தென்னாட்டில் சேர, சோழ, பாண்டிய நாடுகளில் வந்து தமிழ்நாட்டில் மருத்துவம் பயின்றவர் என்றும் கூறுவர். தஞ்சை பெரிய கோயில் விமானத்து உச்சிக்கல் ஏற்றவும் சிவலிங்கப் பிரதிட்டைக்கும் இவர் பேருதவி புரிந்ததாகவும் கூறுவர். இவரது மாணவர்கள் புலிப்பாணி, கருவூரார், கொங்கணவர் ஆவர்.

போகர் 7000, ஞான சூத்திரம் 100, நிகண்டு 1200, கருக்கிடை நிகண்டு 500, வைத்தியம் 700 போன்ற நூல்கள் இவரது பெயரில் வழங்கப்படுகின்றன,

இவரது பாடல்கள் சில இந்நூலில் உள்ளன.[2]

## புலிப்பாணி

போகரின் மாணவர் என்று இவர் எழுதிய நூல்களிலிருந்து தெரிகிறது,

''நாடப்பா போகருட கடாசத்தாலே
நலமாகப் புலிப்பாணி பாடினேனே'' 278

என்னும் இந்நூலிலுள்ள பாடலடியும் இதை உணர்த்தும்.

---

1 பா. எண். 106, 134, 246, 247, 255, 315, 317, 343, 344, 463, 431, 499, 500, 514, 657, 672, 680, 713, 721, 730, 739, 742, 746, 755, 756, 764, 766, 758, 779 782, 785, 804 807, 818, 830, 835, 860, 870, 881, 892, 895, 900, 912, 914, 917, 417, 919, 922, 923, 934, 941, 949 967, 970.

2, பா. எண் 278, 345-46, 1266-80, 1423-40, 1599, 1600

இவர் மந்திரம், ஜாலம், மருத்துவம், வாதம், சோதிடம் போன்றவற்றில் வல்லவர். பல நாட்டிற்கும் சென்றவர். சிவகிரியில் குடத்திற் சலம் திரட்டிக் கையிலேந்திப் புலியின் மேலேறிச் சென்று தண்டபாணியைப் பூசித்த காரணத்தால் புலிப்பாணி முனிவர் என்று பெயர் பெற்றார் என்றும் கூறுவர்.

புலிப்பாணி ஜாலம் 200, பலதிரட்டு 300, சோதிடம் 300 கொக்கோகம் 300, வைத்தியம் 500 என்னும் பலநூல்கள் இவர் பெயரால் வழங்கப்படுகின்றன.

இவரது பாடல்கள் சில இந்நூலில் உள்ளன.[1]

## பிரம்மமுனி

இவரது பெயரால் சில மருத்துவ நூல்கள் கிடைக்கின்றன. அவற்றின் துணை கொண்டு நோக்கு மிடத்து இவர் போகருக்குப் பிற்பட்டவர் என்றே அறிய முடிகிறது. இந்நூலில் காணப்படும் போகரின் பாடல்கள் சில பிரம்ம முனியின் பாடலாகவும் கிடைக்கின்றன.[2]

## நாக முனி

நாக முனி 200 என்னும் கண் மருத்துவ நூல் இவரது பெயரால் அமைந்துள்ளது.[3] வேறு செய்திகள் கிடைக்கவில்லை.

நாக முனிவர் கூறியதாகக் குறிப்பிடப்படும் நூலின் அமைப்பை நோக்கு மிடத்து, செய்திகளைத் தொகுத்தளிக்கும் முறையில் வேறுபாடு தெரிகின்றது. எனவே நாக முனிவர் என்பவர் இத்தகைய முறையில் வழங்கியுள்ளார் என எண்ணலாம்

## நாதனார்-நாக முனி

'நாதனார் தெரிந்துரைத்த நயன விதி' (1) என்ற தொடர் கண் மருத்துவம் பற்றிய 10 சுவடிகளிலும் கிடைக்கிறது. நாதனார் என்னும் சொல் 'அகத்திய முனிவரையே' குறிக்கும் எனலாம்.

---

1. பா. எண் 277, 278, 613, 1512-14
2. பா. எண்: 1423-40
3. அகத்தியர் நாக முனிவர் நயன விதி

'நாக முனிவனும் தமிழாற் செய்த'' என்ற தொடர் 2 சுவடிகளில் கிடைக்கின்றது. ஆயினும், இத்தொடர் உள்ள சுவடிகளின் தலைப்பில் 'அகத்தியர் நயன விதி' என்ற பெயர் காணப்படுவது குறிப்பிடத் தக்க தாகும்.

இங்கு, நாதமுனி, நாகமுனி என்பவை 'த' 'க' இவற்றின் எழுத்து மயக்க மாகவும் சுவடிகளில் ஏற்பட வாய்ப்புண்டு என் பதையும் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது.

## மாதவன்

சிறந்த தவத்தினை உடையவர் - அகத்தியர் என்னும் பொருளில் இப்பெயர் வழங்கப் பட்டிருக்கலாம்.
ஆயினும்,

> 'மறுத்திவைத் தீரு மென்று
> மாதவ னுரைத்த வாறே' 503

போன்ற தொடர்களை நோக்கு மிடத்து மாதவன் என்ற பெயரிலேயே ஒருவர் கண் மருத்துவம் பற்றிய செய்திகளை அளித்திருக்ல் வேண்டு மெனவும் அறிய வேண்டியுள்ளது.

மேலும் வடமொழில் உள்ள கண் மருத்துவத் துறையில் 'மாதவா' என்பவர் குறிப்பிடத் தக்கவர் என்பர்.[1]

இவற்றை ஒப்பு நோக்கு மிடத்து, வடமொழி நூல்களையும் ஆய்ந்தே மேற்கண்ட பாடல்கள் பாடப்பட்டுள்ளன எனக் கூறப் படுவதால் இவ் வாசிரியரின் அடி யொற்றியதாகவும் இத்தகைய மருத்துவ முறைகள் பின்னால் வழங்கப் பட்டன என அறியலாம்.

## மறை நூல்

இறைவனால் படைக்கப் பட்ட மறைநூல்கள் யாவும் மக்களின் நலனுக்கானவை என்றும், அவற்றில் காணப்படும் பாடல்கள் யாவும் பொருளடிப்படையில் பிரிக்கப் பட்டவை என்றும் கூறலாம். இத்தகைய மறை நூல்களை ஆய்ந்தும் கண் மருத்துவம் பற்றிய செய்திகள் கூறப் படுவதாக இந்நூலில் சில தொடர்கள் உள்ளன. சான்றாக,

---

1. Dr. P. Kutumbiah - Ancient Indian Medicine P. 171 to 176

'மாதுமை பாகன் சொன்ன மாமறை நூலை யாய்ந்து'
'பகர்ந்தார் பழைய மறை யாய்ந்தே' 169
அண்டரு மறியச் சொன்னார்
அருமறை நூலை யாய்ந்தே 181
'வேதமே யுரைக்குங் கண்டாய்' 1676

போன்ற வற்றைச் சுட்டலாம்.

இத்தகைய மறை நூல்களின் புலமை மிக்கவர் பலரா லும் இந்நூல் வழங்கப் படுகிறது எனவும் சில தொடர்கள் கூறு கின்றன. சான்றாக,

'வகுத்தார் மறைவல் லோரே' 952
'முந்த மறையோர் மொழிந்தபடி' 362

என்னும் தொடர்களைக் கூறலாம்.

## ஆயுர் வேதம்

மேற் கூறிய முறையில் மறை நூல்கள் நான்கே ஆகும். வட மொழியிலுள்ள மருத்துவ முறைகளுக்கு ஆயுள் வேதம் அல்லது ஆயுர் வேதம் என்றே பெயர் வழங்கப் படுகிறது.

ஆயுர்வேதம் என்ற சொல்லிற்கு 'மருத்துவக்கலை' என்றே தமிழகராதிகளில் பொருள் கூறப்படுகிறது.[1]

இம் மருத்துவக் கலையின் சிறப்பைக் கருதி மேற் கூறப்பட்ட நான்கு வேதங்களோடு ஆயுள் வேதம் என்பதையும் சேர்த்து ஐந்து வேதங்களாகவும் கூறுவர்.[2]

ஆயுர் வேதம் கூறும் மருத்துவ முறைகள் எனவும் சில குறிப்பு கள் இந்நூலில் காணப்படுகின்றன.
சான்றாக,

'மொழிவ தாயுருவே தத்தின்
முறைமையை யறிந்து கொள்ளே' 192
'அள்ளிடவே குணமா மென்று
ஆயுர்வேத முரைத்த ததுவே' 417

---

1. கழகத் தமிழகராதி
2. தானான நால்வேதத் தொகுப்பாய் நின்ற
தக்கான வாயுரு வேதத்தோ டைந்தாம்'
—யூகிமுனி சிகிச்சாசாரம் - கண் நோய் தொகுப்பு வரலாறு

'ஆதிமுதல்வ னுரைத் தருளும்
ஆயுருவேதச் செய்கை தன்னை
நீதிமுறையை முனியுரைத்த குணத்தை
நீயு மறிந்து கொள்ளே' 511

போன்ற தொடர்கள் குறிப்பிடத் தக்கன.

## பல நூல்கள்

'வட மொழி நூலை யாய்ந்து '(1) எனவும், 'மாமறை நூலை யாய்ந்து' (1) எனவும் குறிப்பிடுவதுடன் பல்வேறு நூல்களை ஆய்ந்தும் இந்நூல் அவ்வப்போது இயற்றப் பட்டது என்பதற்கும் இந்நூலில் சில சான்றுகள் உள்ளன.

'பல்பல நூலுஞ் சொல்லும்
பான்மையை யறிந்து கொள்ளே' 233
'தேடுகின்ற நூல்க ளெல்லாந் தெளிந்து மேதான்
திறமுடனே யிக்கோர்வை செப்பி னோமே' 892

என்னும் தொடர்களை நோக்கு மிடத்து, பல நூல்களும் ஒப்பிடப் பட்டே இத்தகைய நூல்களைப் பின் வந்தவர் இயற்றி யுள்ளனர் என அறிய முடிகிறது.

## முன்னோர் மொழி பொருள்

முன்னோர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றிக் காக்கும் மரபைத் தொல்காப்பியர் காலந் தொட்டே தமிழ ரிடையே காணலாம். இவ் வகையில் முன்னோர் பலர் தாம் கைக் கொண்ட மருத்துவ முறைகளையே இவண் கூறுவதாகக் குறிப் பிடப் படும் சில தொடர்களும் இந்நூலில் உள்ளன. சான்றாக,

'பகர்ந்தனர் முன்னோர் தானே' 454
'தீருமென் றுரைத்தார் முன்னோர்' 502
'சவையுறு முன்னோர் சொன்ன
சாத்திர மறிந்து கொள்ளே' 51)
'முன்னோர்கள் பகர்ந்தா ரறிவோடுதாம் விதித்தே'2 9
'முன்னோர் கூறும் கிரிகையை யறிந்து கொள்ளே' 23()

இத்தகு முன்னோர்கள் யாவரும் அறிவிற் சிறந்த பெரியோர் கள் என்னும் பொருளிலும் சில தொடர்கள் கிடைக்கின்றன. சான்றாக,

'பெரியோர் தாமுமுரைத் தாரே' 570
'அறிவுள்ளோ ருரைத்த வாறே' 655, 670
'கண்டவ ருரைத்த வாறே' 515
போன்றவற்றைச் சுட்டலாம்.

## தமிழ் வல்லோர்

மேற் கூறப்பட்ட மறை நூல்களிலும் வடமொழி நூல்களிலும் தேர்ச்சி பெற்ற அறிவிற் சிறந்த பெரியோர்கள் யாவரும் தமிழ் வல்லோர் எனவும், அவர்களது வாய் மொழியாகவே இத்தகைய நூல்கள் இயற்றப்பட்டுள்ளன என்னும் முறையிலும் சில தொடர்கள் இந்நூலில் கிடைக்கின்றன.

'பன்னுநற் றமிழால் முன்னோர்
உரைத்ததைப் பரிந்து கேளே' 404
'உரைத்தனர் தமிழ்வல் லோரே' 720-27
போன்ற தொடர்களை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

இன்று கிடைக்கக் கூடிய தமிழ் மருத்துவ நூல்களில் பல மூல நூல்கள் அல்ல. வழி நூல்களே. எனவே, இவற்றின் அகப் புறச் செய்திகளைக் கொண்டே அவ்வவற்றிற்கான ஆசிரியர் இன்னாரென முடிவு செய்ய வேண்டியுள்ளது. ஆயினும், சில சுவடிகளைப் பின்வந்தோர் எழுதியிருப்பினும் அவர்கள் தம் மரபு கருதி 'அகத்தியர்' போன்ற பெரியோர்களின் பெயராலேயே இந்நூல்களை அமைத்துள்ளனர் எனலாம்.

சில சுவடிகளில் உள்ள செய்திகள் ஒன்றாக இருப்பினும் அவை வெவ்வேறு ஆசிரியர்களுடையது எனத் தனித்தனியே கிடைக்கின்றன. சான்றாக, திருமூலர் எழுதியதாக உள்ள சில பாடல்கள் அகத்தியர் வைத்தியம் என்னும் நூலிலும் காணப்படுகின்றன. இதுபோலவே, அனுபவ வைத்தியம் போன்ற சுவடிகளில் உள்ள பாடல்கள் பல ஆசிரியர்களால் இயற்றப்பட்டவை என அறிய முடிகிறது.

கண் மருத்துவத்தில் கூறப்படும் நூலாசிரியர் பற்றிய செய்திகளைத் தொகுத்துக் காணுமிடத்து, பின்வரும் முடிவுகள் தெளிவாகின்றன.

1. இறைவனே இம்மருத்துவக் கலையை முதலில் அறிவித்ததாகக் கூறுவது ஒரு மரபு எனத் தெரிகிறது.

2. சிவபெருமானிடமிருந்து உமையம்மை இக்கலையை அறிந்தபின் அவர் வழியே நந்திதேவர், பதினெண் சித்தர் போன்றோர் அறிந்ததாகவும் கூறப்படுகிறது.

3. இந்நூலில் காணப்படும் பெரும்பாலான பாடல்கள் அகத்தியர் என்பவர் பெயராலேயே வழங்கப்படுகின்றன.

4. தன்வந்திரி, திருமூலர், தேரையர், யூகிமுனி, போகர், புலிப்பாணி, பிரம்மமுனி, நாகமுனி போன்றோர் பெயராலும் சில பாடல்கள் வழங்கப்படுகின்றன.

5. வடமொழி நூல்கள் போன்ற பல மருத்துவ நூல்களின் ஆய்வும் ஒப்பீடும் செய்துணர்ந்த சிறந்த தமிழ் மருத்துவர் களாலேயே இவை வழங்கப் படுகின்றன எனலாம்.

6. மருத்துவ நூலறிவு, முன்னோர் மொழி பொருள் அனுபவத்தில் பெற்ற சில உண்மைகள் போன்றவற்றையே முதன்மையாகக் கொண்டு இந்நூலாசிரியர்கள் தம் நூல் களை அமைத்துள்ளமை குறிப்பிடத்தக்க தாகும்.

## ஒப்பீடு

## ஆயுர்வேதம்—தமிழ் மருத்துவம்

இந்திய மருத்துவத்தில் ஆயுர்வேதம் மிகவும் பரவிய நிலை யிலுள்ளது. கண்மருத்துவம் போன்ற தனித்துறைகளும் இதில் தோன்றி வளர்ந்துள்ளன. சுசுருதா மற்றும் வக்பாதா போன்றவர் கள் கண்மருத்துவம் பற்றி விரிவாகக் கூறுகின்றனர். இவர்கள் கூறும் கண்நோய்கள் 94 ஆகும். சுசுருத சம்ஹிதையில் கண் நோய்கள் 76 எனவும் கூறப்படுகின்றன.

## ஆயுர்வேத முறைப்படி கண்நோய்களின் வகையும் பெயரும்

| | | | |
|---|---|---|---|
| 1. | இமையில் ஏற்படும் நோய்கள் | — | 24 |
| 2. | சந்திகளில் ,, ,, | — | 9 |
| 3. | வெள்ளை விழியில் ,, ,, | — | 13 |
| 4. | கருவிழியில் ,, ,, | — | 5 |
| 5. | பார்வை மண்டலத்தில் ,, | — | 27 |
| 6. | நேத்ர கோளத்தில் ,, ,, | — | 16 |
| | ஆக நோய்கள் மொத்தம் | | 94 |

1. சரபேந்திரர் வைத்திய முறைகள். நயன ரோக சிகிச்சை பக். 38-57

## 1. இமையில் தோன்றும் நோய்கள்

1. க்ருச்சிரோன்மீலம் (சிரமப்பட்டு விழித்தல்)
2, நிமேஷா (அடிக்கடி கண் சிமிட்டல்)
3. வாதஹதம் (வாயுவினால் கெடுதியடைதல்)
4. கும்பீகா (பித்தத்தினால் பின்னைக் கொட்டை போன்ற கட்டி உண்டாதல்)
5. பித்தோத்க்லிஷ்டம் (பித்தத்தினால் பாகமடைதல்)
6. பக்ஷ்ம சாதம் (இமை மயிர் உதிருதல்)
7. போதகீ (கபத்தினால் ஏற்படும் கடுகளவு கட்டி)
8. கபோத்க்லிஷ்டம் (கபத்தினால் தூஷிக்கப்படுதல்)
9. லகணன் (கபத்தினால் ஏற்படும் கட்டி)
10. உத்ஸங்கா (ரத்தம் தூஷிப்பதால் ஏற்படும் கட்டி)
11. ரக்தோத்க்லிஷ்டம் (ரத்தத்தினால் தூஷிக்கப்படுதல்)
12. ரக்தார்சஸ் (ரத்தித்தினால் சதை வளர்ச்சி)
13. அஞ்ஜனா (ரத்தித்தினால் ஏற்படும் கட்டி)
14. பிஸவர்த்ம (சிறு சிறு துவாரங்கள் உண்டாதல்)
15. உத்க்லிஷ்டவர்த்ம (தூஷிக்கப்பட்ட இரெப்பை)
16. ச்யாவவர்த்ம (கருமையான இரெப்பை)
17. ச்லிஷ்டவர்த்ம (தோஷங்களினால் ஒன்று சேர்ந்த இமை)
18. ஸிகதா வர்த்ம (மணல் போன்ற கட்டியுடன் கூடிய இமை)
19. கர்தமம் (சேறு போன்று கருநிறமடைதல்)
20 பஹலவர்த்ம (அதி மாமிச வளர்ச்சி)
21. குகூணகம் (தாய்ப்பாலின் கெடுதலால் குழந்தைகளின் கண் வீங்குதல்)
22. பக்ஷ்மோ பரோதம் (இரெப்பைகள் சுருங்குதல்)
23. அலஜி (அடிக்கடி கட்டி உண்டாதல்)
24. அர்புதம் (பெரிய கட்டி)

## 2. சந்திகளில் தோன்றும் நோய்கள்

1. ஜலாஸ்ராவம் (கண்ணீர் வடிதல்)
2. கபஸ்ராவம் (பீளை சாரல்)
3. உபநாகம் (நீர்க்குமிழி போன்றது)
4 ரத்த ஸ்ராவம் (ரத்தம் வடிதல்)
5 பர்வணி (கட்டி)
6. பூயாஸ்ராவம் (சீழ் வடிதல்)

7. பூயாலஸம் (சீழ்அடிக்கடி வடிவதனால் ரணம் உண்டாதல்
8. அலஜி (கட்டி)
9. க்ருமி கிரத்தி (கிருமிகளினால் ஏற்படும் கட்டி)

### 3. வெள்ளை விழியில் தோன்றும் நோய்கள்

1. சுக்லிகா (வெள்ளை விழியில் புள்ளிகளுண்டாதல்)
2. சுக்லார்மம் (வெண்மையான சதை வளர்ச்சி)
3. பலாசக்ரதிதம் (கபத்தினால் சவ்வு ஏற்படுதல்)
4. பிஷ்டகம் (மாவைப் போன்ற வெண்மையான வளர்ச்சி)
5. ஸிரோத்பாதம் (இரத்தக் குழாய்கள் பெருத்தல்)
6. ஸிராஹர்ஷம் (கண்களிள்ள சிரைகளின் கூச்சம்)
7. ஸிராஜாலம் (சிரைகளின் வலை போன்ற தன்மை)
8. சோணிதார்மம் (செந்தாமரையை யொத்த சதை வளர்ச்சி
9. அர்ஜீனம் (முயல்ரத்தம் போன்ற புள்ளிகள்)
10. ப்ரஸ்தார்யர்மம் (பரவலான சதை வளர்ச்சி)
11. ஸ்நாவார்மம் (ஸ்நாயுவைப் (Tendons) போன்ற கடினமான சதை வளர்ச்சி)
12. அதிமாம்ஸார்மம் (மாமிச வளர்ச்சி)
13. ஸிராபிடகா (சிரையினால் சூழப்பட்ட கொப்புளங்கள்)

### 4. கருவிழியில் தோன்றும் நோய்கள்

1. க்ஷதசுக்ரன் (கருவிழி கனிந்த நாவல் பழம் போலாகிக் குழியாகும்)
2. சுத்த சுக்ரகம் (வெண்மை நிறமுள்ள பூ)
3. அஜகா (ஆட்டுப் புழுக்கை போன்ற கட்டி)
4. ஸிராசுக்ரம் (கருவிழியிலுள்ள சிரையினாலானபூ)
5. பாகாத்யயம் (கருவிழியின் நிறவேறு பாடு)

---

### சந்திகள் 6 வகைகளாவன

1. இமை மயிர்களும் இரெப்பையும் சேருமிடம் —பக்ஷ்ம, வர்த்ம சந்தி
2. வெள்ளை விழியும் ,, ,, —வர்த்ம, சுக்ல சந்தி
3. கருவிழியும் வெள்விழியும் சேருமிடம் —சுக்ல, கிருஷ்ண சந்தி
4 வெள்விழியும் பாபாவும் ,, —கிருஷ்ண, திருஷ்டி சந்தி
5. மூக்கிற்கு சமீபமான சந்தி —கன்னீனகம்
6. பொட்டுக்கு சமீபமான சந்தி —அபாங்கம்.

### 5. பார்வை மண்டலத்தில் தோன்றும் நோய்கள்

முதல் படலக் கோளாறு,
இரண்டாம் படலக் கோளாறு (திமிரம்),
மூன்றாம் படலக் கோளாறு (காசம்),
நான்காம் படலக் கோளாறு (லிங்க நாசம்),
வாததிமிரம்,
பித்த திமிரம்,
கபதிமிரம்,
இரத்த திமிரம்,
ஸம்ஸர்க்க ஸந்நிபாத திமிராதிகள்,
நகுலாந்த்யம்,
தோஷாந்த்யம்,
உஷ்ண விதக்தம்,
அம்லவிதக்த திருஷ்டி,
தூமர த்ருஷ்டி,
ஔபஸர்கிகலிங்க நாசம் போன்ற நோய்கள் 27

### 6. கண் கோளத்தில் தோன்றும் நோய்கள்

அபிஷ்யந்தம்,
பித்தாபிஷ்யந்தம்
கபாபிஷ்யந்தம்,
ரக்தாபிஷ்யந்தம்,
சுஷ்காக்ஷபாகம்,
ஸசோபம்,
அக்ஷிபாகாத்யயம்,
அம்லோஷிதம், போன்ற நோய்கள் 16 ஆகும்

## சுசுருத சம்ஹிதையில் கூறப்படும் கண்நோய்கள் - 76

1. சந்திகளில்

| | |
|---|---|
| 1 பூயாலஸம் | 6 பூயஸ்ராவம் |
| 2 உபநாகம் | 7 பர்வணி |
| 3 ஜலஸ்ராவம் | 8 அலஜி |
| 4 கபஸ்ராவம் | 9 க்ருமிக்ரந்தி |
| 5 இரக்தஸ்ராவம் | |

**2.** வெள்ளைவிழியில்

1 ப்ரஸ்தார்யார்மம்
2 சுக்லார்மம்
3 க்ஷதஜார்மம்
4 அதிமாம்ஸார்மம்
5 ஸ்நாவர்மம்
6 சுக்லிமா
7 அர்ஜீனா
8 பிஷ்டகம்
9 ஸிராஜாலம்
10 ஸிராபிடகா
11 பலாஸக்ரதிதம்

**3.** இரெப்பையில்

1 உத்ஸங்கி
2 கும்பிகா
3 போதகி
4 வர்த்ம சர்க்கரா
5 வர்த்மார்சஸ்
6 சுஷ்கார்சஸ்
7 அஞ்சன நாமிகா
8 பஹல வர்த்தம்
9 க்லிஷ்ட்ட வர்த்மம்
10 கர்தமம்
11 ச்யாவ வர்த்மம்
12 வாத ஹதம்
13 சோணி தார்சஸ்
14 லகணன்
15 பிஸவர்த்ம
16 பக்ஷ்ம சோபம்
17 வர்த்மாவபந்தகம்
18 ப்ரக்லின்ன வர்த்மம்
19 அபரிக்லின்ன வர்த்மம்
20 அர்புதம்
21 நிமேஷா

**4.** கருவிழியில்

1 வ்ரண சுக்ரம்
2 சுத்த (வ்ரண) சுக்ரம்
3 பாகாத்யயம்
4 அஜகா

திருஷ்டி மண்டலத்தில்

திமிரம்
காசம்
லிங்கநாசம் } இவை 4 படலங்களிலும் ஏற்படக் கூடியன.
இவை 6

பித்த விதக்த த்ருஷ்டி
கபவிதக்த த்ருஷ்டி
தூமதர்சி
ஹ்ரஸ்வஜாட்யம்
நகுலாந்த்யம்
கம்பீரா

நேத்திர கோளத்தில்

1 வாதபிஷ்யந்தம்
2 பித்தாபிஷ்யந்தம்
3 கபாபிஷ்யந்தம்
4 ரக்தாபிஷ்யந்தம்
5 வாதாதிமந்தம்
6 பித்தாதி மந்தம்
7 கபாதி மந்தம்
8 ரக்தாதி மந்தம்
9 ஸசோபம்
10 அசோபம்
11 ஹதாதி மந்தம்
12 வாதபர்யயம்
13 சுஷ்காக்ஷிபாகம்
14 அம்லாத்யுஷிதம்
15 அன்யதோவாதம்
16 ஸிரோத்பாதம்
17 ஸிராஹர்தம்

வெளிக் காரணங்களால் ஏற்படும் நோய்கள்

1. நிமித்தம்
   1. சிரோ ரோகத்தினால்
   2. விஷம், புஷ்பம், வாயு இவைகளால் கண்களில் ஏற்படும் நோய்கள்

2. அநிமித்தம்

   தேவர். ரிஷி, பாம்பு, கந்தர்வர் இவைகளின் பார்வை, எரியும் நெருப்பு இவைகளினால் ஏற்படும் நோய்கள்.

கண் நோய்களின் எண்ணிக்கையைக் கூறுவதில் ஆயுர்வேத நூல்கள் தமக்குள் வேறுபடுவதை ஆய்வாளரும் குறிப்பிடு கின்றனர்[1]

தமிழ் மருத்துவத்தில் கண்நோய்களின் எண்ணிக்கை 96 என்பதையே எல்லா நூல்களும் கூறுகின்றன. இவற்றுள், கருவிழி, வெள்ளைவிழி, இமை, குவளை என நான்கு பகுதிகளில் தோன்றும் எல்லா நோய்களும் அடங்கும், இந்நான்கு பகுதி களையே ஆயுர் வேதத்தில் ஆறாகவும் ஏழாகவும் விரித்துக் கூறப் படுகின்றன.

---

1. "Different editions of charaka give 96 and 76 as the number of eye-diseases. Vagbhata I describes 94 and Madhava 76. But none of them stick to this number, often adding one or two to the list"
—Dr. P. Kutumbiah. M. D. F. R. C. P.
Ancient Indian Medicine—Ophthalmology P. 171to176

பெரும்பான்மையான மருந்துகள், மருந்திடும் முறைகள் போன்றவை இரு மருத்துவத்திலும் ஒத்துள்ளன. கண் நோய்களின் பெயர்களைக் கூறுவதிலேயே ஆயுர்வேதம் வேறுபடுகிறது[1] என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## ஆங்கில மருத்துவம் - தமிழ் மருத்துவம்

ஆங்கில மருத்துவத்தில் 'கண்மருத்துவம்' (ophthalmology) மிகவும் வளர்ச்சி பெற்றுள்ளது. 1851 இல் ஹெல்ம்ஹோல்ட்ஸ் (Helmholtz) என்பவர் கண்டுபிடித்த கண்காட்டி (ophthalmoscope) போன்ற கருவிகளைக் கொண்டு கண்ணில் உண்டாகும் நோய்கள் பலவற்றை இத்துறையினர் ஆராய்ந்து அறிகின்றனர். மேலும், கருவிழிப்படல மைக்ராஸ்கோப், கண்ணீர் அழுத்த மானி (tonometer) போன்ற பல்வேறு நவீன கருவிகளும் இத்துறையில் பயன் படுத்தப்படுகின்றன.

ஆங்கில மருத்துவத்தில் விளக்கப்படும் கண் நோய்கள் பல தமிழ் மருத்துவத்தில் கூறப்படுவனவற்றுடன் ஒப்பிடத்தக்கன.[2]

இமைநோய்கள் : கண்ணிமை விளிம்பில் உண்டாகும் அழற்சி பில்லம் (Blepharitis) எனப்படுகிறது. கண்ணிமை விளிம்பிலுள்ள எண்ணெய்ச் சுரப்பிகளில் சீழ் வைக்கும் அழற்சி (Stye or Hordeolum externum) கண்கட்டி எனப்படுகிறது. கண்ணிமையில் குறுத்தெலும்பில் காணப்படும் சுரப்பிகளில் உண்டாகும் நாட்பட்ட அழற்சி (Chalazion) போன்றவையும் குறிப்பிடத் தக்கன.

இமையிணைப் படல நோய்கள் (Diseases of the Conjunctiva) இமைகளின் உட்புறத்தையும் வெள்விழியையும் போர்த்துள்ள கோழைப் படலத்திலுண்டாகும் அழற்சி (Conjunctivitis) பல வகைப்படும். தீவிரச் சளி அழற்சி (Acute Catarrhal Conjunctivitis) என்பது வெட்டை (Gonorrhea) நோயுள்ளவர்களுக்கே

---

1. Dr. V. Narayanaswami, Introduction to the Siddha system of Medicine P.49
2. கலைக்களஞ்சியம்—தொகுதி—3 பக். 97—104
   Diseases of the Eye by Henry Kirkpatrick.

வருவதாகக் கூறப்படுகிறது. இத்தகைய அழற்சி, தொண்டையடைப்பான் (டிப்தீரியா) நோயுடன் சேர்ந்திருந்தால் நோயுற்றவரின் கண்ணுக்கும் உயிருக்கும் மிகவும் கேடு ஏற்படும் என்பர்.

அழற்சி நோய்களில் மிகுதியாகப் பரவியுள்ளது 'கண்ணமரம்' என்னும் ஒட்டு நோயாகும். இது பொதுவாகக் கணைநோய் தாக்குவதால் உண்டாவதாகும். இதனால், இமை மயிர்களும் (Trichiasis-), இமை விளிம்பும்(Entropion) கண்ணுக்குள்மடிவதும் வடுப்படுவதும் உண்டாகும்,

இளவேனிற் சளி, கருவிழிப் படத்தில் இமையிணையடிப் படலத்தின் மடிப்புப் போன்றதசை வளர்ச்சி(pterygium),சோகைக் கண் (Keratomalacia) போன்ற நோய்கள் குறிப்பிடத்தக்கன. இந் நோய்கள் பெரும்பாலும் குழந்தைகளுக்கும் இளைஞர்களுக்குமே உண்டாவதாகக் கூறப்படுகின்றன.

கருவிழிப் படல நோய்கள்:- கருவிழிப் படலத்தின் ஆழத்திலுள்ள அடுக்குகளில் உண்டாகும் அழற்சி (Interstitical Keratitis) கருவிழிப் படலப் புண்கள் (Hypopyon Ulcer) போன்ற நோய்கள் மிகக் கடுமையானவை.

கர்க் பாட்ரிக் (Kirkpatrick), ஹெர்ப்பீஸ் சிம்பிளெக்ஸ் (Herpes Simplex or Febriles) ஹெர்ப்பீஸ் ஜாஸ்ட்டெர் ஆப்தால் மிக்கஸ் (Herpes zoster Ophthalmicus) போன்ற நோய்கள் 'வைரஸ்' போன்ற நுண்ணுயிரிகளால் தோன்றுவதாகக் கூறப்படுகின்றன.

சென்னைக் கண் (Madras eye) (Superficial punctate Keratitis) என்னும் நோயினால் கண்ணில் எரிச்சலும், கருவிழிப் படலத்தில் புள்ளிகளும் உண்டாகின்றன. இது சில நாட்களில் மறையக் கூடியது. நரம்புப் பக்கவாத கருவிழிப் படல அழற்சி (Neuroparalytic Keratitis), விழித்திரை நோய்கள் (Iritis) போன்றவை கிரந்தி, குட்டம், சயம், வெட்டை, நீரிழிவு, பார்வைப் படலத்தில் கட்டி போன்ற நோய்களால் உண்டாவதாகக் கூறப்படுகின்றன.

கண்ணீர் அழுத்த நோய் (Glaucoma): கண்ணிலுள்ள பாய்மரங்கள் (Fluids) சுரப்பது குறையவோ கூடவோ செய்து, அழுத்தம் மிகும் போது தோன்றும் நோயைக் 'கிளாக்கோமா'

என்பர். இது பொதுவாக முதுமையிலேயே வரும். கண்பார்வை குறைந்து கொண்டே வந்து இறுதியில் கண் குருடாகி விடும். மிகவும் கடுமையானது. இதுவே, தொடக்க கிளாக்கோமா (primary glaucoma), இரண்டாம் படி கிளாக்கோமா (Secondary glaucoma) என இரண்டாகக் கூறப்படும்.

தொடக்க கிளாக்கோமா:- இது இரத்தம் நிறை (Congestive) கிளாக்கோமா என்றும், இரத்தம் நிறையாத (Simple) கிளாக் கோமா என்றும் இரண்டு வகைப்படும்.

இரத்தம் நிறை கிளாக்கோமாவினால், நோயாளி விளக்குச் சுடரைப் பார்க்கும் போது அவற்றைச் சூழ்ந்து வானவில் போல் நிறங்கள் தோன்றும். கடுமையான தலைவலி, கண்ணில் நோவு, வாந்தி, பார்வைமங்கல் போன்றவை ஏற்படும். இந்நோய் முற்றினால் கண் குருடாகும் எனப்படுகிறது.

இரத்தம் நிறையாத கிளாக்கோமாவினால் அதிக துன்பம் உண்டாவதில்லை. இது நோயாளி அறியாமலே முதிர்நிலை அடையும் என்பர்.

இந் நோய்களை நீக்க, கண் பாவையைச் (Pupil) சுருங்கச் செய்து அழுத்தத்தைக் குறைத்தல், விழித் திரையில் ஒரு பகுதியை நீக்குதல் (Iridectomy) போன்ற மருத்துவ முறைகள் மேற் கொள்ளப்படுகின்றன.

இரண்டாம் படி கிளாக்கோமா:- இது கண்படலம், கட்டிகள், இரத்தம் கட்டுதல் போன்ற கண்ணோய்களால் உண்டாவது. இவற்றுள் 1. பார்வைப் படல ஒட்டுக்கட்டி (Glioma) 2. கருங் கட்டி (Melanoma) என்னும் இரண்டு கட்டிகளும் மிகவும் கடுமை யானவை. முன்னது குழந்தைப் பருவத்தில் உண்டாவது. வழி வழியாக வருவது. குழந்தையின் கண் பூனைக் கண் போல் மஞ்சள் நிறமாயிருக்கும். பின்னது நடுத்தர வயதினரிடம் காணப்படுவது.

இதுபோன்ற கட்டிகள் உள்ள குழந்தைகள் கொண்ட குடும்பத் தில் திருமண உறவுகள் கூடாது என்றும் கூறுகின்றனர்.

இந் நோய்களை நீக்கத் தொடக்கத்தில் கதிர் பாய்ச்சுதல் (Irradiation), பின்னரானால் கண்ணை நீக்கி விடுதல், மிகப்

பின்னரானால் கண் பொருள் (Contents of the orbit) அனைத்தையும் நீக்கி விடுதல் போன்ற மருத்துவ முறைகள் மேற்கொள்ளப் படுகின்றன.

கண் படலம் (Cataract): இதுவே கண் புரை, கண் காசம் எனவும் கூறப்படுகிறது. இந்நோய் முதுமை, போதிய சத்துணவு இல்லாமை, சூரிய வெளிச்சம் அதிகமாக உள்ள இடங்களில் வாழ்தல், சர்க்கரை நோய் (Diabetes), பால்வினை நோய் (Syphilis), கண்நோய், கண்ணில் காயம் படுதல் போன்ற பல்வேறு காரணங்களால் தோன்றுவதாகக் கூறப் படுகிறது. கருவுற்ற தாய்க்கு நச்சு நோய் ஏதேனும் ஏற்பட்டிருந்தால் அதன் விளைவாகக் கருவிலுள்ள குழந்தைக்கும் இந் நோய் உண்டாகும் (Congenital Cataract) என்பர்.

இந் நோயுள்ளவர்களுக்குக் கண் பார்வை குறைந்து கொண்டே வரும். விளக்கு வெளிச்சத்தை அல்லது நிலவின் ஒளியைப் பார்க்கும் பொழுது பொருளைச் சுற்றிப் பல நிற ஒளி வட்டங்கள் தோன்றும். வலி, தலைவலி, கண் சிவத்தல் போன்ற பொதுவான சிக்கல்கள் இந் நோயினால் மிகுதியாக உண்டாவதில்லை.

இந்நோய் முற்றிய பிறகு அறுவை மருத்துவம் செய்வதைத் தவிர வேறு முறைகள் எதுவும் ஆங்கில மருத்துவத்தில் கூறப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

விழியடிக் கரும் படல அழற்சி (Choroiditis): கிரந்தி, சயம், குட்டம், காயம், தொற்று நோய்களால் உண்டாவது. இதனால் மாலைக்கண் (Night Blindness) தோன்றலாம். இதனுடன் கண் படலம் போன்ற வேறு நோய்களும் சேர்ந்து சிக்கலாகும்.

பார்வைப் படல அழற்சி (Retinitis Pigmentosa): இது வழி வழி வரும் நோயாகும். குழந்தைப் பருவத்திலேயே மாலைக்கண் தோன்றும். மிகவும் கடுமையானது என்பர்.

பார்வைப் படல இரத்தப் பெருக்கு (Retinal haemorrhage): காயம், கக்குவான், முறுக்குதல், நீண்ட நேரப் பிரசவ வேதனை, பார்வைப் படலச் சிறைகளில் இரத்தம் கட்டிப் படுதல் (Thrombosis), பார்வை நரம்பின் தலைப்பு வீங்குதல், பார்வைப் படல அழற்சி, பார்வைப் படலத் தமனி நோய், மிகு இரத்த அழுத்தம், சிறு நீரக நோய், இரத்த நோய், கட்டிகள் உண்டாதல் இவற்றால் உண்டாகும். மிகவும் கடுமையானது.

பார்வைப் படல மையத் தமனி அடைப்பு (occlusion of central retinal artery):- இதனால் ஒரு கண்ணில் பார்வை திடீரென மறைந்து விடும்.

நடுப் பார்வைச் சிரையில் இரத்தம் கட்டி விடுதல் (Thrombosis of the central retinal Vein)- தமனிகள் கட்டிப்படுதல் (Arterio Sclerosis) அல்லது கண்குழி உயிரணு அழற்சி (orbital cellulitis) அல்லது நஞ்சாதல் என்பது டைபாயிடு சுரம் காணும் போது உண்டாவதாலும் இந் நோய் உண்டாகலாம்.

அல்புமன் பார்வைப் படல அழற்சி (Albuminuric retinitis):- சிறுநீரகஅழற்சி (Nephritis)என்னும் நிலையில் இந்நோய் கண்டால் நோயாளி 18 திங்கட்கு மேல் உயிருடன் இருப்பது அரிது என்பர்.

இதே போல, கருப்ப கால நஞ்சு நிலை ஏற்படும் போது உண்டாகும் பார்வைப் படல இரத்தப் பெருக்கு (Retinopathy of taxaemia of Pregnancy) போன்ற நோய்களும் குறிப்பிடத்தக்கன

நீரிழிவு பார்வைப் படல நோய் (Diabetic r.):- இது நீண்ட நாள் நீரிழிவு நோயுள்ளவர்களிடம் காணப் படுவது.

பார்வைப் படலம் பிரிதல் நோய் (Detachment of retina or retinal Separation):- இது மிகவும் கடுமையானது, எளிதில் கண் குருடாகக் கூடும்.

குமிழ் ஊனீர்ச் சுரப்பு (Papilloedema or choked disc): இது பெரும்பாலும் மண்டை யோட்டுக்குள் அழற்சியோ அலலது இரத்தப் பெருக்கோ அல்லது மூளைக் கட்டியோ உண்டாவதால் மண்டையிலுள்ள அழுத்தம் மிகுவதாலேயே உண்டாவது.

கண்ணில் அழுத்தம் குறைதல், கண் குவளை அழற்சி, கட்டி மூக்குப் புரை நோய் (Nasal Sinus disease) சோகை, இரத்த அழுத்தம், நரம்பழற்சி போன்ற உடல்நலக் குறை தரும் நோய்களாலும் உண்டாகும் என்பர்.

பார்வை நரம்பழற்சி: (optic neuritis) இது கிரந்தி, சயம், நீரிழிவு போன்ற நோய்களின் காரணமாகத் தோன்றும்.

தொற்றுப்பார்வைக் குறைவு(Toxic amblyopia) -புகையிலைப் பார்வைக் குறைவு (Tobacco a), கொயினா பார்வைக் குறைவு (Quinine a) என இது இரு வகைப்படும்.

ஒளிக்கோட்டம்: (Refraction) ஒரு பொருளின் மீது பட்டுக் குவிந்து வரும் ஒளிக் கதிர்கள் விழித்திரையின் மீது சரியானபடி பதிந்தால் அது சரியான பார்வை (normal sight) எனப்படும். ஒளித்திரைக்குப் பின்னால் விழுதல் தூரப்பார்வை (Hyperopia or long sight) என்றும், ஒளித்திரைக்கு முன்னால் விழுதல் கிட்டப் பார்வை (Myopia or short sight) என்றும் கூறுவர். இதற்கேற்ற கண்ணாடி அணிய வேண்டும் என்பர்.

உருட்சிப்பிழை அல்லது ஒளி முனைப் படாமை: (Astig - matism) கருவிழியின் வளைவு அமைப்பில் (corneal curvature) மாறுபாடு காரணமாகக் கருவிழியில் ஒளிக்கதிர்கள் ஒரே புள்ளியில் விழாது போகும். இதற்கேற்ற கண்ணாடி (cylindrical lens) அணிய வேண்டும் என்பர். இந் நோயால் தலைவலி தொடர்ந்து இருக்கும்.

அபாக்கியா: (Aphakia) கண்ணில் படிகவில்லை (lens) இல்லாதிருப்பது கண்படல நோய்க்குரிய அறுவைசெய்த பின் ஏற் படுவது. இதனால் தூரப் பார்வை என்னும் குறை மிகும்.

வெள்ளெழுத்து: (Presbyopia) கண் ஓயாமல் வேலை செய் வதால் 40 வயதிற்கு மேல் கண் பார்வையில் சில குறைபாடுகள் காணப்படும். பொதுவாக, எல்லோருக்கும் தூரப்பார்வை சரியாக இருந்து கிட்டப் பார்வை கடினமாக இருக்கும். இதையே வெள்ளெழுத்து என்பர்.

ஆங்கில மருத்துவத்தில் கூறப்படும் மேற்கண்ட கண்நோய்கள் பல தமிழ் மருத்துவத்தில் கூறப்படும் நோய்களுடன் ஒத்துள்ளன. கண்ணின் பகுதிகளான இமை, கருவிழி, வெள்ளைவிழி, குவளை போன்றவற்றில் தோன்றும் பில்லம், காசம், படலம், நீரேற்றம் போன்ற நோய்கள் குறிப்பிடத்தக்கன. இவை தோன்றுவதற்கான அறிகுறிகள், நோயின் தன்மைகள், தலைவலி போன்ற கிளை நோய்கள் உண்டாதல் போன்ற செய்திகள் யாவும் இரு மருத்து வத்திலும் ஒத்த நிலையில் கூறக்காணலாம்.

## உடல் நோய்களும் கண்ணும்

பல், காது, மூக்கு, தொண்டை, முகம் போன்ற இடங்களில் தோன்றும் நோய்களாலும், உடல் முழுதும் ஏற்படும் வேறு நோய் களாலும் கண்நோய்கள் உண்டாகும் என்பது இரு மருத்துவத்தி

லும் கூறப்படுகிறது. இக்காரணம் பற்றியே மருத்துவர்கள் நோயாளிகளின் கண்ணை மிகவும் குறிப்பாக ஆராய்கின்றனர்.

மருத்துவர் நோயாளியைச் சோதிக்கும் போது அவரது உள்ளத் தெளிவு, அறிவாற்றல், நினைவாற்றல், உணர்ச்சிப் போக்கு, பேச்சுத்திறன் போன்றவற்றை முதலில் தெளிந்தறிந்த பின், தலைப்புற நரம்புகளின் பணியைச் சோதிப்பர். மோப்ப வுணர்வு, கண்பார்வை, கண்ணினுள்ளமைப்பு, கண்ணசைவுகள் முதலியவற்றை முறையே ஆராய்வர். கண் ஆய்வுக் கருவி (ophthalmoscope) கொண்டு ஆராய்வது இன்றியமையாதது என்பர். நம் நாட்டின் தலை சிறந்த நரம்பியல் வல்லுநர்களிற் சிலர் தம் கடிதத் தாளிலேயே "கண் ஆய்வுக் கருவிகளை எப்போதும் பயன்படுத்தி நோயாளிகளின் கண் பார்வையையும், உயிரையும் காத்திடுவீர்" (use your ophthalmoscope and save people's eyes and lives) என்று அச்சிட்டு இம் முறையின் அவசியத்தைப் பிற மருத்துவர்களுக்கு அடிக்கடி அறிவுறுத்த முயல்வதற்கு இதுவேகாரணம் என்பர்.[1]

உடலின் மற்ற பகுதிகளில் தோன்றும் நோய்களை நீக்கினால் கண்நோய்கள் மறையும் என்பதை ஆங்கில மருத்துவர்கள் கண்டறிந்து வருகின்றனர். ஹெரால்டு பெம்பாட் என்னும் ஆங்கில கண் மருத்துவர் இதையே வலியுறுத்துகின்றார். "என்னிடம் வரும் நோயாளிகளுள் இருபது சதவிகிதத்தினருக்கு உண்மையில் எந்தச் சிகிச்சையுமே தேவையில்லை. ஆனால், இவர்களுக்குத் தேவைப் படுவதெல்லாம் கண்களை எப்படிப் பராமரிப்பது என்கிற ஆலோசனையும், உடலின் மற்ற பகுதிகளிலுள்ள நோய்களுக்குச் சிகிச்சையும் தான்" என இவர் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.[2]

## மருந்தறிந்த விதம்

கண்ணழகுக்காகவும், குளிர்ச்சிக்காகவும் பயன்படுத்தப்படும் பொருள்களே சிறந்த கண் மருந்துகளாகவும் அமைந்துள்ளன. தமிழ் மருத்துவத்தில் இதைச் சிறப்பாக அறிய முடிகிறது. இத் தகைய மருந்துகளே உடலின் மற்ற நோய்களையும் நீக்க வல்லன என்பதைப் பின்வரும் மருத்துவ வரலாறு விளக்குகிறது.

---

1. டாக்டர் கா. லோகமுத்துக் கிருட்டிணன், நரம்பு மருத்துவம். பக்.41-42
2. கண்ணாடியின்றிச் சிறந்த கண் பார்வை பெறுங்கள். பக். 16

"பழங்காலத்தில் ஐரோப்பிய நாடுகளில் கண்ணில் பாவை (pupil) விரிவாயுள்ளமை பெண்களின் அழகுக்கு ஓர் இலக்கண மாகக் கருதப்பட்டது. எனவே, இயல்பாகவே கண் பாவை விரி வில்லாத பெண்கள் செயற்கை முறையில் இந்நிலையை உண்டு பண்ண முயன்றனர். இதன் பொருட்டுச் சிலர் ஒரு விதையின் எண்ணெயை உட்கொள்ளவும், கண்ணில் தடவவும் ஆரம்பித் தனர். பெண்ணழகைக் கூட்டும் இம்மருந்தைப் பெண்ணழகு மருந்து என்னும் பொருள்பட பெல்லடோனா (belladonna அழகிய பெண்) என்றே அழைத்தனர். உடல் நடுக்க நோயுற்ற ஒருபெண் தன் கண்ணழைக் கூட்டும் பொருட்டு இம்மருந்தை உட் கொண்டபோது அவளது உடல் நடுக்க நோயும் குறைந்தது. இதனைக் கூர்ந்து கவனித்த மருத்துவ அறிஞர் ஒருவர் மருத்துவ உலகுக்கு இவ்வுண்மையை அறிவித்தமையால் இம்மருந்து உடல் நடுக்க நோய் தீர்க்கப் பயன்படலாயிற்று[1]" என்பர்.

இவ்வாறு இயற்கையில் காணும் மருந்துப் பொருள்களைப் பயன்படுத்தும் தமிழ் மருத்துவமுறைகள் பல ஆங்கில மருத்துவத் திலும் கலந்திருக்கக் காணலாம்.

## பரம்பரை நோய்கள்

கண் புற்று நோய் (retino blastoma), கிரந்தி (syphillis) கிட்டப்பார்வை (myopia), மாலைக்கண் (night blindness) போன்ற நோய்கள் குழந்தைகட்குப் பெற்றோர்கள் மூலம் வரு கின்றன என்றும், கருவிலேயே இவை தோன்றி வளருகின்றன என்றும் இவ்விரு மருத்துவத்திலும் கூறப்படுவது குறிப்பிடத்தக்க தாகும்.

## சத்துணவு

கண் பார்வைக்கும் சத்துணவுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என நவீன மருத்துவ ஆராய்ச்சிகள் கூறுகின்றன.

'A' 'B' 'C' போன்ற உயிர்ச் சத்துள்ள உணவுகளை உட்கொள்ளாததால் பல கண்நோய்கள் உண்டாகின்றன என்றும், இவற்றை நீக்கக் குழந்தைகளுக்குத் தாய்ப்பால், கீரை, பால் ஏடு, முட்டை, மீன் எண்ணெய் மற்றும் காரட் போன்ற காய்கறிகளை

1. டாக்டர் கா. லோகமுத்துக்கிருட்டிணன். நரம்பு மருத் துவம். பக். 128.

உணவுடன் சேர்க்க வேண்டும் என்றும் ஆங்கில மருத்துவர்கள் கூறுகின்றனர். தமிழ் மருத்துவத்தில் இதையே அடிப்படையாக வலியுறுத்தப்படுவது அறியத் தக்கதாகும்.

## கண்ணாடி அணிதல்

கண்ணாடி என இன்று அழைக்கப்படும் 'ஆடி' என்னும் பொருள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே கண்டு பிடிக்கப்பட்டிருப்பினும் கண்ணுக்கு இதை அணியும் பழக்கம் 17 ஆம் நூற்றாண்டிற்குப் பின்பே ஏற்பட்டது எனலாம். கண்ணுக்காக அணியும் ஆடி ஆதலால் 'கண்ணாடி' என்றும், மூக்கின் மீது அணியப்படுவதால் 'மூக்குக் கண்ணாடி' என்றும் இது அழைக்கப்படுகிறது.

கருவிழியில் தோன்றும் பார்வை நோய்களுக்கு ஏற்றவாறு செயற்கையாகக் கண்ணாடிகளைப் பொருத்தும் முறைகள் ஆங்கில மருத்துவத்தில் பெரிதும் பின்பற்றப்படுவதைக் காணலாம். இத்தகைய நோய்கள் பல தமிழ்மருத்துவத்தில் கூறப்படினும் கண்ணாடி அணிய வேண்டியதன் தேவையை எங்கும் கூறவில்லை. இயற்கை மருந்துகளாலேயே இந்நோய்களை நீக்கமுடியும் எனத் தமிழ் மருத்துவத்தில் கூறப்படுகிறது.

தற்காலத்தில் சிலர் அழகுக்காகவும், சிலர் தலைவலிக்காகவும் கண்ணாடி அணியும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர். இத்தகைய போக்கை இன்றைய ஆங்கில மருத்துவர்களும் எதிர்க்கக் காணலாம்.

கண் நோய்களினடிப்படையிலெழும் தலைவலிக்குத் தக்க கண் மருத்துவம் தேவை. கண்ணாடி அணிந்தால் தலைவலி தீரும் என்றுள்ள நம்பிக்கை தவறானது. கண்ணின் உள் அமைப்பை நன்கு ஆராயாமல் தலைவலிக்காக கண்ணாடி அணிவது பெருங் குற்றம். சில கண்ணோய்களுக்கு மருந்துகளும், அறுவை மருத்துவமும் தேவைப்படலாம். எனவே, தக்க ஆய்வு செய்யாமல் கண்ணாடி அணிதல் கூடாது என்பதை ஆங்கில, மருந்துவர்கள் வலியுறுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.[1]

கண்ணாடி இல்லாமல் சிறந்த கண்பார்வை பெற மேல்நாட்டு மருத்துவர் பலரும் முயன்று வருகின்றனர். இதுபற்றிய ஆய்வுகள்

1. டாக்டர் கா. லோகமுத்துக்கிருட்டிணன்: நரம்பு மருத்துவம். பக். 144

பலவும் தொடர்ந்து நடைபெறுகின்றன. அமெரிக்காவைச் சேர்ந்த டாக்டர் பேட்ஸ் என்பவர் மனிதர்களின் கண்களை ஆராய்ச்சி செய்த பின்பு, சத்துள்ள உணவும், முறையான கண் பயிற்சிகளும் கண்ணாடியின்றி நல்ல கண்பார்வை தரவல்லன எனக் கண்டு பிடித்துள்ளார்.[1]

## அறுவை மருத்துவம்

கண்ணில் தோன்றும் பில்லம், காசம், படலம், கட்டி போன்ற நோய்களுக்கான அறுவை மருத்துவம் பற்றிய விளக்கங்கள் தமிழ் மருத்துவத்தில் கூறப்படுகின்றன. ஆங்கில மருத்துவத்திலும் இது போன்ற நோய்களை அறுவை மருத்துவம் மூலமாகவே அகன்று கின்றனர்.

## மாறுகண் (Squint)

இதையே கருடப்பார்வை என்றும் கூறுவர். குழந்தைப் பருவத்திலேயே தோன்றக் கூடியது. கண்ணிலுள்ள தசை நார் களுள் சீர்கேடு ஏற்படுவதாலும், ஒரு கண்ணின் ஒளிக் கதிர்கள் செல்லும் வழியில் கருவிழி, கண்மணி, ஒளித்திரை அல்லது பார்வை நரம்பு நலிவுறுமாயின் அது மற்றொரு நல்ல கண்ணுடன் ஒத் துழைக்க முடியாத நிலை ஏற்படுவதாலும் மாறுகண் உண்டா கிறது. மாறுகண் உள்ள குழந்தைகளுக்கு உடனே தக்க மருத்துவம் செய்தால் அழகான இருகண் பார்வை பெறலாம் என்பர்.[2]

மாறுகண்ணை முறையான பயிற்சியின் (orthoptic exercises) மூலமும், அறுவை மருத்துவம் (Squint Surgery) மூலமும் நீக்கு கின்றனர்.

## மாற்றுக்கண்

அறுவை மருத்துவத்தில் மிகவும் வளர்ந்துள்ள ஆங்கிலமருத்து முறைகளில், கண் பார்வையற்றோருக்கு மாற்று அறுவை மருத்து வத்தின் மூலம் வேறோர் கண்ணைப் பொருத்துவது குறிப்பிடத் தக்கதாகும். இம்முறையில் கண்ணின் கருவிழி மட்டுமே மாற்றி யமைக்கப்படுகிறது.

---

1. கண்ணாடி இன்றி சிறந்த கண்பார்வை பெறுங்கள். பக். 54, 85:
2. பேராசிரியர். என். எஸ். சுந்தரம். கண் பாதுகாப்பு. பக். 20

இவ்வறுவை மருத்துவம் 'கருவிழி ஒட்டுதல்' (Keratoplasty or Corneal grafting) எனப்படும். கடிகாரத்தின் கண்ணாடிச் சில்லை மாற்றுவதுபோல கண்ணின் மேல் பகுதியாகிய கருவிழியினை மட்டும் எடுத்துப் பொருத்துகின்றனர். இதற்கெனத் தனியே கண் வைப்பகங்களும் நிறுவப்பட்டுள்ளன.

இத்தகைய கண் மாற்று அறுவை மருத்துவம் தமிழ் மருத்துவத்தில் எங்கும் கூறப்படவில்லை. ஆயினும், கண்நோய்களுக்கான காரணங்கள், நோயறிமுறை, நோய்களின் பகுப்பு, மருந்திடும் முறை, இயற்கை மருத்துவம், நோய் பாதுகாப்பு போன்ற பல நிலைகளிலும் இவ்விரு மருத்துவங்களும் ஒன்று படுகின்றன.

அறுவை மருத்துவத்திலும் நோயறி முறையிலும் மிகவும் வளர்ச்சி பெற்றிருப்பினும் 'காடராக்ட்' போன்ற கண் நோய்களுக்கு ஆங்கில மருத்துவத்தில் மருந்துகள் எதுவும்கண்டு பிடிக்கப்படவில்லை. மேலும், பார்வை நோய்களுக்குக் கண்ணாடி அணிவதைத் தவிர வேறு மருத்துவங்கள் கூறப்படவில்லை. இத்தகைய சிக்கலான நோய்களுக்கு இயற்கை மருத்துவ முறையில் வழி காண இயலுமெனவும், அதற்குத் துணையாக பன்னெடுங் காலமாகத் தமிழில் வழங்கப்படும் மருத்துவ முறைகளை அந்நூல்களில் ஆய்ந்து தெளிந்து பயன்படுத்த வேண்டுமெனவும் மருத்துவ வல்லுநர்கள் வலியுறுத்துவது குறிப்பிடத் தக்கதாகும்.[1]

'கண் மருத்துவம்' என்னும் இந்நூலில் தமிழ் மருத்துவத்தில் கூறப்படும் பெரும்பாலான செய்திகள் யாவும் ஆய்ந்தறியும் வகையில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

---

1. "Though modern ophthalmology has advanced considerably in operative treatment and diagnostic methodology, there are yet areas in which the ancient science of Siddha medicine could be useful. Defective vision that could not be corrected with glasses, diseases of the eyelids like trachoma and follicular conjunctivitis, mild opacity of the cornea and a host of other diseases could be treated with internal medicine, ointments and oil-baths. The system has fallen into disuse and has to be revived. It would be profitable for any modern ophthalmology, with the help of Siddha physicine, to go through the texts and find out what could be adopted even now from the varies medicines and ointments described in the literature"
—Dr. V. Narayanaswami
Introduction to the Siddha system of Medicine. p. 50.

## நிறைகள்—அளவுகள்

பண்டைக் காலத்தில் வழக்கிலிருந்த மருத்துவ அளவைகளே இந்நூல் முழுதும் கூறப்படுகின்றன. இவற்றிற்கான இக்கால அளவைகளைப் பின்வருமாறு கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| 1 உளுந்து | — | 1 கிரெயின் நிறை (65 மி. கிராம்) |
| 1 குன்றி | — | 2 கிரெயின் (130 மி. கிராம்) |
| 1 மஞ்சாடி | — | 4 கிரெயின் (260 மி. கிராம்) |
| 6 குன்றி | — | 1 மாஷம் (780 மி. கிராம்) |
| 1 பண எடை | — | 3¾ குன்றி (488 மி. கிராம்) |
| 1 வராகனெடை | — | 32 குன்றி (3. 5 கிராம்) |
| 1 கழஞ்சு | — | 40 குன்றி (4.4 கிராம்) |
| 1 பலம் | — | 10 வராகனெடை (3.5 கிராம்) |
| 1 ரூபாயெடை | — | 1 தோலா (12 கிராம்) |
| 1 அவுன்ஸ் | — | 2½ ரூபாயெடை (30 கிராம்) |
| 3 தோலா | — | 1 பலம் (35 கிராம்) |
| 1 பலம் | — | 1 சேர் (280 கிராம்) |
| 40 பலம் | — | 1 வீசை (1.4 கி. கிராம்) |
| 50 பலம் | — | 1 தூக்கு (1.7 கி. கிராம்) |
| 2 தூக்கு | — | 1 துலாம் (3.5 கி. கிராம்) |
| 1 ஆழாக்கு | — | 5 சோடு (168 மி. லிட்) |
| 2 ஆழாக்கு | — | 1 உழக்கு (336 மி. லிட்) |
| 2 உழக்கு | — | 1 உரி (672 மி. லிட்) |
| 2 உரி | — | 1 நாழி (1.3 லிட்) |
| 8 நாழி | — | 1 குறுணி (5.3 லிட்) |
| 2 குறுணி | — | 1 பதக்கு (10.7லிட்) |
| 2 பதக்கு | — | 1 தூணி (21.5 லிட்) |

| | | |
|---|---|---|
| 3 தூணி | — | 1 கலம் (64.5 லிட்) |
| 1 தேக்கரண்டி | — | 1 டிராம் (4 மி. லிட்) |
| 1 குப்பி | — | 24 அவு (700 மி. லிட்) |
| 1/10 பலம் | — | 12 பணவெடை |
| 1 கழஞ்சு | — | 1¼ வராகனெடை |
| 1 கரண்டி | — | 1 பொட்டுக்கரண்டி |
| 1 காசெடை | — | 1 பைசா அளவு |
| 1 குன்னி எடை | — | 1 குண்டுமணி எடை |
| 1 சிறங்கை | — | உள்ளங்கையில் கொள்ளும் அளவு |
| துட்டெடை | — | 1 தோலாவில் 1/48 பங்கு |
| 1 தூக்கு | — | 144 ரூபாயின் எடை |
| 1 நெல்லெடை | — | 1 நெல்லின் எடை |
| 1 பிடி | — | ஒரு கைப்பிடியில் கொள்ளும் அளவு |
| 1 மண்டலம் | — | 48 நாட்கள் |

# கண் மருத்துவம்

## 1. பொதுச் செய்திகள்

உமையொரு பாகனாகிய சிவபெருமான் அருளிய மறை நூல்களை ஆய்ந்து, சிறந்த மருத்துவ நூல்களில் கூறப்படும் கண் மருத்துவம் பற்றிய செய்திகளை அகத்தியர் எடுத்துரைக்கின்றார்.(1)

**நல்ல கண்ணின் இயல்பு**

வெள்ளை விழியில் சிவத்தல் போன்ற எவ்வித மாறுபாடுமில்லாமல், நல்ல படிகம் போன்று வெண்ணிறத்தோடும், சோதி என்று கூறப்படும் கருமணியானது கருநிறத்தோடும், பார்ப்பவர் முகமானது அதில் நன்கு தெரியும்படியும் இருந்தால் அந்தக் கண் நோயில்லாத நல்ல கண் எனலாம். (2)

**கண்ணின் நீளம், அகலம், ஆழம்**

கண் விழியின் நீளம் 2 அங்குலம், அகலம் ½ அங்குலம். ஆழம் 1 அங்குலம் ஆகும். கருவிழியானது முழுக் கண்ணில் ⅓ பங்காகும். சோதி எனப்படும் தாரையானது கருவிழியில் 1/7 பங்காகும். (4-5)

---

பிறை வடிவ அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளவை செய்யுள் எண்கள்.

**வயதும் பார்வைத் திறனும்**

பொதுவாக, மனிதருக்கு 35 வயது வரையில் கண் பார்வை நன்றாக இருக்கும். அதற்குப் பிறகு பார்வை சிறிது புகைச்ச லோடிருந்து 45 வயதிற்குப் பின் விலகும். அதற்குப் பிறகு பார்வை சிறிது சிறிதாக இருண்டு கொண்டே வந்து 100 வயதில் முழுவது மாக மறையும். (8)

**வாத, பித்த, கபத்தால் ஏற்படும் குறிகள்**

கண்ணில், நீலம் கலந்த பச்சை நிறம் காணப்பட்டால் வாதம் அதிகமுள்ள தென்றும், பொன்னிறம் கலந்த மஞ்சள் நிறம் காணப்பட்டால் பித்தம் அதிகமுள்ள தென்றும், கருமை கலந்த வெண்ணிறம் காணப்பட்டால் கபம் அதிகமுள்ள தென்றும் அறியலாம். (9-10)

**தொண்ணூற்றாறு நோய்களுக்கான விவரம்**

1. கருவிழியில் 45 நோய்களும், வெள்ளை விழியில் 20 நோய் களும், இமையில் 16 நோய்களும் குவளையில் 15 நோய்களும் களும் தோன்றுகின்றன. (12)

2. சோதி எனப்படும் கண்மணியில் 27 நோய்களும், கரு விழியில் 10 நோய்களும், வெள்ளை விழியில் 13 நோய்களும், கரு விழி வெள்ளை விழி. இவற்றின் இடையில் சந்து என்று சொல்லப் படுமிடத்தில் 9 நோய்களும், இமை, குவளை இவைகளில் 24 நோய் களும், கண் முழுவதும் உண்டாகும் நோய்கள் 13 எனவும் கூறப் படுகின்றன. (13)

3. வாதத்தால் 20 நோய்களும், சிலேத்துமத்தால் 45 நோய் களும், பித்தத்தால் 31 நோய்களும் உண்டாகின்றன. (14)

4. வாதத்தால் 56 நோய்களும், பித்தத்தால் 20 நோய் களும் சிலேத்துமத்தால் 20 நோய்களும் உண்டாகின்றன என்றும் கூறப்படுகிறது. (14)

**குறிப்பு :**

இவற்றுள், முதலாவதாகக் கூறப்படும் வகையிலுள்ளவாறு 45+20+16+15 என்ற முறையில் மட்டுமே செய்திகள் முழுமை யாகக் கிடைக்கின்றன. மற்ற வகைகளுக்கான விளக்கங்கள் கிடைக்கவில்லை.

**மருத்துவம்**

இந்நூலில் கூறப்பட்டுள்ள கண் நோய்களின் குறி குணங்களை முறையாக அறிந்து அதற்கேற்றவாறு மருத்துவம் செயின் நோய்கள் தீரும். (16)

**அசாத்திய குறிகள்**

கண்ணில் மிகுந்த வலியும் கூச்சமும் ஏற்பட்டு, நீரும் பீளையும் மிகவும் வடிந்து, சதை வளர்ந்து விழியை மூடிக் காணப்படின் நோய் தீராதது என்றும் எவ்வகையான மருத்துவமும் நன்மை பயக்காது என்றும் கூறப்படுகிறது. (17)

## கண்ணில் மருந்து தீட்ட விதிகள்

கண் நோய் உள்ளவருக்கு மருந்து தீட்டும் பொழுது சில விதிகளைக் கடைபிடித்தல் வேண்டும்.

1. நல்லதொரு இருக்கையில் அமர்ந்து, கிழக்கு திசை நோக்கியிருந்தே மருந்து தீட்ட வேண்டும். (18)
2. நோயாளியின் இடது கண்ணில் முதலில் மருந்தைத் தீட்டிய பின் வலது கண்ணில் தீட்டவும். அப்பொழுது கண் நோய்கள் விரைவில் தீரும். (19)
3. மருந்தை இரு நேரங்களிலும் கண்ணில் தீட்டவும் நோய்கள் தீரும். (20)
4. ஒரு வேளை மட்டுமே இடவேண்டிய மருந்தை மாலை நேரத்திலேயே இடவேண்டும். காலை நேரம் ஆகாது.(21)
5. கடுமையான வெய்யிலிலும், தீயிலும், காலை நேரத்திலும், தூங்கும் பொழுதும், நீண்ட தூரம் நடந்த பின்பும் மருந்திடல் கூடாது. (24)
6. மழை பெய்யும் போதும், எண்ணெய் தேய்த்து முழுகின பிறகும், பெண்கள் மாத விடாயினால் வெளியேயிருக்கும் போதும் மருந்திடல் கூடாது.(25)
7. ஆனி, ஐப்பசி, கார்த்திகை போன்ற மாதங்களில் காலை நேரத்திலும், மார்கழி, தை, மாசி, பங்குனி போன்ற மாதங்களில் பகல் நேரத்திலும், சித்திரை, வைகாசி, ஆடி, ஆவணி, புரட்டாசி போன்ற மாதங்களில் பதினெட்டு நாழிகைக்குள்ளும் மருந்திடல் வேண்டும். (26)
8. நரம்பு குத்தல், கருவியால் அறுவை மருத்துவம் செய்தல், இவற்றிற்குக் காலை நேரமும், இரத்தம் வாங்குதற்குப் பகல் நேரமும், அட்டையை விட்டுப் புண்ணை ஆற்றுவதற்கு மாலை நேரமும் ஏற்றவையாம் (27)

## காரீயக்கோல் செய்யும் முறை

திப்பிலி, பொன்னாங்காணிக் கீரை, மஞ்சள், முத்தக்காசு, திரிபலா இவற்றை ஓரளவாய் வெள்ளாட்டுப்பால் விட்டு அரைத்துத் தேன், நெய், பசுவின் நீர் இவற்றையும் கூட்டிக் காய்ச்சிய நீரில் 1 பலம் காரீயத்தை, ஒன்பது முறை உருக்கிச் சாய்த்து, பின்பு அதை எடுத்து நீள வடிவிலான கோலாகத் திரட்டவேண்டும். இக்கோல்களில் அஞ்சனத்தை எடுத்துக் கண்ணில் தீட்டவும் கண் நோய்கள் தீரும் (28-31)

குறிப்பு : செய்யுள் எண் 32-33 இரண்டிலும் மருந்திடும் முறையைப் பற்றி வினா-விடை அமைப்பில் கூறப்பட்டுள்ளது அதற்கான விளக்கம் பெற இயலவில்லை.

# நூல்

மாதுமை பாகன் சொன்ன மாமறை முதலை யாய்ந்து[1]
[2]தீதுகள் வாரா தென்று திருவுளத் தருளி னாலே
[3]ஆதிமா முனிவன் சொன்ன ஆயுரு வேதத் துள்ளே
[4]நாதனார் தெரிந்து ரைத்த நயனமாம் விதியீ தென்றே. 1

## நல்ல கண்ணின் இயல்பு

இந்துவை யொத்த வண்ணம் இயல்வது நயனங் கண்டாய்
உந்திய வொளியி னுள்ளே உன்முகம் விளங்கத் தோன்றில்
அந்தமா வொளியாய் நிற்கில் அதனில்நோ யில்லை யென்று
[5]செந்தமிழ் உமையாள் கேட்கச் சிவனவர்க் கருளிச் செய்தார். 2

வெள்ளையிற் சிவப்ப தன்றி விளங்குநற் படிகம் போலத்
தெள்ளிய சோதி தன்னில் சேர்ந்திடு வளமை யாகி[6]
உள்ளொளி விளங்கும் போது உன்முகம் விளங்கத் தோன்றும்
ஒள்ளிய நயன மென்றே ஒப்பது கண்டி டாயே.

---

பாட வேறுபாடு

1. வடமொழி நூலை யாய்ந்து
2. போதில் நான்முகத் தோனாயுள் வேதமாய்ப் புகன்ற பின்னர்
3. மூதுரை யுணர்ந்து நாத முனிவனுந் தமிழாற் செய்த
4. தீதில்லா விழியி னுள்ளே தோடத்தைத் தெரிந்து காணே
5. செந்தமிழ்ப் புலவோர் தங்கள் தெரிந்தது செப்பி னாரே
6. சிறந்திடு வண்ண மாகி

## கண்ணின் நீளம் அகலம் ஆழம்

பங்கமில் விழியி னீளம் பகர்தரு மகலந் தன்னோ(டு)
இங்கத னாழ மேதான் இயல்புட னுரைக்கக் கேளாய்
அங்குல மிரண்டி னோடே அரையுமொன் றென்(ன) லாகும்
செங்கயல் விழியின் மாதே செசத்தோர்க் சறிந்து சொல்லே. 4

நயனத்தில் மூன்றத் தொன்று நகைகரு விழியே யென்ப
பயனெத்து நிலவு மாறு பகுத்திடு மேழி லொன்று
வியனொத்த சோதி யென்ப மேதினி தனில்வாழ் மக்கட்(கு)
அயனொத்துப் படைத்தான் கண்டாய் அன்னமென் நடைய ணங்கே

## நோயும் மருத்துவமும் கூறல்

உயர்ந்திடும் நயனந் தன்னில் உறுபிணி வியாதி யெல்லாம்
மயங்கிடு மிருளா லுற்று வருந்திரி தோடந் தன்னால்
வியந்திட மேவி நிற்கும் விரவியே மருந்து தானும்
நயங்கிய கிரிகை செய்ய நயந்துமே கூற லுற்றேன். 6

உற்றிடு நயனந் தன்னில் உறுபல வியாதி கேளாய்
நற்றுணை யாகு மிந்த நாயக னருளிச் செய்தார்
பற்றறு மாறும் வண்ணம் பகர்ந்துமோர் கிரிகை தன்னை
மற்றுமா மலையி லுள்ள மாமுனி யருளிச் செய்தார். 7

## வயதும் பார்வைத் திறனும்

தெளிவுற வொளிவாய் நிற்குந் தீங்கில்லை முப்பத் தைந்தில்[1]
ஒளியது புகைந்து சற்றே ஒதுங்கிடும் நாற்பத் தைந்தில்
வெளியற விருண்டு சற்றே மேவிடு மெண்பத் தைந்தில்[2]
அளியறப் புகையுங் கண்ணே ஆண்டொரு நூற தாமே. 8

## வாத பித்த கபத்தால் ஏற்படும் குறிகள்

பொன்னிறங் கருமை வெண்மை பொருந்திடு சிவப்பே போல
மன்னிய பச்சை போல மணிதனிற் றோன்று மாகில்
சென்னிற வாத பித்த சிலேத்தும மூவ ருக்கும்
பன்னிற மறிந்து பாரும் பகவனார் நூலை யாய்ந்தே. 9

---

பா. வே.
1. முப்பதென்னில்; முப்பத்தேழில்; முப்பத் தொன்றில்
2. ஐம்பதென்ன; ஐம்பத்தொன்றில்; ஐம்பத்தேழில்

நீலமே பச்சை வாதம் நீண்டிடு பித்தங் கேளும்
கோலமாம் பொன்மை மஞ்சள் கொடும்பதம் போல தாக
சாலவே கருமை வெண்மை சாற்றிய சிலேத்து மங்கள்
ஆலநோய் விழியி னல்லாய் ஆய்ந்துநூல் வேதம் பாரே. 10

கண்ணிடை தோன்றுந் தோடப்
பேர்குணங் குறிகள் தன்னை
நண்ணு(று)ஞ் சாத்தி யத்தோ
டசாத்தியம் நவில்ம ருந்து
பண்ணுறு கருவி யாலே
தீர்வதும் பகருஞ் சூடும்
திண்ணமா யுரைக்க மானே
கேட்டது தெளிந்தி டாயே. 11

## தொண்ணூற்றாறு நோய்களுக்கும் விவரம்

கருவிழி தன்னில் நோய்கள் கலந்திடும் நாற்பத் தைந்து
மருவிய வெள்ளை தன்னில் மருண்டிடு மிருப தென்க
பெருகிய யிமையி லங்கே பெருத்திடு மொருபத் தாறு
பருவமாங் கடையில் நிற்கும் பதினைந்து தோடந் தானே. 12

சோதியி லிருபத் தேழு தொல்கரு விழியிற் பஃது
தீதுபன் மூன்றாம் வெள்ளை சிறந்திடு சந்தி லொன்பான்
கோதைகேள் மூவெட் டாகும் குவளையி னிமையி னுள்ளே
ஏதமில் நயன மெங்கும் எழுந்தநோய் பதின்மூன் றாமே. 13

## வாத பித்த கபத்தால் வரும் எண்ணிக்கை

வாதத்தி லைம்பத் தாறு வந்திடும் நயனந் தன்னில்
தீதுற்ற பித்தந் தானும் இரண்டுபத் தெ(ன்)னச் செப்பி
மீதுற்ற சிலேத்து மத்தில் இருபது தோட முண்டு
ஓதுற்ற தோடந் தன்னில் உரையினி கண்டு கொள்ளே. 14

சேருமே தொண்ணூற் றாறில் சிலேத்துமம் நாற்பத் தைந்து
வாருமே வாதந் தன்னில் வந்திடு மிருப தென்க
சீறிய பித்தத் தோடு சேர்ந்தவை முப்பத் தொன்றும்
பேறுறு நயன ரோகம் பேணிமுன் பிறக்கும் பாரே. 15

ஆகவே தொண் ணூற் றாறும் அடவிலே பார்த்து நோக்கி
வேகமே தீர்ப்பீ ராகில் மீண்டிடும் இருப தென்க
ஏகுமே யெழுவத் தாறும் இருள்திமிர மீளா தாகில்
பாகுமார் கடையில் நிற்கும் பதினாறு தோடந் தானே. 16

## விழிநோயின் அசாத்தியக் குறிகள்

சழியநீ ரோடி நொந்து சதைவிழி தன்னை மூடி
அழியவே சூழப் புண்ணாய் அழியலாய்ப் பாயு மாகில்
விழியினோ யாறா தாகும் வேண்டியே மருந்து செய்யப்
பழியுடன் படுவாய் கண்டாய் பார்வையுந் தெரியா தென்றே. 17

## கண்ணில் மருந்தெழுத விதிகள்

இருந்துதா னெழுதும் போது இசைந்தஆ சனத்தி ருந்து
கருங்குழல் மானே கேளாய் கவின்பெற கிழக்கு நோக்கி
இருந்ததன் பின்பாய் நீயும் இயல்பெற இடத்தி விட்டு
வருந்திப்பின் வலத்தி விட்டால் மாசறத் தீருந் தானே. 18

திருந்தவே நயனந் தன்னில் திகழுமுன் னிடத்தி விட்டு
தெரிந்திட வலத்திற் பின்னும் தெரியவே வரைந்து விட்டால்
வருந்திநோய் கடுக மாறி மாசறத் தீரு மென்று
கருந்தடக் கண்ணி னாளே கனசமா முனியு ரைத்தார். 19

மருந்திடு நொந்த கண்ணில் மகிழ்ந்திரு நேர மிட்டால்
திரிந்திடு மிருளே நீங்கித் தீர்ந்திடு நோய்க ளெல்லாம்
பரிந்திடு நேர மொன்றிற் பண்பினால் விடிய லாகா
விரைந்திடு மந்தி நேரம் வினையறும் வினவி நீயே. 20

ஒருபொழு திடும ருந்து உகந்தந்திக் கால மாகும்
இருபொழு தெழுந்து நோக்கி இருளற்று ரோக மாறும்
மருளறு காலத் திட்டு மறந்தந்திக் கிடாத போது
வரிபரந் துதித்த கண்ணில் வருமிடை தீரா தென்றே. 21

மருந்திடு நயனந் தன்னில் மகி(ழ்)ந்தொரு நேர மிட்டால்
திரிந்துடன் கரிப்புக் கெட்டுத் திகழுநீர் சொரியு மாகில்
பரிந்திடும் நோவு மாறிப் பலபல குணமுண் டாகும்
வுரைந்துபின் நீயுங் கேளாய் விழியின்நோய்த் தொலைக்கு மாறே.

மருந்துகள் கண்ணி லெங்கு மகிழ்ந்துட னிட்ட போது
திருந்துறக் கரிப்புக் கெட்டுத் திகழ்ந்து நீரதனால் மாற்றி
அரிந்திடு மவைகள் போக அனலுறு நீரால் மாற்ற
இருண்டிடுங் குழலி னாளே இயல்வது கண்டி டாயே. 23

## மருந்திட நாள்

கடுகிய வெய்யிலில் கடுநல் தீயினில்
விடுமது காலையில் மேவுநித் திரையினில்
முடுகிய வழிநடை முழுகரு மாந்தமும்
வடுவுறு யிமைநல் லாய்மருந் திடாதே. 29

தனக்குமந் தார நாளும் தலையது முழுகு நாளும்
வினக்குறு மாதர் மாதவி டாயினால் வெளிநில் நாளும்
மனக்குறு பற்றுத் தானும் மருந்துதான் யிடுதல் தானும்
கனக்குமே கண்ணில் நோவு காண்பிக்கும் செய்யா நாளே. 25

## மருந்திடும் நேரம்

மிக்கவ ரெழுது காலம் யாவுமா மிதுன நண்டோ(டு)
ஒக்கவே துலாத்தேள் மாதம் காலையாம் உயர்வில் லோடு
தக்கமா மகரம் கும்பம் மீனமத் தியானம் மற்ற
பக்கமா தங்கள் கண்ணில் பதினெட்டா மஞ்ச னங்கள். 26

களவுறு நரம்பு குத்தல் கருவிக ளாடல் காலை
வளவுறு கொம்பு வைத்தங்(கு) உதிரம்வாங் கல்மத் தியானம்
அளவுறு அட்டை விட்டே ஆற்றுவ தந்திக் காலம்
தளவுறு நகைப்பால் வெய்யோர் புரஞ்செற்றார் சாற்றி னாரே. 27

## காரீயக் கோல் செய்யும் முறை

வாரியிற் துயின்ற மாயோன் மானிட நிபுணர்க் கெல்லாம்
சீரிய நயன ரோகம் தீர்ந்திட வேண்டு மென்று
கூரிய சடையோ னாறும் கூறிட யுமையாள் கேட்க
காரீயக் கோலின் வன்மை கருத்துட னுரைத்தா ராமே. 28

கருத்துடன் வகுப்புக் கேளாய் கடுகியதிப் பிலிதேன் நெய்யும்
மருத்தொரு காணி கீரை மஞ்சளும் முத்தக் காசும்
வெருத்தொரு வெள்ளாட் டின்பால் வெருவுங்கோ சலமுங் கொண்டு
பொருந்திரி பலையத் தோடு போதவே யரைத்துக் காய்ச்சே. 29

காய்ச்சிய கசாயந் தன்னில் கதித்தொரு பலங்கா ரீயம்
ஊச்சித மாக விட்டே ஒன்பது தரமே யுருக்கிக்
காய்ச்சியே பின்னெ டுத்துக் கருதியே தானு மொன்றாய்
காய்ச்சியே திரட்டிக் கட்டக் காரீயக் கோலுந் தானே. 30

காரீயக் கோலாந் தன்னில் கருதுமஞ் சனத்தை வாங்கி
நேரதாய் விழியி லிட்டால் நிலைநில் ரோகம் போகு
மூரியவெண் முருவ லீசன் மொழிந்திட யுமையாள் கேட்க
காரீயக் கோலின் வண்ணம் கனகமா யுரைத்தார் கண்டீர். 31

பிடித்திருந்த கல்லுக்குத் தேவதைதா னேது
பிறமூல தேவதையின் பேர்தா னேது
அடுத்திருந்து தந்தமுலைப் பால்தா னேது
அணிவிரலும் சிறுவிரலும் நடுவிரலுஞ் சொல்லும்
தடுத்திருந்த கயறேது பைதா னேது
தவறாம லுரைத்ததற்பின் வாங்கும் விரலேது
படித்திருந்த பண்டிதரே யிந்த நூலைப்
பதறாம லின்னதென்று பசரு வீரே 32

பிடித்திருந்த கல்லுக்கு தேவதைதான் மாயன்
பிறமூல தேவதையு மிந்திரனோ டீசன்
அடுத்திருந்த முலைப்பால்தான் அமிர்த மாகும்
அணிவிரலும் சிறுவிரலும் சிவநந்தி யாகும்
தடுத்திருந்த பை வைகுண்டங் கயறு சத்தி
தவறாம லுரைத்தோம்நாம் தரணி மீதில்
படித்திருந்த பண்டிதரே நடுவிரலும் பெருவிரலில்
பண்பினால் மருந்திடுதல் பசுமை தானே. 33

## 2. கண் நோய்கள் தோன்றக் காரணங்கள்

கண் நோய்கள் தோன்றுவதற்கான காரணங்கள் பல சுவடிகளிலும் வெவ்வேறு முறையில் கூறப்படுகின்றன. அவற்றை முறைப்படுத்தித் தொகுத்துப் பார்க்குமிடத்துப் பின்வரும் காரணங்கள் தெளிவாகப் புலப்படுகின்றன. (34-61)

**இயற்கை**

1. ஐம்பூதங்களின் மாறுபாடுகளினாலும்
2. வெய்யிலின் கடுமையாலும்
3. வேகமாக அடிக்கும் காற்றினாலும்
4. அசுத்தமடைந்த நீரினாலும்

**கருவில்**

5. தந்தை தாய் மருவும்போது நாடிகள் முறை தவறி நடப்பதாலும்
6. கர்ப்பத்தில் கரு வளரும்போது கிருமிகள் சேர்ந்து அருந்துவதாலும்
7. தாய் கருவுற்றபோது தீங்கான மருந்துகளை உட்கொள்வதாலும்
8. தாய் கருவுற்றபோது அதிக பசியினாலும், அதிக கலக்கம் கொள்வதாலும், ஆகாத உணவுகளை உட்கொள்வதாலும்

நோய்கள்

9. முக்குற்றங்களாகிய வாதம், பித்தம், கபம் இவை மிகுவதாலும், குறைவதாலும்
10. மேக நீர் நோய்களாலும்
11. வெட்டை போன்ற நோய்களாலும்
12. மூளையில் வெப்பம் அதிகரிப்பதாலும்
13. மூலத்தில் அக்கினி அதிகரிப்பதாலும்
14. புண்களில் இரணமுண்டாகி ஆறாததாலும்
15. அதிகமாக ஏற்படும் வயிற்றுப் போக்காலும்
16. உடல் வெப்பம் அதிகமாவதாலும்
17. உடலில் மந்தம் அதிகமாவதாலும்
18. உடலில் கடுப்பு ஏற்படுவதாலும்
19. அதிக மலம், சிறுநீர் இவற்றின் சேர்க்கையாலும்
20. தேவையான தூக்கம் இல்லாததாலும்

உடல்

21. கடுவெய்யிலில் நடந்து கால்கள் சுடுவதாலும்
22. தடியடி படுவதாலும்
23. தலையில் கனத்த சுமைகளைக் கொள்வதாலும்
24. பொருள் தேடவேண்டி நீண்ட தொலைவு வருந்தி நடப்பதாலும்
25. ஓயாத நடையினாலும்
26 நீண்ட நேரம் வெய்யிலில் இருப்பதாலும்
27. பனியில் அதிகமாக நனைவதாலும்
28. வன்மையான வாகனங்களிலேறி வருத்தமடைவதாலும்,
29. கவிழ்ந்த தலையுடன் தூங்குவதாலும்
30. வெப்பந்தரும் பொருட்களை முகர்ந்து பார்ப்பதாலும்
31. கெட்டநாற்றம் மூக்கில் ஏறுவதாலும்
32. பெருங்கோபம் கொள்வதாலும்
33. நாள்தோறும் சினம் கொள்வதாலும்

34. கனமான மலர்களைத் தலையில் வைப்பதாலும்

35. மனவருத்தத்தாலும்

36. பாதத்தில் நெய் பூசாததாலும்

37. பல்லை முறையாகச் சுத்தம் செய்யாததாலும்

38. கண்களில் காரம், தூசு புகை போன்ற பொருள்கள் படுவதாலும்

உணவு

39 விழிக்கு ஆகாத உணவுப் பொருட்களை உண்பதாலும்

40. உணவு வேறுபாடுகளினாலும்

41. சிறுகீரை, பொன்னாங்காணி கீரை போன்றவற்றை உணவில் சேர்க்காததாலும்

42. உணவில் பசுவின் பால், நெய் சேர்க்காததாலும்

43. உண்ணும் உப்பில் மணல்கல் சேர்ந்ததாலும்

44. உணவுடன் நச்சுப் பொருள்களை அருந்துவதாலும்

45. காடி, கள், மதுபோன்ற பொருள்களை அதிகமாக அருந்துவதாலும்,

46. உண்ணுஞ் சோற்றிலுள்ள கற்களைக் கடிப்பதாலும்

47. உணவில் கல், உமி, மயிர் இவற்றைச் சேர்த்து உட்கொள்வதாலும்

48. மீனின் முள்ளை உணவுடன் உட்கொள்வதாலும்

49. வெற்றிலை, பாக்கு, புகையிலை இவற்றை வாயில் எப்பொழுதும் அடக்கிக் கொண்டிருப்பதாலும்

50. உணவு உண்டபின் ஓடுதலாலும்

51. உணவு உண்டபின் தலை முழுகுவதாலும்

52. உணவு உண்டபின் சரியாகச் செரிக்காததாலும்

நீர்

53. தண்ணீரை அதிகமாக அருந்துவதாலும்

54. குளிர்ந்த நீரையே தினமும் குடிப்பதாலும்

55. நீராடுமிடத்து அதிக நீரை உட்கொள்வதாலும்

56. தேங்கியுள்ள நீரை அருந்துவதாலும்

57. தேவையில்லாமல் தண்ணீரை வலிய உண்பதாலும்,

58. வேறுவேறான தண்ணீரை உட்கொள்வதாலும்

தலையில் எண்ணெய் முழுக்கு

59. தலை மயிரில் வறட்சியாலும்

60. தலை மயிரில் தேய்த்த எண்ணெய் போகாததாலும்

61. தலையில் எண்ணெய் தேய்த்தபோது ஏற்படும் காம உணர்வுகளாலும்,

62. எண்ணெய் முழுக்கை முறைகெட விடுவதாலும்

63. எண்ணெய் தேய்த்து நீண்ட நேரங் கழித்துத் தலை முழுகுவதாலும்

64. எண்ணெய் தேய்த்து முழுகிய பின் எண்ணெய் விடாததாலும்

65. எண்ணெய் தேய்த்துப் பின் முழுகாததாலும்

66. எண்ணெய் தேய்த்தபின் படுக்கை கொள்வதாலும்

67. மிகுந்த வெம்மைதரும் வெய்யிலில் திரிந்து உடன் நீராடுவ்தாலும்

பெண்கள்

68. பெண்களிடம் மிகவும் மோகம் கொள்வதாலும்

69. பெண்களால் ஏற்பட்ட மயக்கத்தாலும்

70. பெண்கள் செய்யும் வருத்தத்தாலும்

71. இடைவிடாத பெண் போகத்தாலும்

72. தீய பெண்களின் சேர்க்கையாலும்

73. பெண்களை உற்றுப் பார்த்து உடன் ஏங்கி ஏக்கம் கொள்வதாலும்

பார்வை

74. விண்ணை நோக்கி அடிக்கடிப் பார்ப்பதாலும்

75. விண்ணில் சூரியனை நேராகப் பார்ப்பதாலும்

76. விண்ணில் நிலவைப் பார்க்காததாலும்

77. விண்ணிலுண்டாகும் மின்னலைப் பார்ப்பதாலும்

78. எரியும் தீக்கொழுந்தை நேராகப் பார்ப்பதாலும்
79. எழுத்தைக் கூர்மையாக நோக்கிப் படிப்பதாலும்
80. கூர்ந்து நோக்கிப் படியெடுத்தெழுதுதல் போன்ற செயல்களாலும்
81. மிகவும் விழித்து நோக்குவதாலும்

**பொது**

82. அதிகமாக பொருள் சேர்ப்பதாலும்
83. அப்பொருள்களைத் தனக்கெனவே கூறலாலும்
84. நற்பெண்டிரைக் கெடுக்க நினைத்தாலும்
85. பெரியோர்களைத் துன்புறுத்துவதாலும்
86. உடலுறுப்புக் குறைந்தோரைப் பழித்ததாலும்
87. உண்மையினின்றும் தவறி நடப்பதாலும்
88. கருணை உள்ளம் இல்லாததாலும்
89. உயிர்க் கொலையை நேரிற் கண்டும் அதை விலக்காமலிருத்தலாலும்
90. செய்யத்தகாத பாவங்களைச் செய்வதாலும்
91. ஆலயங்களுக்குச் செல்லாததாலும்
92. இடுக்கண் செய்கையாலும்
93. பொய் கூறுவதாலும்
94. அழிவழக்குச் சொல்வதாலும்
95. தானம் தர்மம் செய்யாததாலும் கண்ணில் நோய்கள் தோன்றும் என்பர்.

## கண் நோய்கள் தோன்றக் காரணங்கள்

கண்ணிலொளி மறைந்தவகை சொல்லக் கேளீர்
 காற்றோடு தீயெழும்பி நீர்தா னேற்று
எண்ணியொரு காற்றதனை மறித்து நீர்தான்
 ஏற்றமா யடைத்தினா லொளியே போச்சு
அண்ணலருள் பெருமையினாற் காற்றே மேவில்
 அவரொளிகள் மயங்காது அவனி தன்னில்
திண்ணமிது மாமுனிவ ருரைத்த நூலைச்
 செகதலத்தோ ரறிந்துபொருள் தெரிந்து கொள்ளே. 34

[1] கண்ணிடை தோடஞ் சேருங் காரணமேதொ வென்னில்
[2] நண்ணிய புனல்கள் தன்னை நாட்படப் பருகை யாலும்
[3] திண்ணிய முடியி லங்குத் தேய்தெண்ணெய் போகா தாலும்
[4] பெண்ணின்மால் மிகுதி யாலும் பெருத்திடும் விழிக்குள் நோயே.

கடுவெய்யில் தன்னி னாலும் காலடி[5] சுடுகை யாலும்
[6] முடுகவே யெண்ணெய் தன்னை முறைகெட முழுகை யாலும்

---

பா.வே.

1. கண்ணது நோக வேணடுங்
கண்ணது நோக வந்த
கண்ணது அழன்று பொங்குங்
கண்ணினி லழன் றெரித்த
கண்ணிடை வறண்டு பொங்கும்
2. நண்ணிய வப்பு தன்னில் நலம்பெற பருகை யாலும்
நண்ணிய புனல்நீர் தன்னை நலமிகப் பருகை யாலும்
நண்ணிய தண்ணீர் தன்னை நாடொறும் பருகை யாலும்
தின்றிடு முப்பு தன்னிற் சேர்ந்திடு மணல்க ளாலும்
3. பின்னிய மயிரி லங்குப் பிசைந் தெண்ணெய் போகா தாலும்
திண்ணிய வறட்சி யாலும் சேர்ந்தெண்ணெய் போகா தாலும்
எண்ணெய்யைத் தலையில் வார்த்து இசைந்திடுங் காமத் தாலும்
திண்ணமாம் சிரசின்மீது சேர்ந் தெண்ணெய் போகா தாலும்
4. பெண்ணிடை மருவலாலும் பெருந்திடும் விழிக்குள் நோயே
விண்ணிடை வெளவை யாலும் விளைந்திடும் நோய்கள் தானே
விண்ணிடை வெய்யிலி னாலும் மேவிடுங் கண்வி யாதியே
விண்ணதி லருக்கன் தன்னை மேவியே நோக்கி நோயே.
விண்ணெழு மின்ன லோடு விளங்குதீ பார்ப்ப தாலும்.
திண்ணமாங் கோபத் தாலும் சேர்ந்திடும் விழிக்குள் நோயே.
5. கனத்தடி; கட்டடி.
6. முடுகிய மங்கை யோடே முனிந்திடு மோகத் தாலும்
முடுகவே யெண்ணெய் வார்த்து மூண்டபின் முழுக லாலும்
,, ,, ,, ,, ,, விடுகை யாலும்
,, ,, ,, ,, ,, முழுகா தாலும்
,, ,, ,, மூழ்கிய பின் படுக்கை யாலும்
,, ,, ,, ,, ,, விடாகை யாலும்

தடியடி படுகை யாலும் [1] தலையுறு சுமையி னாலும்
[2] படியெழு கூர்மை யாலும் [3] பாய்ந்திடும் விழிக்குள் நோயே.

[4] மனமிடி தன்னி னாலும் [5] மாதர்மே லாசை யாலும்
[6] கனமலம் செறிகை யாலும் [7] கவிழ்ந்திடு பார்வை யாலும்
[8] தனமிகக் கெடுகை யாலும் தாழ்வில்லா நடையி னாலும்
[9] சினமிகு கோபத் தாலும் சேர்ந்திடும் விழிக்குள் நோயே.

செப்பிய வாத பித்தம் சேற்பன மூன்று மீறி
வெப்புறு கோபத் தாலும் மிகுதியாய்க் குறைந்த தாலும்
மைப்புறு குழல்நல் மாதே தந்தை தாய் மருவும் போது
ஒப்புறு கலைகள் பாய்ந்து விழிநிலா தொதுங்கை யாலும் 38

---

1. தலை சுமந் துறுகை யாலும்;
வடிவுறு பாடா ணத்தை வருந்தியே அருந்த லாலும்.
2. படியெனக் கடர்த லாலும்
படிப்பினிற் கூர்மை யாலும்
படியுறு கூர்மை யாலும்.
3. பரந்திடும் நோக்கி நோயே
பரந்திடும் விழிக்குள் நோயே
பாய்ந்திடும் கண்ணில் நோயே
பார்வையால் வந்த நோயே
படர்ந்திடும் கண்ணின் நோயே
பாவையிற் படரும் நோயே
பார்வையிற் பிணியுண் டென்றே.
4. மனவடி வதனி னாலும்
மனமது மடித்த லாலும்.
5. மாதர் தம் மாய்கை யாலும்
,, ,, மயக்கத் தாலும்
,, ,, வருத்தத் தாலும்
6. கனமலம் சிறுகை யாலும்
,, சேர்கை யாலும்
,, சிக்க லாலும்
கனமலர் சொறுகை யாலும்.
7. கலந்தமைப் பார்வை யாலும்
கனத்தொரு பார்வை யாலும்
8. தனமிக யெடுக்கை யாலும் தனக்கென கூறலாலும்
தனமிகத் தேடலுற்றுத் தகைவில்லா நடைக ளாலும்
,, ,, ,, தனிவிலா ,, ,,
சினமிகு கெட்ட நாற்றஞ் சீறிமூக் சேறி னாலும்
9. சினமிக வுறுகை யாலும்
தினமிகு கோபத் தாலும்.

[1]கற்பத்தில் வளரும் போது [2]கிருமிக ளருத்தி னாலும்
[3]சொற்பெறு மானே கேளாய் திங்களிற் துலங்குஞ் செங்கண்
[4]புற்பத விழிக்கா காத பதார்த்தமே புசிக்கை யாலும்
[5]கற்பனை யாகக் கண்ணில் வியாதிவந் தணுகுந் தானே. 39

கனத்திடு சுமையி னாலும் கடும் வெய்யில் கறுக லாலும்
நனைத்திடு யெண்ணெய் தன்னை நாட்பட முழுகி னாலும்
புனக்கொடி மடவார் தன்னை விடாதே புல்கை யாலும்
சினத்தடிப் படுக்கை யாலும் சிந்துலைநோய்ச் சேறுங் காணே 40

உட்டிண மதிகத் தாலும் உதித்திடு மந்தத் தாலும்
உட்டிணப் பொருள்கள் தம்மை உகந்துதான் முகர லாலும்
உட்டிண வெயிலில் நாளும் உழன்றுநீ ராட லாலும்
உட்டிண மதிக மீறி உதித்திடுங் கண்ணி னோயே. 41

நித்திரை யிலாத தாலும் நீள்வெயி லொழுகல் தன்னால்
நித்திரை சமயந் தன்னில் நிமிர்தலை கவிழ்தல் தன்னால்
பத்தியங் காடி கொள்ளல் பருகுநீ ரதிகங் கொள்ளல்
மத்திய மதிகக் காற்றால் வந்திடுங் கண்ணி னோயே 42

உண்டிடு மசனந் தன்னில் உகந்துகல் கடிக்கை யாலும்
கொண்டகல் மயிரி னாலுங் கொடுமலச் சேர்க்கை யாலும்
பண்டுவெற் றிலையும் பாக்கும் பக்கரை யடக்கை யாலும்
கண்டநேத் திரந்த னக்குக் கருதிய நோய்க்குத் தாயாம். 43

தந்தலைச் சுமைக்கை யாலுந் தகுமுடற் கடுப்பி னாலும்
மென்பனி நனைத லாலும் மீனின்முள் ளருந்த லாலும்
வன்புவா கனத்தி லேறி வருந்துட லுலைவி னாலும்
முன்பயி லெண்ணெய் நெய்பால் முழுக்கவை விடுகை யாலும் 44

---

பா. வே.

1. கற்பத்தில் சிசுவாழ் போது கிருமிகள் சேர்ந்திட் டாலும்
2. கிருமிகள் மருந்தி னாலும்
3. சொற்புற்று மண்ணைத் தின்றால் திங்களிற் துலங்குஞ் செங்கண்
   கப்பிய பசியுற் றாலும் கலக்கங்கொள் திகில்நேர்ந் திட்டாலும்
4. செப்புமாங் கனிகாய் மெத்தத் தேடியே புசித்திட்டாலும்
5. அற்புத விழிக்காகாத
   ஒப்புறு மகவின் கண்ணில்

தின்னார் பண்ணைச் சிறுகீரை தின்ன மறந்தார் சீர்கேடாய்
பொன்னாங் காணிக் கறிகூட்டார் பூசார் பாதம் நெய்யுண்ணார்
பண்ணார் மதியந் தனைப் பாரார் பால்வார்த் துண்ணார்
பல்தேயார்
கண்ணார் நோயாற் கவல்வரதை யாமும் சொல்லக் கடவோமே.45

தின்னார் பன்னார் சிறுகீரை திராயை மறவா சீர்கேடர்
பொன்னாங் காணி கரிகூட்டார் பூசார் பாதம் நெய்கொண்டு
பன்னார் மதியந் தனைப் பாரார் பால்வார்த் துண்ணார்
பல்தேயார்
இன்னார் குருட ரிவரென்று இமையோர் சொன்ன மொழி யாமே

உண்டபின் முழுகை யாலும் ஓங்கிய வெப்பி னாலும்
மண்டிய தண்ணீ ராலும் மாதர்தங் கோஷ்டி யாலும்
பண்டுபல் விளக்கா தாலும் பசுவின் பாலுண்ணா தாலும்
கொண்டல்சேர் குழலி னாளே நயனம்கோ பிக்கு மென்றே. 47

விடுமுமி பூர நெல்லின் வால்விழுங் கையா லன்னம்
முடுகவே யருந்திப் பின்னும் முசிவறச் செரியா தாலும்
கடுகவுண் டோடி னாலும் காலடி சுடுகை யாலும்
மடுவுறு தண்ணீர் தன்னை வலியவுற் றுண்கை யாலும் 48

மாதர் மயக்கத்தாலும், மூலத்தில் அக்கினி அதிகரிப்ப தாலும், மேக நீராலும், மலக்கட்டி னாலும், எண்ணெய் முழுக்குத் தவறாலும், அதிக விசனத்தாலும், கடு வெய்யிலில் ஓயாது நடப்பதாலும், அதிக கனம் எடுப்பதாலும், அடக்கி நித்திரை செய்வதாலும், ஆழ்ந்த பார்வையினாலும் கண்ணோய்கள் வரும். 49

பெரியோரைத் தூஷித்தாலும், நற்பெண்டிரைக் கெடுக்க நினைத்தாலும், மேகத்தாலும், ஓயாத அனுபோகத்தாலும், பதார்த்த பேதங்களாலும், கடுநடையாலும், அகால போசன சங்கைகளாலும், பொறியிற் சூடு உண்டாகி, மூளை கெட்டு கண்ணோய் தொண்ணூற் றாறும் சம்ப விக்கும். 50

பாரே பொடிச்சுடல் பருவெய்யில் மேற்படல்
வாரேறு கொங்கையாள் மாயை மிகச்செய்யல்
காரே முழுக்காற்றல் கண்ணா லனல்பார்த்தல்
சீரேறு பாடாணந் தின்றதாற் கண்ணோயே. 51

கண்ணோய் வருகின்ற காரண மின்னங் கேள்
பண்ணான மேகத்தால் பருவெட்டை வாயுவால்
தண்ணா மலக்கட்டால் தனசலக் கட்டினால்
[1]புண்ணா மிரணத்தாற் போடுங் காரமே. 52

காரச் சுறுக்கால் கடுமாசு தூமத்தால்
நேரொத்த சார நிறைமூக்கின் வாசத்தால்
பாரொத்த பேதியால் பலபல தண்ணீரால்
சீரொத்த கண்ணிற் சிறக்கும்வி யாதியே 53

கேளப்பா பொடிச்சுட் டாலுங் கிராவெயில் காய்ந்த தாலும்
வாளப்பா மின்னார் தம்மை மருவியே நித்தந் நித்தம்
காளப்பா முழுக்கில் லாதால் கண்ணினா லனல்தான் பார்த்ததால்
தாளப்பா பாடா ணத்தால் தானெடுங் கண்ணோய் பாரே. 54

கண்ணில்நோய் தானுண் டாகுங் காரண மின்னுஞ் சொல்வேன்
பண்ணான மேகத் தாலும் பருவெட்டை வாயு வாலும்
தண்ணான வப்பு வாலும் தனிமலக் கட்டி னாலும்
புண்ணான விதனத் தாலும் பொடியுநற் காரத் தாலே 55

காரமாஞ் சாரத் தாலும் கருரசத் தூமத் தாலும்
நீரமாஞ் சரகுச் சுட்ட நிலையுறு புகையி னாலும்
மீரமா பேதித் திட்ட பித்தங்கள் மிகுதி யாலும்
சீரமா மிவற்றாற் கண்ணில் செனித்திடும் வியாதி தானே. 56

கருதியதோர் கண்ணில்வந்த வியாதி யேது
காரணந்தான் சொல்லுகிறேன் கட்டாயங் கேளு
ஒருதியென்ற மாதர்களை யுற்றுப் பார்த்து
[2]உடனேங்கி யேக்கமுற்ற வருபா வந்தான்
[3]தருலுறுப்புக் குறைந்தோரைப் பழித்த தாலும்
சத்தியதோ டத்தாலும் தயவற்ற தாலும்
விருதுடனே வல்லுயிரைக் கொல்லக் கண்டு
விலகாமற் பார்த்திருந்த வீறி னாலே. 57

[4]வீறான பலபாவஞ் செய்கை யாலும்
மிக்கசிவா லயங்கள்தனை விரும்பா தாலும்
வேறாகப் பிற்றிடுக்கஞ் செய்கை யாலும்
மெய்யதினைப் பொய்யென்ற வியப்பி னாலும்

---

பா.வே.

1. புண்ணா மிரணத்திற் போடுங் காரத்தாலே
புண்ணா மிரணத்தாற் போடுங் காற்றாலே

கூறாத அழிவழக்குச் சொல்கை யாலும்
கூர்விழியில் நோய்கள்வரும் கொடுமை யாக
ஆறான தொண்ணூற் றாறதாம் வியாதி
அதிகமாங் கர்மமடா அறிந்து சொல்லே. 58

சொல்வ தென்ன கர்மம்வந்துத் தொடர்ந்த தானால்
சூத்திரமாந் தானதர்மம் செய்ய வேணும்
சொல்வ தென்ன கோவில்குளந் தீர்த்த வாசம்
சிவனோடு பஞ்சகர்த்தா தரிசனம் பூசை
வெல்வ தென்ன கோவில் குளம் கிணறு வெட்டல்
வேதியர்க்குத் தானதர்ம மறிந்து செய்யல்
கொல்வதனை நீக்கியிரப் போற்கு மீதல்
குருபாதந் தனைப் பழித்தல் கொள்கை யாமே. 59

ஆமிந்த லோகத்தி லிருக்கும் போது
அளவிறந்த கர்மமடா ஆர்தான் வெல்வார்
தாமிந்த கர்மமொன்று மணுகா தப்பா
சார்வான சிவயோகி தவத்தி னாலே
வாமிந்த தேவர்சிவ பூசை யாலே
மகத்தான தர்மமென்ற குளிகை யாலே
ஓமிந்த பெரியோர்க ளான வாறும்
உலகிலுள்ளோர் தமக்குதவி தர்மந் தானே. 60

தர்மமது செய்வதற்குக் கசந்தா யானால்
சண்டாள பாவம்வந்து சளக்கும் பாரு
வர்மமெனுங் காசமது கண்ணில் வந்து
மருவியே யிருவிழியு மறைத்துக் கொள்ளும்
கர்ம மென்னுங் காசநீர் முதலா யுள்ள
கர்மாந்திர நோய்கள் வந்தால் கருதக் கேளு
நிர்மலமா மிரும்பியங் காந்த மீயம்
இரண்டுடனே கெந்தியரி தாரம் வீரம். 61

---

பா. வே.

2. உடனேங்கி மோகமுற்ற உறுபாவற்தான்
3. கருதியே யுருக்கொண்டு பழித்த பாவம்
கனசத்தி யந்தவழி யிழத்த லாலும்
4. வீறான பலபாவஞ் செய்த தாலும்
விளை விழியில் நோய் வளரும் வெகு வாயப்பா

## 3. கண் நோய்களின் பெயர்கள்

கண் நோய்களின் பெயர்கள் பற்றிய விளக்கங்களைச் சில சுவடிகளில் முழுமையாகக் காணமுடிகின்றது. சிலவற்றில் நோய்களின் பெயர்கள் தனியாகக் கூறப்படவில்லை. நோய்ப் பெயர்களை அவற்றின் தன்மை விளக்கங் கூறுமிடத்தே காணலாம். நோய்களின் பெயர்களைத் தனியாகக் கூறும் சுவடிகளிலிருந்து பாடல்கள் இங்குத் தொகுக்கப்பட்டுள்ளன. (62-75)

### நோய்களின் எண்ணிக்கை

கண் நோய்களின் எண்ணிக்கை மொத்தம் 96 என்றே எல்லாச் சுவடிகளும் கூறக்காணலாம். ஆயினும் சில சுவடிகளில் 96 என்னும் எண்ணிக்கைக்குக் குறைவாகவே பெயர்கள் கிடைக்கின்றன.

### நோய்களின் வகை தொகை

கண்ணின் பகுதிகளாகிய கருவிழி, வெள்ளைவிழி, இமை, குவளை இவற்றில் தனித் தனியே தோன்றும் நோய்களின் பெயர்கள் 4 வகைகளாகக் கூறப்படுகின்றன. முறையே 45, 20, 16, 15 என்னும் எண்ணிக்கையுடன் மொத்தம் 96 பெயர்கள் கூறப்படுகின்றன.

இவ்வாறு வகைப்படுத்தாமல் கண்ணில் தோன்றும் நோய்கள் 96 என்றே சில சுவடிகளில் இருக்கக் காணலாம். இவற்றைத் தனித் தனியே பின்வருமாறு அறியலாம்.

முதல் வகை (62-63)

## I. கருவிழியில் தோன்றும் நோய்கள்—45

### 1. காசம்-8

1 வாத காசம்
2 சேற்பன காசம்
3 வால காசம்
4 விரண காசம்
5 கற்ப காசம்
6 பித்த காசம்
7 நீலகாசம்
8 மந்தாரகாசம்

### 2. படலம்-7

1 கருநாகப் படலம்
2 அதிமாங்கிசப்படலம்
3 பசுவிழிப் படலம்
4 சதைப் படலம்
5 இரத்தப் படலம்
6 நீரெழுச்சிப் படலம்
7 வரியெழுச்சிப் படலம்

### 3. குமுதம்-3

1 கருங்குமுதம்
2 வெண் குமுதம்
3 செங்குமுதம்

### 4. விழியுந்தல்-3

1 கருவிழியுந்தல்
2 இரத்த உந்தல்
3 சதை உந்தல்

### 5. நெரிசல்-3

1 சோரை நெரிசல்
2 உட்டிண நெரிசல்
3 நீர் நெரிசல்

### 6. வரி-3

1 சோரி வரி
2 நீர் வரி
3 செறி வரி

### 7. குந்தம்-3

1 சதைக் குந்தம்
2 நீர்க் குந்தம்
3 இரத்தக் குந்தம்

### 8. திமிரம்-7

1 வாத திமிரம்
2 சேற்பன திமிரம்
3 மாலைக் கண்
4 மந்தாரத் திமிரம்
5 வறட்சித் திமிரம்
6 நீர்த் திமிரம்
7. வெள்ளெழுத்து

### 9. சுக்கிரன்-5

1 விரண சுக்கிரன்
2 நண்டுக்கண் சுக்கிரன்
3 விழி விழுங்கிச் சுக்கிரன்
4 வெளுத்த சுக்கிரன்
5 அனல் சுக்கிரன்

### 10. பூ-3

1 ஆணிப் பூ
2 உந்தல் பூ
3 புகைப் பூ

## II. வெள்ளை விழியில் தோன்றும் நோய்கள்–20

### 1. எழுச்சி-5

1 உந்தல் எழுச்சி
2 விரண எழுச்சி
3 வரி எழுச்சி
4 குவை எழுச்சி
5 நீர் எழுச்சி

2. படர்த்தி-3

1 சதைப் படர்த்தி
2 வரிப் படர்த்தி
3 சோரிப் படர்த்தி

3 நெரிசல்-3

1 துளி நெரிசல்
2 உந்து நெரிசல்
3 விரண நெரிசல்

4. புற்று-3

1 சதைப் புற்று
2 நீர்ப் புற்று
3 அழல் புற்று

5. குமிழ்-3

1 மாங்கிசக் குமிழ்
2 நீர்க் குமிழ்
3 இரத்தக் குமிழ்

6. வரி-3

1 நீல வரி
2 வெள்ளை வரி
3 இரத்த வரி

## III. இமையில் தோன்றும் நோய்கள்-16

1. பில்லம்-3

1 நீர்ப் பில்லம்
2 குடப் பில்லம்
3 பில்லம்

2. பற்பரோகம்-3

1 நீர் பற்பரோகம்
2 இரத்த பற்பரோகம்
3 சதை பற்பரோகம்

3. கழலை-3

1 சதைக் கழலை
2 நீர்க் கழலை
3 இரத்தக்கழலை

4 இமைத் தடிப்பு
5 இமைநீர்ப் பாய்ச்சல்
6 இமைமுடரோமம்
7 இழிசக்கண்
8 இமையிறைச்சி
9 இமைப்புழுக்கடி
10 சுற்றுக் குலைவு

## IV குவளையில் தோன்றும் நோய்கள்-15

1 கண்ணொடு
2 பூசாந்திரம்
3 நீர்ப்படர்த்தி
4 இரத்தப் படர்த்தி
5 சதைப்படர்த்தி
6 நீர்க்குவை
7 இரத்தக் குவை
8 சதைக்குவை
9 விரணப்பரு
10 விப்புருதி
11 இமைக்குரு
12 இமையிறுகட்டி
13 நயன வாதம்
14 நேத்திரவாய்வு
15 கண்ணோவு

## 96 வகையான கண் நோய்களின் பெயர்கள்

இரண்டாம் வகை (64)

1 அக்கரரோகம்
2 அவிகாய விரணம்
3 உக்கிர ரோகம்
4 உடைந்தெழுகாசம்
5 சாய்கண் குருடு
6 இமைத் தடிப்பு
7 தினவு
8 துய்யகண் குருடு
9 சுக்கிர ரோகம்
10 மாலை காசம்
11 சுழல்வண்டெரிதல்
12 அன்னகோபம்
13 மருவுகண் சிவப்பு
14 ஊறு காசம்

15 எரிவிழிமழுங்கல்
16 பற்பரோகம்
17 அதிமந்தம்
18 குவளையெரிதல்
19 அழிகண் பிரிதல்
20 சோதிகா விரணம்
21 மணிநீலகாசம்
22 படிகுந்தம்
23 மதனமந்தாரம்
24 நாகபடலம்
25 நீர்ப்பாய்ச்சல்
26 அரூபம்
27 வெள்ளைப் படலம்
28 கண் விரணம்
29 நீரெழுகாசம்
30 நீலகாசம்
31 குமரிதன் காசம்
32 வாத காசம்
33 அழற்சி
34 மயிர்க்குத்து
35 கண் குரு
36 அடைந்தெழுந்திடுதல்
37 பருமுளை
38 எழுச்சி
39 வெள்ளெழுத்து
40 துன்மாங்கிஷம்
41 உருவிப்புடைத்தெழுதல்
42 பறவைப் பூ
43 பஞ்சணிப் படலம்
44 அமரம்
45 புகைச்சல்
46 அதிமந்தாரம்
47 திமிரம்
48 சோதி நெரிதல்
49 செவ்வேர்
50 முடமயிர்
51 அந்திர காசம்
52 கண்ணோவு
53 சுந்திரரோகம்
54 எழுநாயிறு
55 கூசி விழித்தல்
56 குவளை நெரிதல்
57 காசமுறுக்கி
58 மாலைக் கண்
59 துன்னுகாசம்
60 சுழல்விழி எரித்தல்
61 பக்கப்படுவன்
62 அக்கரம்
63 பில்லம்
64 அழித்திடு பிரிதல்
65 பித்தகாசம்
66 பிறவிக் குருடு
67 துத்திடு காசம்
68 துண்ணுவெண் புகைச்சல்
69 சோர்கண் துடிப்பு
70 வருஞ்சலரோகம்
71 வெண்ணோக்காடு
72 சுழற்றிடு பில்லம்
73 மயிற்புழு வெட்டு
74 விதனமந்தாரம்
75 வளைந்தெழுரோகம்
76 சுடர்பல தோற்றல்
77 வீங்கி விழித்தல்
78 மதன மந்தாரம்
79 சுடரதி மாங்கிவும்
80 ஊடை எழுச்சி
81 வாரெழுகாசம்
82 உயர்ந்து கண்புடைத்தல்
83 வால காசம்
84 நீர்ப்பில்லம்
85 மந்தார காசம்
86 குவளை விப்புருதி
87 கும்பிமைத் தடித்தல்
88 குவளை காசம்
89 கொடும்புழு வெட்டு
90 வளைகீ காசம்
91 அந்தர விரணம்
92 இமையோடரதல்
93 நத்தைப்படுவன்
94 குவளைப் படுவன்
95 புத்தியழித்தல்
96 பொங்கிய விதனம்

மேற்கண்ட இரண்டு வகையான 96 பெயர்களுள் பல பெயர்கள் இரண்டிலுமே வரக் காணலாம்.

இவ்வாறே வேறு சுவடிகளிலும் இத்தகைய பெயர்கள் பொதுவாகக் கூறப்பட்டுள்ளன. இவை தவிர விளக்கமுள்ளனவாயும் விளக்கம் இல்லாமல் வெறும் பெயர்களாயும் வேறு சுவடிகளில்

கண் நோய்களின் பெயர்கள் கிடைக்கின்றன. இவற்றை ஒன்றாகத் தொகுத்து நோக்குமிடத்து 350க்கும் மேற்பட்ட பெயர்கள் கிடைக்கக் காணலாம்.

## நோய்களில் தீரும் தீராதனவற்றின் எண்ணிக்கை

கருவிழி, வெள்ளை விழி, இமை, குவளை இவற்றில் தனித் தனியே தோன்றும் நோய்கள் 96 எனக் கூறும் சுவடிகளில், தீரும் நோய்கள் 62 என்றும் தீராதன 34 என்றும் கூறப்படுகின்றன.

இவற்றுக்கான விளக்கங்கள் உரைநடையிலும் பாடலின் பிற்பகுதியில் இணைக்கப்பட்டுள்ளன.

### கண் நோய்கள் தொண்ணூற்றாறுக்கும் பெயர்கள்

கண்மணியில் வெள்ளையினிற் காட்டுமிகைக் கண்கடையிற்
தொண்ணூறு மாறுமுள தோஷங்கேள்—வண்ணமுலை

(கருவிழியில்)

மாதரசே கேளாய் வளர்வாத காசமுடன்
நீலகற்ப மான நிகழ்காசம்—மேலான

காருற்ற மந்தார காசமே தைப்படலம்
பாரித்த (ரத்தப்) படலமுடன்—நீரெழுச்சிப்

படலமும் (மாங்கிசம்) பின்வரி யெழுச்சிப்
படலங் கருநாகப் படலந்—திடமுடனே

பசுவின் விழிப்படலம் பாங்கான செங்குமுதம்
விசியின் குமுதமுடன் வெண் குமுதம்—பிசிதமுடன்

காணும் விழியினுந்தல் கருவிழியி லேயுந்தல்
ஈணிரத்த வுந்தலுட னேற்கையாம்—நீணிதமாம்

உட்ண நெரிச லுடன்நீர் நெரிசலதும்
நெட்டுலவுஞ் சோரையாம் நெரிசல்—முட்டிவரும்

நீர்வரியுஞ் சேர்வரியும் நீள்சோரை யின்வரியும்
ஏர் சிறந்த நீர்க்குந்தம் ரத்தகுந்தம்—போர்சிறந்த

மேதைகுந்தம் மாலைக்கண் வெள்ளெழுத்தி னோடுமிகு
தீதில்லா மந்தாரத் திமிரமுடன்—நீதமில்லா

வறட்சி யெனுந்திமிரம் வாதத் திமிரமுடன்
சிறக்கு நீர்த்திமிரஞ் சேற்பனத் திமிரம்—மருட்சுக்கிரன்

முழுத்தநண்டுச் சுக்கிரனும் விழிவிழுங்கிச் சுக்கிரனும்
அழுத்தமாய் வெளுத்த அனற்கக்கிரன்—செழித்துவரும்
ஆணிப்பூ உந்தல்பூ அழுந்துநீர்ப் பூவுடனே
நாணுங் கருவிழிக்குள் நாற்பத்தைந்து—கோணில்லா

(வெள்ளை விழியில்)

வெள்ளை விழியானதிலே வியாதியதைச் சொல்லுவன்கேள்
கொள்ளு மரியெழுச்சி குவையெழுச்சி—தள்ளிவரும்
உந்த லெழுச்சியுட னோங்கியநல் நீரெழுச்சி
இந்த விரண யெழுச்சியுடன்—வந்ததொரு
நீர்ப்படர்த்தி தானதுவும் நீடுமிரத் தப்படர்த்தி
தூர்சதையின் தன்படர்த்தி துளிநெரிசல்—வார்ப்பதுடன்
உந்து நெரிசலுட னோங்கு விரணநெரிசல்
அந்தமுள்ள நீர்ப்புற்று ரத்தப் புற்றுச்—சந்தில்வரும்
சதைப் புற்று நீர்க்குமிழுஞ் சாரிரத்த மாங்குமிழும்
விதமான வாக்குமிழும் வெள்ளைவரி—சிதைவில்லா
நீலவரி சோரைவரி நேருமிமைத் தோஷங்கேள்

(இமையில்)

கோலநீர்ப் பில்லங் குடப்பில்லஞ்—சாலவே
மூடுமாம் பில்லம் முடரோம மிமைத்தடிப்பு
நீடுமிழி கண்ணும் நீர்ப்பற்பம்—கூடிவரும்
இரத்தபற்ப ரோகத்தோ டிரத்தக் கழலையும்நல்
உரத்திடு மாங்கிச பற்பரோகங்—கரத்தினிலே
வாங்கரிய நீர்க்கழலை வளர்மாங்கி சங்கழலை
தூங்குமிமை நீர்ப்பாய்ச்சல் சுற்றுக்குலைவு—மீங்கியநற்
புழுங்கடியோ டிமையிறைச்சி புகழ்ந்தேயீ ரெட்டென்வுரு
செழிப்பாய்க் கண்கடையிற் சேரும்நோய்—விழுப்பமுடன்

(குவளையில்)

சதைப்படர்த்தி நீர்ப்படர்த்தி சாற்றுரத்த மாம்படர்த்தி
சதையும்பூங் கண்ணொடுபூ சாந்தரமே—துதையவரும்
விப்புருதி தன்னோடு மேவியதோர் நீர்க்குவையுங்
கொற்றமா மிமைமாங் கிசக்குவையு—மொப்பரவாய்

கோமள மாரத்த குவையுடனே யிறுகட்டி
சேமமுள கண்ணோவு சேர்ந்தபரு—ஆமெனவுங்

கண்நயன வா தமுடன் கலந்தநேத் திரவாய்வு
எண்ணிய மூவைந்தெனவு மேற்றினோம்—விண்ணொளிசேர்

கண்மணியில் வெள்ளையினில் கண்ணிமையில் சொல்லிய
கண்கடையில் தோஷவிதஞ் சொல்லுவன்கேள்—
நல்லநாற்பத்தைந்து

மூதிரு மீரெட்டு மூவைந்தென் றோதினார்
காதிற் சிறந்த பொதிகைமுனி காண் 62

(கருவிழியில் – தீரும் நோய்கள்)

சீர்மேவு கண்மணியிற் தீருஞ்சாத் தியம்புகல்வேன்
வார்மேவு கொம்மைமுலை மானேகேள்—பேர்மேவும்

மந்தார காசமொடு வாழ்பித்த காசமெனுங்
கந்தாரு மேநீல காசமுடன்—விந்தையொடு

சேருஞ் சதைப்படலஞ் சிவக்குஞ்சோ ரைப்படலம்
வாரநீ ரெழுச்சியாம் படலம்—பாரிதமாய்

பாரும்வரி யெழுச்சிப் படலமுமே செங்குமுதம்
நேருமுட் டிணநெரிசல் நீர்நெரிசல்—நீரின்வரி

துளங்குமாஞ் சேர்வரியும் சோரைவரி நீர்க்குந்தம்
விளங்குஞ் சதைக்குந்தம் வெள்ளெழுத்து—முழங்கிவரும்

வாயுமந்தா ரத்திமிரம் வறட்சித் திமிரமொடு
மேவுமா நீர்த்திமிரம் வெளுத்தசுக்கிரன்—தாவுமனல்

(வெள்ளைவிழியில்—தீரும் நோய்கள்)

சுக்கிரநீர்பூ வெள்ளையிற் சொல்லுவன் சாத்திகத்தை
ஒக்கும் வரியெழுச்சி நீரெழுச்சி – மிக்கதொரு

குவையெழுச்சி நீர்ப்படர்த்தி கூறுஞ்சதைப் படர்த்தி
நிவருந் துளிநெரிசல் நீர்நெரிசல் நீர்ப்புற்று—நவமாக

உந்து நெரிச லுடனாஞ் சதைப்புற்று
நிந்தைசேருஞ் சுரோணிதநெரிசல் நீர்க்குமிழும்—வந்ததொரு

மேல்மாங்கி சக்குமிழும் வெள்ளைவரி ரத்தவரி
சேலிமையின் சாத்திகத்தைச் செப்புவேன்—ஆலமாம்

(இமையில்—தீரும் நோய்கள்)

பில்ல மிழிசக்கண் பெருஞ்சதை பற்பம்
வல்லமையா கப்பெருத்து வந்ததொரு—சொல்லிய நீர்க்
கழலைமாங் கிசக்கழலை கருயிமையில் நீர்ப்பாய்ச்சல்
கிளருஞ்சுற் றுக்குலைவு கிருமிகடி—வளமையுடன்
கூடு மிமையிறைச்சி குவளைசாத் திகம்புகல்வேன்

(குவளையில் – தீரும் நோய்கள்)

நீடுபூ சாரமுட னீர்ப்படர்த்தி...
ஓடுரத்தப் படர்த்தியுடனே சதைப்படர்த்தி
நீடுமா மிசக்குவையும் நீர்க் குவையுந்—தேடரிய
இரத்தக்குவை யும்நாடு மிறுகட்டியும் விப்புருதி
கரத்து மிமைக்குருவு கண்ணோவு—உரைத்ததெலாம்

(கருவிழியில் – தீராத நோய்கள்)

கருவிழியிற் சாத்திகமா யாறுமென்றார் காரிகையே
செருமவாத காசஞ்சேற் பனகாசம்—வருவால
காசம்பின் னேவிரண காசங் கற்பகாசம்
பாசநா கப்படலம் பாரித்து—வீசிவரும்
அதிமாங் கிசப்படலம் ஆவின் விழிப்படலம்
மதிரங் கருங்குமுதம் வெண்குமுதஞ்—சதிருடனே
கருவிழியி லேயுந்தல் கனக்கும் விழியுந்தல்
சுருவார்த்த வுந்தல்சுரோ ணிதவுந்தல்—நெரிசல்ரத்தக்
குந்தமொடு மாலைக்கண் கூலவா தத்திமிரம்
விந்தைசேற் பனத்திமிரம் விரணசுக்கிரன்—முந்தவுள
நண்டுக்கண் சுக்கிரனும் நாட்டுமா ணிப்பூவுந்
துண்டு விழிவிழுங்கிச் சுக்கிரனும்—கண்டதொரு
உந்தல்பூ வாகுமிது ஓதுவேன் வெள்விழியில்
முந்தசாத் தியகுணங்கேள் மொய்குழலே—சிந்தியதோர்

(வெள்ளை விழியில் – தீராத நோய்கள்)

விரண யெழுச்சியுடன் மீறுமுந்த லாமெழுச்சி
அருணரத்த மாய்ப்படர்த்தி அனற்புற்றுத்—திரமான

வளர்மாங் கிசக்குமிழும் வாங்கரி ரத்தவாரி
அளகு மிமையசாத் தியங்கேள்—வளமான

(இமையில்–தீராத நோய்கள்)

நீர்ப்பில்ல மிமைத்தடிப்பு நீடுங் குடப்பில்லம்
ஓரான நீர்ப்பற்ப ரோகஞ்—சேருமிந்தப்

பற்பரோ கத்தினுடன் பருக்குஞ்சோ ரைக்கழலை
முற்ற பா டுரைத்த முடரோமம்—அற்புதமாய்

(குவளையில்–தீராத நோய்கள்)

நயனக் கடையினிலே நாட்டுமசாத் தியம்புகல்வேன்
செயலான தேர்வர்கள்முன் செப்பியது—இயல்வான

கண்ணொடுநேத் திரவாதங் கலருங்கண் வாய்வுடன்
வண்ணப் பருவமது மாதேகேள்—எண்ணிலது

சாத்திகம்ஆ றொன்பதென்று சாத்தியம்பின் னேமொழிந்த
தோற்று மசாத்தியத் தொகைசொல்வேன்—நேற்றியதாய்

*நாற்பத்தெட் டொன்றெனவு நாடுந் தமிழ்முனிவன்
ஏற்பாகச் சொன்னா னிது. 63

கண் வியாதி தொண்ணூற்றாறுக்கும் உரை

கருவிழித் தோஷம்

கருவிழித் தோஷம் நாற்பத் தைந்துக்கும் பெயர்:—

காசம் எட்டு, படலம் ஏழு, குமுதம் மூன்று, நெரிசல் மூன்று, வரி மூன்று, குந்தம் மூன்று, திமிரம் ஏழு, சுக்கிரன் ஐந்து, பூ மூன்று,‡ ஆக வியாதி நாற்பத் தைந்து.

வெள்ளை விழித் தோஷம்

வெள்ளை விழித் தோஷம் இருபதுக்கும் பெயர்:–

எழுச்சி ஐந்து, படர்த்தி மூன்று, நெரிசல் மூன்று, புற்று மூன்று, குமிழ் மூன்று, வரி மூன்று, ஆக வியாதி இருபது.

---

* எண்ணிக்கை உரையுடன் பொருத்தமாக இல்லை.

‡ விழியுந்தல் மூன்று—சுவடியில் எழுதப்படவில்லை,

## இமையில் தோஷம்

### இமையில் தோஷம் பதினாறுக்கும் பெயர்:-

பில்லம் மூன்று, பற்பரோகம் மூன்று, கழலை மூன்று, இமைத் தடிப்பு, இமை நீர்ப் பாய்ச்சல், இமை முடரோமம் இவை மூன்று இழிசக்கண், சுற்றுக் குலைவு, இமை புழுக்கடி, இமையிறைச்சி இவை நான்கு, ஆக வியாதி பதினாறு.

## கடைக்கண் தோஷம்

### கடைக்கண் தோஷம் பதினைந்துக்கும் பெயர்:-

கண்ணொடு, பூசாந்திரம், இரத்தப் படர்த்தி, சதைப் படர்த்தி, நீர்ப்படர்த்தி இவை ஐந்து. நீர்க்குவை, சதைக்குவை, இரத்தக்குவை, இவை மூன்று. இமைக்குரு, இமைப்பரு, இமை யிறுகட்டி, [1]இமைக்கற்கண்டு இவை நான்கு. நயனவாதம், நேத்திர வாய்வு, கண்ணோவு இவை மூன்று.

ஆக கண் வியாதி தொண்ணூற்றாறு. வியாதியில் அசாத்தியம் முப்பத்தி நான்கு, சாத்தியம் அறுபத்திரண்டு. ஆக தொண்ணூற் றாறு.

### இதில் கருவிழியில் அசாத்தியம் இருபத்தொன்று அதற்குப் பெயர்:-

வாத காசம், சேற்பன காசம், வால காசம், விரண காசம், கற்ப காசம், இவை ஐந்து. கருநாகப் படலம், அதிமாங்கி சப்படலம் பசுவிழிப் படலம், இவை மூன்று. கருங்குமுதம், வெண்குமுதம், இவை இரண்டு. கருவிழியுந்தல், சதையுந்தல், இரத்தவுந்தல் இவை மூன்று. நெரிசல் ஒன்று, சதைக் குந்தம் ஒன்று. வாத திமிரம், சேற்பன திமிரம், மாலைக் கண் இவை மூன்று. விரண சுக்கிரன், நண்டு சுக்கிரன், விழி விழுங்கி சுக்கிரன், இவை மூன்று ஆணிப்பூ ஒன்று.

[2]ஆக, கருவிழியில் அசாத்தியத்தோஷம் இருத்தொன்று

---

1 இமைக் கற்கண்டு என்பதற்குச் சுவடியில் விளக்கம் இல்லை.

2 எண்ணிக்கை 22 ஆக உள்ளன, மாலைக்கண் அதிகமாக எழுதப்பட்டுள்ளது.

## வெள்ளை விழியில் அசாத்தியம்

வெள்ளை விழியில் அசாத்தியம் ஆறுக்கும் பெயர்:-

[1]எழுச்சி சாதி இரண்டு. சதைப்படர்த்தி ஒன்று. சதைப் புற்று ஒன்று. மாங்கிசக் குமிழ் ஒன்று. நீலவரி ஒன்று. ஆக வெள்ளை விழியில் அசாத்தியம் ஆறு.

## இமையில் அசாத்தியம்

இமையில் அசாத்தியம் ஆறுக்கும் பெயர்:-

நீ ப்பில்லம், குடப்பில்லம், இவை இரண்டு. இமைத்தடிப்பு ஒன்று. முடரோமம் ஒன்று. நீர்ப் பற்பரோகம், இரத்த பற்ப ரோகம் இவை இரண்டு. ஆக, இமையில் அசாத்தியம் ஆறு.

## குவளையில் அசாத்தியம்

குவளையில் அசாத்தியம் நயனவாதம் ஒன்று. ஆக, கண்ணில் அசாத்திய ரோகம் முப்பத்தி நான்கு.

## சாத்திகம் அறுபத்திரண்டு

இனி சாத்திகம் அறுபத்திரண்டுக்கும் பெயர்:-

கருவிழியில் சாத்தியம் இருபத்தி மூன்றுக்கும் பெயர்:-

பித்தகாசம், நீலகாசம், மந்தார காசம், இவை மூன்று. சதைப்படலம், இரத்தப் படலம், நீரெழுச்சிப் படலம், வரி யெழுச்சிப் படலம், இவை நான்கு. செங்குமுதம் ஒன்று. உஷ்ண நெரிசல், நீர் நெரிசல் இவை இரண்டு. சோரைவரி ஒன்று. நீர்க்குந்தம், இரத்தக் குந்தம் இவை இரண்டு, வெள்ளெழுத்து, மந்தாரத்திமிரம், வறட்சித் திமிரம் நீர்த்திமிரம் இவை நான்கு. வெளுத்த சுக்கிரன், அனல் சுக்கிரன் ;இவை இரண்டு. பூ, நீர்ப் பூ இரண்டு. கண்ணோவு, மாலைக்கண் இரண்டு. ஆக கருவிழி யில் சாத்திகம் இருபத்தி மூன்று.

## வெள்ளை விழியில் சாத்தியம்

வெள்ளை விழியில் சாத்தியம் பதினான்கிற்கும் பெயர்:-

வரியெழுச்சி, குவையெழுச்சி, நீரெழுச்சி இவை மூன்று. நீர்ப் படர்த்தி, இரத்தப்படர்த்தி இவை இரண்டு. துளிநெரிசல், உந்து நெரிசல், விரண நெரிசல், இவை மூன்று. நீர்ப்புற்று, இரத்தப்

1 எழுச்சி சாதி இரண்டு என்பன. உந்தலெழுச்சி விரண எழுச்சியாக இருத்தல் வேண்டும்

புற்று, இவை இரண்டு. நீர்க்குமிழ், இரத்தக் குமிழ், இவை இரண்டு. வெள்ளை வரி, சோரை வரி, இவை இரண்டு.

ஆக, வெள்ளை விழியில் சாத்திகம் பதினான்கு.

## இமையில் சாத்திகம்

### இமையில் சாத்திகம் ஒன்பதுக்கும் பெயர்:-

பில்லம், இழிசக்கண், சதைபற்பரோகம், இவை மூன்று. நீர்க்கழலை, இரத்தக் கழலை, சுற்றுக் குலைவு, புழுக்கடி, இமை நீர்ப்பாய்ச்சல், இமையிறைச்சி, ஆக இமையில் சாத்திகம் ஒன்பது.

## குவளைத் தோஷ சாத்திகம்

### குவளைத் தோஷ சாத்திகம் பன்னிரண்டுக்கும் பெயர்:-

பூசாந்திரம் ஒன்று. நீர்ப்படர்த்தி, இரத்தப்படர்த்தி, சதைப் படர்த்தி, இவை மூன்று. நீர்க்குவை, இரத்தக்குவை, சதைக் குவை. இவை மூன்று. விப்புருதி, பரு, இமையிறுகட்டி, இமைக் கற்கண்டு, இவை நான்கு. கண்ணோவு. ஆக குவளையில் சாத்திகம் பன்னிரண்டு. நேத்திர வாயு நான்கு.

ஆக, நேத்திர ரோகம் தொண்ணூற்று ஆறுக்கும் சாத்திகம் அசாத்திகம் சொல்லும்படி அசாத்திகம் முப்பத்தி நான்கு. சாத்திகம் அறுபத்திரண்டு.

இனி விருத்தமாய் வருகிற குணமும் மருந்துங் கண்டு கொள்வது.

கண் வியாதி தொண்ணூற்றாறுக்கும் உரை முற்றிற்று.

(வேறு)

அக்கிர ரோகம் அவிகாய விரணம்
உக்கிர ரோகம் உடைந்தெழுந் திடுதல்

சாய்கண் குருடு தடிப்பு தினவு
தூயவெண் குருடு சுக்கிர ரோகம்

மாலை காசம் மருவுகண் சிவப்பு
நீல காசம் நெரியொளி மழுங்குதல்

அருவிநீர்த் தும்மல் அடைந்தெழுந் திடுதல்
பரு முளை யெழுச்சி பகர்வெள் ளெழுத்தும்

சோதியில் விரணம் துன்மாங்கிச வளர்த்தி
வாத காசம் மணிகாச கண்குருடு
உருவிழி புடைத்தல் உயர்ந்தெழு காளான்
பறவைப் பூவொடு பஞ்சுநீர்ப் படலம்

அமரம் புகைச்சல் அதிமந் தாரம்
திமிரம் சேர்நெறி செவ்வேர் முடமயிர்

அந்திர காசம் அழற்சிசண் ணோவு
சந்திர ரோகம் தலையெழு நாயறு

கூசி விழித்தல் குவளை நெரித்தல்
காச மிறைச்சி கண்விர ணம்பூ

துண்ணுங் காசம் சுழல்விழி யெரித்தல்
அன்ன கோபம் அழைத்திடு மாலைக்கண்

பக்கப் படலம் பற்ப ரோகம்
அக்கரம் பில்லம் அழித்திடும் பிரிதல்

பித்த காசம் பிறவிக் குருடு
துத்திடு காளான் துண்வெண் புகைச்சல்

கண்ணி லெழுச்சி கண்குவளை நெரித்தல்
வெண்ணோக் காடு விரண சுக்கிரன்

சூழ்ந்திடும் பில்லம் சேர்க்கண் துடிப்பு
வாழ்சல ரோகம் மயிர்ப்புழு வெட்டு

விதனமந் தாரம் வீங்கும் விழியனல்
மதனமந் தாரம் வளர்தெழு ரோகம்

சுடர்பல தோன்றல் சூட்சி மாங்கிசம்
உடர்வுகண் புடைத்தல் உவரெழு காசம்

வால காசம் வருவிழி காசம்
ஓலநீர்ப் பில்லம் ஓர்நீர்ப் பாய்ச்சல்

குவளைவிப் புருதி குன்றிமைத் தடிப்பு
குவளை காசம் கொடும்புழு வெட்டு

மந்தார காசம் [1]வளையில் காசம்
அந்திர விரணம் இமையோ டுறுத்தல்

---

பா. வே.

1. வளைகீ காசம்

நத்தைப் படுவன் நற்குவ ளையொடு
[2]புத்து எழுந்திடும் பொங்கிய விதனம்
எண்ணிய வியாதிகள் தொண்ணூற் றாறுங்
கண்ணில் வினையெனக் கருத லாகுமே. 64

(வேறு)

பூங்கொடி யுமையாள் பொருந்தியே கேட்க
வீங்குநீர்க் கங்கை விரிசடை யரனார்
ஓங்கிய விழியில் உறும்பிணி யவற்றின்
பாங்குறு பலவாம் பண்பினை யுரைத்தார்
வாதமும் பித்தமும் சிலேத்துமந் தன்னால்
தீதுற விழியில் சேர்ந்தநோய் வகையும்
அன்னவை தீர்க்கும் அவிழ்தநன் முறையும்
சத்திர வினமும் சாத்திர விதியும்
நரம்பறிந் தனற்கோல் நாட்டிடு நெறியும்
சாத்தியா சாத்தியம் தானறி வழியும்
நேர்த்தியாய் விரித்து நிகழ்த்திடு வாமால்
நேத்திர ரோக நெடும்பெயர் கேளாய்
சுக்கிரப் படுவன் சோதி நெரித்தல்
மிக்க வீக்கம் விதன முடமயிர்
நத்தைத் தூறுபோல் நடுவிழி புடைத்தல்
பித்த காசம் பிறவிக் குருடு
நாக படலம் நன்விழி விழுங்கி
திமிலம் திமிரம் சிலேத்தும காசம்
அமர மெழுச்சி அந்திர காசம்
சோதி விரணம் துர்மாமிச வளர்ச்சி
கோதிலா விழியில் குருதிசீழ்ப் பிடித்தல்
நிமைவிழி மாமிசம் நெறுக்கிப் பிடித்தல்
விழிகண் குருடு முன்னிமைக் குத்து
அழிகண் புழுவெட்டு அடர்ந்துகண் பிரித்தல்
முத்த காசம் முதுதிமிர் காசம்
இரத்தப் படலம் நீர்ப்பற்ப ரோகம்

---

2. புத்தி யற்றிடும் பொங்கிய விதனம்.

கருவிழி யுடைந்து கண்மணி விழுதல்
சிறிய பயறுபோல் சிதறின முளைகள்

பரவைப் பூவொடு பஞ்சுநீர்ப் படலம்
அருவிநீர்த் தும்மல் மதுவர்ண காசம்

கடைக்கண் படலம் கண்குரு காசம்
கூறிய உதிரம் குருதியாய் வடிதல்

படலம் பூப்போல் பிரிந்து பூப்படர்தல்
குவளைக் காசம் கூர்மைவெள் ளெழுத்து

கவலைகள் மிகவாய்க் கண்விழி கனத்தல்
சிதறின புள்ளிபோல் சிறிய பூக்கள்

மாலை காசம் மயிர்க்குத் துடனே
நீல காசம் நிமைக்கண் துடிப்பு

உருவிழி புடைத்து டைந்தெழுங் காளான்
கருவிழி வெண்விழி கனக்கவே புடைத்தல்

வெள்ளை விழியில் விளங்குதுர் மாமிசம்
ஒள்ளிய விதழ்போ லுதித்திடும் பில்லம்

வலிசிவப் பாலே வருஞ்சில பூக்கள்
அலரிப் பூப்போல் அதுசில சிவப்பு

புற்று வளர்ந்து புடைப்புப் புடைப்பாய்
துத்திடு மாமிசம் சொரிநீர்ப் பில்லம்

மையிருள் காசம் வளர்சொரிப் பில்லம்
மேனிமைப் படுவன் நற்புழு மேய்ச்சல்

வெள்ளை விழியில் விரணம்சீழ்ப் பற்றி
தள்ளிய சூடு தான்வளைந் திடுதல்

பீளைகள் சாரல் பொங்கியநீர் வீழ்தல்
நீளவே நிமையில் உறுத்தல் நிமைப்பரு

கரணை முளைபோல் கண்டிடும் நிமையில்
குருவு களினாலே கொதறிப்பூ படுதல்

மாதுளம் பூப்போல் வலித்திடும் சிவப்பு
வாத காசம் வருங்குமரி காசம்

அதிக புணர்ச்சியால் ஆனதோர் மந்தம்
கூர்மைப் பார்வையால் கூடின மந்தம்

சூரிய கிரணத்தால் தோன்றிடு மந்தம்
உட்டண வளர்த்தியால் உதித்திடு மந்தம்

மேக வெட்டையால் மிகுந்திடு மந்தம்
சாத்திர நெறியைத் தவிர்ந்து செய்கின்ற

தைல மதனாற் சார்ந்திடு மந்தம்
கிரந்தி சூலையால் கெட்டிடு மந்தம்

அடிகள் பட்டு அடைந்திடு மந்தம்
படிக வெண் விழியில் பலவிதம் புடைத்தல்

உளுத்தம் பயறுபோல் ஒருதர முளைகள்
தெளிந்தவெண் விழியில் செவ்வோர் வீழ்தல்

இஷ்ட நீர்க் காசம் எழுநிமைக் கழலை
அன்ன கோபம் அழற்றிய கூச்சம்

மேனிமை சரிந்து விழுந்திடுந் தொங்கல்
தினவுத் தடிப்பு தேர்ந்தெழு நாயிறு

கண்கரு விழியில் கண்சவ்வு மூடுதல்
கருகின புகைபோல் கறுத்த சிவப்பு

வெருவிய கருவிழி விழுகும் செவ்வோர்
நவ்விவேல் விழியில் நயந்திடும் சூம்பல்
கொவ்வைப் பழத்துக் கொத்துபோல் மாமிசம்

கண்விழி கபாலம் கண்ணிமைக் குடைச்சல்
கொம்மையாய் வருகுங் குவளைவிப் புருதி

வால காசம் வகையறி பயனும்
ஏலவார் குழலார்க் கிதமுட னுரைத்த

எண்ணிய வியாதிகள் தொண்ணூற் றாறும்
கண்ணினில் வினையெனக் கருத லாமே. 65

(வேறு)

சொல்லு மளித ரானவர்க்குத் தொகுத்த ரோக நயனவிதி
புல்லுந் தொண்ணூற் றாறுவிதம் புகன்றார் முனிவ ராலவர்கள்
அல்லும் வியாதி தானகல அறைந்தார் மருந்து பலவிதமாய்
வல்ல வாயுர் வேதங்கண்டு வகுத்துச் செய்வோர் பண்டிதரே. 66

பாரும் வாத காசமெனப் பகர்ந்த பித்த காசமுமாம்
சேருஞ் சிலேத்ம வதிகாசஞ் சிறந்த நீல காசமுமாம்
தீருங் குமரி காசமுடன் திரை நீ ரோடி காசமுமாம்
காரும் மந்தார காசமுடன் கழறு மிரத்த காசமுமே. 67

மேவு மகுடஞ் சலகும்பம் விளங்கும் படலம் பில்லமுடன்
தாவு மாலைக் கண்விழுங்கி தனியாம் வெண்மா சுப்படலம்
பாவு மணியாம் வளர்த்தியுடன் பகரு மந்த மதிமந்தம்
ஆவும் பருவணி சுற்றுங்கண் அறையுஞ் சுருங்கு கண்ணாமே. 68

ஆமே யுளைவு காசவெறி அன்ன கோப மனல்கோபம்
தாமே புகைச்சல் பற்பரோகம் சாற்றும் ஒட்டுக் கண்பிணியாம்
போமே நேத்திர மலங்களுடன் புகலு பாய்ச்சல் நீரருகல்
நாமே சொன்னோங் கண்பிரிவு நவின்றார் செவ்வேர் குந்தமுமே.

குந்தம் சுக்ர னமரமுடன் கூறு மக்கரம் கண்கட்டி
சந்தம் மிருகண் செவ்வலரி சாறுங் கூச்சம் ஆணிப்பூ
பந்தம் நேத்திர வாயுவுடன் பகரும் புழுவெட் டாணியென
தந்தம் வலிப்பு வெள்ளெழுத்து சாற்றும் நேத்ர வலிபாரே. 70

பாரே யழற்சி விழிநேத்ரப் பகருங் குருடு செஞ்சுடராம்
நேரே யெழுச்சி புளிச்சக்கண் நிறைந்த இழிகண் ணழிகண்ணாம்
கூரே முடமயிர்க் கண்ணிறைச்சி குறிக்குந் தொண்ணூற்
றாறுபிணி
பாரே முனிவர் மாந்தர்கட்குப் பகுத்தார் வியாதி தொகுத் தாரே.

(வேறு)

(பதினோரு நோய்கள்)

கண்ணினுள் ளெழுவி யாதி கன்னியே கேளாய் நீதான்
ஒண்ணிய ஆமை கோபம் உலாவுமந் தார காசம்
மின்னிய திமிரம் படலம் மிருசல ரூபம் பாய்ச்சல்
மன்னிய மாலை காசம் மணிநீல காச மாமே

நீரெழு காச மாகும் நினைவிலாப் பித்த காசம்
பாரினில் கண்மேல் வந்த பதினொரு வியாதி யாமே
நாரணர் தேவர் கூடி நலமது பார்த்த பின்னை
சீருடன் குணம் மருந்து செப்பினார்கே ளமிர்த மாமே. 73

(வேறு)

இரத்தப்படுவன், உள்வலி, இமைக்குழிவு, சுரோகனாங் குத்து, மயிர்க்குவளை, சிவப்புசிங்கி, காலன், இமைப்

புடைப்பு, அமரக்கண், அந்திமாலைக்கண், சந்திமாலைக்கண், விழியுள் மாலைக்கண், காசவெறி, பற்பரோகம், கோடாலி கண்' சோரி விழி, அச்சு மாங்கிசம், குவளை அழற்சி, இடுக்கண், ஒடுக் கண், மணிவிழித்தல், கருங்கண், வெங்கண், பூனைக்கண், ஊளைக்கண், நண்டுக்கால், குந்தம், கருங்குந்தம். செங்குந்தம், வெண்குந்தம், கண்கள்ளை, கண்புற்று, விழிவிழுங்கி, இரத்தப் படலம், நேத்திரவாதம், அற்புதவாய்வு, கண்கட்டி, நெறி முளைப்பு, நீர்முட்டி, புழுவெட்டு, வெள்ளெழுத்து, ஏறுபடலம், கண்ணக்கரம், அதிசோபம், அதிமந்தரோகம், கண்குரு, அழுகண், கண்ணெழுச்சி, கண்ணோசை, கண் காமாலை, திமிர், புகைச்சல், கண்கரப்பன், துன்மாங்கிசம், சந்திரோதயம் தினவு, அழல், மாலைக்கண், கறசை மேகச்சிவப்பு, சதைப்படலம், சுற்றுப் பிரிந்தகண்[1] ஆக ரோகம் 96. 74

(வேறு)

வாதகாசம், பித்தகாசம், சிலேத்துமகாசம், நீலகாசம், நீரொளிகாசம், குமரிகாசம், மந்தாரகாசம், இரத்தகாசம், சலகும்பம், பில்லம், படலம், வெண்மாசுப் படலம், மாலைக்கண் விழிவிழுங்கி, மணி, மதிமந்தம், பருவணிகை, குருட்டுக்கண், சுருக்குக்கண், உசார், காசவெறி, அன்னகோபம், அனல் கோபம், புகைச்சல், பற்பரோகம், ஒட்டுக்கண், கண் மலங்கல், கண்ணெரிவு, நீர்ப் பாய்ச்சல், செவ்வேர், குந்தம், சுக்கிரன், அமரம், அக்கரம், கட்கடம், இருள்கண், செவ்வரிப் படலம், கூச்சம், பூ, ஆணிப்பூ, புழுவெட்டு, நேத்திர வாய்வு, வெள்ளெழுத்து, கண்வலி. அழற்சி, விழிகண் குருடு, செஞ்சுடர். விழிச்சி, புளித்த கண். இழிகண், அழி கண் முடமயிர், கண்ணிறைச்சி முதலான[2] கண்ரோகம் 96. 75

---

1 நோய்கள் 96 எனக் கூறப்பட்டிருப்பினும் இங்கு 61 பெயர் களே காணப்படுகின்றன.

2 நோய்கள் 96 எனக் கூறப்பட்டிருப்பினும் இங்கு 53 பெயர் களே காணப்படுகின்றன.

## 4. கருவிழி நோய்களும் மருத்துவமும்

கண்ணின் கருவிழியில் மட்டும் மொத்தம் நாற்பத்தைந்து நோய்கள் தோன்றுவதாகக் கூறப்படுகின்றன. இவற்றை பத்து வகைகளுக்குள் அடக்கலாம். அவை,

1. காசம், 2. படலம், 3. குமுதம், 4. விழியுந்தல், 5. நெரிசல் 6. வரி, 7. குந்தம், 8. திமிரம், 9. சுக்கிரன், 10. பூ.

இவை ஒவ்வொன்றிலும் காணப்படும் நோய்களாவன:—

1. **காசம்—8**

1. வாத காசம், 2. சேற்பன காசம், 3. வாலகாசம், 4. விரண காசம், 5. கற்ப காசம், 6. பித்த காசம், 7. நீலகாசம், 8. மந்தார காசம்.

2. **படலம் —7**

1. கருநாகப் படலம், 2. அதிமாங்சிசப் படலம், 3. பசுவிழிப் படலம் 4. சதைப்படலம் 5. இரத்தப்படலம், 6. நீரெழுச்சிப் படலம் 7. வரியெழுச்சிப் படலம்.

3. **குமுதம்—3**

1. கருங்குமுதம் 2. வெண்குமுதம், 3. செங்குமுதம்,

4. **விழியுந்தல்—3**

1. கருவிழியுந்தல், 2. இரத்த உந்தல், 3. சதை யுந்தல்

5. **நெரிசல்—3**

1. சோரை நெரிசல், 2. உட்டிண நெரிசல், 3. நீர்நெரிசல்.

6. **வரி—3**

1. சோரிவரி, 2. நீர்வரி 3. செறிவரி

7. **குந்தம்—3**

1. சதைக் குந்தம், 2. நீர்க்குந்தம், 3. இரத்தக்குந்தம்.

8. **திமிரம்—7**

1. வாத திமிரம், 2. சேற்பன திமிரம், 3. மாலைக்கண், 4. மந்தார திமிரம், 5, வறட்சித் திமிரம், 6. நீர்த்திமிரம்.

9. **சுக்கிரன்—5**

1. விரண சுக்கிரன், 2. நண்டுச் சுக்கிரன், 3. விழி விழுங்கி சுக்கிரன், 4. வெளுத்த சுக்கிரன் 5. அனற் சுக்கிரன்.

10. **பூ—3**

1. ஆணிப்பூ, 2. பூ, 3. புகைப்பூ,

இவற்றிற்கான விளக்கங்ளையும் மருந்துகளையும் சுருக்க மாகப் பின் வருமாறு காணலாம்.

## 1. கருவிழி காசம்

கருவிழியில் முதலாவதாகக் காச நோய் வகைகள் கூறப்படு கின்றன. அவை,

1. வாத காசம், 2. சிலேட்டும காசம், 3. வால காசம், 4. விரண காசம் 5. கற்ப காசம், 6. பித்தகாசம், 7. நீல காசம், 8. மந்தார காசம். என்பன. (76-81)

### காசங்களில் காணப்படும் நிறங்கள் குணங்கள்:-

1. **வாத காசம்**

நீல நிறமாகவும், பல நிறங்களைக் கொண்ட வண்டுகளைப் போல நிற வேறுபாடுகளுடன், நிலையாக இன்றி மாறுவதாகவும் பரவியிருக்கும் (85)

2. **சிலேட்டும காசம்**

உடலை விட்டு உயிர் பிரியும் அந்திம காலத்தில் இந்நோய் வந்து சேருமெனக் கூறப்படுகிறது. (85)

3. **வால காசம்**

கருவிழியின் நடுவே புகை படர்ந்து பரவியது போலக் காணப் படும். இது பெரும்பாலும் குழைந்தைப் பருவத்திலே தோன்றி

வளர்வதாகும். மேலும், இந்நோயுற்ற குழந்தைகள் பன்னிரண்டு வயதுக்குள் இறந்து விடும் என்பதும் அறியத் தக்கது (86)

**4. விரண காசம்**

கருவிழியின் மேல் வெண்மையான தழும்பு போல் சற்று மேடாகத் தோன்றும் (87)

**5. கற்ப காசம்**

கருமையான நிறங் கொண்டதாகும் (87)

**6. பித்த காசம்**

பச்சைக்கல் போல நிறங் கொண்டதாகும் (87)

**7. நீல காசம்**

கருவிளம்பூவின் வண்ணம் கொண்டதாகும்.

**8. மந்தா காசம்**

செம்பஞ்சு மேகம் போலக் கருவிழியில் தோன்றும்.

## இவற்றுள் மருத்துவத்தால் தீராதவை 5

1. வாதகாசம் 2. சிலேட்டுமகாசம் 3. வாலகாசம் 4. விரண காசம் 5. கற்பகாசம்

## மருத்துவத்தால் தீரக் கூடியவை 3

1. பித்த காசம், 2. நீலகாசம், 3. மந்தார காசம்

## தீராத நோய்களின் பொதுக்குணங்கள்

**1. வாத காசம்**

நடுவிழியைக் கடுக்கச் செய்யும், கண் சோர்வடையும், நடு விழியைச் சுழித்து உள்ளிழுக்கும். இமைகள் வீங்கி, தணல்போ லெரிந்து நீர் வடியும். உறக்கம் சற்றும் வராது. மிகவும் அதிக வேதனையைக் கொடுக்கும் தலைவலி, உடல் மெலிதல் போன்ற குறிகளும் காணப்படும். (94-96)

**2. சிலேட்டும காசம்**

கண்ணை நன்றாக விழிக்க முடியாது. மழைமேகம் போல எப்பொழுதும் நீர் வடியும். வலியும் வேதனையும் அதிகமாயிருக் கும். நெற்றியில் தேள் கொட்டியது போல வலிக்கும். (102)

**3. வால காசம்**

காலை நேரத்தில் புகைச்சலாய்த் தோன்றும் இது, ஒரு சாமம் ஆனபின் நீங்கும். ஒரு சமயம் நீல நிறமாகவும், பிறகு வேறு வித

மாகவும் மாறி மாறி பார்வை தோற்றும். அதிகமான நீர் வழியும். சிறிது சிறிதாக வெள்ளை விழியிலும் கரு விழியிலும் தசை மூடும். கண் மணியில் நீர்போன்ற திரவம் கூடியிருக்கும். (103)

இந்நோய் பெரும்பாலும் வாலிப வயதிலேயே வரும். இந் நோய் கண்ட குழந்தைகள் பெரும்பாலும் மிகவும் அறிவு வளர்ச்சி பெற்றவர்களாகவும், அவர்களது உடலும் முகமும் மிகவும் கவர்ச்சியாகத் தோன்றுவதும் அனுபவத்தில் அறியப்படுகிறது. ஆயினும் இந்நோய் கண்டவர்கள் இளமையிலேயே இறந்து விடுவ தாகவும் கூறப்படுகின்றது.

**4. விரண காசம்**

மற்ற காசங்களெல்லாம் வாதம், பித்தம், கபம், என்னும் முக்குற்றத்தால் தோன்றி வளர்வதால் அவற்றிற்கான நிறம், குணம் போன்றவை கூறப்படுகின்றன. ஆனால், விரண காச மென்பது, கூர்மையான கருவிகள் அல்லது வேறு பொருள்கள் கண்ணில் பட்டு, கருவிழியில் காயம் ஏற்படுவதால் இரணமாவதா கும். எனவே, இந்நோய் தீராதது என்றே கூறப்படுகின்றது.

**5. கற்ப காசம்**

இது, கருவிழியின் நடுவில் கருமை படர்ந்து பார்வையை மூடி விடுவதால் இந்நோய் கண்டவர்கள் பார்க்க இயலாது எனவும், மருத்துவத்தில் தீராதது எனவும் கூறப்படுகின்றது.

**குறிப்பு:**

மேற்கூறிய எட்டு வகையான காசங்களுள் வால காசமென்பது பன்னிரண்டு வயதிற்குள்ளான குழந்தைகளுக்குத் தோன்று வதாகும்.

விரண காசமென்பது எவ்வயதிலும் எவருக்கும் ஏற்படக் கூடியதாகும் (காயங்களால்)

சிலேட்டும காசம் உயிர் பிரியுங் காலத்தில் தோன்றுவதாகும்.

மற்ற ஐந்து வகையான காசங்களும் வாதம், பித்தம், கபம் என்னும் முக்குற்றமாறுபாட்டாலும், தோன்றக் கூடியன. மேலும், இவை பெரும்பாலும் ஐம்பது வயதிற்கு மேலாகவே தோன்றக் கூடியன என்பதும் கூறப்படுகின்றது.

## கருவிழியில் தீரும் காசங்களின் குணமும் மருந்தும்

**1. பித்த காசத்தின் குணம்**

கண்ணானது கலக்கமடைந்து பார்வை புகைச்சலாயிருக்கும். வெள்ளை விழியில் வெண்மேகம் போல நீர் படர்ந்து கருவிழியி ல்

பாவையைத் தினமும் சிறிது சிறிதாக இறங்கி வந்து மறைக்கும் விண்ணை நோக்கிப் பார்த்தால் கண்ணிலும் புருவத்திலும் வலி யுண்டாகும். கண்ணில் நீர் வடிதல், சிவத்தல், பீளை சேருதல், கூச்சம், இவைகளும் உண்டாகும். நிறவேறுபாடு மாற்றம் தலை வலி, இவையும் அடிக்கடி உண்டாகும். (104-107)

**மருந்து 1**

துத்தம், துருசு வகைக்கு 1 வராகன் எடை, இரதம் ½ வாரகன் எடை, மிளகு ¼ வராகன் எடை, இவற்றை வெற்றிலைச் சாற்றில் மை போல அரைத்து வெண்ணெய்யில் கலந்து, கண்ணில் தீட்டி வரத் தீரும். ( 12)

**மருந்து 2**

பசுவின்வெண்ணெய், அபின், தேற்றான் வித்து, ஆவாரை, ஆம்பல், நெல்லிமுள்ளி இவற்றை முலைப்பால் வார்த்தரைத் துருட்டி, முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (108)

**மருந்து 3 (தைலம்)**

கோட்டம், குரும்பை, சீந்தில்கொடி, செங்கழுநீர்க் கிழங்கு, மஞ்சட்டி, ஏலம், இலவங்கம், தாமரை வளையம், இவற்றை நல்லெண்ணெய் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். (109)

**மருந்து 4**

பசுவின்வெண்ணெய், சந்தனம், கற்றாழை, அல்லி, ஆல விதை, தேற்றான், ஆம்பல், நெல்லி, துத்திவேர், மதுரம் இவற்றை முலைப்பாலில் அரைத்துக் கண்ணில் தீட்டத் தீரும். (110)

இவற்றுடன் பொதுவாகக் கூறப்படும் தைலங்களையும் தலை யில் தேய்த்து முழுகி வரப் பித்தகாசம் தீரும். (113-114)

## பித்தகாசம் குத்தி வாங்கும் முறை

கருவிழியில் காசநீர் முற்றிலும் இறங்கின பிறகு, பார்க்கு மிடத்து அரை உளுத்தம் பருப்பளவாகச் சங்கு நிறத்துடன் காணப்படும். அப்பொழுது கடைக்கண் பக்கமாக வெள்ளை விழி யில் குத்தி நீரைப் போக்குவர்.

இந்நோய் ஆரம்ப காலத்திலிருக்குமானால் மருந்தினாலும், தைலத் தலை முழுக்கினாலும் தீரும். ஆனால், நோய் பாதிக்கு மேல் முற்றிவிட்டால் மருந்தினாலும் தலைமுழுக்கினாலும் தீராது. அனுபவம்மிக்க மருத்துவர்கள் சத்திரப் பிரயோகம்

செய்தால் ஒரு சமயம் பயன் தரும். பயன்தராமல் போவதும் உண்டு. அனுபவம் இல்லாத மருத்துவர்கள் செய்வதால் கண்ணில் முட்டைத்தூர்போல் முளைகள் உண்டாகும். வைக்கோல் தாளின் பருமனுள்ள இத்தகைய முளையானது ஒரு விரல் நீளமும் இருக்கும். அந்த முளையில் நெல்லளவு குறித்துக்கொண்டு குத்தி விடவேண்டும்.

**குத்துவதற்கேற்ற நிலை**

கண்ணிலுள்ள காசநீர் முத்தைப்போல வெண்மை நிறமாக இருக்கவேண்டும். கண்ணைக் கசக்கி திறந்தால் நீரானது விரிந்து பிறகு குவியும். இந்நிலையில் குத்துவது ஏற்றதாகும்.

**குத்தும் கருவி**

ஆறுவிரல் நீளமுள்ள தாமிரத்தாலான, முப்பட்டையாகச் செய்யப்பட்ட சலாகையைக் களிம்பு இல்லாமல் துலக்கிவிட்டுத் துடைத்து வைத்துக் கொள்ளவேண்டும்.

மெல்லிய கத்தியின் நுனியில் நெல்கனம் விட்டு, மற்றப் பக்கங்களில் எல்லாம் நூலால் சுற்றி வைத்துக் கொள்ளவேண்டும்.

**குத்தும் முறை**

கருவிழியின் நடுவில் வெண்மேகம் போலவும், சங்குபோன்ற வெண்ணிறமாகவும் இருந்து, பாவையானது பாதி உளுத்து அள வாகவும் காணப்பட்டு வேறு விதமான குற்றங்கள் ஒன்றுமில்லாத போது, கடைக் கண்ணில் குறித்துக்கொண்டு, முன் சொன்ன கத்தியின் முனையால் கவனமாகக் குத்திவிட்டு, முன்சொன்ன சலாகையைக் குத்து வாயிலில் விட்டு மூன்று முறை கவனமாகச் சுற்றவேண்டும். பாவையானது நீலநிறமாகக் காணப்படுமானால் நோய் குணமானதாகக் கொள்ளலாம்.

**குத்திய நீர் வெளியானபின் செய்யவேண்டியவை**

காசநீர் வெளிப்பட்ட பின்பு,சிறிதளவு அனல்காட்டவேண்டும் இதற்கு, ஒரு கரண்டியில் நெருப்பை எடுத்து வைத்துச் சூடு காட்டுவர். பிறகு, வடிகட்டிய மஞ்சள் பொடியைப் பஞ்சில் வைத்துக் கண் மேலிட்டுக் கட்டவேண்டும். நோயுள்ளவர் மிகவும் மெதுவாகப் பேசும்படியும் ஒய்வெடுக்கும்படியும் சொல்ல வேண்டும். மறுநாள் புளியிலையை இடித்து சிறிது வறுத்துக் கட்டவேண்டும்.

இவ்வாறு மூன்று நாட்கள் புளியிலையை இடித்து, வறுத்துக் கட்டி அவிழ்த்துவிட்டு, பற்று, வேது இவை தேவையானால்

செய்து, வெந்நீர் பயன்படுத்தவேண்டும் மேலும், தேவையானால் மேல் மருந்தும் தைலங்களும் பயன்படுத்தினாலும் குணமாகும். நோயின் தன்மை, நோயாளியின் நிலை, போன்றவற்றை கவனத்தில்கொண்டு, தகுந்த அனுபவத்தில் முதிர்ந்த மருத்துவர்கள் செய்யும் மருத்துவத்தால் இந்நோய் முற்றிலும் தீரும் என்று கூறப்படுகின்றது.

காசநீரைக் குத்திய பிறகு, காசநீரின் வெளியேற்றத்தால் கண் தெளிவாகத் தெரிய வேண்டும். அவ்வாறு தெரியாவிடின், நீர் மேலும் தங்கியுள்ளது எனலாம். அப்பொழுது, உடனே இதைச் சோதித்தறிந்து கொண்டு நீரை வெளிப்படுத்தி விடவேண்டும். இதற்கு, வெள்ளரி விதத்தின் அகலமும், எள்ளின் கனமும் உள்ள கத்தி ஒன்று. ஊமத்தைப் பூவிலுள்ள சூல்தண்டு கனமுள்ள பிடியுடன் கூடியதாகக் கொண்டு காசநீர் குத்தப்பட்ட கண்ணில் கவனமாகக் குத்தவேண்டும்.

சிறிது வேதனையுடன், காசநீர் வெளியேறிய பிறகு, வலி மிகுந்திடாமலிருக்க ஒழுக்கு மருந்தை விடவேண்டும்.

**ஒழுக்கு மருந்து**

பால்துத்தம், அபின், படிகாரம் இவை மூன்றையும் தூள் செய்து பசுவின் நெய்யில் குழைத்து கண்ணில் சொட்டு சொட்டாக விட்டு, கண்ணைச் சுற்றியும், இமை, குவளை மேல் பூசியும், நெற்றின்மேல் பஞ்சை வைத்துக் கண்ணில்மேல் மெல்லிய வெண் சீலையால் மூடிக் கட்டி வைக்கவும். பிறகு விழி பொறுக்குமளவிற்கு அனல் காட்டவேண்டும்.

இதற்கு, எரியும் அடுப்பில் புதிய செங்கல்லைப் போட்டு நன்கு சூடேறிய பின் ஒரு செம்பு அல்லது வெண்கலம் பாத்திரத்திலிட்டு, முலைப் பாலைத் தெளித்தால் வெப்பமான ஆவி கிளம்பும். அந்த ஆவியை குத்தப்பட்ட கண்ணில் படும்படிச் செய்வர்.

பின்பு, விழியில் குத்தலும் வலியும் கண்டால், பின்வரும் மருந்தை 8 நாட்களுக்குக் கண்ணில் விடவேண்டும்.

**மருந்து**

பசுவின் நெய், சிப்பிநீர் ஓரளவாகவும், அத்துடன் அதிமதுரம், தாரம், தனித்தனியே சமஅளவாகவும் நெய்யின் எடையில் 1/16 பங்காகவும் கூட்டி அரைத்துக் காய்ச்சி வடித்து, கண்ணில் சொட்டு விடவும். வேதனை தீரும் (115-131).

**குறிப்பு:** பித்த காசம் தோன்றி வளர்வதும், அதைப் பக்குவமான கால நிலையில் குத்தி அகற்றுவதும் பற்றிக் கூறுவது குறிப்பிடத் தக்கதாகும்.

கருவிழியின் மிகவும் நுட்பமான பகுதியாகிய கருமணியில் பித்தகாசம் தோன்றி, நான்கு ஆண்டுகள் ஆன பின்பே வளர்ந்து, விழியை அடைத்துப் பார்வையை மறைக்கும்.

மேலும், இதைப் பரிசோதிக்கக் கண் இமைகளை நன்கு மூடிப் பின் நீக்கிப் பார்த்தால் கருவிழியிலுள்ள கருமணி முதலில் விரிந்து பின்நடுநிலை அடையும். இதையே காசம் குத்த ஏற்ற நிலையாகக் கொள்வர்.*

**2. நீலகாசத்தின் குணம்**

கருவிழியின் நடுவில் வலியுண்டாகும். நாளுக்கு நாள் பார்வை புகைச்சலாகத் தோன்றும். கருவிழியில் சோதியானது நீல நிறமாக இருக்கும். புருவம், கண், தலை போன்ற இடங்களில் வலியுண்டாகும்.

திமிர், அரிப்பு, கண் சுருங்கல், கழுத்தில் கம்மல், பாசிபோல் படலம், இவையும் காணப்படும். (132-134)

**மருந்து 1**

வெண்காரம், மதுரம், துத்தம், சாரணைவேர், பவளம், பீங்கான், பூரம், சாத்திரவேதி இவற்றை மாதுளம் பூச் சாற்றி லரைத்துக் கண்ணிலிடத் தீரும். (137)

---

*ஆங்கில மருந்துவ முறையிலும் இப்பரிசோதனையை இருட்டறையில் செய்து பார்த்த பின்னரே காசநீரைக் கருவி கொண்ட கற்றுவர் என்பதும் குறிப்பிடத் தக்கதாகும்.

பித்த காசம் குத்தும் முறையில் காசநீரைக் கருவியால் குத்தி வெளிப்படுத்தும் முறையும், தற்கால,ஆங்கில மருத்துவ முறையில் காசநீரைக் கருவி கொண்டு அகற்றும் முறையும் ஒப்புமையுடையன. ஆயினும், தற்கால முறையில் நோயாளியின் வலி தெரியாமலிருக்க முன்னதாகவே மருந்துகள் பயன் படுத்தப்படுகின்றன. இத்தகைய மயக்க மருந்துகள் மேற் கண்ட முறைகளில் குறிப்பிடப்படவில்லை.

எனவே, பித்த காசம் குத்தும் முறை மிகவும் அனுபவம் மிக்க மருத்துவர்களால் செய்யப்பட்டதால், பெரிதும் குற்ற மேதும் இல்லாமல் நோயைத் தீர்த்து வந்ததையும் அறியலாம்

மருந்து 2 (தைலம்)

பாதரி, முசுமுசுக்கை, பருத்திவேர், பவளக்குன்றி, நல்லெண்ணெய், கொத்தான், தகரம், மாஞ்சில், ஏலம், கொத்தமல்லி, பொன்னாங்காணி, கோட்டம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். (138)

மருந்து 3

திரிபலை, தேற்றான் விதை, தாமரை விதையரிசி, சமனாகக் கொண்டு கற்றாழைச் சாற்றிலரைத்து உருண்டை செய்து, வெள்ளி வட்டகையில் வைத்துத் தண்ணீர் விட்டரைத்து இடத் தீரும். (135)

மருந்து 4 (தைலம்)

முடக்கொற்றான், பசுவின் பால் தெளித்து இடித்த சாறு 1 நாழி, வெள்ளாட்டு நெய் 1 உழக்கு விட்டு காய்ச்சி வடித்து முழுகத் தீரும். (136)

மருந்து 5

பசுவின் நெய் 1 படியில், சீரகம் 1 சிரங்கை, ஈருள்ளி ¼படி, நத்தைச் சதை எலுமிச்சங் காயளவு இவற்றை வறுத்து, ஒன்றாகக் கலந்து காய்ச்சி வடிந்துக் கொண்டு முதலில் சிறுபூளைச் சாற்றைக் கண்ணில் பிழிந்து பிறகு, மேற்படி நெய்யைக் கட்டுவதாலும், அல்லது முள்ளி, ஆவரை, அல்லி, நீலி, முருங்கை இவைகளின் பூக்களை ஓரளவாய் ஆவின் பால் விட்டரைத்து, மேற்படி நெய்யும், தேனும் கூட்டிக் களிம்பு செய்து கண்ணிற் தீட்டுவதாலும் நோய் தீரும். (139)

மருந்து 6 (தைலம்)

நெருஞ்சிச்சாறு, முலைப்பால், ஆவின்பால் இவை சமன். இவற்றுடன் சித்தாமுட்டி, கொன்றைப்பிசின், அதிமதுரம், ஏலம், இலவங்கம், தாமரை வளையம், கோட்டம் இவை வகைக்கு 1 கழஞ்சு, சிவந்த சத்தனம், கல்நார் இவற்றை சேர்த்தரைத்து, எள்ளெண்ணெய் 2 நாழியுடன் சேர்த்துக் கலக்கிக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். (140)

மருந்து 7 (தைலம்)

துத்தம், துருசு, வகைக்கு 1 வராகன் எடை படிகாரம், 2 சேங்கொட்டையைச் சுட்டகரி இவைகளை ஆவின் வெண்ணெய்யுடன் அரைத்து, தாமரைக் கிழங்கு, நெல்லிக்காய், பொன்னாங்காணி, இவற்றின் சாறு, சிற்றாமணக்கெண்ணெய், இளநீர் இவை வகைக்கு ½ படி, நல்லெண்ணெய் 2 படி, கலந்து இவற்றுடன்

விலாமிச்சம் வேர், தாளிச பத்திரி, சண்பகப்பூ, சிறுநாகப்பூ, சந்தனம், செங்கழுநீர்க் கிழங்கு, கோட்டம் இவை வகைக்கு 1 பலம் ஆவின் பாலில் அரைத்துச் சேர்த்துக் கலக்கி, காய்ச்சி, வடித்து முழுகிவரத் தீரும்.

**மருந்து 8 (தைலம்)**

நெருஞ்சிச் சாறு, ஆவின்பால், முலைப்பால் இவை வகைக்கு 1 உழக்கு, நல்லெண்ணெய் 2 நாழி, ஆவின் நெய் 1 நாழி, கோட்டம், இருவேலி, கொன்றைப்பிசின், அதிமதுரம், சித்தமுட்டி, கொத்த மல்லி, எலுமிச்சம், வெட்டிவேர், சந்தனம், ஏலம், சாத்திரவேதி, மாஞ்சில், கல்நார், தகரம் இவை வகைக்கு 1 கழஞ்சு கொண்டு இவற்றை ஆவின் பாலில் அரைத்துக் கலக்கி, காய்ச்சி, வடித்துத் தலையிற் தேய்த்து, வெந்நீர்விட்டு முழுகி வரத் தீரும். (100-101)

குறிப்பு வாத காசம் என்னும் நோய் தீராதது என்றே பல சுவடி களில்குறிப்பிட்டிருப்பினும், ஒரு சில சுவடிகளில் வாத காசத்திற்' கெனத் தைல வகைகள் குறிப்பிடப்பட்டிருப்பது அறியத்தக்கது இத்தைலவகைகள் நீலகாசம்"என்னும் நோய்க்கு என்பது பல சுவடி களில் கூறப்பட்டுள்ளது. இத்தைல வகைகளை முறைப்படிப் பயன் படுத்த வாத காசம் என்னும் நோயும் தொடக்க காலமாகயிருப் பின் மாறுமெனத் தெரிகின்றது.

**3. மந்தார காசத்தின் குணம்**

கருவிழியில் சோதியில் புகைச்சல் உண்டாகும். சுற்றோரங் களில் வரை, தினவு உண்டாகி, துர்நாற்றத்தோடு கூடியவெண்மை யான பீளை சாடும். கண் சிவக்கும், அதிர்வு, புடைப்பு, விழி சிறுமை, தினவு, மந்த புத்தி இவையும் தோன்றும்.

அதிகமான கோபம், கசப்பு, புளிப்பு, விரும்பல், உடல் எடை அதிகரிப்பு, வயிற்றில் மலம் அதிகமாகக் கட்டிச் சேர்தல், பெண் போகம் அதிகமாக செய்தல் இவைகளாலும் மாலை நேரத்தில் மழை மேகம் போன்று கருவிழியில் புகைச்சலாயிருக்கும். (141-143)

**மருந்து 1**

வாலுழுவையரிசி, குங்குமப்பூ, கிராம்பு, பச்சைக் கற்பூரம், சந்தனம், சண்பகப்பூ, பீதரோகணி, இலவங்கப் பத்திரி, வெள்ளைச் சாரடைவேர் இவை வகைக்கு 1 கழஞ்சு, வெள்ளைப் பொடி ¼ கழஞ்சு இவற்றைத் தேனில் 4 சாமம் ஆட்டி, கண்ணில் போடவும். (146)

**மருந்து 2**

துத்தம், துருசு வகைக்கு 1 வராகன் எடை, சிறுகீரை, பொன்னாங்காணி, ஓரிலைத் தாமரை இவைகளின் வேர் வகைக்கு 1 பாக்களவு இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றாலாட்டி, காய வைத்து, எரித்து, பொடித்துச் சிமிழில் அடைத்து எள் அளவு கண்ணிலிடவும் (148)

**மருந்து 3 (தைலம்)**

மேற்கூறிய மருந்துகள் இடும்போது இத்தைலங்களையும் தலையில் தேய்த்து முழுக நோய் தீரும். பொன்னாங்காணி, முசுட்டை, கற்றாழை, வெண் நொச்சி இவை வகைக்கு ¼படி சாறு, நல்வெண்ணெய் 1 படி, எலுமிச்சம் வேர், விட்டுணுக் கிராந்தி, குட்டித் தக்காளி வேர், துத்தி வேர், நன்னாரி, ஏலம், பூலாங்கிழங்கு, கோட்டம். மஞ்சள்,மாஞ்சில், சாத்திரவேதி இவை வகைக்கு 5 வாரகன் எடை சேர்த்து, காய்ச்சி வடித்து முழுகவும். (145)

## கருவிழி காசநோய்களுக்கான பொதுவான மருந்துகள்

**1. இரத்தினாதி உருண்டை —செய்முறை: –**

நவரத்தினங்கள், ஏழு உலோகங்கள் இவற்றை பற்பமாகச் செய்து அத்துடன், சோகி, பீங்கான், குதிரைப்பல், யானைப் பல், பசுவின்பல், எருமையின்பல், ஆமையின்ஓடு, பன்றிப்பல், முதலைப் பல், கலைமான் கொம்பு, உருத்திராட்சம், காளைப்பல், கழுதைப் பல், பீதரோகணி, துத்தம், துருசு, சூதம், சந்தனம், தேவதாரம், கோட்டம், கோரோசனை, இந்துப்பு, சீனாக்காரம், திரிகடுகு, மிளகு, சுக்கு, திப்பிலி, தேற்றாங்கொட்டை, சித்திரமூலம், ஓரிதழ்த்தாமரை வேர்ப்பட்டை, இவைகளைச் சமமாக எடுத்து, சுத்தம் செய்து, இடித்து, எலுமிச்சம் பழச்சாற்றில் 7 நாட்களும் கோழி முட்டை வெண்கருவில் 7 நாட்களும் அரைத்து உருண்டை செய்யவும். இதை ஒரு மண்டலம் நிழலில் உலர்த்தி சிமிழில் அடைத்து வைக்கவும். இதை, வேண்டிய போது கரிசாலை, முலைப்பால், பொன்னாங் காணி, தேன், நெய், இவற்றில் ஏதேனும் ஒன்றில் இழைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும். (149–152)

2. உருண்டை

பச்சைக் கற்பூரம், சாதிக்காய், கடுக்காய், கச்சோலம், வெள்ளிலோத்திரம், பச்சிலை இவைகளை சமமாகச் சேர்த்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருண்டை செய்து, நிழலிலுலர்த்தி, முலைப் பாலில் உரைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும். (153)

3. உருண்டை

துத்தம், துருசு, சங்கு, ஓரிதழ்த் தாமரை வேர் இவை ஒவ்வொன்றும் 1 பலம். எடுத்து தேசிப் பழச்சாற்றிலரைத்து, பச்சை நிறமாகும் போது எடுத்து உருட்டி உலர்த்தி வைத்து, முலைப் பாலில் உரைத்து இடக் காசம் தீரும். (154)

4. உருண்டை

கடுக்காய், நெல்லி, தான்றிக்காய், கொன்றைப்பருப்பு, மிளகு, திப்பிலி, இவை வகைக்கு 1 கழஞ்சு கொண்டு, கற்றாழையைப் பிளந்து அதனுள் உள்ள சதையைச் சேர்த்துப் பிசைந்து எடுத்து, அத்துடன் $\frac{1}{4}$ கழஞ்சு மிளகை மேல் தோல் போக்கி, அத்துடன் சிற்றாமணக்கு விதை 1 கழஞ்சும், கையாந்தகரைச் சாறும் விட்டரைத்து உருண்டை செய்து கண்ணிலிடக் காச நோய் தீரும். (155—156)

5. உருண்டை

திரிபலை, தேற்றான்விதை, திரிகடுகு, துத்தம், பளிங்கு, இந்துப்பு, காரீயம், கோரோசனை. வெண்காரம், சங்கு, முருங்கை செம்பு, புங்கம் இவற்றை முலைப்பால் விட்டரைத்து உருண்டை செய்து இடக் காசம் தீரும். (157)

6. உருண்டை

மிளகு, கடுக்காய், வெண்காரம், இந்துப்பு இவை வகைக்கு 1 கழஞ்சு கொண்டு அதிமதுரப் பொடியுடன் தூள் செய்து தேனில் குழைத்துக் கண்ணில் இடக் காசம் தீரும். (158)

7. உருண்டை

துத்தம், சாரணை வேர், பவளம், பீங்கான், சாத்திரவேதி, இவை வகைக்குச் சமனாக எடுத்து, மாதுளம் பூச்சாற்றில் அரைத்து உருட்டிக் கண்ணிலிடக் காசம் தீரும். (159)

8. உருண்டை

சங்கு, திப்பிலி, பீதரோகணி, தேவதாரம், அதிமதுரம் புங்கம் வித்து, மிளகு, சுக்கு, துத்தம், மனோசிலை, இவற்றை ஒன்றாகச் சேர்த்து, துத்தியிலைச் சாற்றிலரைத்து, உருண்டை செய்து சிமிழில் அடைத்து வைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும். (160)

9. உருண்டை

துருசு, துத்தம், பளிங்கு, சங்கு, சீனக்காரம், இவற்றை எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்து உருண்டை செய்து உலர்த்தி, உரைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும் (161)

10. உருண்டை

பூலாவேர், பொன், வெள்ளி, முத்து, திப்பிலி, பச்சைக் கற்பூரம், செம்பு, துத்தம், வெந்த தலையோடு, பீதரோகணி, வெண்கலத்தூள், இவற்றை நிம்பஞ் சாற்றில் உருண்டை செய்து உலர்த்தி, உரைத்துக் கண்ணிலிட காசம் தீரும் (162)

11. உருண்டை

இந்துப்பு, பச்சைக்கற்பூரம், கோரோசனை, திப்பிலி இவற்றை நந்தியா வட்டப்பூச் சாற்றிலரைத் துருட்டி, தேனில் இழைத்து இடக் காசம் தீரும். (163)

12. உருண்டை

திரிபலை, தேற்றான் விதை, திரிகடுகு, பளிங்கு, காரீயம், பீதரோகணி, வெண்காரம், மனோசிலை, அஞ்சனக்கல், செம்பு, பொன், இரும்பு, இவற்றைப் புங்கம் பால் வார்த்தரைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும். (164)

13. உருண்டை

மிளகு, பச்சைக் கற்பூரம் இவற்றைச் சமனாகக் கொண்டு பனை மட்டைச் சாறு விட்டரைத்துச் செப்புச் சிமிழில் வைத்துப் பனை மட்டைச் சாற்றில் உரைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும். பித்த காசத்திற்கு நந்தியா வட்டப்பூச் சாற்றிலிடவும் தீரும். (165)

14. உருண்டை

பலகறை, தலையோடு, துத்தம், அதிமதுரம், கடல்நுரை, இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து இடத் தீரும். (166)

## 15. காசக்குழம்பு

கையாந்தகரை, நெல்லிக்காய், தாமரைவளையம், பொன்னாங்காணி, புடோலம், புளியிலை, சீதேவி செங்கழுநீர் இவை ஒவ்வொன்றின் சாறும் 1 படியாகச் சேர்த்து அத்துடன், சந்தனம். அகில், தேவதாரு, திரிபலை, தேற்றான் விதை, வெட்டிவேர், விலாமிச்சவேர் இவை சமனாய்ச்சேர்த்துக் காய்ச்சி எட்டில் ஒன்றாகக் குறுகக்காய்ச்சி, வடித்து வைத்த சாற்றுடன், அதே அளவு இளநீரும், தென்னம்பாளைச் சாறும் கூட்டி, நன்றாகக்காய்ச்சிக் குழம்பானவுடன், அதில், பீத ரோகணி, துத்தம், சீனக்காரம், துருசு இவை வகைக்கு 1 கழஞ்சு வீதம் சேர்த்துப் பொடித்து, கலக்கி, தேன் விட்டு அரைத்துச் சேர்க்கவும். பிறகு இதை செப்புச் சிமிழிலடைத்துக் கண்ணிலிடக் காசம் தீரும். அத்துடன், புகைச்சல். சூடு, போன்ற பல கண் நோய்களும் தீரும் (167—169)

## 16. குழம்பு

மிளகு 1 வராகன் எடை, பெருங்காயம் 2 வாரகன் எடை, சிறு நாகப்பூ 3 வராகன் எடையாகக் கொண்டு, புளியிலைச் சாறும் தேனும் விட்டரைத்துக் குழம்பாக்கி. சிறுபயறளவு கண்ணிலிடக் கண் ஒளிபெறும். காசநோய் தீரும். (170)

## 17. உள்ளுக்குச் சாப்பிடும் மருந்து

வேங்கையிலை, வேர், கண்டங்கத்தரி வேர், கையான்தகரை, தூதுவளை, கீழாநெல்லி, தேள் கொடுக்குச்சமூலம், இவைகளை இடித்த சாறு1படி, சங்கன்இலை, பெரும்புல், இவைகளைத் தனித் தனியே இடித்த சாறு 1 படி, எள்ளெண்ணெய் 1 படி, இத்துடன், அதிவிடையம், கடுக்காய்த்தோல், காட்டுமிளகு, வாயு விடங்கம், நற்சீரகம், கடுகு, சுக்கு, சிறுதேக்கு, ஓமம், விழலரிசி இவை வகைக்கு 1 கழஞ்சு கொண்டு, நீர் விட்டரைத்துச் சேர்த்து, காய்ச்சி, வடித்து வைத்துக்கொண்டு உள்ளுக்குச் சாப்பிட்டு வர, கண்ணிலும் 1 துளி விட்டு வரக் காசம் தீரும். (166)

## 18. புடலாதி கிருதம்

பேய்ப்புடல், பொன்னாங்காணி, வல்லாரை, பூசணிக்காய், மூங்கில் குருத்து, நீர்வள்ளி, தாழை விழுது, வெள்ளரிக்காய், மாதுளம் பிஞ்சு, எலுமிச்சம் பழம் இவை ஒவ்வொன்றின் சாறும் 1

நாழியாகக் கூட்டி, கற்றாழைவேர், சிற்றாமுட்டி வேர்ப்பட்டை கோவைத்தண்டு, கோரைக்கிழங்கு, பாக்குமர வேர்ப்பட்டை, தாமரை வேர், சீதேவிச் செங்கழுநீர் வேர்ப்பட்டை, செங்கழுநீர் மூலம், நன்னாரி, சிந்தில்தண்டு, சித்திரமூலவேர்ப்பட்டை இவற்றை வகைக்கு 10 பலமாகக் கொண்டு, எட்டிலொன்றாகக் காய்ச்சி, மேற்சொன்ன சாறுகளுடன் சேர்த்து, அத்துடன், பசுவின் நெய் 1 நாழி, 4 படி பசுவின் பால், சேர்த்துக் கலக்கி அத்துடன், சந்தனம், தேவதாரு, அதிமதுரம், செங்கழுநீர்க் கிழங்கு, கோட்டம், கூகை நீர், கிராம்பு, சாதிக்காய், சாதிப் பத்திரி, ஏலம், தகரம், குங்குமப்பூ, சிவதைவேர், பிதரோகணி, பச்சைக் கற்பூரம், இலவங்கப்பத்திரி, மகரப்பூ, பேரீந்து, முந்திரி, இவை ஒவ்வொரு கழஞ்சு விதம் சேர்த்துத் தூள் செய்து கலக்கவும் நெய் பக்குவமாகும் போது நன்கு வெந்த இதனுடன் சீனியைத் தூள் செய்து தூவிக் கிளறி இறக்கவும்.

இதைக் காலையில் கடுகுடன் 1 கரண்டி சேர்த்து 40 நாட்கள் சாப்பிட்டு வர, காசம் தீரும், பித்தநோய், தலை கிறு கிறுப்பு, மூலம், சூடு, கண்ணோய். நீர்ப்பாய்ச்சல், மற்றும் பல நோய்களும் தீரும். (171-175)

### 19. காசத்திற்கு எண்ணெய்

பொன்னாங்காணி, சிறு கீரை வேர். அதிமதுரம் இவை வகைக்கு 1 பலம், வேங்கைச் சிராய் 2 பலம் இவற்றுள் அதிமதுரம், வேங்கைச் சிராயை நன்கு இடித்து, தண்ணீரில் போட்டு எட்டில் ஒன்றாக வற்றக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். பொன்னாங் காணி, சிறுகீரை வேர் இவற்றை தேசிக்காயளவு அரைத்தெடுத்து, முன் வடித்து வைத்துள்ள கசாயத்தில் போட்டுக் கரைத்து, அத் துடன் பசுவின் பால் 1 நாழிவிட்டுக் காய்ச்சி, மெழுகு பதமானால் இறக்கி வடித்துத் தலை முழுகி வர எல்லா வகையான காச நோய் களும் தீரும். (177-178)

### 20. காசத்திற்குப் பெருங்காமலகாதித் தைலம்

நெல்லிக்காய்ச் சாறு, கரிசாலைச் சாறு, தாமரைக் கிழங்குச் சாறு, பொன்னாங்காணிச் சாறு, பேய்ப்புடல் சாறு, கோவைச் சாறு, எலுமிச்சஞ்சாறு, பசுவின் பால், இளநீர், எள்ளெண்ணெய் இவை சமனாகக் கூட்டி இத்துடன், அதிமதுரம், சீனக்காரம், நாகணம், கோட்டம், ஏலம், முந்திரி, பேரீச்சம்பழம், சந்தனம்,

சாதிக்காய் இவை ஒவ்வொன்றும் சம அளவாய்க்கூட்டி முறைப் படிக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். காலை இத்தைலத்தைத் தலையில் மூன்று நாழிகை தேய்த்து ஊறி, மாலையில் முழுகவும். இவ்வாறு 1 மண்டலம் தலை முழுகி வந்தால் காசநோய் தீரும். மண்டைக் குத்து, நீர் வடிதல், கண் சிவப்பு இவையும் தீரும்.
(179-181)

## 21. அசனவில்வாதித் தைலம்

வில்வவேர், வேங்கைவேர், அமுக்கிராவேர், வெட்டிவேர். இலாமிச்சம்வேர், குறுந்தொட்டி வேர், கற்றாழைவேர், நன்னாரி வேர், தாமரை வளையம் இவை வகைக்கு 10 பலம், இவற்றைப் பொடித்துத் தூணி அளவு தண்ணீரிற்போட்டுக் காய்ச்சவும். இது வற்றி 1 குறுணி ஆகும்போது அத்துடன், பொன்னாங்காணி, இள நீர், பசுவின்பால், ஆம்பலிலைச்சாறு, செங்கழுநீர்க் கிழங்குசாறு, நெய்தல்சாறு, ஆமலகங்களின்சாறு, தாழை விழுது, சம்பீரப் பழச்சாறு இவை வகைக்கு 1நாழி, எள்ளெண்ணெய் 1நாழி, இவற்றுடன் கலந்து கூட்டிக் கொள்ளவும். இத்துடன், தேவ தாரம், கோட்டம், மாஞ்சில், மஞ்சட்டி, ஏலம், கிராம்பு, சாதிக் காய், சண்பகமொட்டு, இலவங்கம், திரிகடுகு திரிபலை, பச்சைக் கற்பூரம், சந்தனம், கிளியூரல் பட்டை, கத்தூரி மஞ்சள், குங்குமப் பூ, அதிவிடையம் இவை வகைக்கு 1 பலம் எடுத்தரைத்து முன் சொன்ன எண்ணெய்யில் சேர்த்துக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும் இத்தைலத்தைத் தலையில் தேய்த்து முறைப்படி முழுகி வர எல்லா வகை காசநோய்களும் தீரும். (182-184)

## 22. காசத்திற்குச் சந்தனாதித் தைலம்

சந்தனக்கட்டை, அகிற்பட்டை, வில்வவேர்க்கட்டை, நன்னாரி, சீதேவி, விலாமிச்சு, திரிபலை, கொடிவேலி, வேலிப் பருத்தி, மிளகு, பொன்னாவரை வேர், மலை தாங்கி இவைகளை ஒவ்வொன்றும் 10 பலமாக எடுத்து 1 தூணி நீரிலிட்டு 1 குறுணி யாக வற்றக்காய்ச்சி இறுத்து வடிகட்டி எடுத்து, அத்துடன், பசு வின்பால், இளநீர், முலைப்பால், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 1 குறுணி அளவு கூட்டி, அத்துடன், தண்ணீர்விட்டான்கிழங்கு, வல்லாரை, வள்ளைக்கொடி, பசலை, சிறுகீரை, தாமரை வளையம், பொன்னாங்காணி, நெய்தல் கிழங்கு, மாதுளம்பழம், தென்னம்பாளை, நெல்லிக்காய், தான்றிக்காய், விலாமிச்சு,

முன்னை, முசுட்டை, வீழி இவைகளின் சாறு வகைக்கு 1 படி வீதம் விட்டுக்கலந்து கற்கமாக ஏலம், அம்மான் பச்சரிசி, பச்சைக் கற்பூரம், தாளிசபத்திரி, கல்நார், புனுகு, கோரோசனை, அதி மதுரம் தேவதாரம், கிராம்பு, கோட்டம், சாதிக்காய், கிளியூரல் பட்டை இவைகளைக் கூட்டிக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். இத்தைலத்தைத் தலையில் தேய்த்து முறைப்படி முழுகிவர எல்லா வகையான காசங்களும் தீரும். (185-189)

**குறிப்பு**

1. கியாழச் சரக்குகளில் சிறு செடி கொடிகளாய் உள்ளவை களின் சமூலம் எடுத்துக் கொள்ளவேண்டும்.

2. கற்கச்சரக்குகள் தலைமைச்சரக்கின் எடைக்கு 1/10 பங்காகவும், தைலத்தில் கூறப்பட்டுள்ள பாலிலோ, சாற்றிலோ அரைத்துக் கலக்கவேண்டும்.

3. பச்சைச்கற்பூரம், கோரோசனை, புனுகு முதலான வாசனை சரக்குகளைப் பொடித்துத் தைலம்வடிகட்டும் பாத்திரத் தில் சேர்த்துப் பிறகு வடித்துக் கொள்ளவேண்டும். காயும் தைலத் தில் போட்டால் அவற்றின் வாசனை குறையும்.

## 2. கருவிழிப் படலம்

கருவிழியில் தோன்றும் படலம் என்னும் நோய் ஏழு வகை களாகக் கூறப்படுகின்றன. அவை, 1 சதைப்படலம் 2 இரத்தப் படலம் 3. நீர்ப்படலம் 4. வரியெழுச்சிப்படலம் 5. கருநாகப் படலம் 6. அதிமாங்கிசப் படலம் 7. பசுவிழிப் படலம்.

இவற்றுள், மருத்துவத்தால் தீரக்கூடியவை நான்காகும். அவை, 1. சதைப்படலம் 2. இரத்தப்படலம் 3. நீர்ப்படலம் 4. வரி யெழுச்சிப்படலம். (190-191)

### 1. சதைப் படலத்தின் குணம்

கருவிழியினுள்ளே சிவந்தும் உறுத்தியும் வலியை உண்டாக்கி யும், வெளிப்பார்வையை அடைக்கும் படியாகவும் தோன்றும். கண்ணில் கூச்சமும், பீளை தள்ளலுமாயிருக்கும். (192)

### 2. இரத்தப் படலத்தின் குணம்

கண்ணிமைகள் கனத்தும், குமுறலுண்டாகியும், வெம்மை யுடன் கறுத்தும் காணும். கண்ணின் உள்ளும் புறமும் எரிச்ச

லுண்டாகும் கருவிழியில் இரத்தம் மேலெழுந்து புள்ளி புள்ளியாக உட்புறமாகத் தோன்றும். தலையில் உச்சி நீங்கலாக புருவம் நெற்றி, பிடரி ஆகிய இடங்களில் குத்தல் ஏற்படும். (193)

3 **நீர்ப் படலத்தின் குணம்**

தலையில் குத்தலும், விழிநீர் பெருக்கமும் காணப்படும். கரு விழியின்மீது மேகம் சூழ்ந்தது போலத் தோன்றும். மயக்கம் உண்டாகும். தலையைத் தாழ்த்தினால் அருவிநீர் போலக் கண்ணீர் பெருகும். (194)

4. **வரியெழுச்சிப் படலத்தின் குணம்**

கருவிழியின் மீது கயிறு போல வளைந்து வளைந்து காணும். அருவி போலக் கண்ணீர் பாய்ந்தும், குத்தலும், அழற்சியும், உறுத்தலும், வலியும் காணும். முன்விழியில் புகைச்ச லுண்டாகும். (195)

இவை நான்கைத் தவிர மற்றுமுள்ள மூன்று வகையான படலங்களும் மருத்துவத்தால் தீராதவை எனக் கூறப்படுகின்றன. அவை

1. **கருநாகப் படலத்தின் குணம்**

இந்திர வில்லைப் போலப் பற்பல நிறங்களோடு கருவிழியில் படலம் படர்ந்து காணும். பார்வை மந்தமும், கண்ணில் அனலும், குத்தலும், வலியும் கண்டு கண்ணீர் மிகவாய் வடிந்து வீழும். தெளிந்த விழியானது முன்னுக்குத் தள்ளி வந்துள்ளது போலத் தோன்றும். (196)

2. **அதிமாங்கிசப் படலத்தின் குணம்**

ஊச்சியின் சதையைப் போலக் கருவிழியின் மீது படர்ந்து, கண்ணில் கூச்சமும் இடிவலியும் காணும் கண்ணில் கொதிப்பும், நீர்வடிதலும் காணும். கையில் சீண்டிடச் சீழ் வெளிப்படும். (197)

3. **பசுவிழிப் படலத்தின் குணம்**

கருவிழியினுள் மரகதம் போலப் பச்சை நிறமுடன் கூடிய சதை பரவி வளர்ந்து காணும். இடிவலியும், நீர்விழுதலும், தனல் எரிவது போன்ற எரிச்சலும், மந்த வொளியும் காணும். (198)

## கருவிழிப் படலங்களுக்கு மருந்து

**மருந்து 1**

படிகாரம் 1 கழஞ்சு, நன்கு சிவந்த காவிக்கல் ½ கழஞ்சு அபினி 1 பண எடை கொண்டு, இவற்றுள் படிகாரத்தை ஒட்டி விட்டுச் சூடேற்ற நீர்க்கும். அத்துடன் தூய்மை செய்த காவிக் கல்லைத் தூளாக்கிப் போட்டுக் கிளறி அபினையும் கலந்து அத் துடன் தேனும் முலைப்பாலும் கூட்டிக் கண்ணிலிடப் படலம் தீரும். (199)

**மருந்து 2** (நெய்)

பசுவின் நெய் 1 உழக்கு, நத்தை சிப்பி நீர் 1 உழக்கு முருங்கைப் பூச்சாறு 1 உழக்கு சேர்த்து இத்துடன், சீரகம், அதி மதுரம், தேவாரம், அபின், சீனக்காரம் இவற்றைப் பொடித்துச் சேர்ந்துக் காய்ச்சி, வடித்துக் கண்ணிலிடப் படலம் தீரும். (200)

**மருந்து 3** (புறவளையம்)

கடுக்காய்த்தோல், எட்டிக்கொட்டை, சந்தனக்கட்டை, அகில்கட்டை, வில்வவேர், சிற்றரத்தை, அதிமதுரம், தேவ தாரம், யானைத்தந்தம் இவற்றை முறைப்படித்தூய்மை செய்து பொடித்து அத்துடன், முலைப்பால் விட்டுஅரைத்து அபின் கூட்டிக் காய்ச்சிக் கண்ணைச் சுற்றிலும் பூசப் படலம் தீரும். (210)

**மருந்து 4** (ரட்சை)

மேற் கூறிய மருத்துவத்தில் தீராத படலங்களுக்கு 'இயல் மொழி மங்கல்' என்னும் சூடு வைக்கும் கருவியைச் சூடாக்கி கண்ணின் நடு நரம்பறிந்துகொண்டு சூடு வைத்து, அந்த வெந்த புண்ணுக்கு மேற் கூறிய மருந்துகளைக் கண்ணுள்ளும் புறமும் போட்டு வரப் படலம் தீரும். (202—203)

குறிப்பு:- இத்தகைய 'ரட்சை' என்னும் மருத்துவம் அனுபவம் மிக்க மருத்துவர்களாலேயே செய்யப்படும்.

**மருந்து 5** (இரத்தனாதிக் குளிகை)

மிளகு, சுக்கு, அரிதாரம், புங்கம்வித்து, அதிமதுரம், துத்தம், பீதரோகணி, மனோசிலை, பன்றி சிங்கப்பல், ஆமையோடு, புலி

நகம், வெள்ளையோடு, சேவலின் நெஞ்செலும்பு, இந்துப்பு இவை களை ஓரெடையாக நிறுத்துக் கொண்டு, இவற்றை நந்தியாவட்ட இலைச்சாற்றில், கல்வத்திலிட்டு ஒரு நாளாட்டவும், பிறகு நந்தியாவட்டபூச்சாற்றில் ஒருநாளாட்டி எடுத்து, கயறு போலுருட்டிக்கொண்டு நிழலில் உலர்த்திப்பதப்படுத்தவும். தேனிலும் முலைப் பாலிலுமாக இதை உரைத்துக்கண்ணிலிட 12 நாட்களுக்குள் கருவிழிப் படலங்கள் தீரும். (206—208)

**மருந்து** 6 (மை)

சுக்கு, இலவம் பிசின், துத்தம் இம்மூன்றையும் சம எடையாய் எடுத்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துக் கண்ணிலிடப் படலம் தீரும். (204)

**மருந்து** 7

பசுவின் நெய், தேன், முட்டை வெண்கரு, எலுமிச்சம் பழச் சாறு, இந்துப்பு இவை ஒன்றாய்ச் சேர்த்தரைத்துக் காய்ச்சி வடி கட்டி வைத்துக் கண்ணிலிடப் படலம் தீரும். (205)

**மருந்து** 8

கோரக்கர் மூலிகையைப் பசுவின் வெண்ணெய்யில் அரைத்து இடத் தீரும். (209)

**மருந்து** 9

துத்தம், துருசு, நெல்லிவற்றல், கடுக்காய், புளியம்பூ, வெந்தலையோடு, முத்து, பவளம், வெண்கலம், இரும்பு, பொன்' வெள்ளி, செம்பு இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து உருட்டி, முலைப்பாலில் உரைத்து இடப் படலம் தீரும்.(210)

**மருந்து** 10

பவளம், சங்கு, அதிமதுரம், பச்சைக்கற்பூரம், இவைச் சமனாய் முலைப்பாலிலரைத்து உருட்டி உரைத்திடப் படலம் தீரும். (211)

**மருந்து** 11

படிகாரம், தோல் நீக்கிய பூண்டு, இலவங்கம், குங்குமப்பூ, கோரோசனை இவை வகைக்கு இரண்டு வராகன் எடை எடுத்துக் கொண்டு, பொன்னாங்காணிச்சாறு. முசுமுசுக்கைச் சாறு வகைக்கு 12 பலம் ஒன்றன்பின் ஒன்றாக மேற்படிச் சரக்குகளிலிட்டு அரைத்து வெயிலில் உலர்த்திப் பொடித்துக் கொள்ளவும். இத்

துடன், சுத்தம் செய்த எள் 2 பலம் எடுத்து மைபோல அரைத்துச் சேர்க்கவும். இக்கலவையைக் கல்வத்தின் புறவோரத்தில் அப்பிக் கடுவெய்யிலில் வைக்கவும். கல்வத்தின் நடுவே தைலம் இறங்கித் தங்கும். இந்தத்தைலத்தைக் காலை, மாலை இரண்டு வேளையும் துளித்துளியாகச் கண்ணில் விட்டு வரப் படலம் நீங்கும். (213—214)

## 3. கருவிழிக் குமுதம்

கருவிழியில் தோன்றும் குமுதம் என்னும் நோய் மூன்று வகையாகக் கூறப்படுகின்றது. அவை 1. செங்குமுதம், 2. கருங்குமுதம், 3. வெண்குமுதம்.

இவற்றுள் செங்குமுதம் ஒன்று மட்டுமே மருத்துவத்தால் தீரக் கூடியதாகும். மற்ற இரண்டும் தீராதவை என்பர். (215)

### 1. செங்குமுதத்தின் குணம்

கருவிழியின் மீது செவ்வல்லி மலர் போலப் பரவித் தசை வளர்ந்து காணப்படும். இச்சதையும் நீரும் தழல்போலெரிந்து குத்தும். கண்ணீர் மிகுதியாய் வடியும். (216)

### 2. கருங்குமுதத்தின் குணம்

கருவிழியின் மீது கருங்குவளை மலர் போலப் பரவித் தசை வளர்ந்து காணும். அரும்பு போன்ற இரணம் உண்டாகிப் பார்வை மிகவும் இருண்டு காணப்படும். (217)

### 3. வெண் குமுதத்தின் குணம்

கருவிழியில் பஞ்சு சிதறியது போலப் புள்ளிகள் காணப்படும். கண்ணில் மிகுந்த கொதிப்பும், குத்தலும், வலியும் காணும். இடைவிடாத இடி வலி உண்டாகும். பாவையை மறைத்துப் பார்வை குன்றச் செய்யும். (218)

### மருந்து 1 (சந்தனாதி உருண்டை)

பசுவின்பல்லை ஆம்பல் பூச்சாற்றால் அரைத்து வில்லை தட்டி வைத்து 40 நாட்கள் சென்ற பின்னர், அதனுடன் சேவல் நெஞ்செலும்பு, கோட்டம், கோரோசனை, இந்துப்பு, பொன், வெள்ளி' வெண்கலம், துருசு, துத்தம், படிகாரம், ஓரிதழ்த்தாமரை வேர்ப்

பட்டை, சாரடைவேர்ப்பட்டை, சந்தனக்கட்டை, திரிபலையின் வித்துகள் இவை வகைக்கு 1 கழஞ்சு கூட்டி, எலுமிச்சம் பழச் சாற்றால் 7 நாட்கள் அரைக்கவும், பிறகு பன்னீர்விட்டு முன்போல அரைத்து மிருதுவாக உருட்டிக் கொள்ளவும். இதை முலைப் பாலில் உரைத்துக் கண்ணிலிடக் குமுதம் நீங்கும். பூ, படலம், காசம், திமிரம் இவையும் தீரும். (219-221)

**மருந்து 2 (பொடி)**

துருசு, எலிமருந்து, சீனாக்காரம், இவற்றைச் சுத்தம் செய்து புது ஓட்டிலிட்டு உருக்கிக்கலந்து பொடித்து ஒரு தினையளவு கண்ணில் 10 நாட்களுக்கு ஒரு நாளைக்கு ஒரு வேளை மட்டும் இடக் குமுதம் நீங்கும். (222)

**மருந்து 3 (குழம்பு)**

கடல்நுரை, துருசு, சங்கு, இந்துப்பு, தேன், பால்துத்தம், இவை ஆறு சரக்குகளையும் பசுவின் வெண்ணெய் கூட்டி, குழி யம்மியிலிட்டு 1 சாமம் அரைக்கவும், இக்குழம்பை எடுத்துவைத் துக்கொண்டு கண்ணிலிடக் குமுதம் தீரும் (223)

## 4. கருவிழி விழியுந்தல்

கருவிழியில் தோன்றும் விழியுந்தல் என்னும் நோய் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை, 1. கருவிழியுந்தல், 2. இரத்த உந்தல் 3. சதையுந்தல்.

இம்மூன்று வகை விழியுந்தல் நோய்களும் தீராதவை என்றே கூறப்படுகின்றன.

**விழியுந்தல் நோய்கள் வரக் காரணங்கள்**

கருவிழியில் தோன்றும் குமுதம் என்ற நோயாலும், கண்ணில் தோன்றும் வேறுவகை நோய்களாலும், கருவிழியில் அளவுக்கதிக மான நீர் சேர்ந்து செறிந்திருப்பதாலும், விழியில் மயக்கமுண்டாகி இவ்விழியுந்தல் என்னும் நோய்கள் தோன்றுகின்றன. (224)

**மருந்து**

கருவிழிப் படலங்களுக்குப் புறமருத்துவமாகக் கூறப்பட்ட ரட்சைபோன்றே கருவிழி விழியுந்தலுக்கும் இரட்சை செய்வர்.

**செய்முறை**

காக்கையின் கால் போன்றக் கருவியை சிவக்கக்காய்ச்சி நெற்றி நடு நரம்பின்மீதும், பிடரியில் மயிர் சந்திப்பின் மத்தியிலும், கண்ணின் கடையிரு புறங்களிலும் சூடுவைக்கவேண்டும். பிறகு, சங்கு, யானைப்பல், செஞ்சந்தனம், தேவதாரம், கடுக்காய் இவை ஐந்தும் முலைப்பால் விட்டரைத்துக் கலந்து காய்ச்சி, சூடு வைத்த இடங்களில் கனக்கப் பூசவேண்டும். (225-226)

## 5. கருவிழியில் நெரிசல்

கருவிழியில் தோன்றும் நெரிசல் என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை 1. சோரை நெரிசல் 2. நீர் நெரிசல் 3. உட்டிண நெரிசல்

இவற்றுள், சோரை நெரிசல் என்னும் இரத்த நெரிசல் தீராதது. மற்ற இரு நெரிசல் நோய்களும் மருத்துவத்தால் தீரக் கூடியவையே.

**நெரிசல் நோய்கள் வரக் காரணங்கள்**

கண்ணிலேற்படும் சூட்டினாலும், தீமை மிக்க மருந்துகளைக் கண்ணிலிடுவதாலும், கண்ணினுள்ளே சிவப்பாலும், கண்ணினுள் நீர் ஒதுங்கித் தேங்குவதாலும் இவை உண்டாகின்றன.

**இவற்றின் குணங்கள்**

1. உட்டிண நெரிசல் நோய் கண்டால் கருவிழி வெளுத்தும், உருண்டுமேல் எழும்பியும் காணும்.

2. நீர்நெரிசல்நோய் கண்டால் கருவிழி கருந்தேளின் வடிவம்போல இருக்கும்.

3. சோரை நெரிசல் நோய் கண்டால் கருவிழி பெருங்குன்றி (மஞ்சாடி) போலக் காணும். (227-229)

**மருந்து**

பசுவின் நெய், முருங்கைப்பூச்சாறு, படிகாரம், சீரகம், அபின் இவற்றைக் கூட்டிப் பதமாய்க் காய்ச்சி வடித்து, இருபோதும் கண்ணில் விட்டுவர நெரிசல் நோய்கள் தீரும். (230)

## 6. கருவிழி வரி

கருவிழியில் தோன்றும் வரி என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை 1. சோரிவரி 2 நீர்வரி 3. செறிவரி.

**வரிநோய்கள் வரக் காரணங்கள்**

கண்ணிமையின் உட்புறத்தில் கண்ட வடுவாலும், கருவிழியினுள்ளே வரும் நீரினாலும், சிறு சிறு இரத்த நாளங்கள் வெடிப்பதாலும் இம்மூன்று வரி நோய்களும் தோன்றுகின்றன. (231)

**இவற்றின் குணங்கள்**

**1. சோரி வரி**

இருகடைக் கண்ணிலிருந்து தோன்றித் தாழும்.

**2. நீர்வரி**

கருவிழியில் வெண்மையாயும் நீண்டும் முறுக்கிய புரி கயறு போலக் காணும்.

**3. செறிவரி**

கருவிழியின்மேல் பிறை வடிவில் தோன்றும்.

இவற்றுள், இமையின் வடுதேய்ந்து தேய்ந்து தோன்றிய செறி வரி என்னும் பிறை வடிவம் போகாது. மற்ற நோய்களான நீர் வரியும், இரத்த வரியும் தீரும். (232-233)

**மருந்து**

பால்துத்தத்தை நுணுக்கி, 1 நாழி வெள்ளாட்டு பாலில் கலக்கிக் காய்ச்சி இறுகியபின், எலுமிச்சம் பழச்சாற்றாலரைத்து அடையாகத்தட்டி உலரவைத்துச் சட்டியில் வைத்து எரிக்கவும். எரித்த மருந்து வெண்மையானால் அதை வெண்கலப் பாத்திரத்தி லிட்டுச் சங்கால் நுணுக்கித் தூளாக்கிக் கண்ணிலெழுத வரி நோய்கள் தீரும். சிவப்பும், நீரும் நீங்கும். (234-235)

## 7. கருவிழிக் குந்தம்

கருவிழியில் தோன்றும் குந்தம் என்னும் நோய் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை 1. சதைக் குந்தம் 2. இரத்தக் குந்தம் 3. நீர்க்குந்தம்.

இம்மூன்று நோய்களும் தீராதன என்றே கூறுவர். ஆயினும், கருவிழியை விட்டு வெளியே சதைக்குந்தமும், நீர்க்குந்தமும் திரண்டிட்டால் அவை இரண்டும் தீரும். இவற்றுள் இரத்த குந்தம் என்னும் நோய் தீராததேயாகும்.

**குந்த நோய்களின் குணங்கள்**

கருவிழியில் உறுத்தலை உண்டாக்கும். இரத்தம் பெருகும். கண்ணில் கூச்சமும், நீர்வடிதலும், சீழ்ப்பாய்ச்சலும், பார்வை மங்கல், மயக்கம் இவையும் தோன்றும். கண்ணெரிவும், அனலும் காணும், தினவுடன் விழி உயர்ந்து காட்டும். (236-239)

**மருந்து 1**

பிதரோகணி, துத்தம், எலிமருந்து, துருசு, சீனாக்காரம், கடல்நுரை, சோகி, சங்கு இவற்றை நந்திப்பூச்சாற்றிலரைத் துருட்டி, அதை வெளுக்கும்படியாகச் சுட்டுத் தகுந்த துணை மருந்துகளுடன் கண்ணிலெழுதக் குந்தம் தீரும். (237-238)

**மருந்து 2 (குழம்பு)**

புளியிலையை இடித்து வடித்துக்கொண்டு அத்துடன் இந்துப்பைப் பொடி செய்து போட்டுக் காய்ச்சிப் பதமானவுடன், துத்தம், துருசு, தேன் இவற்றையும் கூட்டி அரைத்துக் கண்ணிலிட குந்தம் தீரும். (240)

**மருந்து 3**

பச்சைக்கற்பூரம், அஞ்சனக்கல், காரீயம், திப்பிலி, மிளகு, இரதம் இவற்றை நந்தியாவட்டச் சாற்றிலரைத்துத் தேனிலிடக் குந்தம் தீரும். (241)

**மருந்து 4**

நன்னாரி, விளா, சங்கு இவற்றின் வேர், அதிமதுரம் இவற்றை, மைபோலரைத்துக் காடியில் கலக்கிக் கொதிக்க வைத்து களிம் பாக்கிக் கண்ணிலிடக் குந்தம் தீரும். (242)

## 8. கருவிழித் திமிரம்

கருவிழியில் தோன்றும் திமிரம் என்னும் நோய் ஏழு வகை களாகக் கூறப்படுகின்றது. இவை, 1) வெள்ளெழுத்து, 2) மந்தாரத் திமிரம், 3) வறட்சித் திமிரம், 4) நீர்த் திமிரம், 5) வாதத் திமிரம், 6) சேற்பனத் திமிரம், 7) மாலைக் கண்.

இவற்றுள் மருத்துவத்தால் தீரக் கூடிய நோய்கள் மூன்று எனவும், மற்றவை தீராதவை எனவும் கூறப்படுகின்றன.

இவற்றிலும் மாலைக் கண், வெள்ளெழுத்து இவைகளுக்குத் தனித்தனியாகவும், திமிரத்திற்குப் பொதுவாகவும் பல சுவடிகளில் மருந்துகள் கூறப்பட்டுள்ளன.

**திமிர நோய்களின் பொதுவான குணங்கள்**

பொதுவாகப் பார்வை ஒடுக்கமும் மாறுபாடுகளும் காட்டும் கண்ணின் நோயாகத் திமிர நோய் கூறப்படுகின்றது. இந்நோய் கண்டவர்களுக்குக் கண்கள் கடுக்கும். கரகரக்கும். தூக்கம் வரும். தலையிலும் முகத்திலும் அரிப்புண்டாகும். கண்ணில் நீர் வடியும். பீளை கட்டும். கண்கள் வெளுத்துத் தோன்றும். பார்வை பலவிதமாகக் காணப்படும்.

**வயதும் பார்வைத் திறனும்**

மனிதனின் வயது ஏறஏறக் கண்பார்வை குறைவதாகக் கூறப்படுகிறது. முப்பத்தைந்து வயது வரை கண் பார்வை ஒளிமிக்கதாகவும் தெளிவாகவும் இருக்கும். அதன் பிறகு பார்வை சிறிது சிறிதாகப் புகைச்சலாக மாறி நாற்பத்தைந்து வயதில் இது அதிகமாகும். ஐம்பத்தேழாம் வயதிலிருந்து பார்வை இருளடையத் தொடங்கும். நூறு வயதில் பார்வை அறவே நீங்கிவிடும் எனக் கூறப்படுகிறது. (243-245)

**1. வெள்ளெழுத்தின் குணம்**

கருவிழியில் அடர்ந்த புகை கப்பியது போலவும், மேகக் கூட்டம் போலவும், பார்வை தடைப் பட்டும் காணும். நேராகக் காணத்தக்க பொருள் சற்று ஒதுங்கிக் காணும். பொருள்கள் சற்று மஞ்சளாகவும், நேர் பார்வை சற்று தப்பியும் காணும். வாத, பித்த, கபம் என்னும் முக்குற்ற மாறுபாட்டினால் கருவிழியில் காசம் தோன்றி வளர்வது போலவே இந்நோயும் படர்கின்றது. எந்நேரமும் கண் சொருகல், அரைக்கண் பார்வை, மயக்கம், சோர்வு, கண்ணில் நீர்வடிதல், தூரப் பார்வை தெரியாமை, பெரிய பொருள்கள் சிறிய பொருள்களாய்த் தோற்றல், எந்நேரமும் மறைப்பான குணம் போன்றவற்றை உண்டாக்கும். (246-249)

**2. மந்தாரத் திமிரத்தின் குணம்**

கருவிழியின் மீது நெருக்கமாகப் பஞ்சைப் பரப்பியது போலத் தோற்றமளிக்கும். இருள் சூழ்ந்த மாலை நேரத்தில்பார்வை குழம்

பியும் கலைந்தாற் போலவும் காணும். ஒரு சாமம் சென்றபின் பார்வை தெளிவுறும். (250)

### 3. வறட்சித் திமிரத்தின் குணம்

மூளையில் பித்தம் தங்கி அது மிகுதியாகி வறட்சியானால் பார்வை மந்தமும், நடு நரம்பில் குத்தலும், கண்ணீர்ப் பெருக்கும், பீளை சேர்தலும் உண்டாகும். (251)

### 4. நீர்த் திமிரத்தின் குணம்

கருவிழியில் கப நீர் அதிகரித்து, மூக்கிலும் நீர் வடிந்து மூக்கை அடைக்கும். அண்ணாந்து பார்க்கும் போது புண்ணாகும், கண்ணின் இருபுறமும் குத்தலும், பார்வையில் புகைச்சலும் உண்டாகும். இது நீரால் தோன்றிய நோயாதலால் நீர்த் திமிரம் என்பர். (252)

### 5. வாதத் திமிரத்தின் குணம்

உந்தியைச் சுற்றி வாயு தங்கி உச்சித் தலையில் குத்தல் வலி தோன்றி முன் விழியில் நீர் வழியும். பார்வையும் இருளும். (253)

### 6. சேற்பனத் திமிரத்தின் குணம்

உடலில் தாதுக்கள் கெட்டு நரம்புகள் மெலிந்து வலிவு குன்றியும், கருவிழியைச் சுற்றி வலியும், பார்வை ஒளி மழுங்கியும் காணும். விழியில் அனல் மிகுந்து எரிச்சலும் சூடும் மிகும். (254)

### 7. மாலைக் கண்ணின் குணம்

மாலை நேரத்தில் கண் பார்வை தெரியாது. வாதமதிகமாவதால் இது தோன்றுகிறது. புத்தி வேறுபட்டுக் கொண்டேயிருக்கும் எதிலும் ஒரு திடமான நிலையைக் கொடுக்காது. மயிர்க் கூச்சம், நாவறட்சி, பிடரிவலி, தலைவலி, தும்மல், நீர் வடிதல் காணும். உடல் வெளுத்திருக்கும். முகம் பசந்திருக்கும். கண் ஒளி மழுங்கும். கண்ணில் பீளையும் நீரும் வடியும். அண்ணாந்து நோக்கில் கண் கூசும். மாலைக் காலத்தில் விளக்கும் கண்ணுக்குத் தெரியாது. (255-256)

குறிப்பு கருவிழிக் காச நோய்களைப் போலவே மேற்கண்ட வெள்ளெழுத்து, மந்தாரதிமிரம், மாலைக் கண் போன்ற திமிர நோய்களும் பார்வையைத் தடுத்துக் கேடு உண்டாக்குவதும் அறியத்தக்கது.

கருவிழிக் காச நோய்களைப் போலவே கருவிழித் திமிர நோய்களும் அதிகமாகப் பரவிக் காணப்படுவதால் இவற்றுக்கான மருத்துவ முறைகளும் அதிகமாகக் கூறப்படுகின்றன.

## வெள்ளெழுத்துக்கு மருந்து

**மருந்து 1**

வளையல்,வெந்த தலையோடு, கடுகு, நெல்லிக்காய், தான்றிக்காய், மஞ்சாடி, முருங்கைப் பூ இவைகளை எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்து இட வெள்ளெழுத்து நீங்கும். (257)

**மருந்து 2**

புங்கன் விதையை மேல் தோல் நீக்கி, நறுக்கிப் பால் பிழிந்து கொண்டு, அத்துடன் கோரோசனை, கோட்டம், குங்குமப்பூ இவைகளைச் சமனெடையாய் நிறுத்திப் போட்டு அரைத்துருட்டி, மாத்திரையாக உலர்த்தி, நீரில் உரைத்துக் கண்ணிலிட வெள்ளெழுத்துத் தீரும். (258)

**மருந்து 3**

அகத்திப் பழுப்பைச் சாறு பிழிந்து வடி கட்டிக் கண்ணிலிட வெள்ளெழுத்துத் தீரும். (259)

**மருத்து 4**

தேற்றான் விதை, சங்கு, திரிகடுகு, இந்துப்பு, மரமஞ்சள், புங்கன் விதை, திரிபலை இவை ஒவ்வொன்றும் ஒரெடையாகக் கொண்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி, நீரில் உரைத்து இடத் தீரும். (260)

**மருந்து 5**

வில்லை வேரைத் தண்ணீரிலுரைத்திடத் தீரும். (261)

**மருந்து 6**

பொன் முழுக் காச்சியை உள்ளுக்குச் சாப்பிட நீங்கும். (262)

**மருந்து 7**

சந்தனம், துத்தம், துருசு, தாரம், பீதரோகணி, பச்சைக் கற்பூரம் இவை ஒரு நிறையாய் மை போலரைத்து இடத் தீரும். (267)

மருந்து 8

புங்கம் வேரைத் தேனிலுரைத்துக் கண்ணிலிடத் தீரும். நெய்யில் உரைத்திடவும் தீரும். (268)

மருந்து 9

துத்தம், செங்கழுநீர், கோட்டம், இருவேலி வேர், நந்தியாவட்டவேர் இவைச் சமனாக பசுவின் பாலில் வேக வைத்தரைத்து உருண்டை செய்து உலர்த்தி முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (270)

மருந்து 10

அப்பை கோவை, நாய்க் கோவை, அடுப்புக் கற்றாழை, வெண் குன்றிமணி, கருங்குன்றிமணி, தழை, வேர்ப் பட்டை, ஒருள்ளி, வசம்பு, மஞ்சள் இவற்றை அரைத்துருட்டி முலைப்பாலில் உரைத் திடத்தீரும். (274)

மருந்து 11

சந்தனம், காவிக்கல், சண்பக மெட்டு, மிளகு இவை சமன் கூட்டி, எலுமிச்சம் பழச் சாற்றிலாவது காடியிலாவது அரைத் துருட்டி முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (275)

மருந்து 12

பருத்தி இலையைக் கசக்கிப் பிழிய மாறும். (271)

மருந்து 13

வேப்பம் பிசினை அழிஞ்சிப் பழச் சாற்றிலரைத்து இடத் தீரும் (272)

மருந்து 14 (நசியம்)

சர்க்கரை, தேன், வெள்ளாட்டுப்பால் இவை சமன் கூட்டி நசியமிடத் தீரும். (263)

மருந்து 15

சிறுகீரைவேர், கண்டுசர்க்கரை, அதிமதுரம், செங்கழுநீர்க் கிழங்கு இவற்றை முலைப்பாலில் நசிய மிடத் தீரும். (264)

மருந்து 16

அருகன், கருப்பன், முந்திரிகை, மாதளம் இவற்றின் சாறுகளைச் சமன் கொண்டு நசியம் இடத் தீரும். (265)

**மருந்து 17**

பேய்ப்பீர்கன் கூண்டு பொது செய்து எண்ணெயில் ஊற விட்டுக் கொதிக்க வைத்து பலதடவை முகரவும், பூசவும் தீரும். (266)

**மருந்து 18 (தைலம்)**

பசுவின் பால், பொன்னாங்காணிச்சாறு, கரிசாலைச் சாறு, நெல்லிக்காய்ச் சாறு. நல்லெண்ணெய் இவை வகைக்கு 8 படி. முசுமுசுக்கை, நெருஞ்சில், கண்டங்கத்தரிக்காய், முள்ளிக் கத்தரிக்காய், தென்னம்பூ, வில்வம், வாதநாராயணன் இலை, இவற்றின் சாறு வகைக்கு 1படி நன்னாரி வேர், சீரகம், கொத்தமல்லி, இவை வகைக்கு 4 பலம், தாமரைப்பூ, மிளகு, அதிமதுரம், சந்தனம் அன்னாசு மொக்கு இவை வகைக்கு 2 பலம், கத்தூரி மஞ்சள், வெட்டி வேர், சோம்பு, கல்லுப்பு, விலாமிச்சு வேர், மல்லிகைப் பூ, இவை வகைக்கு 1பலம். இவற்றை ஒன்றாகச் சேர்த்து முறைப் படிக் காய்ச்சி வடித்துத் தலையில் தேய்த்து முழுகி வரத் தீரும். (276)

## மாலைக் கண்ணுக்கு மருந்து

**மருந்து 1**

சுழல் வண்டு சுட்ட சாம்பல், எள்ளெண்ணைய், நீர்ப்பூண்டுச் சாறு, பருத்தியிலைச் சாறு, வெள்ளுள்ளி, மிளகு இவற்றைச் சேர்த்து கல்வத்திலிட்டு ஆட்டி மை போலாக்கிக் காலை மாலை இரு வேளையும் கண்ணிலிட நீங்கும் (277)

**மருந்து 2**

துருசு 2, சங்கு 5, இந்துப்பு ¼ எடையாக நிறுத்தெடுத்துக் கொண்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டிக் கண்ணி விடத் தீரும். (280)

**மருந்து 3**

கோழியா வரையின் சாறும் பசுவின் பாலும் சமனாகச் சேர்த்து 7 நாட்கள் சாப்பிட்டு வரத் தீரும். (281)

**மருந்து 4**

காது குறும்பி 1 பங்கு, தேன் 2 பங்கு சேர்த்து 12 நாழிகை அரைத்து வைத்துக் கொண்டு மாலையில் கண்ணிலிட்டால், ஐந்து அல்லது ஆறு நாட்களில் தீரும் (282)

மருந்து 5

மின்மினிப்பூச்சியை வெல்லத்தில் வைத்து விழுங்கத்தீரும். (283)

மருந்து 6

தும்பையிலை, சுக்கு, மிளகு இவை சமனெடையாகச் சேர்த்தரைத் துருட்டி, மூன்று வேளை தண்ணீரில் இழைத்து இடத் தீரும். (284)

மருந்து 7

இந்துப்பைச் சங்கிலைச் சாற்றில் உரைத்து இடத்தீரும். (285)

மருந்து 8

மிளகை நல்லெண்ணெய்யில் ஊற வைத்துத் தலையில் பூசத் தீரும். (286)

மருந்து 9

எட்டி விதையை முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (287)

மருந்து 10

கொடிப்பாலைக் கொழுந்துப்பால் 1 துளி, விளக்கெண்ணெய் துளி சேர்த்து இடத் தீரும் (288)

மருந்து 11

எட்டி வேரை முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (289)

மருந்து 12

பழமிளகை நல்லெண்ணையில் ஊற வைத்து அரைத்துப் போடத் தீரும். (286)

மருந்து 13

நொச்சிச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, தேன் இவை வகைக்கு 1 வராகன் எடை சேர்த்துக் கழுதை எலும்பை உரைத்துப் போடத் தீரும், (290)

மருந்து 14

இந்துப்பு, மனோசிலை, சங்கு, சதகுப்பை, கடல்நுரை, மிளகு, செங்கற்பொடி, இவை ஓரளவாய்க் கொண்டு எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்துருட்டி, பசுவின் நெய்யில் உரைத்துப் போடத் தீரும். (291)

**மருந்து** 15

மகிழம் விதையை முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (292)

**மருந்து** 16

வெள்ளாட்டு ஈரலும் பிச்சும் உப்பிடாமல் வேக வைத்து இடத் தீரும். (293)

**மருந்து** 17

வெட்பூலாவேரைக் காடியிலுரைத்திடத்தீரும். (294)

**மருந்து** 18

கருஞ்சீரகம், ஆனைக் கொம்பு, தேன் விட்டரைத்துருட்டித் தேனிலுரைத்திடத் தீரும். (295)

**மருந்து** 19

கிராம்பை எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்து இடத் தீரும். (298)

**மருந்து** 20

சோதி துத்தம் 6 கழஞ்சு, பொடி செய்து எலுமிச்சம் பழச் சாறு 2 உழக்கு விட்டரைத்து, மெல்லிய துணியில் வைத்துலர்த்தி முலைப்பாலில் நனைத்து ஒழுக்க நீங்கும். (296)

**மருந்து** 21

அழிஞ்சிக் கொழுந்து, வெள்ளுள்ளி, மிளகு இவற்றை சேர்த்து முலைப்பாலில் சேர்த்துப் பிழியத் தீரும். (297)

திமிரங்களுக்குப் பொதுவான மருந்துகள்

**மருந்து** 1

சங்கு, தலையோடு, ஓரிதழ்த் தாமரை மூலம், சுண்ணாம்புக் கல், சோகி, ஆமையோடு, பால்துத்தம் இவை வகைக்கு 1 கழஞ்சு, துருசு 6 கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச் சாற்றாலரைத்து, பிறகு கோழி முட்டையின் வெண்கருவில் அரைத்து உருட்டி நிழலில் உலர்த்தவும். இதை முலைப்பாலில் அரைத்து இடத் திமிரம் நீங்கும். (299—300)

**மருந்து** 2

சந்தனம், அகில், செஞ்சந்தனம், அதிமதுரம், தேவதாரு, ஓரிதழ்த் தாமரை வேர், பிச்சி அரும்பு, கோட்டம், பச்சிலை, யீது

ரோகணி, சீனாக்காரம், பால்துத்தம், புனுகு, கோரோசனை கோரைக் கிழங்கு, தேற்றான் விதை, மூங்கில் குருத்து, சங்கு, இலிங்கம், சாத்திர வேதி, இந்துப்பு ஆகிய 21 சரக்குகளையும் வகைக்கு 2 வராகன் எடை எடுத்து, செவ்விளநீர், பன்னீர், முலைப்பால் இவற்றில் தனித் தனியே அரைத்து உருட்டி நிழலில் உலர்த்தவும். இதை முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (301—302)

**மருந்து 3**

திப்பிலி, அமுக்கிரா, திரிகடுகு, அரத்தை, கோட்டம், சிறு கீரை, முகிளிதம், துருசு, துத்தம், கஞ்சாங் கோரை, பொன்னரி தாரம் இவற்றை முலைப் பாலிலரைத்துருட்டி இடத்தீரும் (304—305)

**மருந்து 4**

எள்ளுப்பு, மிளகு, பிச்சி, திப்பிலி இவைகளைக் கூட்டிச் சேர்த்து கழுநீரில் அரைத்துருட்டி, காடியிலுரைத்து இடத்தீரும் (306)

**மருந்து 5**

படிகம், சங்கு, நிமிளை, பால்துத்தம், பஞ்சலோக பற்பம் யானைத்தந்தம், பன்றிப்பல், சோகி, சுண்ணாம்புக்கல், ஆமை யோடு, சீரகம், ஓரிதழ்த் தாமரை வேர்ப்பட்டை, முதலைப்பல் தோற்றான் வித்து, சிறுகீரை வேர், காக்கண வேர்ப்பட்டை, சீனாக்காரம், பீதரோகணி, சேவல் நெஞ்செலும்பு, பீங்கான், கடல்நுரை, பசுவின்பல், மான் கொம்பு, இவை வகைக்கு ½ கழஞ்சு வீதம் எடுத்து அத்துடன் துருசு 15 கழஞ்சு கூட்டி, எலுமிச்சம் பழச் சாறு, முட்டை வெண்கரு இவற்றில் தனித்தனியே 7 நாட்கள் அரைத்துருட்டி வைக்கவும். இதை முலைப்பால், தேன், நெய் இவற்றில் உரைத்து இடத் தீரும். (309—311)

**மருந்து 6**

பசுவின் பால் 1 நாழியில் ½ பலம் உரித்த பூண்டை யிட்டுக் காய்ச்சி அத்துடன், இந்துப்பு ½ பலம் பொடித்துப் போட்டுக் காய்ச்சவும். இதனுடன், தலையோடு, துருசு, சங்கு இவற்றைப் பொடித்துப் போட்டு அரைக்கவும். பசுவின் வெண்ணெய்யும் சேர்த்தரைத்துக் குழம்பானதும் வழித்து வைத்துக் கண்ணிலிட 10 நாட்களில் திமிரம் தீரும். (312 – 313)

மருந்து 7 (தைலம்)

கருவாழை, கரிசாலை, காடி, பொன்னாங்காணி, செவ்விள நீர், இவை வகைக்கு ¼ படி, நல்லெண்ணெய் 1 படி: இவற்றுடன் ஏலம், கோட்டம், மதுரம். கற்பூரம், மாஞ்சில், சந்தனம் இவை ஓரளவாய்ச் சேர்த்துக் காய்ச்சி வடித்துத் தலைமுழுகத் தீரும். (308)

## 9. கருவிழிச் சுக்கிரன்

கருவிழியில் தோன்றும் சுக்கிரன் என்னும் நோய் ஐந்து வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை, 1. விரண சுக்கிரன் 2. நண்டுக் கண் சுக்கிரன் 3. விழிவிழுங்கிச் சுக்கிரன் 4. வெளுத்த சுக்கிரன் 5. அனல் சுக்கிரன்.

கருவிழியில் தோன்றும் புண் வகைகளே சுக்கிரன் எனக் கூறப்படுகின்றன.

### 1. விரண சுக்கிரன்

கருவிழியின் மீது தோன்றும். குறிப்பாக கண்மணியை மூடி மறைப்பதாகும். (315)

### 2. நண்டுக்கண் சுக்கிரனின் குணம்

கருவிழியைச் சுற்றிலும் புண் தோன்றி நாளுக்கு நாள் உறுத்தலுடன் வளரும். இதைக் கருத்த சுக்கிரன் என்றும் கூறுவர். (314)

### 3. விழி விழுங்கி சுக்கிரனின் குணம்

கருவிழியில் கீழ்வரியினிடையே வெள்ளெழுச்சி போல விழி தெரியாதவாறு மூடும். இதனால் வேதனை மிகும். கண்ணில் இடிவலியும் எரிச்சலும் எப்பொழுது மிருக்கும். (316—317)

### 4. வெளுத்த சுக்கிரனின் குணம்

கருவிழியின் பக்கத்தில் பனித்துளி போல உந்தலுடன் எழும்பிக் காணும்; இது சுடு மணல் போல எரிந்து, எழுச்சி போலவும், கடலிலுள்ள சோகி போலவும் பெரியதாகி கருவிழியைத் தாக்கி மறைத்துப் பார்வைக்குத் தடைகள் செய்யும். (318)

5 அனல் சுக்கிரனின் குணம்

கருவிழியில் சற்று மேற்புறமாகத் தழல் போலத் தோன்றும். கண்ணில் இடி வலியும் அழற்சியும் காணும். பார்வையும் தெரியாததாகும். (319)

இவற்றுள் மருத்துவத்தால் தீராதவை மூன்றாகும். அவை. 1. விரண சுக்கிரன், 2. நண்டுக்கண் (கருத்த) சுக்கிரன் 3. விழி விழுங்கிச் சுக்கிரன்.

மற்ற இரண்டும் தீரக் கூடியவை. அவை, 1. வெள்ளைச் சுக்கிரன், 2. அனல் சுக்கிரன் (320—321)

மருந்து 1 (நெய்)

பசுவின் நெய் 1 உழக்கு, அதிமதுரம், நற்சந்தனம், தேவதாரு, வெட்பூலாவேர், திரிபலை, வெள்ளாட்டுக்காதின் ரத்தம், நத்தைப் பூச்சி, சிப்பிநீர், சீரகம், அபின் இவற்றைச் சமனாகக் கொண்டு காய்ச்சி வடித்துக் கண்ணிலிடத் தீரும் (322)

மருந்து 2

சீனாக்காரத்தை நன்றாகப் பொரித்துத் தூளாக்கி. அதற்கு மூன்றிலொரு பங்கு அபினும் சீரகத் தூளும், அதில் பாதியளவு காவிக் கல்லும் சேர்த்து நுணுக்கி முலைப்பாலில் கலக்கித் தெளிய இறுத்து வடிகட்டிக் கண்ணிலிடத் தீரும். (323)

மருந்து 3

இளநீர், பசுவின்பால், நன்னாரி, எலுமிச்சம், மதுரம், கந்தம், நெய்தல், நல்லெண்ணெய் இவற்றைச் சேர்த்துப் பதமாய்க் காய்ச்சிக் கண்ணிலிட தீரும். (324)

மருந்து 4 (சொர்ணாதிக் குளிகை)

பொன் 1 கழஞ்சு, வங்கம் 2கழஞ்சு, பீதரோகணி 3 கழஞ்சு, துத்தம் 4 கழஞ்சு, துருசு 5 கழஞ்சு, சீனாக்காரம் 6 கழஞ்சு ஒரிதழ்த்தாமரை வேர்ப்பட்டை 7 கழஞ்சு, பன்றிக் கொம்பு 8 கழஞ்சு, யானையின் பல் 9 கழஞ்சு, மான்கொம்பு 10 கழஞ்சு, கடலாமையின் ஓடு, 11 கழஞ்சு, அதிமதுரம் 12 கழஞ்சு, தேவதாரு 13 கழஞ்சு, சேவல் நெஞ்செலும்பு 14 கழஞ்சு, முதலைப்பல் 15 கழஞ்சு, சோகி 16 கழஞ்சு, என இவற்றை ஒன்று சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, இளநீர் இவை

களில் தனித்தனியே ஏழு நாட்களுக்கு அரைத்து உருட்டி, உலர்த்தி யெடுத்து முலைப்பாலில் இழைத்து இடத் தீரும். (325—327)

**மருந்து 5 (பச்சைக் கற்பூராதிப் பொடி)**

பச்சைக் கற்பூரம், பீதரோகணி, மனோசிலை, பால்துத்தம், துருசு, இந்துப்பு சுக்கு, சோகி, பீங்கான், கோழி முட்டையோடு, காக்கண வேர்ப்பட்டை, ஓரிதழ் வேர்ப்பட்டை, வெண்சாரடை, வேர்ப்பட்டை, சீதேவி செங்கழுநீர் வேர்ப்பட்டை, சிறுகீரைவேர், இவை வகைக்கு 3 கழஞ்சு வீதம் கூட்டி எலுமிச்சம் பழச்சாற்றால் மை போலரைத்து உருட்டி உலர்த்தி ஓட்டிலிட்டுக் கரி நெருப்பில் எரித்து அது நன்றாக வெளுத்துத் தோன்றும் போது எடுத்து ஆற விட்டுத் தூள் செய்துப் பரணியில் வைத்து இடவும் தீரும்.

இப்பொடியை முலைப்பால் அல்லது தேனில் இழைத்து இட லாம். (328—329)

**மருந்து 6**

சிறுகீரை வேர். செஞ்சந்தனம், நெய்தல், பொன்னாங்காணி வேர், தாமரை வளையம், இவற்றை நறுக்கி, இளநீர், பசுவின் நெய், பால் இவற்றைச் சமனாகக் கலந்ததில் காய்ச்சி வடித்து ஆறிய பின் கண்ணிலிடத் தீரும். (331)

**மருந்து 7**

வெள்ளைதாமரையின் உள் வளையத்தை உரித்து எடுத்துத் அதன் சாறு, பசுவின் நெய், சர்க்கரை, கையாந்தகரைச் சாறு இவற்றைச் சமனாகக் கொண்டு அரைத்துக் காய்ச்சி, வடிகட்டி வைத்துக் கண்ணிலிடத் தீரும். (333)

**மருந்து 8**

வரட்பூலாப்பூ, அந்தி மல்லிகைபூ, ஓரிலைத் தாமரைப் பூ, நந்தியாவட்டப்பூ, துத்தம். துருசு, ஆமையோடு, வெந்தத் தலை யோடு, பலகறை இவைகளை ஒரு எடையாகக் கொண்டுப் பனை மட்டைச் சாற்றிலரைத்து உருட்டி, உலர்த்து எடுத்துப் பனை மட்டைச் சாற்றில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (334)

மருந்து 9

தலையோடு 4கழஞ்சு, இந்துப்பு 2 கழஞ்சு துத்தம் 1 கழஞ்சு என இவற்றைச் சேர்த்துப் பனை மட்டைச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து,பனை மட்டைச் சாற்றில் உரைத்து இடத் தீரும். (335)

மருந்து 10

ஆணாவேர், முசுமுசுக்கை வேர், சிறுகீரை வேர், பொன்னாங் காணிவேர், வெள்ளைக் காக்கணான் வேர், இவை ஒரு எடை யாகக் கொண்டு, பசுவின் பாலில் கூட்டி அவித்து, அத்துடன், துத்தம், துருசு, கற்பூரம் இவை சமனாகக் கூட்டி முலைப்பால் விட்டரைத்து, உருட்டி உலர்த்தி எடுத்து காடியில் இடவும் தீரும். (336)

மருந்து 11

சிப்பிச்சதையும், அதிமதுரம், கொடுப்பை வேர், ஆவாரை வேர், இவற்றை அரைத்து நெய்யிற் கலந்து வேகவைத்து வடித்து இடத்தீரும். (337)

மருந்து 12

உப்பிலியிலை, முருக்கு முள்ளிலை, கரிசலாங்கண்ணி இலை, சாறுவளைஇலை, சங்கிலை, இவற்றைச் சாறுபிழிந்து தனித் தனியாகத் துணியில் நனைத்துத் திரியாகத் திரித்து, நல்லெண், ணெய்யில் விளக்கேற்றி மை பற்ற வைத்து, மையும் வெண்ணெய் யும் கூட்டி இடத்தீரும். (338)

மருந்து 13

கபாலம் 7, துத்தம் 1, செம்பரப்பொடி 2, வெண்கலச்சதா 2, இந்துப்பு ½ ஓரிதழ்த்தாமரை 2, நிலக்குமிழ் வேர் 2, என இவற்றை சேர்த்துப் பனைமட்டைச் சாறு வார்த்தரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, காடியில் உரைத்து இடத்தீரும். (339)

மருந்து 14

கண வாயோடு, துத்தம், துருசு இவை ஓரளவாகக்கொண்டு, குப்பை மேனிச் சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்துப் போடத் தீரும். (340)

## 10. கருவிழிப்பூ

கருவிழியில் தோன்றும் பூ என்னும் நோய் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை 1. ஆணிப்பூ, 2. புகைப்பூ, 3. உந்தல்பூ.

### இந்நோய்கள் தோன்றக் காரணங்கள்

வைசூரி போன்ற அம்மை நோய்களாலும், மிகுந்த வெப்பத்தாலுண்டான நோய்களாலும், மேகநீர் போன்ற கெட்ட நீராலும் முறையே இம்மூன்றுவித நோய்களும் தோன்றும்.

இவற்றுள், ஆணிப்பூ, உந்தல்பூ இவை இரண்டு நோய்களும் தீராதவை என்றே முன்னோர்கள் கூறுவர். ஆயினும், இவற்றுடன் வெண்புகைப் பூவுக்குமாகச் சேர்த்து மருந்துகள் கூறப்படுகின்றன.

### 1. ஆணிப் பூவின் குணம்

கருவிழியின் நடுவே ஆணியின் தலைபோல் தோற்றம் வேரோடி, சவ்வு மூடி, தசை வளர்ந்து ஓரம் புண்ணாகிக் காணும். கண் வீங்கிக்காணும். நாளுக்கு நாள் கரடு கட்டித் தடிப்பும் அதிகமாகும். தலைவலி, நீர் பாய்ச்சல், சீழ்வடிதல், பீளை சாடுதல், கூச்சம், சூரியனைப் பார்க்கக் கூடாமை இவையும் இருக்கும். இந்நோய் தீராதது. ஆயினும், தொடக்க நிலையில் சில மருந்துகளைப் பயன்படுத்தத் தீருமெனத் தெரிகிறது. (341-344)

### ஆணிப்பூவுக்கு மருந்து

**மருந்து 1**

மான்கொம்பு, உருத்திராட்சம், வெள்ளைச் சாரணைவேர் தேசிப்பல், யானைத் தந்தம், சேவல் நெஞ்செலும்பு, வெள்ளிச்சரிகை, புலிநகம்,குப்பைமேனி வேர்,இவற்றைச் சமனாக நிறுத்துக் கொண்டு ஆவி நீரில் ஊறப்போடவும், மூன்று நாட்கள் ஊறியபின் இதைக் கல்வத்திலிட்டு முலைப்பால் சேர்த்து ஆட்டி உருட்டியெடுத்து நிழலில் உலர்த்திவைக்கவும். இதைத் தேன், முலைப்பால் இவைகளில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (345-346)

**மருந்து 2**

துத்தம், தேற்றான் விதை,பலகறை,கரும்புசாறு, தலையோடு திப்பிலி, சேவல் நெஞ்செலும்பு, இவற்றை வகைக்கு 1 கழஞ்சாகச்

சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி, உலர்த்தி, யெடுத்து முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (347)

**மருந்து 3**

துத்தம், உப்பிலிக்கொடி, துருசு இவற்றைச் சமமாகக்கொண்டு சுத்தமான பசுவின் வெண்ணெய்யிற் சேர்த்து அரைத்துச் சிமிழிலடைத்து வைத்து, 1 பயறளவு கண்ணிலிடத் தீரும். (348)

**மருந்து 4**

பீதரோகணி, சுக்கு, தலையோடு, ஓரிதழ்த்தாமரை வேர் இவை வகைக்கு 1 வராகன் எடை, துருசு, பச்சை வளையல் இவை வகைக்கு 2 வாரகன் எடை, பன்றிக்கொம்பு, வெண் காக்கணவேர் இவை வகைக்கு 4 வாரகன் எடை எனக்கொண்டு, இவற்றைச் சேர்த்து முலைப்பால் விட்டரைத்துருட்டி, நிழலில் உலர்த்தி, தேன், முலைப்பால் இவற்றில் உரைத்து இடத் தீரும். (349)

**மருந்து 5**

கடுக்காய், துருசு, துத்தம், மனோசிலை, அரிதாரம், திப்பிலி செம்புத் தகடு இவற்றை ஒரு நிறையாகக் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து உருட்டி, உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (351)

**மருந்து 6**

தலைமயிர் சுட்டது, துத்தம் இவை ஓரளவாகக் கூட்டி சங்கிலை, புளியிலை, இவற்றைப் பசுவின் பால் விட்டரைத்து வெண்ணெய்யிற் குழப்பிக் கண்ணிலிடத் தீரும். (354)

**மருந்து 7**

எலி வலது பல்லும் உப்புமாகத் தேய்த்து கண்ணில் எழுத மாறும். (355)

**மருந்து 8**

முத்து, வெள்ளி, தாமிரம், சங்கு, துருசு, துத்தம், வெண்கலம், தலையோடு, பொன், பீதரோகணி, புங்கன் விதை, இவை ஓரள வாய்க்கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, முலைப்பால் அல்லது நந்தியாவட்டப் பூச்சாற்றிலிடத் தீரும். (352)

**மருந்து 9**

பொன்னாங்காணிச்சாறு, சிறுகீரைச்சாறு, சீந்திற்கொடிச் சாறு, எலுமிச்சம் பழச்சாறு, நல்லெண்ணெய், நாரத்தம் பழச்சாறு இவை வகைக்கு 1 படி, இவற்றுடன், முத்தக்காசு, கோட்டம், அதிமதுரம், ஏலம், சண்பகப்பூ, சிறுநாகப்பூ, இலவங்கம், இவை வகைக்கு ¼ பலம் எடுத்து இடித்துச் சேர்த்து, இவற்றைப் பதமாய்க் காய்ச்சி வடித்து, தலையிற் தேய்த்து முழுகிவரத் தீரும். (353)

**2. உந்தல்பூ 3. புகைப்பூ இவற்றின் குணம்**

கருவிழியில் உந்தலைப் போல உந்தல் பூவும், கருவிழியில் புகை படிந்தது போல புகைப் பூவும் காணப்படும்.

**இவற்றிற்கு மருந்து**

**மருந்து 1**

யானைத்தந்தத்தைப் பொடித்து எடுத்துப் புளியாரைச் சாற்றில் அரைத்து, 1 மண்டலம் சென்ற பின்னர் அத்துடன், துத்தம், கனகம் செம்புப்பொடி வகைக்கு 1 கழஞ்சு கூட்டி, எலுமிச்சம் பழச்சாறு கூட்டியரைத்து உருட்டி எடுத்துலர்த்திக் கண்ணில் இடத்தீரும். (362)

**மருந்து 2**

சங்கு, தலையோடு, ஓரிதழ்த்தாமரைவேர்ப்பட்டை, வெள்ளைநீற்றுக்கல், சோகி, ஆமையோடு, துத்தம், இவை வகைக்கு 1 கழஞ்சு, துருசு 6 கழஞ்சு, எடுத்துக்கொண்டு, இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டிப் பிறகு முட்டை வெண் கருவில் சேர்த்தரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (364-365)

**மருந்து 3**

சந்தனம், அகில், செஞ்சந்தனம், அதிமதுரம், தேவதாரு, கிராம்பு, ஓரிதழ்த்தாமரை வேர்ப்பட்டை, பிச்சியரும்பு, கோட்டம் பச்சிலை, பீதரோகணி, சீனக்காரம், துத்தம், புனுகு, கோரோசனை, முத்தக்காசு, மதற்றான் விதை, கோலரக்கு, இலிங்கம், சாத்திரவேதி, பச்சைக்கற்பூரம், இந்துப்பு இவை வகைக்கு 2 கழஞ்சு வீதம் எடுத்து முலைப்பால், பன்னீர், இளநீர் இவற்றில் தனித் தனியே அரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடத்தீரும். (366)

மருந்து 4

பச்சிலை, செம்புப் பொடி, பசுவின்பல், கழுதைப்பல், சேவல் நெஞ்செலும்பு, கோழி முட்டைக்கோது, மயிர்சுட்ட சாம்பல், இரும்புப் பொடி, சங்கு, கடல்நுரை, வெள்ளாட்டுச் சிறு நீரிலரைத்து உருட்டி எடுத்துலர்த்தி, இதைத் தேனில் உரைத்து இடத் தீரும். (368-369)

மருந்து 5

வாய்விளங்கம், ஆலம்பால், வரைக் கடுகு, பச்சைக் கற்பூரம் ஆகியவற்றை அளவாகச் சேர்த்தரைத்து 5 நாள் இட இரண்டு மாதப் பூவும் போம். (370)

மருந்து 6

துத்தம், பலகறை, தேற்றான் விதை, தலையோடு, மனோ சிலை, மிளகு, திப்பிலி, சேவல் நெஞ்செலும்பு இவை வகைக்கு ½ கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து உருட்டி எடுத்துக் காடியில் உரைத்து இடத் தீரும். (371)

மருந்து 7

அடப்பம் விதையைத் (பாதாங் கொட்டை) தண்ணீர்விட்டு இழைத்துக் கண்ணிலிடத் தீரும். (372)

மருந்து 8

சீமை சவுக்காரமும் கல்லுப்பும் சேர்த்து எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து இடத் தீரும். (373)

மருந்து 9

நந்தியா வட்டப்பூ, முருங்கைப்பூ, நெருஞ்சிப்பூ, நீர்முள்ளிப்பூ, ஆடாதோடைப்பூ இவை சமமாகக் கொண்டு நறுக்கித் துணியில் ஒரு முடியாகக் கட்டிக் கசக்கிக் கண்ணில் பிழியத் தீரும். (374)

மருந்து 10

தலையோடு, பீதரோகணி இவை வகைக்கு 1 கழஞ்சு, துத்தம், சங்கிலை, வெங்கலச் சார்வு, இவை வகைக்கு 2 கழஞ்சு வெட்பூலா, ஓரிதழ்த் தாமரை வேர், சிறுநாகப்பூ இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து புளியிலைச் சாற்றில் அரைத்து உருண்டை செய்து கண்ணிலிடத் தீரும். (375)

**மருந்து 11**

ஆமையோடு, யானைத்தந்தம், பன்றிப்பல், சேவல் நெஞ்செலும்பு,பச்சைக் கற்பூரம், குதிரை எலும்பு இவற்றைச் சேர்த்துப் பொடியாக்கி முலைப்பாலில் அரைத்து இடத் தீரும். (376)

**மருந்து 12**

மச்ச ரத்தினத்தை முருங்கைப்பூச்சாறு அல்லது மாதுளம் பூச்சாற்றில் இழைத்து 1 நெல்லின் பாதி அளவு காலையிலும், மாலையிலும் இடத் தீரும். (377)

**மருந்து 13**

குப்பை மேனியிலையைக் கறுக்கிப் பொடி செய்து சிற்றாமணக் கெண்ணெய்யில் குழைத்து இடத் தீரும்.

**மருந்து 14**

நத்தை நீரை கண்ணிலிடத் தீரும். (357)

**மருந்து 15**

கிராம்பு, மலாக்காய்ச் சந்தனம், நற்சீரகம், திப்பிலி, ஓரிதழ்த் தாமரை, கீழ்க்காய் நெல்லி, பொன்னாங்காணி, பசுவின் நெய், வெண்ணெய் இவற்றைச் சேர்த்தரைத்துக் காய்ச்சி, ஒரு சிப்பி மாமிசத்தைப் போட்டு வெடிக்கவிட்டு எடுத்து கண்ணிலிடத் தீரும். (358)

**மருந்து 16**

யானைப் பல்லைத் தண்ணீரில் உரைத்து இடத் தீரும். (359)

**மருந்து 17**

முருங்கை விதையை உரைத்து இடத் தீரும். (360)

**மருந்து 18**

கருணை நற்தண்டின் நீரைப் பஞ்சிலிட்டு இமையின் மீது போடத் தீரும். (379)

**மருந்து 19**

துத்தியிலையை அவித்து, முலைப்பால் சேர்த்துத் துணியில் முடிந்துக் கண்ணிலிடத் தீரும். (378)

**மருந்து 20**

துத்தம், துருசு இவற்றைக் குப்பைமேனிச் சாற்றிலரைத் துருட்டி, முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (380)

**மருந்து 21**

வெட்பூலா, மல்லிகை, ஓரிதழ்த் தாமரை, நந்தியா வட்டம் இவற்றின் பூவும் வேரும், துத்தம், துருசு, ஆமையோடு, வெந்த தலையோடு, பலகறை இவை சமனாகக் கொண்டு பனைமட்டைச் சாறு விட்டரைத்துருட்டி உரைத்து இடத் தீரும். (381)

**மருந்து 22**

சங்கு, ஆமை ஓடு, துத்தம், துருசு, பீதரோகணி இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டி, முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (382)

**மருந்து 23**

சீனக்காரம் எலுமிச்சம் பழச்சாற்றிலிட்டு கற்பூரம் முலைப் பால் கூட்டி இடத் தீரும். (383)

**மருந்து 24**

சங்கு, கடல்நுரை இவற்றை நீரில் அரைத்துருட்டி, சிறு நீரிலுரைத்து இடத் தீரும். (384)

**மருந்து 25**

கொட்டை பாசிலை 1 பலம், துத்தம், துருசு இவை வகைக்கு 1 குன்றியளவு கூட்டி, சிறுநீரில் அரைத்துருட்டி, சிறுநீரில் உரைத்து இடத்தீரும். (385)

**மருந்து 26**

வேப்பன் விதையைத் தேனிலுரைத்துப் போடத் தீரும். (386)

**மருந்து 27**

பழந்தின்னும் வௌவால் புழுக்கையை எலுமிச்சம் பழச்சாறு, முலைப்பால் விட்டரைத்து நெல் எடை கண்ணிலிடத் தீரும். (387)

**மருந்து 28**

குதிரைக்குளம்பைத் தேனில் உரைத்து எள் எடை கண்ணிலிடத் தீரும். (388)

**மருந்து 29**

முசுமுசுக்கை இலையைக் காய்ச்சிப் பிழியத் தீரும். (389)

**மருந்து 30**

புள்ளிமான் கொம்பும் உப்பும் உரைத்து இடத் தீரும். (390)

மருந்து 31

ஆணாவேரை கரிசலாங்கண்ணிச் சாற்றில் அரைத்து இடத் தீரும். (391)

மருந்து 32

பேய்ச்சுரைவேர், பெருங்காயம் கூட்டித் தேனில் உரைத்து இடத் தீரும். (392)

மருந்து 33

சிறுபூளை வேரை முலைப்பாலிலிடத் தீரும். (393)

மருந்து 34

முதலைப் பல்லை எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்து இடத் தீரும். (394)

மருந்து 35

எலியாலம் பால், துருசு இவற்றை முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (395)

மருந்து 36

வெள்ளைக் காக்கணம் வேரை நெய்யில் உரைத்து இடத் தீரும். (396)

மருந்து 37

துத்தம், துருசு, படிகாரம் இவற்றைச் சமனாகக் கூட்டி எலுமிச்சம் பழச்சாறுவிட்டு காய்ச்சித் தேய்த்து உலர்த்தி எடுத்து செம்பு கொண்டு தேய்த்து எடுத்து வைத்து இடத் தீரும். (397)

மருந்து 38

அதிமதுரம், தலையோடு, ஓரிதழ்த் தாமரை வேர், துத்தம், குதிரைப்பல், வெட்பூலா வேர் பட்டை இவை சமனாகக் கொண்டு புளித்த தேன் விட்டரைத்து, நெல் எடை இடத் தீரும். (399)

மருந்து 39

துத்தம், துருசு, இரண்டையும் பொரித்து குப்பை மேனிச் சாற்றிலரைத்து, பசு வெண்ணெய் கூட்டி கடுகளவு இடத் தீரும். (400)

**மருந்து 40**

சங்கு அல்லது சோகியைப் பசுவின் பாலிலரைத்துருட்டி உலர்த்தி, வெண்ணெய்யில் இழைத்து இடத் திரும் (+0 )

**மருந்து 41**

மிளகு, படிகாரம், மனோசிலை, அதிமதுரம், தாளகம், சங்கு, இந்துப்பு இவை சமமாகக் கொண்டு நீர் விட்டரைத்துருட்டி, உலர்த்தி, முலைப்பாலில் இழைத்து இடத் திரும். (403)

**மருந்து 42**

பருத்தி விதைப் பருப்பு, மரமஞ்சள், திரிபலா இவற்றை சம அளவாகக் கொண்டு மைப்போலப் பொடித்து இடத் தீரும். (398)

**மருந்து 43**

நந்தியா வட்டச்சாறு, சிப்பிநீர், பனை மட்டைச்சாறு முருங்கைப்பூச்சாறு, முலைப்பால், பசுவின் நெய் இவை வகைக்கு $\frac{1}{4}$ படி வீதம் கலந்து அத்துடன், சந்தனம், மரமஞ்சள், பனங் குருத்து இவை வகைக்கு $\frac{1}{4}$ கழஞ்சு சேர்த்துக் காய்ச்சி வடித்து ஒரு துளி கண்ணில் விட்டு, தலையில் தேய்த்து முழுகி வரத் தீரும்.(389)

## கருவிழியில் வரும் நோய் நாற்பத்தைந்திற்கும் பெயர்

கருவிழி தன்னில் வந்த
காசமே யெட்ட தாகும்
மருவிய படல மேழு
வருகின்ற குமுதம் மூன்று
பெருகிய வுந்தல் மூன்று
பேணிய நெரிசல் மூன்று
உரைசெறி வரியே மூன்று
உகந்திடுங் குந்தம் மூன்று 76

எழுந்ததோர் திமிர மேழு
இசைந்தசுக் கிரனோ ஐந்து
அழுந்திடு பூக்கள் மூன்று
ஆகவே நாற்பத் தைந்து
குழுந்திடு மருந்து தானும்
கூறிய ரட்சை யாலும்
வளர்ந்திடுங் காசந் தீர
மாமுனி யுரைசெய் தாரே 77

தோன்றிய க்ாச மெட்டு படலமேழ் குமுதம் மூன்று
வான்விழி யுந்தல் மூன்று திமிரமேழ் வரியும் மூன்று
நீண்டசுக் கிரனே யைந்து நெரிசல்குந் தம்மும் மூன்றாம்
மான்விழிப் பூவும் மூன்றாம் மணியினோய் நாற்பத் தைந்தே 78

கருவிழி நாற்பத் தைந்து பொதுகாச மெட்டுப் படல மேழாம்
மிரதவிழி தன்னிரண்டு நெரிசல் மூன்று
மருவுவரி மூன்று குந்த மேழு வளர்ந்த சுக்கிரப்
படுவ னைந்து வகைதன் பேராம்
புருவவே திகளுடன் வாயு நீரும்
பொருதுமனல் பீளையுடன் காந்தல் சேரும்
குருகுகண் ணோயொட் டுக்கண் ஒடுக்கண் குலாலக்கண்
கூறியது வகைவகைகள் குணங்கள் தானே 79

நேத்திர மதனிற் காசம் நினைவுட னுரைக்கக் கேளாய்
பாத்திய நீல காசம் பண்தரும் பித்த காசம்
மாற்றிய வாத காசம் மதித்திடும் வால காசம்
ஏற்றிய பகலெல் மந்தம் இன்பமந் தார காசம் 80

செப்புமந் தத்தாற் சேருஞ் சிலேட்டும காசத் தோடு
ஒப்புறு வலியுங் காசம் உற்றதோர் விரண காசம்
மைப்படி கண்ணி னாளே வகுத்தவிக் காச மெட்டும்
கப்பிடில் மறையுங் கண்டாய் கண்ணெனக் கழறு வாரே. 81

(நிறவேறுபாடுகள்)

வாதத்தின் காசம் நீலம் வரும்பித்தம் சிவப்ப தாகும்
ஓதத்தின் வண்ணம் வெள்ளை ஓங்கியே மேக நீலம்
நாதமாம் வால காசம் நலத்தையே ரண்ட மாகும்
போதமந் தார காசம் பொருந்து குங்குமம் பாரே 82

கண்தனிற் காச மெல்லாம் கருத்துட னுரைக்கக் கேளாய்
பண்பெறு நீல காசம் பயந்தரும் பித்த காசம்
எண்பெறும் வாத காசம் இசைந்திடும் வால காசம்
நண்பக லிருளு மந்தம் நயந்தமந் தார காசம் 83

மந்தமே தந்து நாளும் வந்தசேத் துமத்தின் காசம்
அந்தமாம் வலியுங் காசம் அமர்ந்திடும் அந்நீர காசம்
சிந்துர நுதலி னாளே செய்திகேள் காச மெட்டும்
வந்தபே தைமையே யாகில் மறைந்திடுங் கண்ணுந் தானே 84

## 1. கருவிழி காசம் எட்டிற்குங் குணம்

மணிதனில் வண்டு போலே
வர்ணங்கள் பலவு முண்டாய்
தணிவிலா வாத காசம்
தரியாம லோடி நிற்கும்
பிணியெனும் பித்த காசம்
[1]பிணங்கிய பச்சை போலாம்
மணிதனி லந்தியாய் வந்து
மருவுஞ்சேற் பனகா சந்தான் 85

கூறிய வால காசம்
கொழும்புகை யார்த்தல் போல
மாறிடும் நீல காசம்
[2]மறுளூவு மத்தன் வண்ணம்
சீறுமந் தார காசம்
செம்பஞ்சு மேகம் போல
வேறுள விரண காசம்
[3]வெண்டா ளொப்பாங் காணே 86

சொன்னதோர் [4]கற்ப காசம்
தோன்றிய கருமை போலாம்
மின்னிய பித்த காசம்
விளம்புமந் தார காசம்
பின்னுமோர் நீல காசம்
பேசிய ரோக மூன்று
அன்னது சாத்தி யங்கள்
மற்றஞ்ச சாத்திய மாமே 87

செந்தமிழ்க் குறுமுனிவன் தெரிதமிழ் நூலை யாய்ந்து
முந்தவே நயனந் தன்னில் முளைத்திடும் வியாதிக் கெல்லாம்
வந்திடும் வாத பித்தம் வளரயங் காச மென்றுஞ்
சந்திர காச மென்றுந் தமிழினாற் சாற்றி னாரே 88

---

பா. வே.

1. பிறங்கியே
2. கருவிளம்பூவின் வண்ணம்
3. வெண்டெழும் பாருங் காணே
4. சிலேட்டும காசம்

சாற்றினார் வடசொல் லாலே தக்கதோர் ரத்த காசம்
தோற்றிய காசத் துக்குத் தோன்றிய குணத்தைக் கேளாய்
காற்றெனும் வாதத் தாலே கடியதோர் வாத காசம்
பார்த்திடக் கறுப்ப தாகப் பரந்துதான் விழியிற் தோன்றும் 89

தோன்றுங் காற்றி னுட்பட்ட தூய மேகம் போற்கறுத்து
நீண்ட நீலம் போற்தோன்றி நிறமும் பார்வை சிவப்பாகிற்
கூண்ட வாத காசமெனக் கூறி னார்கள் முன்னோர்கள்
ஏண்ட பித்த காசமதை இயம்பக் கேளு மேந்திழையே 90

இயம்பு மஞ்சள் பொன்வண்டு இன்ன மயிலின் கழுத்ததுபோல்
நயங்கேள் பிறகே தோன்றிடுகில் நன்றாய் பித்த காசமென
செயங்கொள் கண்ணி லாடுகிற் தெரியும் பார்வை மினுமினுக்கல்
உயர்ந்த மாணிக் கந்தன்னில் உற்ற யெண்ணெய்ப் பட்டாற்போல்

எண்ணெய் பட்டாற் போலிருக்கில் இதுவு மைய காசமென்ன
கண்ணி லாடும் பார்வையதுக் கடிய ரத்தக் கட்டிப்போல்
திண்ண மாக வேசிக்கிற் றிடனு யிரத்த காசமென்ன
மண்ணுள் ளோர்கள் புகழ்ந்திடவே மற்ற காசம் தீராது 92

தீருந் தீரா தென்றறிந்து செகத்தில் மனிதர் தங்கட்கு
சீருங் குணமுங் கண்டபின்பு செய்யு மருந்து திடனாகப்
பார விழியில் நயல்முந்தி பைய்ய நரம்பு குத்துவது
வாரு மிதற்கு மருந்துதனை வகுத்துக் கூற வல்லீரே 93

## 1. வாத காசத்தின் குணம்

சுழிதனைக் கடுத்துக் கண்ணும் சோரவே சுழித்து வாங்கும்
நெழியவே யிமைகள் வீங்கி நின்றிடு முறக்கம் வாராச்
சழியவே யிடித்து நொந்து சலம்விழும் வாதை யாகும்
வழிபட நோயுந் தீரா வாதமாங் காசந் தானே 94

சுழிதனைக் கடுக்குஞ் சோர மிகுதியாய்த் தேங்கும் நீரும்
குழியும்நற் குழல்போல் வீங்குங் குத்தும்நல் லுறக்கம் வாரா
தழலெரி கொண்டு நொந்து சலம்விழும் வாத காசம்
விழிதனைக் கொடுக்குமென்று வினவவும் வேண்டா மென்றே 95

ஆமென்ற விழிதனிலே கடுப்புக் காணும்
அழகான மணியிரண்டும் வரண்டு போகும்
தாமென்ற கடுப்புடனே தலைநோ யுண்டாம்
தாக்கான சரீரமும் வற்றிக் காணும்

வேமென்ற நீர்வடியும் வெதும்பும் புண்ணாம்
வெகுசுருக்கு உறக்கமது சற்றே காணும்
நாமென்ற தனல்விழியும் விங்கி நடுக்கும்
கபால முதல்வாத காச மாமே 99

### வாத காசத்திற்குத் தைலம்

ஆனை நெரிஞ்சிச் சாறு நெரிஞ்சி ஆவின் பாலும் முலைப்பாலும்
தானாய் வகைபால் தாழனுக்கு தனித்தநல் லெண்ணெய் யிருநாழி
வானாய் நெய்யாம் நாழி விட்டு வகையாய் பின்னுந் தான்கேளு
கோனாய் கோட்டம் இருவே ழி கொன்றைப் பிசினுந் தான் கூட்டே. 97

கூட்டு மதுரம் சிற்றாமுட்டி கொத்த மல்லி எலுமிச்சம்
வெட்டி வேர்சந் தனம்ஏலம் வெள்ளைப் பாத்து சாத்திரவெதி
தாட்டிகம் மாஞ்சில் கல்நார் தகர மும்வகை கழஞ்சு
ஊட்டியே ஆவின் பாலும் உண்மையா யரைத்தி டாயே. 98

அரைத்துக் கலக்கி அடுப்பேற்றி ஆனநெய் யும்யெண் ணெய்விட்டு
திரித்துக் காய்ச்சித் தானிறக்கிச் சேர வேதலை யில்விட்டு
முருக்கி மேலுந் தான்விட்டு முறையாய் வெந்நீர் தானும்விட
வரைத்துத் தலையில் தானும்வந்த வாத காசம் மாறுந்தானே.99

(வேறு)

சாறு நெருஞ்சி முலைப்பாலுந் தன்னா வின்பால் சமனுக்காய்
கூறு சிற்றா முட்டியுடன் கொன்றைப் பிசினு மதிமதுரம்
ஏறு மேல மிலவங்கம் இதனொடு தாமரை வளையமுமாய்
சீறித் தோன்றுங் கழஞ்சாக்கிச் சிவந்த சந்தனங் கோட்ட மிடே.

ஏலத் துடனே கல்நாரும் எள்ளி லெண்ணெய் யிருநாழி
சீலத் துடனே விட்டுநன்றாய்ச் சேர்த்துப்பதமாய்த் தானெரித்துச்
சாலக் கசாயங் காய்ந்ததற்பின் சதிரா யிறக்கித் தானிறுத்தே
வாலத் தலையிற் தேய்த்துவிட வாத காச மாறுமதே. 101

## 2. சிலேத்தும காசத்தின் குணம்

வட்ட விழிக்க மாட்டார் மழைமுகில் சொரிந்தாற் போல
விட்டிலா நீரே நிற்கும் வேதனை வெகுவாய்த் தோன்றும்
கொட்டினாற் போலே நெற்றி குலையவே வலிக்கு மாகில்
திட்டமே தெரியச் சொன்னோம் சிலேத்தும காசந் தானே, 102

## 3. வால காசத்தின் குணம்

காலமே புகைந்து சாமம் கண்டபின் விட்டுப் போகும்
நீலம்போ லொருகாற் தோற்றும் நிறம்விழி வேற தாகும்
சாலவே நீரும் பாயும் தசைமூடும் வெள்ளை தன்னில்
வாலிப வயதிற் காணும் வாலகா சவகை தானே. 103

## 6. பித்த காசத்தின் குணம்

கண்ணினிற் காசம் வந்தால் கலங்கியே புகைந்து காட்டும்
நண்ணிய வெள்ளை தன்னில் நரம்புகள் சலங்கள் கோர்த்து
விண்ணிலே நோக்கிப் பார்க்கில் விதனமு மிகவுண் டாக்கும்
அண்ணிலே பித்த காசம் அதன் வழி பிறக்கும் வாறே. 104

குறிபடச் சூழ நொந்து குமைந்திடும் கடைக்கண் வீங்கும்
பறியிடப் பீளை பாயும் பசுமையாங் கண்சி வக்கும்
நெறியுடன் நெற்றி கன்னம் நீண்டவே தனைதான் காட்டும்
அறிவது அன்னம் வேண்டாம் அழன்றிடும் பித்தந் தானே. 105

என்னவே பித்தகாசக் குணத்தைக் கேளீர்
எழிலான விழிதனிலே மாசு போலாம்
பன்னவே வெள்விழியில் நீரே பாய்ந்து
பலபலவாம் வர்ணம் போல் மேகம் போலும்
துன்னவே கருவிழியில் உளுந்து போலத்
துயரமுடன் வெண்மையாய்த் தோன்றும்பாரு
மின்னவே பித்தத்தின் காச மென்றே
விளம்பினார் யூகியென்ற முனிவர் தாமே. 106

சினத்திடும் சிவப்பே யாகும் சிறுகவே பீளை காணும்
அனைத்திடும் பீளை தோன்றும் அதிகமாய்ச் சிவந்து கூசும்
சுனைத்தடஞ் சோனை மாரி சொரிதல் போல் நீரே தூவி
கனத்திடும் பைத்தி யத்தின் காசமாய்க் கருத லாமே. 107

### பித்த காசத்திற்கு மருந்து

ஆவின வெண்ணெய் மற்றும் அபினையுந் தேற்றான் வித்தும்
மேவியா வாரை யாம்பல் மிகுதித்திடு நெல்லி முள்ளி
தேவியர் முலைப்பால் வார்த்துத் திறம்பெற வரைத்து ருட்டித்
தாவியே கண்ணி விட்டால் தளர்த்திடும் பித்த காசம்

---

குறிப்பு : 4. விரண காசம், 5. கற்ப காசம் இவற்றிற்கான தனியான பாடல்கள் கிடைக்கவில்லை,

கோட்டங் குரும்பை கொடிச்சீந்தில் கொடிய கழுநீர் மஞ்சட்டி
ஏட்டில் ஏல மிலவங்கம் இதனிற் றாமரை வளைய முமாய்
கூட்டி யரைத்துப் பதத்திறக்கிக் குளிரத் தலையி லப்பிவிடீர்
நாட்டில் பித்த காச மெல்லாம் நடுங்கி யோடுங் கண்டீரே. 109

சாறிடும் ஆவின் வெண்ணெய் சந்தனம்கற் றாழை அல்லி
ஆறிடும் ஆல விதை தேற்றான் ஆம்பலும் நெல்லி துத்தி
கூறிய மதுரம் முலைப்பால் கூட்டியே கண்ணி லப்பப்
பேறிய காலம் மூன்று செய்ய பித்தகா சந்தான் போமே 110

குறிபடச் சூழ்ந்து நொந்து குமைந்திடுங் கடைக்கண் வீங்கும்
பறியவே பீளை பசுவின் வெண்ணெய் யும்நற் கந்தம்
செரியுமா வாரை யல்லி தேய்த்திடு மாம்பல் நெல்லி
பிரியுமே முலைப்பா லுண்டைப் பித்தகா சம்போ மென்றே

(வேறு)

துத்தம் துருசு, வகைக்கு 1 வராகன் எடை, இரதம் ½ வராகன் எடை, மிளகு ¼ வராகன் எடை, வெற்றிலைச்சாற்றில் மை போலரைத்துலர்த்தி, பால், வெண்ணெய் கூட்டி மை போலரைத்துக் கொண்டு போடத் தீரும். 112

(வேறு)

சங்கு, திரிகடுகு, அரிதாரம், அதிமதுரம், புங்கம்வித்து, பீத ரோகணி, துத்தம், மனோசிலை, இவைகளை ஒருநிறையாய் நந்தியாவட்டப் பூச்சாற்றில் அரைத்துக் கயிறு செய்து தேனி லுரைத்துக் கண்ணிற் போட்டு, சிற்றாமுட்டி, முசுமுசுக்கை, குரும்பை, சீந்தில்கொடி, உத்தமதாளி, தாமரைவளையம், வகைக்கு 10 பலம் இடித்து, 10 படி தண்ணீரில் போட்டு 2 படி யாக வற்ற வைத்திறுத்து, அதில் அதிமதுரம், சண்பகப்பூ, செவியம், கோட்டம், மஞ்சட்டி, ஏலம், இலவங்கம் இவை வகைக்கு 3 வராகன் எடை, ஆவின் பாலிலரைத்துப் போட்டு 1 படிநல்லெண்ணெய் விட்டுப் பதமாகக் காய்ச்சி வடித்து முழுகி வரத்தீரும்,

(வேறு)

பொன்னாங்காணி, கையாந்தகரை, வெற்றிலை, இவைகளின் சாறு, நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், ஆவின்நெய் வகைக்கு

½ படி, மேற்படி பால் 3படி, இவைகள் கலந்து, அதில் மிளகு கத்தூரி மஞ்சள், கருஞ்சீரகம், நற்சீரகம், உள்ளி, ஏலம், கிராம்பு, சந்தனம், வாய் விளங்கம் வகைக்கு 4 வராகன் எடை, மேற்படி சாற்றிலரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும்.

**பித்த காசம் குத்தி வாங்கும் முறை**

பிறக்குமே காசந் தானும் பெருகிடும் மேகம் போல
மறைக்குமே கறுப்பி னுள்ளே வளைசங்கு நிறம தாகும்
நிறைக்குமே பித்த காசம் நிச்சய மாகத் தானும்
துறைக்குமே கடைக்கண் வெள்ளை தோன்றவே குத்திவாங்கே 115

காச வகையில் வரும்பித்த காசந் தீர்க்கும் வகைகேளீர்
ஆதி தன்னி லெண்ணெய்தன்னால் அவிழ்த மதனால் தான்பலிக்கும்
பாதி சென்றால் பலியாது பலியாப் பலிக்கும் சத்திரத்தால்
நீதி யுடைய பண்டிதர்க்கே நிற்கும் நில்லா மூடர்க்கே. 116

மூடர் குத்தும் சத்திரந்தான் முட்டைத் தூர்போல் முளையாகும்
வடா நீளம் நல்விரலால் வைக்கோல் தாளின் பருமனதாய்
நாடாய் நீயு மிதனுடைய நவசித்திர நிலை யறிந்து
கோடா வண்ணம் நெல்லளவு குறித்துத் தானுங் குத்திடே. 117

குத்துங் காசம் முத்துப்போல் கூடிப் பிரியுங் குன்றாமல்
சற்றுங் களிம்பொன் றில்லாமல் தாமிரச் சிலாகை முப்பட்டம்
போற்று மாறு விரல்நீளம் முன்னும் பின்னும் விரல் நீக்கி
மாற்று நிலையை வைத்தணைத்து வைத்துக் கட்டி குறைதீரே. 118

பத்திநெல் லிடைவிட் டப்பால் பலப்பட நூலால் சுற்றி
சித்திர மாகக் குத்தி சிறந்ததோர் சிலாகை விட்டு
சுற்றியே மூன்று காலஞ் சுழிதனில் நீலம் பாரில்
வெற்றியாய்த் தெளிந்து நன்றாய் விரைவுடன் வெளிய தாமே 119

மெத்தென அலகு தன்னை மேவுநெல் லிடைதான் விட்டு
பற்றவே நூல்கள் சுற்றிப் பசைபட நீரிற் தோய்த்துக்
குத்தியே சிலாகை யிட்டுக் குணமுடன் முக்கால் சுற்றித்
தெற்றென அலகை வாங்கத் தெளிந்துடன் வெளிய தாமே 120

வெளியது வான பின்பு வெச்சென அனல்தான் காட்டி
தெளியவே பஞ்சில் மஞ்சள் சீர்பொடி தன்னை விட்டு
விழிதனிற் கட்டி வைத்து மெத்தென பேச்சுக் கொண்டு
புளியிலை யிடித்துத் தானும் பெய்துதான் வறுத்துக் கட்டே. 121

இப்படி மூன்று நாளும் இருந்தபின் னவிழ்த்து விட்டு
ஒப்புடன் பற்று வேது உகந்தநற் காய்ச்சுத் தண்ணீர்
செப்பமாய் மருந்து யெண்ணெய் செயலுட னறிந்து செய்ய
ஒப்பமாய்ப் பித்த காசம் ஓடியே போகுந் தானே 122

தோன்றிய நாலா மாண்டு தூயவிழி சூட்சத் துள்ளே
ஊன்றிய தளிர்போல் நின்றே ஒண்விழி யடைத்துக் கன்றி
நான்றிமை நீக்கிப் பார்த்தால் அகன்றுபின் நடுவே நிற்கில்
தேன்துளிக் குழலாய் காசங் குத்துமிச் செய்கை கேளே 123

கூரிய கருவி நீளம் நால்விர லாகக் கொண்டு
நேரிய முனைய தாக அகலநெல் வடிவ தாகச்
சீர்பெறு கடைக்கண் ணுக்குந் தெளிகரு விழிக்கும் மத்தி
சாரவே யூன்றுந் தாழ்வு சணல் விதை யளவ தாமே. 124

குத்திய கருவி வாங்கிக் கோதையே செம்பி னாலே
மற்றநால் விரலி னீளம் வடிவமாம் முனைநெல் நீளம்
முற்றிய விரலிக் காய்போல் முனையில்முப் பட்ட மாக
மொத்திடு முருட்சி மத்தின் வடிவமா மொழியக் கேளே. 125

புளியிலை கொண்டு தேய்த்துப் புணைவிழி கரத்தைச் சாய்த்து
நழுவிடா தேற்றி னாக்கால் நல்விழி நடுவே விட்டு
கொழுவிய சிலாகை கொண்டு குறித்திடும் வலமே சுற்றி
இளகிய நீரை மெல்ல வழித்திடக் காசம் போமே. 126

நடுவிழி யதனி னின்ற காசநீர் நாடா தோடிக்
கடுகவே முன்னே தோன்றும் பதார்த்தமே காண லாகும்
இடுறக் காணா தாகில் எழுச்சிநீர் தாங்கி நிற்கும்
அடைவிலே யாய்ந்து நோக்கும் அவ்வழி விடநீர் மாற்றே. 127

சோதினை மத்தம் பூவின் நடுவல்லித் தண்டின் சோதி
கோதினை வரவே யூன்று கோல்முனை மிகுத்தி டாமல்
ஓதில்வெள் ளரியின் வித்தின் அகலமே யதனி னீளம்
தீதிலா வெள்ளை போலச் செய்திடுங் கருவி கொள்ளே.

**குந்தின கண்ணுக்கு ஒழுக்கு மருந்து**

மேவியே விடநீர் மாற்றி வேதனை மிகுந்தி டாமல்
ஓவிய மனையாய் கண்ணில் ஒழுக்கிடு மருந்து கேளாய்
ஆவினெய் யதனில் துத்தம் அபின்சீனக் காரங் கூட்டி
கூவியே வலிக்குங் கண்ணி லூற்றியே குழைத்துப் பூசே 129

பூசியே நெற்றி மீது புதியவெண் பஞ்சைக் கட்டிக்
கூசிடா திமையின் மீதே கூறிய வெள்ளைச் சீலை
மாசறா ததனைக் கட்டி மறுபடி மூன்று நாளும்
வீசிடும் விழிகன் றாமனல் காட்டி விழிக்கச் சொல்லே 130

விழித்திடும் போது குத்தி வேதனை கண்ட போது
கழித்திடு மெட்டு நாளும் கண்ணுள்ளே ஒழுக்கு நெய்கேள்
தெளித்திடு மதுரந் தாரம் சிப்பிநீ ரதன்சீர் கூட்டித்
துளிபட வொழுக்கும் போது விழிவலி துணிங்கிப் போமே. 131

## 7. நீல காசத்தின் குணம்

நல்லதோர் மணியும் நொந்து நாளிலே புகைந்து காட்டும்
செல்லவே புருவங் கண்ணில் சிரசினிற் சேர நோகும்
சொல்லவே சோதி நீலம் சூட்சமாய் நீரும் பாயும்
நில்லிமை நீக்கின் நீங்கா நீலமா காசத் தானே. 132

சோதியைக் கடுக்குஞ் சற்றே சுணங்குபோல் வெளூறி காட்டும்.
பாதியைப் பாசி நீரும் பகல்விளக் கொளிபோ லாகும்
தீதுசே ரிதுவே யென்று திறமுடன் குறிகள் கண்டு
நீதியாம் நீல காசம் நிச்சய மாகக் கொள்ளே. 133

பார்க்கவே நீலகா சத்தி னேர்மை
பாங்குடனே திமிருண்டாய் வுதிர்தல் காணும்
ஏர்க்கவே கண்ணோசை தசையி லூரி
எழிலான சுணங்குபோல் வெளூரிக் காணும்
மூர்க்கவே யடுத்தடுத்து நமைச்ச லுண்டாம்
முடியான கண்டந்தான் கம்ம லாகும்
தீர்க்கவே நீலகா சத்தி னேர்மை
தெளிவாகப் பாடினார் யூகி யாமே, 134

### நீலகாசத்திற்கு மருந்து

திரிபலை, தேற்றான் விதை, தாமரை விதையிலரிசி ஒக்கக் கொண்டு, குமரிச்சாற்றால் அரைத்து உருண்டை பண்ணி, வெள்ளி வட்டகையில் தண்ணீர் வார்த்தரைத்து விடிவேறு உரைத்து அந்தியம் போது இடவும். அந்தியம் போது உரைத்து விடிவேறு இடவும். இப்படியே 27 நாட்களிட நீலகாசம், விரண காசம், சுக்கிரன், அழற்சி போகும்.

(வேறு)

முடக் கொற்றான் பசுவின்பால் தெளித்திடித்து நாழிச்சாறு கொண்டு வெள்ளாட்டு நெய் உழக்கு விட்டு இதுவே கற்கமாகக் கொண்டு திருத்த விரணகாசம் உள்ளிட்ட நோயெல்லாம் தீரும்.

(வேறு)

மணிவெண் காரம் மதுரமுடன் மதித்த துத்தம் சாரணைவேர்
அணியும் பவளம் பிங்கானும் அடுக்கும் பூரம் வேதியுமாய்
இணைய மாதளம் பூச்சாற்றில் இசைய வரைத்துக் கண்ணிலிடத்
தணியும் நீல காசமது தப்பா தினிமேல் வாராதே. 137

பாதரி முசுமு சுக்கை பருத்திவேர் பவளக் குன்றி
சாதரி யெண்ணெய் கொத்தான் தகர மாஞ்சி வேலமுடன்
மாதிரி யோடு மல்லி மருவிய காணி கொட்டி
நீதமாய்க் காய்ச்சித் தேய்க்கில் நீலமாங் காசம் போமே. 138

(வேறு)

1 படி ஆவின் நெய்யில் நற்சீரகம் 1 சிரங்கை அரிந்த ஈருள்ளி ¼ படி, நந்தைச்சதை 1 எலுமிச்சங்காய்ப் பிரமாணம். இவைகளை வறுத்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் கொண்டு, சிறுபூளைச் சாற்றை முந்தி நேரத்திற் பிழிந்து அப்பால் மேற்படி நெய்யைக் கட்டியாவது அல்லது முள்ளி ஆரை, அல்லி, நீலி, முருங்கை இவைகளின் பூவை ஒரளவாய் ஆவின் பால் விட்டரைத்து, மேற்படி நெய்யும் தேனும் கூட்டிக் களிம்பு செய்து விழியில் தீட்டவும். 139

(வேறு)

நல்லெண்ணெய் 2 படி, நெருஞ்சிச்சாறு, முலைப்பால், ஆவின் பால் வகைக்கு ½ படி, கலந்து அதில், கல்நார், சிற்றாமுட்டிவேர், கொன்றைப் பிசின், அதிமதுரம், விலாமிச்சுவேர், வெட்டிவேர், கொத்தமல்லி, சிறுகீரை வேர், சந்தனம், கோட்டம், ஏலம் இவை வகைக்கு 1 பலம் இடித்து. 8 படி தண்ணீரிற் போட்டு 2 படியாக வற்ற வைத்திருத்து, சடாமாஞ்சில், சாத்திரவேதி, வகைக்கு 1 பலம், ஆவின் நெய்யில் அரைத்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து முழுகிவரத் தீரும். 140

## 8. மந்தார காசத்தின் குணம்

சாயுங் கால மழைமேகம் சண்டைக் கசப்புப் புளிவிரும்பல்
காயங் கனக்கில் மலங்கட்டிக் கன்னி யுடனே பேசிடுகில்
ஆய மான சோதிதனில் அருண்ட புகைச்சல் தானுண்டாம்
மாயம் போல வந்தெடுக்கும் மந்தரா காச மிதுதானே. 141

சுற்றெல்லாம் வரையுண் டாகிச் சூழவே தினவு மாகி
வற்றியே கண்க ளெங்கும் வலித்திடும் விழிசி வக்கும்
உற்றிவை நோக்கிப் பார்த்து உணர்ந்துநீ செய்ய வேண்டும்
மற்றென மொழியி னாளே மந்தார காச மாமே. 142

போற்றவே மந்தார காச நேர்மை
பொங்கியே வரையுண்டா யருவ லாகும்
சீற்றமுடன் கண்சிவந்து புடைத்துக் காணும்
தீராது விழிசிறுக்கும் புடைப்புத் தோன்றும்
நாற்றமுடன் பீளையது மிகவே சாடும்
நலமுடனே யொருவேளைக் கண்வெ ளுக்கும்
ஏற்றமுட னிலங்கரசன் மையே தீட்ட
எளிதாகப் போகுமடா விணக்கம் பாரே. 143

### மந்தார காசத்திற்கு மருந்து

குமரிச் சாறு நல்லெண்ணெய் கூட்டி யோன்றொன் றிருநாழி
அமருங் காணி முசுட்டை துத்தி அடவே பூலா வெண்ணொச்சி
விமரும் விட்டுணுக் கிராந்தி யேலம் வெருமஞ் சள்கோட்டம்
அமர மெழுகுப் பதத்திறக்கி மந்தார காச மேகிடுமே. 144

(வேறு)

பொன்னாங்காணி, முசுட்டை, குமரி, வெண்ணொச்சி வகைக்கு ¼படி சாறு, நல்லெண்ணெய் 1 படி, எலுமிச்சம்வேர், விட்டுணுக் கிராந்தி, குட்டித் தக்காளி வேர், துத்திவேர், நன்னாரி ஏலம், பூலாங் கிழங்கு, கோட்டம். மஞ்சள், மாஞ்சில், சாத்திர வேதி இவை வகைக்கு 5 வராகன் எடை சேர்த்து, எண்ணெய்யில் போட்டுவடித்து முழுகவும். மந்தார காசம் தீரும். 145

(வேறு)

வாலுழுவை யரிசி, குங்குமப்பூ, கிராம்பு, பச்சைக் கற்பூரம். சந்தனம், சண்பகப்பூ, பீதரோகணி, இலவங்கப்பத்திரி, வெள்ளைச் சாரடை வேர், வகைக்கு 1 கழஞ்சு, தேனில் 4 சாமம் ஆட்டிக் கண்ணிற் போடவும். 146

(வேறு)

நல்லெண்ணெய் ஆவின்பால், தயிர்த்தண்ணீர் வகைக்கு 4 படி, கலந்து, அதில் சந்தனம், தேவதாரம், பேரீச்சம் பழம்,

முந்திரிப்பழம், காட்டெருமை பால், தாமரைப்பூ ஏலம், இலவங்கப் பத்திரி, மல்லி, நெல்லிமுள்ளி வகைக்கு 5 பலம். மேற்படி பாலிலாட்டிப் போட்டுக் காய்ச்சி வடித்துத் தலை முழுகி வரத் தீரும். 147

(வேறு)

துத்தம், துருசு, வகைக்கு ½ வராகன் எடை, சிறுகீரை பொன்னாங்காணி, ஓரிலைத்தாமரை இவைகளின் வேர் வகைக்கு 1 பாக்களவு, எலுமிச்சம் பழச்சாற்றால் மை போல ரைத்து, காசு போல வில்லைத் தட்டிக் காய வைத்து, புதுச்சட்டியில் பரத்தி மறுசட்டி கொண்டு மூடி நான்கு நாழிகை எரித்துப் பொடித்துச் சிமிழிலடைத்துக் கொண்டு எள் பிரமாணம் கண்ணிலிட்டு. மேற்சொன்ன தைலத்தால் தலை முழுகி வரத் தீரும். 148

கரு விழி காசங்களுக்கு மருந்து (பொது)

**இரத்தினாதி உருண்டை**

நவமணி யேழு லோகம்
நாகொடு சோகி பீங்கான்
இவுளியின் பல்லி னோடு
யானைப்பல் பசுவின் பல்லும்
கவையதி மேதிப் பல்லும்
கமடத்தி னோடு பன்றி
முவையது கோடு நந்நீர்
முதலைப்பல் லொட்டைப் பல்லே. 149

கலையின் கொம்பு ருத்ராட்சங்
காளைப் பல்கமு தைப்பல்லும்
நலமுறு பீத ரோணி
நறுந்துத்தந் துருசு சூதம்
குலவுசந்தந் தாரங் கோட்டம்
கோரோ சணையிந் துப்போடு
இலகிய சீனக் காரம்
இனியமுக் கடுகு கொள்ளே. 150

திரிபலை தேற்றாங் கொட்டை
சீரத்தோ டோரிதழின் மூலம்
உறுவது சமனாய்க் கூட்டி
யொன்றித்து அரைக்குஞ் சாறு

இறுமெலு மிச்சஞ் சாற்றில்
ஏழுநா ளூறவைத் தரைத்து
மறுபடி கோழி முட்டைச்
சலத்தைவார்த் தரைத்துக் கொள்ளே. 151

கொண்டதோர் மருந்தை நன்றாய்க்
குறுக்கிநீண் டிடாத வண்ணம்
உண்டை செய் திருமருங்கும்
சுழிவிழ வுருட்டித் திரட்டி
மண்டலம் நிழலு லர்த்தி
வளர்கையான் பொன்னாங் காணி
ஒண்டொடி முலைப்பால் தேன்நெய்
யிவையினி லுரைத்துப் போடே. 152

(வேறு)

செய்யகற் பூரஞ் சாதி சேர்கடுக் காய்கச் சோலம்
மையுறு வெள்ளி லோத்திரம் மருவுபச் சிலையுங் கூட்டிக்
கையுறு நிம்பஞ் சாற்றில் கலந்தரைத் துருண்டை செய்து
வெய்யுறு தனப்பால் தன்னில் விரைந்திடக் காசம் போமே. 153

(வேறு)

துத்தம் துருசு பலமொன்று தூய சங்கு பலமொன்று
மெத்து மோரிதழ்த் தாமரைவேர் மேவுந் தேசிப் பழச்சாறு
உத்தே யிதுதான் விட்டரைத்து உயர்ந்த பச்சை நிறமானால்
மெத்த வுருட்டி முலைப்பாலிலிட மீளா வியாதி மீண்டிடுமே. 154

(வேறு)

கடுக்காய் நெல்லி தானிக்காய் கதித்த கொன்னைப் பருப்புடனே
மிடுக்கா மிளகு திப்பிலியும் விரும்பி யிதுகள் கழஞ்சுகொண்டு
அடுக்காங் கற்றாழைப் பிளந்து அதற்குள் வைத்துப் பிசைந்தெடுத்து
விடுக்காய்க் கழுவி மிளகினுடன் மேலின் தோலைத் தான்போக்கே.

போக்கு மிளகுக் காற்கழஞ்சு புதிய சிற்றா மணக்குவிதை
காக்குங் கழஞ்சி யொக்கவிட்டுக் கையாந் தகரை விட்டரைத்து
சீக்கிர மாக உருண்டைசெய்து செய்யக் கண்ணி லிடுவீராய்
ஆக்குங் காச மாறுடனே அதிய விழிநோய் தீர்ந்திடுமே. 156

(வேறு)

பார்த்திடுந் திரிபலை தேற்றான் திரிகடுகு துத்தம்
சாற்றிடும் பளிங்கு இந்து காரீயங் கோரோசனை வெண்காரம்
சேர்த்திடு சங்கு முருக்கு செம்புட னிரும்பு வட்டி
ஒற்றிடு நசிலை புங்கம் பாலுண்டை காசம் போமே. 157

(வேறு)

கணவன் மிளகு வேர்க்கொம்பு கடுக்காய் காரம் புரியிந்து
மணையு வொவ்வோர் கழஞ்சுக்கு மதுரம் பொடியுந் தூள்செய்து
வெணதேனில் குழைத்து விடுவீராய் காச மீளும்
பனியைக் கதிரவன் நீக்குமாப் போல தோற்குங் கண்டீரே. 158

(வேறு)

துத்தமுஞ் சார ணைவேர் தோன்றிய பவளம் பீங்கான்
வற்றிய சாத்திர வேதி வகைசம னிறுத்துக் கொண்டு
முற்றியமா தளம்பூச் சாற்றில் முடுகநீ வரைத்து விட்டால்
பற்றிய காச மெல்லாம் பாய்ந்துபின் னோடுங் கண்டாயே. 159

(வேறு)

சங்கு திப்பிலி பீதரோகணி தார மோடு மதிமதுரம்
புங்கம் வித்தொடு மிளகுசுக்கு புதிய துத்தம் மனோசிலையும்
அங்கரைப் பதுதுத் திலைச்சாறு அதினிலு ருண்டை சிமிழிலிட்டு
தங்குல் விழியில் தானுமிடில் காச மென்பது தான்போமே. 160

(வேறு)

கண்ணினில் காசம் வந்தால் கடியதோர் துருசு துத்தம்
நண்ணிய பளிங்கு சங்கு நந்திய சீனாக் காரம்
ஒண்ணிய பழத்தின் சாற்றில் உரைசமன் ஒத்த வுருண்டை
விண்ணிலே படல காசம் வெருண்டிடு மிதனைச் செய்யே. 161

(வேறு)

பூலா வேரும் பொன்வெள்ளி முத்து
சீலா திப்பிலி பூரம்செம்பு துத்தம்
மேலா தலையோடு ரோகணிவெண் கலத்தூளும்
வேலா நிம்பச்சாற்றி லுருண்டை விலகிடுங் கண்ணைவிட்டு 162

இந்தொன்று பூர மிரண்டுகோ ரோசனைமூன்
றந்திப் பிலிநான்கோ டைந்தோமம்—நந்திப்பூச்
சாற்றரைத்துத் தேனிழைக்கில் தன்காசம் பூப்படலம்
மாற்றிவிடுஞ் செய்யாய் மகிழ்ந்து. 163

திரிபலை தேற்றான் திரிகடுகு தியங்கும் பளிங்கு காரீயம்
குறிபடு ரோகணி வெண்காரம் கூடச் சிலையும் அஞ்சனமும்
திரிபடு செம்பொ னிரும்புரெட்டித் திறமாய்ப் புங்கம் பால்வார்த்து
நெறிபட அரைத்துக் கண்ணிலிட நீங்கும் காசம் நிச்சயமே. 164

(வேறு)

மிளகு, கற்பூரம் சமனாய்ச் சேர்த்து பனைமட்டைச் சாறு விட்டு அரைத்து கயறு பண்ணி நிழலிலுலர்த்தி தாமிர கிண்ணியில் பனைமட்டைச் சாறு பிழிந்து சற்றுநேரம் வைத்திருந்து, அந்தச் சாறுவிட்டு உரைத்துக் காச ரோகத்திற்குப் போடவும்.

பித்த காசத்துக்கு நந்தியா வட்டைச் சாற்றில் போடவும்.

(வேறு)

வேங்கையிலை, வேர், கண்டங்கத்திரிவேர். கையான்தகரை, தூதுவேளை, கீழாநெல்லி, தேள்கொடுக்குச் சமூலம் இவை ஆறும் எடுத்திடித்த சாறு 1 படி, சங்கன் இலை, பெரும்புல் இவை தனித் தனியே இடித்து வகைக்கு 1 படி சாறு எடுக்கவும். இத்துடன் எள்ளெண்ணெய் 1 படிவிட்டு,இத்துடன் அதிவிடையம்,கடுக்காய்த் தோல், காட்டு மிளகு, வாயுவிடங்கம், நற்சீரகம், கடுகு, சுக்கு, சிறுதேக்கு, ஓமம், விழலரிசி இவை வகைக்கு 1 கழஞ்சு எடுத்துத் தண்ணீர் விட்டரைத்து, எள்ளெண்ணெய்யுடன் குழப்பிப் பக்குவ மாக வடித்து வைத்துக்கொண்டு உள்ளுக்குச் சாப்பிட்டு வர, கண்ணிலும் ஒரு துளி விட்டு வர 5 வகை காச நோய்களும் தீரும்.

பலகறை, தலையோடு, துத்தம், மதுரம், கடல்நுரை வகைக்கு 1 கழஞ்சு பழச்சாற்றிலிடவும். காசம் தீரும்.

## காசக் குழம்பு

கையாந் தகரை நெல்லியுடன்
கமல வளைங் காணிபுடோலத்
தொய்யும் புளியிலை சீதேவி
துலங்குஞ் சாறோ ரொன்றுபடி

தையார் சந்த மகில்தேவ
தாரந் திரிபலை தேற்றான் விதை
உய்யும் வெட்டி லாமிச்சம்
ஒக்கச் சமனோ டொன்றாக்கே. 167

இனிய சாற்று டன்கலந்து
இளநீர் மடல்நீர் சரிகூட்டிக்
கனியக் காய்ச்சிக் குழம்பானால்
கருதும் பீத ரோணிதுத்தம்
முனியுஞ் சீனக் காரமுடன்
முதிருந் துருசொன் றோர்கழஞ்சு
நனிசேர் தேன்விட் டளாவியதில்
நவிலும் பொடியை மேற்தூவே. 168

தூவிப் பரணி தனிலிட்டுச்
சொன்னனேன் விழியி லெழுதிவரக்
கோவித் தெழுந்த காசமுடன்
குழம்பும் புகைச்ச லுட்டிணமுங்
காவிப் பிணைக்கண் மடமாதே
கண்ணிற் றோட மதுமாறும்
பாவித் திதனைச் செய்யுமெனப்
பகர்ந்தார் பழைய மறையாய்ந்தே. 169

மிளகு பெருங்காயம் மேதினிமேல் நாகம்
அளவொன்று இரண்டுமூன் றாகப்—புளியிலையின்
சாற்றா லரைத்துமிகத் தன்னில்தேன் விட்டிளக்கித்
தோற்றாபின் தோற்றுஞ் சுடர்.

புடலாதி கிறுதம்

சொல்லும்பேய்ப் புடோல் கொடுப்பை
தூயவல் லாரை காணி
நல்லபூ சணிக்காய் மூங்கில்
நறியநீர் வள்ளி தாழை
புல்லுவெள் ளரிக்கா யோடு
மாதளம் பழஞ்சம் பீரம்
வெல்லவொவ் வொன்று நாழிச்
சாறது விரையக் கூட்டே. 171

குமரிவேர் சிற்றா முட்டி
கோவையின் தண்டு முத்தம்
கமுகுவேர் வனச வேரும்
கருதுசீ தேவி வேரும்
நமதுசெங் கழுநீர் மூலம்
நன்னாரி சீந்தில் வேலி
அமரவே யொன்றுபத் துப்பலம்
எட்டுஒன் றாகக் காய்ச்சே. 172

காய்ச்சுமந் நீருஞ் சாறும்
கலந்துநெய் நாழி விட்டுப்
பீச்சிடு மாவின் பாலும்
படிவிட்டுப் பேசக் கேள்நீ
வாச்சநற் சந்தந் தாரம்
வானசெங் கழுநீர் கோட்டம்
கூச்சமில் கூகை நீறும்
குலாவிய கிராம்பு சாதி 173

சாதிப்பத் திரியோ டேலம்
தகரங்குங் குமமே முத்தம்
பேதித்த சிவதை ரோணி
பேசுங்கற் பூரம் பத்திரி
தாதுநன் மகரப் பூவுஞ்
சாற்றும்பே ரிந்து முந்திரி
ஈதொக்கக் கழஞ்சொவ் வொன்று
இவைவெந்து சீனி தூவே 174

காலமே கடுகி னோடு
கரண்டிநாற் பதுநாட் கொள்ள
சாலவே பித்த ரோகம்
தலைகிறு கிறுப்பி னோடு
மூலமுட் டிணங்கள் கண்ணோய்
மொழிந்திடு காசம் மாலை
மேலும்நீர்ப் பாய்ச்சல் கண்ணில்
அனேகநோய் விரைந்து போமே 175

காசத்திற்கு எண்ணெய்

நெய்யாணி தேன்படலம் நீலித் திமிருக்காம்
கைய்யாந் தகரையாம் கண்புகைக்குப்-பொய்யாப்
புரவி முடம் பிருக் காய்பூனைக் காலியாம்
விரும்பியிடு நந்தியா வட்டத்து வேர் 176

பொன்னாங் காணி சிறுகீரைவேர்
புகழு மதுரம் பலமொன்று
மின்னே வேங்கைச் சிறாயதுவும்
மேவும் பலந்தா னிரண்டுகொள்ளுச்
சொன்னோ மதிரம் வெங்கைதனைத்
துகளா யிடித்துத் தண்ணீரில்
மின்னே போட்டு வெட்டொன்றாய்ப்
பிழிந்து காய்ச்சி வடித்து யெடே 177

எடுத்த பிறகு கசாயத்தில்
எண்ணெய் யிட்டு முன்னம்ரெண்டு
தொடுத்த மருந்து தேசிக்காய்
துலங்க அளவா யரைத்தெடுத்து
விடுத்த கசாயந் தனிற்கரைத்து
மேவும் பசுவின்பால் நாழிவிட்டு
எடுத்தே மெழுகு பதம்வடிக்க
எட்டுக் காசம் விட்டுப்போம் 178

பெருங்காமலகாதித் தைலம்

சொல்லும்நெல் லிக்காய்ச் சாறு
துலங்கிய கையான் சாறு
அல்லிய கமல வேரின்
சாறுடன் கொடுப்பைச் சாறு
புல்லுபேய்ப் புடோலின் சாறு
பொருந்துநற் கோவைச் சாறு
நல்லெலு மிச்சஞ் சாறு
நவிலும்பா லிளநீ ராமே 179

இவையிங்கே உரைத்த தெல்லாம்
எண்ணெய்யிற் சமனாய்க் கூட்டி
நவையில்லா மதுரஞ் சீனம்
நாகணங் கோட்ட மேலஞ்

சுவையாம்முந் திரிபே ரீந்து
    தோன்றுநற் சந்தனஞ் சாதி
சவையுற சமனாய்க் கூட்டிச்
    சாரித்து வடித்துக் கொள்ளே 180

கொண்டதோர் தைலம் மூன்று
    நாழிகை குறைந்தி டாதே
மண்டலஞ் சிரசிற் தப்பி
    மாலையில் முழுகு வோர்க்கு
மண்டையிற் குத்துக் காசம்
    மாலைநீர் சிவப்புந் தீரும்
அண்டரு மறியச் சொன்னார்
    அருமறை நூலை யாய்ந்தே 181

**அசன வில்வாதித் தைலம்**

வில்லைவேர் வேங்கைவே ரமுக்கி றாவேர்
    வெட்டிவே ரிலாமிச்சம் வேரி னோடு
நல்லகுறுந் தோட்டிவேர் குமரி வேரும்
    நன்னாரி வேர்மரை வளைய மெட்டும்
சொல்லிலொன்று பலம்பத்துத் தண்ணி தூணி
    தூளாக்கித் தறித்திடித்துப் போட்டுக் காய்ச்சி
முல்லைநகை மானேகேள் குறுணி யானால்
    மூலிகைபொன் னாங்காணி யிளநீர்ப் பாலே 182

ஆம்பலிலை செங்கழுநீர்க் கிழங்கு நெய்தல்
    ஆமலகங் களிதாழை விழுதி னோடு
நாம்புகன்றோஞ் சம்பீரப் பழத்தி னோடு
    நாழிச்சா றிவையொன்று எண்ணெய் நாழி
சோம்புபடா திவைகூட்டித் தேவ தாரந்
    துலங்குகோட்ட மாஞ்சிமஞ் சட்டி யேலம்
காம்புழுகு புயமானே கிராம்பு சாதிக்
    கலனார்சண் பகமொட்டு கருதிக் கொள்ளே 183

இலவங்கந் திரிகடுகு திரிபலை கற்பூரம்
    இனியசந் தனக்காம்பு தேவ தாரம்
குலவுகிளி யூறற்பட்டை கத்தூரி மஞ்சள்
    குங்குமப்பூ அதிவிடையும் வகையொன் றுக்கு

பலமாகக் கழுஞ்சாறு எடுத்த ரைத்துப்
பாங்காக எண்ணெய்தனிற் கூட்டிக் காய்ச்சி
நலமுறவே முழுகிவரக் கண்ணிற் தோன்றும்
நாலிரண்டு காசமது நாசந் தானே 184

### சந்தனாதித் தைலம்

நல்ல சந்தன மகில்வில்வம்
நாரி தேவி லாமிச்சம்
சொல்லுந் திரிபலை யிருவேலி
தூய வெட்டிமி ளகுகோட்டம்
புல்லுஞ் சீரக முடன்தேற்றான்
பொன்னா வரைவேர் மலைதாங்கி
முல்லை நகையீ ரிவையொன்று
முன்னே பலம்பத் தாய்க் கொள்ளே 185

கொள்ளாய் தூணி நீரிலிட்டுக்
கொதிக்கக் காய்ச்சி குறுணிகொண்டு
நள்ளே யனைய ஆவின்பால்
நாட்டி விளநீர் முலைப்பாலும்
தள்ளா தெண்ணை யுடன்விட்டுத்
தண்ணீர் விட்டான் வல்லாரை
வள்ளைப் பசளை சிறுகீரை
வனச வளையங் காணிநெய்தல் 186

மாதளம் பழநீர் மொந்தை
மடற்தெங்கு நெல்லி தாளி
தாதெலு மிச்சி னோடு
தழைமுன்னை முசுட்டை வீழி
கோதையே யொன்று நாழிச்
சாறது விரையச் கொண்டு
ஏதமில் கற்க மேலம்
இனியகங் காடி பச்சை 187

பச்சைகற் பூரந் தாளிச
பத்தரி பச்சை கல்நார்
நச்சிடும் புனுகுகோ ரோசனை
நல்மது ரந்தாரங் கோட்டம்

இச்சைசந் தனங்காய் பத்திரி
　　எழிற்கிளி யூரல் கிராம்பு
மிச்சமாய்க் கூட்டி யெண்ணெய்
　　வெந்துநீ வடித்துக் கொள்ளே 188

(வேறு)

நெல்லிக்காய், கரிப்பான், தாமரைக்கிழங்கு, பொன்னாங் காணி, பேய்ப்புடல், கோவையிலை, எலுமிச்சம் பழம் இவற்றின் சாறு, பசுவின் பால், வகைக்கு ½படி. நல்லெண்ணெய் 1படி, அதிமதுரம், தேவதாரம், நாகணம், கோட்டம், ஏலம், முந்திரிப்பழம், பேரீச்சம் பழம், சந்தனம், சாதிக்காய் வகைக்கு 2வராகன் எடை, இவைகளை அரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்து 3 நாழிகையிற் தலையில் தேய்த்து உச்சியில்அரப்பிட்டு முழுகிவர 8 வகைக் காசமும் தீரும்.

## 2. கருவிழிப் படலம் ஏழிற்கும் பெயர்

பேசிய படல மேழிற்
　　போதனை மானே கேளாய்
கூசியே விழியெ முந்த
　　கொழுஞ்சதைப் படலம் ரத்தம்
மாசுறு படல நீரால்
　　மயங்கிடும் படலத் தோடு
வீசியே வரிப்ப டர்ந்து
　　படலமோர் நான்கு மின்னே
நாசமே யில்லை தீரும்
　　நாட்டில்சாத் திகமு மாமே. 190

அசாத்தியப் படலம் மூன்று

கார்குழல் மானே கேளாய்
　　கருதுநாகப் படல மோடு
கூர்விழி மந்த மாகும்
　　அதிமாங்கிஷப் படலங் கூறும்
ஓர்பசு வின்விழிப் படலம்
　　ஒன்றிவை மூன்றுந் தானே
நேரில்லா அசாத்தி யத்தின்
　　குணமென நிகழ்த்தி னாரே, 191

### சாத்தியப் படலம் நான்கின் குணம்-

### சதைப்படலத்தின் குணம்

தெளிவுறு கறுப்பி னுள்ளே
சிவந்துநின் றுத்தி நோவாய்
வெளியினை யிழையத் துன்றிப்
படலம்வீழ்ந்திடுமே யாகில்
அளியுறு குழலாய் கேளாய்
அதுசதைப் படல மென்று
மொழிவதா யுருவே தத்தின்
முறைமையை யறிந்து கொள்ளே. 192

### இரத்தப் படலத்தின் குணம்

கரித்திடுங் குமிறுங் காந்தும்
கன்றிடும் பீளை வீங்கும்
எரித்திடுங் கண்ணி லெங்கும்
இரத்தமே யெரிந்து காட்டும்
நெரித்திடப் புருவம் நெற்றி
பிடருச்சி நீங்கக் குத்தி
இரத்தமாம் படல மென்று
இயம்பினா ரியம்பி னாரே 193

### நீர்ப்படலத்தின் குணம்

சாலவே சிரசில் குத்தும்
தாழுநீர் வீழுங் கண்ணில்
மூலமாங் கறுப்பின் மீது
முகில்போல மயக்க முண்டாம்
வேல்வரி விழியி னாளே
அருவிநீர் மிகுந்து வீழும்
ஓலமா முனிவன் கூறும்
உண்ணுநீர்ப் படல மாமே 194

### வரியெழுச்சிப் படலத்தின் குணம்

கருவிழி யதனின் மீது
கயிறுபோல் வளைந்து காட்டி
அருவியே பாய்ந்து குத்தி
அழன்றுநொந் துறுத்துங் கண்டாய்

முருகவிழ் குழலி னாளே
முன்விழி புகைச்ச லுண்டாய்
வருவது மேதோ வென்னில்
வரியெழுச்சி படலந் தானே, 195

சாத்திகம் முற்றும்

**அசாத்திய படலம் மூன்றின் குணம்**

**கருநாகப் படலத்தின் குணம்**

இந்திரன் தனுவே போல
இயல்நிறம் பலது முண்டாய்
மந்தமாஞ் சூட்சந் தானும்
வருந்திடக் குத்தி நோவாய்
சிந்துநீர் மிகுந்து காட்டித்
தெளிவிழி யுந்துங் கண்டாய்
கந்தமார் குழலி னாளே
கருநாகப் படல மாமே. 196

**அதிமாங்கிஷப் படலத்தின் குணம்**

ஊச்சியின் சதையே போல
கருவிழி யதனி லூறும்
கூச்சமு மிடியு முண்டாய்க்
கொதித்துநீ ரழிந்து வீழும்
தேச்சிடு விழிநல் லாளே
சிரம்பிடச் சீழு வாங்கும்
ஆச்சதிக் குணங்கள் கண்டால்
அதிமாங்கிஷப் படல மாமே 197

**பசுவிழிப் படலத்தின் குணம்**

வசையுறு கறுப்பி னுள்ளே
மரகதம் போன்று காட்டும்
சதைபரந் திடியும் நீரும்
தலழது போலக் காந்தும்
இசையவே யோயு மந்தம்
இக்குணங் கண்ட வாறே
பசையுறு அசாத்தி யத்தின்
பசுவிழிப் படல மாமே. 198

கருவிழி படலத்திற்கு மருந்து

சீனக் கார மொருகழஞ்சு
சிறந்த காவி யரைக்கழஞ்சு
மானே யவினும் பணவிடையாய்
மறுத்து மிதனைப் பொடி யாக்கித்
தேனார் முலைப்பால் தனிற்கலக்கித்
தீயி வனத்தி விழியொழுக்கப்
போனா ரென்று கேட்டிடுகிற்
பொருந்தா தோடிப் போமென்றே 199

படலத்திற்குத் தாரைவிட நெய்

நறுநெய் யுழக்கு நத்தைச்சிப்பி
நவிலும் நீர்கள் சரிகூட்டி
உறுநற் சீர மதிமதுரம்
உகந்த தேவ தாரமபின்
நறிய சீனக் காரமுடன்
நாடு முருங்கை பூநீரும்
குறையா திதனைக் கூட்டிவெந்து
குளிரத் தாரை கோரவே 200

வேதனைக்குப் புறவசனயம்

அரிதகி யெட்டி சந்தம்
அகில் வில்வ மரத்தை
உரியதோர் மதுரந் தாரம்
உடன்தெறுங் கரியின் பல்லு
அரிவையர் முலைப்பால் விட்டு
அரைத்தபின் கலந்து காய்ச்சித்
தெரிவிழி சுற்றில் தேய்க்கத்
திகைத்திடு மோடிப் போமே 201

இதற்கு ரட்சை செய்யும்படி

இவையது மாறா தாகில்
இயல்மொழி மடங்க லென்னும்
நவையுறு கருவி யாலே
நடுநரம் பறிந்து கொண்டு
குவையிரண் டதனின் மீது
கொதித்தெழும் ரட்சை செய்யச்
சவையுறு முனிவர் சொன்ன
தாரனை யறிந்து கொள்ளே 202

அறிவுசெய் தேழு நாளும்
அழுந்தவே புண்ண தாக்கிக்
குறியுற முன்பு சொன்ன
மருந்தொடு தாரை கொள்நீ
மறுவில்லா விழியி னுள்ளே
வந்தது படலம் போக்கும்
நறைகமழ் குழலி னாளே
நாடிநீ யறிந்து கொள்ளே 203

படலங்களுக்கு மை

சுக்குமில வம்பிசினுந் துத்தமும் ஒரெடையாய்
மிக்கபழச் சாற்றில் அரைத்துருட்டப்-பக்குவமாய்ப்
படலத்துன் மாங்கிசமும் பாயும்நீர்ப் பாய்ச்சலிவை
அடக்கும் படலாதி யாம் 204

படலங்களுக்கு நெய்

ஆவினெய் தேனுமுட்டை அதில்விட்டுக் காயவைத்து
மேவிய தேசிச்சாறும் வியந்தஇந் துப்புமொன்று
காவியின் விழியினாளே கண்ணினில் ஒழுக்கிவிட்டால்
பாவனை யாகச்செய்யப் படலங்கள் தீருமன்றே 205

படலங்களுக்கு
இரத்தனாதிக் குளிகை

தானென்ற கண்ணிலப்பா படலந் தீரத்
தயவான மிளகுடனே சுக்குங் கூட்டிக்
கானென்ற திப்பிலியுஞ் சங்கு கூடக்
கரிய[1]மாவ தாரமுடன் புங்கம் வித்தும்
வேனென்ற அதிமதுரந் துத்தத்தோடு
விதமான பித்தரோ கணியுங் கூடப்
பானென்ற மனோசிலையும் [2]மேனங் கொம்பும்
பண்பான ஆமையுட வோடுங் கூட்டே 206

கூட்டப்பா புலிநகமும் வெள்ளையோடு
கொடிதான சேவலின்நெஞ் செலும்புங் கூட்டு
மூட்டப்பா யிந்துப்பு யிவையெல் லாந்தான்
முனையாக வோரெடையாய் நிறுத்துக் கொண்டு

---

1. மாவதாரம்—அரிதாரம்;
2. மேனங்கொம்பு-பன்றி சிங்கப்பல்

ஆட்டப்பா கல்வத்தில் [1]நந்தி பத்திரி
அடவாகச் சாறுவிட்டு ஒருநா ளாட்டு
சூட்டப்பா அதனுடைய பூச்சாறு தானே
சொல்லடா ஒருநா ளாட்டித் தீரே 207

தீர்த்தெடுத்துக் கயிறுபோ லுருட்டிக் கொண்டு
திறமாக நிழலுலர்த்திப் பதனம் பண்ணும்
பார்த்தெடுத்துத் தேனதிலே யுரைத்துப் போட
படலமென்ற வகைகளெல்லாம் பறந்து போகும்
சார்த்தெடுத்து முலைப்பாலி லுரைத்துப் போட
சார்வாக யீராறு நாளுக் குள்ளே
ஈர்த்தெடுத்த ரத்தினாதி குளிகை யென்பார்
இருவிழியின் படலமெல்லாம் வாங்குந் தானே 208

(வேறு)

கோரக்கர் மூலியைப் பசுவின் வெண்ணெய்யில் அரைத்துச் சிமிழில் வைத்துக் கொண்டு கடுகுமாத்திரம் கண்ணிலிடப் படலமும், துர்மாமிசமும் தீரும். 209

(வேறு)

துத்தம், துருசு, நெல்லிவற்றல், கடுக்காய், புளியம்பூ, வெந்தலையோடு, முத்து, பவளம், வெண்கலம், இரும்பு, பொன், வெள்ளி, செம்பு இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து நிழலில் உலர்த்தி, முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடக் கண் படலம் தீரும். 210

(வேறு)

பவளம், சங்கு, அதிமதுரம், பச்சைக்கற்பூரம், இவை சமனாய் முலைப்பாலிலரைத்து உருண்டை பண்ணி நிழலிலுலர்த்திக் கலிக்கம் போட கண் படலம், புரைப்படலம், காசங்கள்போம்.

(வேறு)

தாமிரம், கந்தகத்திலே பற்பம் பண்ணி அந்தப் பொடியை அரைத்துத் தேனிற் குழைத்து, கலிக்கம் போடக் கண்படலம், பூ முதலானதும்போம். 212

**படலங்களுக்குத் தைலம்**

கூறுபடி காரந்தோ லுரித்த பூண்டு
குங்குமப்பூ லவங்கங்கோ ரோச னைத்தான்
வீறுமிரு வராக னெடைநீயெ டுத்து
மேவியபொன் னாங்காணி யிலையி னல்ல

1. நந்தி பத்திரி-நந்தியா வட்ட இலை

சாறுபலம் பனிரெண்டு முசுமு சுக்கைச்
சாறுமவ் வளவேயொன் றின்பின் னொன்றாய்
மாறிமா றிச்சரக்கில் விட்ட ரைத்து
மற்றுலர்த்திப் பொடிசெய்து வைத்தி வற்றில் 213

கழுவியளள் ளிரண்டுபலஞ் சேர்த்த ரைத்துக்
கல்வத்துட் புறவோரந் தனிலே யப்பித்
தழுவுகடும் வெயிலுலர்த்த யிறங்குந் தூய
சாரமுறு மெண்ணெய்யதை வைத்துக் கொண்டு
பழுதறவே அந்திசந்தி துளிநீ கண்ணில்
பையவிட்டு வரப்படல முதலாங் கண்ணோய்
வழுவறவெங் கதிர்கண்ட பனியைப் போல
மாறுமிது படலத்தின் தைல மாமே. 214

## 3. கருவிழியில் குமுதம் மூன்றின் பெயர்

கூறிய குமுதந் தன்னைக்
குறிகுணங் கூறக் கேளாய்
சீறுவெண் குமுதத் தோடு
தெளிகருங் குமுத மற்றும்
வேறுவெண் குமுத மூன்றில்
விளங்குசெங் குமுத மொன்று
மாறிடு மற்றி ரண்டும்
அசாத்திய மாகுங் காணே. 215

### செங்குமுதத்தின் குணம்

சிவந்திடுங் குமுதந் தன்னைச்
சீர்குறி குணங்கள் கேளாய்
உவந்தநற் கறுப்பின் மீதே
உற்பலம் மலர்போ லுண்டாம்
தவந்திடுஞ் சதையு நீரும்
தணலெழ எரிக்குங் குத்தும்
குவிந்திடுங் குழல்நல் மானே
குறித்துநீ யறிந்து கொள்ளே. 216

### கருங்குமுதத்தின் குணம்

கொள்கருங் குமுத மென்றுங்
குறிகுணங் கூறக் கேளாய்
தெள்கரு விழியி னுள்ளே
செறிந்திடுங் குவளை போலும்

அள்ளிலை வேற்கண் மாதே
ஐயொன்று விரண மாகும்
நள்ளிருள் போல மூடும்
அசாத்திய மென்ன நாடே. 217

### வெண் குமுதத்தின் குணம்

வீறுவெண் குமுத மென்னும்
குணந்தன்னை விளம்பக் கேளாய்
சீறிடும் பஞ்சு போலச்
சிதறிடும் புள்ளி யாகும்
வீறெழக் கொதித்துக் குத்தும்
வேதனை மிகவுண் டாகும்
மாறிடா திடிக்குஞ் சூட்சம்
விழுங்கிடு மசாத்திய மென்றே. 218

### குமுதத்திற்கு மருந்து

#### சந்தனாதி உருண்டை

ஆவின்பல் லதனை நன்றாய்
ஆம்பற்பூ வதனீர் வார்த்து
மேவுநீ ரரைத்து வட்ட
விளம்புநாற் பதுநாட் சென்றால்
கூவுவேன் சேவ லென்பு
கோட்டம்கோரோசனையிந்துப்புத்
தாவுபொன் வெள்ளி லோகம்
சார்வொடு துருசு துத்தம். 219

சொல்லிய சீனக் காரம்
துலங்குமோ ரிதழின் மூலம்
நல்லசா ரடைவேர் சந்தம்
நவில்திரி பலையின் வித்தும்
அல்லிய கோதை நல்லா
யோரொன்றோர் கழஞ்சாய்க் கூட்டி
வல்லிசம் பீரச் சாற்றில்
அரையெழு பொழுது மானே. 220

மின்னேபன் னீரி னாலே
மிருதுவா யரைத்து ருட்டிக்
கண்ணோய் செங்குமு தங்கள்
கருதும்பூப் படல காசம்

பன்நோய்கள் திமிர மெல்லாம்
பற்றிடும் முலைப்பால் விட்டுச்
சொன்னதை யுரைத்துப் போடச்
சோதியாய் விளங்குங் காணே. 221

பொடி

துருசெலி மருந்து சீனக்
காரமுஞ் சொல்ம ருந்து
உருகவே யோட்டின் மீது
வெந்ததை யுடனெ டுத்து
மிருதுவாய் வணக்கிக் கொண்டு
மீறுவெண் குமுதத் தின்மேல்
ஒருதினை யளவு பத்துப்
பொழுதிட வோடிப் போமே. 222

வெண்ணெய்க் குழம்பு

கடல்நுரை துருசு சங்கு
கருதுமிந் துப்புத் தேனும்
அடலெழு துத்த மாறும்
ஆவெண்ணெய் தன்னைக் கூட்டி
அடைகுழி யம்மி லிட்டு
அரையொரு சாமஞ் சென்றால்
இடர்செய்யுங் குமுதத் தின்மேல்
எழுதிட வோடிப் போமே. 223

## 4. கருவிழியில் விழியுந்தல் மூன்றின் குணம்

விழியெழு குமுதத் தாலும்
வேறுள வியாதி யாலும்
தெளிகரு விழியி னுள்ளே
செறிந்திடும் நீரி னாலும்
விழியது மயக்க முண்டாம்
முந்திடும் மூன்று ரோகம்
அளியுறு குழலாய் கேளாய்
அசாத்திய மூன்று மாமே. 224

### விழியுந்தலுக்கு இரட்சை

காக்கையின் காலே போலக்
கருவியை சிவக்கக் காய்ச்சி
நோக்கிவை நுதலின் மீதே
நுண்ணிடை பெருந ரம்பில்
தாக்கவே பிடரி ரோமஞ்
சந்தித்த மைய மீது
காக்குறு குழல்நல் மாதே
கடையிரு புறமுந் தானே. 225

தானமாய் வைத்து ணர்த்திச்
சங்கொடு கரியின் பல்லும்
ஆனதோர் செஞ்சந் தனம்
தாரமாங் கடுக்கா யஞ்சும்
ஆனமுன் முலைப்பால் விட்டு
அரைத்துபின் கலந்து காய்ச்சிக்
கானவிழி குழலாய் நெற்றி
பிடருச்சி கனக்கப் பூச்சே. 226

### 5. கருவிழியில் நெரிசல் மூன்றின் குணம்

கண்ணிலுட் டிணத்தி னாலும்
கடியதோர் மருந்தி னாலும்
உண்ணுறை சிவப்பி னாலும்
ஒதுங்கிய நீரி னாலும்
திண்ணமாய் நெரிச லுண்டாம்
அதன்பெயர் செப்பக் கேளாய்
மண்ணுநீர் சோரை யுட்டிண
நெரிசல்தான் மூன்ற தாமே. 227

உட்டிண நெரிசல் தானும்
உருண்டெழும் வெளுத்துக் காட்டும்
சுட்டநீர் நெரிச லுக்கு
மைதேளின் வடிவு போல
கட்டமா ரத்தத் தாலே
கனத்திடும் நெரிசல் தானும்
மட்டவிழ் குழலி னாளே
மஞ்சாடி வடிவ தாமே. 228

குருதியின் நெரிசல் தானும்
அசாத்திய மென்று கூறும்
இருவிழி நெரிச லுக்குச்
செய்மருந் ததுசொல் லக்கேள்
உருகிய நெய்யுந் தானும்
உருள்மு ருங்கைப் பூவும்
நருவிய சீனக் காரம்
சீரக மபினுங் கூட்டே. 229

கூட்டிநீ கொதிக்க வைத்துக்
குறித்திரு பொழுது தாரை
நாட்டமாய் விட்ட வாறே
நகன்றிடு நெரிசல் நோவு
மீட்டுமோர் குத்துஞ் சூடு
மிகுவலி போகு மின்னே
கேட்டிது முன்னோர் கூறும்
கிரிகையை யறிந்து கொள்ளே. 230

## 6. கருவிழியில் வரி மூன்றின் குணம்

கார்விழி யதனின் மீதே
கரண்டெழு வரியின் செய்கை
நீரினா லிமையி னுள்ளே
நிகழ்த்திடும் வடுவி னாலும்
வார்குழல் மானே சோரி
வைகியே செறிந்த தாலும்
நேர்வரி மூன்றுண் டாகும்
இதன்குணம் நிகழக் கேளே. 231

நீர்வரிக் குணங்கள் தானே
வெண்மையாய் நெடிகிக் காணும்
சேரிமை வடுவி னாலே
செறிவரி பிறைபோ லாகும்
கார்குழல் மின்னே சோரி
வரியிரு கடையுந் தாழ்வு
பாரிதன் குணங்க ளெல்லாம்
பலபட வறிந்து கொள்ளே. 232

சொல்லிமை வடுவி னாலே
தோன்றிய பிறையும் போகா
புல்லிடு வரியி ரண்டும்
புகலுஞ் சாத்திக மென்க
ஒல்லைநீர் ரத்தத் தாலே
உறுவரி தீரு மென்க
பல்பல நூலுஞ் சொல்லும்
பான்மையை யறிந்து கொள்ளே. 233

### இவைகளுக்கு அஞ்சனப் பொடி

விளம்புநல் துத்தந் தன்னை
நுணுக்கிவெள் ளாட்டின் பாலில்
வளம்பெறு நாழி விட்டு
வற்றவே காய்ச்சிக் கொண்டு
துளங்குசம் பீரச் சாற்றில்
அரைத்தடை பிடித்து லர்த்தி
விளங்கிழை மின்னே சட்டி
மீதுவைத் தெரித்துக் கொள்ளே. 234

வெண்மையா மருந்தெ டுத்து
வெங்கலப் பிரத்தில் வைத்து
தண்ணுறு சங்கி னாலே
சாமம்மத் தித்துக் கொண்டு
திண்ணமா யெழுதும் போது
தீர்ந்திடும் வரிச்சி வப்பு
கண்ணிடை நீர்நில் லாது
கடுகியே வோடுங் காணே. 235

## 7. கருவிழியில் குந்தம் மூன்றின் குணம்

குறித்திடு குந்தம் மூன்றின்
குறிகுணங் கூறக் கேளாய்
உறுத்திய சதையா மொன்று
உதிரமொன் றதுநீ ரொன்று
அறுத்திடு ரோக மூன்றும்
அசாத்திய மாகு மானே
தெறித்திடு மணியை விட்டுத்
திரண்டநீர் சதையாய்த் தீரும். 236

ஒள்ளிதால் போலெ ழுந்த
உதிரத்தின் குந்தந் தன்னை
தள்ளிடு அசாத்தி யந்தான்
சதைநீராங் குந்தந் தீர
அள்ளிலை நெடுவேற் கண்ணாய்
ஆம்பீத ரோணி துத்தம்
துள்ளெவி மருந்தி னோடு
துருசுநற் சீனக் காரம். 237

கடல்நுரை சோகி சங்கு
கருது மொன்பது மருந்தும்
மடலெனும் நந்திப் பூவின்
சாற்றினா லரைத்து ருட்டித்
திடமுற வெளுக்கச் சுட்டுச்
சேரமத் தித்துக் கொண்டு
உடனெழு குந்தந் தன்னில்
எழுதிட வோடிப் போமே. 238

கூறுவேன் குந்தத்தின் குணத்தைக் கேளு
கொடிதான விழிதனிலே விடநீர் பாயும்
மாறுமே விழிதனிலே ரத்தஞ் சேர்ந்து
மயக்கமொடு கண்கூச்ச மதிக மாகி
சீறலுடன் கண்ணெரிவு குந்த மாகி
சீழுடனே கட்டியுமாய்த் திரட்டிக் காட்டும்
ஊறலுட னிருவிழியு முயர்ந்து காட்டும்
உத்தமனே யூகிமுனி உரைத்த வாறே. 239

குந்தத்திற்கு மருந்து

தாவுந் தலையிற் புளியிலையைத்
தயங்கத் துவைத்துச் சீலைவடி கொண்டு
ஏவப் பொடிசெய் திந்துப்பை
இட்டுக் காய்ச்சி இதமானால்
மேவுந் துத்தந் துருசுடனே
விளங்கு தேனுடன் விட்டரைத்துக்
கூவுங் குயிலாய் கண்ணிலிடக்
குந்தந் தீரும் குறையில்லையே. 240

(வேறு)

பச்சைக் கற்பூரம், அஞ்சனக்கல், காரீயம், திப்பிலி, மிளகு, இரதம் இவற்றை நந்தியா வட்டச் சாற்றிலரைத்து நாள் தோறும் தேனிலிடக் குந்தம் தீரும். 241

நன்னாரி, விளா, சங்கு, இவைகளின் வேரும், அதிமதுரமும் ஓரளவாய் மை போலரைத்துக் காடியில் கலக்கிக் கரண்டியில் கொதிக்க வைத்து இரும்புத் தடியால் களிம்பு போல் தேய்த்து விழியிற் போட்டுவரத் தீரும். 242

## 8. கருவிழியில் தோன்றும் திமிரம் ஏழின் பெயர் குணம்

மின்னிய திமிர மேழின்
குணந்தனை விளம்பக் கேளாய்
மன்னிய விழிம யக்க
வெள்ளெழுத் துடனே மாலை
பின்னுமோர் சிரசில் மூளை
வறட்சிசெய் பித்த சேற்றுமம்
மன்னநீர் பாயு மேழிற்
சாத்திக மூன்று மாமே. 243

தெளிவிழி யொளியாய் நிற்கும்
தீங்கிலை முப்பத் தைந்தில்
ஒளியுறப் புகைந்து சற்றே
ஓங்கிடும் நாற்பத் தைந்தில்
வெளியுற விருள தாகும்
மேவிய ஐம்பத் தேழில்
தெளிவிழி யிருள தாகும்
ஆண்டது நூற தாமே

(எ-து) முப்பத்தைந்திற்கு வந்த புகைச்சல், வெள்ளெழுத்து நாற்பத்தைந்தில் மாறும். நாற்பத்தைந்திற்கு மேலுண் டானது சந்திர திமிரம் என்றறியவும்)

மறக்குங் கடுக்கும் கரகரக்கும்
மாறா வாதை கண்பருக்கும்
உறக்குந் தலைமுகந் திமிர்ந்திருக்கும்
ஊறு நீர்க்கண் பீளையிடும்
பறக்கும் விழியும் வெளுத்துவரும்
பார்வை குணங்கள் பலவாகும்
திறக்கு நயன குணந்தானும்
திமிர வகையின் செயல் தானே. 245

### வெள்ளெழுத்தின் குணம்

சாற்றினார் வாதபித்தக் கபத்தி னாலே
சருகலுட னருவியேதான் கனல்தா னேறி
சீற்றமுட நீர்ச் சேர்ப்பு மிகவே யாகி
சீறியதோர் கொப்புளங்கள் மேலே தோன்றி
நீற்றமுட னிமைத்தடிப்பு சிவப்பு காணும்
நேரான விழியிரண்டும் கம்ம லாகும்
பீற்றலுடன் சோரிதங்கி வெள்ளெ ழுத்தைப்
பிலக்கவே காட்டுமெனப் புகன்ற வாறே 246

வேண்டியதோர் கருமான மின்ன மொன்று
விரும்பியே வெள்ளெழுத்துப் போக்கச் சொல்வோம்
தூண்டியே படலம்போல் கண்வெ ளுக்கும்
தோற்றாது பார்வையது குன்றிப் போகும்
தாண்டியே சதைவளர்த்தி அருவல் காணும்
சாங்கமாய் யிமைதுடித்துச் சண்ணும் சண்ணும்
காண்டிபமும் கைபிடித்தால் தோன்றா தையா
காட்டினார் யூகிமுனி கருதி னாரே. 246

கூசும் விழியும் புகைந்திருக்கும்
குறுகும் பார்வை தோற்றாது
மாசுங் கண்ணும் பசுத்திருக்கும்
மயங்கிக் குணங்கள் பலவாகும்
தேசுங் குறையு மருட்சியுண்டாம்
திறமாய்க் கருமம் செய்யாது
பேசுங் குணங்கள் வெள்ளெழுத்து
என்றே சொல்லுவ ரிதுகண்டே 248

கூர்விழி மணியி னுள்ளே
குழம்புமை முகிலே போலக்
கார்கிழிந் தொதுங்கி நிற்கும்
காண்பது மஞ்சள் போலாம்
வார்முலை மானே கேளாய்
கண்ணாடி வைத்து நோக்கு
தேர்குணங் கண்ட வாறே
வெள்ளெழுத் தென்ன லாமே 249

## 2. மந்தாரத் திமிரத்தின் குணம்

சேர்கரு மணியி னுள்ளே
    செரிந்திடு மஞ்சி போலே
கூரிருள் நேர மானால்
    குழம்பியே வலையுங் கண்டாய்
சீரொரு சாமஞ் சென்றாற்
    தெளிந்திடு மேதோ வென்னில்
வார்முலை மானே கேளாய்
    மந்தாரத் திமிர மாமே.

## 3. வறட்சித் திமிரத்தின் குணம்

மூளையிற் பித்தம் நின்று
    முதிரவே வறட்சி யானால்
நாளிலே யேயு மந்தம்
    நடுநரம் புருளக் குத்தும்
பீளையும் நீரு மாகும்
    இக்குணங் கண்ட போது
வாளைவென் றடருங் கண்ணாய்
    வறட்சியாந் திமிர மாமே. 251

## 4. நீர்த்திமிரத்தின் குணம்

கபமது அமிர்த மீது
    கதித்துநீர் மிகுதி யாகி
நவிலுமூக் கடைத்து அண்ணாக்
    கதுவினிற் புண்ணே யாகும்
குவையிரு புறமுங் குத்தும்
    கூர்விழி புகைச்ச லுண்டாம்
இவையிது நீரால் வந்த
    திமிரமென் றறிந்து பாரே. 252

## 5. வாதத் திமிரத்தின் குணம்

உந்தியில் வாயு தங்கி உச்சியில் குத்த லுண்டாய்
முந்திய விழியும் நொந்து மூடிய விருள்போ லாகில்
வந்தது விழியின் மீது வாதமாந் திமிர மென்று
சுந்தர வதன மாதே தொகுத்துநீ யறிந்து கொள்ளே 253

### 6. சேற்பனத் திமிரத்தின் குணம்

ஆக்கையிற் தாது கெட்டு அடர்நரம் புகள்மெ லிந்து
நோக்கிடும் விழியுஞ் சுற்றி நொய்மைசே ரொளிம ழுங்கி
வீக்கிடும் கனல்மி குந்து விழியினி லெரிவுங் காணில்
தேக்கியல் மொழியாய் சேற்பனத் திமிர மென்று செப்பே 254

### 7. மாலைக் கண்ணின் குணம்

மயங்கவே நேத்திரத்தின் குணத்தைக் கேளு
மாறாத சாயரட்சைக் குருட்டுக் கண்ணாம்
தியங்கியே வாதமது மிகவே பொங்கி
திடச்சித்தம் குறைந்துமே மயிர்க்கூச் சுண்டாம்
தயங்கவே நாவறட்சி சன்னி தோடம்
சாங்கமாய் பிடரிவலி மிகவே காணும்
நயங்கவே சதாகாலம் நிசுநீர்த் தும்மல்
நாடியே சிரசுவலி யதிக மாமே. 255

காயம் வெளுத்து முகம்பசுத்துக் கண்ணும் வேறே விகாரமு
மாயம் போலத் தலைகனக்கும் மயங்குங் குணங்கள் மதிவேறாம்
பாயும் பீளை மேனோக்கிப் பார்க்க விழியும் கூசிவிடும்
சாயுங் காலம் மாலைக்கண் தரித்த விளக்குந் தெரியாதே 256

### வெள்ளெழுத்துக்கு மருந்து

காதார் குழலார் கைவளையும்
கபாலத் தோடு கடுகுநெல்லி
மாதைப் பிரியா தான்றியொடு
மதியா யொன்று கால்கொண்டு
பூதி ருந்த மஞ்சாடிப்
பூமுருக்கம் பழச்சாற்றிற்
காதிக் கபிலாய் வெள்ளெழுத்துக்
கண்ணுக் கினியது கண்டாயே 257

புங்கம் விதைகொண்டு புறத்தோ லதைச்சீவி
பங்கப் படுத்தியதன் பால்பிழிந்து—நங்காய்கேள்
கோரோசனை கோட்டங் குங்குமப்பூ கூட்டெழுதில்
ஓரோ சனைதோன்றுங் காண் 258

அகத்திப் பழுப்புச்சா றப்பனே கண்ணில்
மகத்துவத்தைக் கேளுமினி மாண்பார் செகத்தினிலே
வெள்ளெழுத்தை நீக்கும் விளங்குந் திரிபொழுதில்
உள்ளபடி சொன்னார் உவந்து 259

**திரிபலை உருண்டை**

தேற்றான்விதை, சங்கு, திரிகடுகு, இந்துப்பு, மரமஞ்சள், புங்கம் விதை, திரிபலை, வகைக்குச் சமன் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து, கயறு பண்ணி, தண்ணீரில் உரைத்துக் கண்ணிலிட வெள்ளெழுத்து தீரும். 260

(வேறு)

வில்லைவேர் தண்ணீரில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும்.

(வேறு)

பொன் முழுக்காச்சி உள்ளுக்குக் கொடுக்கத் தீரும். 262

(வேறு)

சர்க்கரை, தேன், வெள்ளாட்டுப்பால் இவை சமன் கூட்டி நசியமிட வெள்ளெழுத்துத் தீரும். 263

(வேறு)

சிறுகீரைவேர், கண்டுசர்க்கரை, அதிமதுரம், செங்கழுநீர்க் கிழங்கு, முலைப்பாலில் நசியமிட வெள்ளெழுத்துத் தீரும். 264

(வேறு)

அருகன்சாறு, கருப்பன்சாறு, முந்திரிகைப் பழச்சாறு, மாதளம் பழச்சாறு, இவை சமன் கொண்டு நசியமிட வெள்ளெழுத்துத் தீரும். 265

(வேறு)

பேய்ப்பீர்கன் கூண்டு பொடி செய்து எண்ணெய்யில் ஊற விட்டுக் கொதிப்பித்து, பலகாலும் முகரவும் பூசவும் தீரும். 266

(வேறு)

சந்தனம், துத்தம், துருசு, தாரம், பீதரோகணி, பச்சைக் கற்பூரம் இவை ஒருநிறையாய் மைபோல அரைத்து எள் பிரமாணம் கண்ணிற் தூவத் தீரும். 267

(வேறு)

புங்கம் வேரைத் தேனிலுரைத்துக் கண்ணிலிட வெள்ளெழுத்து மாறும். 268

(வேறு)

புங்கம் வித்தை நெய்யில், தேனில் உரைத்து இட வெள்ளெழுத்து மாறும். 269

(வேறு)

துத்தம், செங்கழுநீர், கோட்டம், இருவேலிவேர், நந்தியாவட்டவேர், இவை சரிகொண்டு பசுவின்பாலில் வேக வைத்து நன்றாக அரைத்து, உருண்டை செய்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடப் புகைச்சலும் வெள்ளெழுத்தும் மாறும். 270

(வேறு)

பருத்தியிலைச்சாற்றை 7 நாட்கள் கண்ணிற்பிழிய கண் தெரியும். 271

(வேறு)

வேப்பம்பிசினை அழிஞ்சிப் பழச்சாற்றில் அரைத்துக் கண்ணில் போடவும். 272

(வேறு)

புரசம் பாலை இரண்டு துளி கண்ணிலிட ஆறுவேளை. 273

(வேறு)

அப்பை கோவை, நாய் கோவை, அடுப்புக் கற்றாழை, வெண்குன்றிமணி, கருங்குன்றிமணி, தழை. வேர்ப்பட்டை, ஒருள்ளி, வசம்பு, மஞ்சள், இவற்றை அரைத்துக் குளிகை செய்துலர்த்தி ஆப்பாலிலுரைத்துண்டு மேலிலும் பூசவும். 274

(வேறு)

சந்தனம், காவிக்கல், சண்பகமொட்டு, மிளகு இவை சமன் கூட்டி, எலுமிச்சம் பழச்சாற்றிலாவது காடியிலாவது அரைத்து, திப்பிலி பிரமாணம் உருண்டை பண்ணி வைத்துக்கொண்டு கண்ணிலிட வெள்ளெழுத்து தீரும். குளிர்ச்சி உண்டாகும். 275

(வேறு)

பொன்னாங்காணிச்சாறு, கரிசாலைச்சாறு, நெல்லிக்காய்ச் சாறு, நல்லெண்ணெய் இவை வகைக்கு 8 படி, முசுமுசுக்கை, நெருஞ்சில், கண்டங்கத்திரிக்காய் முள்ளிக்கத்திரிக்காய், தென்னம் பூ, வில்வம், வாதநாராயணயிலை, இவைகளின் சாறு, இளநீர் இவை வகைக்கு 1 படி இவற்றை ஒன்றாய்க் கலந்து அதில், நன்னாரிவேர் 4 பலம், தாமரைப்பூ, மிளகு, அதிமதுரம், சந்தனம்,

அன்னாசு மொக்கு, இவை வகைக்கு 2 பலம். சீரகம், கொத்தமல்லி இவை வகைக்கு 4 பலம், கத்தூரிமஞ்சள், வெட்டிவேர், சோம்பு, கல்லுப்பு, விலாமிச்சுவேர், மல்லிகைப்பூ இவை வகைக்கு 1 பலம் இவைகவள 8 படி ஆவின்பாலில் அரைத்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து முழுகி வர நீங்கும். 276

### மாலைக் கண்ணுக்கு மருந்து

தானென்ற மாலையிடக் கண்ணுக் கப்பா
நயமான சுழல்வண்டு சுட்ட சாம்பல்
வேனென்ற கல்வத்திற் போட்டுக் கொண்டு
விதமாக யெண்ணெய்நீர் பூண்டு சாறும்
பானென்ற பருத்தியிலைச் சாறுங் கூட்டிப்
பாங்கான வெள்ளுள்ளி மிளகு பத்து
வானென்ற மைபோலே ஆட்டிக் கொண்டு
வளவாக அந்திசந்தி கண்ணிற் போடே 277

போடப்பா நாள்மூன்று போட்ட போது
பொங்கமுடன் மாலையீ தகன்று போச்சு
வீடப்பா விளக்கெண்ணெய் வார்த்து விட்டே
விதமாக நாலைந்து முழுகும் போது
சாடப்பா அருந்ததி கண்ணிற் தோற்றும்
துரவாகக் கீழ்ப்பார்வை கண்ணிற் காணும்
நாடப்பா போகருட கடாட்சத் தாலே
நலமாகப் புலிப்பாணி பாடி னேனே 278

(வேறு)

கானத் தீயுஞ் சங்கிலை ரசமும்
கருத்தாய்ச் சரிநிறை தான்பிழிந்து
தானதை யேகற் பூரந்தனிலே
சரியா யிழைத்ததை வழித்தெடுத்து
ஆனதோர் மாலைக்கண் ணினிலிடவே
அப்பொழு தேகுமே யொளித்துப்
பானுமுன் பனிபோலென முன்னோர்கள்
பகர்ந்தா ரறிவோடு தாம்விதித்தே 279

(வேறு)

நற்றவ துருசு யிரண்டு நலமுள்ள சங்கோ ரைந்து
கொற்றவை யிந்துப் புந்தான் கூறிய காலுங் கூட்டி
சிற்றநல் லெலுமிச்சஞ் சாற்றில் சேர்த்தெல்லாம் உருண்டை செய்து
மற்றந்தி மாலை மந்தம் வாங்கிடு முண்மைதானே 280

(வேறு)

அந்தி மாலைக்கண் மந்தம் கொடுத்திடில்
ஆன கோழி யவரையின் சாற்றினில்
பந்தி யாவினற் பாலும் சமனாய்ப்
பருக வேழுநாட் பாரீர் இருளறும்
மந்தம் வாங்கிப் பிரகாசம் கொடுத்திடும்
வாகாய்ப் பத்தியம் பாலுட னன்னமும்
நந்தி நாயகன் தானுற்ற தேயிது
நாடி நீங்க ளறிந்துகொள் வீர்களே 281

(வேறு)

காதுக் குறும்பி யொருபங்கு கருந்தே னிரண்டு பங்கோடு
போதப் பன்னிரு நாழிகைநீ பொருந்த வரைத்தே யந்தியிலே
ஓதுங் கண்ணி லைந்தாறு போதுகந் திட்டாற் போம்பாரே
போது மந்தி மாலையென முனிவ ராய்ந்து புகன்றாரே 282

(வேறு)

மின்மினிப் பூச்சிதன்னை அமுதினுள்
வைத்திர வினிலே விழுங்கிடில்
நின்னயத் துடனோர்மூன் றிரவுமே
நீவிழுங் கிடில்விழி மாலைபோம்
சொன்னயிம் முறைதன்னை நம்மீசனார்
சோதியாரு மையாளுட னோதிட
மண்ணில்வாழு மகத்திய மாமுனி
வரிசைபெற்ற வகையீதென் றோதினார். 283

(வேறு)

தும்பைவேர்க் கொம்பு சுகந்தம ரீசமுடன்
கம்பிப் பிசின்போலே கண்டரைத்து—அம்புவியில்
மாலைவிழி யோர்தமக்கு மாட்டு திரிபொழுது
வேலைப் பழித்தவடி வேல் 284

(வேறு)

இந்துப்பை சங்கிலைச் சாற்றிலுரைத்துக் கண்ணிலிட மாலைக்கண் தீரும். 285

(வேறு)

மிளகை நல்லெண்ணெய்யில் ஊறவைத்து சாயுங்காலம் உரைத்துத் தலையில் பூசத்தீரும். கண்ணில் இடவும் தீரும். 286

(வேறு)

எட்டி விதையை முலைப்பாலில் உரைத்துக் கண்ணில்போட்டு வரத் தீரும்.

(வேறு)

கொடிப்பாலைக் கொழுந்துப் பாலும், விளக்கெண்ணெய்யும் வகைக்கு 1 துளி மத்தித்து கண்ணிற் றீட்டத் தீரும். 288

(வேறு)

எட்டிவேரை முலைப்பாலிரைத்துப் போட்டாலும் பழ மிளகை நல்லெண்ணெய்யில் ஊறவிட்டு அரைத்துப் போட்டாலும் தீரும்

(வேறு)

நொச்சிச் சாறு, எலுமிச்சம்பழச்சாறு, தேன் வகைக்கு வராகன் எடை கழுதை எலும்பை உரைத்துப்போட நீங்கும். 290

(வேறு)

இந்துப்பு சதகுப்பை, சங்கு, மனோசிலை, கடல்நுரை, மிளகு, செங்கற்பொடி, ஓரளவாகக் கொண்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் கயிறு செய்து ஆவின் நெய்யில் உரைத்துப்போட்டு வரத்திரும் 291

(வேறு)

மகிழம்விதையை முலைப்பாலிலுரைத்திட குணமாம். 292

(வேறு)

வெள்ளாட்டு யீரலும் பிச்சும் உப்பிடாமல் வேகவைத்து இட மாறும்.

(வேறு)

வெட்பூலாவேரைக் காடியிலுரைத்திட மாறும். 294

(வேறு)

கருஞ்சீரகம், ஆனைக் கொம்பு சீவினதும் தேன் வார்த்தரைத்து, செப்பு வட்டகையில் மத்தித்து உருண்டை பண்ணி, செப்பு வட்டகையில் தேனிலுரைத்திட மாறும். 295

(வேறு)

சோதிதுத்தம் 6கழஞ்சு, பொடி செய்து, 2 உழக்கு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, மெல்லிய சீலையிற் தோய்த்து நிழலுலர்த்தலாக உலர்த்தி முலைப்பாலில் நனைத்து ஒழுக்கவும்.

(வேறு)

அழிஞ்சிக் கொழுந்தும் வெள்ளுள்ளியும் மிளகு மூன்றும் நறுக்கி, 3 நாட்கள் பிழிய மாலைக் கண் தீரும். 297

(வேறு)

எலுமிச்சம் பழச்சாற்றில் கிராம்பு உரைத்து கண்ணுக்கு 3 நாட்கள் போடவும்.

திமிரத்திற்கு மருந்து (பொது)

சங்கு தலையோ டோரிதழின் தாமரை மூலம்வான் மேவு
திங்கள் போன்ற நீற்றுக்கல் சிறந்த சோகி கமடவென்பு
பொங்கு துத்தங் கழஞ்சுடனே பொழியுந் துருசோ ரறுகழஞ்சு
தங்க நிறைத்துச் சம்பீரச் சாற்றா லரைத்துக் குளிகை செய்யே. 299

குளிகை திரட்டும் படிகேளாய் குக்கிட வண்டச் சலம்வாங்கி
நெளிய வரைத்தங் குண்டை தன்னை நீளாதளவுங் குறையாமற்
சுழியா யிருக்க விருபுறமுந் தோகை யனையார் தனப்பாலில்
பிழிய வெழுத நயனமதின் பெருகுந் திமிரம் போய்விடுமே. 300

(வேறு)

நற்சந்த மகில்செழு சந்தம் நவிலதி மதுரந் தாரம்
வைச்சவோ ரிதழின் மூலம் வளர்பிச்சி யரும்பு கோட்டம்
பச்சிலை பீத ரோகணி பகர்சீனக் காரந் துத்தம்
நச்சிடும் புனுகு கோரோ சனைமுத்தக் காசு தேற்றான். 301

தாவுகோல் சங்கு லிங்கம் சாத்திர வேதி பச்சை
மேவிந்து யிருபத் தொன்றும் விளம்போ ரொன்றிரு கழஞ்சு
பூவையர் தனப்பால் செந்தெங் கிளநீர்தண் புகலும் பன்னீர்
நீவிரைந் தரைத்த வுருண்டை யெழுதிடத் திமிரம் நீங்கும்

(வேறு)

ஆணார் பால்நல் வெண்ணெய் நெல்லி அதுபோல் கையாந்தகரை காடி
காணார் வாழைக் கழங்கொடியுங் கருதும் சீராம் கற்பூரம்
மாணார் கோட்ட மாஞ்சில் வடித்தே பதத்தில் தலையிலிடப்
போனார் திமிரக் கண்ணோவும் பொறுக்குந் திமிரம் பொறுத் திடுமே 303

(வேறு)

சீரிய நயனந் தன்னில் திரண்டதோர் பீளை யாகும்
காரிய யிமைகள் தன்னில் கலங்கவே நடுக்க முண்டாம்
ஊறிய விழிகள் தன்னில் உற்றதோர் நீல மாகும்
சீறியே வலித்து உள்ளே தினவெழும் புடைப்பு முண்டாம் 304

திப்பிலி அமுக்குரா திரிகடுகரத்தை கோட்டம்
முப்பிய சிறுகீரை முகிளிதம் துருசு துத்தம்
அப்பிய கஞ்சாங் கோரை அதன்விதை பொன்னரிதாரம்
செப்பிய முலைப்பா லுருண்டை சேர்த்திடத் திமிரம் போமே 305

(வேறு)

எள்ளுப்பு 80, மிளகு 16, பிச்சி 15, திப்பிலி 60, இந்தப்படி கூட்டி, அரிசி கழுநீர்த்தெளிவில் அரைத்து நிழலிலுலர்த்தி குளிகையை காடியிலுரைத்துக் கண்ணில் போடத் திமிரம் நீங்கும் 306

(வேறு)

அமுக்கிரா. திரிகடுகு, கோட்டம். சிறுகீரை வேர், துத்தம், துருசு, பொன்னரிதாரம், கஞ்சாங்கோரை, அதிவிடையம் இவற்றை முலைப்பாலிலரைத்துக் கண்ணிலிட திமிரம் நீங்கும், வலி, சிவப்பு, நீர்வடித்தல் நீங்கும். 307

(வேறு)

கருவாழை, கரிசாலை, காடி, பொன்னாங்காணி, செவ்விளநீர் இவை வகைக்கு $\frac{1}{4}$ படி, நல்லெண்ணெய் 1படி, சேர்த்து இவற்றுடன் ஏலம், கோட்டம். மதுரம், கற்பூரம், மாஞ்சில், சந்தனம், இவற்றை சம அளவு சேர்த்தரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடித்துத் தலை முழுகி வரத் திமிரம் நீங்கும். 308

**பச்சைத் தாம்பிராதிக் குளிகை**

படிகம் பணில மடற்துத்தம்
　　பஞ்ச லோகஞ் சார்வுடனே
கடியின் கரியின் பல்தேற்றான்
　　கடலின் சோகு நீரதுவு
முடிவில் லாமை யோடுசேரத்
　　தோடோ ரிதழின் மூலமுடன்
திடரில் முதலைப் பல்லுடன்சேர்
　　சிறுகீரை யின்வேர்க் கணம்வேர் 309

மேவுஞ் சினக் காரமுடன்
மிக்க பீத ரோகணியும்
கூவுஞ் சேவல் நெஞ்செலும்பும்
குலவும் பீங்கான் கடல்நுரையும்
ஆவின் பல்லுங் கலைக்கொம்பும்
ஆக வோரொன் றோர்கழஞ்சு
பாவுந் துருசு பதின்கழஞ்சு
பரிந்தெலு மிச்சம் பழச்சாறே 310

சாற்றி லேழு நாளரைத்துத்
தயங்குங் கோழி வெண்கருவின்
நீற்றி னரைத்துக் குளிகைசெய்ய
நிழலி லுலர்த்தி வைத்திருந்து
மூத்த கோவின் சுழியுறவே
முனிந்தே யுருட்டிக் கொண்டிதனை
நீற்ற தனப்பால் தேன்நெய்யில்
எழுதத் திமிரம் நீங்கிடுமே 311

## குழம்பு

ஆவின்பா லுரியிந் துப்பு
அரைப்பல மதனுள் ளிட்டு
மேவியே சிவக்கக் காய்ச்சி
மேலிடு மருந்து கேளாய்
தாவுவெண் கலத்தின் சார்வு
தலைமண்டை துருசுதுத் தஞ்சங்கு
நீவிரைந் தொருகழஞ்சு
நிகழ்த்துமா வெண்ணெய் கூட்டே. 312

கூட்டி யரைத்துப் பணவெடைநீ
கொண்டே பத்து நாளெழுத
ஆட்டுந் திமிரம் படலமுடன்
அனேகம் வியாதி தீருமெனக்
கேட்டுச் செய்யும் முனியுரைத்த
கிரிகைப் படியே செய்வீரால்
நாட்டந் துலங்கு மாயுர்வேதம்
நன்றாய் நவிலுங் கிரிகையிதே. 313

## 9. கருவிழியில் சுக்கிரன் ஐந்தின் பெயர்

அள்ளிலை நெடுவேற் கண்ணாய் சுக்கிர னைந்திற் குங்கேள்
ஒள்ளிய மணியின் மீதே உறைவது விரண சுக்கிரன்
தெள்விழி சுற்றித் தோன்றித் தினந்தின முறுத்து மென்மேல்
உள்ளது கண்டால் நண்டுக்கண் சுக்கிர னென்ன லாமே. 314

### விரணசுக்கிரன்

வகுத்திடவே விரணசுக்கிரன் குணத்தைக் கேளீர்
வாகாக மழைபோலக் குளிர்ச்சி தோன்றும்
தொகுத்திடவே கூச்சமுட னொளிவு குன்றும்
தொலை தூரம் பார்வையது வெருட்டிக் காட்டும்
பிசுத்த லுட னிருவிழியுஞ் சுருக்கிக் கொள்ளும்
பிரியாது குத்தலுடன் சோரிக் கட்டாம்
மிகுத்துமே பிடரிவலி யதிகங் காணும்
மீளாதென் றாயெனக்கு விரித்திட் டானே. 315

### விழிவிழுங்கிச் சுக்கிரன்

ஓதிய கருவிழிக் கீழே வரியிடை யொள்ளி தாக
மோதுவெள் ளெழுச்சி போல விழிதெரியாது மூடும்
வேதனை மிகுதி யாக வெரித்திடு மிடியு மாறா
தீதினை விழிவி ழுங்கிச் சுக்கிர னென்ன லாமே. 316
மூடுமே விழிவிழுங்கிக் குணத்தைக் கேளு
முகந்தனிலே வேர்வையது கசிவு முண்டாம்
சாடுமே காலைமுதல் பிடரி நோவாம்
சண்ணுமே யிடிபோலே குத்த லாகி
நீடுவிழி தசைவளர்ந்து நெருங்கி மூடும்
நிலையாக நாட்செல்ல ரோமத் தாழ்வாம்
பாடுகிறேன் யூகிமுனி சிகிச்சா சாரம்
பாலித்தார் மாந்தர்க்குப் பான்மை யாமே. 317

### வெளுத்த சுக்கிரன்

நடுவிழி பக்கத் தின்மேல்
நனிபனித் துளிபோ லுந்தி
சுடுமணல் போலக் காந்தித்
தோன்றிடு மெழுச்சி போலும்
கட லுறு சோகி போலும்
கருவிழி மறைந்த தாகில்
இடர்செய்யும் வியாதி தானே
வெளுத்த சுக்கிரனா மென்றே. 318

### அனல் சுக்கிரன்

பானற் கண்ணி னுள்ளே
பகர்கரு விழியை விட்டுத்
தானமே மேல தாகத்
தழலது போலத் தோன்றும்
ஊனமா யிடியுண் டாகி
உழல்வது போலே காந்தும்
தேனவிழ் குழலாய் கேளாய்
அனல்சுக் கிரனென்று செப்பே 319

செப்பிய ரோக மைந்தின்
செய்குண மறிந்து கொண்டு
தப்புறு அசாத்திய சாத்தியந்
தானது வுரைக்கக் கேளு
ஒப்புறு மணியின் மீதே
உறவெழு விரண சுக்கிரன்
மெய்ப்புறு கருத்த சுக்கிரன்
விழியினை விழுங்கி யாமே 320

ஆகிய வியாதி மூன்றும்
அசாத்திய மென்ன லாகும்
தோகையே வெள்ளைச் சுக்கிரன்
துலங்கனல் சுக்கிர னிரண்டும்
வேகமாய்த் தீருஞ் சாத்திகம்
என்றுதான் விளம்ப லாகும்
தோகையே யிதற்குச் செய்யும்
மருந்தினைச் சொல்லக் கேளே. 321

### சுக்கிரனுக்கு மருந்து (பொது)
### சுக்கிரனுக்குத் தாரை நெய்

நறுநெய் யுழக்கு அதிமதுரம்
நல்ல சந்தனத் தாரமுடன்
உறுவெட் பூலா வேருடனே
ஓதுந் திரிபலை யிந்துப்பு
நறுவெள் ளாட்டுச் செவியிரத்தம்
நத்தைப் பூச்சி சிப்பிவெள்ளம்
பெறுநற் சீரக மபின்கூட்டிப்
பேணி வெந்து தானொழுக்கே 322

### இதற்குப் பிறவடை

சீனக் கார மதைநன்றாய்த்
திரளப் பொரித்து முக்கூறு
மானே நற்சீ ரகமபினும்
அதனிற் பாதி வடிகாவி
தாதை தளவொன் றாய்நுணுக்கித்
தாயாம் மாதர் முலைப்பாலில்
மானே யழுத்தித் தானொழுக்க
வருத்து மிடிகள் மாய்ந் திடுமே, 323

### இளநீர் எண்ணெய்

இளநீர்ப் பாலும் நன்னாரி எலுமிச் சம்மது ரம்கந்தம்
வளமாம் நெய்தல் நல்லெண்ணெய் மருவும் நற்பத மாய்க்காய்ச்சி
மளையுங் கண்ணில் வார்த்திடில் வந்த சுக்கிர னோடிவிடும்
தெளியுங் கண்ணோய்தொண் ணூற்றாறும் செய்ய யிளநீர்
எண்ணெய்யிதே

### சொர்ணாதிக் குளிகை

கனகங் கழஞ்சு வங்க மிருகழஞ்சு
பீத ரோணி முக்கழஞ்சு
இனிய துத்தம் நாற்கழஞ்சு
இலங்கு துருசு ஐங்கழஞ்சு
முனியுஞ் சீன மறுகழஞ்சு
மோரிதழ் மூல மெழுகழஞ்சு
நனிய பன்றிக் கோடெட்டு
கரியின் பல்லு நாலஞ்சே. 325

கலையின் கொம்பு பதின்கழஞ்சு
கடலாமைத் தோடு பதினொன்று
நலமா மதுரம் பன்னிரண்டு
நவிலுந் தாரம் பதிமூன்று
குலவுஞ் சேவல் நெஞ்செலும்பு
கூட்டே யிரட்டிப் பதினாலு
முதலைப் பல்லு பதினைந்து
முதிர சோகி பதினாறெடை கூட்டே. 326

கூட்டி யரைத்துச் சம்பீரச்
சாற்றி லேழு நாளரைத்து
நாட்டு மிளநீரேழரைத்து
நற்கொடுப் பையிலேழ் நாளரைத்து
நீட்டி யொன்றா யரைத்துருட்டி
நேரிழை முலைப்பால் தனிலெழுத
வாட்ட முறுஞ்சுக் கிரப்படல
மயங்கா தேநீ மாறிடுமே. 327

### பச்சைக் கற்பூராதிப் பொடி

பச்சைக் கற்பூரம் பீதரோணி
பகருந் துத்தம் மனோசிலையும்
நச்சிடு மதுர மிந்துப்பு
நாகமொடு சோகி பீங்கான்
துச்சிடுங் கோழி முட்டைத்
தோடுகாக் கணத்தின் மூலம்
மெச்சுசார டைவேர் சீதைவேர்
ஓரிதழின் மூலங் கூட்டே 328

சிறுகீரை வேர்வகை யொன்று
சேர்முக் கழஞ்சு கூட்டி
உறுமெலு மிச்சஞ்சாற் றிலரைத்
துருண்டை யோட்டின் மீதே
மறுபடிவைத் தெரித்துப் பொடி
செய்து மானே கேளாய்
தறுகனல் போலெ ழுந்த
சுக்கிரன் நீங்கிப் போமே. 329

### இரட்சை

விரணமே நில்லா தாகில்
மெய்யிது வறியச் சொன்னோம்
அரியதோர் பொய்க்கண் மீது
அணிநுதல் நரம்பின் மீதும்
குறியுற ரட்சை கொண்டு
குறித்து முன்சொல் மருந்து
நெறியுடன் செய்யும் போது
சுக்கிரன் நீங்கிப் போமே. 330

நெய்

சிறுகீரை வேர்மதுரம் செஞ்சந் தனம்நெய்தல்
உறுக்கீரை வேணந் தாமரை வளையம்
நறுக்கிநீர் நெய்பாலுஞ் சமன்கரைத்து நேகவெந் தாறியபின்
சுருக்காகக் கண்ணிலிட சுக்கிரனும் போய்விடுமே. 331

(வேறு)

குருட்டுச் சுக்கிரனுக்கு நெய்

பாரில் மேவி எரில்நிரொரு பழுமு ருங்கையி னாமல்நீர்
சீரில் வாழு முலைப்பாலும் நெய்தலின் சிறந்த தாளிமலர்நீர்
மாறில் லாத தோர்மதுரம் சிரகம் மஞ்சள் சந்தனம் ஏலமுங்
கூற வந்த கண்ணிலிட குருட்டுச் சுக்கிரன் தீருமே. 332

(வேறு)

உரிக்கீர்வெண் டாமரையின் உள்வளையந் தனைக்கொண்டு
நருச்கீர்பின் நெய்யாலும் சர்க்கரையும் நேகவெந்து
சுருக்காய்க்கை யாந்தகரை சுந்தரியே கண்ணிலிடப்
பொருக்காகச் சுக்கிரனும் போய்விடும் போய்விடுமே. 333

(வேறு)

வரட்பூலா, அந்திமல்லிகை, ஓரிலைத்தாமரை, நந்தியா வட்டம் இவைகளின் பூக்கள், துத்தம், துருசு, ஆமையோடு, வெந்த தலையோடு, பலகறை இவைகளை ஒரு நிறையாகப் பனை மட்டைச் சாற்றில் அரைத்துக் கயிறு செய்து, மேற்படி சாற்றி லுரைத்து விழியிற் தீட்டி வரத் தீரும். 334

(வேறு)

தலையோடு 1 கழஞ்சு, துத்தம் 2 கழஞ்சு, இந்துப்பு 1 கழஞ்சு இவைகளைப் பனைமட்டைச் சாற்றிலரைத்துக் கயறு செய்து, மேற்படி சாற்றிலுரைத்துக் கண்ணிலிட நீங்கும். 335

விரண சுக்கிரனுக்கு

ஆணாவேர், முசுமுசுக்கை வேர், சிறுகீரைவேர், பொன்னாங் காணி வேர், வெள்ளைக்காக்கணான்வேர், தன்னிலொக்கக் கூட்டி பாலில் அவித்து வைத்து, துத்தம், துருசு, கற்பூரம் தன்னிலொக்கக் கூட்டி, முலைப்பால் வார்த்து, அரைத்து, உருண்டை பண்ணி, கண்ணோவுக்கு முலைப்பாலிலிடவும். விரண சுக்கிரனுக்குக் காடியிலிடவும். நான்கு நாட்களுக்கொரு முறை முழுகப் பண்ணவும். கண்ணுக்கு மருந்திடவும். 336

(வேறு)

சிப்பிச் சதையும், அதிமதுரம், கொடுப்பை வேர், ஆவாரை வேர், அரைத்து நெய்யிற் கலந்து வேக வைத்து வடித்து, கண்ணுக் கிடத் தீரும். 337

(வேறு)

உப்பிலியிலை, முருக்கு முள்ளிலை, கரிசலாங் கண்ணியிலை, சாறுவளையிலை, சங்கிலை இவைத் தனித்தனியே சீலையி லூட்டித் திரியாகத் திரித்து, நல்லெண்ணெய்யில் விளக்கேற்றி, கரிசலாங் கண்ணிச்சாறு மை பற்றி வைத்து, மையும் வெண் ணெய்யும் கூட்டி, கலத்தொடு கலம் சாரித்து, கண்ணிலிட 10 விரணமுந் தீரும். 338

(வேறு)

கபாலம் 7, துத்தம் 1, செம்பரப் பொடி 2, வெண்கலச் சதாவல் 2, இந்துப்பு $\frac{1}{4}$, ஒரிதழ்த் தாமரை 2, நிலக்குமிழ் வேர் 2, பனைமட்டைச் சாறு வார்த்தரைத்து உருண்டை பண்ணி நிழலிலுலர்த்தி விரண சக்கிரனுக்குக் காடியிலிட, கண்ணோவுக்கு முலைப்பாலிலிட, ஆணிப்பூ, முளைப்பூ எல்லாம் விரைந்து போம்.

(வேறு)

கணவாயோடு, துத்தம், துருசு ஒரு நிறையாய் குப்பை மேனிச் சாற்றிலரைத்துக் கயிறு செய்து தேனில் உரைத்துப் போடத் தீரும். 340

## 10. கருவிழியில் தோன்றும் பூ மூன்றின் குணம்

பூவையே பூமூன் றுக்கும்
பேர்தனைப் புகலக் கேளாய்
தாவும்வை சூரி யாலும்
தழலெழு வியாதி யாலும்
மேவிய நீரி னாலும்
விழியிடை மூன்று ரோகம்
காவியே யாணி யுந்தல்
குழம்பு புகைப்பூ மூன்றே 341
மூன்றிலே யாணி யுந்தல்
அசாத்திய மென்பர் முன்னோர்
ஊன்அறுவெண் புகைப்பூ வொன்றும்
ஒழியுமென் றுணர்ந்து கேளீர்

கான்றிடு பூமுன் றுக்குங்
கருதிய குணத்தைக் கண்டு
சான்றிடு மருந்து தன்னைச்
சாற்றக்கேள் தகைவில் மானே. 342

### ஆணிப்பூவின் குணம்

அன்னமே ஆணிப்பூக் குணத்தைக் கேளும்
அரிப்புடனே கண்வீங்கி யதப்பு மாகும்
வின்னமாய் நடுவிழியில் வேஃரே யூன்றி
விகற்பமுடன் சவ்வுபோல் முளையுண் டாகி
நன்னயன யாணிமலர் போல்கு விந்து
நாளுக்குநாள் கரடுகட்டி தடிப்பு போலாம்
என்னவித சிகிச்சையது செய்திட் டாலும்
ஏங்காது யூகிமுனி எடுத்த வாறே. 343

மாழ்கியதோர் ஆணிப்பூ குணத்தைக் கேளும்
மார்க்கமுடன் கண்சிவந்து மறையச் செய்யும்
ஊழ்வினையால் வந்ததொரு ரோக மாச்சு
உடல்தளர்ந்து மெய்வெளுத்து ரோமம் கெட்டு
ஆழ்கியே அண்டமது கனலே யாகி
அதிர்ந்துதலை வலியுடனே ஆணிப் பூவாம்
மூழ்கியே சதாகால மரிந்திட் டாலும்
முடியாது யூகிமுனி முயன்ற வாறே. 344

### ஆணிப்பூவிற்கு மருந்து

என்னவே ஆணிப்பூ மாற வேண்டி
இயம்புகிறேன் [1]கலைக்கொம்பு ருத்தி ராவும்
பன்னவே வெள்ளைச்சா ரணையின் வேரும்
பரிவான [2]தேசிப்பல் லானைத் தந்தம்
நன்னவே சேவலுட நெஞ்செலும்பு
நவில்சருகை வெள்ளியொடு புலிந கந்தான்
அன்னவே மேனிவேர் சமனாகக் கொண்டு
சொல்லாவி னீரதனிலே யூறப் போடே

1. கலைக் கொம்பு—மான் கொம்பு
2. தேசிப்பல்—குதிரைப்பல்

ஊறவே மூன்றுநா ளான பின்பு
உகைமையுடன் கல்வத்தி லிட்டு மைந்தா
கூறவே முலைப்பா லாலாட்டிப் பின்பு
குணமாகக் கயிறுசெய்து நிழலிலு லர்த்தி
வீறவே ஆணிப்பூக் குந்தந் தானு
மிகவாகக் கரைந்துவிடச் சொல்லக் கேளு
[1]தேறலின்தன் பால்விடவே கரைந்து போகுந்
தேசிகனே கைகண்ட வித்தை பாரே

(வேறு)

துத்தம் தேற்றாம் பலகறையும் தொடு கரும்புசாறு தலையோடு
மெத்தச் சீலை திப்பிலியும் மேவுஞ் சேவகன் நெஞ்செலும்பு
மற்றக் கழஞ்சவை யோரொன்று மறையெலு மிச்சம் பழச்சாற்றில்
சுற்ற யுண்டை கண்ணிலிடிற் தோற்கு மாணிப் பூப்போமே. 347

(வேறு)

துத்தமுட னுப்பிலிக் கொடியோ டொக்கத்
துருசுவகை சமனாக நிறுத்து வைத்துச்
சுத்தாவின் வெண்ணெய்சமன் கூட்டி மைபோல்
தோணவரைத் தேசிமிழி லடைத்து வைத்துப்
பத்தியுடன் பயறளவு கண்ணில் போடப்
பலமான கண்ணாணி பூவுந் தீரும்
முத்திபெற்ற தென்பொதிகை மலையில் வாழும்
முனியுரைத்தா ரஞ்சனத்தின் முறைமை தானே. 348

(வேறு)

பீதரோ கணியுஞ் சுக்கும் பொருந்திய தலையி னோடும்
நேதமோ ரிதழின் வேரும் நிரையது மூன்ற தாகத்
தூதனுந் துருசு பச்சை வளையலுஞ் சொல்ரெண் டாக
வேதமாம் வராகக் கொம்பு வெள்ளைகாக் கணத்தின் வேரே 349

இதுதனைக் கொண்டு கூட்டி ஏற்றதோர் தனப்பால் வார்த்து
கதிபெற வரைத்துச் சாமங் கயிறதாய்ப் பிடித்து லர்த்தித்
துதிபெறுங் கண்ணிற் தோடந் தொண்ணூற் றாறுக்கு மாகும்
மதிசெயு மனுபா னத்தில் வைக்கக்கண் ணாணி போமே 350

1. தேறல்—தேன்

(வேறு)

அடல்மிகு கடுக்காய் துருசு துத்தம்
ஆன மனோசிலை அரிதாரம்
பொடியது திப்பிலி செம்புத்தகடு
போத வெலுமிச்சஞ் சாற்றரைத்துத்
திடமுடன் குளிகை முலைப்பாலிற்
தெளிவிட ஆணிப் பூப்போமே. 351

(வேறு)

முத்து, வெள்ளி, தாமிரம், சங்கு, துருசு, துத்தம், வெண்கலம் தலையோடு, பொன், பீதரோகணி, புங்க விதை, இவை ஒரு நிறையாய் எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்துக் கயிறு செய்து முலைப் பாலிலாவது, நந்தியா வட்டப் பூச்சாற்றிலாவது உரைத்துக் கண்ணில் தீட்டி இதனடியில் சொல்லிய தைலத்தில் மூழ்கிவர நீங்கும். 352

(தைலம்)

பொன்னாங்காணி, சீறுகீரை, சிந்திற்கொடி, எலுமிச்சம்பழம் நாரத்தம் பழம் இவைகளின் சாறும், நல்லெண்ணெய், வகைக்கு 1 படி, முத்தக்காசு, கோட்டம், அதிமதுரம், ஏலம், சண்பகப்பூ சிறுநாகப்பூ, இலவங்கம், வகைக்கு ¼பலம் வீதமரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவர நீங்கும். 353

(வேறு)

தலை மயிர் சுட்டது, துத்தம் சரிகூட்டி சங்கிலை, புளியிலை இவைகளைப் பசுவின் பால் வார்த்தரைத்து வெண்ணெய்யிற் குழப்பி, கண்ணிலிட ஆணிப்பூ, நீர்முட்டு, தினவு தீரும். 354

(வேறு)

எலி வலது பல்லும் உப்புமாகத் தேய்த்துக் கண்ணில் எழுத ஆணிப்பூ மாறும். 355

(வேறு)

குப்பை மேனியிலையைப் பறித்து சட்டியிலிட்டுக் கறுக்கிப் பொடி செய்து சிற்றாமணக் கெண்ணெய்யில் குழப்பிக் கண்ணி லிடப் பூ மாறும். 356

(வேறு)

ஊறுகிற நத்தையைப் பிடித்து வந்து கல்லைப் பொடி செய்து நத்தையிற் போடத் தண்ணீர் ஊறும். அந்த நீரைக் கண்ணி லிடப் பூவுந் தீரும். தண்ணீர் வடிவதும் நிற்கும். 357

(வேறு)

கிராம்பு, மலாக்காய்ச் சந்தனம், நற்சீரகம், திப்பிலி, ஓரிலைத் தாமரை, கீழ்க்காய் நெல்லி, பொன்னாங்காணி, பசுவின்நெய், வெண்ணெய் இவையெல்லாம் அரைத்துப் பொடித்து வெண் ணெய்யும் நெய்யும் கூட்டி ஒன்றாய்க் கலந்து கொதிக்கும் பருவத் தில் ஒரு சிப்பி மாமிசத்தை அதிற் போட்டு அது பருவ மாகையிலே மாமிசம் வெடிக்கும். அந்தப் பருவத்திலிறக்கிப் பூவுக்குப் போட நீங்கும். 358

(வேறு)

மிளகைக் கொடிக்கள்ளிப் பாலில் நனையப் போட்டுலர்த்தி வெள்ளாட்டுப் பிச்சில் உரைத்துப் பூசத் தீரும். 359

(வேறு)

முருங்கை விதையை உரைத்துக் கண்ணிலிட பூ மாறும். 360

(வேறு)

ஆனைப் பல்லைத் தண்ணீரில் உரைத்துக் கண்ணிலிட மாறும் 361

**தாம்பிராதி குளிகை**

தந்தியி னெயிறு தன்னை
    இடித்தே பொடித்துத் தானதிலே
நந்தஞ் சேரும் புளியாரை
    யதனைக் கூட்டி யரைத்துவட்டாய்
முந்த மறையோர் மொழிந்தபடி
    முழுது மோர்மண் டலங்கிடந்தால்
கந்தம் சேரும் குழலாளே
    கருதி யரைக்கும் படிகாணே 362

காணீர் துத்தங் கழஞ்சுடனே
    கனகஞ் செம்பின் பொடிகழஞ்சு
ஊணி யரைத்துக் குளிகைசெய்து
    ஒளிருஞ் சம்பழச் சாற்றில்

பேணி யரைத்து விழியெழுதப்
பெருகும் விரண சுக்கிரனும்
ஆணிப் பூவுமதி லுண்டான
மாய ரோக மாடாதே 363

### பச்சை யுருண்டை

சங்கு தலையோ டோரிதழாந்
தாம ரையோ டுமூலம்
திங்கள் போன்ற நீற்றுக்கல்
சிறந்த சோகி கமடனெம்பு
பொங்கு துத்தங் கழஞ்சுடனே
பொரியுந் துருசோ டறுகழஞ்சு
தங்குஞ் சம்பீ ரப்பழத்தின்
சாற்றில ரைத்து குளிகைசெய்யே 364

குளிகை திரட்டும்படி யேதென்னில்
குக்குட அண்டத்தின் சலம்வாங்கி
நெளிய வரைத்து உருண்டை தனை
நீளா தளவு குறுகாமல்
சுழியா யிருக்கப் பிறபிறகுந்
தோகை யனையார் முலைப்பாலில்
விழியே யெழுத நயனமதில்
வேகந் திரும் பூப்படலம்
கருதுங் காசம் புகைச்சலெல்லாம்
காணா தோடிப் போய்விடுமே. 365

### சந்தனாதி யுருண்டை

நல்லசந்த மகில்செஞ் சந்தம்
நவிலுமதி மதுரந் தாரங்கிராம்பு
வல்லதோ ரிதழின் மூலம்
வளர்பிச்சி யரும்பு கோட்டம்
பல்பச் சிலையும் பீதரோகணி
பகருஞ் சீனக்கா ரந்துத்தம்
வெல்லும் புனுகுகோ ரோசனையு
மேலாமுத் தக்காசு தேற்றான். 366

தாவுகோ லரக்கு லிங்கம்
சாத்திர வேதி பச்சை
மேவுமிந் துப்பி னோடு
இவைமருந் திருபத் தொன்றும்

தாவுமோ ரிருக ழஞ்சு
சானகி முலைப்பால் பன்னீர்
சேவிள நீரும் வார்த்தரைத்
துருண்டைசெய் திடப்பூப் போமே. 367

(வேறு)

பச்சிலை செம்புப் பொடியுடனே
பசுவின் பல்லுங் கழுதைப்பல்
அச்ச மறவெய் தினெலும்பும்
அடுத்த கோழிமுட் டைக்கோது
மெச்சு மதுவின் மயிர்ச்சாம்பல்
மேவு மிரும்பின் பொடியுடனே
வைச்ச சங்கு வாரினுரை
வகைசேர் வெள்ளை யாட்டுமொத்தை 368

மொத்தை மூத்திரம் வார்த்தரைத்து
முன்ன உருண்டை தான்செய்து
மெத்துந் தேனி விடுவீராய்
விழியிற் குருகும் பூத்திரும்
வைத்த மருந்து தவிராதே
மாறுங் கண்டாய் மடமயிலே
அத்தா தன்மேலானைசொன்னோம்
ஆறு முகவர தன்னாணை. 369

(வேறு)

வாய்விளங்கம் போலாலம் பாலெ டுத்து
வரைக்கடுகு போற்சேரு பச்சைப் பூரம்
ஞாயமுற மத்தித்து விழிதனில் ஐந்து
நாள்போடப் போமிரண்டு மாதப் பூவும்
மாய்ந்திடும் பாலப்பிர காசம் உறைக்கில்
மகாகுணமாம் விழிநோய்க ளகன்று போகும்
ஈய்ந்துலகில் வைத்தியர்கள் பிழைக்க வேண்டி
இப்புவியில் மலைமுனிவர் யியம்பி னாரே. 370

(வேறு)

துத்தம் பலகறை தேற்றான்கொட்டை
தொடுக்கும் புருடர் தலையோடு
மத்துமனோ சிலை மிளகு திப்பிலி
மேவுஞ் சேவல் நெஞ்செலும்பு

மெத்தக் கழஞ்சரை யொன்றொன்று
விரைந்தெலு மிச்சப்பழச் சாறதனாற்
சுத்தமாக வுரைத்திடுவீர் காடியிற்
தொடுக்கு மாணிப் பூவீழ்ந்தே. 371

(வேறு)

அடப்பம்விதை தண்ணீர் அதனா லெழுத
மடந்தையே கண்பூவை மாற்றும்—சடக்கெனவே
புண்மேல் கொழுப்புகளும் போமேகண் ணீர்விழுதல்
மண்மேல் மொழிந்தார் மகிழ்ந்து. 372

(வேறு)

சீமைசவுக் காரமுடன் சேரவே கல்லுப்பும்
வேமைபழச் சாறுவிட்டு வெண்கலத்தில்—போமிழைத்துக்
கண்ணிவிடப் பூமுதலாய்க் கனத்த சதையுளதும்
விண்ணதனி லோடும் விரைந்து. 373

(வேறு)

பிழிமருந்து

நந்தியின் மலரும் முருங்கையின் மலரும்
நெருஞ்சியின் மலருநீர் முள்ளியும்
விந்தைசேர் சிங்க பாணமா மலரும்
விதனமுட னறுக்கியோர் கிழிசெய்
சிந்தையால் விழியில் வந்ததோர் பூவில்
செலுத்தியே நீவிடி லன்றே
முந்தித்தீ வினையால் வந்தபூக் கரைந்து
விழிசந்திர னொளியதாய் விடுமே. 374

(வேறு)

அலைக்குத் தலையோடு தான்கழஞ்சும்
அதன்நேர் பீத ரோகணியும்
வலைக்குந் துத்தம் சங்கிலையும்
மண்ணும் வெங்கலச் சார்வுடனே
அலைக்கு மோரொன் றிருகழஞ்சு
இன்னஞ் சொல்வேன் வெட்பூலாத்
திலைக்கு மோரிதழ்த் தாமரைவேர்ச்
சேர நாக்கனஞ் சேரொன்று

புலைக்கும் புளியிலைச் சாற்றதனாற்
போத வரைத்துப் பொலிந்த வுண்டை
மலைக்குந் தலைக்கு மைவிழியீர்
மன்னு மதனம்பே ரின்னங்கேள்
இலைக்கு மாரியா டும்பெருமா
ளென்னக் கொடியே யிடுமினக்கே. 375

(வேறு)

கூனன் முதுகுங் கூழ்ங்கைய்யன் வெள்ளுகிரும்
ஏனத்தின் கொம்பு மிராவறிவான் நெஞ்செலும்பு
மானத்தின் மீனும்வழிப் போவான் வெள்ளெலும்புங்
கானக் குறத்தி முலைப்பாலுங் கண்ணில் பூவும் காந்திடுமே. 376

(வேறு)

கல்லின் நன்மை முருங்கைப்பூ வாவது
கனத்த மாதுளம் பூரச மாவதில்
நெல்லிற் பாதி யுரைத்துக்கண் பூவினில்
நேர தாயிடக் காலையு மாலையும்
வெல்லு மேயொரு வார மதனிலே
விளைந்த பூவும் படலமுந் தன்னுடன்
வல்ல மாம்பொதி வாழுமகத்தியர்
வரிசை பெற்ற முறையோதி னாரே. 377

(வேறு)

அம்மையில் பூ விழுந்து முளைப்புறப்பட்டால் துத்தியிலை, அவித்து, முலைப்பால் சேர்த்து, சீலை முடிந்து. முலைப்பாலிற் தோய்த்து ஒரு துளி விடவும். முளை கரையும். 378

(வேறு)

கருணை நற்தண்டு நீரைக் கடுகியே பஞ்சி லூட்டிச்
சிறுகிய யிமையின் மேலேத் தீதறப் போட்டு வாங்கக்
குறுகிடும் பகைவர் போலக் கருத்திடு விழியிற் பூவும்
அறுமுக நாதர் பாதம் அருளினோ மாது நல்லாய் 379

(வேறு)

துத்தம். துருசு இவை குப்பை மேனிச்சாறு விட்டரைத்து உருண்டை பண்ணி முலைப் பாலிலுரைத்துக் கண்ணிலிடவும். ஆறு மாதத்துப் பூவும் மாறும். 380

(வேறு)

வெட்பூலாவேரும், பூவும், மல்லிகை வேரும் பூவும் ஓரிதழ்த் தாமரை வேரும் பூவும், நந்தியா வட்டப் பூவும் வேரும், துத்தம், துருசு, ஆமை ஓடு, வெந்ததலையோடு, பலகறை இவை சமன் கூட்டிப் பனை மட்டைச் சாறுவிட்டரைத்து உருண்டை செய்து உரைத்துக் கண்ணிலிட பூகரையும். கை கண்டது. 381

(வேறு)

சங்கு, ஆமைஓடு, துத்தம், துருசு, பீதரோகணி, இவை ஐந்தும் எலுமிச்சம் பழச்சாறு வார்த்தரைத்துக் கயிறு பண்ணி முலைப் பாலில் உரைத்துக் கண்ணிலிடவும். 382

(வேறு)

சீனக்காரம் தட்டி ஒன்பது சிலவுகளில் பீங்காணிற் போட்டு எலுமிச்சம் பழச்சாறு பிழிந்து கரைய வைத்துச் சற்றுக் கற்பூரமும் முலைப்பாலும் கூட்டிக் கண்ணில் விடப் பூ கரையும். 383

(வேறு

சங்கு, சமுத்திரத்து எலும்பு இவை யிரண்டும் சரி கூட்டி சரி நீரிலரைத்து குளிகை பண்ணி அனுபானம் சிறுநீரிலுரைத்துக் கண்ணிலிடவும். பூதீரும். 384

(வேறு)

கொட்டைப் பாசிலை,1பலம், துத்தம், துருசு, இவை வகைக்கு 1 குன்றி கூட்டி. சிறுநீரிலரைத்து, மாத்திரை செய்து, சிறுநீரில் உரைத்துக் கண்ணிலிட பதினாறு வருடம் சென்ற கண் பூவும் திரும். 385

(வேறு)

வேப்பன் விதையைத் தேனிலுரைத்துப் போட்டு வரத் திரும். 386

(வேறு)

பழந்தின்னும் வௌவால் புழுக்கையை எலுமிச்சம் பழச் சாறும், முலைப்பாலும் சரிகூட்டி, அதில் உரைத்து, நெல் எடை கண்ணிலிடத் திரும், 387

(வேறு)

குதிரைக் குளம்பைத் தேனில் உரைத்து எள் எடை கண்ணி விடக் கண்பூத் தீரும். 388

முசுமுசுக்கை இலையைக் காய்ச்சிக் கண்ணிற் பிழிய, பூவும் முளையும் போம். 389

(வேறு)

புள்ளிமான் கொம்பும் உப்பும் உரைத்துக் கண்ணிலே யிடப் பூ மாறும். 390

(வேறு)

கரிசலாங்கண்ணிச் சாற்றில் ஆணாவேர் அரைத்துக் கண்ணி லிடப் பூ மாறும். 391

(வேறு)

பேய்ச்சுரைவேர், பெருங்காயமும் கூட்டித் தேனிலிட ஆணிப்பூ பறியும். 392

(வேறு)

சிறுபூளை வேர் முலைப்பாலில் உரைத்திட ஆணிப்பூ பறிந்து போம். 393

(வேறு)

முதலைப் பல்லை எலுமிச்சம் பழச்சாறு விட்டு உரைத்துக் கண்ணிலிட பூ நீங்கும்.

(வேறு)

எலியாலம் பாலும் துருசும் முலைப்பாலிலே உரைத்து கண்ணில் விட பூ மாறும். 395

(வேறு)

வெள்ளைக் காக்கணம் வேரை நெய்யில் உரைத்துக் கண்ணி லிட பூ மாறும். 396

(வேறு)

துத்தம், துருசு, படிகாரம் இவை சமன் கூட்டி சிறுக உடைத்துக் கரண்டியிற் போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டுக் காய்ச்சி. இப்படி 5 முறைக் காய்ச்சி, ஒரு முறைக் காய்ச்சி உலர்த் திப் போட்டு, பின்பு எடுத்து, செம்பு கொண்டு தேய்த்து, இதைச் சிமிழில் அடைத்து வைத்துக் கொண்டு, படலம், பாழான கண்ணில் விடப் பூ பறியும். 397

(வேறு)

பருத்திவிதைப்பருப்பு, மரமஞ்சள், திரிபலா, இவை ஒரு நிறையாய் மைபோற் பொடித்து நேத்திரத்திலிட்டு, நந்தியா வட்டச்சாறு, சிப்பிநீர், பனைமட்டைச்சாறு, முருங்கைப்பூச் சாறு, முலைப்பால், ஆவின் நெய், வகைக்கு ¼படி வீதம் கலந்து, அகில், சந்தனம், மரமஞ்சள், பனங்குருத்து வகைக்கு ¼ கழஞ்சு, அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து நேத்திரத்தில் விட்டுத் தலையிற் காலையில் தேய்த்து மாலையில் முழுகப்பூ நீங்கும். 398

(வேறு)

அதிமதுரம், வெந்த மண்டையோடு, ஓரிதழ் தாமரை வேர், துத்தம், குதிரைப்பல், வெட்பூலா வேர்பட்டை இவை வகைக்குச் சமனெடை எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து, புளித்த தேன் வார்த்தரைத்துத் துணியில் வடிக்கட்டி வைத்து நெல் எடை கண்ணிலிடம் பூ தீரும். 399

(வேறு)

துத்தம், துருசு இவை வகைக்கு நெல் எடை இரண்டையும் பொரித்துக் கலத்தூறில் வைத்து, குப்பை மேனிச் சாறு ஒரு துளி விட்டு. அதனுடன் நெல்லிக்காயளவு பசு வெண்ணெய் கூட்டிச் செப்புப் பாத்திரத்தாலரைத்துச் சிமிழில் வைத்துக் கொண்டு, கடுகளவு கண்ணிலிடவும் 400

கொட்டைப் பாசியிலை, துத்தம், துருசு, இவற்றை சிறு நீரிலரைத்து உருட்டி, நிழலிலுலர்த்திக் கொண்டு, பிறகு சிறுநீரிலே யிழைத்துக் கண்களிலிட, ஓராண்டுக்குட்பட்ட 'பூ' தீரும். புதிய பூவானால் வேப்பம்பட்டைச் சாற்றிலாவது தேனிலாவது இழைத்துக் கண்களிலிடத் தீரும். 401

சங்கு அல்லது வெண்சோகியைப் பசுவின் பாலிலரைத்து உருட்டி உலர்த்தவும், சிறிது வெண்ணெயில் இழைத்துக் கண்ணி விடப் பூ தீரும் 402

மிளகு, படிகாரம், மனோசிலை, அதிமதுரம், தாளகம், சங்கு, இந்துப்பு இவைகளைச் சரி எடையாகக் கொண்டு, கல்வத்தி விட்டுத்தண்ணீர் விட்டரைத்து உருட்டி, நிழலிலுலர்த்தவும் பிறகு இதை முலைப்பாலில் இழைத்துக் கண்களிலிடப் பூ தீரும். 403

## 5. வெள்ளைவிழி நோய்களும் மருத்துவமும் (404-432)

கண்ணின் வெள்ளை விழியில் மட்டும் மொத்தம் இருபது நோய்கள் தோன்றுவதாகக் கூறப்படுகின்றன. இவை ஆறு வகைகளாகும். அவை,

1. எழுச்சி, 2. படர்த்தி, 3. நெரிசல், 4. புற்று, 5. குமிழ். 6. வரி இவை ஒவ்வொன்றிலும் காணப்படும் நோய்களாவன:-

1. எழுச்சி—5

1. உந்தலெழுச்சி, 2. விரணயெழுச்சி, 3. அரியெழுச்சி 4. குவையெழுச்சி, 5. நீரெழுச்சி.

2. படர்த்தி—3

1. சதைப் படர்த்தி, 2. வரிப்படர்த்தி. 3. சோரிப்படர்த்தி.

3. நெரிசல்—3

1. துளிநெரிசல், 2. உந்து நெரிசல், 3. விரணநெரிசல்·

4. புற்று—3

1. சதைப்புற்று, 2. நீர்ப்புற்று 3 அழற்புற்று

5. குமிழ்—3

1. மாங்கிசக் குமிழ், 2. நீர்க்குமிழ், 3. இரத்தக்குமிழ்

6. வரி—3

1. நீலவரி, 2, வெள்ளைவரி 3. சோரை வரி,

குறிப்பு:-

நெரிசல், வரி என்னும் பெயர்கள் கொண்ட வகைகள் கருவிழி நோய்களிலும் கூறப்படுகின்றன.

படர்த்தி என்னும் பெயர் கொண்ட வகை குவளை நோய் களிலும் கூறப்படுகின்றன.

இவற்றிற்கான விளக்கங்களையும் மருந்துகளையும் சுருக்க மாகப் பின்வருமாறு காணலாம்.

## 1. வெள்ளை விழி எழுச்சி

வெள்ளை விழியில் தோன்றும் எழுச்சி என்னும் நோய்கள் ஐந்து வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை; 1. உந்தலெழுச்சி, 2. விரண எழுச்சி 3. வரி எழுச்சி 4. குவை எழுச்சி, 5. நீரெழுச்சி.

**எழுச்சி ஐந்தின் குணங்கள் (406—409)**

1. **உந்தலெழுச்சியின் குணம்**

அழலுடன் பருத்திக்காய் போலத் தோன்றும்.

2. **விரண எழுச்சியின் குணம்**

கருங்குன்று போன்று மிக்க அழலைத் தந்து எழும்பும்.

3. **வரி எழுச்சியின் குணம்**

சுணங்கு போல உருண்டு காணும்.

4. **குவை எழுச்சியின் குணம்**

உளுந்து போன்றுக் காணப்படும்

5. **நீரெழுச்சியின் குணம்**

அம்பின் நுனியில் நிற்கும் நீர்த்துளி போலக் காணப்படும்.

இவற்றுள் மருத்துவத்தால் தீரக் கூடியவை மூன்று நோய் களாகும். இவை, 1. வரி எழுச்சி 2. குவை எழுச்சி 3. நீரெழுச்சி.

மற்ற இரு எழுச்சி நோய்களும் தீராதவை. அவை, 1. உந்த லெழுச்சி 2. விரண எழுச்சி என்பனவாம்.

**எழுச்சிக்கு மருந்து**

**மருந்து 1**

திரிகடுகு, தேற்றான் கொட்டை. சீனாக்காரம், துத்தம், இவை ஆறு சரக்குகளையும் ஓரளவாகக் கொண்டு, நுணுக்கி எடுத்து அத்துடன் வெட் பூலாச் சாற்றைக் கலந்து, காய்ச்சி வடித்துக் கொண்டு, கண்ணில் ஒழுக்கு மருந்தாயிடத் தீரும். (410)

**மருந்து 2**

அபினி, இந்துப்பு, சீரகம் இம்மூன்றையும் சம அளவாக எடுத்துப் பசுவின் வெண்ணெயிலிட்டுக் காய்ச்சி வைத்துத் துணியி லிட்டுக் கண்ணில் ஒழுக்கு மருந்தாயிடத் தீரும். (411)

**மருந்து 3**

பழைய காடி நீரில், மூன்றாண்டு சென்ற பழைய புளியைக் கரைத்து, அதிலுள்ள திப்பியைநீக்கி, அத்துடன், அபினி, இந்துப்பு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி, வடித்து ஆறிய பின் கண்ணைச் சுற்றிப் புறவளையமாய் இடத்தீரும். (412)

**மருந்து 4**

பறவையின் காலைப் போலுள்ள கருவியைப் பழுக்கக் காய்ச்சி, அதைப் புருவத்தின் மேல் நன்றாக வைத்தழுத்திச் சூடு இட்டபின் 7 நாட்கள் எண்ணெய் கொண்டு அந்த சூட்டுப் புண்ணை ஆற்றி வரத் தீரும் (413)

**மருந்து 5**

செம்பு, பளிங்கு, துத்தம், துருசு, சிறுகீரை வேர். பொன்னாங் காணி வேர் இவற்றை ஓரளவாகக் கொண்டு எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துருட்டி, உலர்த்தி யெடுத்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடத் தீரும். (414)

## 2: வெள்ளை விழி படர்த்தி

வெள்ளை விழியில் தோன்றும் படர்த்தி என்னும் நோய் மூன்று வகைகளாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவை, 1. சதைப் படர்த்தி 2. வரிப்படர்த்தி 3. சோரிப்படர்த்தி.

**இவற்றின் குணங்கள்**

**1. சதைப்படர்த்தியின் குணம்**

வெள்ளை விழி மெத்தெனத் தடித்துக் காணும்.

**2. வரிப் படர்த்தியின் குணம்**

வலையைப் போல வளைந்து வளைந்து வெள்ளை விழியில் காணும்.

**3 சோரிப் படர்த்தியின் குணம்**

வெள்ளை விழி மிகவும் குழம்பிக் காணும்.

இம் மூன்று நோய்களுள் வரிப் படர்த்தி என்னும் ஒரு நோய் மட்டுமே மருந்தினால் தீரக்கூடியது. மற்ற இரண்டும் தீராதவை.

**படர்த்திக்கு மருந்து**

**மருந்து** 1 (அமிர்த அஞ்சனப் பொடி)

சீந்தில் தண்டு, கடுக்காய்த் தோல். தேற்றன் விதை, காக்கணம் வேர், சிறுகீரைவேர், பொன்னாங்காணிவேர், ஓரிதழ்த் தாமரை வேர்ப்பட்டை, இவற்றை ஓரளவாய்க் கூட்டிப் பழைய காடியால் அரைத்து எடுத்து, அத்துடன் முலைப்பால், துருசு, துத்தம், சீனாக்காரம், அபின், சுண்ணாம்புக்கல், நிமிளை, சோகி, சங்கு, இவை வகைக்கு 3 கழஞ்சு விதம் எடுத்து, எலுமிச்சம் பழச் சாற்றாலரைத்து அடையாக்கிப் புது ஓட்டில் வைத்துலர்த்தித் தழலில் எரித்து நுணுக்கிக் கண்ணிலிட நீங்கும்.

## 3. வெள்ளை விழி நெரிசல்

வெள்ளை விழியில் தோன்றும் நெரிசல் என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை. 1. துளிநெரிசல் 2. உந்தல் நெரிசல், 3. விரண நெரிசல்.

இம் மூன்று நோய்களுமே மருத்துவத்தால் தீரக் கூடியவை என்பர்.

**நெரிசலுக்கு ஒழுக்கு மருந்து**

**மருந்து 1**

இந்துப்பு, திரிகடுகு, துருசு துத்தம் இந்நான்கையும் முறைப் படித் தூளாக்கித் தெளிந்த மணமுள்ள உருக்கிய நெய்யை விட்டரைத்து அதைத் துணியி லூட்டி வெதுப்பிக் கண்ணில் பிழியத் தீரும்.

**மருந்து 2**

சீனாக்காரம் 3 கழஞ்சு, இந்துப்பு ½ கழஞ்சு, துருசு ¼ கழஞ்சு, பச்சைக் கற்பூரம் 1 பண எடை எடுத்துத் தூளாக்கி வைத்துக் கொண்டு வெதுப்பி முலைப்பாலில் கலக்கிக் கண்ணில் விடத் தீரும். (418-419)

## 4. வெள்ளை விழிப் புற்று

வெள்ளை விழியில் தோன்றும் புற்று என்னும் நோய்கள், மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை 1. சதைப்புற்று 2. நீர்ப்புற்று 3. அழல்புற்று

இவற்றுள், சதைப்புற்று நீர்ப்புற்று என்னும் இரண்டு நோய்களும் மருந்தினால் தீரக்கூடியவை அழல் புற்று ஒன்று மட்டும் தீராததாகும்

**இவற்றின் குணங்கள்**

**1. சதைப் புற்றின் குணம்**

இரத்தம் போன்று சிவப்பாகச் சதை வளர்ந்து தடித்து மேலெழும்பிக் காணும்.

**2. நீர்ப்புற்றின் குணம்**

வெள்ளை விழியில் வெண் குமிழிபோல வளர்ந்து நீர் சிந்திக் கொண்டு காணும்.

**3, அழல் புற்றின் குணம்**

வெள்ளை விழியில் பிம்பம்போல வளர்ந்து காணும்.

**புற்றுக்கு மருந்து**

**மருந்து 1**

உமரிச்சாரம், நவச்சாரம், துருசு, எவாச்சாரம், சத்திச்சாரம் ஆகிய ஐந்தையும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கழஞ்சாய் நிறுத்து எடுத்துக் கொண்டு, நுணுக்கி அதை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து அடையாக்கிப் புது ஓட்டில் இட்டு நன்கு வெளுத்திடும் படிப் புடமிடவும். பிறகு அதை வெண்கலத்தில் வைத்துச் சங்கு கொண்டு தூளாக்கி எடுத்து எள் அளவு கண்ணிலிடத்தீரும்

(422-423)

**மருந்து 2**

ஊமத்தம் பூவின் நடுத்தண்டு அளவு பருமனுள்ள, செம்பினால் செய்த கம்பியின் முனை ஒரு உளுந்தளவு உள்ளவாறு அமைத்து, அதைப் புற்று நோய்களின் மீது புதைய வைத்து எடுக்கவும்.

இத்தகைய கருவி 'இயல்மொழி மடங்கல்' என்றும் கூறப் படும். (424)

**மருந்து 3**

சாரடைக் கிழங்கு, இந்துப்பு, துத்தம், துருசு, எலி மருந்து ஆகிய ஐந்தையும் அனலில் தீய்ந்து போகாமல் பக்குவப்படுத்திப் பசுவின் வெண்ணெய் சேர்த்தரைத்துப் புற்று நோயுள்ள கண்ணில் ஒரு தினையளவு வைக்கத் தீரும்.

(425—426)

## 5. வெள்ளை விழிக் குமிழ்

வெள்ளை விழியில் தோன்றும் குமிழ் என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை, 1. நீர்க்குமிழ், 2. இரத்தக் குமிழ் 3. மாங்கிசக் குமிழ்.

இவற்றுள், நீர்க்குமிழ், இரத்தக் குமிழ் என்னும் இரண்டு நோய்களும் மருத்துவத்தால் தீரக் கூடியவை. மாங்கிசக் குமிழ் என்னும் ஒரு நோய் மட்டும் தீராத தாகும்.

**இவற்றின் குணங்கள்**

**1 நீர்க் குமிழின் குணம்**

வெள்ளை விழியில் நீரினால் எழும் கொப்புளம், சங்கம் பழம் போல இருக்கும்.

**2 இரத்தக் குமிழின் குணம்**

வெள்ளை விழியில் இரத்தக் கொப்புளம் செங்குன்றி போல இருக்கும்.

**3 மாங்கிசக் குமிழின் குணம்**

வெள்ளை விழியில் பெருத்தும், கருமையாகவும் கொப்புளம் இருக்கும்.

**மருந்து** 1 (இலபணக் குழம்பு)

இந்துப்பு, துருசு, துத்தம், கடல்நுரை, பீதரோகணி, படிகாரம், பசுவின் வெண்ணெய் இவற்றை வெண்கலக் கல்வத்திலிட்டுச் சங்கால் இழைத்து இடத்தீரும். (429)

## 6. வெள்ளி விழி வரி

வெள்ளை விழியில் தோன்றும் வரி என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை, 1. வெள்ளைவரி 2 நீலவரி 3. இரத்தவரி.

இவற்றுள், வெள்ளைவரி, இரத்தவரி என்னும் இரண்டு நோய்களும் மருத்துவத்தால் தீரக் கூடியவை. நீலவரி என்னும் ஒரு நோய் மட்டும் தீராதது.

**இவற்றின் குணங்கள்**

**1 வெள்ளை வரியின் குணம்**

வெள்ளை விழியில் மீன் முள் போல எழும்பி மேடுமேடாகக் காணும்,

2 நீலவரியின் குணம்

வெள்ளை விழியில் துருசு போன்ற நிறமுடன் எழும்பி மேடு மேடாகக் காணும்.

3 இரத்த வரியின் குணம்

வெள்ளை விழியில் சிவப்பு நிறமுடன் எழும்பி மேடு மேடாகக் காணும்.

மருந்து 1

துருசை எலுமிச்சம் பழச் சாறு விட்டுத் தாமிரப் பாத்திரத்திலரைத்து, அடையாகத் தட்டி உலர்த்தி, புதுச் சட்டியிலிட்டு மேல்மூடி ஒரு சாமம் எரித்து ஆறவிட்டுத் தூள் செய்து, தாமிரச் சிமிழில் வைத்து எள் அளவு எடுத்துக் கண்ணிலிடத் தீரும். (432)

வெள்ளை விழியில் வரும் நோய் இருபதுக்கும் பெயர்

மின்னிய வெள்ளை தன்னில்
மேவுநோ யிருப துக்கும்
முன்னுமோர் குறிகு ணங்கள்
மொழிந்திடு மருந்து ரட்சை
அன்னதின் செய்கை தன்னை
ஆயுரு வேதத் தோடு
பன்னுநற் றமிழால் முன்னோர்
உரைத்ததைப் பரிந்து கேளே 404

சொல்லிய யெழுச்சி யைந்து
துலங்கிய படர்த்தி மூன்று
புல்வரி நெரிசல் மூன்று
புற்றுமூன் றுகுமிழ் மூன்று
நல்வரி மூன்று மாக
நாலைந்து வியாதிப் பேர்கள்
வல்லிநீ யெழுச்சி யைந்தின்
குணந்தனை வகுக்கக் கேளே. 405

1. எழுச்சியின் குணம்

தோன்றிய யெழுச்சி தன்னைச்
சுணங்குபோ லுருட்டிக் காட்டும்
கான்றிய விரண யெழுச்சி
சருங்குன்றி போன்று காட்டும்

ஊன்றிய குவையெ ழுச்சி
உளுந்தது போல வாகும்
ஆன்றநீ ரெழுச்சி தானே
அம்பினிற் துளிபோ லாமே, 406

காதுகண் புருவ நெற்றி கதிக்கவே குத்தி வாங்கித்
தீதுகள் முளைக்குங் கண்ணிற் திரண்டுதான் வெளுப்புங் காட்டும்
மீதுதா னீரும் பாரி மீன்விழி போலத் தோற்றும்
ஏதுதா னிதுகு ணங்கள் எழுச்சியா மென்று சொல்லே 407

ஆகுமுந் தல்லெ ழுச்சி
அழலெழு பருத்திக் காய்போல்
தோகையே யெழுச்சி யைந்தில்
தோன்றுமுத் தெழுச்சி யோடு
வேகமாம் விரணவெ ழுச்சி
இரண்டுமே மீளா தென்ன
நாகமா முனிவன் சொன்ன
நயனத்தின் விதியின் வாறே. 408

ஓங்கிய வரியெ ழுச்சி
ஓடுநீ ராமெ ழுச்சி
வீங்கிய குவையெ ழுச்சி
மூன்றுஞ்சாத் திகமே யாகும்
ஆங்கவிக் குணங்க ளெல்லாம்
அடவிலே யறிந்து கொண்டு
பூங்கொடி யிதற்குச் செய்யும்
மருந்தினைப் புகழ்ந்து கேளே.

எழுச்சிக்கு ஒழுக்கு மருந்து

திரிகடு தேற்றான் கொட்டை
தெளிசீனக் காரந் துத்தம்
நெறியாறு மொக்க வொன்றி
நேர்சம னாய்நு ணுக்கிக்
கரைபெறப் பூலாச் சாற்றிற்
கரைத்துநீ தெளித்துக் காய்ச்சி
மறுபடி விழியொ ழுக்க
மாய்த்துபோ மெழுச்சி நோயே. 410

வெண்ணெயில் அபினிந் துப்பு
மேவுநற் சீரம் மூன்றும்
நண்ணுறக் கூட்டிக் கொண்டு
நற்கொதி சோற்றில் வைத்து
ஒண்ணுறத் துணியி லிட்டு
ஒழுக்கிடாய் தாரை யாகக்
கண்ணிடை யெழுச்சி ரோகம்
கடுகியே யோடுங் காணே. 411

**புறவளையம்**

பழகிய காடி நீரிற்
பழம்புளி தனைக்க ரைத்து
இளகிய இந்துப் பிட்டு
இட்டதை யிளக்கக் காய்ச்சி
மழையென நீர்த்த தும்பும்
கண்ணிடை வளையம் பூச
அழலெனு மெழுச்சி ரோகம்
இடிவலி யலறிப் போமே.

**இரட்சை**

புள்ளடிக் கருவி தன்னை
யனத்திநீ புருவத் தின்மேல்
துள்ளிட வைத்த ழுத்தித்
தேய்த்திட ஏழு நாளும்
உள்ளது கழித்த வாறே
எண்ணெயி லுடன்புண் ணாற்றிக்
கொள்ளநீ ரெழுச்சி ரோகம்
குலைகுலைந் தோடிப் போமே. 413

செம்பது பளிங்கு துத்தம் சேருமத் துருசி தானும்
நன்சிறு கீரை வேரும் நற்பொன்னாங் காணி வேரும்
கண்படு தேசிச் சாற்றில் கலந்தரைத் துருண்டை செய்தே
அம்பனி விழியார் பாவி லிடவிழி யொழுச்சி போமே. 414

## 2. படர்த்தி மூன்றின் குணம்

விளம்பிய சதைப்ப டர்த்தி
மெத்தென தடித்துக் காட்டும்
வளம்பெறு வரிப்ப டர்த்தி
வலையென வுலைந்து காட்டும்

விளங்கிழை மின்னே சோரி
படர்த்தியென் பதுவே மிக்க
அளம்புமிக் குணங்கள் தன்னில்
வரியொன்று சாத்திய மாமே. 415

### அமிர்த அஞ்சனப் பொடி

சீந்திற் தண்டுடன் கடுக்காய்
தேற்றான் கொட்டை காக்கணம்வேர்
போந்த கொடுப்பை சிறுகீரை
புகலோ ரிதழின் மூலமுடன்
ஆய்ந்தே யொவ்வொன் றொருசமனாய்
அரைநீர் பழையக் காடியினால்
ஏந்து முலைப்பால் துருசுதுத்தம்
இனிய சீனக் காரமுமே 416

மேவுஞ் சுண்ணாம் புக்கல்லு
மிக்க நிமளை சோகிசங்கு
பாவு மருந்து முக்கழஞ்சு
பகர்சம் பீர பழச்சாற்றில்
தாவி யரைத்து அடையாக்கித்
தழலா லெரித்து நுணுக்கியதை
கோவித் தெழுந்த படர்த்தியில்
கொண்டே யெழுதக் குணமாமே. 417

## 3. நெரிசல் மூன்றின் குணம்

துளியுந்தல் விரண மூன்று
சொல்லிய நெரிச லின்பேர்
ஒழிவது மூன்று மாகும்
ஒழிந்திடு மருந்து நீகேள்
தெளிநறு நெய்யிந் துப்புத்
திரிகடு துருசு துத்தம்
அளியுறு குழலாய் கூட்டி
அனைத்துநீ தாரை கோரே. 418

### ஒழுக்கு மருந்து

சீனக் காரம் முக்கழஞ்சு
செறியிந் துப்ப ரைக்கழஞ்சு
பானத் துருச ரைக்கழஞ்சு
பகர்கற் பூரம் பணவெடைகொள்
தேனார் வெதுப்பி நுணுக்கியதைச்
செய்ய முலைப்பால் தனிற்கலக்கி
மானே யழுத்தி விழியெழுத
வருத்த நெரிசல் மாய்ந்திடுமே. 419

### 4. புற்று மூன்றின் குணம்

அன்னமே சதையின் புற்று
அரும்புநீர்ப் புற்றி னோடு
வன்னமே யழலின் புற்று
வருந்திடும் ரோக மூன்றும்
முன்னமே யுரைத்த மாங்கிஷப்
புற்றுநீர்ப் புற்றுத் தானும்
அன்னது சாத்தி யங்கள் 420
அழலொன்ற சாத்திய மாமே.

சதைவளர்ந் தெழுந்த புற்றுத்
தடித்திடு மிரத்தம் போன்று
பதையுநீர்ப் புற்றின் செய்கை
பிரிந்துவெண் குமிழி போல
விதமற மனலின் புற்று
விம்பம்போ லெழுந்து காட்டு
மதையுணர்ந் ததற்குச் செய்யும்
மருந்தினை யறிந்து கொள்ளே. 421

### புற்றுக்கு அஞ்சனப் பொடி

உமரிச் சாரம் நவச்சாரம்
ஓதுந் துருசு எவச்சாரம்
அமையுஞ் சத்திச் சாரமைந்தும்
அடுத்தோ ரொன்று கழஞ்சுகொண்டு
குமைய யரைநீர் சம்பீரம்
குலவுஞ் சாற்றி லடையாக்கி
அமுத பொழியா யோட்டில் வைத்து
அனலால் வெளுக்கப் புடம்வையே. 423

வயே யெடுத்து வெண்கலத்தில்
வைத்து வளையால் மத்தித்து
மெய்யே சொன்னே னெள்ளளவு
விழியி லெழுந்த புற்றினில்வை
தொய்யும் படலம் வரிசிவப்புத்
தோன்று மெழுச்சிப் புற்றிவைகள்
செய்ய மானே யிவைதீரும்
கூடமாம் முனிவர் சொன்னாரே. 423

இவையது மாறா தாகில்
இயல்மொழி மடங்க லென்னும்
நவையிலா மத்தம் பூவின்
நடுவல்லி தண்டு செம்பு
அவைமுனை யதினு ளுந்து
அளவொரு பொட்ட தாக்கிக்
குவைவிழி யெழுந்த புற்றிற்
குறித்தெழு புதைய வையே. 424

ஏந்திழை மின்னே கேளாய்
ஏழுநா ளளவு செய்யும்
சாந்தமா மருந்து கேளாய்
சாரடைக் கிழங்கிந் துப்புச்
சேர்ந்திடு மருந்து துத்தந்
துருசெலி மருந்தோ டைந்து
காந்திடத் தழலில் வெந்து
கபிலையின் வெண்ணெய் கூட்டே 425

கூட்டியே யரைத்துக் கொண்டு
கோதிலாத் தினையுந் தன்றி
வாட்டமாங் கண்ணி னாளே
வளர்ந்திடு புண்ணில் வைக்கக்
கேட்டபோ தோடு மென்று
கிளிமொழி யுமையாட் கீசன்
நாட்டமா யுரைத்த யுண்மை
நவின்றனன் முனிவ னாமே. 426

## 5. குமிழ் மூன்றின் குணம்

கொடியிடை மானே சொன்ன
குமிழமூன் றேதோ வென்னில்
வடிவுநீர்க் குமிழி ரத்த
மாங்கிஷ குமிழ மொன்று
அடவிலே யறிந்து கொள்நீ
அசாத்திய மாகி மற்று
இடரிலை நீரி ரத்த
மேகுமென் றியம்பி னாரே. 427

நாரியே நீரி னாலே
நயந்தெழுங் கொப்பு ளந்தான்
கூருசங் கம்பழம் போல
குமிழமு மிரத்தத் தாலே
சேருமாங் கொப்பு ளந்தான்
செங்குன்றி வடிவ தாகும்
பார்சதை கொப்பு ளந்தான்
பனைத்தெழுங் கருமை யாமே. 428

**இலபணக் குழம்பு**

இந்துப்பு துருசு துத்தம்
எழுகடல் நுரையு ரோகணி
முந்துநற் சீனக் காரம்
மொழியுமா வெண்ணெய் கூட்டி
நந்தினார் கஞ்சத் திட்டு
நையமத் தித்துக் கொண்டு
உந்துறு குமிழத் திட்டால்
ஒழிந்திடு மென்பர் முன்னோர் 429

## 6. வரி மூன்றின் குணம்

அம்புய வதன மாதே
வரியதன் குணத்தைக் கேளாய்
விம்புவெள் வரியா மொன்று
வெம்பிய ரத்த மொன்றும்
வெம்பிய நீல வர்ணம்
விளம்பிய மூன்று ரோகம்
தெம்புடன் மூன்று ரேகை
நீல்வரிய சாத்திய மாமே. 430

விளம்புவெண் வரியின் செய்கை
மீன்சிலாம் பெழுதல் போல
விளங்கிழை மின்னே நீல
வரியது துருசு மேனி
தளங்கிய ரத்தத் தாலே
சார்வரி சிவப்பா மென்று
விளங்கிழை யிதற்குச் செய்யும்
மருந்தினை யுரைக்கக் கேளே. 431

இதற்கு மருந்து

துருசினை யெலுமிச் சத்தின்
பழநீராற் றுலங்க விட்டு
அரையடை பிடித்து லர்த்தி
அதுதனைச் சட்டியி விட்டு
எரியொரு சாமஞ் சென்றால்
எடுத்துமத் தித்துக் கொண்டு
வரியினி லெள்ளின் தண்டின்
வைத்திட மாய்ந்து போமே 432

## 6. இமைநோய்களும் மருத்துவமும்

கண்ணின் மேலிமையில் மட்டும் மொத்தம் பதினாறு நோய்கள் தோன்றுவனவாகக் கூறப்படுகின்றன. இவற்றை, பத்து வகைகளுக்குள் அடக்கலாம். அவை,

1. பில்லம். 2. பற்பரோகம், 3. கழலை, 4. இமைத்தடிப்பு 5. இமைநீர்ப் பாய்சசல், 6. இமை முடரோமம், 7. இழிசகண் 8.இமையிறைச்சி, 9. இமைப் புழுக்கடி, 10. சுற்றுக்குலைவு. இவை ஒவ்வொன்றிலும் காணப்படும் நோய்களாவன.

**1 பில்லம்—3**

1. நீர்ப்பில்லம், 2. குடப்பில்லம், 3. அமரப் பில்லம்

**2 பற்பரோகம்—3**

1. நீர்ப்பற்ப ரோகம், 2. இரத்த பற்பரோகம், 3, சதைப்பற்ப ரோகம்

**3 கழலை—3**

1, சதைக் கழலை, 2. இரத்தக் கழலை, 3. நீர்க்கழலை,

**4 இமைத் தடிப்பு—1**

**5 இமைநீர்ப்பாய்ச்சல்—1**

**6 இமை முடரோமம்—1**

7 **இழிசக்கண் —1**
8 **இமையிறைச்சி—1**
9 **இமைப்புழுக்கடி—1**
10 **சுற்றுக் குலைவு—1**

இவற்றிற்கான விளக்கங்களையும் மருந்துகளையும் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

## 1. இமைப் பில்லம்

கண்ணிமையில் தோன்றும் பில்லம் என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை, 1. நீர்ப்பில்லம் 2. குடப்பில்லம் 3. அமரப்பில்லம்

**பில்லத்தின் பொதுவான குணங்கள்**

இமையின் உட்புறத்தில் தடித்த சதை வளரும். இச்சதையானது விழியில் உறுத்தி நொந்து அதிசமாய்ச் சிவந்திருக்கும் கூச்சமுண்டாகும். கருவிழியில் பூ தோன்றும். பீளையும் நீரும் வடியும், புருவம் துடிப்பு கட்டிகள், புடைப்பு, தினவு, குறுக்குப் பார்வை போன்றவற்றையும் உண்டாக்கும்.

இவற்றுள் நீர்ப்பில்லம் என்னும் நோய் மட்டுமே தீருமெனக் கூறப்படுகின்றது.(435—437)

**1. நீர்ப்பில்லத்தின் குணம்**

இமையில் கடுப்புண்டாகி மேலிமை தடித்திருக்கும். கண்கள் இடுக்கி நீரும் பீளையும் அதிகமாக வடியும். கன்ரகள் சிவப்பதும் பிறகு வெளுப்பதுமாகக் காணும் கண் கூச்சம், கீழ் நோக்கிய பார்வை இவை உண்டாகும். புருவத்தின் கீழே சதை வளர்ந்து உறுத்துவிக்கும். மேலிமையைப் புரட்டிப் பார்த்தால் இச்சதை தெரியும். (438—440)

**மருந்து**

சிதேவி செங்கழுநீர், சாரடை, சிறுகீரை, காக்கணம், ஒரிதழ்த் தாமரை ஆகியவற்றின் வேர்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலமாகச் சேர்த்துக் கூட்டி, ஆறுமாதக் காடியில் 1 சாமம் ஊற வைத்துப் பிறகு நீரால் கழுவி, மேற்படி வேர்களின் மொத்த எடைக்குச் சரியாக மடல் துத்தம் எடுத்துப் பொடித்து எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து வில்லை செய்துலர்த்தி, ஒரு புதுச் சட்டிக்குள் வைத்துமேலே மூடி நன்கு எரித்து, வெளுத்தபின் ஆறவிட்டு வில்லையைச் சங்கால் தூள் செய்து வைக்கவும். நோயுற்ற 10நாட்கள் கண்ணில்இடவும் தீரும். (440—442)

2. குடப் பில்லத்தின் குணம்

இமையின் அடிப்பாகத்திலும், புருவம் இவற்றிலும் இளகி, கண்ணிலிருந்து நீர் வடியும். இமையின் மேற்புறத்தில் பசுமையான நரம்புகள் புடைத்து, நெருக்கமாகக் கனத்துக் காணப்படும். இமைகள் தடித்து மூடியும் காணும். (443-444)

3. அமரப் பில்லத்தின் குணம்

இமையின் உட்புறத்தே இரத்தம் போன்று சிவந்த தசை நெருக்கமாய் வளர்ந்து காணும். கண்ணொளி மயங்கும். நீர் வடியும். இமையின் ஓரம் வளைந்து மடிந்தும் காணும். (445)

குறிப்பு

இந்நோயும் தற்காலத்தில் கூறப்படும் டிரகோமா (Trachoma என்ற நோயும் ஒப்புமையுடையன எனலாம்.

மருந்து 1

இமையின் உட்புறத்தில் தடித்து வளர்ந்துள்ள தசையைக் கருவி கொண்டு அகற்றி, தோன்றும் இரத்தத்தைப் போக்கி, அவ்விடத்தில் திரிகடுகுத் தூளைத் தூவி மெள்ளத் தேய்த்து விடவும் இவ்வாறு மூன்று நாட்கள் செய்த பின்பு, கீழ்க் காணும் மருந்தை இடவும்.

வெண்கடுக்காயின் விதை நீக்கி அத்தோலை வறுத்துத் தூளாக்கி அத்துடன், இந்துப்பு, துருசு இவற்றைச் சேர்த்து இடவும்; தீரும். (447)

மருந்து 2

மேற் சொன்ன மருந்திலும் திராவிடில், பசுவின் பால் 1 நாழி பால்துத்தம் 1 பலம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி, அதை வழித்தெடுத்து, எலுமிச்சம் பழச்சாற்றில் 1 வாரம் அரைத்து வில்லை செய்து புதுச் சட்டியில் வைத்து அனலில் வைத்து எரிக்கவும் வில்லை வெளுத்துப் பொடியானதும் எடுத்து ஆறவிடவும். இத்தூளைக் கண்ணில் தூவி வர நீர்ப்பில்லம் போன்ற பில்ல நோய்களும் தீரும். (448-449)

மருந்து 3

கண்ணிமையின் மேலே இரு விரல்களை வைத்தழுத்தி, இமையை விம்மச் செய்து, சிறு கருவியால் அறுத்துத் தோலைக் கீறிக் கொண்டு, உள்ளே நெட்டி போலத் தோன்றும் சதையை வெளிப்படுத்திய பின்பு எண்ணெய், நெய் இவற்றால் 3 நாட்களுக்கு ஒற்றடம் செய்யவும். பச்சைக் கற்பூரம் சிறிதளவு இட்டு,

துணியில் நெய்யை நனைத்து அதை விழியின் மேற்புறமாகக் கட்டி, சுற்றிலும் நெய்யைப் பூசவும். இவ்வாறு 8 நாட்கள் செய்தபின், திரிகடுகுப் பொடியை மை போலாக்கிப் போடவும்.

பிறகு, கண்ணிமையைச் சுற்றிலும், புளியிலையை யிடித்து வைத்துக் கட்டவும். இவ்வாறே, ஊமத்தம் இலையையும் வதக்கிக் கட்டுவர். (452-454)

**குறிப்பு**

இமையில் தோன்றும் பில்லத்தை நீக்க இரு வகையான கருவி மருத்துவம் கூறப்பட்டுள்ளன. இமையின் உட்புறமாகச் சதையை நீவி நீக்கும் கருவி மருத்துவமும், இமையின் மேல் புறமாகக் கருவி யால் கீறிச் சதையை வெளிப்படுத்தும் முறையும் கூறப்படுகின்றன, இவற்றுள், முதலாவது முறை தற்காலத்திலுள்ள சுறண்டும் உருளையில் (Roller) செய்வது போல உள்ளதும் குறிப்பிடத் தக்கது. கருவி மருத்துவத்தின் பின், அதன்மீது அனல் காட்டு வதும், மேல் மருந்திடுவதும் குறிப்பிடத்தக்கனவாம்.

**மருந்து 4**

புருவ மையம், குவை, பிடரி, கன்னப் பொட்டு போன்ற இடங் களிலுள்ள நரம்பைக் கண்டறிந்து, அதன்மேல் தக்க கருவி கொண்டு ரட்சை செய்து, மருந்தால் ஆற்றவும் தீரும். (461)

**மருந்து 5**

உக்காவின் குழாய்க்குள்ளிருக்கும் அழுக்கை எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றிலிழைத்துக் கண்ணிலிட நீர்ப்பில்லம் போன்றவை தீரும். (450)

**மருந்து 6**

வெண்காரம், துத்தம், துருசு, சாரடைவேர், பவளம்,பீங்கான் ஓடு, பச்சைக் கற்பூரம், சாத்திரவேதி இவை ஓரளவாய் எடுத்து மாதுளம் பூச் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி இடத்தீரும். (451)

**மருந்து 7 (தைலம்)**

பாதரி, முசுமுசுக்கை, பருத்தி, செங்குன்றி, முடக்கொற்றான் இவற்றின் சாறு ¼ படி, நல்லெண்ணெய் 1படி, இவற்றை ஒன்றாகக் கலந்து, அத்துடன், தகரம், சடாமாஞ்சில், ஏலம், மல்லி, தான்றிக் காய், கோட்டம் இவை வகைக்கு ¼ பலம் வீதம் சேர்த்தரைத்துக் காய்ச்சி வடித்து, தலையில் தேய்த்து முழுகி வரத் தீரும்.(451)

**மருந்து 8**

மிளகு 2 படி எடுத்து இடித்து ஒரு துணியில் தளர முடிந்து, அதை 4 குறுணி தண்ணீரில் விட்டுக் காய்ச்சி 4 படி ஆனதும் அத்துடன், கையான் சாறு, பசுவின் பால், இளநீர், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 2 படி விட்டுச் சேர்த்துக் கலக்கி, அத்துடன் குறுந் தொட்டி 9 பலம் இடித்து 1 பதக்கு நீரிலிட்டுக் காய்ச்சி, 2 படியானதும் மேற்படி எண்ணெய்யுடன் கலந்து தேவதாரு 1 பலம் இடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்துத் தலை முழுகி வரத் திரும்.

## 2. இமை பற்ப ரோகம்

இமையில் தோன்றும் பற்ப ரோகம் என்னும் நோய்கள் மூன்று வகைகளாகக் கூறப்படுகின்றன. அவை, 1) நீர்ப் பற்ப ரோகம் 2) இரத்த பற்ப ரோகம், 3) சதைப் பற்ப ரோகம்.

இவற்றுள், நீர்ப் பற்ப ரோகம், இரத்த பற்ப ரோகம் இவை மருத்துவத்தால் தீரும் என்றும், சதைப்பற்பரோகம் தீராததெனவும் கூறப்படுகின்றன.

**பற்ப ரோகத்தின் பொதுவான குணங்கள்**

இமைகள் தடிக்கும், நீர் பாயும், பீளை வடியும், கண்கள் இரத்தம் போல சிவந்தும் காணும். புருவம் நெறிக்கும். விண்ணை நோக்கிப் பார்க்க இயலாதவாறு கண்கள் கூசும்.

**1. நீர்ப் பற்ப ரோகத்தின் குணம்**

இமை கனத்து வீங்கிச் சோர்ந்திடும். கண்ணில் மிகுதியாக நீர் பாயும்.

**2. இரத்த பற்ப ரோகத்தின் குணம்**

இமையின் உட்புறம் சிவந்தும் செந்நீர் வடிதலும் காணும்.

**3. சதைப் பற்ப ரோகத்தின் குணம்**

இமையின் உட்புறம் தசை வளர்ந்து தடித்துக் காணப்படும்.

முன் கூறப்பட்ட பில்ல நோய்களைப் போலவே பற்ப ரோகங்களுக்கும் கருவி மருத்துவமும் மேலிடும் மருந்துகளும் கூறப்படுகின்றன. (462-465)

**மருந்து 1**

புருவத்திற்கும் இமைக்குமிடையில் உள்ள பெருநரம்பில் குடோரி என்னும் கருவியை வைத்து, வடியும் இரத்தத்தைப் போக்கவும். பிறகு, மேல் மருந்திடவும். (466)

**மருந்து 2**

தசை பற்ப ரோகத்திற்கும் இவ்வாறு மருத்துவம் செய்யும் போது அட்டையை விட்டும் இரத்தத்தைப் போக்குவர். பிறகு உப்புப் பொடியைத் தேய்த்தும் சுத்தம் செய்வர். (467)

**மருந்து 3** (திரிபலாதிப் பொடி)

திரிபலை, கொள், ஓரிதழ்த் தாமரையின்வேர், கோழி முட்டை ஓடு, சங்கு, சாரடைவேர், மடல்துத்தம், சிறுகீரைவேர், சீதேவி செங்கழுநீர்வேர், சீனக்காரம் இவை வகைக்கு 3 கழஞ்சு எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி, புதுச்சட்டியி லிட்டு எரித்து, ஆறவிட்டு எடுத்துத் தூளாக்கி இடவும். தீரும்.

**மருந்து 4**

பசுவின் பாலை 6 நாட்கள் கண்ணிலிடத் தீரும். (474)

**மருந்து 5**

தும்பைப்பூ, நந்தியா வட்டம்பூ, காரெள்பூ, திப்பிலி இவற் றைத் தேன் விட்டரைத்துப் போடத் தீரும். (475)

**மருந்து 6**

ஓரிலைத் தாமரை வேர், சங்கு, தலையோடு, துத்தம், துருசு வெள்ளைக் கற்பொடி இவைகளை, எலுமிச்சம் பழச்சாறு முருங்கையிலைச் சாறு இவற்றில் ஒவ்வொரு நாளரைத்துருட்டி உலர்த்தி முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (476)

## 3. இமைக் கழலை

இமையில் தோன்றும் கழலை என்னும் நோய்கள் மூன்று வகை களாகக் கூறப்படுகின்றன. அவை, 1) நீர்க்கழலை 2) இரத்தக் கழலை, 3) சதைக் கழலை.

இவற்றுள், நீர்க்கழலை மற்றும் சதைக்கழலை மருத்துவத் தால் தீரக் கூடியவை, இரத்தக் கழலை மட்டும் தீராத தாகும்.

**1. நீர்க்கழலையின் குணம்**

இமையில் தோலுக்கடியில் வெள்ளை நிறமுடன், வழுப் பாய்த் தனித்து, பை போலத் திரண்டு, நீர் போன்ற திரவம் காணும்.

**2. இரத்தக் கழலையின் குணம்**

இமையில் இரத்தம் அதிகமாகக் கட்டிக் காணப்படும்.

**3. சதைக் கழலையின் குணம்**

இமையில் தோலுக்கடியில் சதை உருண்டை போலக் கட்டிக் காணப்படும்.

**மருந்து**

இமையில் உருண்டு எழுந்து காணப்படும் கழலை என்னும் இந் நோயைக் கருவி கொண்டகற்றுவர். இமையினடியில் உள்ள முளையை நீக்கி விட்டு, வடியும் இரத்தத்தைப் போக்கி, எண்ணெய், நெய் இவைகளை ஒழுக்கி விடவும் தீரும். (477-478)

## 4. இமைத்தடிப்பு

இமையில் தடிப்பை ஏற்படுத்தும் இந்நோயை இமைத் தடிப்பு என்று கூறுவர்.

**இமைத் தடிப்பின் குணம்**

கண்ணிமை வீக்கங்கொண்டு கனத்துக் காணப்படும். கண்ணின் உட்புறம் வரிவரியாகப் பரவியும் காணும். புருவம் வீங்கிச் சதை போலச் சிவந்து காட்டும். கண்ணில் நீரும் பீளையும் வடியும். தினவும், வலியும் அதிகமாயிருக்கும். பார்வை புகைந்திருக்கும். முகம் வெளுத்தும் அடிக்கடி வாந்தியும் உண்டாகும். 479-482)

இந் நோய் தீராதது என்றே கூறுவர். ஆயினும் சில மருந்துகளும் இதற்குக் கூறப் படுகின்றன. அவை,

**மருந்து 1** (பஞ்சதுத்த அஞ்சனப் பொடி)

சீனாக்காரம், துருசு, துத்தம், நிமிளை, மனோசிலை இவற்றை ஓரளவாயெடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வில்லையாகத் தட்டி, புதுச்சட்டியில் வைத்து எரித்து, வெளுத்த பின் தூளாக்கிக் கண்ணிலிடத் தீரும். (487)

**மருந்து 2** (திரிபலாதி எண்ணெய்)

திரிபலை, வேங்கைவைரம், வில்வவேர், சீந்தில்தண்டு, சிற்றாமுட்டி வேர்ப்பட்டை, நன்னாரி வேர், விலாமிச்ச வேர், வெட்டிவேர், மிளகு, தான்றிவேர், அமுக்கிராவேர், இவை வகைக்கு 4 பலம் எடுத்திடித்து 1 தூணி நீரில் போட்டுக் காய்ச்சி, எட்டில் ஒன்றாக வற்றக் காய்ச்சி வடித்து அத்துடன், எள்ளெண்ணெய், பசுவின் பால், இளநீர், கையான், தண்ணீர் விட்டான்,

கிழங்கு, பொன்னாங்காணி, சங்கிலை, எலுமிச்சம் பழம் வெற்றிலை, முடக் கொற்றான், நெல்லிக்காய் இவற்றின் சாறு வகைக்கு ! நாழி கலந்து அதில், அதிமதுரம், கோட்டம், சுக்கு, தேவதாரம், சிறு நாகப்பூ, நாகணம், ஏலம், சடாமாஞ்சில், சாதி பத்திரி, சந்தனம், கிராம்பு, கிச்சிலிக் கிழங்கு, தக்கோலம், வெட் பாலையரிசி, இலவங்கம் இவை வகைக்கு 3 கழஞ்சு கொண்டு சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். (483-486)

**மருந்து 3**

மாதளம்பூ, நற்சீரகம், நெருஞ்சிக்காய், இவற்றைப் பனை மட்டைச் சாற்றிலரைத்துருட்டி, முலைப் பாலில் உரைத்திடவும் தீரும். (488)

**மருந்து 4**

செஞ்சந்தனம், சாத்திரவேதி தேற்றான் விதை இவற்றைப் பசுவின் பாலில் அரைத்து வெண்ணெய் சேர்த்துக் குழைத்துப் புறவளைய மிடவும் தீரும். (489)

**மருந்து 5**

பசுவின் பால் 1 படி, பொற்றலை வேர் 1 பலம் சேர்த்துக் காய்ச்சித் தயிராக்கி, அதில் கிடைக்கும் வெண்ணெய்யைத் திரட்டி இடவும் தீரும். (490)

**மருந்து 6**

கருக்கின புழுங்கலரிசி, அபின், ஊமத்தஞ் சாற்றிலரைத்துப் புற வளைய மிடவும்.

கொடுப்பை, சிறுகீரை, வெட்பூலா, மிளகு ஆவின் பால் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (491)

**மருந்து 7**

சிற்றாமணக்கின்வேர், பேராமணக்கின் வேர்இவற்றை வேலிப் பருத்திச் சாற்றிலரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும் (492)

## 5. இமை நீர்ப்பாய்ச்சல்

இமையில் நீர்ப்பாய்ச்சலை உண்டாக்கும் இந்நோயை இமை நீர்ப் பாய்ச்சல் என்பர்

**இமைநீர்ப் பாய்ச்சலின் குணம்:-**

தலையில் மூளைப் பகுதியில் அதிகமாக சிலேட்டும நீர் நின்று, மிகவும் செறிந்து விழி நரம்பில் வழிந்து, கனத்துக் கீழே ஊர்ந்து, இமையில் வீங்கி வழியும். (493)

**மருந்து 1: (வில்வாதித் தைலம்)**

வேங்கைவைரம், வில்வவேர், சீந்தில் தண்டு, நன்னாரி, சிற்றாமுட்டிவேர், இவை வகைக்கு 3 பலம் எடுத்து 10 நாழி நீர் விட்டு நன்றாகக் காய்ச்சி, அதை 2 படியாக வற்றச் செய்து அத்துடன். பச்சிலை, கச்சோலம், ஏலம், அதிமதுரம், கோட்டம் கொத்தமல்லி, சிறுநாகப்பூ, சதகுப்பை, செவ்வள்ளிக் கிழங்கு சாதிக்காய், இலவங்கம். வெந்தயம், மிளகு, சீரகம், கையான் சாறு, பசுவின் பால், எலுமிச்சம் பழச்சாறு 1 உழக்கு எனக் கூட்டி நன்றாகக் காய்ச்சி அதில் மிளகுப் பொடி 1 பிடியும், அபின் 1 கழஞ்சும் போட்டு வடிகட்டி தலையில் தேய்த்து. வெந்நீரில் முழுகத் தீரும். (494-496)

## 6. இமை முடமயிர்

இமையிலுள்ள மயிர்கள் வரிசையாக மேல் நோக்கி யில்லாமல் வளைந்தும், சாய்ந்தும் காணப்படுவதை முடமயிர் என்பர்.

**முட மயிரின் குணம்:-**

இமையின் ஓரம் உட்புறம் மடிந்து இமையிலுள்ள மயிர் சாய்ந்தும் ஒரு புறமாக, உட்புறமாய் வளைந்தும் இருக்கும். இதனால், இமை மயிர்கள் கருவிழியிலும், வெள்ளைவிழியிலும் உராய்ந்து வலியை உண்டாக்கும். கண்ணிமை தடிப்பு, நீர் வடிதல் பீளை சேருதல், தினவு, கருவிழியில் வெண்மை படர்தல் போன்றவையும் தோன்றும். தலைவலி, சோர்வு, பார்வையில் புகைச்சல் தோன்றும்.

இந்நோய் மருத்துவத்தால் தீரக் கூடியதாகும். (497-501)

**மருந்து 1:-**

கண்ணிமையில் சாய்ந்துள்ள மயிர்களின் ஒழுங்கினைத் தவறாமல் பார்த்து இமையை மேற்புறமாகத் திருப்பி அந்த மயிரின் வேர்ப் பாகத்துடன் இமையின் தசையும் ஓர் எள்ளளவு சேர்த்துக் கருவியால் நீக்கவும். இதனால் வடியும் குருதியைத் துடைக்கவும் அவ்வாறு நீக்கிய மயிரின்வேர்ப்பாகத்தினளவேயுள்ள முனையும், உட்புறவளைவுமுள்ள கம்பியை அனலில் காய்ச்சி மயிர் நீக்கப்பட்ட இடத்தில் அழுத்தி விடவும். பிறகு தக்க மருந்துகளை வைத்துப் புண்ணை ஆற்றவும். (502-503)

**மருந்து 2**

சோமனாதி 3 கழஞ்சு, துருசு 1 கழஞ்சு, இவ் விரண்டையும் வெதுப்பித் தூளாக்கி வெண்ணெய்யிலிட்டுக் குழைத்து. முடமயிர் உள்ள இமையில் எள்ளளவு இட முடமயிர் விழுந்து விடும். (504)

**மருந்து 3**

சங்குப் பொடி 4 பலம், இஞ்சி 2 பலம், மிளகு 1 பலம், இந்துப்பு 1 பலம் சேர்த்து, எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (505)

**மருந்து 4**

அரைக்கீரையைப் பச்சரிசியுடன் உட் கொள்ளவும் தீரும் (507)

**மருந்து 5**

எருமைச் சாணத்தைப் பிழிந்த நீரில் திப்பிலியை உரைத்து இடவும் தீரும். (508)

**மருந்து 6**

வெள்ளைத் துணியில், கள்ளிப்பால், பூ நாகம், தாளகம் இவற்றைத் தனித் தனியாக அரைத்து, முறையை ஒவ்வொன்றிலும் தனித்தனியே காய்ந்தபின், எடுத்ததைத் தோய்த் தெடுத்து உலர்த்தி அத் துணியைக் கொளுத்தி, வேப்பெண்ணெய் சேர்த்து மையாக்கி, அத்துடன், செங்கற்பொடி, பீத ரோகணி இவற்றைக் கூட்டி நன்றாக அரைத்து இடவும் தீரும். (506)

## 7. இமை இழிசக்கண்

இமையில் ஏற்படும் புண்ணால் மிகவும் தினவுடன் கூடிய இந் நோய் இழிசக்கண் என்று கூறப்படும்.

**இழிசக் கண்ணின் குணம்**

இமை விளிம்பு புண்ணாகி அதிலிருந்து குழகுழப்பான நீர் வடிந்து புண் மாறாமலிருக்கும். இமையைத் திறக்கவும் முடியாமல் கண் கூசும். கண்ணில் வேதனையும், வலியும் அதிகமாகும். இந் நோய் தீரக் கூடியதேயாகும். (509)

**மருந்து** (நவச்சாரக் குழம்பு)

நவச்சாரம், இந்துப்பு, துருசு, இவை மூன்றும் வகைக்கு 1 கழஞ்சு எடுத்து அத்துடன் பசுவின் வெண்ணெய் கூட்டி வெண்கலத்தில்வைத்துச் சங்கால் இழைத்துக் கண்ணிலிடவும் தீரும் (510)

8. இமை யிறைச்சி

இமையில் தோன்றும் இந்நோய் தீராதது என்றே கூறுவர்.

வாத தோடத்தாலும், வேறு சில நோய்களாலும் இந்நோய் இமையில் இரணத்தையும் அழற்சியையும் உண்டாக்கும் என்பர். (511)

9. இமைப் புழுக்கடி

இமையில் மயிர் உதிர்ந்து போகும் இந்நோய்க்குப் புழுக்கடி என்று பெயர்.

**புழுங்கடியின் குணங்கள்:-**

இமையின் உட்புறத்தில் ஊறல், இமைமயிர் உதிர்ந்து போதல் இவற்றுடன் இமையின் ஓரம் புண்ணாகித் தீப் போல எரிச்சல் தரும். அப் புண்ணிலிருந்து குருதியும் பாயும். கண்ணினுள் குத்தலும், நீர் வடிதலும் காணும், கண் சிவந்து வீங்கிக் காணும். இமை கனத்துத் தினவுண்டாகும். (512-516)

**மருந்து 1**

சதுரக்கள்ளியின் வடக்கி லோடும் வேரைக் கொணர்ந்து வெய்யிலில் உலர்த்தி அதன் மேல் சுத்தமான வெள்ளைத் துணியைச் சுற்றிச் சிற்றாமணக் கெண்ணெயில் திரியாக இட்டுக் கொளுத்தி விளக்கேற்றி மை பற்ற வைத்து அதைக் கண்ணில் எழுதவும் தீரும் (513)

**மருந்து 2**

வெள்ளைத் துணியை எருக்கம் பாலில் நனைத்து உலர்த்தி மறுபடியும் நனைத்து உலர்த்தி. இவ்வாறு 5 முறைகள் செய்து உலர்த்தித் திரியாக்கிப் பசு நெய்யை அகலில் விட்டு அதில் இதைப் போட்டு விளக்கேற்றி மை பிடிக்கவும். புதுச் சட்டியின் உட்பாகத்தில் ஊமத்தம் இலைச்சாறு பூசி உலர்த்தவும். இவ்விதம் 5 முறைகள் பூசி உலர்த்தின பின்னர், அச் சட்டியை அகலின் மீது மூடி மை பற்றி எடுத்துத் கண்ணிலிடவும் தீரும். (517 519)

**மருந்து 3**

கடுக்காயை இரண்டாக உடைத்து அதனுள் கிராம்பு 2, சாதிக்காய் 2, சேர்த்து வைத்து அத்துடன், பசுவின்வெண்ணெய் வைத்து மூடி, மேலே நூல் சுற்றி, அதை விளக்கில் சுட்டு எடுத்துப் பொடி செய்யவும், அத்துடன் முயல் புழுக்கையைச் சுட்டுப் பொடித்துச் சேர்த்து, இவற்றுடன் கலக்கொழுஞ்சியிலை, கரு

மணத்தக்காளியிலை, கையாந்தகரையிலை, அமுக்குராத்தழை, புண்ணாக்குப் புட்டுத் தழை, நாயுருவித் தழை, கோழியாவாரை இலை, முட்காய்த் தழை, வெற்றிலை இவற்றின் சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவற்றைச் சேர்த்து அரைத்து, பசுவின் வெண்ணெய்யில் குழைத்து இடவும் தீரும், (520)

**மருந்து 4**

துத்தம், பலகறை, தேற்றாங்கொட்டை, மனோசிலை தலையோடு, மிளகு, திப்பிலி. சேவல்நெஞ்செலும்பு இவை வகைக்கு ½ கழஞ்சு, சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்திக் காடியில் உரைத்து இடத் தீரும். (521)

**மருந்து 5**

கடல் நுரை, மிளகு. சீனக்காரம், அதிமதுரம், வெண்காரம் கடுக்காய், துருசு, துத்தம், மனோசிலை, அரிதாரம், திப்பிலி செம்புப் பொடி இவை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (522)

**மருந்து 6**

துத்தம், துருசு இவற்றுடன், வெற்றிலையில் நல்லெண்ணெய் தடவி விளக்கில் வாட்டிப் பிழிந்த சாறு கூட்டி அரைத்துக் கண்ணில் இடவும் தீரும். (523)

**மருந்து 7**

துத்தம், துருசு, வெள்ளைப் பாடாணம் பொன்னாங்காணி வேர், சிறுகீரைவேர், இவற்றைச் சுட்டெடுத்து வெண்ணெய் கூட்டிப் பூசவும் தீரும். (524)

**மருந்து 8**

துத்தம், துருசு, வெள்ளைப் பாடாணம் இவற்றை ஓரளவாய்க் கொண்டு, பொன்னாங்காணி இலை, சிறுகீரை இலை இவற்றின் சாற்றில் 1 நாள் அரைத்து வில்லை தட்டியுலர்த்தி, இவற்றின் வேர்களையும் அரைத்து வைத்துப் புடம் போட்டு எடுத்து, பசுவின் வெண்ணெய் கூட்டி இடவும் தீரும். (525)

**மருந்து 9**

மான் கொம்பு அல்லது மிளகரணை வேரைத் தேனில் உரைத்து இடவும் தீரும். (527)

## 10. சுற்றுக் குலைவு

கண்ணிமையில் புழுவெட்டு போன்ற நோய்களினால் மயிர்கள் உதிர்ந்து இமையைச் சுற்றிலும் புண்ணாகும். இதை சுற்றுக் குலைவு என்பர்.

**சுற்றுக் குலைவின் குணம்**

இமையிலுள்ள மயிர்கள் உதிர்ந்து அவற்றின் விளிம்பு முழுவதும் புண்ணாகும். அப்புண்ணிலிருந்து நீர், சீழ், குருதி போன்றவை வடியும். மிகுந்த வலியும், குத்தும் இருக்கும். கண்ணில் மயக்கமும், கொழு கொழுப்பான பீளையும் வடியும். (528)

**மருந்து 1**

சோற்றுப்பு, கருப்புப்பு, வளையலுப்பு, இந்துப்பு, வெடியுப்பு பொரிகாரம், துருசு இவை ஏழையும் தனித் தனியே ஒவ்வொரு கழஞ்சு வீதம் எடுத்துத் தூளாக்கி வெண்ணெய்யிற் குழைத்து இடவும் தீரும். (559)

### கண்ணிமையில் வரும் நோய்கள் பதினாறுக்கும் பெயர்

கண்ணிமை தன்னில் தோடம்
கலந்திடும் பதினா றுக்கும்
நண்ணிய பில்லம் மூன்று
நவில்பற்ப ரோகம் மூன்று
திண்ணமாங் கழலை மூன்று
செறிந்திடு மிமைத்த டிப்பு
வண்ணநீர் பாய்ச்ச லொன்று
வளரிழி கண்ணு மாமே 433

ஆகுமே முடரோ மங்கள்
அழிசுற்றுக் குலைவு தானும்
வேகமாய் புழுக்க டிப்பு
விரியிமை யிறைச்சி தானும்
போகவே மருந்து ரோகம்
புகழ்பில்ல மேழுக் குந்தான்
கோகில மொழியே கேளாய்
குறுமுனி யுரைசெய் தாரே. 434

## பில்லத்தின் குணம்

தப்பாது பில்லத்தின் தன்மை கேளு
சாங்கமாய் விழியினிமை புருவம் யாவும்
கப்புடனே மஞ்சள் நிறமாகி யேதான்
கடுத்துமே சட்டி போல் திரண்டு காணும்
செப்பிடவே வுருண்டுமல்லோ புடைத்து மேதான்
சீழ்பாய்ச்ச லதிகரித்து தினவுண் டாகும்
ஒப்புடனே யூகிமுனி சொன்ன நீதி
ஒருக்காலும் பொய்யாது உண்மை தானே. 435

கருகியே யிமையி னுள்ளே கனித்தமாங் கிசம்போற் தோன்றி
மருவியே யுறுத்தி நொந்து அதிகமாய்ச் சிவந்து கூசும்
மருவியே பூவுந் தோன்றும் மாறாதே பீளை பாயும்
பெருகியே நீரும் பாயும் பில்லமா மென்று சொல்லே. 436

வழற்றிடுங் கீழு மேலும் வலுப்படுஞ் சதைசி வப்பு
உழற்றிடுங் கண்ணைச் சுற்றி உறுத்தியே நீரும் பாயும்
கழற்றிடு மணிபோ லாகும் கருமணி குவிந்து நிற்கும்
சுழற்றிடு பில்ல மென்று சொல்லுவ ரிதனைக் கண்டே. 437

## நீர்ப்பில்லத்தின் குணம்

இமையைக் கனத்துக் கடுப்புண்டாய்
இடுக்கி நீரும் பீளையிடும்
குமையச் சிவந்து வெளுப்புண்டாய்க்
கூசி விழியும் கீழ்நோக்கும்
சமையத் திரண்டு புருவங்கீழ்
சதையும் வளர்ந்து வுறுத்திவிக்கும்
நிமையைத் திறக்கிற் சதைமூடும்
நீரப் பில்ல மெனலாமே 438

மெல்லிய யிமையி லூர்ந்து
வீழ்நீர்கள் மிகுதி யாகக்
கல்லெனக் கனத்து விம்மிக்
கண்சுற்று புருவ முச்சில்
சில்லென முடித்து நோவாய்த்
திமிர்த்திடுங் குணங்கள் கண்டால்
வல்லெனு முலையாய் சொன்னேன்
வருத்துநீர்ப் பில்ல மாமே 439

இவையும்நீர்ப் பில்லந் தானே
சாத்திய மென்று கூறும்
நவையுறு பில்லத் திற்கு
நவில்மருந் ததனைக் கேளாய்
சவையுறு சீதை வேரும்
சாரடை வேரு மொக்கக்
கவைசிறு கீரை வேரும்
காக்கண வேரு மாமே 440

ஆகுமோ ரிதழின் வேரும்
அவையோரோர் பலமுங் கூட்டி
நீவிரைந் தாறு திங்கள்
காடிநீ ரதிலே போட்டுப்
பூவையே கழுவிப் போட்டுப்
பேரதுஞ்சம் பீரச் சாற்றால்
மேவுநல் துத்தந் தானும்
வேருக்குச் சமனாய்க் கூட்டே 441

கூட்டிநீ யரைத்து வட்டாய்க்
கோதிலோர் பாண்டத் திட்டு
நாட்டமா யெரித்தெ டுத்து
நந்தினாற் தேய்த்துக் கொண்டு
ஈட்டுமோர் பில்லத் திற்கு
இவைபத்துப் போதிட் டாக்கால்
வாட்டங் கண்ணி னாளே
நீர்ப்பில்ல மாய்ந்து போமே, 442

## குடப்பில்லத்தின் குணம்

இமையடி புருவ முற்றி
இளகிய நீரு மாறா
அமைபசு நரம்பு துன்னி
அதுகனத் திடுமே யாகில்
குமுதமாம் விழியி னாளே
குடப்பில்ல மென்று கூறும்
இமயவ ரறியச் சொன்ன
திதுகுடப் பில்ல மாமே. 443

இயம்பிய குடப்பில் லத்தின்
செய்கைதா னேதோ வென்னில்
தயங்கிமை தடித்து மூடிச்
சனத்திடும் நாங்கு போல
மயங்கிமை தடித்து மூடி
வடிந்துநீ ரதுவு மாறா
தியங்கிமை தடித்து மூடித்
திமிர்த்திடுங் குணத்தைக் கேளே. 444

**அமரப் பில்லத்தின் குணம்**

சொல்லிய யிமையி னுள்ளே
சோரிபோற் சதையுந் துண்டிப்
புல்லிடு விழிம யங்கிப்
போதநீர் வடியக் காட்டி
எல்லையி லிமைம டித்துத்
தடித்தொடு பாயு மானால்
அல்லியங் கோதை மாதே
அமரமுடப் பில்ல மாமே. 445

உள்ளிய சதை வளர்ந்து
தடித்தொடு பாயு மானால்
ஒள்ளிய கருவி யாலே
உந்திய சதையை நீவித்
துள்ளிடு குருதி போக்கித்
திரிகடு பொடியைத் தூவி
மெள்ளவே தேய்த்து மூன்று
நாட்பின்பு மருந்து கேளே 446

வெள்ளைக் கடுக்காய் விதைபோக்கி
வறுத்து நுணுக்கி மேல்மருந்து
துள்ளு மிந்துப்புத் துருசதுவும்
தூளாய் நுணுக்கிப் பொடியாக்கி
உள்ளக் கடுக்காய்ப் பொடிக்குநேர்
ஒக்கக் கொள்ரத்த பில்லமதில்
அள்ளிடவே குணமா மென்று
ஆயுர்வேத முரைத்த ததுவே 447

சொல்லு மிதற்கு மாறாதால் துத்தம் பலமொன் றதைநுணுக்கி
முல்லை நகையீ ராவின்பால் முழுங்கு நாழி யதிலிட்டு
மெல்ல வெறித்துச் சுவறினாக்கால் மிகுசம் பீரச் சாற்றரைத்து
அல்லு மடையச் சட்டிவைத்து அனலால் வெதுப்பிப் பொடி
செய்யே 448

செய்யே யெடுத்து பில்லமதிற்
சேர வரைமண் டலமிடவே
தொய்யுந் தசைக்கீழ் நீர்ப்படலந்
தோன்றா தோடிப் போமென்று
ஐய னுமையாள் தனக்குரைக்க
அரிவை விறுமாக் கோதினது
வெய்யக் கமலத் தோன்கும்ப
முனிவற் குரைக்க விளம்புகின்றான் 449

உக்கா உருண்டை

உக்கா குழலழுக்கை யோர்ந்துபழச் சாற்றிழைத்து
மிக்கான கண்ணிலிட மேதினியில்—சிக்காஞ்
சதைசதைத்த பில்லமுடன் சண்டாளப் பூவும்
பதைபதைத்தே யோடும் பயந்து 450

(வேறு)

வெண்காரம், துத்தம், துருசு, சாரடைவேர், பவளம் பீங்கான் ஓடு, பச்சைக் கற்பூரம், சாத்திரவேதி, இவைகளையோர் நிறையாய் மாதுளம்பூச்சாற்றில் அரைத்துக் கயிறு செய்து விழியிற் போட்டு, பாதரி, முசுமுசுக்கை, பருத்தி, செங்குன்றி, முடக்கொத்தான் இவைகளின் சாறு ¼ படி, நல்லெண்ணெய் 1 படி ஒன்றாகக் கலந்து, அதில் தகரம், சடாமாஞ்சில், ஏலம், மல்லி, தான்றி, கோட்டம், வகைக்கு ¼ பலம் வீதமரைத்துப் போட்டுக் காய்ச்சி முழுகி வரத் தீரும்.

பில்லமெடுக்கிற பிறகிறுதி

இருவிரல் தன்னைக் கொண்டு
இமையடி விம்மிச் சேர்த்து
உருவவே பிடித்துத் தப்பால்
உள்ளதோல் கீறிக் கொண்டு

விரவிய நெட்டி போலே
விரைந்தெழு மதனை வாங்கிப்
பரவிய எண்ணெய் நெய்யாற்
பதம்பட வொற்று மென்றே 452

பதம்பட வொற்றிப் பின்னைப்
பச்சைக்கற் பூர மிட்டு
விதம்பெற நெய்யிற் சீலை
விம்மாமற் கட்டி னாக்காற்
சுகம்பெற நீயு மங்கே
சூழ்நெய்யிற் பூசு வீரால்
இயம்பட எட்டு நாளும்
இப்படிச் செய்யும் வாறே 453

செய்தது பின்னை நீயும்
திரிகடு பொடிகள் தன்னால்
மையெனத் தேய்த்தாற் போலே
மகிழ்ந்துநீ யடவே தேய்த்துக்
கையினிற் புளியைக் காய்ச்சிக்
கண்ணிமை வளையப் பூசில்
மெய்யிது அறியச் சொன்னேன்
பில்லநோய் வெருண்டு போமே 454

(வேறு)

இருவிரல் தன்னைக் கண்ணின் இமையின்மேல் வைத்தி டிக்கி
அருகணி லொருவர் நெற்றி அசையாமல் மேலி ருக்கப்
பருகவே செறுதோ றட்டிப் பாய்ச்சியே யறுத்து வாங்கி
மருவியே காயங் கட்டி மாறாமல் அனல் தான் காய்ச்சே 455

ஆவினெய் யுங்கற் பூரம் அளவுடன் கலந்து சீலை
மேவியே யிமையி லிட்டு மேலிடு மருந்து கேளிர்
தாவிவூ மத்தன் தன்னில் தழைதனை வதக்கிக் கட்டில்
பாவிய புளியிலை யிடித்துப் பதம்பட வறுத்து வொற்றே 456

ஒற்றியே மூன்று நாளும் ஒழிந்தபின் னவிழ்த்து விட்டு
சுற்றியே வளையம் பூசி சுகபோச னங்கள் பண்ணி
முற்றியே யெட்டு நாளும் முதிர்ந்துபின் மருந்து செய்யப்
பற்றிய பில்லந் தானும் பறந்தது போகுந் தானே 457

இமையடிப் புருவ முற்றும் இசைந்துறப் புடைத்து விம்மி
சமையவே பிடித்துப் பார்க்கில் சலமுறத் திரண்டு காட்டும்
அமையவே யிதனை நீயு அறிந்துதுர் பில்ல மென்று
நிமையதை யிறுக்கிக் கொண்டு நீயதை யுரித்து வாங்கே 458

**பில்லத்திற்கு மிரியலாதித் தைலம்**

செய்ய மிளகி ரண்டுபடி
யிடித்துச் சீலை தனிற்கட்டி
தொய்யுந் தண்ணீர் நாற்குறுணி
துலங்க விட்டு நாலுபடி
பைய்யக் காய்ச்சி ரண்டுபடி
பகருங் கையான் பாலிளநீர்
உய்யு மெண்ணெய் ரண்டுபடி
விட்ட வுடனே குறுந்தொட்டி 459

தாவு மொன்பது பலமிடித்துத்
தண்ணீர் பதக்கு விட்டதனை
மேவு மிரண்டு படியானால்
மின்னே யெண்ணெய் யுடன்கலந்து
பாவுந் தேவ தாரமொரு
பலமு மிடித்துத் தூளாக்கித்
தூவும் பதத்தில் வடியிதனை
முழுகிற் பில்ல மோடிடுமே 460

**இரட்சை**

குறித்திடும் புருவ மையங்
குவைபிட ரியினில் முன்னே
நெறிப்படி பொட்டி னாலே
நீர்நரம் பறிந்து கொண்டு
உறுத்திடா ரட்சை செய்து
உளம்பவே புண்ண தாக்கிச்
செறித்திடும் விழியி னாளே
குடப்பில்லந் தீருந் திண்ணம் 461

## 2. பற்ப ரோகத்தின் குணம்

கருதியே மணிகள் தன்னைக் கனத்தது வெள்ளை மூடும்
மருவியே யிமை தடித்து வறுத்திடும் நீரும் பாயும்
விரவியே சுரந்து தோன்றில் விண்ணது நோக்கிற் கூசும்
பரவியே குணங்கள் கண்டால் பற்பரோக மென்ன லாமே 462

பாடுகிறேன் பற்பரோ கத்தின் தன்மை
பாங்காக யானுரைப்பேன் பாருள் ளோர்க்கு
நீடுவிழி ரத்தமது சிவந்து காணும்
நெறியான புருவமது நெறித்துப் போகும்
காடுறையும் வனவாசம் திரித லாகும்
கடினமாம் பித்தமது தானே பொங்கும்
ஆடுதலின் கண்பார்வை அதிக மின்னும்
அப்பனே ரோகத்தி னாண்மை தானே 463

சொல்லிய பற்ப ரோகம்
நீரொன்று துலங்கும் ரத்தம்
அல்லக்கேள் கோதை நல்லாய்
சாத்திய மூன்று மாகும்
புல்சதை பற்ப ரோக
மசாத்திய மாகும் கேளாய்
பல்படத் தீரு மென்று
பகர்ந்தனர் முன்னோர் தானே 464

நீருறு பற்ப ரோக
குணங்கண்ணீர் மிகுதி யாகிற்
சோரிய இமைக ளத்துத்
தோன்றிடுந் திமிரத்தத் தாலே
சேருமின் ரோகஞ் செய்கை
இமைக்கண்ணுஞ் சிவந்து செந்நீர்
வாருமா மாங்கி ஷந்தான்
தடித்துள்ளே வளர்க்குங் காணே. 465

புருவத்தி னிமையின் மீது
பொருந்திடு பெருந ரம்பில்
மருவியே குடோரி யிட்டு
வடிந்திடு ரத்தம் போக்கி
அருவிநீர்ப் பற்ப ரோக
மவைகனப் பதுவு மாகித்
தெரிவையே யிதற்குத் தானுஞ்
செய்திடும் மருந்து கேளே. 466

தெள்ளிய யிமைத டித்துக்
கனத்தெழு முதிரந் தன்னில்
அள்ளிலை நெடுவேற் கண்ணாய்
அமிர்தமா மட்டைக் கட்டக்
கொள்சதை ரோகந் தன்னில்
உப்பினாற் குழையத் தேய்த்துத்
துள்ளிடுஞ் சோடுஞ் சோரை
போக்கிடு மருந்து ரைப்பேன். 467

## திரிபலாதிப் பொடி

திரிபலை கடிய காணந்
தேறமோ ரிதழின் மூலம்
நறுவிய முட்டைத் தோடும்
நந்திசா ரடையின் மூலம்
மறுபடி மடவின் துத்தம்
வருஞ்சிறு கீரை யோடு
உறுவது சீனக் காரம்
ஒன்றுமுக் கழஞ்சு தானே. 468

இவையெலு மிச்சஞ் சாற்றில்
இயலுற வரைத்து லர்த்தி
அவையினைச் சட்டி யிட்டு
அனலெரி வெளுத்த தானால்
நவையறத் தேய்த்துக் கொண்டு
நவிற்பற்ப ரோகத் திட்டால்
இவைபொறுத் திடுமே யென்று
இயம்பினா ரிறைவன் தானே. 469

(வேறு)

கருதியே யிமைகள் தன்னைக் கடித்துற மடித்துப் பார்க்கில்
பரவியே சதைதி ரண்டு பத்திரமாங் கிசமும் பட்டு
விரவியே சிவந்து தோன்றி விதுபற்ப ரோக மென்று
மருவியே மண்டலத் தாக்கு மகிழ்ந்து சோதிப்ப தென்றே. 470

செய்திது பின்னை நீயுஞ் சேர்கடுப் பொடியுந் தூவிப்
பொய்யறத் தேய்த்துப் பின்னைப் பொடிபட மதுரம் போக்கி
வெய்யநற் புளியைக் காய்ச்சி மேலிமை தன்னிற் பூசி
உய்யவே மூன்று நாளும் உகந்திபின் மருந்தி டாயே. 471

இதிலிடு மருந்து சேர்மின் இசைந்தவுப் பிலியின் சாற்றிற்
கதிபடு துருசு துத்தம் கருதியே பிசினுங் கூட்டி
இதிலிடு சுக்குத் தேனும் இதமாக வேநீ கொண்டு
பதிபடு சீலை தன்னிற் பசைபடத் தேய்த்தி டாயே. 472

பசைபடத் தேய்த்து நீயும் பணிவினால் நிழலு லர்த்தி
திசைப்படப் புரியுங் கண்கள் திங்கள்மங் கையர்மு லைப்பால்
அசைபட வரைத்து மங்கே அமர்ந்துற வொழுகு மாகில்
விசைபட வுறுத்தி நொந்த விழிசுக மாகுந் தானே. 473

(வேறு)

பசும்பாலை ஆறு நாட்கள் நேத்திரத்தில் போட்டால் தீரும்.

(வேறு)

தும்பைப்பூ, நந்தியா வட்டப்பூ, காரெள்ளின்பூ, திப்பிலி இவற்றை தேன்விட்டு மைப்போலரைத்துப் போடவும். 475

(வேறு)

ஓரிலைத் தாமரை வேர், சங்கு, தலையோடு, துத்தம், துருசு, வெள்ளைக் கற்பொடி இவைகளை ஒரு நிறையாக எலுமிச்சம் பழச்சாற்றிலும், முருங்கையிலைச் சாற்றிலும் வகைக்கு ஒரு நாளரைத்துக் கபிறு செய்து முலைப்பாலிலுரைத்துக் கண்ணில் நாற்பத்தோர் நாள் போட்டு வரத் தீரும். 476

## 3. கழலை மூன்றின் குணம்

இயம்பிய கழலை நீரால்
இரத்தத்தாற் சதையி னாலே
தயங்கிய கழலை மூன்றிற்
சாத்தியம் வகுத்துக் கேளாய்
இயங்கிய இரத்தத் தாலே
இசைந்திடுங் கழலை தீரா
தியங்கிய சதைநீர் தீருந்
தீர்ந்திட மருந்து கேளே 477

உருண்டெழு வியாதி தன்னை
நோய்வளர்ந் துள்ளே தோன்றும்
மருண்டிடும் முளையை நீக்கி
வழுத்திய கருவி விட்டுப்

பொருந்திய குருதி யுண்டு
    பூவையே யெண்ணெய் நெய்யாற்
திருந்திடத் தாரை கோரி
    வேதனை தீர்த்தி டாயே 478

## 4. இமைத்தடிப்பின் குணம்

குமையவே குத்தி நொந்து கூர்விழி நீரும் பாயும்
சமையவே புருவம் வீங்கிச் சதைபோல சிவந்து காட்டும்
அமையவே பீளை பாயும் அருண்டுதான் புகைந்து நிற்கும்
இமையடி தடிப்பு யென்று ஏற்றினார் தமிழ்வல் லோரே 479

பொங்கியே பீளை யுண்டாம் பொருந்தவே யிமைக னக்கும்
மங்கியே புகைந்து நீரும் மாறாதே வெளுத்து வீழும்
அங்கிபோல் முகமு மெய்யும் அரோசிகம் வாந்தி யாகும்
குங்கியே குணங்கள் தானும் கும்பிமை தடித்தல் தானே 480

தானான யிமைநடுவில் முனைக ளோரம்
    தாமிரத்தி னிறம்போலச் சோரி தங்கி
வேனான கட்டிகளை மிகவுண் டாக்கி
    வெடித்துமே நீர்க்கோர்த்துக் கம்ம லாகும்
கானான கண்விழிங்கிப் பிதுங்கிக் காட்டும்
    கண்ணுக்குள் ளுருண்டையாய்ப் புடைத்து விம்மும்
பானான மாமிசங்கள் மொத்தை யாகி
    பருக்குமே யிமைதடிப்பின் குணமி தாமே 481

பையரி பரந்த கண்ணிற்
    பரபரப் பதிக மாகி
வெய்யநீர்த் ததும்பி விம்மித்
    திமிர்த்தது விறுவி றுப்பாய்
உய்யிமை விளிம்பு மெத்தக்
    கணக்கலொண் டொடியே கேளாய்
செய்யிமை தடிப்புத் தானேய
    சாத்திய மென்று செப்பே 482

### திரிபலாதி எண்ணெய்

திரிபலை வேங்கைக் காதல்
    செய்யகூ வளைவேர் சீந்தில்
நறுவிய சிற்றா முட்டி
    நன்னாரி வேரிலா மிச்சு

உறுவெட்டி மிளகு தான்றி
யோடமுக் கிராவேர் மன்னே
மருவிய பன்னி ரண்டும்
மருந்தொன்று பலமும் நாலே 483

ஒக்கவே தறித்தி டித்து
ஒன்றினாற் றூணி நீரிற்
புக்கியெட் டொன்றாய்க் காய்ச்சி
வடித்தெண்ணெய் பொருந்த நாழி
தக்கபா லிளநீர் கையான்
சதாவேரி கொடுப்பை சங்கு
மிக்கசம் பீரம் பத்து
வெற்றிலை கொத்தான் நெல்லி 484

இவையொன்று சாறு நாழி
எண்ணெய்யி னோடு விட்டுச்
சுவையுறு மதுரங்கோட்டம்
சுக்கொடு தேவ தாரம்
நவையுறு நாகப் பூவும்
நாகண மேல மாஞ்சில்
சவையுறு சாதிப் பத்திரி
சந்தனங் கிராம்பு தானே 485

கச்சோலங் கார்க்கோ லோடும்
கருதும்வெட் பாலை வங்கம்
வச்சவோ ரொன்று மூன்று
சழஞ்சுகொள் மானே நீயும்
விச்சென யிடித்துத் தூவிப்
பதத்திலே வெந்த யெண்ணெய்
இச்சையாய் முழுகு வோர்க்கு
இமைதடிப் புப்போங் காணே 486

### பஞ்சதுத்த அஞ்சனப் பொடி

சீனக் காரந் துருசுதுத்தம்
செய்யும் நிமிளை மனோசிலையும்
தானே யெடுத்துச் சம்பீரச்
சாற்றா லரைத்து வட்டாக்கிக்

கானக் குழலாய் சட்டிவைத்துக்
கனலா யெரித்து வெளுத்ததென்றால்
ஊனத் திமைக்கண் விழியெழுத
இமையிற் தடிப்பு வோடிடுமே 487

(வேறு)

மாதளம்பூ, நற்சீரகம், நெருஞ்சிக்காய், இவைகளை ஒரு நிறையாகப் பனை மட்டைச்சாற்றில் திரட்டிக் கயிறாக்கிக் கொண்டு முலைப்பாலிற் குழப்பித் தீட்டி வர நீங்கும். 488

(வேறு)

செஞ்சந்தனம், சாத்திரவேதி, தேற்றான் விதை, இவைகளை ஒரு நிறையாக ஆட்டி, வெண்ணெய்யிற் குழப்பி வளையமிட்டு வந்தாலும் தீரும். 489

(வேறு)

1 படி ஆவின் பாலில் 1 பலம் பொற்றலையின் வேரையாட்டிக் கலக்கிக் காய்ச்சி உறைக்குற்றிக்கடைந்து வெண்ணெய் திரட்டிப் போட்டு வந்தாலும் தீரும். 490

(வேறு)

கருக்கின புழுங்கலரிசியும், அபினும் சமமாய் ஊமத்தஞ் சாற்றில் களிம்பாயரைத்து, விழியிற் புறவளையமிட்டு, கொடுப்பை, சிறுகீரை, வெட்பூலா, மிளகு இவை வகைக்கு 1 எலுமிச்சங்காயளவு அரைத்து ½ படி ஆவின்பாலிற் கரைத்துக் குழம்பாய்க் காய்ச்சித் தலையில் தளமிட்டு வர நீங்கும்.

(வேறு)

சிற்றாமணக்கின் வேரும், பேராமணக்கின் வேரும், ஓரளவாய் வேலிப்பருத்திச் சாற்றில் மைபோலரைத்துக் கலக்கிக் காய்ச்சி விழியிற் புறவளையமிட்டு உச்சியிற் தளமிட்டு வர நீங்கும்.

## 5. இமைநீர்ப் பாய்ச்சலின் குணம்

சிரமதிற் சேற்மம் நின்று செறியும்நீர் விழிந ரம்பில்
மருவியே கனத்து வூர்ந்து மற்றது திமிர்த்து வீங்கி
முருகவிழ் குழலி னாளே மொழியுநீர்ப் பாய்ச்ச லென்று
விரைவது வறியச் சொன்னேன் விரும்புநீ யறிந்து கொள்ளே

## வில்வாதித் தைலம்

வேங்கை வைரம் வில்லைவேர்
மேவு சீந்தில் நன்னாரி
பாங்காஞ் சிற்றா முட்டிவேர்
பலமோ ரொன்று மும்மூன்று
வாங்கு நீர்பதி னாழிவிட்டு
வற்றி யிரண்டு படியானாற்
தாங்கும் பச்சிலை கச்சோலந்
தன்னோ டேல மதிமதுரம் 494

மதுரங் கோட்டம் கொத்தமல்லி
வளர்நா கப்பூ சதகுப்பை
இதஞ்செவ் வள்ளி சாதிக்காய்
இலவங் கத்தோல் வெந்தயமும்
கதமா மிளகு சீரகமும்
கையான் சாறுரி பாலுரியும்
அதனோ டெலுமிச்சஞ் சாறுழக்கு
அளவாய்க் கூட்டி தைலம்வைய்யே 495

வையே தைலப் பதம்வத்தால்
வருடி வடிக்கும் நேரமதில்
மெய்யே யொருபிடி மிளகுபொடி
மேலா மபினி கழஞ்சிட்டு
பைய வடித்து வெந்நீரிற்
பதமாய் முழுகி வரும்பொழுது
நையு மண்டை நோதல்விடும்
நயனநீர்ப் பாய்ச்சல் மாறிடுமே. 496

## 6. முடமயிரின் குணம்

கனத்திமை தடித்துக் கண்ணும்
கவிழ்ந்திடு பார்வை யாகும்
சினத்துடன் மயிருங் குத்தி
தினவும்நீர்ப் பீளை சேரும்
இனத்துடன் பூவுங் காணும்
இமையினில் மயிரும் நான்று
முனைத்திடு மாசந் தோறும்
முடமயி ரென்ன லாமே. 497

சூழ முளைக்கு மிமையடங்கச்
சுருண்டு குத்தி நீர்வடியும்
தாழ விழிக்குங் கருமணியிற்
சற்றே வெளுப்புப் படர்ந்துவரும்
ஆழ விழியு மடங்கிவரும்
அதிகந் தலைநோய் நாசிதனில்
மூள விழிதா னரிதாகும்
முடமயி ரிதுதா னெனலாமே. 498

மூட்டவே முடமயிரின் குணத்தைக் கேளு
முசியாம லெந்நேரங் கசிவுண் டாகும்
தீட்டியே யிருவிழிக் கிமையே பூண்டல்
தெளிவாகும் கண்ரோகம் தெளிந்து போகும்
பாட்டகநா ரெனமூலர் நந்தி சொல்ல
பாடிவைத்த தன்வந்திரி யசுவனிக்குச் சொல்ல
நீட்டமுடன் அசுவனியும் யூகிக்குச் சொல்ல
யூகியென்ற முனிதானும் நிகழ்த்திட் டாரே 499

நிகழ்த்திட்டார் பிறவலியு மிகவு மாகும்
நேரான கண்சிவப்பு நெடிய கூச்சம்
புகழ்ந்திட்ட யிமை தடிப்பு கண்ணோ பொங்கல்
புகைச்சலுடன் மஞ்சணித்து வெளுத்துக் காட்டும்
தகழ்ந்திட்ட கொட்டாவி சோம்ப லாகும்
தாக்கான புருவமது துடிப்புக் காணும்
மகிழ்ந்திட்ட யூகிமுனி சிகிச்சா சாரம்
மார்க்கமுடன் தொகுப்பறிந்து மறைந்திட் டாரே.

பொருந்திடு யிமை மடிந்து
நீரினாற் புண்ணே யாகி
சரிந்திமை ரோம முள்ளே
சாய்ந்தங் குத்தி நோவாந்
தெரிந்திடு மணிவெ ளுத்துத்
திமிரமே சேருங் கண்டாய்
அறிந்திடா யிந்த ரோக
முடரோமஞ் சாத்திய மாமே. 501

### இதற்குக் கருவி செய்வது

சாய்ந்திடும் ரோம மூல
    வொழுங்கினைத் தவறா நோக்கி
ஏந்திமேல் மறித்துக் கொண்டு
    எள்ளிடைச் சதையை நீவி
மாந்திட வேரி னோடே
    வளைந்துமே யிமையில் மானே
சேர்ந்திட எடுக்கக் கட்டத்
    தீருமென்று ரைத்தார் முன்னோர் 502

### இரட்சை

அறிந்திடு மூல ரோமத்
    தளவிலோர் கருவி செய்கை
சிறந்திடும் விழியி னாளே
    திரிந்துள்ளில் வளைந்த கம்பி
குறித்ததை யனத்திக் கொண்டு
    கூரிமை விளிம்புள் ளேக
மறுத்துவைத் தீரு மென்று
    மாதவ னுரைத்த வாறே 503

### இங்குளாதி குழம்பு

சோம னாதி முக்கழஞ்சு
    துருசு கழஞ்சி வையிரண்டும்
நாமே சொன்னோம் வெதுப்பியதை
    நவிலும் வெண்ணெய் தனிலிட்டுச்
சாம மரைத்து முடரோமஞ்
    சாரு மிமையி லெள்ளளவு
வாம முலையா யெழுதினக்கால்
    வளரும் ரோமம் மாய்ந்திடுமே. 504

### (வேறு)

சங்குப்பொடி 4 பலம், இஞ்சி 2பலம், மிளகு, $\frac{1}{8}$பலம், இந்துப்பு 1பலம், இவை சேர எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருண்டை செய்து இமையிற் தடவ முடமயிர் குணமாகும் 505

(வேறு)

கள்ளிப்பால், வெள்ளைச் சீலையிலூட்டி, பூநாக மரைத்துக் குழம்பாக்கி, முன் சீலையிலூட்டி உலர்த்தி, பிறகு தாளக மரைத்துப் பொடி செய்து குழைத்து. முன் சீலையிலூட்டி, காய வைத்து, சீலையைக் கொளுத்தி வெந்த வாறே வேப்பெண் ணெய் விட்டு மை பண்ணி, அத்துடன் செங்கற் தூளும் பீத ரோகணியும் கூட்டி, கலத்தொடு கலம் வைத்து இழைத்து அழுத்திக் கண்ணிலிட முடமயிர் தீரும்.

(வேறு)

அரைக்கீரையை பச்சரிசியுடன் திண்ண முடமயிர் தீரும்.

(வேறு)

திப்பிலியை எருமைச்சாணி பிழிந்த நீரில் உரைத்துக் கண்ணி லிட முடமயிர் தீரும்.

## 7. இழிசக் கண்ணின் குணம்

கூறிய யிமைவி ளிம்பு
கொழுகொழுத் ததில்நீ ரோடி
ஊறிடும் புண்ண தாகி
யொடுவது மாறா தாகும்
பார்விழி திறக்கிற் கூசும்
பலபல விதன மாகும்
வார்முலை மானே யிழிசக்
கண்ணது சாத்திக மாமே. 509

**நவசாரக் குழம்பு**

நவச்சாரங் கழஞ்சிந் துப்புத்
துருசிவை மூன்று நன்றாய்ச்
சுவைபெறு வெண்ணெய் கூட்டிச்
சுணங்குவெண் கலத்தி லிட்டு
அவைதனைச் சங்கி னாலே
அரைத்துமத் தித்துக் கொண்டு
இவையினை யிழிசக் கண்ணுக்
கெழுதிட வேணு மென்று
சவையுறு முன்னோர் சொன்ன
சாத்திர மறிந்து கொள்ளே 510

## 8. இமை யிறைச்சியின் குணம்

வாத தோடஞ் சீறியதில்
வருத்தும் விரண வியாதியதில்
ஏது வாக யிமையருகும்
இயம்பி னோமசாத் திகமென்று
ஆதி முதல்வ னுரைத்தருளும்
ஆயுறு வேதச் செய்கைதன்னை
நீதி முறையை முனியு ரைத்த
குணத்தை நீயு மறிந்துகொள்ளே. 511

## 9. புழுக்கடி (அ) கிருமி தோடத்தின் குணம்

உள்ளிமை விளிம்பி லூறும்
உரோம முதிர்ந்து புண்ணாம்
முள்ளுறு போலக் காந்து
மொடுவது பாய்ந்து ரத்தம்
வெள்ளிமை சிவக்க வீங்கி
மிகத்தடித் திடுங்கு ணங்கள்
கள்ளிவை நெடுவேற் கண்ணாய்
புழுக்கடி கண்கள் தானே 512

### மருந்து

நானாங் கள்ளி வடக்காக
நாடும் வேரை பறித்துலர்த்தி
தேனார் சீலை தனிற்சுருட்டிச்
சிற்றா மணக்கெண் ணெய்யினால்
மானே யெரித்து வெண்கலத்தில்
மையே பற்ற வைத்திதனைக்
கானங் குழலா யெழுதினக்காற்
கருதுங் கிருமி மாய்ந்திடுமே. 513

நேரான நேத்திரத்தின் குணத்தைக் கேளு
நிகரில்லா பிடரிவலி கருப்போ மெத்தக்
கூரான விழிதனிலே குத்தலுண் டாகிக்
கோளாறு செய்துமேதான் குமுறி நோவும்
சேராடுங் கண்நடுவில் புள்ளி காணும்
சிராய்போல புழுவோடு எரிச்ச லாகும்
நீராடு முகவலியு மிகவும் காணும்
நெறியான யூகிமுனி நிகழ்த்தும் வாறே 514

நீட்டிய தினவுங் கூச்சம் நீர்வரு மிமையும் வீக்கம்
கூட்டிடும் பீளை சேரும் குருமுளை போலே தோற்றும்
நாட்டியே மயிரு திர்ந்து நற்சதை ரத்த வீழும்
காட்டிது மயிர்ப்புழு வெட்டு கண்டவ ருரைத்த வாறே 515
போதவே யிமைக ளத்துப் பொங்கியே தினவுண் டாகும்
ஊதவே யெரிப்புண் டாகும் உதிர்ந்திடு மயிர்க ளெல்லாம்
கால்தலை யுடம்ப தெங்கும் கரகர வென்று தோற்றும்
கோதையே யிமைகள் தானும் கொடும்புழு வெட்ட தாமே 516

### புழுவெட்டுக்கு மை

நல்லதோர் வெண்டூசை யெருக்கம் பாலில்
நனைத்துலர்த்தி ஐம்முறையிவ் வாறே செய்து
துல்லியமாந் திரியாக்கிப் பழகி வந்த
தூயவக விடைப்பசுநெய் துலங்க விட்டு
மெல்லியலே யத்திரியை யதனி லிட்டே
விளக்கேற்றிப் புதுச்சட்டி யொன்றி னுள்ளே
ஒல்லையூமத் தினிலைச் சாறு பூசி
உலர்த்திவ்வா றைந்துமுறை யுலர்த்து வாயே 517

உலர்ந்ததோர் சட்டி தன்னை உரைத்தநல் லகலின் மீது
நலந்தர மூடி நெய்யை நன்கது குறையுந் தோறும்
கலந்து சட்டியில்சேர் மையைக் கவின்விளக் கெண்ணெய் விட்டு
வலந்தரக் குழைத்து வையும் மையினால் மாயும் நோய்கேள்

புருவத்தின் கீழு மேலும் பொருந்திய யிமையின் மீது
உருவொத்துத் தினைபோற் சின்ன கொப்புளம் உதிர்ந்து ரோமம்
திருவொத்த மாதே வீழும் திண்புழு வெட்டா மிந்நோய்
மருவிடும் வெயில்முன் வந்த மகத்தான பனியாம் பாரே 519

(வேறு)

கடுக்காயை பொட்டியும் மூடியு மாயுடைத்து, அதற்குள்ளே கிராம்பு இரண்டும், இதற்குச் சமனாக சாதிபத்திரி, இவைகளைக் கடுக்காயிலடைத்து, வெண்ணெய் அடைத்து மூடி, நூல்கொண்டுச் சுற்றி, விளக்கு மூக்கிற் சுட்டு, பொடித்து, மேல் முயற்சி புழுக்கைச் சுட்டுப் பொடித்து, சமன் கலந்து, மேல், சாறுவகை கலக்கொழுஞ்சியிலை, கருமணத்தங்காளியிலை, கையாந்தகரை, அமுக்குராத்தழை, புண்ணாக்குப் புட்டுத்தழை, நாயுருவித்தழை, கோழியாவாரந்தழை, முள்காய்த்தழை, வெற்றிலை, எலுமிச்சம் பழச்சாறு இதில் தேய்த்து, வெண்ணெய் சேர்த்து கண்ணுக்கு இடவும். புழுவெட்டு தீரும். 520

(வேறு)

துத்தம், பலகறை, தேற்றாங் கொட்டை, மனோசிலை, தலை யோடு, மிளகு, திப்பிலி, சேவல் நெஞ்செலும்பு வகைக்கு ½ கழஞ்சு, எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து கயிறு செய்து காடியிலுரைத்துப் போடவும், 521

(வேறு)

கடல் நுரை, மிளகு, சீனாக்காரம், அதிமதுரம், வெண்காரம், கடுக்காய், துருசு, துத்தம், மனோசிலை, அரிதாரம், திப்பிலி, செம்புப் பொடி ஒரு நிறையாய்ப் பழச்சாற்றிலரைத்துக் கயிறு செய்து முலைப் பாலில் உரைத்துப் போட்டு வந்தாலும் தீரும்.

(வேறு)

நல்லெண்ணெய்யில் விளக்கேற்றி, வெற்றிலையில் நல்லெண் ணெய் தடவி வாட்டிப் பிழிந்த சாறு, துத்தம், துருசு இவற்றைக் கூட்டி, மேற்படி சாற்றால் அரைத்து கண்ணிலிடப் புழுவெட்டுத் தீரும்.

(வேறு)

துத்தம், துருசு, வெள்ளைப் பாடாணம் மூன்றும் கொண்டு பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர் ஒரு விளாங்காய் மாத்திரம் அரைத்துக் குகை பண்ணி, இந்த மூன்று மருந்தும் நடுவே வைத்துப் புளியம் பரணியில் வைத்துச் சுட்டு வெண்ணெய் கூட்டி கலப்பிரந் தேய்த்துப் புருவத்தில் பூசப் புழு செத்துப் புண்ணும் ஆறும். 524

(வேறு)

துத்தம், துருசு, வெள்ளைப் பாடாணம், இவைகளை ஓர் நிரையாய்ப் பொன்னாங்காணி இலைச் சாற்றிலும், சிறுகீரைச் சாற்றிலும் ஒரு நாளரைத்து வில்லை தட்டிக் காயவைத்து மூலிகை யின் வேர்களை விளாங்காய் பிரமாணம் அரைத்துக் குகை பிடித்து அதில் மேற்படி வில்லைகளை வைத்துப் பொதிந்து புளியம் பரணிக்குள் வைத்துப் புடம்போட்டு ஆவின் வெண்ணெய் கூட்டிக் களிம்பு போலரைத்துக் கொண்டு புருவத்திலிட்டு வரத் தீரும், புழு செத்துப் புண் ஆறும். மயிர் முளைக்கும். 525

(வேறு)

வெள்ளிய சீலையில் கள்ளிப் பாலும், எருக்கம் பாலும் ஊட்டி உலர்த்தி, பசுவின் நெய்யில் மைபற்றி நாக்கப் பாம்பு வேப்ப எண்ணெய்யில் பொரித்து, எண்ணெய்யிற் கலப்புரஞ் செய்து சிமிழிலடைத்துக் கண்ணிலிடக் கொடும்புழு மேய்ச்சல்போம். 526

(வேறு)

கலங்கொம்பு அல்லது மிளகரணை வேரைத்தேனில் உரைத்து இடத்தீரும். 527

## 10. சுற்றுக் குலைவின் குணம்

அன்னமே யிமையின் ரோமம்
உதிர்ந்தது புண்ணே யாகும்
பன்னிவு நீரும் பாயும்
பலம்பட வலிக்குங் குத்தும்
கொன்விழி மயக்க மாகும்
கொழுகொழுத் திழையும் பீளை
இன்னிமை குணங்கள் சுற்றுக்
குலைவென யியம்ப லாமே 528

குழம்பு

பஞ்ச லவணம் பொரிகாரம்
பகருந் துருசி வையேழும்
மிஞ்சா தொன்று கழஞ்சுகொண்டு
மின்னே வெண்ணெய் யதிலிட்டு
ஒஞ்சா தரைத்து விழியெழுத
ஓடு மயக்க முடரோமம்
துஞ்சுஞ் சுற்றுக் குலையிவைகள்
தோன்றா தோடிப் போமென்றே 529

# 7. குவளை நோய்களும் மருத்துவமும்

கண்ணின் கீழ் இமையில் (குவளையில்) மட்டும் பதினைந்து நோய்கள் தோன்றுவதாகக் கூறப்படுகின்றன. அவை,

1. கண்ணோடு
2. பூசாந்திரம்
3. நீர்ப்படர்த்தி
4. இரத்தப் படர்த்தி
5. சதைப் படர்த்தி
6. நீர்க்குவை
7. இரத்தக் குவை
8. சதைக் குவை
9. விரணப்பரு
10. விப்புருதி
11. இமைக்குரு
12. குமிளம்(இமையிறு கட்டி)
13. நயன வாதம்
14. நேத்திர வாய்வு
15. கண்ணோவு

இவற்றிற்கான விளக்கங்களையும் மருந்துகளையும் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

**1. கண்ணோடு**

மூக்கின் அடியிலுள்ள கடைக்கண்ணிலிருந்து குமிழாக எழும்பிச் சவ்வுபோலப் படர்ந்து மூடியிருந்து பின் அது வெடித்து உள்ளேயிருந்து நீர் வரும். இந்நோய் தீராதது என்றே கூறுவர்.

**மருந்து 1**

கருவி மருத்துவம் செய்து அகற்றிப் பின்னர் மேல் மருந்திட்டுப் புண்ணை ஆற்றுவர். (531)

2. **பூசாந்திரம்**

குவளையில் பீளை தங்கிய இடத்திற்கு எள்ளளவு மேலே பருத்தி வித்துபோல ஒரு எழுச்சி காணும். கண்ணில் வலியும், கண்ணில் கூர்மையான கருவி பாய்ந்தது போன்ற உளைச்சலும் உண்டாகும். (532)

இந்நோய் மருத்துவத்தால் தீரக் கூடியதே.

**மருந்து**

கருவி மருத்துவம் செய்து ஆற்றுவர்.

3. **நீர்ப்படர்த்தி**, 4. **இரத்தப்படர்த்தி**, 5 **சதைப்படர்த்தி**,

குவளையில் இளகிய நீரும், சதையும், இரத்தமும் எரிச்சலுடன் தோன்றிப் படர்ந்து வருவனவாகும்.

இவை மூன்றும் மருத்துவத்தால் தீரக் கூடிய நோய்களேயாகும்.

**மருந்து**

கண் நோய்களுக்குப் பொதுவாக இடும் பொடி மருந்துகளை இடுவர். (533)

6. **நீர்க் குவை**, 7. **இரத்தக் குவை**, 8. **சதைக் குவை**

குவளையில், நீராலும், இரத்தத்தாலும் சதையாலுமான முளைகள் கல்போன்றுத் திண்மையாகவும், குன்றி மணி போலவும் புடைத்துக் காணப்படும்.

**மருந்து**

கருவி மருத்துவம் செய்து முளையை நீக்கிவிட்டுத் துருசு சேர்ந்த கண் மருந்துப் பொடிகளைக் கொண்டு புண்ணை ஆற்றுவர். (534)

9. **விரணப்பரு**, 10. **விப்புருதி**, 11. **இமைக்குரு**, 12. **குமிளம்**

குவளையில் தோன்றும் இந்நோய்களுக்குப் பொதுவாகக் கூறப்படும் கண் மருந்துகளைப் பயன்படுத்துவர். நூலில் கூறப் பட்டுள்ள பிறநோய்களுக்கான மருத்துவங்களையே இந்நோய் களுக்கேற்றவாறு செய்வர். (535)

13. **நயன வாதம்**

கண்கள் சிவந்தும், குளம்போல நீர் நிறைந்துத் ததும்பியும் காணும், தலை சாய்த்துப் படுக்க இயலாமல் கண்கள் மிகவும் வலிக்கும்.

**மருந்து 1**

புருவத்தின்மீது கருவி மருத்துவம் செய்தும் புண்ணை ஆற்றத் தீரும். (536-537)

**மருந்து 2**

நல்லெண்ணெய் ¼ படி, வெள்ளுள்ளிச்சாறு, முருங்கை வேர்ச் சாறு, குப்பைமேனிச் சாறு, தும்பைச் சாறு இவை வகைக்கு ¼படி இத்துடன், கோட்டம் 3 கழஞ்சு சேர்த்துக் காய்ச்சி வடித்து மூன்று நாட்கள் தலையில் தேய்த்து முழுகி வரவும் தீரும். (538)

## 14. நேத்திர வாயு

கண்களில் வாய்வு தங்கிக் கண்ணை இழுத்துக் கொண்டு, புருவத்தில் குத்தலும் வலியும் உண்டாகும். கண்ணில் தினவு, எரிச்சல், பார்வைமாறுபாடுகள். இவையும் தோன்றும். (539-540)

**மருந்து 1**

நேத்திர வாயு கண்டவர்களுக்கு நடுநரம்பறிந்து குடோரி செய்து புண்ணை ஆற்றுவர். அவ்வாறு செய்யும்போது இரத்தம் மிகவும் பாயுமானால் அதனால் ஏற்படும் கடுப்புதீர வேப்பெண் ணெய் 1 நாழி எடுத்துக் காய்ச்சி அத்துடன், வசம்பு, பூண்டு, சன்னிநாயகம், முசுறுமுட்டை, நாங்கூழ், கோழிக்காரம், நந்தியா வட்டம், திரிகடுகு வெட்பாலையரிசி இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்துப் பொடித்துக் காய்ச்சி வடித்துத் தலைமுழுகி வரவும் தீரும். (541-542)

**மருந்து 2**

நல்லெண்ணெய், எலுமிச்சம் பழச்சாறு, கரிசலாங் கண்ணிச் சாறு, தாமரைப் பூச்சாறு, நொச்சியிலைச்சாறு, தாழம் விழுதுச் சாறு இவை வகைக்கு 2 படி சேர்த்து, அத்துடன், சந்தனம், வெட்டிவேர், இலாமிச்சவேர், வாய்விடங்கம், கடுகுரோகணி, பஞ்சலவணம், ஏலம், கிராம்பு, தாளிசபத்திரி, கோட்டம், மஞ்சள் இவை வகைக்கு 1 காசு எடையாகச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முறைப்படி முழுகி வரவும் தீரும். (543)

**மருந்து 3**

பசுவின் பால், நெல்லிக்காய்ச் சாறு, பொன்னாங்காணிச்சாறு, கருஞ்செம்பைச்சாறு, இவை வகைக்கு 1 படி, ஆமணக்கெண் ணெய், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 2 படி இவற்றுடன் சீரகம் 10 பலம் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (544)

**மருந்து 4**

திரிபலை, தேற்றான்விதை, தாமரைமணி, இவற்றை ஓரளவாய்க் கொண்டு கற்றாழைச் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி, முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (545)

**மருந்து 5**

முலைப்பால், கடுக்காய்த்தூள், இந்துப்பு, சர்க்கரை இவற்றைச் சேர்த்துச் சூடாக்கி துணியில் முடிந்து ஒற்றடம் செய்யவும் தீரும். (546)

**மருந்து 6**

முலைப்பாலில் புளியைக் கரைத்துக் காய்ச்சி எடுத்துக் கண்ணைச் சுற்றிப் புறவளையம் இடவும் தீரும். (546)

**மருந்து 7**

படிகாரம், கடல்நுரை, நவச்சாரம், துத்தம், துருசு இவற்றை வறுத்தெடுத்து பசுவின் வெண்ணெய் கலந்து இடவும் தீரும். (547)

**மருந்து 8**

துத்தம். துருசு, சீனாக்காரம், வெண்காரம், தலைமயிர் சுட்ட சாம்பல், இவற்றை வெண்ணெய், எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துப் போடவும் தீரும். (548)

**மருந்து 9**

நல்லெண்ணெய், முலைப்பால், வெற்றிலைச்சாறு இவை வகைக்கு 1 உழக்கு, இவற்றுடன், மிளகு, அதிமதுரம், தானிக்காய்த் தோல், கடுக்காய்த் தோல், மஞ்சள் இவற்றைக் கூட்டியரைத்துக் காய்ச்சி வடித்து, அபின் சேர்த்து, நெற்புடம் வைத்தெடுத்துத் தலையில் தேய்த்து முழுகவும் தீரும், (549)

## 15. கண்ணோவு

கண்ணில் ஏற்படும் மற்ற நோய்களுக்குத் தனித் தனியே பெயர்கள் இருப்பினும், இவ்வகை நோய்க்கு மட்டும் கண்ணோவு என்றே பெயரிடப்பட்டுள்ளது. ஏனெனில், இந்நோய் எல்லாக் காலத்திலும் உண்டாகாமல், காற்றுக் காலத்தில் மட்டுமே உண்டாகும். இமைகள் வீங்கி இருக்கும். கண்கள் புண்ணாகி இருக்கும். நீர் வடியும். பீளை கட்டும். தூக்கம் வராது. நோய்

உண்டான மூன்று நாள் வரையில் தொல்லை அதிகமாக இருக்கும். வெளிச்சத்தைப் பார்க்க முடியாது. இந்நோய் 15 நாட்களுக்குள் தீரக்கூடியதாகும். இவையே இந்நோயின் பொதுவான குணங் களாகக் கூறப்படுகிறன. (550)

**கண்ணோவு ஏற்படக் காரணங்கள்**

உடலில் உண்டாகும் அதிக சூட்டினாலும், மிக்க வெய்யி லாலும், காற்றாலும், தலையில் அதிக சுமையைத் தாங்குவ தாலும் இந்நோய் அதிகமாக உண்டாகின்றது என்பர். (521)

இக்காரணங்களைக் கருத்தில் கொண்டே இந்நோய்க்குப் பல் வேறு மருந்துகள் பல சுவடிகளிலும் கூறப்படுகின்றன.

**மருந்து 1**

கண்ணில் மிகவும் கடுப்புடன் அழன்று, கலங்கி இருப்பின், உள்ளங்காலைச் சுத்தம் செய்து, பசுவின் நெய்யை நன்றாகத் தேய்க்க வேண்டும். பிறகு, தவிடு மாவினால் உள்ளங்காலில் தேய்த்து அழுக்கைப் போக்கவும். கண்ணைச் சுற்றிலும் காடி யால் கழுவி விட்டு நன்கு அரைத்த சந்தனத்தைப் பூசவும் கண், குளிர்ச்சியடையும். (552)

**மருந்து 2**

சோற்றுக் கற்றாழைச்சாறு, திருநீறு, முலைப்பால் இவற்றைக் கலப்பிரத்திலிட்டுத் தேய்த்துக் கண்ணைச் சுற்றிலும் பூசவும் தீரும். (554)

**மருந்து 3**

பசுவின் பால் 2நாழி, புளியிலை 2 பிடி அளவில் சேர்த்துக் காய்ச்சி, 1 ஆழாக்காக வற்றக் காய்ச்சி எடுத்துத் துணியில் கட்டிக் கண்ணைச் சுற்றிலும் ஒற்றடம் கொடுக்கவும் தீரும். (555)

**மருந்து 4**

கடுக்காய் 6 பங்கு, மிளகு 5 பங்கு, திப்பிலி 3 பங்கு. தேற்றான் விதை, இந்துப்பு இவை ஒவ்வொன்றும் 1 பங்கு என்ற அளவில் சேர்த்து 7 நாட்கள், பழச்சாறு, முலைப்பால் இவை விட்டரைத் துருட்டி உலர்த்தி, முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (556)

**மருந்து 5**

எலுமிச்சம் பழச்சாறு 1 உழக்கு, கறியுப்பு 1 உழக்கு, இந்துப்பு, துருசு இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து வெண்கலக்

கல்வத்தில் செம்பால் அரைத்து, சீலையில் தடவி உலர்த்தி வைத்துக் கொள்ளவும். இது கரும் பச்சை நிறமுடையதாக இருக்கும். இச்சீலையைத் தாய்ப்பாலில் ஊற வைத்து வெதுப்பிக் தசக்கிக் கண்ணிலிடக் கண்ணிலுள்ள வலி யாவும் தீரும். (557-558)

**மருந்து 6**

சேராங் கொட்டை, இந்துப்பு, பீதரோகணி, திருகுக்கள்ளி வேர் ஆகிய இந்நான்கையும் நன்குக் கறுக்கிச் கொண்டு பழச் சாற் றாலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தாய்பாலில் உரைத்திடவும் தீரும். (559)

**மருந்து 7**

வேப்பிலைக் கொழுந்தை நன்றாக அரைத்து எடுத்துப் பசு வின் நெய்யில் குழைத்துக் கண்ணைச் சுற்றிப் பூசவும் வலி தீரும். (560)

**மருந்து 8**

தவசி முருங்கை வேரை முலைப்பாலில் சேர்த்தரைத்துக் கண்ணைச் சுற்றிப் பூசவும் கண் வலி தீரும். (5:0)

**மருந்து 9**

வெட்பூலாவேர், பொன், பவளம், வெள்ளி, முத்து, திப்பிலி, பச்சைக் கற்பூரம், செம்பு, துத்தம், தலையோடு, கோரோசனை இவற்றை நிம்பஞ் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி, முலைப் பாலில் உரைத்து இடவும் தீரும். (562)

**மருந்து 10**

எருக்கம்பால், திரிகடுகு, திருநீறு இவற்றை நறுக்கிப் பொடி யாக்கிச் சிமிழில் அடைத்து வைத்து நாசியில் நசியம் செய்யவும் கண்ணோவு தீரும், (563)

**மருந்து 1I**

பேய்ப்புடல், கொன்றைப்பிசின், அதிமதுரம், பசுவின் நெய் முலைப்பால் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி வடித்து மூக்கில் விடவும் தீரும். (564)

**மருந்து 12**

எருமையின் பால், நல்லெண்ணெய் இவற்றுடன் நீர்முள்ளி, கருநொச்சி, முல்லை. சிற்றமட்டிவேர் இவைகளைச் சேர்த்தரைத் துக் காய்ச்சி வடித்து மூக்கில் விடவும் தீரும். (565)

மருந்து 13

சொம்பு, பளிங்கு, துத்தம், தாழை, தலையோடு, சுக்கு, சிறு கீரை வேர், பொன்னாங்காணி வேர் இவற்றை ஓரளவாய் நொச்சிச் சாற்றில் கலந்தரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்திடவும் தீரும். (566)

மருந்து 14

சந்தனம், பளிங்கு, இந்துப்பு, மிளகு, அஞ்சனக்கல், பசுவின் பால்; நொச்சியிலை, பனைமட்டைச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி முலைப்பாலில் உரைத்திடவும் தீரும். (569)

மருந்து 15

தாளி வேரை பசுவின் நெய்யில் அரைத்து முலைப்பால் சேர்த்து, பஞ்சில் தோய்த்துக் கண்ணிமை மீது போடவும் தீரும். (571)

மருந்து 16

பஞ்சில் பசுவின் நெய்யைத் தோய்த்து இமையின் மீது போட்டும், கண்களைச் சுற்றிலும் நெய்யைப் பூசியும், சந்தனத் தைப் பூசியும் வைக்கத் தீரும். (572)

மருந்து 17

கோழி முட்டையிலுள்ள வெண்கருவுடன் பழைய தேன் முலைப்பால் இவற்றைச் சேர்த்துக் குழைத்துப் பஞ்சிலூட்டி கண்ணிமையின் மீது போடவும் கண்ணோவு தீரும். (573)

மருந்து 18

சிற்றாமணக்கம் வேர், கடுக்காய், தகரம் இவை வகைக்கு 4 கழஞ்சுடன், பசுவின்பால் 2 நாழி சேர்த்துக் காய்ச்சி, நாலில் ஒன்றாகக் காய்ச்சி வற்றிய பின் வடித்துக் கண்ணில் ஒழுக்கிடவும் தீரும். (574)

மருந்து 19

மேற்கண்ட மருந்துடன் எலுமிச்சம் பழச்சாறு, துருசு, துத்தம், கருவேலம் பிசின், சுக்கு, இவற்றையும் சேர்த்து அரைத்த தில் துணியைத் தோய்த்து உலர்த்தவும். இத்துணியை முலைப் பாலில் நனைத்து கண்ணில் பிழியவும் தீரும். (575-576)

**சிலேட்டுமத்தால் வந்த கண்ணோவுக்கு மருந்து :**

குணம்:-நீரும் பீளையும், வலியும் அதிகமாகயிருக்கும்,

**மருந்து 1**

சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், இந்துப்பு, எலுமிச்சம் பழச் சாறு, காடி, இவற்றைச் சேர்த்து அரைத்து குழம்பாக்கி இடவும். நன்றாகக் காய்ச்சிய நீரால் வாய்க் கொப்பளிக்கவும்.

**மருந்து 2**

சிலேட்டுமத்தால் கண்ணோவுடன் தலைவலியும் இருக்கு மானால், சுக்கு, சர்க்கரை, பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ இவற்றை முலைப்பால் விட்டரைத்துத் துணியில் முடிந்து ஒவ்வொரு மூக்குத் துளையிலும் ஆறு துளிகள் பிழியவும் தீரும். (582-585)

### பித்தத்தால் வந்த கண்ணோவுக்கு மருந்து

**குணம்:**—அதிகமாக நீர் வடிவதுடன் உற்றுப் பார்க்கும் இடங்க ளெல்லாம் மஞ்சள் நிறமாகத் தெரியும்,

**மருந்து 1**

சுக்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் வற்றல் இவை வகைக்கு 1 பலம் சேர்த்தரைத்து 1 படி தண்ணீர் விட்டுக் காய்ச்சி 1 ஆழாக்காக வற்றச் செய்து அத்துடன் தேன், பசுவின் நெய் இவை வகைக்கு 3 காசு எடை சேர்த்துக் கலக்கிக் குடிக்கவும்.

**பத்தியம்**—கருவையரிசிச்சோறு, சிறுபயறு, பொன்னாங்காணி, ஊர்க்குருவி, முருங்கை, பசுவின் பால், நெய்,

கண் அதிகமாக எரிந்தால் உள்ளங்காலில் நெய்ப்பூச்சு, சந்தனப் பூச்சு இவற்றையும் செய்யவும். (586-590)

### வாதத்தால் வந்த கண்ணோவுக்கு மருந்து

**மருந்து 1:**

துத்தம், செம்பு, பளிங்கு, சுக்கு, தலையோடு, பொன்னாங் காணி வேர், சிறுகீரை வேர், இவற்றை ஓரளவாய் நிறுத்துக் கொண்டு, இவற்றுடன், எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் தீரும்.

**மருந்து 2:**

இரும்புக் கரண்டியைக் காய்ச்சி அதில் எலுமிச்சம் பழச் சாற்றைப் பிழிந்து, அதில் கடுக்காய், சுக்கு இவற்றை கூட்டி உரைத்து இமையில் பூசவும்

மருந்து 3:

நல்லெண்ணெய், பன்னீர். துத்திவேர், நாயுருவி வேர் இவை யெல்லாம் சரியாய்க் கூட்டிக் கலத்தில் தேய்த்துக் கண்ணின் மீது புற வளையமிடவும் தீரும் (591—593)

### ஐயத்தால் வந்த கண்ணோவுக்கு மருந்து

மருந்து 1:

ஓரிதழ்த்தாமரை வேர், கஞ்சம்வேர், வெட்பூலாவேர், நீர்ப்பூலாவேர், சிறுபுள்ளடி வேர், செம்பு, வெண்கலம், துத்தம், துருசு இவை ஓரளவாய்க் கொண்டு, எலுமிச்சம் பழச்சாறு, புளியம்பூச்சாறு, முருங்கைப்பூச்சாறு, பனைமட்டைச்சாறு இவை ஓரளவாய் விட்டரைத்து உருண்டை செய்து நிழலில் உலர்த்தி எடுத்து, முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடவும் தீரும்

மருந்து 2:

கருவேலம் பிசின், துத்தம், துருசு இவற்றை ஓரளவாய்க் கொண்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வெள்ளைத் துணியில் தோய்த்தெடுத்து நிழலில் உலர்த்தி வைக்கவும், இத் துணியில் ஒரு பகுதியைக் கிழித்து முலைப்பால் விட்டு நனைத்து வெதுப்பிக் கண்ணில் போடவும் தீரும். (594-597)

மருந்து 3:

மாதுளை இலையை பசுவின் பாலில் சேர்த்து அவித்துலர்த்தி அத்துடன் முலைப்பால் விட்டு அரைத்து அனலில் காட்டி அதைப் புறவளையமாகப் பூசவும் தீரும். (598)

மருந்து :4

கோழி முட்டையிலுள்ள வெண் கருவுடன் பச்சைக் கற்பூரம் சேர்த்துக் குழப்பி அதை ஒரு வெள்ளைத் துணியில் தோய்த் தெடுத்து கண் மீது போடவும். கண்ணோவு தீரும் (599)

மருந்து 5:

நெல்லிப் பருப்பு, கடுக்காய், குப்பைமேனி வேர், புளியிலைக் கொழுந்து இவற்றை ஓரளவாய் எடுத்து, கற்றாழை மடலைப் பிளந்து அதனுள் இவற்றைப் புதைத்து மூடி, மேலே சீலை மண் செய்து, நெருப்பு அனலில் புதைத்து கனிய வேக விட்டு எடுக்கவும், இம்மருந்துடன் முலைப்பால், அதிமதுரம் இவற்றைக் கூட்டி அரைத்து வழித்து எடுத்துக் கண்ணைச் சுற்றி புறவளையமிடவும் தீரும். (600-601)

**மருந்து :6**

புளியிலையைச் சிவக்க வறுத்தெடுத்து அத்துடன் கோழி முட்டை வெண்கருவும் பச்சைக் கற்பூரமும் சேர்த்து அரைத்துக் குழப்பி வழித்து இமைமீது பூசவும் தீரும். (602)

**மருந்து :7**

நந்தியா வட்டப் பூச்சாறு, பனைமட்டைச்சாறு, முருங்கைப் பூச்சாறு, முலைப்பால், பசுவின் நெய், கிளிஞ்சல் நீர் இவை வகைக்கு 1 உழக்கு இவற்றுடன், அதிமதுரம், சந்தனம், மஞ்சள், போன்ற கடைச் சரக்குகளை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து அரைத்துக் காய்ச்சி வடித்து, ஒன்றிரண்டு துளிகள் கண்ணில் விடவும் சிவப்பு, கண்ணோவு தீரும் (603-605)

**மருந்து :8**

ஓரிதழ்த் தாமரை வேர், சங்கு, சுண்ணம்புக் கல், துத்தம், தலையோடு, இவை வகைக்கு 1 கழஞ்சு துருசு 2 கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (605-607)

**மருந்து :9**

புளியிலைக் கொழுந்து, துத்தம், துருசு இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து அத்துடன் தேன் சேர்த்து அரைத்துக் குழம் பாக்கிச் சிமிழில் வைத்து இடவும் தீரும் (608)

**மருந்து !10**

எலுமிச்சம் பழச்சாறும் பனைமட்டைச் சாறும் சேர்த்து இழைத்து ஒரு பயறளவு கண்ணில் இடவும் தீரும் கண் குத்தல் தீரும். (609)

**மருந்து 11:**

பசுவின்பாலில் கஞ்சாவேரைப் பிசைந்து விட்டுத் தயிராக்கி, அதில் வரும் வெண்ணெய்யில் நீர் விட்டு, பச்சைக் கற்பூரம் இட்டு கலப்பிரஞ் செய்யவும். இதை வழித்தெடுத்து வாழைக் குருத்தில் பரப்பிப் பனியில் வைத்தெடுத்து சிமிழில் அடைக்கவும் இதில் 1 பயறளவு கண்ணில் இடவும் தீரும். கண் புகைச்சல் இவை தீரும் (610-611)

**மருந்து :12**

துளசியிலை, பிண்ணாக்கிலை. புளியிலை, இம்மூன்றையும் சேர்த்துத் தூளாக்கியது 10 வராகன் எடை இத்துடன் பழம்

புளியைக் கரைத்துச் சேர்த்துப் பொட்டணமாகக் கட்டிக் கண்ணில் ஒன்றிரண்டு துளிகள் பிழியவும். இவ்வாறு ஒரு நாளைக்கு 4 முறை செய்யவும். மூன்று நாட்களுக்குச் செய்யவும், ஐந்தாம் நாள் ஆவரம்பூவைத் தலையிலிட்டு முழுகவும் தீரும். (612-613)

**மருந்து :13**

முருங்கையிலைத்துளிரைப் பசுவின் பாலில் வேக வைத்து, பசுவின் நெய் கூட்டியரைத்து வழித்தெடுத்து ஒரு துளி கண்ணி லிடவும் கண்ணோவு தீரும் (614)

**மருந்து 14:**

கடுக்காய், நெல்லிக்காய், அதிமதுரம், புளியிலை, கருவேப் பிலை கற்றாழைச்சாறு, ஆவாரை இலை இவற்றை முலைப் பாலிலிட்டு அரைத்து இடவும் தீரும். (618-619)

**மருந்து :15**

சோற்றுக் கற்றாழை, திருநீறு, முலைப்பால் இவற்றை கலப்பிரத்தில் இட்டுக் குழைத்துக் கண்ணைச் சுற்றிப் பூசவும் கண்ணோவு தீரும். (620)

**மருந்து :16**

கருவேப்பிலை, கடுக்காய். பீங்கான், புழுங்கலரிசி, காடி இவற்றைச் சேர்த்தரைத்துக் காய்ச்சி எடுத்துக் கண்ணைச் சுற்றிப் பூசவும் தீரும். (620)

**மருந்து :17**

கோழி முட்டை வெண்கருவுடன் முலைப்பால் சேர்த்துக் குழைத்து எடுத்துப் பஞ்சில் நனைத்து இமை மீது போடவும் தீரும் கண்ணோவு, கண் சிவப்பு இவை தீரும். (622)

**மருந்து :18**

துத்தம், துருசு, கருவேலம்பிசின், சுக்கு, மனோசிலை, இவற்றை ஒரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றிலரைத் துருட்டி உலர்த்தி எடுத்துக் காடியிலுரைத்து இடவும் தீரும். (623)

**மருந்து :19**

இரும்புக் கரண்டியை நெருப்பில் காயவைத்து எடுத்து அதில், சீனக்காரம், கடுக்காய் இவற்றைப் பொடித்துப் போட்டு அத் துடன் எலுமிச்சம் பழச்சாறு சேர்த்தரைத்துக் கண்ணைச் சுற்றி வ்ளையம் போடவும் தீரும். (625)

**மருந்து :20**

ஸ்ரீதேவி செங்கழு நீர்க் கிழங்கை இடித்துத் தூளாக்கி ஒரு துணியில் வைத்துக் காதில் கட்டவும் கண்ணோவு தீரும். (626)

**மருந்து ;21**

துத்தம், துருசு வகைக்கு 1 வராகன் எடை எடுத்து சீலை முடிந்து விளக்கில் சுட்டு, கல்வத்திலிட்டு உப்பிலிக் கொடிச் சாற்றிலரைத்து, ஆவின் வெண்ணெய் கூட்டியிழைத்துக் கண்ணி லிடவும் தீரும் (627)

**மருந்து ;22**

கடுக்காயைப் பிளந்து விதை நீக்கி விட்டு அதில் மிளகை அடைத்துச் சீலை சுற்றிச் சுட்டுத் தூளாக்கி வெண்ணெய்யில் குழைத்துப் போடவும் தீரும். (628)

**மருந்து :23**

குப்பை மேனி இலையைக் கசக்கிக் காதில் பிழியவும் தீரும். (629)

**மருந்து :24**

செந்நாயுருவி வேரைப் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வெதுப்பிப் போடவும் தீரும். (630)

**மருந்து :25**

துத்தம், துருசு, பீதரோகணி, அஞ்சனக்கல், சிறுகீரை வேர், பொன்னாங்காணிவேர், மருக்காலம் பழம், பனை மட்டைச்சாறு சேர்த்தரைத்து தேன் கூட்டிக் குழம்பாக்கி இடவும் தீரும். (632)

**மருந்து :26**

பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர், ஓரிலைத் தாமரை வேர் ஓரளவாய் கூட்டிக் கறுக்கி, பச்சைக் கற்பூரம், தேன் கூட்டி உரைத்து எடுத்து எள்ளில் பாதி அளவு கண்ணிலிடவும் தீரும். (634)

**மருந்து :27**

கடுக்காயை நீரில் அரைத்துருட்டி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண்சிவப்பு தீரும். (635)

**மருந்து :28**

மிளகு 1 பலம் எடுத்து கஞ்சாச் சாற்றில் ஊற வைத்துலர்த்தி எடுத்து நல்லெண்ணெய்யில் போட்டு வெய்யிலில் வைத்தெடுத்து தலையில் தேய்த்து முழுகவும் தீரும். (636)

மருந்து :29

நல்லெண்ணெய், கரிசாலைச்சாறு, பொன்னாங் காணிச்சாறு வெண்ணொச்சிச்சாறு, கருநொச்சிச்சாறு, நார்த்தம் பழச்சாறு வெள்ளாட்டுப்பால் இவை வகைக்கு 1 படி, ஆதண்டைவேர் விழுது நார்த்தாங் காயளவு, மிளகு 5 பலம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (637)

மருந்து :30

பொன்னாங்காணிச்சாறு, பசுவின் நெய், முலைப்பால் இவற்றை ஓரளவாய்க் கூட்டிக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (638)

மருந்து :31

அருகம்புல்சாறு, நெய் வகைக்கு 1 படி, அதிமதுரம் 10 வராகன் எடை, நாற்பாலை முகிழ் 8 வராகன் எடை இவற்றை அரைத்துக் காய்ச்சி 1 வராகன் எடை கொள்ளவும் தீரும். (639)

மருந்து :32

வெண்காவளை, சாரணை, சிறுகீரை இவற்றின் வேர்கள், துத்தம், துருசு, இவற்றை ஓரளவாய் சேர்த்து எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்து இடவும் திரும். (640)

மருந்து :33

இந்துப்பு, திப்பிலி, பீதரோகணி இவற்றை நந்தியா வட்டப் பூச் சாற்றில் இடவும் தீரும் (641)

மருந்து :34

காசாயிலை, வரட்பூலாயிலை, புளியிலை, இவற்றின் சாற்றுடன், நெல்லி, சந்தனம், தேற்றாங் கொட்டை, ஆமையோடு, சேர்த்துக் காய்ச்சிக் குழம்பாக்கித் திரட்டி உலர வைத்து, எலுமிச்சம் பழச்சாறு, தண்ணீர் இவற்றில் உரைத்திடவும் தீரும். (643)

மருந்து :35

கருவேலம் பிஞ்சுச்சாறு, துத்தம், துருசு இவற்றைச் சேர்த்துத், துணியில் ஊறவைத்து உலர்த்தி எடுத்து, இதை முலைப்பாலில் நனைத்துக் கசக்கிக் கண்ணில் பிழியத் தீரும். (644)

மருந்து 36

எள்ளின் பொடியை வெல்லத்துடன் பிசைந்து பொட்டணம் கட்டி, பசுவின் நெய்யில் தோய்த்து எடுத்துக் கண்ணில் ஒற்றத் தீரும். (645)

மருந்து 37

அதிமதுரம், கோட்டம். செங்கழுநீர்க் கிழுங்கு, பசுவின் நெய் கூட்டி அரைத்துப் பொட்டணம் கட்டி ஒற்றவும் தீரும். (646)

மருந்து 38

துத்தத்தை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துத் துணியில் வைத்து ஒற்றவும் தீரும். (647)

மருந்து 39

வசம்பு, மிளகு, குப்பைமேனி இவற்றை நீரிலரைத்துப் பொட்டணங்கட்டி ஒற்றவும் தீரும். (648)

மருந்து 40

புழுங்கலரிசிதவிடு, திருநீறு கூட்டிப் பொட்டணம் கட்டி வெதுப்பி ஒற்றவும் தீரும். (649)

மருந்து 41

கருஞ்சீரகம், கற்றாழை, கடுக்காய், வேப்பிலை இவை ஓரளவாய் பசுவின் பாலிலரைத்துக் களிம்பாக்கிப் பூசவும் தீரும் (650)

மருந்து 42

முகட்டை யிலையை அரைத்துப் பூசவும் தீரும். (651)

மருந்து 43

பசுவின் பால் 1 நாழி, புளியிலை 1 பிடி சேர்த்து வற்றக் காய்ச்சித் துணியில் வைத்துப் பொட்டணமாகக் கட்டி ஒற்றவும் தீரும். (652)

மருந்து 44

கடுக்காய். நெல்லிக்காய், அதிமதுரம், தோற்றாங்கொட்டை, கருவேலிலை இவற்றை ஓரளவாய் எடுத்து, கற்றாழையைப் பிளந்து அதில் புதைத்து மேலே சாணி பூசி வேக வைத்து எடுத்து முலைப்பால் சேர்த்து இடவும் தீரும் (653)

மருந்து 45

மின்மினிப்பூச்சி, துருசு, மிளகரணைவேர் சேர்த்தரைத் துருட்டி நீரில் உரைத்து இடவும் தீரும். (654)

### குவளையில் வரும் நோய் பதினைந்திற்கும் பெயர்

குவளையிற் தோன்றுந் தோடம்
குணபதி னைந்து பேராம்
நவிலுங்கண் ணோவி னோடு
நலிந்தபூ சாந்த ரங்கள்
நிவர்ந்திடும் படர்த்தி மூன்று
நீடிய குவைகள் மூன்று
இவந்தவிப் புருதி யொன்று
இமைக்குரு பருக்கள் தானே 530

### கடைக்கண்ணில் தோன்றும் நோய்கள் பதினைந்து

1. கண்ணோடு
2. பூசாந்திரம்
3. இரத்தப்படர்த்தி
4. நீர்ப்படர்த்தி
5. சதைப்படர்த்தி
6. நீர்க்குவை
7. இரத்தக்குவை
8. சசைக்குவை
9. விரணப்பரு
10. விப்புருதி
11. இமைக்குரு
12. குமிளம்
13. விழிவாதம்
14. நேத்திர வாய்வு
15. கண்ணோவு

### கண்ணோடுவின் குணம்

மூக்கடி கடையி னுள்ளே
முளைத்தெழுங் குமிழ மாகத்
தாக்கியே சவ்வு மூடி
வெடித்ததிற் சலமு மாறா
நோக்கிடில் சாத்திய மென்று
நுவலுங்கீர் நவின்ற வேதம்
வீக்குவார் முலையி னாளே
கருவியால் விடுவித் தானே. 531

### பூசாந்திரத்தின் குணம்

இளகியே பீளை நிற்கும்
இடத்திற்குள் ளெள்ளில் மேலே
வளமுறு பருத்தி வித்துப்
போலெழு மானே கேளாய்

இளையுறு பாயுஞ் சாத்தியம்
　　என்றது விளம்ப லாகும்
விளைவினால் கருவி செய்து
　　வேதனை தீர்ந்தி டாயே 532

**நீர்ப்படர்த்தி, இரத்தப் படர்த்தி, சதைப்படர்த்தி**

இளங்கருங் கடையி னுள்ளே
　　இளநீராய் சதையும் இரத்தம்
அழலெனப் படரும் மானே
　　அசாத்திய மல்ல மூன்றும்
பழுதற யிதற்கு முன்சொல்
　　பொடியினால் மருந்தாற் தீரும்
மழவிடை யமர்ந்தோன் சொன்ன
　　வாகடத் தியல்பு தானே 533

**நீர்க்தவை, இரத்தங்தவை, சதைக்குவை**

சொல்லும்நீர் தசைநீ ரத்தற்
　　துன்றியே குன்றி போலக்
கல்லெனப் புடைத்தெ ழுந்து
　　கடையிரண் டதனிற் தோன்றும்
முல்லைபோல் நகைசெய் மானே
　　கருவியால் முளையை நீவி
புல்லிடுந் துருசால் முன்சொல்
　　பொடியினை யெழுதப் போமே. 534

**விரணப்பரு, விப்புருதி, இமைக்குரு, குமிளம்**

கடைவிழி யதனிற் தோன்றும்
　　விப்புரு பருக்கண் டென்னும்
இடருறு வியாதி வந்தால்
　　இணக்கமாய் மருந்து செய்து
உடையவே நிதானந் தன்னால்
　　ஓதிய நூலைக் கண்டு
அடவிலே செய்கை முன்சொல்
　　பருவொன்று சாத்திய மானே. 535

### நயன வாதத்தின் குணம்

கண்ணிடை பக்க வாதந்
தோடங்கள் கதித்து நின்றால்
நண்ணிமை யயர்ந்து கொட்டி
நடுக்கிடுங் கண்ணும் நோகும்
மண்ணுள்ளோ ருரைத்த செய்கை
யசாத்திய மதற்குந் தானே
திண்ணமாய்ப் புருவத் தின்மே
லரிவுசெய் திடவே தீரும். 536

நயனத்தின் வாதம் நயனஞ் சிவக்கும்
கயமொத்து நீர்த்ததும்பிக் காலுஞ்– சயனிக்க
வொட்டாது சூலிக்கு முட்டிணமா முண்பதுதான்
கட்டாய மென்றிவை காண். 537

### நயன வாதம் தீர

நல்லெண்ணெய் $\frac{1}{4}$ படி, வெள்ளுள்ளிச்சாறு, முருங்கைவேர்ச் சாறு குப்பை மேனிச்சாறு, தும்பைச்சாறு, வகை ஒன்றுக்குச் சாறு$\frac{1}{4}$ படி கோட்டம் 3 கழஞ்சு அரைத்துக் கரைத்து, எரித்து, வடித்து, உச்சி ஓரங்களிலே தடவி, சாயுங்காலம் அரப்பிட்டுத் தேய்த்து வெந்நீர் விட்டுக் குளிக்கவும். இப்படி மூன்று நாட்கள் செய்யவும் நயன வாதம் தீரும். 538

### நேத்திர வாயுவின் குணம்

நெடிதான நேத்திரத்தின் வாய்வு கோளும்
நெருங்கியே கண்ணிறுகிக் காட்டு மேதான்
கடிதான வாயுவினா லிழுத்துக் கொள்ளும்
கருகியே விழியிரண்டுங் கறுத்துக் காணும்
படிகம்போல் வெளுத்தக்கண் பாழோ மெத்தப்
பார்த்தாலே தசையினா லூறல் பற்றி
முடிமீதி லெரிச்சலுடன் தினவுண் டாகும்
மூளைதனில் வாயுநின்று முறிக்குத் தானே. 539

நயனத்தில் வாய்வு நின்று
நவில்புரு வத்திற் குத்தி
செயல்கெட வலிக்கும் போது
திரண்டநீர் மூக்கில் வீழும்

இயல்பினை யறிந்து கொண்டு
இவ்விரோ கத்தை மாற்ற
அரனுரை செய்த யுண்மை
மருந்தினை யறிந்து கொள்ளே 540

நடுநரம் பினிற்கு டோரி
செய்திடு நயந்த ரத்தங்
கடுவது பரந்து போனாற்
கருதுவேப் பெண்ணெய் நாழி
உடன்வசம் புள்ளி சன்னி
நாயக முசுறு முட்டை
அடவிலே நாங்குட் கோழிக்
காரமும் வடமு மாமே 541

ஆந்திரி கடுகு வெட்பால்
அரிசியோ ரொன்று தானே
ஏந்திழை நீவி ரைந்தோர்
கழஞ்சிட்டு வெந்த எண்ணெய்
சேர்ந்தநேத் திரத்தின் வாய்வு
தீர்ந்திடச் சிரத்திற் றப்பிக்
காய்ந்தநீர் தன்னி னாலே
கழுவிடக் கடுப்புப் போமே 542

### நேத்திர வாய்வுக்குத் தைலம்

எண்ணெய் 2, எலுமிச்சம் பழச்சாறு 2, கரிசலாங் கண்ணிச் சாறு 2, தாமரைப்பூச்சாறு 2, நொச்சியிலைச்சாறு, தாழம் விழுது சாறு 2, நல்ல சந்தனம், வெட்டிவேர், இலாமிச்சம் வேர், வாய் விடங்கம், கடுகுரோகிணி, பஞ்சலவணம், ஏலம், கிராம்பு, தாளிச பத்திரி, கோட்டம், மஞ்சள் இவை ஒரொன்று காசு எடை, இவை யெல்லாம் சூரணம் பண்ணி, எண்ணெய்யும் கூட்டி, வறுத்துத் தூளும் இந்த ஐந்து வகைச்சாறும் கூடக் கலந்து, ஒரு நாளையில் எரியிடாமல், மெள்ள விளக்கு போலே எரியிடவும் பதமாக இறக்கி மெழுகு பதமாக வைத்துக் கொண்டு, வாய்க்கட்டி, செம்பிட்டு, நெற்புடம் வைத்து. எடுத்துத் தலையிற்தேய்த்து, இப்படி 8 நாட்களுக்கு ஒரு முறை முழுகவும். இதற்கு 74 வகை நேத்திர வாய்வும் தீரும்.

பத்தியம்—இறைச்சி, புளிப்பு.

(வேறு)

நெல்லிக்காய்ச்சாறு, பொன்னாங்காணிச் சாறு, கருஞ் செம்பைச் சாறு, இவை வகைக்கு 1 படி, ஆமணக்கெண்ணெய், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 2 படி, ஆவின்பால் 1 படி, இத்துடன் சிரகம் 10 பலம், பால் விட்டரைத்துக் குழப்பி, காய்ச்சி வடித்துத் தலை முழுகி வர நேத்திர வாய்வு நீங்கும். கண்களில் ஒளி உண்டாகும். 544

(வேறு)

திரிபலை, தேற்றான்விதை, தாமரை மணி ஒரு நிறையாய்க் குமரிச்சாற்றிலரைத்து முலைப்பாலில் உரைத்து 21 நாட்கள் கண்ணிற் போட்டு வரத் தீரும். 545

(வேறு)

முலைப்பாலில் புளியைக் கரைத்துக் கொதிக்க வைத்துச் சீலையில் தடவி ஒற்றடம் செய்தும், புறவளையமிட்டும், பாலையும் கடுக்காய்த் தூளும், இந்துப்பும், சர்க்கரையும் வெதுப்பித் துணியில் முடிந்து ஒற்றடம் செய்யவும் தீரும். 546

(வேறு)

படிகாரம், கடல்நுரை, நவச்சாரம், துத்தம், துருசு, இவற்றை நிறங்கெடாது வறுத்துப் பசுவின் வெண்ணெய் சேர்த்து வெண்கல வட்டிலிற்போட்டு, செம்புக் குழவியால் அரைத்துக் கண்ணிலிடக் கண் வாயு தீரும். 547

(வேறு)

துத்தம், துருசு, சீனக்காரம், வெண்காரம், தலைமயிர் சுட்ட சாம்பல், இவையெல்லாம் வட்டிலில் போட்டு ஆவின் வெண்ணெய் எலுமிச்சம் பழச்சாறுவிட்டு செம்புபட களிம்பு கூட்டி வைத்துக் கொண்டு கண்ணிற்போட நேத்திர வாய்வு, பூச்சிவெட்டு, கனம்பு, பட்டது எல்லாவற்றிற்கும் ஒரு நெல்லெடையிடத் தீரும். 548

(வேறு)

நல்லெண்ணெய் உழக்கு, முலைப்பால் உழக்கு, கம்மாறு வெற்றிலைச்சாறு உழக்கு, இவைகளைச் சட்டியில் வார்த்து இவற்றுக்குக் கற்கமருந்து, மிளகு 1 பலம், அதிமதுரம் 1 பலம், தானிக்காய்த்தோல் 1 பலம் கடுக்காய்த்தோல் $\frac{1}{4}$ பலம், மஞ்சள் 1 வராகன் எடை, இவையெல்லாம் கொண்டு வந்து அரைத்துக்

கரைத்துக் காய்ச்சி பதத்தில் வடித்துக்கொண்டு, அபினி மருந்தை தைலத்திலிட்டு, வாய்க்கட்டி, நெல்லுக்குட் புதைத்து வைத்துக் கொண்டு, 5 நாட்கள் உள்ளுக்கொருகாற் தலைக்குத் தேய்த்து சாமம் பொறுத்துத் தலைமுழுகி வரவும். இப்படி 9 முழுக்கி முழுகிவர நேத்திர வியாதிகளெல்லாந்தீரும்.

**கண்ணோவின் குணம்**

எந்நாளும் நோகாது காற்றுக் காலம்
எடுக்குமே தலைவலியு மிமைகண் வீங்கும்
புண்ணாகும் நீர்பீளை யுறக்கம் வாரா
புதுமையா மூன்றுநாள் போத நோவு
விண்ணாற நோக்க வொட்டாப் பட்ச மொன்றில்
விதமாகத் தீருமிது மெய்தா னென்றே
கண்ணோவு குணங்க ளிவைதா னென்றும்
கருதினார் புவிமீதில் கண்ட தாமே, 550

ஊட்டிண மதிகத் தாலும்
ஒளிவெய்யிற் காற்றி னாலும்
கட்டமாஞ் சுமையி னாலும்
கடுகிய நடையி னாலும்
மட்டவிழ் குழலி னாளே
வந்திடும் விழிக்குள் நோவு
திட்டமா யறிந்து கொண்டு
இதற்கிடும் மருந்து கேளே 551

**பாதசுத்தி**

கண்ணது கடுத்த ழன்று
கலங்கியே வருகு தென்றால்
நண்ணிய வுள்ளங் காலில்
நறுநெய்யை வேக மூட்டி
திண்ணிய தவிடு மாவாற்
தேய்த்தத னழுக்கைப் போக்கிக்
கண்ணிரு காடி யாலே
கழுவிச்சந் தனத்தை யப்பே 552

**வரைவு**

பங்கயற் கண்ணிமை நோகிற்
பருக்கை வுறுத்த நடவார்கள்
செங்கயற் கண்ணுந் நொந்தாற்
திண்ணா ரிலைக்கறி மாங்காயும்

அங்கையில் வெற்றிலை நெய்யகுந்தார்
அருகிருந் தாரோடும் பேசார்
மங்கை யுவப்பது மப்பாலே
மருத்துவன் சொன்னதது மாமே 553

### புறவளையம்

நேற்றைக் கின்று கண்ணொந்து
நெடுமூச் செறிந்து கிடவாதே
சோற்றுப் பற்றுந் திருநீறுந்
தோகை யனையார் முலைப்பாலும்
காற்றுப் படாதே கலந்தேய்த்துக்
கண்ணை வளையப் பூசுவிராற்
தோற்றுப் போகுங் கண்ணோவு
சொன்னார் முனிவர் சொன்னாரே 554

### வேதனைக்குக் கிழி

ஆவின் பாலிரு நாழிதன்னில்
அழகிய புளியிலை யிருபிடி யிட்டுக்
காவி யனைய கண்மடவீர்
காய்ந்தா ழாக்காய்க் காய்ச்சியதைச்
சீவிச் சீலை யதிற்கட்டிச்
சிக்கெனப் பொட்டணங் கட்டியொப்பக்
கூவி வலிக்குங் கண்ணோய்தான்
குணமாங் குணமாங் கண்மடீரே 551

### அரிதகி விசாதிக் குளிகை

ஆறு கூறு கடுபருப்பு
ஐந்து கூறு கன்மிளகு
தேறுந் திப்பிலி முக்கூறு
தேற்றான் விதையு மிந்துப்பு
மீறி யிடாதேழ் நாளரைத்து
இருந்த குளிகை வருமென்றால்
பாறிடுங் கண்ணோ யுள்ளதெல்லாம்
பன்னிரு யோசனைக் கப்பாலே 556

### கண்ணோவுக்குச் சீலை மருந்து

சம்பீ ரத்தின் சாறுழக்கு
சாருங் கரியுப்புந் தானுழக்கு
வம்பா ரமுலை யிந்துப்பு
வறுத்த துருசி வைகழஞ்சு

செம்பா லாகுதல் வெண்கலத்தாற்
சாற்றதை வெண்சீ லையிற்றுவைத்துத்
தம்ப மாகத் தப்பினக்கால்
சாறும் பச்சை நிறமாமே. 557

சீலை பணத்தி னளவெடுத்துத்
தேனார் முலைப்பால் தனிற்கரைத்து
ஆலம் போன்ற நேர்விழியில்
அனத்தி யொழுக்க யிடி வலிகள்
மேலுஞ் சிவப்பு நீர்ப்படல
மெல்லாந் தீரு மிதுவென்று
ஆல முண்ட மிடற்றண்ணல்
ஆனா ருரைத்தா ருரைத்தாரே 558

குளிகை

சேங்கொட் டைரோ மமிந்து
திருகுகள் ளிவ்வேர் நாலு
பூங்கொடி கருக்கிக் கொண்டு
புகலுஞ் சம்பீரச் சாற்றால்
ஆங்கதை யரைத்துக் கொண்டு
குளிகைசெய் முலைப்பால் விட்டு
தீங்குறு கிருமி சுற்றுக்
குலைவிற்குத் தேய்த்துப் போடே. 559

கண்ணோவுக்கு மருந்து

வேப்பிலை தனைய ரைத்து வெறுநெய்யிற் குழைத்துக் கண்மேற்
காப்புற இட்ட போதே கனமுற வலியுந் தீரும்
சிப்புறத் தவசிமு ருங்கை வேரைச் சீர்முலைப் பாலிற் தோய்த்து
கோப்புற வளைத்த போதே குளிர்ந்திடும் நயனந் தானே 560

(வேறு)

அண்ணைக் கென்று கண்நொந்தால்
அறையிற் புகுந்து கிடவாதே
எண்ணெய்த் துளியும் தயிர்பன்னீர்
இரும்பி னோடே நாயுருவி
மண்ணைக் கவிழ்த்து ததியின்வேர்
மாசிக் கலத்தின் புறவளைத்து
கண்ணைச் சூழ வளைத்தாக்கால்
கனத்த ரோக மேகிடுமே 561

(வேறு)

பூலா வேருடன் பொன்பவளம் வெள்ளிமுத்து
சீலார் திப்பிலி பூரம் செம்புதுத்தம்—மேலார்
தலையோடு ரோசனையும் நிம்பஞ்சாற் றிலுண்டை
விலகிடும் கண்ணோய் விட்டு 562

(வேறு)

எருக்கம் பாலுந் திரிகடுகும் இடையுந் திருநீ றுடனாக
நறுக்கிப் பொடிகள் தானிஞ் சிமிழி லடைத்து வைத்து
சுறுக்கி வாங்கு நாசிதனில் தும்மற் காணுஞ் சன்னிபோகும்
இருக்க வந்த கண்ணோவும் ஏகுந் தலைநோய் கண்டீரே 563

பேய்ப்புடல் கொன்றைப் பிசிறோ டதிமதுரம்
மூப்பிலா மாதர்முலைப் பால்பசுவின் நெய்யில்
நீர்ப்படரும் நாசிதனிலே நிறுத்துவீர் காய்ச்சியபின்
சீழ்ப்படரும் கண்ணோவும் தினவுவலி யேகிடவே. 564

(வேறு)

எருமைப் பாலில் நல்லெண்ணெய் யிடுவீர் நீர்முள்ளி
கருநொச்சி முல்லையுடன் சிற்றமட்டி வேரரைத்துச்
செரும காய்ச்சி நாசிதன்னில் சேர்த்தீர் கண்ணோய் நீர்
கருமத் தளவே பீனிசமும் கடுகப் போகும் தலைநோயே 565

(வேறு)

செம்பொடு பளிங்கு துத்தம் சேர்தாழை கபாலஞ் சுக்கு
நம்பிடு சிறிய கீரை நற்பொன் னாங்காணி வேரும்
கம்பிடு நொச்சிச் சாற்றில் கலந்தரைத் துண்டை சேர்த்து
அம்பிடு கண்ணார் பாலில் அரைத்திடத் தீருந் தானே. 566

(வேறு)

அலையுள் சிந்தி தன்னை அரைத்துள்ளே நீர்பொ திந்து
வலைவெரி யுள்ளே வைத்து அவித்துப்பின் வாங்கிக் கொண்டு
மலையிரு கொங்கை யாளே மனத்துட னரிந்து நீயும்
இலையறி வெண்ணெய் கூட்டி இயல்புடன் கலத்திற்றேயே 567

கருப்பெழத் தேய்த்துக் கொண்டு கலந்திரு கண்ணி விட்டால்
சுருக்கென யெரித்துப் பின்னைச் சுகத்துடன் தினவ டங்கும்
உரித்திடு மிவைக ளெங்கும் உள்பல கோபம் வீக்கம்
சிறுத்தநீர்ப் பீளை யேகும் சினத்திடுஞ் சிவப்பும் போமே. 568

(வேறு)

சந்தனம் பசுவின் பாலும் அதனிலே நொச்சி யிலையும்
முந்தநற் பளிங்கு மிந்து மிளகுடன் அஞ்சனக் கல்லும்
பந்தமாம் பனையின் மட்டை சாறுடன் முலைப்பால் தன்னில்
அந்தமா யரைத்துண்டை செய்திடில்
அகலுமனைத் துக்கண் நோயே. 569

(வேறு)

மூசா மோரிற் கடுகரைத்து முட்டுங் கண்ணோய் வந்ததென்றால்
பூசா தாரைப் பூட்டிவித்துப் புதிய காடி யதனுடனே
காசா யிலையில் பொட்டணமாய்க் கட்டிக் கண்ணி லொற்றியபின்
பேசா திருக்கத் தீருமென்று பெரியோர் தாமு முரைத்தாரே 570

(வேறு)

கண்ணிமை கனத்து றுத்திக் கரித்துநீர்ப் பீளை சாறில்
விண்ணுறச் சிவந்து அழற்றி விழிப்பது தலைக னக்கில்
எண்ணுறுத் தாளி வேரை இழைத்துசெய் யதனிற் பாலில்
நண்ணுறு பஞ்சி லூட்டி நறுக்கியே யிமையிற் போடே 571

உற்றநீர் பீளை சாறில் உடன்கனத் திமையும் வீங்கி
பற்றிடி விமையின் மேலே பஞ்சிலே நெய்தோய்த் திட்டுச்
சுற்றிரு கண்கள் தன்னிற் சுகம்பெற நெய்யைப் பூசில்
மற்றது விடுமே யாகில் மாந்திச்சந் தனத்தைப் பூசே 572

முட்டைவெண் கருவை வாங்கி முதியதேன் முலைப்பால் கூட்டித்
திட்டமாய்ப் பஞ்சி லூட்டித் தீதற யிமையிற் போட்டால்
கெட்டெழு கண்ணில் நோவும் கிளர்ந்ததோர் சிவப்பு மாறிச்
சுட்டதோர் நெற்றிக் கண்ணன் சோதிபோ லாகு மென்றே. 573

தாரை

சிற்றா மணக்சம் வேருடனே சிறந்த கடுக்காய் தானொன்று
பற்றாக் கொள்ளும் நாற்கழஞ்சு பருக்க தகரத்திரு நாழிப்பால்
நற்றா யடுப்பேற் றிக்காய்ச்சி நாலொன் றாக்கிப் பதம்பார்த்து
பெற்ற விழியில் தாரையிடப் பிரிந்து போகும் வேதனையே 574

இதிலிடு மருந்து கேளாய் எலுமிச்சம் பழத்தின் சாறு
கதலிடு துருசு துத்தம் கருவேலம் பிசினுங் கூட்டி
அதிலிடு சுக்குச் சற்றே அவுடத மாகக் கொண்டு
புதிபடு சீலை தன்னில் பசைபடத் தேய்த்தி டாயே 575

பசைபடத் தேய்த்து நீயும் பழம்பினால் நிழலு லர்த்தி
இசைபட மாதர் தங்கள் மெல்லிய முலைப்பால் தன்னில்
அசைபடக் கரைத்து மங்கே அரைந்துமே யொழுகு மாகில்
விசைபட உறுத்தி விழிவேதை மாறுந் தானே. 576

(வேறு)

கண்ணுங் கனத்துநோய் மிகுந்து கனக்கத் தண்ணீர்தான் வடியும்
எண்ணும் பீளை சாடாது இதுவும் புருவமது தன்னில்
வண்ண மாக மேல்நோக்கி வலிக்கு மிதுக்கட்டை விட்டால்
பின்னை மாறு மதன்பிறகு பெருக்க யெண்ணெய் யிருகூரே 577

கூரே நெய்தா னொருகூறு கூடக் கலந்து தலைநனைய
வேரே யொருசாண் தானளவில் விதமாய்க் குழியைத் தான்கெள்ளி
பாறக் குழிக்குள் ளேவிளக்கைப் பைய்ய வைத்துக் கலசத்தைத்
தேற வைத்துக் குழிவாசலிற் றிதமாந் தலைகாணி வைய்யே 578

வைத்த தலைகாணிற் தலையை வகையாய் மூன்றெழுக் காலில்
சித்த மாக நாழிகையிற் றிதமாய் நனைத்துச் சென்றாக்கால்
ஒத்த யெண்ணெய் தனைத்துடைத்து உயர்ந்த சுக்குத்
தண்ணீரைத்
மெத்தக் குடிக்க வல்லீராய் விதித்த திதுகாண் எனஅரியே 579

விதித்த திதுதா னெனவறிந்து மேவு மொருநா ளைக்கொருநாள்
அதித்த யெண்ணெய் முறைநனைத்து அதிக கோப மாறவிட்டு
மதித்த புளியின் தன்னிலையும் வைத்தே யரைப்புண் டாக்கி
கொதித்த தண்ணீ ரதனில் முழுகக் கூறும் நயங்கள் பண்ணுவதே
பண்ணும் நயங்கள் சீனியுடன் பச்சைக்கற் பூரமுஞ் சுக்கும்
தன்னி லொக்க வேகொண்டு தருகா முலைப்பால் வார்த்தரைத்து
விண்ணுள் ளோர்கள் தன்னாணை மேவும் முலைப்பால்
தானணைத்து
திண்ண மாக நயனம்பண்ண சிவனா னாணை யோடிடுமே. 581

**சிலேட்டும கண்ணோவுக்கு**

ஓடிஞ் சிலேட்டு மத்தால் வந்த
உற்ற கண்ணின் நோவுதனை
பாடுங் குணத்தாற் தெரிந்துரைக்கப்
பகரக் கேளும் பாவையரே
தேடுங் கண்கள் தானொந்து
சேர்ந்தே கண்ணிற் தான்வடிந்து
சாடும் பீளை மிகக்கடிதாய்
தக்க மருந்து சொற்கேளே 582

சுக்கு மிளகு திப்பிலியும் தூய கடுக்காய் இந்துப்பு
தக்க மருந்து வொன்றாகத் தகர்த்து நசியந்தான் கூட்டி
மிக்க தேசிப் பழச்சாறும் விரும்புங் கள்ளு மொக்கவிட்டு
தொக்க தாகக் குழைத்தெடுத்துத் துவள விரண்டு கன்னத்தில் 583

கன்ன மதிலே தானொதிக்கிக் கருத்தாய் மூன்று நாளைக்கும்
சொன்னோ மொதுக்கிக் கொப்பளியும் தோன்றும் வெந்நீர் தான்பிறகு
மின்னே வார்த்துக் கொப்பளியும் வேறு குணங்கள் விரும்பக்கேள்
உண்ணுந் தலையுந் தான்கனத்து உச்சந் தலையிற் குத்து நிற்கில்

உச்சந் தலையிற் குத்துநிற்கில் உறத்த சுக்கு சீனியுடன்
பச்சைக் கற்புரங் குங்குமப்பூ பகரும் முலைப்பால் வார்த்தரைத்து
அச்சப் படாம லொருநாசிக் காறுத் துள்ளித் தான்விட்டு
மெச்சும் நாசிக் காறுதுள்ளி விட்டுசேர் துப்பல் போக்கே. 585

### பித்தத்தால் வரும் கண்ணோவுக்கு

பித்த மிகுந்துக் கண்ணெரித்துப் பெருக தண்ணீர் தான்வடிந்து
உற்றுப் பார்த்த விடமெல்லாம் ஓங்கு மஞ்சள் போலிருக்கும்
சித்த மிதற்குத் தளம்பாமற் செய்யும் மருந்து செப்பக்கேள்
சுக்கு கடுக்காய் தண்டி நெல்லி தூய சடைதான் பலமரையே 586

அரைத்து நாழி தண்ணீரில் அன்பாய்க் கரைத்தெட் டொன்றாய்
விரைத்துக் காய்ச்சி வற்றியபின் விரும்புந் தேனும் நறுநெய்யும்
உரைத்தே மூன்று காசெடைதான் வார்த்துழக் குடிநீர் குடிப் பீராய்
புரைத்த பித்தத் தால்வந்த போகா வியாதி போய்விடுமே 587

விடுமே யடுத்த உணவதுகேள் மேவுங் கருவை யரிசிச் சோறு
கொடுமே சிறிய பயறுபருப்பு கூட்டுப் பொன்னாங் காணியுடன்
தொடுமே ஊரிற் குருவியுடன் தூய புனத்தில் நல்முருங்கை
எடுமே பசுவின் பால்நெய்யும் இணங்கும் புளியு மின்னங்கேள் 588

கேளிர் கருப்புக் கட்டியுடன் கீழக் காய்ச்சி கழக்கொள்ளும்
நாளும் நயனம் தனிலெரித்து நயமாய் மிகுதி யிருந்தாக்கால்
வாழு முள்ளங் கால்தன்னில் வளரும் பசுவின் நெய்யிட்டு
சூழு மூன்றே முக்காலிற் துலங்குங் கடிகை தேய்ப்பதுவே 589

கடியதோர் தவிடு கொண்டு காலது தன்னைத் தேய்த்து
படியினிற் பயறு காடிப் பாதத்தைக் கழுவிப் போட்டு
துடிமகள் சந்தனந் தேய்த்துத் தூய கால்தனிலே பூசி
தொடுசெருப் பிட்டு நீயும் துயரர நடப்ப தாமே. 590

### வாதத்தால் வரும் கண்ணோவுக்கு

வாதத் தாலெ ழும்பி வந்திடுங் கண்ணோ வுக்கு
சேத மில்லாத் துத்தம் செம்புடன் பளிங்கு சுக்குங்
கோதிலாத் தலையி னோடுங் கூறிய பொன்னாங் காணி
தாதவிழ்ச் சிறுகீ ரைவேர் தனிலே யொச்சுக் கொள்ளே 591

ஒக்கவே தேசிச் சாறு உற்றுநீர் வார்த்த ரைத்து
சிக்கென மூன்று நாளுஞ் சிறப்புடன் கண்ணிற் போடு
மிக்கதோ ரிரும்பைக் காய்ச்சி மிகுத்திடுந் தேசிச் சாற்றைக்
கக்கவே யதனில் விட்டுக் கடுக்காயுஞ் சுக்குங் கூட்டே 592

கூட்டியே யுரைத்துக் கொண்டு குணமுட னிமையிற் பூசு
ஈட்டிய யெண்ணெய் துள்ளித யரம்பன்னீர் யெரும்பு துத்தி
மீட்டுநா யுருவி வேரும் இதுவெலாஞ் சரியாய்க் கூட்டி
தாட்டிய கலத்து ரைத்துத் தக்கதோர் வளையம் பூசே. 593

### ஐயத்தால் வந்த கண்ணோவுக்கு

ஐய்யம தாலே வந்த அடர்ந்திடுங் கண்ணோ வுக்கு
மெய்ய தாமோ ரிதழின் விரும்பிய கஞ்சம் வேரும்
துய்ய வெட்பூலா வேரும் துடர்ந்தநீர்ப் பூலா வேரும்
செய்ய சிறுபுள் ளடிவேரும் சீவிநீர்க் கொள்ள லாமே 594

கொள்ளலாம் செம்பு வெங்கலமுங் கூட்டி ரிதனைப் பொடியாக்கி
விள்ளுந் துத்தந் துருசுடனே மேவி யிதுகள் சரிகொண்டு
துள்ளுந் தேசிப் பழச்சாறும் சுகமாம் புளியம் பூச்சாறும்
தெள்ளு முருங்கைப் பூச்சாறும் செப்பும் பனையு மட்டையுமே.

மட்டவிழு மிச்சாறு வொக்கக் கொண்டு
வார்த்தரைத்து உருண்டைசெய்து நிழலி லுலர்த்தி
திட்டமுடன் முலைப்பாலி லேதா னுரைத்து
செய்ய கண்ணி லிடுவீராய் தின்ன மாறுங்
கட்டழக மானதொரு கருவேல னம்பிசின்
கடுவிடு கொளிதுத்தந் துருசு கூட்டி
திட்டமுடன் தேசிச்சாறு வார்த்த ரைத்து
சீலைதனி லூட்டி நிழல்செய்தி டீரே. 596

செய்யதொரு சீலைதனை நிழலு லர்த்தி
தீளுத கண்ணோவும் வந்த போது
பைய்யவே ரெண்டிரையின் சீலை தன்னை
பகரக்கேள் கிழித்தெடுத்து முலைப்பால் விட்டு
ஐய்யமற சுடவைத்துக் கண்ணி லேதான்
அழகாகவே புரியும் அமருங் கண்டாய்
துய்யதொரு முலைமாதே யின்னங் கேளீர்
சுகமுடனே மருந்திதனைச் சொல்லு வோமே 597

மாதுவளை யிலையதனைக் கொண்டு வந்து
வளர்பசுவின் பால்தனிலே யவித்து லர்த்தி
வீதுமிலை யதனைப் பிய்த்துப் போட்டுத்
தக்கதொரு முலையின்பால் வார்த்த ரைத்துக்
கோதுசே ரனல்தனிலே சுடவே வைத்து
குணமுடனே புறவளைய மாகப் பூச
நீதமுடன் அனற்கொதிப்பு விட்டே யோடும்
நிமலனார் தன்னா ணைநிச்சயமே. 598

நிச்சயமாம் கோழிமுட்டை வெள்ளைக் கருவில்
நீதமுடன் பச்சைக்கற்பூரம் நிதானம் போட்டு
அச்சமறச் சாரித்துக் கவனிச் சீலை
அதுதனலே யன்பாக வழுத்தித் தேய்த்து
மெச்சியதோர் கண்ணிதனிற் போட்டு வைக்க
மீளாத கண்ணோவு விட்டே யோடும்
உச்சிதமாய்க் குறுமுனியு முரைத்தா ரிந்த
உலகோர்க்குத் தாமறிய வோதி னோமே 599

நெல்லிப் பருப்புக் கடுக்காயும் நீள குப்பை புளிக்கொழுந்தும்
நல்லகற் றாழைப் பிளந்து நாறுஞ் சரக்கு உட்பொதிந்து
செல்லுஞ் சீலை மண்செய்து சேர்ந்த வுமிக்காந் தற்புதைத்து
மெல்லக் கனிய வேகவிட்டு வெந்த மருந்தை யெடுப்பீரே 600

எடுத்த மருந்தை முலைப்பால்விட் டினிய மதுரங் கொண்டரைத்து
தொடுத்துவெச் சனவே வைத்து தூய கண்ணிற் புறவளையம்
அடுத்தே யிதுதான் பூசுவிராய் அமர மெரிப்பு மாறிவிடும்
கெடுத்தே னென்று ஓடிவிடும் கேளுஞ் சிவனார் தன்னாணை 601

சிவனா ருரைத்தார் புளியிலையைச்
சிவக்க வறுத்துப் பொன்னிறமாய்க்
கவன மில்லா கோழிமுட்டை
கருவாம் வெள்ளை விட்டரைத்துத்
தவனந் தீர்க்கும் பச்சைநல்ல
தக்க கற்பூ ரம்போட்டு
நவன மாகச் சாரித்து
நற்கண்ணி மையி லேபூசே. 602

மெத்த சிவப்புக் கண்ணிதனில் மேவி யடர்ந்து நின்றக்கால்
பத்தே நந்தி யாவட்டம் பகரும் பூவி னதிற்சாறும்
முத்து வடலில் மட்டையுடன் முருங்கைப் பூவ தின்சாறும்
ஒத்த முலைப்பால் தன்னுடனே ஒவ்வோர் சாறு முழக்காக்கே 603

ஆக்கென்று நெய்தா னுழக்கு
அதிலே யேறல்விட்ட தண்ணீருழக்கு
பாக்க வரைத்துக் கடைமருந்து
பகரு மதிரஞ் சந்தனமும்
ஏற்கு மோலிறச்சி மஞ்சள்
இதுவும் மாவட் டென்று
தாக்க வோரென் றொருகழஞ்சுத்
தானே யரைத்துக் கொள்வீரே. 604

அரைத்து நறுநெய் யதனிற்கரைத்து
அன்பாய் வடித்துப் பதந்தன்னில்
உரைத்த கண்ணி லேநிறுத்த
உற்ற சிவப்பு மாறிவிடும்
பெருத்தே விழித்த கண்ணுக்குப்
பேசு முருண்டை சொல்லக்கேள்
நிருத்த யோரிதழ்த் தாமரைவேர்
நீண்ட சங்குஞ்சுண் ணாம்புக்கல் 605

உருண்டை

கல்லுந் துத்தந் தலையோடுங்
கழஞ்சி யோறொன் றாய்க்கொண்டு
சொல்லுந் துருசு யிருகழஞ்சு
சுகமாந் தேசிப் பழச்சாறு
மெல்ல வார்த்த ரைத்துருண்டை
மெழுகு போலே நிழலுலர்த்தி
நல்ல தாகக் கொள்வீராய்
நாளும் அம்மி யதுதனிலே 606

அம்மி தனிலே சீலைதுடைத்து
அழகாய்க் கூட்டிக் கொள்வீரே
செம்மை முலைப்பாலி லுரைத்து
தீரா வேதனை யுண்டானால்
வெம்மைப் பிறவெச் செனவைத்து
மீண்டுங் கண்ணி லொழுக்கிடுமே
ஒம்மே கண்ணி லெரிப்பானால்
உற்ற கண்ணி லொழுக்கிடுமே 607

குத்து மெடுத்தால் மருந்துசெய்யுங்
கூறுந் தலையிற் புளிவாங்கி
துத்தந் துருசு தான்கழஞ்சு
தூய புளியைச் சீலைவடி
சத்தே தேனுந் தான்கூட்டி
தயவா யரைத்துக் குழம்பாக்கி
ஒத்தே சிமிழி லேவைத்து
ஒருநாள் தனக்கே யிருசிலவே 608

இரண்டு நேரங் கண்ணிலிட எல்லாக் குத்துந் தீருமென்றார்
திரண்டே யழுத்திக் குத்துகிலோ செய்யு மருந்து நீகேளு
உருண்ட தேசிப் பழச்சாறும் உந்த வடலிமட் டைச்சாறும்
பிரண்ட கலத்திற் புறஞ்செய்து பிரமாண கண்ணிற் பயறளவே.

(வேறு)

கண்ணும் புகைத்து தானிருக்கில்
கஞ்சா வேரைக் கொண்டுவந்து
வண்ணப் பசும்பால் வார்த்தரைத்து
வாகாய்ப் பிசைந்து கோதுவிட்டு
சொன்னோம் பாலிற் றண்ணீரைத்
துவள விட்டு வெண்ணெய்யெடு
பண்ணே நீர்வார்த் துக்கலப்புரஞ்
பச்சைக்கற் பூரம் போடே 610

போட்டு வரைத்து வழித்தெடுத்துப்
புகலும் வாழைக் குருத்ததனில்
ஈட்ட முடனே தானப்பி
இணங்கப் பனியி லேவைத்து

மீட்டு மெடுத்துச் சிமிழில்வைத்து
மேவு மொருநா ளொன்றைக்கும்
காட்டுஞ் சிறிய பயறளவு
கண்ணி லேதான் விடுவீரே. 611

**கண்வலிக்கு மருந்து**

கேளப்பா கண்வலி வந்த பேர்க்கு
கெடியான துளசிபிண் ணாக்கிலை யினோடு
சூளப்பா புளியினிலை யிந்த மூன்றும்
சுகமாகத் தட்டியதைத் துணியில் வைத்து
வீளப்பா யில்லைப்படா கோளங் கட்டி
விதமென்னத் தூளதுவும் வராகன் பத்து
பாளப்பா பழம்புளியைக் கரைத்து நீயும்
பாங்கான கண்ணிற்குப் பிழிந்து பாரே. 612

பாரேநீ பொட்டணத்தைப் பிடிக்கச் சொல்லும்
பண்பாக நாலுதர மொருநாள் வாரு
சேரேநீ வார்த்தவுடன் வலிதான் நிற்கும்
சிறப்பாக நாள்மூன்று இந்தப் பாகம்
ஆரேநீ ஐந்தாநாட் சொல்லக் கேளும்
ஆவரம்பூ தலையிலிட்டு முழுகச் சொல்லும்
கூரேநீ கண்வலி யெங்கே போச்சு
குருவான போகரோட கடாச்சந் தானே. 613

(வேறு)

துளிர்முருங்கை யாவின் சுத்தமாய் வெந்தே
ஒளிநறுநெய் கூட்டி யரைத்துத்—துளிவினவே
நொந்தகண்ணி லேபிழிந்தால் நோவுநிற் கும்பொழுதே
கந்தன் பதமறியக் காண். 614

(வேறு)

கருதிய கண்கள் நொந்து கண்கள்நீர் மிகவுறுத்தி
பெருகவே யிமைகள் வீங்கிப் பேணிமுன் தினவ தாகி
உருகவே பீளை சாறி உழன்றசைந் திருக்கு மாகில்
மருகதாழ் கொண்டுகம் பண்ணி மகிழ்ந்து பின்நசியம் பன்னே. 615

**பற்று**

கருப்புர மருந்தை யிட்டு கனத்துமே பூசு மாகில்
அரைத்துரப் புளியுஞ் சுக்கும் அதிலிடு காடி தானும்
எரித்துரக் காய்ச்சிக் கொண்டு இமையின்மே லிடுவா யாகிற்
தெரிப்புரச் சிவப்பு விட்டுத் தெளிவுடன் தினவு போமே. 616

பின்னும்

இரும்பது சிவக்கக் காய்ச்சி எலுமிச்சம் பழச்சாறு விட்டு
வரம்பிர கடுக்காய் சுக்கு வாங்கிப் பின் காய்ச்சித் தேய்த்து
நிரம்பட யிமையி லங்கே நீயிரு சூழப் பூசில்
வரம்பர வுறுத்த லோடு வனலுரு சிவப்பும் போமே 617

பின்னும்

கடுக்காய் நெல்லிக்காய் அதிமதுரம்
காணும் புளித்துளிர் கருவேப்பிலையும்
கொடுத்த யிவைகள் தன்னிலொக்க
குமரிப் படவே குடைந்தெடுத்து
அடுத்த யிவையெல்லா மதிலடைத்து
ஆவரை யிலையும் குழம்பாக்கி
நடுத்தி யதனில் யெரித்தெடுத்து
நல்ல பதத்தில் நீவாங்கே. 618

வாங்கி யரைத்து முலைப்பாலில்
வழித்துக் குழைத்து யிமையிலிடில்
வீங்கும் விழியில் நீர்ப்பாய்ச்சல்
விதன கோபம் எரிப்பழற்சி
ஓங்கி யெழுந்த பூவெழுச்சி
உடனே யெழுந்த பூக்களும்
தாங்கா தோடும் கயிலைமீதில்
தம்பிரான் தன்னருள் தான்கொண்டே 619

பின்னும்

சோற்றுப் பற்று வெண்ணீரும்
தோகை யனையாள் முலைப்பாலும்
வேற்றுப் பற்றுட னெடுத்து
வேறுகலத் தின்புறந் தேய்த்து
காற்றுப் படாமல் காத்திருந்து
கண்ணைச் சூழ வளைவீராய்
தோற்றுப் போமே கண்ணோவும்
சொன்னோ மிதுதான் சொன்னோமே. 620

பின்னும்

கருவேப் பிலையும் கடுக்காயும்
கனத்த பிங்கான் புழுங்லரிசி
மருவுங் காடி தனிலரைத்து
மருக்கக் காய்ச்சி புறவளைத்தால்
அருவும் கண்ணும் நீர்க்கலப்பும்
மண்டைவ லித்த லைநோவும்
வெருவிப் போகு மிதுதனிலே
வேறு மருந்து வேண்டாமே. 621

பின்னும்

முட்டைவெண் கருவை வாங்கி
முதியதோர் முலைப்பால் குத்தி
திட்டெனப் பஞ்சி லூட்டித்
திடமதாய் யிமையிற் போட்டால்
கெட்டெழுங் கண்ணில் நோவும்
கிடைந்தெழுஞ் சிவப்பு மாறிச்
சுட்டதோர் நெற்றிக் கண்ணிச்
சோதியே யருளிச் செய்தார். 622

பின்னும்

துத்தம், துருசு, கருவேலம்பிசின், சுக்கு, மனோசிலை, சமன், பழச்சாற்றிலரைத்து உருட்டி, மேலும் காடியிலரைத்து, இமையின் மேல் தடவவும். கண் சிவப்பு, தினவு இவை தீரும். 623

பின்னும்

பெருங்காயம், படிகாரம், கரிய போளம், பழச்சாற்றில் அரைத்து, கொதிக்க வைத்து, இமையின் மேல் தடவவும், கண் சிவப்பு, கண்ணீர்ப் பாய்ச்சல் தீரும். 624

பின்னும்

இரும்பைக் காயப் போட்டு, எடுத்து, சீனக்காரம், கடுக்காய் பொடித்துப் போட்டு, பழச்சாறு விட்டரைத்து, வளையம் இடவும் தலையிடி, குத்தல், கண்ணீர்ப் பாய்ச்சல், கண்வலி தீரும். 625

(வேறு)

சிதேவியார் செங்கழு நீரைப் பிடுங்கி வந்து காதில் கட்டக் கண் நோவு தீரும். 626

(வேறு)

துத்தம், துருசு, வகைக்கு வராகன் எடை, சீலை முடிந்து, விளக்கில் சுட்டு, கல்வத்திலிட்டு, உப்பிலிக் கொடிச் சாற்றி லரைத்து, ஆவின் வெண்ணெய் கலந்து கண்ணிற்கிடவும் வேக்காடு தீரும். 627

(வேறு)

கடுக்காயை இரண்டாக வெட்டி, விதை எடுத்ததில் மிளகிட்டு, அடைத்து, சீலை சுற்றிச் சுட்டு எருமை வெண் ணெய்யிற் குழைத்துப் போடத்தீரும். 628

(வேறு)

குப்பைமேனி இலையைக் கசக்கி வலக்கண்ணிற்கு இடக் காதிற் பிழியவும். 629

(வேறு)

மண்வெட்டியைக் காய வைத்துச் செந்நாயுருவி வேரைப் பழச்சாறு விட்டரைத்துக் கண்மேற் சூட்டிற் போடவும். 630

(வேறு)

மேற்படி செந்நாயுருவிச் சாற்றை அம்மியில் மத்தித்துப் போட்டாலும் தீரும். 631

(வேறு)

துத்தம், துருசு, பீதரோகணி, அஞ்சனக்கல், சிறுகீரை வேர், பொன்னாங்காணி வேர், மருக்காலம் பழம், பனை மட்டைச்சாறு வார்த்தரைத்து, தேன்கூட்டிக் குழம்பாக்கி இடவும், 632

(வேறு)

கரிசலாங்கண்ணிச் சாற்றில் ஆணாவேர் அரைத்துக் கண்ணிலிட மாறும். முருங்கைப் பருப்பு 2 பங்கும், நத்தைச் சூரி வேர், தோல் கூட்டி அரைத்து, பிசைந்து, கலத்திலிட்டு வெய்யி லிலே வைக்கத் தைலம் விழும். விழாத போது பிழிந்து கொண்டு கண்ணிலே இடவும். 633

(வேறு)

பொன்னாங்காணிவேர்,சிறுகீரைவேர்,ஓரிலைத் தாமரைவேர் சரி கூட்டி, காய்ச்சிக் கறுக்கி, பச்சைக் கற்பூரமும், தேனும் கூட்டி, கலத்தொடுகலம் சாரித்து, 3 நாட்கள் எள்ளுப் பாதி கண்ணி லிடவும். கண் குளிர்ந்திருக்கும். 634

(வேறு)

கடுக்காயைத் தண்ணீர் வார்த்தரைத்து உருண்டை பண்ணி, காய வைத்து, உரைத்து இட, கண்ணில் இரத்தம் போலிருப்பது மாறும். 635

(வேறு)

மிளகு ஒரு பலம், கஞ்சா சாற்றில் ஊறப் போட்டு, கோணிப் பட்டிற் தேய்த்து, உலர்த்தி உடைத்து, நல்லெண்ணெய்யிற் போட்டு ரவி புடமிட்டு முழுகவும். கண் சிவப்பு, எரிவு தீரும் 636

(வேறு)

நல்லெண்ணெய் ஒருபடி, கரிசாலஞ்சாறு, பொன்னாங்காணிச் சாறு, வெண் நொச்சிச்சாறு, கருநொச்சிச் சாறு, நார்த்தம்பழச் சாறு, ஆதெண்டை வேர் விழுது நார்த்தங்காயளவு, மிளகு ஐந்து பலம், வெள்ளாட்டுப் பால் ஒரு படி, வடித்து முழுகவும் தொண்ணூற்றாறு நோய்களும் தீரும். 637

(வேறு)

பொன்னாங்காணிச் சாறு, பசுவின் நெய், முலைப்பால் மூன்றும் சரி கூட்டி காய்ச்சிக் காலமே தேய்த்து, மாலையில் குளிர்ந்த தண்ணீரில் குளிக்கவும் 638

(வேறு)

அருகம் புல்சாறும் நெய்யும் வகைக்கு 1 படி, அதிமதுரம் 10 வராகன் எடை, நாற்பாலை முகிழ் 8 வராகன் எடை. இவற்றை அரைத்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி 1 வராகன் எடை கொள்ளவும் தீரும். 639

(வேறு)

வெண்காவளை, சாரணை, சிறுகீரை வேர், துத்தம், துருசு, பழச்சாறு வார்த்தரைத்து நிழலிலுலர்த்தி முலைப்பாலில் உரைத்திடவும். 640

(வேறு)

இந்துப்பு, திப்பிலி. பீதரோகணி, நந்தியா வட்டப் பூச் சாற்றால் அரைத்து இடவும் தீரும். 641

(வேறு)

தலையோடு, சாரணைக் கிழங்கு, நாயுருவி இலைச் சாற்றிலுரைத்து, சீனக்காரமும் கூட்டி கண்ணிலிடத் தீரும். இதை நீர்ப்பூலாவேர்ச் சாற்றிலிடத் தழும்பு மாறும். நாவற்பட்டை நறுக்கிப் பசுவின் பாலில் ஊற வைத்து அந்தச் சாற்றிலிடத் தழும்பு மாறும். கை கண்டது. 642

(வேறு)

காசாயிலை, வரட்பூலாயிலை, புளியிலை, இவை துவைத்துச் சாறு கொண்டு காய்ச்சிக் குழம்பானவாறே, நெல்லி, சந்தனம், தேற்றாங் கொட்டை, ஆமை ஓடு, இவை சமன், புளியிலைச் சாற்றிலரைத்துக் குழம்புடனே கூட்டித் திரட்டி உலர வைத்து, எலுமிச்சம் பழச் சாறாகுதல், தண்ணீராகுதல் உரைத்துப் பூசவும்

(வேறு)

கருவேலம் பிஞ்சு துவைத்துச் சாறு பிழிந்து துத்தம், துருசு கலந்து, சீலையில் இரண்டு நாள் ஊறி உலர்த்தி, இந்த சீலையை முலைப்பாலில் சற்றுக் போட்டுக் கசக்கி வெச்செென வைத்து கண்ணில் பிழியக் கண் வேதனை, சிவப்பு தீரும். 644

(வேறு)

பச்சை எள்ளைப் பொடி செய்து நல்ல வெல்லத்துடன் பிசைந்து பொட்டணம் கட்டி பசுவின் நெய் சென்ன வைத்து, இந்தப் பொட்டணம் ஒற்றக் கண்ணிலுள்ள வேதனை பொறுக்கும். 645

(வேறு)

அதிமதுரம், கோட்டம், செங்கழுநீர்க் கிழங்கு, பசுவின் நெய்யில் அரைத்து வெச்செென வைத்து ஒற்றவும். 646

(வேறு)

துத்தம் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து சீலையிலூட்டி ஒற்றக் கண் வேதனை தீரும். 647

(வேறு)

வசம்பு, வேர்க் கொம்பு, மிளகு, குப்பைமேனி, இவற்றை நீரிலரைத்துப் பொட்டணங்கட்டி எண்ணெய் காய்ச்சித் தேய்த்து ஒற்றவும். 648

(வேறு)

புழுங்கல் அரிசித் தவிடு திருநீறில் பிசைந்து பொட்டணமாகக் கட்டி நெற்றியில் ஒற்றவும் 649

(வேறு)

கருஞ்சீரகம், கற்றாழை, கடுக்காய், வேப்பிலை, தற்சமன் கொண்டு பாலிலரைத்து களிம்பாக்கிப் புறவளையம் பூசவும். 650

(வேறு)

முகட்டையிலை அரைத்துப் புறவளையம் பூசவும் வலி தீரும்.

(வேறு)

பசுவின் பால் 1 நாழியில் 1 பிடி புளியிலையைப் போட்டுக் காய்ச்சி வற்றியபின் சீலையில் பொட்டணமாகக் கட்டி ஒற்றவும் வலி தீரும். 652

(வேறு)

கடுக்காய், நெல்லிக்காய், அதிமதுரம், தேற்றாங் கொட்டை, கருவேலிலை, இவற்றைச் சமன் கொண்டு குமரி மடல் குடைந்த்தில் புதைத்துச் சாணி பூசினபின் வெந்து பதமானால் எடுத்து முலைப்பால் வார்த்தரைத்து அனலில் கொதிப்பித் திமையிலிட தினவு, எரிப்பு, சிவப்பு, சதை வளர்த்தி இவை தீரும். 653

(வேறு)

மின்மினிப் பூச்சியும், துருசும், மிளகரணை வேரும் அரைத்து உருண்டை பண்ணி நீரில் உரைத்துக் கண்ணிலிடக் குணமாகும். காமாலை கண்ணுக்கும் ஆம். 654

## 8. பொது நோய்களும் மருத்துவமும்

கண்ணின் கருவிழி, வெள்ளை விழி, இமை, குவளை போன்ற விடங்களில் தனித்தனியாகத் தோன்றுவனவாகக் கூறப்படும் நோய்களும் அவற்றிற்கான மருத்துவமும் அவ்வவற்றிற்கான தலைப்புகளில் விளக்கப் பட்டுள்ளன.

இவை தவிர, பொதுவாகக் கண்ணில் தோன்றும் சில நோய்களும் அவற்றிற்கான மருத்துவங்களும் சில சுவடிகளில் கூறப் படுகின்றன. அவற்றை ஒன்றாகத் தொகுத்து, தலைப்புகளை அகர வரிசையில் முறைப்படுத்தி இங்கு விளக்கியுள்ளேன்.

இங்கு மொத்தம் 125 வகையான நோய்களும் அவற்றிற்கான மருந்துகளும் கூறப் படுகின்றன. இவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

### பொதுவாகக் கூறப்படும் சில கண் நோய்கள்

| | |
|---|---|
| 1 அக்கர ரோகம் | 7 அமரம் |
| 2 அக்கரம் புழுவெட்டு | 8 அரூபம் |
| 3 அடைந்தெழுந்திடுதல் | 9 அவிகாய விரணம் |
| 4 அதிமந்தம் | 10 அழற்சி |
| 5 அதிமந்தாரம் | 11 அழிகண் |
| 6 அந்திரகாசம் | 12 அழிகண் பிரிதல் |

13 அழித்திடும் பிரிதல்
14 அழுகண்
15 அனல் கோபம்
16 அன்னகோபம்
17 ஆமை கோபம்
18 இமையோடுறுத்தல்
19 இரத்தப் பாய்ச்சல்
20 இருள் கண்
21 இழிகண்
22 இழிகண் புழுவெட்டு
23 உக்கிரரோகம்
24 உடைந்தெழுகாசம்
25 உயர்ந்து கண் புடைத்தல்
26 உருவிப்புடைத்தெழுதல்
27 உளவுநேத்திரம்
28 ஊடையெழுச்சி
29 ஊறு காசம்
30 எரிவிழி மழுங்கல்
31 எழுநாயிறு
32 ஒட்டுக் கண்
33 கண் கட்டி
34 கண் குரு
35 கண் கூச்சம்
36 கண் சிவப்பு
37 கண்ணுளவு, ஒட்டுக்கண், மலங்குகண், கண் சுருங்கல்
38 கண்ணெரிதல்
39 கண் தினவு
40 கண்பிரிதல்
41 கண் புண்
42 கண் பூ
43 கண்மந்தம் நீர்ப்பாய்ச்சல்
44 கண் விரணம்
45 காசமுறுக்கி
46 காசவெறி
47 காயான்
48 குந்தம் அமரம்
49 குந்தம் பூ
50 குமரிதன் காசம்
51 குவளை எரிதல்
52 குவளைக் கண்பிரிதல்
53 குவளை காசம்
54 குவளை நெரிதல்
55 குவளைப்படுவன்
56 குவளை விப்புருதி
57 கூசி விழித்தல்
58 கொமட்டிக்கண்
59 கோரைக் கண்
60 சலகும்பம்
61 சலரூபம்
62 சாய்கண் குருடு
63 சுக்கிரப்படுவன்
64 சுக்கிரரோகம்
65 சுந்திரரோகம்
66 சுடரதி மாங்கிசம்
67 சுடர்பல தோற்றல்
68 சுடுவளர்த்தி
69 சுருங்கு கண்
70 சுழல்வண்டெரிதல்
71 சுழல் விழி எரித்தல்
72 செவ்வேர்
73 சோதி நெரிதல்
74 சோதிகா விரணம்
75 சோர்கண் துடிப்பு
76 துத்திடு காசம்
77 துன்மாங்கிசம்
78 துன்னுகாசம்
79 துன்னு வெண்புகைச்சல்
80 தூயகண் குருடு
81 நத்தைப்படுவன்
82 நாக படலம்
83 நீரெழுகாசம்

84 நீரொளிகாசம்
85 நீர்ப் பாய்ச்சல்
86 நீர் வடிதல்
87 நேத்திர சூலை
88 நேத்திர நீரேற்றம்
89 பக்கப்படுவன்
90 பஞ்சணிப் படலம்
91 படலம்
92 படிகுந்தம்
93 பருமுளை
94 பருவணிகை
95 பறவைப் பூ
96 பிரிதல் நேத்திரம்
97 பிறவிக் குருடு
98 புகைச்சல்
99 புத்தியழித்தல்
100 பூப்படல காசம்
101 பூப்படலம்
102 பூப்படலம் அதிமாங்கிசம்
103 பூவெள்ளெழுத்து
104 பொங்கிய விதனம்
105 மணி வளர்த்தி
106 மணி நீலகாசம்
107 மதன மந்தாரம்
108 மதிமந்தம்
109 மயிர்க்குத்து
110 மலங்குழி
111 மாலை காசம்
112 முளை யாணி
113 மௌிரு
114 வருஞ்சலரோகம்
115 வளைந்தெழு ரோகம்
116 வளைகிகாசம்
117 வாரெழுகாசம்
118 விதனமந்தாரம்
119 விழிகண் குருடு
120 வீங்கி விழித்தல்
121 வெக்கடுப்பு
122 வெண்கண்வலி
123 வெண்ணோக்காடு
124 வெண்மாசுப் படலம்
125 வெள்ளைப் படலம்

## 1. அக்கரம்—குணம்

அக்கரம் என்றும் அக்கரரோகம் என்றும் இந்நோய் இரண்டு பிரிவாகக் கூறப்பட்டிருப்பினும் இரண்டும் குணத்தில் ஒத்தனவே எனலாம் கண்களில் கரகரப்புடன் மேலிமைகள் கனத்துப் புண்ணாகும், வலி மிக அதிகமாகும், கண்களில் நீரும் பாயும், தினவுடன் பீளையும் சேரும். முகத்தில் கோபக்குறிகளும் சோர்வும் தோன்றும். (655-656)

## 2. அக்கரம் புழுவெட்டு—குணம்

வெள்ளை விழியில் இரத்தம் தங்கிச் சிவந்த நிறம் காட்டும். பீளை சேரும். கண்ணில் குத்தலும் தினவும் காணும். கண் நடுவில் மேகம்போலச் சவ்வு படரும். கண்கள் தணல்போலெரிந்து வீங்கும்.

**மருந்து 1**

வெள்ளைக்காக்கணவேர், துத்தம், துருசு, பளிங்குக்கல், சங்கு, மஞ்சள், திப்பிலி, சந்தனம், பச்சைக் கற்பூரம், செம்புப்

பொடி இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (658)

**மருந்து 2**

செம்புப்பொடி, துத்தம், துருசு, வெண்கலம், வளையல், வெள்ளைக்கல், ஓரிலைத்தாமரை வேர், வெட்பூலாவேர் இவை வகைக்கு 1 கழஞ்சு, இந்துப்பு ¼ கழஞ்சு, எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் தீரும். (659)

**மருந்து 3**

கற்றாழைச்சாறு 8 படி, நல்லெண்ணெய் 1 படி, சிறுநாகப் பூ, செங்கழுநீர்க்கிழங்கு, அதிமதுரம், விலாமிச்சுவேர், நன்னாரி, அஞ்சனக்கல், சந்தனம் இவை வகைக்கு 3 கழஞ்சு ஆவின்பால் விட்டரைத்துச் சேர்த்துக் காய்ச்சி முழுகி வரத் தீரும். (660)

## 3. அடைந்தெழுந்திடுதல்—குணம்

கண்களில் கடுப்புடன் இமைகள் வீங்கும். கண்ணீர் கசிந்து வெளியாகும். கண்களில் பீளை சேருவதுடன், சிவந்து, எரிச்சலுடன் புடைக்கும். மூக்கிலிருந்தும் நீர் சொரியும். அன்னம் சாப்பிடவும் இயலாது. (661)

## 4. அதிமந்தம்—குணம்

கருவிழியும் வெள்ளை விழியும் சிவப்பாக இருக்கும். இருவிழிகளிலும் வலி ஏற்படும். கண்ணில் உறுத்தலும் புகைச்சலும் தோன்றும். (662)

## 5. அதிமந்தாரம்—குணம்

கண்ணின் கருமணியில் குத்தலுடன் கண்களில் வலியும் கடுப்பும் இருக்கும். நீர்வடியும். பார்க்க இயலாமல் சலிப்புண்டாகும். நடக்கவும் இயலாது. மருந்தும் பயன்தராது. (663)

## 6. அந்திரகாசம்—குணம்

சந்திரன் தோன்றும்போது பார்வை புகைச்சலாயிருக்கும். தம்பலப்பூச்சி (இந்திரகோபம்) போலக் கண்கள் சிவக்கும். உற்றுப் பார்த்தால் பயமாக இருக்கும் கோபம் உண்டாகும். கண்களைத் திறந்தால் இருளும். (664)

## 7. அமரம்—குணம்

இமைகளில் சதை வளர்ந்து கண்களை மூடித் திறக்க முடியாது. விழியிற் பரந்து குத்து வலியுடன் நீரும் பீளையும் ஏற்படும். எதிரிலுள்ளவரைப் பார்க்க இயலாது. கண்கள், அலர்ந்த பூப்போலச் சிவந்திருக்கும். (665)

**மருந்து 1**

வெள்ளைச்சாரணைவேர், துருசு, துத்தம், திரிகடுகு, மஞ்சள், இந்துப்பு, தேற்றாங் கொட்டை, கடுக்காய்த் தோல் இவை ஓரளவாய்க் கொண்டு புளியிலைச் சாற்றிலரைத்து இடத் தீரும். (666)

**மருந்து 2**

நெல்லி வற்றல் ஓரிதழ்த் தாமரை, பொன்னாங்காணி, துத்தம் இவை ஓரளவாய் சேர்த்து அரைத்துருட்டி உலர்த்து எடுத்து நீரிலுரைத்து இடவும் தீரும் (667)

**மருந்து 3**

துருசு, புளிபிலை, இந்துப்பு, கருப்புக்கட்டி, இவை ஓரளவாய்க் கூட்டி யரைத்து இடவும் தீரும். (668)

## 8. அரூபம் — குணம்

வெள்ளை விழியில் நீர் கொள்ளும், கண்ணீர் வடியும், பகல் நேரம் விளக்கொளி போலாகும். பீளை கட்டுவதுடன் எரிச்சலும் உண்டாகும். (669)

## 9. அவிகாய விரணம்—குணம்

செவி, வாய், கண், மூக்கு, போன்ற இடங்களில் தினவுடன் சிவப்புண்டாகும். கண்கள் தானாக விழித்து மூடும். கனத்துடன் பீளை கட்டும். உறக்கம் வராது நடுவிழியில் குத்தும். (670)

## 10. அழற்சி—குணம்

கண்களைச் சுற்றிலும் குத்தும், கடைக்கண் வீங்கும். பீளை பாயும். கண்கள் சிவக்கும், நெற்றி, கன்னம், போன்ற இடங்களிலும் வலி உண்டாகும். சாப்பிடவும் முடியாது. (671)

## 11. அழிகண்—குணம்

கண்ணில் தசை வளர்ந்து சவ்வு படரும். கடுகு போல கட்டிகள் தோன்றி வளர்ந்து எரிச்சலாகும். விழியில் நூல்கள் போலத் தோன்றி அழுகத் தொடங்கும். கண்ணில் நீர் வடியும். பிடரிவலி கழுத்தைத் திருப்பக் கூடாமை போன்றவையும் காணும். (672)

**மருந்து 1**

துத்தம், துருசு, புளியம் பொறுக்குச் சுட்ட சாம்பல், கடுக்காய் கரி இவை ஓரளவாய் பசுவின் வெண்ணெய் யிலரைத்து இடத் தீரும். (673)

**மருந்து 2**

அரளிவேர், அருக்குவேர், எட்டிவேர், சத்திசாரணைவேர் எள்ளெண்ணெய்யில் அரைத்து இடவும் தீரும் (674)

**மருந்து 3**

திரிகடுகை நீரிலுரைத்து இடவும் தீரும். (674)

**மருந்து 4**

ஆயிரை மீன்றலையை முலைப்பாலில் உரைத்து வாழைப் பழத்துடன் இடவும் தீரும் (675)

## 12. அழிகண் பிரிதல்—குணம்

கண்களில் கடுப்புடன் வலியேற்பட்டுத் தசைகள் விழிகளை மூடிவிடும் இமைகளில் புண்கள் சூழ்ந்திருக்கும். பீளை பாயும். இந்நோய் மாறாதது. வேண்டிய மருந்து செய்தால் கண்ணே அழிவது திண்ணம் என்பர். (676)

## 13. அழித்திடு பிரிதல்—குணம்

கண்களைச் சுற்றிலும் புண்ணாகும். பீளை பாயும், எரிச்சலும், குத்தலும், நீர்வடிதலும் உண்டாகும். சீழ் போன்ற நீர் வழியும். கண்களில் தளர்ச்சியுடன் விழிக்கவும் இயலாது. அழித்திடும் கருவி போன்றது இந்நோய் என்பர். (677)

## 14. அழுகண்—குணம்

வெள்ளை விழி சிவந்திருக்கும். கண்கள் அனல் போல எரியும். உடல் வலியும், உடல் மஞ்சள் நிறமாவதும் காணும்.

கண்ணில் நீர் வடிவதுடன், சோர்வும், மயக்கமும் உண்டாகும். வாந்தி, அரோசிகம், கழுத்தைத் திருப்பக்கூடாமை போன்றவை யும் தோன்றும் (678)

**மருந்து 1**

சுழல் வண்டு சுட்ட சாம்பல், வெள்ளுள்ளி, மிளகு இவை ஓரளவாய், நீர் முள்ளிச்சாறு வெற்றிலைச்சாறு, நல்லெண்ணெய் இவை சேர்த்து அரைத்து இடத் தீரும் (679)

## 15. அனல்கோபம்—குணம்

கண்களில் பார்வை குன்றி, விழி சிவந்து மின்னும். தீப்போல எரிச்சலுடன் புடைக்கும். கண்ணோரங்களில் நீர்வடியும்

இந்நோய் தீராதது என்றே கூறப்படுகின்றது. ஆயினும் பொதுவான சில மருந்துகளை இதற்குப் பயன்படுத்துவர். (680—682)

## 16. அன்ன கோபம்—குணம்

கண்களில் கனலெழ எரிச்சலுடன் விழிகள் புடைக்கும். உலையினிலிட்ட மெழுகு போலக் கண்கள் சிவந்து வலியுடன் நீர் வடியும். இந்நோய் மிகவும் கொடியது. இதற்கு மிகவும் கவன மாக மருந்து செய்ய வேண்டு மென்பர். (683—684)

**மருந்து 1 (தைலம்)**

நல்லெண்ணெய் 1 படி, முலைப்பால் 1 படி, செங்கழுநீர்க் கிழங்கு, சண்பகப்பூ, ஏலம், சடாமாஞ்சில், விலாமிச்ச வேர், பச்சைக் கற்பூரம், சீரகம், நிலக்கடம்பு, கொத்தமல்லி, கோரைக் கிழங்கு, சந்தனம், வெட்டிவேர், பசுவின் பால் இவற்றைச் சேர்த்து அரைத்துக் காய்ச்சி வடித்து முழுகத் தீரும். (685—686)

**மருந்து 2**

கற்றாழைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, எள்ளெண்ணெய், இவற்றை ஓரளவாய்க் கொண்டு காசுகட்டி, பச்சைக் கற்பூரம், புனுகுசட்டம், கெந்தாங்காணி இவற்றையும் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (687)

**மருந்து 3**

மாதளம்பூ, பச்சைக் கற்பூரம் இவற்றை முலைப்பால் விட்டரைத்துக் கண்ணிலிடவும் தீரும் (688)

மருந்து 4

முலைப்பால் 1 நாழி, நல்லெண்ணெய் 1 நாழி, இவற்றுடன், மாஞ்சில். கோட்டம், சண்பகப்பூ, ஏலம், மதுரம், முத்தக்காசு, விலாமிச்சுவேர், இவற்றை ஓரளவாய் சேர்த்து அரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (689)

மருந்து 5

துருசு 12 பங்கு தலையோடு 4 பங்கு, கடல்நுரை 3 பங்கு, சங்கு 2 பங்கு, கவடி 1 பங்கு எனக் கொண்டு எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து இடவும் தீரும். (691)

மருந்து 6

முடக்கொற்றான் சமூலம் சாறு 2 நாழி, பசுவின் நெய், அதிமதுரம் ½ பலம், பசுவின்பால் விட்டரைத்துக் காய்ச்சி வடித்து ஒரு துளி கண்ணில் இடவும் தீரும். (692)

மருந்து 7

மாதுளம்பூ, காய், பச்சைக் கற்பூரம், முலைப்பால் விட்டரைத்துத் துணியில் முடிந்து கண்ணில் பிழியவும் தீரும்.

கண் குளிர்ச்சிக்கான தைலங்களைத் தலையில் தேய்த்து முழுகவும் தீரும். (694—696)

## 17. ஆமை கோபம்—குணம்

அன்ன கோபம் என்னும் நோய்க்குக் கூறப்படும் குணங்களே இந்நோய்க்கும் கூறப்படுகின்றன. எனவே, இவையிரண்டும் ஒத்தவை எனலாம். அன்ன கோபத்திற்கான மருந்துகளே இதற்கும் கூறப்படுகின்றன. (697-699)

## 18 இமையோடுறுத்தல்—குணம்

புருவங் கீழுள்ள தசை கனத்துத் துடிக்கும். கண்கள் விண்ணைப் பார்க்கும் போது மிகவும் கூச்சமுண்டாகும். வீணை மீட்டுவது போலத் தெறிக்கும். இழுக்கும். உடல் குன்றுவதுடன் அச்சமும் தோன்றும். குவளையில் கடுப்புடன் நீர் வடியும் தலையில் அரிப்புண்டாகும். (700)

## 19. இரத்தப் பாய்ச்சல்—குணம்

கண் சிவந்து தசை வளர்ந்து காணும். தினவுடன் நீர் வடியும் பீளை வடியும் திமிருடன் குரங்கினது ஆசனத்தைப் போல சிவந்து காணும். (701)

**மருந்து 1**

உத்தம தாளிபூ நெருஞ்சில்பூ, முருங்கைபூ, வெள்ளைச் சாரடைக் கொழுந்து, நாய்வேளைக் கொழுந்து, ஈருள்ளி, சீரகம் இவை வகைக்கு $\frac{1}{4}$ வராகன் எடை சேர்த்து முலைப்பால் விட்டு அரைத்து வடித்துக் கண்ணில் பிழியத் தீரும். (702)

**மருந்து 2**

தேள் கொடுக்கிலையைக் கசக்கிக் கண்ணில் பிழியவும் தீரும். (703)

**மருந்து 3**

மாதளம்பூ, நற்சீரகம், நெருஞ்சிக்காய் ஓரளவாய்க் கொண்டு பனை மட்டைச் சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடவும் தீரும். (704)

**மருந்து 4**

நெஞ்சந்தனம், சாத்திரவேதி, தேற்றான் வித்து இவற்றை ஓரளவாய் பசுவின் வெண்ணெய்யில் குழைத்துக் கண்ணைச் சுற்றிப் பூசவும் தீரும். (705)

**மருந்து 5**

பசுவின் பால் 1படி, பொன்னாங்காணிவேர் 1 பலம் சேர்த்துக் கலக்கி உறைய வைத்து வெண்ணெய் எடுத்துக் கண்ணிலிடவும் தீரும். (706)

## 20. இருள் கண்—குணம்

இருள் கண்ணுக்கான மருந்துகள் பல சுவடிகளில் கூறப் படினும் இதன் குணம் கூறப்படவில்லை. பார்வை புகைச்சல், இருள் தோன்றல் போன்ற அடிப்படையில் இந்நோய்க்கான மருத்துவம் கூறப்படுகின்றது எனலாம்.

**மருந்து 1**

துத்தம், ஆவரங்கரி, சவுக்காரம் இவை வகைக்கு 1 பண எடை. துருசு $\frac{1}{4}$ பண எடை, எறும்பு 4 இவைகளை பசுவின் பாலிலரைத் துருட்டி எடுத்து முலைப்பாலில் உரைத்திடத் தீரும் (707)

மருந்து 2

துத்தம், துருசு, வெள்ளைச் சோகி இவை வகைக்கு 1 கழஞ்சு எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து உருட்டி, உலர்த்தி எடுத்து புளியிலைச்சாறு, அவுரியிலைச்சாறு இவைகளில் உரைத்திடவும் தீரும். (708)

மருந்து 3

சண்பகப்பூ, சிறுநாகப்பூ, வெட்டிவேர், விலாமிச்சம் வேர், கற்கண்டு, சாதிக்காய், தக்கோலம், சீந்தில் தண்டு இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து 8 படி தண்ணீரில் போட்டுக் காய்ச்சி 1படியாக வற்றவைத்துக் கண்ணில் வடிக்கவும் தீரும். (709)

மருந்து 4

அரிதாரம், இந்துப்பு, செம்பு பொடி இவைகளை ஓரளவாய்த் துளசியிலைச் சாறறிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்து இடவும் தீரும். (709)

மருந்து 5

சீனக்காரம், துத்தம், துருசு, மயில் முட்டைத் தோல், கோழி முட்டைத் தோல் இவை வகைக்கு I கழஞ்சு எடுத்துப் பொடித்து எள் அளவு கண்ணிற் போடத் தீரும். (709)

மருந்து 6

நெல்லிமுள்ளி, புங்கவிதை, வெள்ளுள்ளி, சிறுகீரை வேர் இவைகளை ஓரளவாய் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலிலுரைத்து இடவும் தீரும். (710)

## 21. இழிகண் — குணம்

இழிகண் என்றும், இருண்டவிழி கண் என்றும் இந்நோய் கூறப்படுகின்றது. விழியில் முட்டை போன்ற இருண்டதொரு கட்டி காணும். பார்வை மந்தமாகி வரும். இமை நடுவில் மச்சம் போன்ற புள்ளிகள் காணப்படும். கண்ணோரங்களில் வரை கட்டிப் புண்ணாகி புடைத்துப் பீளை வழிந்து சுருக்கென வலிக்கும் (713)

மருந்து 1

சீனாக்காரத்துடன் எலுமிச்சம் பழச்சாறு சேர்த்துக் காய வைத்து அத்துடன் பச்சைக் கற்பூரம் சேர்த்து முலைப்பாலிரைத் திடத் தீரும். (713)

மருந்து 2

காசுகட்டி, துருசு இவற்றை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் புளியிலைச் சாற்றிலுரைத்து இடவும் தீரும். (716)

மருந்து 3

முலைப்பால். விளக்கெண்ணெய், இவை வகைக்கு ¼ படி. மஞ்சள் 1 பலம், இண்டங் கொழுந்து 1 பிடி எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் காய்ச்சி வடித்துப் பூசவும் தீரும். (716)

மருந்து 4

பசுவின் நெய், துருசு, எலுமிச்சம்பழச்சாறு இவற்றில் தண்ணீர் விட்டரைத்துக் குழம்பாக்கி இடவும் தீரும். (717)

மருந்து 5

வெண்காரம், மயிர்சுட்ட சாம்பல் இவற்றுடன் வெண்ணெய் சேர்த்துக் குழைத்து இடவும் தீரும். (718)

மருந்து 6

இந்துப்பு. கடுக்காய் இவற்றை வெண்ணெய்யில் அரைத்து இடவும் தீரும். (719)

மருந்து 7

துத்தம், கற்பூரம், கையான்தகரை சமூலம் இவற்றை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து நீரில் உரைத்திடவும் தீரும். (720)

## 22. இழிகண் புழுவெட்டு—குணம்

கபத்தின் காரணமாக விழி நரம்புகளில் வாயு சேர்ந்து, இரத்தம் பெருகி, வெள்ளை விழியில் சிவந்தும் வலிக்கும். இரத்தம் அதிகமாகப் பொங்குவதால் வீக்கமுடன் தினவும் காணும். (721)

மருந்து 1

சீமைகல் நார், வெள்ளைக் கற்கண்டு, துருசு இவை வகைக்கு 1 வராகன் எடை, தலையோடு 2 வராகன் எடை இவற்றைச் சேர்த்துப் பொடித்து நெல் அளவு கண்ணிலிடத் தீரும். (722)

மருந்து 2

மஞ்சள், சந்தனம், துத்தம். துருசு, பச்சைக் கற்பூரம், மனோசிலை, இந்துப்பு, வெட்பூலா வேர், பீதரோகணி, வெள்ளி

லோத்திரம் இவை ஒரளவாய்க் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றி லரைத்து உலர்த்திப் பொடித்து எள் அளவு கண்ணிலிடவும் தீரும். (723)

**மருந்து 3**

சிறு புள்ளடி இலைச்சாற்றில் மிளகு சேர்த்தரைத்து வறுத்துச் சாம்பலாக்கி அத்துடன் பசுவின் வெண்ணெய் குழப்பி இடவும் தீரும். (724)

**மருந்து 4**

அருக்கம்பாலைச் சீலையிலூட்டிச் சுட்டுப் பசுவின் வெண் ணெய்யில் குழப்பி இடவும் தீரும். (725)

## 23. உக்கிர ரோகம் - குணம்

கண்களைச் சுற்றிலும் சக்கரம் போல வட்டமாகத் தடிப்பு ஏற்படும். நீரும் பாயும். கண்களை மூடினால் வலி, தினவு, அரிப்புண்டாகும். பூமியில் எதைப் பார்த்தாலும் புகைந்து காட்டும். (726)

## 24. உடைந்தெழுகாசம் – குணம்

கண்களில் பீளையுடன் சிவப்புண்டாகும். கடையும் கருவி போலக் கடைக்கண்ணில் குத்தலும், நெற்றி, காது இவற்றில் குடையும். தலையுச்சியிலும் குத்தும். (727)

## 25. உயர்ந்துகண் புடைத்தல் – குணம்

கண்களில் மிகவும் வலியுடன் புடைத்து வீங்கும். நாள் தோறும் துன்பம் மிகுதியாகும். நினைவில்லாமல் மயக்க முண் டாகும். தசை வளர்ந்து சுருக்கிட்டு நீரும் பாயும். (728)

## 26. உருவிப் புடைத்தெழுதல் – குணம்

கண்கள் மிகவும் புடைத்து வலிக்கும். விழிகள் மேல் நோக்கி யிருக்கும். விழிகள் சிவந்து எரிச்சலுடன் நீரும் பீளையும் பாயும். பேச்சு தடுமாற்றத்துடன் சாப்பிட்ட உணவும் வாந்தி யாகும். படுக்கவும் இயலாது. (729)

## 27. உளவு நேத்திரம் – குணம்

கண் இமையில் தினவும் தடிப்பும் காணும். சுற்றோரங்களில் புண்ணும் காணும். எந்நேரமும் தலைவலி, தூக்கமின்மை, உண்

டாகும், மனமாற்றமும் மயக்கமும் காண்பதுடன் பெண் போகத்தையும் அதிகமாக உண்டாக்கும். கண்மணியில் எப்பொழுதும் உளைந்து வலிக்கும். (730)

**மருந்து 1**

அதிமதுர நெய்யைப் போடவும் தீரும். (731)

**மருந்து 2**

திரிகடுகு, துத்தம், செஞ்சந்தனம், வெள்ளைச் சாரடை வேர், தாமரைக் கிழங்கு, பச்சைக் கற்பூரம். இவை ஓரளவாய் முலைப் பால் விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (731)

**மருந்து 3**

அஞ்சனக்கல், முட்டைத்தோல், சங்கு, திப்பிலி, சந்தனம், தலையோடு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து இடவும் தீரும். (731)

**மருந்து 4**

வெள்ளைக் காக்கணம் வேர், வெண்குன்றி வேர், வெள்ளைச் சாரணைவேர், மஞ்சள், துத்தம், துருசு இவை வகைக்கு 1வராகன் எடை, எடுத்துச் சேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (732)

**மருந்து 5**

துத்தம், இரும்புப் பொடி, முத்து, முட்டைத் தோல், பச்சைக் கற்பூரம், இவை வகைக்கு 1 கழஞ்சு. செப்புப் பொடி உகழஞ்சு, பொன்னஞ்சாடி 1 கழஞ்சு. பவளம், வெள்ளி வகைக்கு 5 கழஞ்சு எடுத்துப் பொடித்துப் போட்டு, இத்துடன், எலுமிச்சம் பழச்சாறு, முருங்கைப்பூச் சாறு காடி நீர் இவற்றைத் தனித் தனியாகச் சேர்த்தரைத் துருட்டி வைக்கவும். இதைத் தேனில் உரைத்திடவும். அல்லது, பசுவின் நீர், நெய், முலைப்பால் இவை வகைக்கு $\frac{1}{4}$ படி ஒன்றாய்க் கலந்து வற்றக் காய்ச்சி வடித்து எடுத்து அத்துடன் கலந்து போடவும் தீரும். (733)

**மருந்து 6**

திரிபலை, தேற்றான் விதை, தாமரைமணி, இவற்றை ஓரளவாய்க் கற்றாழைச் சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (734)

28. ஊடை யெழுச்சி—குணம்

காதிலும் கண்ணிலும் குத்தி வலிக்கும். கனத்து வீங்கும். கண்கள் சிவந்து பார்வையும் கூசும். காதில் சீழ் வடியும். கண்களில் தினவுண்டாகும். கடைக் கண்ணைச் சுருக்கி இழுக்கும். நீர் வடியும். (735)

29. ஊறுகாசம் – குணம்

கண்களில் கடுப்புடன் சிவப்பாகும். சட்டையினால் அடிப் பட்ட புண் போலாகும். இரவில் தசை வளர்ந்து விழிகளை மூடும் இமைகள் கனத்திருக்கும். பார்வை இருண்டிருக்கும். கருமணி ஒடுங்கிக் காணப் படும். (736)

30. எரிவிழி மழுங்கல் – குணம்

கண்கள் கனத்து வலியுடன் கண்ணீர் வடியும். விண்ணில் சூரியனைப் பார்க்கும்போது புருவம், கன்னம், மூக்கு இவற்றி லிருந்து நீர் வடியும். (737)

31 எழுநாயிறு – குணம்

கண்களில் முளைபோல வளர்ந்து பழுக்கும். நோயுள்ளவர் வலியால் மிகவும் துன்பப்படுவார். படுக்கவும் முடியாமல் எழுந் திருக்கவும் முடியாமல் விழிகள் மிகவும் பருத்துத் துன்பமுண் டாக்கும். (738)

32. ஒட்டுக்கண் – குணம்

அகன்ற விழி இரண்டிலும் பீளை சேர்ந்து இரத்தத்துடன் வெளியாகும். தினவும் திமிரும் உண்டாகும். பார்வை புகைச் சலுடன் இருக்கும். தலைவலியுடன் கண்ணில் அனல் போன்ற பொறி வீசும். இமைகள் ஒட்டிக் கொண்டு துன்பம் தரும். (739)

**மருந்து 1**

உத்தமதாளி, நெருஞ்சில், முருங்கை இவைகளின் பூ, வெள்ளைச் சாரடைக் கொழுந்து, நாய் வேளைக் கொழுந்து, ஈருள்ளி, நற்சீரகம், இவை வகைக்கு ½ வராகன் எடை எடுத்து முலைப்பால் விட்டரைத்துக் கண்ணில் பிழியத் தீரும். (740)

**மருந்து 2**

துத்தம், துருசு, புளியம் பொறுக்குச் சுட்ட சாம்பல், கடுக்காய் கரி இவைகளை ஓரளவாய் ஆவின் வெண்ணெய்யில் அரைத்துப் போடவும் தீரும். (741)

## 33. கண்கட்டி – குணம்

கண் ஓரங்களில் கட்டிகள் தோன்றும். இமையில் கொள்ளைப் போல கட்டிகள் தோன்றும். வெண்மையான பீளை சேர்ந்து நீருடன் வெளியாகும். சவ்வு போலத் தசை வளர்ந்து கட்டியாகவும் தோன்றும். கண்ணில் எந்நேரமும் வலியும், தலை வலியும் தோன்றும். (742)

**மருந்து 1**

பீதரோகணி, துத்தம், துருசி, பச்சைக் கற்பூரம், திரிகடுகு, நெல்லிப் பருப்பு, செம்புப் பொடி, பளிங்குக் கல், இரும்புப்பொடி, தலையோடு, கடுக்காய், சிறுகீரை வேர், பொன்னாங்காணி வேர் வெட்பூலா வேர், ஓரிலைத் தாமரை வேர் இவை வகைக்கு 1 வராகன் எடை இவற்றை எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்துத் தீட்டத் தீரும். (743)

**மருந்து 2**

சுக்கு, திப்பிலி, மிளகு, சங்கு, அரிதாரம், புங்கம் பருப்பு, அதிமதுரம், துத்தம், பீதரோகணி, மனோசிலை, பன்றிக் கொம்பு, ஆமையோடு, புலிநகம், சேவல் நெஞ்செலும்பு, இந்துப்பு இவை ஓரளவாய் நந்தியா வட்டப் பூச்சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து தேன், முலைப்பால் இவைகளில் உரைத்து இடவும் ரும். (744)

## 34. கண்குரு – குணம்

கண்களில் மருப்போல தோன்றும். கண்களின் பக்கங்களில் வலியும், கடுப்பும் உண்டாகும். இக் குருவானது தினமும் உடைவதும் பின்பு வளர்வது மாகத் தோன்றி வலியுண்டாக்கும். தலை முழுகினாலும் நடந்தாலும் அதிகமாக வலிக்கும். தலை, முகம் பிடரி போன்ற இடங்களிலும் வலியுண்டாகும். (745)

## 35. கண்கூச்சம் – குணம்

கண்களில் சவ்வு போன்ற தசை வளர்ந்து இரத்தம் கட்டிக் கொண்டு வரும். கடல்நுரை போலவும் பீளை பொங்கி மூடிக் கொண்டு வரும் புருவம் போன்ற விடங்களிலும் மயிர்கள் உதிரும் தினவுடன் நீர் வடியும். கண்கள் சிவப்பாகி கூச்சத்தைத் தரும்.

**மருந்து 1**

தான்றிக்காய், மாசிக்காய், கடுக்காய், காசுகட்டி, இவை வகைக்கு 1 வராகன் எடை அபின், பொரித்த சீனக்காரம் இவை வகைக்கு $\frac{1}{4}$ வராகன்எடை, வரட்பூலா இலை, கருவேலிலை இவற்றை 1 பிடி எடுத்துச்சாறு பிழித்துச் சேர்த்து அரைத் தெடுத்துக் கண்ணைச் சுற்றிப் புறவளையமிட்டும், புளியிலையை வேகவைத்த நீரால் கண்ணைக் கழுவியும் வரத்திரும். (747)

**மருந்து 2**

புளியைக் கரைத்துக் கண்மேல் பிழிவதுடன், துளசியிலை பிண்ணாக்கிலை, புளியிலை, இவைகள் ஓரளவாய் இடித்துத் துணியில் வைத்துக் கண்ணில் ஒற்றடம் செய்யவும். ஆவாரம் பூவைத் தலையில் வைத்து முழுகவும் தீரும். (748)

**மருந்து 3**

நெருப்பில் காய்ச்சிய இரும்புத் தகட்டில் எலுமிச்சம்பழச்சாறு அல்லது புளியிலைச்சாறு விட்டு அத்துடன் கரியபவளம்,கடுக்காய்த் தோல், சீனாக்காரம் இவற்றை ஓரளவாய்ப் பொடித்துப் போட்டு அரைத்துக் கண்ணைச் சுற்றிப் புறவளையமிடவும் தீரும். (749)

**மருந்து 4**

கருவேலம்பிசின், புளியிலை, ஓரிலைத்தாமரைவேர், பொன் னாங்காணிவேர், சிறுகீரைவேர், பஞ்சதிரவியம், கம்பிப் பிசின், மிளகு, கத்தூரி, மஞ்சள் இவை ஓரளவாய் காடிவிட்டரைத்துக் குழம்பாக்கித் தலையில் தடவவும் தீரும். (749)

## 36. கண் சிவப்பு – குணம்

கண்கள் சிவந்த பூப்போலஇருக்கும். கண்கள் சிறுத்து நொந்து நீர் வடியும். உடலில் அதிகமான வெப்பமும், மனச்சோர்வும், உடல் தளர்ச்சியும் காணும், கபத்தினால் இந்நோய் தோன்று மென்பர். இமைகளில் கட்டியும், விழியில் கட்டியும் உண்டாகும். (750-751)

**மருந்து 1**

துத்தம், துருசு, இவை வகைக்கு 1 வராகன் எடை, சிறுகீரை வேர், பொன்னாங்காணிவேர், ஓரிலைத்தாமரைவேர், இவற்றின் ஒரு பாக்களவு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துத்தட்டிக் காயவைக்கவும் இதைச் சட்டியில் வைத் தெரித்தெடுத்துப் பொடித்து ஏள் அளவு கண்ணிலிடத்திரும். (752)

மருந்து 2

கற்றாழைச்சாறு, வேலிப் பருத்திச்சாறு, பொன்முசுட்டைச் சாறு, நல்லெண்ணெய், ஆவின்பால் இவை வகைக்கு 2 படி. வெட்பூலா, நெருஞ்சில், விட்ணுகிராந்தி, விலாமிச்சுவேர், கொத்தமல்லி, கோட்டம் இவை வகைக்கு ¼ பலம் அரைத்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (753)

மருந்து 3

வெள்ளைக் காக்கணான்வேர் 1 வராகன் எடை. வெண்குன்றி வேர் 2 வராகன் எடை, வெள்ளைச் சாரணைவேர் 3 வராகன் எடை, மஞ்சள் 4 வராகன் எடை, துத்தம் 5 வராகன் எடை, துருசு 6 வராகன் எடை எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச் சாற்றிலரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (753)

மருந்து 4

சண்பகப்பூ, சந்தனம், சிறுநாகப்பூ, வெட்டிவேர், விலாமிச்சு வேர், கற்கண்டு, சாதிக்காய், தக்கோலம், சீந்தில் தண்டு இவை வகைக்கு 1 கழஞ்சு, எடுத்துச் சேர்த்து தண்ணீர்விட்டுக் காய்ச்சி வற்ற எடுத்துக் கண்ணில் விடவும் தீரும். (754)

குறிப்பு: இதே மருந்தை இருள் கண்ணுக்குக் கூறும் மருந்து செய்முறைகளில் குறிக்கப்பட்டுள்ளதைக் காண்க.

## 37. கண்ணுளவு, ஒட்டுக்கண், மலங்குகண், கண் சுருங்கல் - குணம்

இதே தலைப்புகளில் தனித் தனியாகவும் இந்நோய்களின் குணங்கள் கூறப்படுகின்றன. இவை ஒன்றாகச் சேர்த்து இரண்டு பாடல்களில் தனியாகவும் கூறப்படுகின்றன. எனவே இவை ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டு தோன்றும் என்றும் அறிய வேண்டியுள்ளது.

கண்ணுளவு என்பது கண்கள் கலங்கிக் காணும், நீர்வடிதலும், கண் துடிப்பும், கூச்சமும் அதிகமாயிருக்கும். தலைவலியும் காணும்

ஓட்டுக்கண், மலங்குகண், கண் சுருங்கல் இவற்றில் கண் எரிச்சலுடன் தினவும் கூச்சமும் காணும். இருவிழிகளும் மூடிக் கொள்ளும். மயக்கம், தலைவலி, வாந்தி, தாகம் இவை அதிக மாகக் காணும். (755-756)

**மருந்து**

எலுமிச்சம் பழச்சாறு 1 துளி, நல்லெண்ணெய் 1 துளி இலுப்பையரைப்பு ஊறிய நீர் 1 துளி இவற்றை ஒன்றாகக் குழப்பிக் கண்ணில் போடத் தீரும். (757)

## 38. கண்ணெரிதல்—குணம்

கண்களில் தடிப்புண்டாகும். நன்கு விழித்துப் பார்க்க இயலாது. குந்தம், பற்பரோகம் போன்ற நோய்களைப் போல கண்கள் சிவந்து காணும். இமைகளைச் சூழ்ந்து புண்ணும் பீளையும் தோன்றும். (758)

**மருந்து 1**

மாதளம்பூ, சீரகம், நெருஞ்சிக்காய் இவற்றை ஓரளவாகக் கொண்டு பனைமட்டைச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (75 )

## 39. கண் தினவு—குணம்

கண்களில் கரகரப்புடன் சிவந்து அறுக்கும். நீரும் வடியும் கண்களில் அனலுடன் உறக்கமும் வராது. பார்வை புகைச்சலுடன் மிகுந்த வலியும் உண்டாகும். (760)

## 40. கண்பிரிதல் விழிவெட்டு—குணம்

கண்களில் வெள்ளை நிறம், மஞ்சள் நிறம், நீலநிறம் போன்று, மாற்றங்கள் காணும். புகை கப்பியது போன்று பார்வையுண்டாகும். கண்ணில் எரிச்சலும், நீர் வடிதலும் உண்டாகும். நரம்புகள் குன்றி மயக்கம், சோர்வு இவையும் தோன்றும். (761)

**மருந்து 1**

நல்லெண்ணெய், குப்பை மேனியிலை, கையாந்தகரையிலை ஆதெண்டையிலை, நொச்சியிலை, கழற்கொடி இவற்றின்சாறுகள் இவை வகைக்கு 1 படி, இவற்றைச் சர்க்கரை சேர்த்துக் கரைத்து வெய்யிலில் தெளியவைத்து எடுத்த தெளிவு ½ படியைக் காய்ச்சி வடித்து முழுகி வரத்திரும். (762)

**மருந்து 2**

சிற்றாமுட்டி வேர், நன்னாரி வேர், இருவேலி வேர், முல்லை வேர், நெய்தல் வேர், சீந்தில் தண்டு, சீதேவி செங்கழுநீர்க் கிழங்கு தண்ணீர்விட்டான் கிழங்கு, சிறுகீரை வேர் இவை வகைக்கு 1பலம்

சேர்த்து அத்துடன், 8 மரக்கால் நீர் சேர்த்து 1 மரக்காலாய் வற்றக்காய்ச்சி அத்துடன், தாழை விழுது, தாமரைக் கிழங்கு, பொன்னாங்காணி, கையாந்தகரை, ஓரிலைத்தாமரை, நெல்லிக் காய், எலுமிச்சம் பழம் இவற்றின் சாறு வகைக்கு 2 படி, நல்லெண்ணெய், பசுவின்பால் இவை வகைக்கு 6 படி] சேர்த்து, அத்துடன் மஞ்சள், பஞ்சதிரவியம், பச்சைக் கற்பூரம், கத்தூரி மஞ்சள், சிறுநாகப்பூ, செவியம், சடாமாஞ்சில், இவை வகைக்கு 1 பலம், இளநீர் சேர்த்தரைத்துக் காய்ச்சி வடித்து, அதில் புனுகு, பச்சைக் கற்பூரம் இவற்றைப் பொடித்துப் போட்டு தலையில் தேய்த்து முழுகவும் தீரும். (763)

## 41. கண் புண்—குணம்

கண் சிவந்து இமைகளினோரங்களில் தினவுண்டாகும். கண் களில் தீராத புண் உண்டாகும். மிகுந்த வேர்வையும் விழிகளில் குத்தலுடன் நீர் வடியும். கண்ணில் அதிகமான வலியும் உண்டா கும். (764)

**மருந்து 1**

சந்தனம், குமரிமணி, அதிமதுரம் இவை வகைக்கு 1 பலம் பசுவின் பால் ¼ படி சேர்த்தரைத்துக் காய்ச்சி வடித்து முழுகத் தீரும். (765)

## 42. கண் பூ—குணம்

வெள்ளை விழியில் ஆணிப்பூ போலத் தோன்றும் எப்பொழு தும் நீர் வடிதலுடன் விழியில் படலம் போலத் தோன்றும். கரு விழியும் மங்கிப் பார்வை குன்றும். (766)

**மருந்து 1**

நத்தைக் கூடு, மிளகு, ஆமையோடு, முதலைப்பல், பன்றிக் கொம்பு, சேவல் நெஞ்செலும்பு, வெள்ளிப்பொடி, புலிநகம் இவற்றை ஓரளவாய் முலைப்பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து தேனில் உரைத்து இடத்தீரும். (767)

## 43. கண்மந்தம் நீர்ப்பாய்ச்சல்—குணம்

கண்ணில் படலம் வளர்ந்து வரும் கருவிழி மந்தமாகி பார்வை குன்றும், கண்மலங்கல், காதிரைச்சல், கண் சிவப்பு, மயக்கம், வியர்வை, சோர்வு, புருவ நெகிழ்ச்சி போன்றவையும் தோன்றும்.

**மருந்து 1**

புளியம்பூ, கிராம்பு, வெள்ளைக் காக்கணம் வேர், அதிமதுரம், துத்தம் துருசு, நீலரத்தினம், முத்து, பவளம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்துப் போடவும். (769)

## 44. கண் விரணம்—குணம்

கண்களைச் சுற்றிலும் புண்ணாகி அரிப்பும் ஏற்படும். இமைகள் உலர்ந்தும், விழிகள் சிவந்தும் வலியுண்டாகும். ஒரு பொருளைக் கூர்ந்து நோக்கமுடியாது. தூக்கமும் வராது. (770)

## 45. காசமுறுக்கி—குணம்

கருவிழியில் நரம்புகள் பரவுவதுபோலச் சிவந்து காணப்படும். வெள்ளை விழியின்மேல் இரத்தம் போலத் தசையும் தோன்றும். குவளையிலிருந்து வடியும் நீரும் வற்றாது. பல்வலி, தலைவலி இவையும் உண்டாகும். (771)

## 46. காசவெறி—குணம்

கருவிழியில் பார்வை குன்றும், எழுத்துக்களைப் பார்க்க இயலாது. இருள்போல வெளிச்சம் காணும். மயக்கம், வாந்தி, தலைவலி, உடல் நடுக்கம் இவை அதிகமாக இருக்கும். எழுத்தைப் பார்த்துப்பின் மனித சமூகத்தைப் பார்த்தால் இருளே போலத் தோன்றும். (772)

**மருந்து 1**

நந்தியா வட்டம்பூ, பீச்சமலர், முருங்கை பூ, கொடுப்பைவேர் அதிமதுரம், ஏலம், கோட்டம், செங்கழுநீர்க் கிழங்கு, எலுமிச்சம் வேர், இலவங்கம், துத்தம், கடல்நுரை, பவளம், முத்து, இவற்றை ஓரளவாகச் சேர்த்து வெள்ளாட்டுப் பித்தாலாட்டி உருட்டி உலர்த்தி எடுத்து, பசுவின் நெய், எலுமிச்சம் பழச்சாறு இரண்டும் கூட்டிக் காய்ச்சி அதில் உரைத்து இடவும் தீரும். (773)

**மருந்து 2**

பலகறை சுட்டசாம்பல், துத்தம், துருசு, மஞ்சள், இவை ஓரளவாய்க் கொண்டு நல்லெண்ணெய்யில் அரைத்துச் சீலையில் தடவிக் கட்டவும் தீரும் (774)

## 47. காயான்—குணம்

கருவிழியின் நடுவில் அழல் போல் எரியும். படலம் போலப் படர்ந்து தசை வளரும். கண்ணில் நீர் வடிதலும், வலியும் உண்டாகும். (775)

**மருந்து 1**

படலம் போன்ற மாசை அகற்றிய பின் மருந்திடவும். மாவும் நெய்யும் பொட்டணமாகக் கட்டி ஒற்றிய பின், புளியந் துளிரும், சீரகமும், பூலாவேர்ப் புறத்தோலும் ஓரளவாய்க் கூட்டி முலைப் பாலில் நனைத்துப் பொட்டணமாகக் கட்டி ஒற்றத் தீரும். (776)

**மருந்து 2**

கடுக்காய், நெல்லிக்காய், அதிமதுரம், புளியங் கொழுந்து, கருவேலிலை இவை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து, கற்றாழையைப் பிளந்து அதனுள் இவற்றைப் பொதித்து புடமாக எரித்து எடுக்க வும். இம்மருந்தை முலைப்பாலில் குழைத்து இடவும் தீரும். (777-778)

## 48. குந்தம் அமரம்—குணம்

குந்தம் என்ற நோயும், அமரம் என்ற நோயும் தனித் தனி யாகக் கூறப்படினும் இவ்விடத்தில் குந்தம் அமரம் என்றே இந் நோயின் பெயர் கூறப்படுகின்றது. இரு விழியிலும் தசைமூடிக் குந்தம் மூடும் என்றும், அமர நோயைப் போல கண்ணில் சிவப்பும் உண்டாகும் எனத் தெரிகின்றது. பிடரிவலி, தலைவலி, சிந்தனை மாற்றம், அதிக கோபம், ஈட்டியால் குத்துவது போன்ற வலி போன்றவை காணும். இதன் தொடர்பாக இமையிலும் மயிர் உதிரும் என்பர். (779)

**மருந்து 1**

துத்தம், இரும்புப் பொடி, கோழிமுட்டைத் தோல், பச்சைக் கற்பூரம், இவை வகைக்கு ! கழஞ்சு, செம்புப்பொடி 7 கழஞ்சு பொன், மஞ்சாடி, பவளம், வெள்ளி இவை வகைக்கு ½கழஞ்சு சேர்த்துப் பொடித்துப் போட்டு, எலுமிச்சம் பழச்சாறு, முருங்கைப் பூச்சாறு, காடிநீர் இவற்றில் தனித்தனியாக அரைத் துருட்டி உலர்த்தி எடுத்துத் தேன் அல்லது பசுவின் நீரும் செம் முலைப்பாலும் சேர்த்துக் காய்ச்சியு நெய்யில் உரைத்துப் போடத் தீரும். (780)

**மருந்து 2**

பச்சைக் கற்பூரம், அஞ்சனக்கல், காரீயம், அரிசித் திப்பிலி, மிளகு. இரசம், இவற்றை ஓரளவாய் நந்தியாவட்டப் பூச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனிலுரைத்திடவும் தீரும். (781)

## 49. குந்தம் பூ—குணம்

கண்களில் பாசி போல படர்ந்து காணும். பார்வை மேல் நோக்கி இருக்கும். கண்ணில் புண்ணும், முளை ஆணி அடித்தது போன்றும் தோற்றும். கண்ணோரங்களில் வெடிப்புடன் புண்ணாகி விரித்து முளையும் தோன்றும். கண்ணில் எப் பொழுதும் நீர் வடிந்து கொண்டே இருக்கும். (782)

**மருந்து 1**

சமுத்திராப் பழத்தை பசுவின் வெண்ணெய் கூட்டிக் களிம்பு செய்து இடத் தீரும். (783)

## 50. குமரிதன் காசம்—குணம்

கண்களில் கடுமையான வலியுண்டாகிக் கலங்கிப் பீளை சேரும். நடுவிழியில் குத்தும். கண்ணின் மணிபுடைத்து வீங்கும் தழும்பு போலத் திரண்டு காணப்படுவதுடன் வாயுவும் நீரும் கோர்க்கும். கருவிழியில் தோன்றும் இந்நோய் தீராதது என்றே கூறுவர். (784-785)

**மருந்து 1**

துத்தம், துருசு, புங்கம் வித்து, சங்கு இவற்றை ஓரளவாய்க் கொண்டு, மாதுளம்பூச் சாறு, பசுவின் நெய் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி வடித்து கண்ணில் ஒரு துளி விடத் தீரும். (786)

**மருந்து 2**

பசுவின் நெய். ஈருள்ளி, செங்கழுநீர்க் கிழங்கு, சீந்தில் தண்டு, நெல்லிக்காய் சண்பகப்பூ, கொத்தமல்லி இவை ஓரளவாய்க் கொண்டு, கழுதைப் பால், எலுமிச்சம் பழச்சாறு,இருவேலிச்சாறு இவை வகைக்கு 1 நாழி சேர்த்து அரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும், (788)

**மருந்து 3**

மிளகு, திப்பிலி, இவை வகைக்கு 5 கழஞ்சு கடுக்காய் விதை 3 கழஞ்சு இவற்றைத் தனித் தனியே வெள்ளாட்டுப் பித்துக்குள் அடைத்து எடுத்து, புளியம்பூச்சாறு, புனைமுட்டைச்சாறு

இவற்றில் தனித் தனியே அரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் தீரும். (789)

**மருந்து 4**

ஆவின் நெய், ஈருள்ளிச்சாறு இவை வகைக்கு 1படி, செங்கழு நீர்க்கிழங்கு, சீந்தில் தண்டு, ஏலம், கொத்தமல்லி, விலாமிச்சு, வெட்டிவேர், சண்பகப்பூ, நெல்லிமுள்ளி இவை வகைக்கு 4 பலம், பசுவின் பாலிலரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (790)

## 51. குவளை எரிதல்—குணம்

கண்களில் தடிப்புடன் கடுப்பும் ஏற்படும். விழிக்க முடியாமல் இமைகள் கனத்துத் தினவுடன் சிவந்திருக்கும். இமையின் மயிர்க் கால்கள் புண்ணாகி நாற்றமுடன் பீளை கட்டும். (791)

## 52. குவளைக்கண் பிரிதல்—குணம்

கருவிழியிலும் வெள்ளை விழியிலும் வலி ஏற்படும். அழற்சியும் நீர்வடிதலும் காணும். (792)

**மருந்து 1**

கருவளையல், காந்தம், செவியம், வெள்ளைக் காக்கணான் வேர், துத்தம், துருசு, வெண்கலம், சிறுபுள்ளடி வேர் இவற்றை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பசுவின் நெய், முலைப்பால் இவற்றில் உரைத்துப் போடத் தீரும். (793)

**மருந்து 2**

துத்தம், துருசு, கம்பளி சுட்டசாம்பல், தலைமயிர் சுட்ட சாம்பல், இவை வகைக்கு 1வராகன் எடை, கழக் கொடிச் சாற்றில் அரைத்துலர்த்தி எடுத்துப் பசுவின் வெண்ணெய்யில் குழைத்து இடவும் தீரும். (797)

**மருந்து 3**

பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 படி, திரிகடுகு, காந்தம், தென்னம்வேர், அதிமதுரம், மட்டிப்பால் கோட்டம், சந்தனம், ஏலம், குதிரை வாலி வேர், கல்மதம், சண்பகப்பூ, தகரம், சடாமாஞ்சில், இவை வகைக்கு 3 கழஞ்சு சேர்த்து நீரிலரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (798)

## 53. குவளை காசம்—குணம்

புருவத்தில் குத்து வலியுடன் கடைக்கண் குத்திப் புடைத்திடும். கருவிழியினுள்ளே நீல நிறம் தோன்றும். பெண் சேர்க்கையால் அதிகமாகும். (799)

## 54. குவளை நெரிதல்—குணம்

கடைக் கண்ணில் குத்தலும் வீக்கமும், அரிப்பும் ஏற்படும். வீணை மீட்டுவது போல மிகவும் வலிக்கும். இமைகளில் வீக்கமுடன் கூர்மையான கருவியில் அறுப்பது போல வலிக்கும். தலை வலியும் உண்டாகும். (800)

## 55. குவளைப் படுவன்—குணம்

கண்களில் வீக்கத்துடன் கடைக் கண்ணில் மிகவும் குத்தலுண்டாகும். கண்கள் சிவப்பு நிறமாகி விழிகள் மூடும். இமையில் முளை போலச் சீழும் இரத்தமும் பெருகி வரும். முகத்தில் அனல் போலக் கொதிப் பேற்படும் (801)

## 56. குவளை விப்புருதி—குணம்

கடைக் கண்ணில் குத்தலுடன் நீர் வடியும் இமைக்குள்ளே சீழ்பாயும். உறுத்தலுடன் சிவப்பும் ஏற்படும். நன்றாக விழிக்கவும் இயலாது. சில நாட்களில் குணமாகும். (802)

## 57. கூசி விழித்தல்—குணம்

விழிகளில் தூசி படிந்தாற் போல் மேலே மறைக்கும். சுற்றிலும் அரிப்புண்டாகும். இரு கண்ணிலும் பாசிபோல படரும் இந்நோய் நாளுக்கு நாள் அதிகமாகி வளரும். (803)

## 58. கொமட்டிக்கண்—குணம்

இருவிழியும் மலர்ந்து பொங்கும். நெற்றியில் திமிர், படபடப்பு, துடிப்பு காணும். எரிச்சலுண்டாகும். சூரியனைப் பார்க்கவும் இயலாது. இருவிழியிலும் வலி, புடைப்பு, அயர்ச்சி இவையும் காணும். (804)

## 59. கோரைக்கண் – குணம்

இருவிழியும் இறுக்கிக் கொள்ளும். மூக்கிலும் பரபரத்து நீர்ப் பாய்ச்சல் அதிகமாகக் காணும். மயக்கமும் அயர்ச்சியும் காணும். கோரை போல மயிரெல்லாம் திமிர்ந்து போகும். உடல் வாட்டமும், நடுக்கமும், படபடப்பும் காணும். (805)

**மருந்து**

பீதரோகணி, நற்பவளம், சாரவைவேர், இவை சமனாகத் தண்ணீரிலரைத்துருட்டி உலர்த்தி முலைப்பாலில் உரைத்து இடத் தீரும். (806)

## 60. சலகும்பம் - குணம்

வெள்ளை விழியில் நீர் பாய்ந்து வழியும். காந்தலுடன் இமை வீங்கி கடுப்புக் காணும். அதிகமான பீளை வடியும். முகம் வீக்கம், தலைவலி, விக்கல், வாந்தி இவையும் தோன்றும். படலமும் மாசியும் உண்டாகும். (807)

**மருந்து :1**

குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் இவை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாற்றிலும் தேனிலும் குழம்பு போலரைத்து இடத்தீரும். (809)

**மருந்து :2**

ஆனைத்திப்பிலி, அதிமதுரம், வெள்ளி லோத்திரம் சுக்கு, திப்பிலி, வரி பலை இவை வகைக்கு 1 பலம், பசுவின் பால் 1 படி சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். (808)

## 61. சலரூபம் – குணம்

வெள்ளை விழியில் நீர் கோர்த்து வடியும். பீளை வடியும். கண்ணிமை தெரித்து வலிக்கும். (810)

**மருந்து :1**

வெண்குன்றிப் பருப்பு, அதன் வேர், வெள்ளைக் காக்கணம் பூவும், அதன் விதையும், ஓரளவாய் முலைப்பால் வார்த்தரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துத் தேனிலுரைத்து இடத்தீரும். (811)

**மருந்து :2**

ஆடு தீண்டாப் பாளை, ஆவரை, மணத்தக்காளி, வரிக் கற்றாழை இவற்றின் சாறு, நல்லெண்ணெய், பசுவின் பால் இவை

வகைக்கு 1 படி, சேர்த்து அத்துடன், கொம்மட்டிப் பால், அதிமதுரம், விலாமிச்சம் வேர், வெட்டிவேர், ஏலம் இவை வகைக்கு ¼ பலம் சேர்த்து அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகி வரவும் தீரும். (812-814)

## 62. சாய்கண் குருடு–குணம்

வாய், கண், மூக்கு, நாக்கு இவை வலப்புறமாக இழுத்து வலிக்கும். கண்கள் சிவந்து எரிச்சலோடு நீர் வடியும். இந்நோய் அதிக நாள் சென்றபின் குணமாகும். (817)

## 63. சுக்குரப் படுவன்–குணம்

கண் இமைகளினோரம் வீக்கம், விழிகளில் மினுமினுப்புடன் சிவந்து தோன்றும். கண்ணெரிச்சல், மயக்கம், அதிகமான நீர் வடிதல் இவையும் உண்டாகும். சதை வளரும். கருவிழியில் குத்தலுடன் வலிக்கும். (818)

**மருந்து :1**

சிற்றாமணக்கெண்ணெய், கற்றாழைச்சாறு இவை வகைக்கு 1 படி, சேர்த்து அத்துடன், தேவதாரம், சந்தனம், பச்சைகற்பூரம் சாதி பத்திரி, அதிமதிரம், கடுகுரோகணி, தக்கோலம், மஞ்சள், சாதிக்காய், கிராம்பு, ஏலம், புனுகுசட்டம், முத்தக்காசு, சடா, மாஞ்சில், விலாமிச்சவேர், இலவங்கம், மஞ்சட்டி, நன்னாரி வேர், தாமரைக் கிழங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, சிறுநாகப்பூ, திரிபலை இவை வகைக்கு 2 கழஞ்சு சேர்த்தரைத்துக் காய்ச்சி வடித்து முழுகத்தீரும். (819)

**மருந்து :2**

வெண்காரம், செம்புப்பொடி, வெண்கலம், வளையல், தலையோடு, வெட்பூலா வேர்ப் பட்டை, ஓரிலைத் தாமரை வேர் இவை வகைக்கு 1 வராகன் எடை, இந்துப்பு ¼ வராகன் எடை, எடுத்து முருங்கைப் பூச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவற்றில் தனித் தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து நாயுருவிச் சாறு உத்தாமணிச் சாறு இவற்றில் உரைத்துப் போடவும் தீரும். (820)

**மருந்து :3**

கண்ணிற்குத் தளமிட்டும், பற்று இவை செய்தும், தைலங்களில் தலை முழுகியும் வரத்தீரும். (821)

64. சுக்கிர ரோகம்–குணம்

கண்ணில் வீக்கமுடன் வெள்ளை விழி பலவிதமாகத் தோன்றும். கண்ணைச் சுற்றி தசை முளை குத்தி வலியுண்டாகும். தலையில் வலியுடன் இருகடைக் கண்களும் புண்ணாகும், தூங்கவும் இயலாது. (822)

65. சுந்திர ரோகம்–குணம்

கண்களில் கூச்சமுடன் அடிக்கடி மூடித்திறக்கும். முன் நெற்றியில் குத்தலேற்படும். கண்ணில் நீர் வடியும் நன்றாக விழிக்க இயலாது. தலை நிமிர்ந்து பார்த்தால் இமையில் வலி ஏற்படும் கண்களில் தசை போன்ற வளர்ச்சி யுண்டாகும். (824)

66. சுடரதி மாங்கிசம்–குணம்

கண்ணின் கருமணியில் பச்சை நிறம் படரும். புகைச்சலும் அதிகமாகும். கண்களில் தசை வளர்ந்து எரிச்சலுண்டாகும். நீரும் அதிகமாக வடியும். (825)

67. சுடர்பல தோற்றல்–குணம்

எரியும் விளக்கைப் பார்த்தால் அது பலவாறு தோன்றும். நீல நிறமாகவும் இருக்கும் கூர்ந்து நோக்கும் பொழுது வலிஉண்டாகும் குவளையில் உறுத்தலேற்படும். வெள்ளை விழி சிவப்புடன் வலிக்கும் தலையைச் சாய்த்துத் தூங்கவும் முடியாது (826)

68. சுடுவளர்த்தி–குணம்

கண்ணிமையில் வீக்கமுடன் பரபரத்து எப்பொழுதும் பீளை வடியும். அழல் போன்ற எரிச்சலுடன் இருகண்ணும் கூச்சமாகும். பார்வையும் மந்தமாகும். பாம்பு போல மூச்சும் உண்டாகும். இருகண்களும் மஞ்சள் நிறமாகும், (827)

**மருந்து :1**

சங்கு, காந்தம், கடல்நுரை, சுட்ட செங்கற் பொடி, இந்துப்பு, மனோசிலை, பீதரோகணி. பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரளவாய்க் கொண்டு நந்தியா வட்டப் பூச் சாற்றிலரைத்துலர்த்தி, பசுவின் வெண்ணெய் கூட்டிக் குழைத்து இடத் தீரும். (828)

**மருந்து :2**

கோழி முட்டை வெண்கருவைச் சீனக்காரம் சேர்த்து, சிறுகீரை வேரால் குழப்பி இடவும் தீரும். (829)

**மருந்து :3**

கருவேலங் கொழுந்து, மாதுளங் கொழுந்து. இவை வகைக்கு 1 பிடி, பசுவின் பால் ¼ படி சேர்த்துக் காய்ச்சி வடித்து இடவும் தீரும். (829)

**மருந்து :4**

இரும்புத் தகட்டை நெருப்பில் சாய வைத்து அதில் சீனக் காரம், துத்தம், துருசு இவை ஓரளவாய்ப் பொடித்துப் போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து எடுத்துக் கண்ணைச்சுற்றிலும் பூசவும் தீரும். (829)

## 69. சுருங்கு கண்–குணம்

கண்கள் அனலுடன் சிவக்கும். இரு குவளைகளும் புண்ணாகும் நாளுக்கு நாள் கண் சுருங்கிக் காட்டும் எப்பொழுதும் தினவுடன், குத்தல் காணும், கன்னம் வீங்குதல், புடைப்பு, கனகனப்பு, கண்டத்தில் வியர்வை, நரம்புவலி, பின்பக்கம் நரம்பு இழுத்தல், கோணற் பார்வை, புத்தி மாறுபாடு போன்றவையும் தோன்றும். (830)

**மருந்து :1**

பூநாகம், வெள்ளைக் காக்கணம் வேர், வெள்ளைச் சாரணை வேர், துருசு, துத்தம், பவளம், முத்து, கெம்புப் பொடி, பொன் இவை ஓரளவாய் ஊமத்தஞ் சாற்றிலரைத்துப் போடத் தீரும். (831)

## 70. சுழல் வண்டெரிதல்–குணம்

கண்களில் பூச்சி பறப்பது போலிருக்கும். தூங்கும் பொழுதும் அவ்வாறே காணப்படும். கண்களில் கூச்சமும் புகைச்சலும் ஏற்படும். விளக்கின் வெளிச்சத்தைப் பார்த்தால் அதில் பல வண்ணங்கள் தோன்றும். (833)

## 71. சுழல் விழி எரித்தல்-குணம்

கண்களில் எரிச்சலுண்டாகும். எதிர்த்துப் பார்க்க முடியாது. இமையில் அரிப்பும் வலிப்பு மேற்படும். பீளை கட்டும். தூக்கம் வராது. எப்பெழுதும் நீர்வடியும். (834)

## 72. செவ்வேர்–குணம்

கண்கள் சிறுத்து, கடுப்பு வலி உண்டாகும். வெள்ளை விழியில் சிவந்த இழை போன்ற கோடுகள் பரந்து வரும், தலையில் குடைந்து குத்தும். கண்ணீர் விடாது சொரியும். கண்களில் கூச்சமுடன் இமைகளை அசைக்க முடியாது. கடைக் கண்களில் அரிப்புண்டாகும். (835—836)

**மருந்து 1**

வெண்குன்றிப் பருப்பு, வேர், வெள்ளைக் காக்கணம் பூ, வேர், இவற்றை ஓரளவாய் முலைப்பால் வார்த்தரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனிலுரைத்து இடத்தீரும். (837)

**மருந்து 2**

பசுவின் பால், நல்லெண்ணெய், ஆவரை, ஆடுதீண்டாப் பாளை, மணித்தக்காளி, வரிக்கற்றாழை, இவற்றின் சாறு வகைக்கு 1படி சேர்த்து அத்துடன், கோட்டம், மட்டிப்பால், அதிமதுரம், விலாமிச்சுவேர், வெட்டிவேர், ஏலம், இவை வகைக்கு $\frac{1}{4}$ பலம் சேர்த்தரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (838)

## 73. சோதி நெரிதல்– குணம்

கண்ணில் முளை போலத் தோன்றியும் மறைந்தும் காணப்படும். கண் வெளுப்பாகவும் பார்வை கீழ்நோக்கியும் காணும். இமையைச் சுற்றிலும் தசை வளர்ந்து வலிக்கும். தலை வலியுடன் நீரும் பீளையும் வடியும். பிடரி சுழியிற் குத்து வலி ஏற்படும். (839)

## 74. சோதிகா விரணம்–குணம்

கருவிழியெங்கும் பூ தோன்றும். நீர் வடியும். கண்கள் கூசும் நன்றாக விழித்துப் பார்க்க முடியாது. நடுவிழி நண்டின் கண்கள் போல இருக்கும். (840)

## 75. சோர்கண் துடிப்பு–குணம்

கண்ணின் கருமணியில் கடுப்புடன் குத்தல் உண்டாகும் கண்ணீர் வடிந்து தூக்கமும் வராது. ஒரு நிலையிலிருக்கவும் இயலாது. சில நாட்களில் நலமானது போலிருக்கும் ஆயினும் மீண்டும் விரைவில் இந்நோய் எழும். (841)

### 76. துத்திடு காசம்–குணம்

கண்களைச் சுற்றிலும் கடுப்புடன் வலி ஏற்படும். குவளையில் உறுத்தலுண்டாகும். விழி முழுவதும் வெண்மையான சவ்வு பரவும். பார்வை குன்றுவதுடன் ஒளியும் நைந்து காட்டும் (842)

### 77. துன்மாங்கிசம்-குணம்

இரப்பைகளில் வீக்க முண்டாகும். விழிகள் வெளுத்து தசை வளர்ச்சியும் காணப்படும். நடக்கவும் முடியாது. முகக் கடுப்பும் ஏற்படும். தூங்கவும் முடியாது. (843)

### 78. துன்னு காசம்–குணம்

கண்களைச் சுற்றிலும் தசை வளரும். இமைகள் கனத்து வலியுண்டாகும். கண்ணீர் சளிபோல பாயும். கண்களில் கூச்சம் ஏற்படும். பார்வையும் புகைந்து காட்டும். (844)

### 79. துன்னு வெண் புகைச்சல்–குணம்

விழிகள் கனத்துத் தசை வளரும். கருவிழி மங்கி வெளுக்கும். முகம் சினமுறும். கண்களில் கடுப்புடன் வலியும் அரிப்பும் உண்டாகும். அதிகமான பீளை வடிவதுடன் பார்வைப் பலவிதமாய் எங்கும் வெளுப்பாய்த் தோன்றும். (845)

### 80. தூயகண் குருடு–குணம்

கருவிழிகளைப் பார்ப்பதற்கு, நன்றாகப் பார்ப்பவர் போலவே இருக்கும். ஆனால் கண்களில் பார்வை தெரியாது. வெள்ளை விழியில் குத்து வலியிருக்கும். கண்களில் உறுத்தலும் இருக்கும். (846)

### 81. நத்தைப்படுவன்–குணம்

கருவிழியினுள்ளே முளை எழும்பும். தலையிலும் புருவச் சுழியிலும் வலியுண்டாகும். விழியினுள்ளே சுற்றி வலித்துப் புடைத்துத் துன்பம் அதிகமாகும். (847)

### 82. நாகபடலம்–குணம்

கடைக் கண்ணிரு புறத்தில் சிவந்து காணப்படும். இருபுறத்திலிருந்தும் தசை வளர்ந்து கருவிழியை மறைக்கும். கண்ணீர் வடிவதுடன் தினவுண்டாகும். (848)

**மருந்து 1**

கண்ணில் படர்ந்துள்ள படலத்தை விலிசம் என்னும் கருவியால் உரித்து எடுத்த பின்பு நெய் ஒற்றடம் செய்தும், கண்ணில் நெய்யை விட்டும், புளியங் கொழுந்து, பூலாவேர், புதியதேன். இவற்றைச் சேர்த்து அரைத்து வழித்து முலைப்பாலில் குழைத்து இடவும் தீரும். (849—850)

## 83. நீரெழு காசம்-குணம்

கருவிழிக்குக் கீழும் மேலும் சிவப்பாகும். மின்னல் போல அதிகக் குத்துவலி உண்டாகும். நீர் வடியும். பேசினாலும் கண்கள் வலிக்கும். (851)

## 84. நீரொளி காசம்—குணம்

இருவிழிகளிலும் நீர்கோர்த்து அரிப்புண்டாகும். அனல் வீசுவதுடன் அருவி போலவும் நீர்வடியும். முகமினுமினுப்பும் காணும். கருவிழியில் பார்வையும் மங்கும். (852)

**மருந்து 1**

துத்தம், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், தேன், இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (853)

**மருந்து 2**

பசுவின் வெண்ணெய், அதிமதுரம், அத்திதிப்பிலி, கச்சோலம், வெள்ளி லோத்திரம், சுக்கு, துருசு, கடுகு இவற்றை ஓரளவாய் பசுவின் பால் விட்டரைத்து நல்லெண்ணெய்யில் இட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (857)

## 85. நீர்ப் பாய்ச்சல்-குணம்

கருவிழி உறுத்தி நொந்து வலிக்கும். கண்களில் தசை வளரும் அரிப்பும் எரிச்சலும் அதிகமாகும். இடைவிடாமல் நீர்வடியும் கண்கள் சிவந்து அனல் போலிருக்கும். வெய்யிலைப் பார்க்கமிகவும் கூச்சமாயும் விழிகள் மறைத்தும் காட்டும். (859—861)

**மருந்து 1**

துருசு, குதிரைப்பல், துத்தம், வரிக்கற்றாழை வேர், இவற்றை ஓரளவாய் முலைப்பால் விட்டரைத்துக் கண்ணிலிடத்தீரும். (862)

**மருந்து 1**

கையாந் தகரை, கருவாழைக் கிழங்கு, கம்பந்திராய், உத்தமதாளி, தைவேளை, மணித்தக்காளி, நந்தியாவட்டம் இவை

களின் சாறு வகைக்கு 4படி நல்லெண்ணெய் 1படி, பசுவின் நெய் 5படி சேர்த்து அத்துடன், வெட்டிவேர், விலாமிச்சு வேர் இவை வகைக்கு 1 பலம், அதிமதுரம், கோட்டம், சந்தனம், மஞ்சட்டி, குரும்பை. சதகுப்பை, கண்டில், ச—மாஞ்சில், கச்சோலம், வசுவாசி, இந்துப்பு, தான்றிக்காய் இவை வகைக்கு 2 கழஞ்சு சேர்த்து அரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும், (866)

**மருந்து 3**

சங்கு, திரிகடுகு, அரிதாரம், அதிமதுரம், புங்கம் வித்து, பீத ரோகணி, துத்தம், மனோசிலை, இவற்றை ஓரளவாய் நந்தியா வட்டப் பூச்சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துத் தேனி லுரைத்துப் போடவும் தீரும். (867)

**மருந்து 4**

சிற்றாமுட்டி, முசுமுசுக்கை, குரும்பை, சீந்தில் கொடி, உத்தமதாளி, தாமரை வளையம் இவை வகைக்கு 10 பலம் இடித்து 10 படி தண்ணீரில் போட்டுக் காய்ச்சி 2 படியாக வற்ற வைத்து வடித்து அத்துடன், அதிமதுரம், சண்பகப்பூ, செவியம், கோட்டம், மஞ்சட்டி, ஏலம், இலவங்கம் இவை வகைக்கு 1 வராகன் எடை பசுவின் பால் விட்டரைத்துச் சேர்த்து, அத்துடன் நல்லெண்ணெய் 1படி விட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (867)

**மருந்து 5**

முலைப்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 பலம் சேர்த்து அத்துடன், கோட்டம், சண்பகப்பூ, ஏலம், அதிமதுரம் முத்தக்காசு, விலாமிச்சுவேர், வெட்டிவேர், சந்தனம் இவை வகைக்கு $\frac{1}{4}$பலம் சேர்த்தரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். (868)

**மருந்து 6**

மாதுளம்பூ, பச்சைக் கற்பூரம் இவை ஓரளவாய்ச் சேர்த்து முலைப்பால் விட்டுச் சிதைத்து துணியில் முடிந்துக் கண்ணில் பிழியவும் தீரும். (869)

## 86. நீர் வடிதல்—குணம்

வெள்ளை விழியில் இரத்தம் பாய்ந்து சிவப்புடன் கொப்புளங் கள் அதிகமாகக் காணும். கருவிழியில் படலம் தோன்றும். சதை போல வழவழப்பாகக் காணும். கண் கூச்சமுடன் அதிகமாக நீர் வடியும். (870)

**மருந்து 1**

வெண்காரம் 1 வராகன் எடை, துத்தம் 2 வராகன் எடை, சீனக்காரம் 3 வராகன் எடை, கோழிமுட்டைத்தோல் 4 வராகன் எடை, பலகறை 8 வராகன் எடை, சேர்த்துப் பொடித்து எலுமிச்சம் பழச்சாறு, சிறுகீரைச்சாறு இவற்றில் தனித் தனியே அரைத்துருட்டிப் பொடித்து எடுத்து எள் அளவு கண்ணில் போடத் தீரும். (871)

**மருந்து 2**

பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர், விளாவேர், திப்பிலி, துத்தம், துருசு, புளியம்பூ, இவை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றி லரைத்துப் போடவும் தீரும். (872)

## 87. நேத்திர சூலை–குணம்

கண்ணில் வாயு தங்கி புருவத்தில் குத்தல் வலியுண்டாகும். கண்ணிமை இரணமாக இருக்கும். மூக்கில் நீர் சுரந்து வடியும். கண்கள் சிவந்து, கனப்புடன் அரிப்பும் உண்டாகும். இந்நோய் அதிகமானால் கண் பார்வையும் போகும். (873-875)

## 88. நேத்திர நீரேற்றம்–குணம்

கண்கள் சிவந்து மின்னும், உடல் நடுக்கமுடன் உதடுகள் மெலியும். கண்ணீர் அதிகமாக வடியும். நீருடன் பீளை வடிந்து நூல்போல தாரை தாரையாக வெளியாகும். கண்களில் குத்த லுடன் தலைவலியும் காணும். (876)

**மருந்து 1**

சிற்றாமணக்கின் வேர்ப்பட்டை 1 பலம் எடுத்து இடித்து 2படி தண்ணீரில் போட்டு, வற்றக்காய்ச்சி அதில் காயத்தூள், சர்க்கரை இவற்றைச் ஓரளவாய்ச் சேர்த்துக் குழம்பாயரைத்து அதில் தேன் கலந்து இடத்தீரும் (877)

**மருந்து 2**

கிருதத்தை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் தீரும். (877)

**மருந்து 3**

களிம்புள்ள வெண்கலத் தகட்டில் முலைப்பால் விட்டுச் செம்புக் குழவியாலரைத்துக் களிம்புண்டாக்கி அதைப் பருத்திப்

பிஞ்சில் ஊட்டி. நீர்சேர்த்து வில்லைகளாகத் தட்டி, புளியம் பொறுக்குத்தனலில் ⅓ படி எள்ளைப் பொடித்துப் போட்டு புகை அடங்கின பின் எடுத்து காலையிலும் மாலையிலும் ஒவ்வொரு வில்லையாகப் பிழிந்து வரவும் திரும். (878)

## 89. பக்கப்படுவன்–குணம்

வெள்ளை விழியில் புண்பட்டது போல குத்து வலியுண்டாகும் கண்களில் கடுப்பு வலியுடன் முளையுண்டாகி சீழ்க்கொண்டு உடைந்து நீராக வெளியேறும். (879)

## 90. பஞ்சணிப் படலம்–குணம்

விழி மூடும்படியாகப் படரும். வலி அதிகமாயிருக்கும். கண்கள் வெளுக்கும் பார்வை புகைச்சலாயிருக்கும். நீரும் பீளையும் வடியும் கடைக்கண்களில் உறுத்தலுடன் வலியுண்டாகும். (880)

## 91. படலம்–குணம்

விழிகள் இரண்டும் மூடிக்கொள்ளும் மாசு படிந்தால் போலப் படரும். கடைக்கண் ஓரங்களில் கடுப்புடன் குத்தலும் காணும். அடிமுதல் முடிவரை வெப்பமுண்டாகும். (881)

**மருந்து 1**

வெள்ளைச் சாரணைவேர், சடைக்கஞ்சா, முள்ளி, பச்சைக் கற்பூரம், திரிகடுகு, ஏலம், துத்தம், இவை ஓரளவாய் தேன் விட்டரைத்துக் கண்ணில் போடத்திரும். (882)

**மருந்து 2**

அஞ்சனக்கல், கோழி முட்டையோடு, அரிசி திப்பிலி, சங்கு, தலையோடு, சந்தனம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் திரும், (883)

**மருந்து 3**

இரசம் 1 கழஞ்சு, வெள்ளைக்கிண்ணி 2 கழஞ்சு, வெண்காரம் 3 கழஞ்சு, சாரணைவேர் 4 கழஞ்சு, துருசு 5 கழஞ்சு, ஒன்றாகச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து இடவும் திரும். (884

**மருந்து 4**

வெள்ளைச் சாரணைவேர், பீதரோகணி இவை ஓரளவாய் சேர்த்து முலைப்பால் விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் திரும். (885)

**மருந்து 5**

பசுவின் நெய், தேன், முட்டை வெண்கரு, இந்துப்பு, எலுமிச்சம் பழச்சாறு இவை ஓராளவாய் சேர்த்துக் காய்ச்சி வடி கட்டி வைத்திடவும் தீரும். (886)

**மருந்து 6**

படலத்தை அகற்றியபின், அதிமதுரத்தை நசுக்கிப் பசுவின் நெய்யில் போட்டுக் காய்ச்சி துணியில் வைத்துக் கண்ணில் கட்டவும் தீரும். (887)

**மருந்து 7**

வெட்பூலா வேரை முலைப்பாலில் அரைத்துப் பிழியவும் தீரும், (888)

**மருந்து 8**

மஞ்சள், சீமையிலை, சவுக்காரம், வெள்ளைச் சாரணைவேர் இவை ஓரளவாய் நீரில் அரைத்திடவும் தீரும். (889)

## 92. படிகுந்தம்—குணம்

கண்களில் உறுத்தலுடன் வலியுண்டாகும் சந்திரன் உதயத்தின்போது விழிகள் சிறுத்து காணப்படும். கருவிழி மிகவும் கறுத்திருப்பதுடன் பார்வையும் குன்றியிருக்கும். (890)

## 93. பருமுளை—குணம்

கண்களில் வெளுப்பான முளைகள் ஏற்படும். கடுப்பு, வலியுடன் கண்கள் சிவந்து நீர் வடியும். இமைகள் வீங்கி விழிக்கவும் இயலாது தலை, முகம், பிடரி, நரம்பு இவைகள் இழுத்து வலிக்கும். (891)

## 94. பருவணிகை—குணம்

கடைக்கண்ணில் வலி ஏற்படும் விழிகளில் தசை வளர்ந்து வலியை உண்டாக்கும். கண்மீது வீக்கமுடன் அருவிபோல நீர்வடியும். (892)

**மருந்து 1**

பசுவின்பால், நெய், நல்லெண்ணெய் இவை ஓரளவாய்க் காய்ச்சி, அதில் எள்ளைப் பொடித்துப் போட்டுத் துணியில் முடிந்து ஒற்றடம் செய்யவும் பசுவின் நெய்யில் பச்சைக் கற்பூரம்

சேர்த்துக் காய்ச்சி அதைத் துணியில் நனைத்து இமையின்மீது பாட்டுப் பெருங்காயம், சீரசம் இவற்றைத் தனலில் போட்டுப் புகை காட்டத்தீரும். (893)

## 95. பறவைப்பூ—குணம்

கண்கள் சிவந்து எரிச்சலுடன் வலி உண்டாகும். சிறுகச் சிறுகப் படர்ந்து வெளுத்திருக்கும். தலை, நெற்றி போன்ற இடங்களில் குத்துவலி உண்டாகும். முகம் சிறுத்து, பார்வை புகைந்து காணப்படும். எதிர்த்துப் பார்க்கவும் இயலாது. (894)

## 96. பிரிதல் நேத்திரம்—குணம்

இரண்டு கண்களும் வீங்கி, அது தலைவரையிலும் பரவும். உயிரைப் பறிப்பதுபோன்ற வலியுடன் கண் பார்வையும் மங்கும். மாலைக்கண் போன்றும் இந்நோய் காணும். (895)

**மருந்து 1**

இந்துப்பு, கடுக்காய் விதை இவை ஓரள்வாய் பசுவின் வெண்ணெய் சேர்த்தரைத்துச் செம்புப் பாத்திரத்தில் வைத்துப் போடத் தீரும். (896)

**மருந்து 2**

சங்கு புங்கவித்து, வெள்ளைக் காக்கனம்வேர், துத்தம், துருசு இவை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (897)

## 97. பிறவிக் குருடு—குணம்

தாய் கருவுற்றிருக்கும்போது வேகமான மருந்துகளை உட்கொள்வதாலும், விடங்கள் தீண்டியிருந்து விடம் போகாதிருந்தாலும், உணவு, நீர் முதலியவைகளை முறையாக உட்கொள்ளாததாலும் பிறக்கும் குழந்தையின் கண்கள் குருடாகவே இருக்கும். (898)

## 98. புகைச்சல்—குணம்

பார்வை பலவிதமாகத் தோன்றும், கண்களில் கூச்சமும் இமையில் தினவுமுண்டாகும் எந்த வேலையையும் செய்ய முடியாமல் கண்கள் இருண்டுவிடும் (899-900)

**மருந்து 1**

ஒரெலுமிச்சம்பழத்தைக் கயிற்றில் கோர்த்து அதன்மேல் 108 கிராம்பைப் பொதித்து, விளாங்காயளவு பசுவின் வெண்ணெய்க்குள் பொதிந்து மூடி, அதைப் புதுச்சட்டியில் அடியில் படாமல் தொங்கவிட்டு, தினமும் வேறு வேறு நீர்விட்டு, இவ்வாறு 40 நாட்கள் வைக்கவும். பிறகு கிராம்பையும் பழத்தையும் நீக்கி, வெண்ணெய்யைச் செப்புச் சிமிழிலடைத்துக்கொண்டு சத்திச் சாரணைச் சாற்றிற் குழைத்துப் போடவும். 40 நாட்கள் போடவும் தீரும். (901)

**மருந்து 2**

தும்பைப்பூவும் சீரகமும் ஓரளவாய் முலைப்பால் விட்டரைத்துப் பிழியவும் தீரும். (902)

**மருந்து 3**

இலவங்கத்தை எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்து இடவும் தீரும். (9 3)

**மருந்து 4**

நல்லெண்ணெய் 2 படி, பசுவின்பால், கையாந்தகரைச்சாறு, கற்றாழைவேர்ச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, முசு முசுக்கைச்சாறு இவை வகைக்கு 1 படி, அதிமதுரம் 2 பலம் சேர்த்துக் கரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (904)

**மருந்து 5**

ஏலரிசி 1 பலம் பசுவின்பாலில் 1 நாள் ஊறவைத்தெடுத்து மிளகு 1 பலம் சேர்த்து உடைத்து நல்லெண்ணெய்யில் போட்டு வெய்யிலில் வைத்து எடுத்துத் தலையில் தேய்த்து முழுகவும் தீரும். (905)

**மருந்து 6**

தேற்றாம் பழத்தைப் பிசைந்து அடைதட்டி உலர்த்தி எடுத்து தேன், பசுவின் நெய் இவற்றில் உரைத்திடவும் தீரும். (906)

**மருந்து 7**

கடுக்காய்ப் பருப்பு. திப்பிலி, மிளகு இவற்றை நெல்லிப் பழச் சாற்றிலரைத்துருட்டி. உலர்த்தி எடுத்து நெல்லிப் பழச்சாற்றிடவும் தீரும். (907)

**மருந்து 8**

முயல் புழுக்கையைப் பசுவின் நெய்யில் குழைத்து இடவும் தீரும். (908)

**மருந்து 9**

நல்லெண்ணெய் ¼ படி, மிளகு 1 பலம், அதிமதுரம் 1 பலம் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (910)

## 99. புத்தியழித்தல்–குணம்

உருவகங்கள் பலவாகத் தோன்றும் விடியும் பொழுது பார்வை புகைந்திருக்கும். நீரும் பீளையும் வடியும். அறிவு மாற்றம் அடிக்கடி ஏற்படும். வேலை செய்யும் பொழுது அடிக்கடி புருவங்களைத் தானாக மேலிழுக்கும். (911)

## 100. பூப்படல காசம்–குணம்

விழிகள் கடுப்புடன் வலிக்கும். தினவும், படலமும் தோன்றும் அருவி போல நீர் வடியும். உடல் தளர்ச்சியுற்று வாடும். (912)

**மருந்து 1**

நல்லெண்ணெய், சீதேவி செங்கழுநீர்க்கிழங்குச்சாறு இவை வகைக்கு ¼ படி. இத்துடன் பூண்டு 1/8 பலம், மிளகு 1 பலம், வெந்தயம் 1 பலம் இடித்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும தீரும். (931)

## 101. பூப்படலம்–குணம்

கண்ணில் செந்தாமரைப்பூப் போல் நிறம் உண்டாகும். படலம் தோன்றும். எப்பொழுதும் தினவுண்டாகும். கண்ணீர் கலங்கிப் பெருகிவிழும். தலை வலியும் உண்டாகும். (914)

**மருந்து 1**

துத்தம், துருசு. செங்கற்பொடி இவை ஓரளவாய் மருட் கிழங்குச் சாற்றிலரைத்துலர்த்தி பசுவின் வெண்ணெய் கலந்து இடத் தீரும். (915)

**மருந்து 3**

தேற்றான் விதை, கடுக்காய்த் தோல், புளிவிதைத் தோல் இவற்றை அரைத்துத் துணியில்வைத்து முலைப்பாலில் நனைத்துப் பிழியவும் தீரும். (916)

## 102. பூப்படல அதிமாங்கிசம்–குணம்

கண்ணில் தசை மூடி விழிக்க இயலாது. கண்களில் மாற்றமும் அதிர்ச்சியும் காணும். கண்கள் சிவப்பாகச் செவ்வலரிப்பூப் போலக் காணும். நீரேற்றமும் அதிகமாகும். (917)

**மருந்து 1**

வேப்பங் கொழுந்து, காற்றாழை மடல், கடுக்காய், தேற்றான் விதை இவை ஓரளவாய் முலைப்பாலிலரைத்துக் காய்ச்சிப் புற வளையமிடவும். (918)

**மருந்து 2**

பொன்னாங்காணிவேர், அதிமதுரம், இவை ஓரளவாய் முலைப்பாலில் ஊறவைத்துப் பசுவின் நெய்யில் வெதுப்பி ஒற்றடம் இடவும் தீரும்

## 103. பூ வெள்ளெழுத்து–குணம்

கண்ணில் அதிக எரிச்சலுண்டாகும். இரு கண்களிலும் ஒளி குன்றி பகல் இரவு தெரியாமை பீளை வடிதல் போன்றவை உண்டாகும். மலர்ந்த பூ போலவும் கண்கள் தோன்றும் சிலருக்கு 40 வயதிற்கு மேல் நோய் தீருமெனவும், சிலருக்குத் தீராதது எனவும் கூறப்படுகின்றது. (919)

**மருந்து 1**

பச்சைக்கற்பூரத்தைப் பொன்னாங்காணிச் சாற்றிலரைத்து நசியமிடவும் தீரும். (920)

**மருந்து 2**

ஆவாரங் கொழுந்தைச் சட்டியில் வறுத்து, பசுவின் பால் தெளித்து விழியில் ஆவிபிடிக்கவும் தீரும். (920)

**மருந்து 3**

அகிற்கட்டை, ஆயிறப்பட்டை, கருங்குங்கிலியம், சதகுப்பை, ஓமம், சுக்கு, மிளகு, வசம்பு, மஞ்சள், இவற்றை ஓரளவாய்ப் பொடித்துலர்த்தி நெருப்பிலிட்டு மூக்கில் புகை பிடிக்கவும் தீரும். (921)

## 104. பொங்கிய விதனம்–குணம்

கண்களில் வீக்க முண்டாகி பீளைசாறும் கண்கள் நெருப்பு போலெரிந்து வலியுடன் நீரும் பாயும். இரவில் தாங்க முடியாத வலியும் உண்டாகும். (921)

## 105. மணி வளர்த்தி-குணம்

கடைக்கண்ணில் கட்டிபோல திரண்டு, மணி போலாகி எழும்புவதும் உடைவதுமாயிருக்கும் கண்கள் புடைத்து விம்மும். எப்பொழுதும் நீர் வடிதலும் காணும். இந்நோய் மிகுதியானால் கண்ணின் கருவிழியில் இரத்தம் பொங்கி குத்தலுடன் எரிச்சலும் காணும். (922-923)

**மருந்து 1**

கொடுப்பை, ஓரிலைத்தாமரை, வெள்ளைக்காக்கணம் சிறுகீரை இவற்றின் வேர்களை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துலர்த்தி எடுத்து வெண்ணெய்யில் குழைத்து இடத் தீரும். (924)

**மருந்து 2**

சங்கு இலை, புளியிலை, வெள்ளைச் சாரணையிலை, பொன்னாங்காணியிலை, சிறுகீரை கரிப்பான் இவற்றின் சாறு களை ஓரளவாய்க் கலந்து துணியில் நனைத்துலர்த்தி எடுத்து நண்டுக்கொழுப்பில் துவைத்துக் கொளுத்திய சாம்பலுடன்பசுவின் வெண்ணெய் கூட்டிக் குழப்பி இடவும் தீரும். (925)

**மருந்து 3**

இமையில் சீரகப் பொடியைத் தூவி, பேய்ப் பீர்க்கிலையால் தேய்த்து இரத்தம் போக்கவும் புறவளையமாக புளியிலைச் சாற்றைக் காய்ச்சியிடவும், துத்தம், துருசு, இந்துப்பு இவற்றை ஓரளவாய் உப்பிலி சாற்றிலரைத் துருட்டி உலர்த்திப் பசுவின் நெய், தேன் இவற்றுடன் சேர்த்துக் களிம்பு செய்து இடவும் தீரும். (926)

**மருந்து 4**

மிளகு, செம்பு பொடி, ஓரிலைத் தாமரைவேர், தலையோடு, துத்தம், பளிங்குக்கல் இவை வகைக்கு 5 வராகன் எடை, துருசு 2 வராகன் எடை சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலுரைத்து இடவும் தீரும். (927)

**மருந்து 5**

சூதம் 1 வராகன் எடை, காரீயம் 2 வராகன் எடை, துத்தம் 4 வராகன் எடை, சங்கு 8 வராகன் எடை, தாமிரம் 16 வராகன் எடை சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பசுவின் நெய்யில் உரைத்து இடவும் தீரும். (928)

**மருந்து 6**

சிற்றாமணக்கின் வேர்ப்பட்டை 1 பலம் எடுத்திடித்து நீரிலிட்டுக் குழம்பாய்க் காய்ச்சி அத்துடன் கடுக்காய்த்தூள், சர்க்கரை, தேன் இவற்றை ஓரளவாய் இட்டு அரைத்து வழித்து இடவும் தீரும். (929)

**மருந்து 7**

துத்தத்தை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிரைத்து இடவும் தீரும். (930)

## 106. மணிநீல காசம்–குணம்

கருமணியினுள்ளே புள்ளி போல கறுத்துக் காணும். பார்வை புகைச்சலாகும். கண்கள் கூசுவதுடன் நீரும் வடியும். வலியு முண்டாகும். (931)

## 107. மதன மந்தாரம்-குணம்

கண்கள் இரத்தம் போல சிவந்து பீளை உண்டாகும். கண்கள் இருண்டு கறுத்துப் புகை சூழ்ந்து இரவில் அதிக வலியுண்டாகும். கண்களில் அரிப்பும் சிவப்பும் நாளுக்கு நாள் அதிகமாகத் தோன்றும் (632-933)

## 108. மதிமந்தம்–குணம்

கண்கள் சிவந்து உறுத்தி வலிக்கும். பீளை சாறும். நீர் வடியும். பார்வை மந்தமாயிருக்கும். கண்ணில் தினவு, இமைத் தடிப்பு இவையும் தோன்றும். (934)

**மருந்து 1**

பசுவின் வெண்ணெய் 1 பலம், பீதரோகணி $\frac{1}{4}$ பலம் சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றாலரைத்து இடத் தீரும். (935)

**மருந்து 2**

பசுவின் வெண்ணெய் 1 பலம், மிளகு $\frac{1}{2}$ வராகன் எடை சேர்த்து அரைத்து இடவும் தீரும். (935)

**மருந்து 3**

கடல்நுரை, கற்கண்டு இவற்றை ஓரளவாய்த் தேனிலுரைத்து இடவும் தீரும். (636)

**மருந்து 4**

இந்துப்பு, மரமஞ்சள், மனோசிலை. திரிகடுகு, இவற்றை ஓரளவாய் பசுவின் பாலிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து நீரிலுரைத்து இடவும் தீரும். (937)

**மருந்து 5**

இந்துப்பு, சதகுப்பை, சங்கு, மனோசிலை, கடல்நுரை, மிளகு செங்கற்பொடி, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பசுவின் நெய்யிலுரைத்து இடவும் தீரும். (938)

**மருந்து 6**

இந்துப்பு, திப்பிலி, பீதரோகணி இவற்றை ஓரளவாய் நந்தியா வட்டபூச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து நந்தியாவட்ட பூச்சாற்றிலிடவும் தீரும். (939)

## 109. மயிர்குத்து–குணம்

இமைகள் தடித்து பார்வையும் கீழ்நோக்கி இருக்கும் மயிர்கள் குத்தலுடன் தினவுண்டாகும். கண்ணில் நீரும் பீளையும் வடியும். கண்களில் பூவும் தோன்றி பார்வை இருளும். மயிர்கள் மாதந் தோறும் விழுந்து முளைக்கும். (940)

## 110. மலங்குழி-குணம்

இரவில் எப்பொழும் கண்ணீர் அருவி போலப் பாயும். பகலில் மலங்கும். அதிக வலியுண்டாகும். பகலில் உறக்கம் அதகமாகும். இந்நோய் மிகவும் கொடியது என்றே கூறுவர். (941)

**மருந்து 1**

வேப்பிலையை அரைத்துக் கோழிப் பித்தில் கவசஞ் செய்து சுட்டுக் கொடுக்கவும் தீரும். (642)

**மருந்து 2**

மின்னிட்டான் புழு, வெற்றிலை இவற்றை கசக்கிப் பிழியவும் தீரும்.

**மருந்து 3**

மருதம் பட்டை, நற்சீரகம். ஈருள்ளி, இவற்றைச் சிதைத்துப் பிழியவும் தீரும். (942)

மருந்து 4

இலுப்பை நெய், மகிழன் விதை, காட்டாமணக்கவிதை, அழிஞ்சில்விதை இவற்றில் ஏதாவது ஒன்றை முலைப்பாலில் உரைத்து இடவும் தீரும். (942)

மருந்து 5

சமுத்திராப் பழத்தை வெண்ணெய் சேர்த்து அரைத்துத் தீட்டவும். (943)

சந்தனம், குமரிமணி, அதிமதுரம் இவை வகைக்கு 1 பலம், பசுவின்பால் $\frac{1}{4}$ படி சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (943)

## 111. மாலை காசம்—குணம்

கருவிழியில் கலங்கி உருவம் வேறாகத் தோன்றும். கண்களில் உறுத்தலுடன், எரிப்பும், புகைச்சலும், நீர் வடிதலும் உண்டாகும். மாலை நேரத்தில் திமிரும், வலியும் அதிகமாகும், சூரிய ஒளியைப் பார்க்க கூடாமை, எந்தப் பொருளைக் கண்டாலும் இரட்டையாகத் தோற்றல், கோபம், கண் கலக்கம், பசியின்மை, மந்தம் இவற்றையும் உண்டாக்கும். (944—945)

## 112. முளையாணி—குணம்

கண்ணில் முளை ஆணிப் போல தோன்றும். இமை தடிப்பும் சில நேரங்களில் மலர்ச்சியாகவும் காட்டும். கண்ணீர் வடியும் (946)

மருந்து 1

அரப்பொடியை, சங்கிலைச்சாறு, கற்றாழைச்சாறு, சங்கம் பழச்சாறு இவற்றில் தனித்தனியே அரைத்து உலர்த்தி எடுத்து நல்லெண்ணெய் விட்டுக் குழைத்துப் போடவும் தீரும். (947)

மருந்து 2

முயல் புழுக்கை சுட்ட சாம்பலுடன் பசுவின் நெய் விட்டுரைத்து இடவும் தீரும். (948)

## 113. மெளிரு—குணம்

கருவிழியில் இரணம் உண்டாகி உறுத்தி நொந்து பார்வையும் கெடும். இமைத்தடிப்புடன் கண் வீங்கி வலிக்கும். அதிக நீரோற்றமும் காணும். (949)

**மருந்து 1**

ஓரிலைத் தாமரை வேர், பொன்னாங்காணிவேர், துத்தம், துருசு, பவளம், முத்து, தலையோடு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டுப் பொடித்து எடுத்து எள் அளவு இடத் தீரும். (950)

**மருந்து 2**

துருசு, சங்குப் பொடி, தலையோடு, பூலாவேர், ஓரிலைத் தாமரை வேர் இவை வகைக்கு 1 வராகன் எடை சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து வில்லை தட்டி உலர்த்திப் புடமிட்டு எடுத்து அதனுடன் பீதரோகணி $\frac{1}{4}$ பங்கும், பச்சைக் கற்பூரம் 1 பண எடையும் கூட்டிப் பொடித்துச் சேர்த்து, எள் அளவு இடவும் தீரும். (951)

## 114. வருஞ்சல ரோகம் – குணம்

அருவி போல நீர் விழுந்து கொண்டே இருக்கும். கண்கள் மாறுதலுடன் சிறுத்துக் காணப்படும். பார்வையும் குறையும், கண்களில அனலுடன் அழற்சியும் உண்டாகும். (952)

## 115. வளைந்தெழு ரோகம்—குணம்

புருவம், குவளை, கடைக்கண்களில் புண்களுடன் தசை வளர்ந்து வரும். கண்கள் சிவந்து நீர் வடியும். தலை நிமிர்ந்து விழிக்கவும் முடியாது. கண்களில் ஒளி மழுங்கி புகைச்சலுண்டாகும். கண், முகம் இவற்றில் மாற்றம் ஏற்படும். (953)

## 116. வளைகி காசம் –குணம்

கருவிழியில் பசுமை நிறமாகவும், கருநிறமாகவும் தோன்றும். காண்பவருடைய முகம் நீலம் போலத் தோன்றும். கடைக் கண்ணில் அரிப்பும் உறுத்தலுமுண்டாகும். தலை, உடல், அனலாகும். பேசுவதற்கு வெறுப்பும், உணவு உட்கொள்ள விருப்பமில்லாமலிருக்கும். தாகமாகவும், கண்ணில் புகைச்சலும், இருக்கும். (954)

## 117. வாரெழு காசம் – குணம்

கண்களில் நாள் தோறும் கடுப்புடன் நீர் விழுந்து புகைச்சலுண்டாகும். விழிகள் சிவந்து பார்வை கூசும். உள்ளங்கை, கால் இவை குத்தும், கண்ணில் கருமேகம் போல எங்கும் கனத்து இருண்டு தோன்றும். (955)

## 118. விதன மந்தாரம்—குணம்

கண்களைச் சுற்றிலும் குத்தலுண்டாகும். இமைகள் மேல் நோக்கி இழுத்து வலிக்கும். குளிர் சுரத்துடன் நாக்கு வறண்டு தாகமும் ஏற்படும். கண்ணில் நீரும் பீளையும் அதிக முண்டாகும். (956)

## 119. விழிகண் குருடு—குணம்

கண்களில் சிலேட்டுமம் அதிகமாவதால் இமைச் சந்துகளில் கட்டி போலத் தோன்றும். கறுத்தும் வெளுத்தும் இலந்தை விதை போல அடி கனத்துக் கட்டி தோன்றும். சீழுடன் இரத்த மும் வெளியாகும். விழியில் வீக்கமும் காணும். (957)

**மருந்து 1**

நெல்லி முள்ளி, புங்க விதை, வெள்ளுள்ளி, சிறுகீரை, இவை ஓரளவாய் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடத் தீரும். (958)

**மருந்து 2**

ஆவாரங்கரி, கடுக்காய்கரி, சவுக்காரம் இவை வகைக்கு 1 வராகன் எடை, துருசு $\frac{1}{4}$ வராகன் எடை எலும்பு 4 வராகன் எடை சேர்த்து பசுவின் பால் விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலுரைத்து இடவும் தீரும். (959)

**மருந்து 3**

துத்தம், துருசு, வெள்ளைச் சாரணைவேர், சோகி இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து புளியிலைச் சாற்றிலுரைத்து இடவும் தீரும். (960)

**மருந்து 4**

காசாவிலை, கருவேலி, கடுக்காய் இவை ஓரளாய்ச் சிதைத்து ஒற்றடம் செய்யவும். (961)

**மருந்து 5**

மருதம்பட்டை, சீரகம், அதிமதுரம், இவற்றை ஓரளவாய்ச் சிதைத்து ஒற்றடம் செய்யவும். (961)

**மருந்து 6**

பசுவின்பால், புளியங் கொழுந்து, கடுக்காய் இவற்றைச் சேர்த்து ஒற்றடம் செய்யவும் திரும் (961)

## 120. வீங்கி விழித்தல்—குணம்

கடைக் கண்ணில் மூங்கில் முளை போல தசை வளரும். இமைகள் உறுத்தி கனக்கும். விழித்தால் குத்து வலியுண்டாகும். கண்கள் சிவந்து எந்நேரமும் எரிச்சலுடன், வீக்கமும் நீர்ப்பாய்ச் சலும் உண்டாகும். (962)

## 121. வெக்கடுப்பு அமரம் – குணம்

இமை நடுவில் இரத்தம் தங்கி, வீக்கமுண்டாகும். தூரப் பார்வை கறுத்த மேக வர்ணமாயும், நீர்க் கம்மலாயும் தோற்றும். உடலில் நடுக்கமும் மயிர்க் கூச்சமும் உண்டாகும். (963)

**மருந்து 1**

கடுக்காய்தோல், நெல்லிமுள்ளி, அதிமதுரம், தேற்றான்விதை, கருவேலிலை, புளியங் கொழுந்து இவற்றை ஓரளவாய் கற்றாழை மடலில் பொதிந்து, வேக வைத்து எடுத்து, முலைப்பால் விட்ட ரைத்து புறவளையம் இடத் தீரும். (964)

**மருந்து 2**

காசாவிலை, வரட்பூலா, புளியிலை இவற்றின் சாறு வகைச்கு $\frac{1}{4}$ படி சேர்த்து அத்துடன் நெல்லி முள்ளி, சந்தனம், தேற்றான் விதை, ஆமையோடு இவற்றை ஓரளவாய் பசுவின் பால் விட்டரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (964)

**மருந்து 3**

சிறுகீரை, பொன்னாங்காணி, சாரணை, வெள்ளைக் காக் கணான் இவற்றின் வேர்களை ஓரளவாய்ச் சேர்த்து, அத்துடன், தேற்றான்விதை, மண்டையோடு, நாய்ப்பல், சேவல் மார் பெலும்பு, முத்து , பவளம், இவற்றை ஓரளவாய் நந்தியா வட்டப் பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து நல்லெண்ணெய் விட்டுக் குழைத்து இடவும் தீரும். (966)

## 122. வெண்கண் வலி—குணம்

கண்ணில் தசை வளர்ந்து பார்வையையும் கெடுக்கும். வலியு டன் தினவும் எரிச்சலும் காணும்- இமைகளின் ஓரங்களில் கொப் புளங்கள் தோன்றி இரத்தக் கட்டிகளாக மாறும். கண்ணிமைக் குள் குத்தல் காணும். (967)

**மருந்து 1**

தாமிரம், துருசு, துத்தம், பவளம், நீலம், கருவளையல், வெண்காரம் கணவாயோடு, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எலுமிச்சம் பழச் சாற்றிலிடவும் தீரும். (968)

## 123. வெண்ணோக்காடு—குணம்

கண்களில் கூச்சமும், கடுப்புடன் வலியும், நீர் முட்டலும் உண்டாகும். கண்கள் சிவப்பதுடன் உடல் வலியும், நடக்க இயலாமையும் தோன்றும். (969)

## 124. வெண்மாசுப் படலம்—குணம்

கடைக்கண்ணில் புண்ணுண்டாகி வெடிப்புக் காணும், விழிகள் மஞ்சள் நிறமாகும். துடிப்பும், வலியும் காணும். மயக்கம், காதில் சீழ் வடிதல் போன்றவையும் தோன்றும். (970)

**மருந்து 1**

வெங்கலப் பொடி, தலையோடு, வெள்ளைப் பொடி, துத்தம், இந்துப்பு, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உலர்த்தி எடுத்து பசுவின் வெண்ணெய் கூட்டிக் குழைத்து இடத் தீரும். (971)

## 125. வெள்ளைப் படலம்—குணம்

வெள்ளை விழியில் பாலின் ஆடை போல படர்ந்து வரும். விழிக்கும் போது உறுத்தலுண்டாகும். நுரையுடன் பார்வை புகைச்சலாகும். (972)

### அக்கர ரோகம்—குணம்

மெய்க்கர கரப்புக் கண்ணின் மேலிமை கனத்துப் புண்ணாம்
உக்கிர மாக நொந்து ஊறியே நீரும்பாயும்
சிக்கர தினவும் பீளை சினத்திடு முகங்கள் தானும்
அக்கர ரோக மென்று அறிவுள்ளோ ருரைத்த வாறே. 655

**(வேறு)**

சிறுகச் சிவக்கும் நீர்வடியும் தினவுஞ் சிறுநாள டங்கிவிடும்
அறுக்கக் கடுக்குங் கூச்சமுண்டாம் அலர விழிக்க வொட்டாது
இருகண் ணிமையுங் கனத்திருக்கும் மூறித் தலைநோய்கொட்டாவி
அருக்கக் கடைக்கண் பீளையிடும் அக்கர மென்று சொலலாமே 656

## அக்கரம் புழுவெட்டு—குணம்

புழுவா வெள்விழியில் சோரி தங்கிப்
பொல்லாத பீளையுடன் திமிர்த லாகும்
குழுவான விழிச்சந்தில் தாமரை போலக்
கூர்முளையில் குத்தலுடன் நமைச்ச லாகும்
பழுவான யெலும்புகளில் மேகந் தங்கி
படருமே கண்நடுவில் சவ்வு போல
மழுவுடனே தணலாகிச் சிவந்து காட்டும்
மாறாத அக்கரத்தின் புழுவெட் டாமே. 657

(மருந்து)

வெள்ளைக் காக்கணான்வேர், துத்தம், துருசு, பளிங்குக்கல் சங்கு, மஞ்சள், திப்பிலி, சந்தனம், பச்சைக் கற்பூரம், செம்புப் பொடி இவைகள் ஒரு நிறையாய் எலுமிச்சம் பழச்சாற்றில் 5 நாட்கள் மை போலரைத்துக் கயிறு செய்து முலைப்பாலிலரைத்துக் கண்ணிலிடச் சகல நோயுந் தீரும். 658

(வேறு)

செம்புப் பொடி, துத்தம், துருசு, வெண்கலம், வளையல். வெள்ளைக்கல், ஓரிலைத் தாமரை வேர், வெட் பூலா வேர் வகைக்கு 1 கழஞ்சு. இந்துப்பு ¼ கழஞ்சு, எலுமிச்சம் பழச் சாற்றாலரைத்துக் கயிறாக்கிக் கொண்டு முலைப்பாலிலுரைத்துப் போடச் சகல ரோகங்களுந் தீரும். 659

(வேறு)

குமரிச்சாறு 8 படி ஒரு பாண்டத்திலூற்றி 1 படியாய் வற்ற வைத்து, அதில் 1 படி நல்லெண்ணெய், சிறுநாகப்பூ, செங்கழுநீர்க் கிழங்கு, அதிமதுரம், விலாமிச்சு வேர், நன்னாரி, அஞ்சனக் கல், சந்தனம், வகைக்கு 3 கழஞ்சு ஆவின்பால் விட்டரைத்துப் போட்டுக் காய்ச்சி முழுகி வரத் தீரும். 660

## அடைந்தெழுந்திடுதல்—குணம்

நீரும் பொழியும் விழிகடுக்கும் நித்தம் பலகுண மிமைவீங்கும்
சேரும் பீளை சிவந்தெரிப்பும் சினத்துப் புடைக்கு மிமையடங்கும்
ஊருஞ் சொரியு மூக்கால்நீர் ஊற்றி யன்ன முண்ணவொட்டா
ஆரு மறிய வுரைத்தகுணம் அடைந்தெழுந் திடுத லெனலாமே

### அதிமந்தம் – குணம்

கருகிய மணியினுங் கலந்தவெள் விழியிலும்
பெருகிய சிவப்பொடு பிரண்டும் வலிக்குமுன்
உருவிப் பரந்து உறுத்திப் புகைந்திடும்
அருவிய விதனமும் அதிமந்த மெனலாமே. 662

### அதிமந்தாரம் – குணம்

வலிக்குங் கடுக்கும் நீர்வடியும் உவந்தே சோதி தனிற்குத்தும்
பலிக்கும் மருந்து பலிக்காது பார்க்க வதிகம் படர்ந்தேறும்
சலிக்குந் துயரா யிருண்டுவரும் சாய்ந்தால் போல நடைகெடுக்கும்
அலிக்குங் குணங்க ளிவைதானும் அதிமந் தார மெனலாமே. 663

### அந்திர காசம் – குணம்

சந்திர உதயந் தன்னிற் புகையும் தானே விடியில் விழியெங்கும்
இந்திர கோபம் போற்சிவக்கும் எதிர்த்துப் பார்க்கிற் பயமாகும்
முந்திர கோபந் தான்வந்தால் உதிரத்தால் கண்ணும் மிகவிருளும்
அந்திர காச மிதுவென்றும் அறிய வுலகி லுரைத்தாரே 664

### அமரம்—குணம்

கதிக்கு மிமையிற் தசைவளர்ந்து கண்ணும் மூடித் திறவாது
பதிக்கு விழியிற் பரந்துகுத்திப் பலவாய் நீரும் பீளையிடும்
அதிக்கு மெவரை நோக்கரிதாம் அலர்ந்த பூப்போல சிவந்திருக்கும்
அதிக்கு குணங்க ளிவைதானும் அமர மெனவே யருளினரே. 665

### அமர மாத்திரை

சுத்த வெள்ளைச் சாரணைவேர் துருசு துத்தம் திரிகடுகு
முத்த மஞ்ச ளிந்துப்பு முதிர்ந்த தேற்றாம் விதைக் கடுக்காய்
சித்தம் புளியிலைச் சாற்றரைத்துச் சிறுவன் கண்ணில் சூட்டியிட
மெத்தப் படர்ந்த பூஅமரம் மெலிவாய்க் கரைந்து போமன்றே 666

(வேறு)

நெல்லி யோரிதழ் பொன்காணி துத்தமும்
கல்லில் நேக வரைத்துருண்டை செய்திடில்
இல்லை அமரமும் நோவது மில்லையே
தில்லை யம்பலக் கூத்தர் சீர் பாதமே, 667

(வேறு)

துருசு, புளி, இந்துப்பு, கருப்புக்கட்டி இவை யெல்லாம் உரைத்துக் கண்ணிலிட அமரம் மாறும். 668

## அருபம்—குணம்

ஊறியே வெள்ளை தன்னில் உற்றதோர் சலமுங் கொள்ளும்
பாறியே நீரும் பாயும் பகல்விளக் கொளிபோ லாகும்
சாறியே பீளை தானும் தடமைய யெரிப்புண் டாகும்
ஆறியே நின்றெ டுக்கும் அருபமா மென்று சொல்லே. 669

## அவிகாய விரணம்—குணம்

செவிவாய் கண்மூக்குத் தினமுடன் சிவப்புண்டாகும்
கவிதாக விழிக்குமூடும் கனத்திடும் பீளைகட்டும்
தவிதாக வுறங்கவொட்டா நடுவிழி தன்னிற்குத்தும்
அவிகாய விரணமென்று அறிவுள்ளோ ருரைத்தவாறே. 670

## அழற்சி—குணம்

குறிபடச் சூழ நொந்து குத்திடுங் கடைக்கண் வீங்கும்
பறிபடப் பீளை பாயும் பசுமையாங் கண்சி வக்கும்
நெறியுடன் நெற்றி கன்னம் நீண்டவே தனையுங் காட்டும்
அறிவற அன்னம் வேண்டாம் அழற்சியா மென்று கூறே. 671

## அழிகண்—குணம்

காணவே யழிகண்ணின் குணத்தைக் கேளு
கடிதான நேத்திரத்தில் சலமே கோர்த்துத்
தோணவே பிடரிவலி நரம்பி ழுத்தல்
துலையாத சவ்வுடனே முளையுந் தோன்றும்
பாணமெனும் கண்ணுதலில் கடுகு போலப்
படருமே நொய்நொய்யாய்ப் பருவன் காணும்
சீணமுட னெரிச்சலது வதிக மாகும்
சிலையோடி புண்போல வழுக லாமே. 672

(மருந்து)

துத்தம், துருசு, புளியம் பொறுக்குச் சுட்ட சாம்பல், கடுக்காய் கரி இவைகள் சமனாக ஆவின் வெண்ணெய்யாலரைத்துக் கண்ணிற் போடத் தீரும். 673

(வேறு)

அரளி, அருக்கு, எட்டி, சத்தி சாரணை, இவ்வேர்களை எண்ணெய்யில் பரல்வேகவைத்துக் கண்ணிலிட்டாலும், திரிகடுகை நீரிலுரைத்துக் கண்ணிலிட்டாலும் தீரும். 674

(வேறு)

ஆயிரை மீன்றலையை முலைப்பாலில் உரைத்து வாழைப் பழத்துடன் கண்ணிலிடவும் 675

## அழிகண் பிரிதல்—குணம்

சழியவே யிடித்து நொந்து தசையது விழிகள் மூடி
பழியவே சூழப் புண்ணாய் பலவிதம் பீளை பாயும்
விழியினோய் மாறா தாகும் வேண்டிய மருந்து செய்தால்
அழிவது திண்ணங் கண்டாய் அழிகண்ணின் பிரிதல் தானே

## அழித்திடும் பிரிதல்—குணம்

பிரித்திடுங் கண்ணுஞ் சூழப் புண்ணுமாம் பீளை பாயும்
எரித்திடும் விழியிற் குத்தும் எதிர்த்தது நீருங் காணும்
சொரிந்திடுஞ் சீழும் போலச் சோர்ந்துகண் விழிக்க வொட்டாது
அழித்திடுங் கருவி போலாம் அழித்திடும் பிரிதல் தானே. 677

## அழுகண்—குணம்

ஆமப்பா அழுகண்ணின் னுண்மை கேளு
அண்டவொண்ணாக் கோபமுட னழலை யுண்டாம்
தாமப்பா பிறவலியு மிகவு முண்டாம்
தாக்கான சோபமுடன் மயக்க மாகும்
வேமப்பா வெள்ளைவிழி சிவந்து மின்னும்
மேனியுமே மஞ்சள்நிற மாகும் பாரு
வோமப்பா ஷூகிசொன்ன சிகிச்சா சாரம்
ஒருக்காலும் பொய்யாது வுலகில் மாண்பே. 678

(மருந்து)

சுழல் வண்டு சுட்ட சாம்பல், வெள்ளுள்ளி, மிளகு ஒரு நிறையாய்க் கல்வத்திலிட்டு வெற்றிலைச்சாறும், நீர் முள்ளிச்சாறும், நல்லெண்ணெய்யும் விட்டுக் களிம்பு போலரைத்து அந்தி, சந்தி மூன்று நாட்கள் கண்ணில் இட்டு விளக்கெண்ணெய்த் தேய்த்து நாலைந்து முழுக்கு முழுகினால் அருந்ததி கண்ணில் தோற்றும்.

## அனல்கோபம்—குணம்

கூர்ந்துபார் வன்னத்தின் கோப மார்க்கம்
கூறுகிறேன் மாணாக்க ளறிய வென்று
தேர்ந்துபார் நயனந்தான் பார்வை குன்றி
தெளிவான விழியிரண்டும் சிவந்து மின்னும்
ஏர்ந்துமே தீப்போல யெரிந்து சற்றே
எழிலாகப் புடைத்துமே வெடித்து வோரம்
சார்ந்துமே நீர்வடிந்து தசைகள் கெட்டுச்
சாகுமட்டும் தீராது சாற்றி னோமே. 680

### (மருந்து)

துருசு, துத்தம், இந்துப்பு, சங்கு, மிளகு, மஞ்சள், இவைகளை ஒரு நிறையாய் ஆவின்பால் விட்டரைத்து மேற்படி நெய்யிற் போட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு விழியில் போடவும். 681

### (வேறு)

ஆவின் நெய், ஈருள்ளிச்சாறு வகைக்கு 1படி ஒன்றாய்க் கலந்து அதில் செங்கழுநீர்க்கிழங்கு, சீந்திற்தண்டு, ஏலம், மல்லி, விலாமிச்சு வெட்டிவேர், சண்பகப்பூ, நெல்லிமுள்ளி, வகைக்கு $\frac{1}{4}$ பலம் ஆவின் பாலிலரைத்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து முழுகிவரத் தீரும். 682

## அன்ன கோபம்—குணம்

கனத்ததோர் நயன முள்ளே கனலெழ யெரித்து வெம்பி
உனத்தமாம் விழிபு டைத்து உழையினில் மெழுகு போலச்
சினத்தது கண்ணு நொந்து சிவந்துதா னருவித் தானால்
அனத்தமா மன்ன கோபம் அறிந்துநீ மருந்து செய்யே.

### (வேறு)

சந்ததம் நயனந் தன்னில் தழலெழ யெரித்து விம்மி
விந்தமாய் விழிபு டைத்து உலையினில் மெழுகு போல
கந்தியே கண்சி வந்து கலங்கிநீ ரருவி பாய்ந்து
அந்தமா யன்ன கோபம் அறிந்துசெய் மருந்து தானே 684

## அன்ன கோபத்திற்குத் தைலம்

எள்ளின்நல் லெண்ணெய் நாழி இயல்புள்ள தனப்பால் நாழி
தெள்ளிய கழுநீர் கோட்டம் சண்பசப் பூவோ டேலம்
அள்ளிய சடையில் மாஞ்சில் அதிவிலா மிச்ச வேரும்
தெள்ளிய பச்சைப் பூரஞ் சீரகந் தகரம் மல்லி
தள்ளிய முத்தஞ் சந்தம் தாழ்விலா வெட்டி வேரும் 685

ஒக்கவே பசுவின் பாலும் உகந்துநீ சேரு மிட்டு
மிக்கவே அரைத்துக் கொண்டு எண்ணெய்யில் பதத்தில் காய்ச்சி
மிக்கதோர் எண்ணெய் தன்னை இறுத்துநீ சிரசில் வைக்க
அக்கண மன்ன கோபம் அலைகடல் போகு மன்றே 686

(வேறு)

கற்றாழை நெல்லி யெண்ணெய் காசுடன் பச்சைப் பூரம்
முற்றதோர் புனுகு சட்டம் முணணிய கெந்தாங் காணி
நெற்றியில் நீர்வா ராமல் நேர்மையாய் காய்ச்சித் தேய்க்கில்
அற்றிடும் அன்ன கோபம் ஆறுமே தீருந் தானே. 687

(வேறு)

மாதுளம் பூவிற் தாது மதித்தநற் பூரந் தானும்
தீதற முலைப்பால் வார்த்துத் திகழவே நறுக்கிக் கொண்டு
போதவே பிழிந்து கண்ணில் புகையனல் காட்ட நன்று
ஈதறக் குழம்பு தன்னை இட்டபின் எண்ணெய் செய்யே 688

ஒள்ளிய முலைப்பால் நாழி உற்றநல் லெண்ணெய் நாழி
தெள்ளிய மாஞ்சில் கோட்டம் சண்பகப் பூவோ டேலம்
அள்ளிள மதுர முத்தம் அடவிலா மிச்சம் வேரில்
மெள்ளவே காய்ச்சித் தேய்க்கில் விலகிடும் அன்ன கோபம் 689

(வேறு)

நல்லெண்ணெய் 1படி, செங்கழுநீர், கோட்டம், சண்பகப்பூ, ஏலம், மாஞ்சில். எலுமிச்சம், வெட்டி வேர், பச்சைக் கற்பூரம் வகைக்கு 1வராகன் எடை, சீரகம், தகரம், சந்தனம், முத்தக்காசு, வகைக்கு 5 வராகன் எடை, பசுவின் பாலில் வடித்து முழுகவும். அன்ன கோபம் ஆமை கோபம் தீரும். 690

(வேறு)

சொன்ன துருசு பன்னிரண்டாம்
துலங்கும் தலையோடு நாலாகும்
இன்னங் கடல் நுரை மூன்றுடனே
எழிலார் சங்கு யிரண்டாகும்
மன்னுங் கவடி தானொன்று
மகிழ்வாய் யெலுமிச்சம் பழச்சாற்றால்
அன்ன கோபமுதல் தொண்ணூற்
றாறு வியாதி யகன்றிடுமே 691

(நெய்)

முடக்கொற்றான் சமூலமும் பசுவின் நெய்யும் தெளித்து ½ பலம் பாலிலரைத்துக் கரைத்து, பதத்தில் வடித்து ஆறவிட்டு, கண்ணில் சீலை போட்டு உளுந்து அரைத்து வளையமாக வைத்து நெய் நிறுத்த பல வகை உட்டிணமும், சிவப்பு, தலைவலியும் தீரும். 692

(மை)

துத்தம், காரீயம், இரதம், நெல்விமுள்ளி, மிளகு, பலகறை, செம்பு இவைகள் சமன் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து உருண்டை பண்ணி உலர்த்தித் தண்ணீரில் உரைத்து மை பற்றிக் கண்ணிலிட மாறும். 693

(வேறு)

மாதுளம் பூவும் காயும், பச்சைக் கற்பூரமும் ஒரு நிறையாய்க் கல்வத்திலிட்டு முலைப்பால் விட்டுச் சிதைத்துத் துணியில் முடிந்து கண்ணிற் பிழிந்து இதனடியில் வருகிற தைலங்களி லொன்றை முழுகி வரத் தீரும். 694

(தைலம்)

1. முலைப்பால், நல்லெண்ணெய் வகைக்கு 1 படி வீதம் கலந்து, அதில் கோட்டம், சண்பகப்பூ, ஏலம், மதுரம், முத்தக்காசு விலாமிச்சு வேர், வெட்டி வேர், சந்தனம், வகைக்கு 4 பலம் வீதம் மேற்படி பாலிலரைத்துப் போட்டுக் காய்ச்சி முழுகி வரத் தீரும். 965

(தைலம்)

2. கற்றாழைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, நல்லெண்ணெய் வகைக்கு 1 படி, ஒன்றாகக் கலந்து காய்ச்சி குறுகி வருகையில்

பச்சைக் கற்பூரம், புனுகு சட்டம், சந்தனம், சாதிக்காய் வகைக்கு 6 கழஞ்சு வீதம் பொடித்துப் போட்டு வடித்து முழுகி வரத் தீரும். 696

## ஆமை கோபம்—குணம்

சந்தன நயன முள்ளே தழலெ ரித்து வெம்பி
இந்தியே விழிபு டைத்து ஏறில்மேல் மெழுகு போல
கண்டியேக் கிந்துக் கண்ணும் கலங்கியே யருவி பாய்தல்
நல்லதோர் சுருக்கு எண்ணெய் நாழி முலைப்பால் நாழி 697

தெள்ளிய கமநீர் கோட்டம் சண்பகப் பூவோ டேலம்
அள்ளிய சடையில் மஞ்சில் அதிவிலா மிச்சம் வேரும்
தெள்ளிய பச்சை கற்பூரம் சீரகம் தகர மாஞ்சில்
சந்தன முத்தக் காசுத் தாழ்விலா வெட்டி வேரும் 698

ஒக்கவே பசுவின் பாலும் உறவே சேர வைத்துத்
திக்கென்று கைத்து நல்லெண் ணெய்யில் பதத்திற் காய்ச்சி
மிக்கதோ ரெண்ணெய் தன்னை யிருத்தி சிரசில் வைக்க
அக்கண மாமை கோபம் அகன்றுடன் போமே தானே. 699

## இமையோடு றுத்தல்—குணம்

கண்ணிற் புருவங் கீழ்த்தசையும்
கனத்துத் துடிக்கும் மென்னேரம்
விண்ணைப் பார்க்கில் மிகக்கூசும்
வீணை போலத் தெறித்திழுக்கும்
குண்ணிச் சரீரம் பயந்தோற்றும்
குவளை கடுக்கும் நீர்வடியும்
எண்ணித் தலையுந் தினவெடுக்கும்
இமையோ டுறுத்த லெனலாமே. 700

## இரத்தப் பாய்ச்சலின்—குணம்

இரங்கவே ரத்தப்பாய்ச்சல் குணத்தைப் பாரும்
இயலான தசைவளர்ந்து சோரி கெட்டு
கரங்களுடன் திமிர்ப்பாய்ச்ச லதிக மாகி
கரடுகளுடன் கட்டியேதான் கண்ணீர் பாயும்

குரங்கினது வாசனம்போல் விழிசி வந்து
குருகியே பீளையது மிகவே சாடும்
வரங்களது பெற்றவர்க் மருந்தே வாய்க்கும்
மாபாவிக் கேற்காது வரிசை பாரே. 701

(மருந்து)

உத்தமதாளி, நெருஞ்சில், முருங்கை இவற்றின் பூவும் வெள்ளைச்சாரடைக் கொழுந்தும், நாய் வேளைக் கொழுந்தும் ஈருள்ளியும், நற்சீரகமும் வகைக்கு $\frac{1}{4}$ வராகன் எடை வீதம் முலைப்பால் விட்டுச் சிதைத்துக் கண்ணிற் பிழியத் தீரும். 702

(வேறு)

தேள் கொடுக்கிலையைக் கசக்கிக் கண்ணில் பிழியவும் தீரும்.

(வேறு)

மாதுளம்பூ, நற்சீரகம், நெருஞ்சிக்காய் இவைகளை ஒரு நிறையாய் பனை மட்டைச் ‘சாற்றில் அரைத்துக் கயிறு செய்துக் கொண்டு முலைப்பாலிலுரைத்து கண்ணில் தீட்டி வரத் தீரும். 704

(வேறு)

செஞ்சந்தனம், சாத்திரவேதி, தேற்றான் விதை அரைத்து வெண்ணெய்யில் குழைத்துப் புறவளையம் இடவும் தீரும். 705

(வேறு)

ஆவின் பால் 1 படியில் 1 பலம் பொன்னாங்காணி வேரை அரைத்துக் கலக்கிக் காய்ச்சி உறை குற்றிக் கடைந்து வெண்ணெய் எடுத்துக் கண்ணிற் போட்டு வந்தாலும் தீரும். 706

## இருள் கண்

துத்தம் பணவெடை 1, துருசு பணவெடை $\frac{1}{4}$ ஆவரங்கரி பணவெடை 1, சவுக்காரம் பணவெடை 1, எலும்பு 4 இவைகளைப் பசும்பால் வார்த்தரைத்து உருண்டை செய்து முலைப்பாலிலுரைத் திட இருள்மாறும். 708

(வேறு)

துத்தம், துருசு, வெள்ளைச்சோகி இவையெல்லாம் கழஞ்சு கூட்டி எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துத் கயிறு செய்து நிழலி லுலர்த்தி இருள் பற்றின கண்ணுக்குப் புளியிலைச் சாற்றிலிடவும் அவுரியிலைச் சாற்றிலிடவும். 708

(வேறு)

சண்பகப்பூ, சந்தம், சிறுநாகப்பூ, வெட்டிவேர், விலாமிச்சம் வேர், கற்கண்டு, சாதிக்காய், தக்கோலம், சீந்தில் தண்டு வகைக்கொரு கழஞ்சு வீதமரைத்து எட்டுபடி தண்ணீரிற் போட்டு ஒருபடியாய் வற்றவைத்து அதைப் பீச்சாங் குழலினாற் கண்ணில் வடித்து மயிரை யுதிர்த்து, அரிதாரம், இந்துப்பு, செம்புப் பொடி இவைகளை ஒரு நிறையாய்த் துளசிச் சாற்றிலரைத்துக் கயிறு செய்து முலைப்பாலிலுரைத்துக் கண்ணிலிட்டு வந்தாலும், சீனக் காரம், துத்தம், துருசு, மயில் முட்டைத்தோல், கோழி முட்டைத் தோல் வகைக்கொரு கழஞ்சு விதம் பொடித்துக் கொண்டு எள் பிரமாணம் கண்ணிற் போட்டு வந்தாலும் தீரும். 709

(வேறு)

நெல்லி, முள்ளி, புங்க விதை, வெள்ளுள்ளி, சிறுகீரை இவை களைச் சமமாய் மெழுகு போலரைத்து உருண்டை செய்து முலைப்பாலிலுரைத்துக் கண்ணிற் போட்டு வந்தாலும் தீரும் 710

(வேறு)

கடுக்காய்க்கரி, சவுக்காரம் வகைக்கு வராகனெடை 1 துருசு 1 வராகனெடை, எலும்பு 4 வராகனெடை இவைகளைப் பசுவின் பாலில் மை போலரைத்துக் குளிகை செய்து முலைப்பாலி லுரைத்துக் கண்ணிற் தீட்டி வந்தாலும் தீரும். 711

(வேறு)

துத்தம், துருசு, வெள்ளைச் சாரலணவேர், சோகி வகைக்குக் 1 கழஞ்சு, எலுமிச்சம் பழச் சாற்றிலாட்டிக் கயிறு செய்து கொண்டு புளியிலைச் சாற்றிலாவது அவுரிச் சாற்றிலாவது உரைத் துக் கண்ணிற் போட்டு வந்தாலும் தீரும். 712

இழி கண் – குணம்

இருண்ட விழி கண்ணினிடக் குணத்தைக் கேளும்
இயலான விழிதனிலே முட்டை போலாம்
இருண்டதொரு கட்டியைப்போற் புடைத்துக் காட்டும்
ஒளிநீங்கி மந்தரச மதிக மாகி
வெருண்டவிழி யிமைநடுவில் மச்சம் போலாம்
வெடித்துமே கண்ணோரம் புண்ணு மாகி
சுருண்டமயி ரோமமெல்லாம் பீளை சாடி
சுருக்குடனே வலித்துமேதான் திரைந்து போமே. 713

(மருந்து)

சினக்காரத்தைப் பீங்கானிலிட்டு பழச்சாறு விட்டுக் காய வைத்து அந்தச் சினக்காரமும் பச்சைக் கற்பூரமும் ஓரளவாய் முலைப் பாலிலுரைத்துத் திட்டவும். 714

பூவிழுந்த கண் ஓரத்தின் காற் பெருவிரலைக் கயிற்றினாற் கட்டி 7 உத்தாமணிப் பூவை கசக்கிப் பிழியவும்.

(வேறு)

காசுகட்டி. துருசு, பழச்சாறு விட்டரைத்து கயிறு பிடித்து இருக்க புளியிலைச் சாற்றிலுரைத்து இடவும். சுற்றுக் குலைவு, நீர்வடிதல், இழிகண்ணுந் திரும். 715

(வேறு)

முலைப்பாலும் விளக்கெண்ணெய்யும் வகைக்கு ¼ படி. மஞ்சள் 1 பலம், இண்டங் கொழுந்து 1 பிடி இவைகளை எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துப் போட்டுக் காய்ச்சி, காசு எடை கொண்டு மேலும் பூசவும், ஏழு நாட்களுக்கு இவ்வாறு செய்யவும் திரும் 716

(வேறு)

ஆவின் பச்சைப்பால் தன்னில் அமுதைக் குத்தி நெய்வாங்கி
மாவுந் துருசுடன் விளங்கு மெலுமிச் சம்பழச் சாற்றில்
தாவுங் கலத்தில் புறந்தேய்த்துத் தண்ணீர் தன்னிற் குழம்பாக்கி
கூவுங் குழலா யிழிகண்ணில் கொண்டே யெழுதக் குணமாமே 717

(வேறு)

வெண்காரம், மயிர் சுடுசாம்பல் இவற்றைப் பொடித்து, கலப் பிரத்திலிட்டு வெண்ணெய் சேர்த்து இழைத்துக் கண்ணிலிடத் திரும். 718

(வேறு)

இந்துப்பு, கடுக்காய் இவற்றை ஓரளவாய் சேர்த்து வெண் ணெய்யில் அரைத்து வழித்து எடுத்து கொள்ளின் பருப்பில் பாதி யளவு கண்ணிலிடவும் திரும். 719

(வேறு)

துத்தம் 4, கற்பூரம் 3, கையான் தகரை 4 சமூலம் 4, களிம்பு செய்து உருண்டை யாக்கி உலர்த்தி நீரில் தேய்த்து இட இழிகண் திரும். 720

## இழிகண் புழு வெட்டு-குணம்

பாரேதா னிமைச்சந்தி னொட்டு மார்கம்
பருவணியின் நரம்புகளில் வாயு சேர்ந்து
சீரேநீ வெள்விழியில் மாசி போலச்
சிதைந்துமே யெந்நாளு நோவு மாகி
பீரலுடன் சோரியது மிகவே பொங்கிப்
பிலமான வீக்கமுட னூற லாகித்
தீரலுட நீர்க்கம்மல் தோடா தோடம்
தொடருமே யிழிகண்ணின் புழுவெட் டாமே. 721

(மருந்து)

சீமைகல் நார், வெள்ளைக் கற்கண்டு, துருசு, வகைக்கு 1 வராகன் எடை வெந்ததலையோடு 2 வராகன் எடை பொடித்துக் கொண்டு நெல் எடை கண்ணிலிடப் படலம், காசம் பூ முதலான வையும் தீரும். 722

(வேறு)

மஞ்சள், சந்தனம், துத்தம், துருசு, பச்சைக் கற்பூரம், மனோ சிலை, இந்துப்பு, வெட்பூலாவேர், பீதரோகணி, வெள்ளி லோத் திரம், இவை ஒரு நிறையாய் எலுமிச்சம் பழச்சாற்றில் 3 நாட்கள் அரைத்துலர்த்திப் பொடித்து எள் பிரமாணம் கண்ணில் தூவி வரச் சகல ரோகங்களும் நீங்கும். 723

(வேறு)

சிறுபுள்ளடி இலைச் சாறுடன் மிளகு சேர்த்து, அரைத்து, சட்டியிலிட்டு வறுத்துச் சாம்பலாக்கி அதைப் பசுவின் வெண் ணெய்யில் குழப்பிக் கண்ணிலிடத்தீரும். 724

(வேறு)

அருக்கம் பாலைச் சீலையிலூட்டிச் சுட்டுப் பசுவெண்ணெய் யிற் குழப்பிக் கண்ணிலிட நீங்கும். 725

## உக்கிர ரோகம்-குணம்

சக்கரம் போலக் கண்ணில் தடிப்புண்டாய் நீரும் பாயும்
வக்கர மாக மூட வலிதின வரிப்புண் டாகும்
இக்கர வொன்றை நோக்கில் மேதினி புகைந்து காட்டும்
உக்கிர ரோக மென்று உரைத்தனர் தமிழ்வல் லோரே. 726

### உடைந்தெழுகாசம்–குணம்

அடைந்தெழும் பீளை கட்டும் அதிகமாஞ் சிவப்பு மீரும்
கடைந்திடுங் கருவி போலக் கடைக்கண் குத்தி வாங்கும்
குடைந்திடும் நெற்றி காது குத்திடும் உச்சி தன்னில்
அடைந்தெழு காச மென்று உரைத்தனர் தமிழ்வல் லோரே. 727

### உயர்ந்து கண் புடைத்தல்–குணம்

மெத்தவே கண்கள் நொந்து மேவியே புடைத்து வீங்கி
நித்தமும் வாதை காட்டும் நினைவற மூர்ச்சை யாகும்
சுத்தமாய்த் தசை வளர்ந்து சுருக்கிட்டு நீரும் பாயும்
உத்தவே குணங்கள் தானும் உயர்ந்துகண் புடைத்தல் தானே 728

### உருவிப் புடைத்தெழுதல்–குணம்

வளரும் வலிக்கு மிகப்புடைக்கும்
வாங்கும் விழியும் மேனோக்கும்
தளரும் விழியுஞ் சிவந்தெரிக்கும்
தண்ணீர் பீளை தானுண்டாம்
குளரும் வாயுந் தடுமாறிக்
குடித்த வன்னஞ் சத்திக்கும்
உளருங் கிடையுங் கொள்ளாது
உருவிப் புடைத்தெழுத லெனலாமே 729

### உளவு நேத்திரம்–குணம்

ஊகமா யுளவுநேத் திரத்தி னேர்மை
உரைக்கின்றேன் மாணாக்க ளறிய வென்று
சாகமாய் கண்ணிமையில் தினவுண் டாகும்
சகலவித மாறலுடன் மயக்க மாகும்
தாகமுட னென்னேரம் தலைவ லிக்கும்
தரிக்கவே முடியாது சபலச் சித்தம்
போகமது மிகக்கேட்கும் பொலிவு தோன்றும்
பொல்லாத நேத்திரத்தி னுளவு தானே 730

(மருந்து)

மேற்படி மாசை ஊசியினாற் திரட்டியுரித்துப் போட்டு, அதிமதுர நெய்யை நேத்திரத்தில் வார்க்கத் தீரும். அல்லது திரிகடுகு, துத்தம், செஞ்சந்தனம், வெள்ளைச் சாரடைவேர், தாமரைக் கிழங்கு, பச்சைக் கற்பூரம், இவைகளை ஓரளவாய்

முலைப்பால் விட்டரைத்துக் கயிறு செய்து மேற்படி பாலிலு ரைத்துத் தீட்டவும் அல்லது அஞ்சனக்கல், முட்டைத் தோல், சங்கு, திப்பிலி, சந்தனம், தலையோடு, இவை ஒரளவாய்ப் பழச் சாற்றிலரைத்துக் கண்ணிலிட்டாலும் தீரும். 731

(வேறு)

வெள்ளைக் காக்கணான்வேர் வராகனெடை, வெண்குன்றி வேர் வராகனெடை, வெள்ளைச் சாரணைவேர், மஞ்சள். துத்தம் துருசு இவைகளும் வராகனெடை. இவைகளை எலுமிச்சம் பழச் சாற்றில் அரைத்துக் கயிறு செய்து முலைப் பாலிலுரைத்துக் கண்ணிலிடத் தீரும். 732

(வேறு)

துத்தம், இரும்புப் பொடி, முத்து, முட்டைத்தோல், பச்சைக் கற்பூரம், வகைக்கு 1 கழஞ்சு, செப்புப்பொடி 2 கழஞ்சு, பொன்னாஞ்சாடி 1, பவளம், வெள்ளி வகைக்கு 5 பொடித்துப் போட்டு எலுமிச்சம் பழச்சாற்றிலும், முருங்கைப் பூச்சாற்றிலும், காடி நீரிலும் தனித்தனியே அரைத்துக் கயிறு செய்து தேனிலாவது அல்லது கோசலம், நெய், முலைப்பால் வகைக்கு ¼ படி ஒன்றாய்க் கலந்து நீர்வற்றக் காய்ச்சி வடித்த நெய்யிலாவது உரைத்துப் போடத் தீரும். 733

(வேறு)

திரிபலை, தேற்றான் விதை, தாமரை மணி ஒரு நிறையாய் குமரிச் சாற்றிலரைத்து முலைப் பாலிலுரைத்து 21 நாட்கள் கண்ணிலிடத் தீரும். 734

ஊடை யெழுச்சி—குணம்

காதிற் கண்ணிற் குத்திநொந்து
கனக்க வீங்குஞ் செவியடங்க
மோதிச் சிவந்து விழிகூசி
முதிர்ந்த சீழும் காதில்வரும்
சோதித் தினவுங் கடைக்கண்ணைச்
சுருக்கி யிழுக்கும் நீர்வடியும்
ஊதிக் கண்ணுந் தினவுண்டாம்
ஊடை யெழுச்சி யெனலாமே 735

### ஊறு காசம்-குணம்

கடுக்குங் கண்ணுஞ் சிவந்திருக்கும்
கட்டைப் பட்ட புண்போலாம்
படுக்கு மிரவில் தசைவளர்ந்து
பரந்து மூடும் விழியடங்க
இடுக்கு மிமையுங் கனத்திருக்கும்
இருண்டு தோற்றும் பலவிதமாய்
ஒடுக்குஞ் சற்றே மணிதோற்றும்
ஊறு காச மெனலாமே 736

### எரி விழி மழுங்கல்—குணம்

கண்ணது கனத்து நொந்து
கருகிநீர் மலங்கல் வீழ்ந்து
நண்ணது புருவங் கன்னம்
நாசிகள் மூல முற்று
விண்ணது வருக்கன் தன்னை
மேவியே பார்க்கும் போது
எண்ணிய குணங்கள் தானும்
எரிவிழி மழுங்க லாமே 737

### எழு நாயிறு— குணம்

விழுவார் படுப்பா ரெழுந்திருப்பார்
விதனம் பொறுக்க வரிதாகும்
அழுவார் விழியும் பருத்துவரும்
அமர்ந்து பின்னை யலறிவிக்கும்
முழுதாய்க் கண்ணில் முளைபோல
முதிர்ந்து பிறகு மொருநாழி
பழுதா மிவைதா னெழுநாயிறு
பகர்ந்தே யுரைத்தார் புவிதனிலே 738

### ஒட்டுக் கண்—குணம்

பாடுவே னொட்டுக்கண் பான்மை கேளு
பரப்புடனே விழிமலர்ந்து பரவிக் காட்டும்
நீடுசொரி ரத்தமுடன் பீளை சாறும்
நெடிதான ரோகமுடன் தலைநோ யுண்டாம்
காடுபுகல் புகைச்சலுட னருவி போலக்
காட்டுமே யெந்நேரம் கண்ணிற் றீயாம்
நாடுபுகழ் மாந்தருக்கு யிந்த ரோகம்
நவீன்றிட்டோம் யூகிமுனி சிகிச்சை யாமே 739

(மருந்து)

உத்தமதாளி, நெருஞ்சில், முருங்கை இவைகளின் பூவும், வெள்ளைச் சாரடைக் கொழுந்தும், நாய் வேளைக் கொழுந்தும், ஈருள்ளியும், நற்சீரகமும் வகைக்கு ¼ வராகன் எடை வீதம் முலைப்பால் விட்டுச் சிதைத்துக் கண்ணிற் பிழியத் தீரும்.

(வேறு)

துத்தம், துருசு, புளியம் பொறுக்குச் சுட்ட சாம்பல், கடுக்காய் கரி இவைகளை ஒரு நிறையாய் ஆவின் வெண்ணெய்யில் அரைத்துக் கண்ணில் போடத் தீரும். 741

கண்கட்டி – குணம்

காணவே கண்கட்டி குணத்தைக் கேளும்
கடிதான கண்ணோரம் பீளை சேர்ந்து
பாணம்போல் நீர்தோய்ந்து மூடிக் கொண்டு
பரவியே சவ்வுபோல் தசைவ ளர்ந்து
சீணமுடன் விழிநீர்தான் மிகவே தங்கி
சிறியதோர் கட்டியாய்த் திரட்டிக் காட்டும்
காணம்போ னிமைக்குள்ளே கட்டி தோன்றும்
கடிதான நேத்திரநோய் கண்டு பாரே 742

(மருந்து)

பீதரோகணி, துத்தம், துருசு, பச்சைக் கற்பூரம், திரிகடுகு நெல்லிப் பருப்பு, செம்புப் பொடி, பளிங்குக் கல். இரும்புப் பொடி, தலையோடு, கடுக்காய், சிறுகீரை வேர், பொன்னாங்காணிவேர், வெட்பூலா வேர், ஓரிலைத் தாமரை வேர் வகைக்கு 1 வராகன் எடை. இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றிலுரைத்துத் தீட்டவும்.

(வேறு)

சுக்கு, திப்பிலி, மிளகு, சங்கு, அரிதாரம், புங்கம் பருப்பு, அதிமதுரம், துத்தம், பீதரோகணி, மனோசிலை, பன்றி கொம்பு, ஆமையோடு, புலிநகம், நரம்பு வெள்ளைச் சேவல் நெஞ்செலும்பு, இந்துப்பு இவை ஒரு நிறையாய் நந்தியா வட்டப் பூச்சாற்றில் மூன்று நாளரைத்துக் கயிறு செய்துக் கொண்டு தேனிலாவது முலைப்பாலிலாவது உரைத்துஇட வெண்மாசுப் படலம், ஆணி பூவும் நீங்கும். 744

கண்குரு—குணம்

மாசம் பக்கம் வலிகடுப்பு மருப்போல கண்ணில் தோன்றும்
நாச மாகும் பின்வளரும் நசுங்கி முளைக்குந் தினந்தானும்
வாசம் நடக்கில் தலைமுழுகில் வலுவாய் வாதை தானுண்டாம்
நேசந் தலைமுகம் பிடரிவலி நிச்சயம் கண்குரு வெனலாமே 745

கண் கூச்சம் - குணம்

சடமெலாம் நோவாகித் திமிரு முண்டாம்
சவ்வுபோல் தசைவளர்ந்து சோரி தங்கி
கடல்நுரைபோல் தான்வெளுத்து விழியின் மீதில்
கண் பொங்கிப் பீளையது மூடிக் கொண்டு
முடமயிரின் புருவத்தில் தினவு மாகி
முட்டியே தண்ணீரும் வெளுப்பே யாகி
படலம்போல் ரத்தவண்ணச் சிவப்பு மாகி
பகுட்டுமே கண்கூச்ச மியல்பு தானே 746

(மருந்து)

தான்றிக்காய், மாசிக்காய், கடுக்காய், காசுக்கட்டி, வகைக்கு 1 வராகன் எடை, அபின், பொரித்த சீனக்காரம், வகைக்கு ¼ வராகன் எடை, கரண்டியிற் பொடித்துப் போட்டு அதில் வரட்பூலா யிலை, கருவேலிலை வகைக்கு 1 பிடி வீதமிடித்து, அவித்துச் சாறு பிழிந்து, கொதிக்க வைத்து செப்புத் தடியால் மைபோலரைத்து விழியிற் புறவளைய மிட்டுப் புளியிலையை வேக வைத்த தண்ணீரால் கண்ணைக் கழுவி 23 விசை போட நீங்கும். 747

(தைலம்)

புளியைக் கரைத்து நேத்திரத்தில் 1 நாளைக்கு 4 விசை பிழிந்து, துளசி, பிண்ணாக்கிலை, புளியிலை, இவைகள் ஒரளவாய் இடித்து, சீலையிற்கட்டி விழியில் ஒற்றடம் செய்து, ஆவாரம் பூவைத் தலையில் தளமிட நீங்கும். 748

(வேறு)

இரும்புத் தகட்டை நெருப்பிற் சிவக்கக் காய்ச்சி யெடுத்து அதில் எலுமிச்சம் பழச்சாற்றை யாவது புளியிலைச் சாற்றை யாவது விட்டு, கரிய பவளமும், கடுக்காய்த் தோலும், சீனக் காரமும், பொடித்துப் போட்டு இருப்புக் குழவியாற் களிம்பு போல் நன்றாயரைத்துப் புறவளைய மிட்டுக் கருவேல், புளி, ஓரிலைத் தாமரை, பொன்னாங்காணி, சிறுகீரை, பஞ்ச திரவியம்,

கம்பிப் பிசின், மிளகு, கத்தூரிமஞ்சள், இவை ஒரு நிறையாகக் காடி விட்டரைத்துக் குழம்பாக்கி சிரசிற்றடவ நீங்கும். 749

### கண்சிவப்பு – குணம்

சிறுகுங் கண்ணும் நீர்வடியும்
சினந்து கனக்குஞ் சிரசுவலி
முறுகு மனமும் வந்திக்கும்
முகிலாச் சிவந்த பூவதுபோல்
குருகுஞ் சரீரந் தளர்ந்துவரும்
எதிர்த்து வெப்பந் தானுண்டாம்
அருகு மிந்தக் குணங்களெல்லாம்
மருவு கண்சிவப் பிதுதானே 750

குணமான கபத்தினால் பிறந்த தோடம்
கொடிதான சந்துக்க ளிமைகள் வீக்கம்
நிணமான தினவுடனே கட்டி தோன்றும்
நேரான யிருவிழியும் கடுக்கும் பாரு
பணம்போல உள்விழியில் கட்டி யாகும்
பரபரத்து யெரிச்சலுடன் திமிர்த்துக் காட்டும்
பிணம்போல மூச்சையது குன்றி யேதான்
பிடரிவலி கண் சிவப்பின் குணமி தாமே. 751

(மருந்து)

துத்தம், துருசு, வகைக்கு 1 வராகன் எடை, சிறுகீரை, பொன்னாங்காணி, ஓரிலைத் தாமரை, இவற்றின் வேர்களை வகைக்கு 1 பாக்களவு, எலுமிச்சம் பழச்சாற்றால் மைபோல வரைத்துத் தட்டிக் காய வைத்து, புதுச் சட்டியிற் பரத்தி, மறு சட்டி கொண்டு மூடி, நான்கு நாழிகை எரித்துப் பொடித்துச் சிமிழிலடைத்து, எட்பிரமாணம் விழியிலிட்டு, குமரி, வேலிப் பருத்தி, பொன் முசுட்டை இவற்றின் சாறு, நல்லெண்ணெய், ஆவின் பால் வகைக்கு 2 படி, வெட்பூலா, நெருஞ்சில், விட்ணு கிரந்தி, விலாமிச்சுவேர், கொத்தமல்லி, கோட்டம், வகைக்கு $\frac{1}{4}$ பலம் வீதம் அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகத் தீரும். 752

(வேறு)

வெள்ளைக் காக்கணான் வேர் 1 வராகன் எடை, வெண் குன்றி வேர் 2 வராகன் எடை, வெள்ளைச் சாரணைவேர் 3

வராகன் எடை, மஞ்சள் 4 வராகன் எடை, துத்தம் 5 வராகன் எடை, துருசு 6 வராகன் எடை இவைகளை எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்துக் கயிறு செய்து முலைப் பாலிரைத்து விழியிலிட நீங்கும்.

(வேறு)

சண்பகப்பூ, சந்தனம், சிறுநாகப்பூ, வெட்டிவேர், விலாமிச்சு வேர், கற்கண்டு, சாதிக்காய், தக்கோலம், சீந்திற் தண்டு வகைக்கு 1 கழஞ்சு கொண்டு 3படி நீரில் காய்ச்சி 1 படியாக வற்ற வைத்து அதைப் பீச்சாங் குழலினால் விழியிலடைத்து மயிரை யுதிர்த்து அரிதாரம், இந்துப்பு, செம்புப் பொடி, இவைகளை ஓரளவாய்த் துளசிச் சாற்றிலரைத்துக் கயிறு செய்து முலைப்பாலிலுரைத்து விழியிலிட்டு வந்தாலும்,

சீனக்காரம், துத்தம், துருசு, மயில் முட்டைத் தோல் வகைக்கு 1 கழஞ்சு வீதம் பொடித்துப் போட்டு, எட்பிரமாணம் விழியிற் போட்டு வந்தாலும் தீரும்.

### கண்ணுளவு, ஒட்டுக்கண், மலங்குகண் கண்சுருங்கல் —குணம்

காணவே கண்ணுளவு பிரிவின் தன்மை
கணக்காக யாமுரைப்போம் பளிங்கு போல
தோணவே யிருவிழியு மங்க லாகும்
துலையாத சலக்கோர்வை துடிப்பு மெத்த
நாணவே கண்கூச்ச மதிக மாகும்
களினமா மெந்நேர முகம்வி யர்க்கும்
பாணமுடன் றென்னிலங்கன் மையைத் தீட்ட
பறக்குமடா பஞ்சிலிட்ட தீப்போ லாமே. 755

ஆமேதான் ஒட்டுக்கண் மலங்கு கண்ணாம்
அன்பான கண்சுருங்க லெடுத்து ரைப்போம்
தாமேதான் யெரிச்சலுடன் தினவு தோன்றும்
தரியாது கண்கூச்சம் தலைநோக் காடு
வேமேதா னிருகண்ணு மூடிக் கொள்ளும்
விரும்பியே தகனவிடா யதிக மாகும்
நாமேதான் மயக்கமுடன் வாந்தி யாகும்
நலமுரைத்தோம் யூகிமுனி நவின்ற வாறே. 756

(மருந்து)

எலுமிச்சம் பழச்சாறு 1 துளி, நல்லெண்ணெய் 1 துளி, இலுப்பை யரைப்பு ஊறின தண்ணீரில் 1துளி, இவைகளை ஒன்றாகக் கலந்து கையில் மத்தித்துக் கண்ணிற் போட்டு வரத் தீரும்.

## கண்ணெரிதல்—குணம்

கண்ணினில் தடிப்புண் டாகிக் கடுவனில் விழிக்கொ ணாது
திண்ணியக் குந்தம் பற்பம் ரோகமே சிவந்து காட்டும்
கண்ணிமைச் சூழப் புண்ணாய் காரழி பாயு மாகில்
பண்ணிய கமலம் போலப் பரியகண் ணெரிதல் தானே 758

(மருந்து)

மாதுளம்பூ, சீரகம், நெருஞ்சிக்காய் சரியொன்று பனை மட்டைச் சாறு விட்டரைத்து உருண்டை பண்ணி முலைப்பாலிட வும். 759

## கண் தினவு – குணம்

ஊருஞ் சொரியும் கரகரக்கும்
உள்ளே கண்ணுஞ் சிவந்தறுக்கும்
நீரும் பொழியு மனலுண்டாய்
நிறுத்தி யுறக்கந் தனைவேண்டா
கூறும் விழியும் புகைந்திருக்கும்
குறுகும் விழியும் கொடுநோவாம்
சேருமிந்தக் குணங்க ளெல்லாம்
தினவு கண்ணின் குணந்தானே 760

## கண்பிரிதல் விழிவெட்டு-குணம்

ஆமேதா னரம்புடனே மறிவுகுன்றி
அடவான மஞ்சள்நிறம் வெளுப்பு மாகும்
தாமேதான் புகைகம்மி நோயு மாகி
சதிரான யெரிச்சலுடன் நீலம் போல
சோமேதான் தாகமுடன் சுரமுண் டாகும்
சுருக்கியே மாமிசத்தைக் கருகச் செய்யும்
தேமேதான் வெள்விழியில் நீரே தங்கி
தியங்குமே கண்பிரிதல் விழிவெட் டாமே. 761

(மருந்து)

நல்லெண்ணெய் 1 படி, குப்பைமேனி, கையாந்தகரை, ஆடுதீண்டாப்பாளை, நொச்சிகழற்கொடி இவைகளின்சாறு வகைக்கு 1படி பின்னும் கையாந் தகரைச் சாற்றில் சர்க்கரையைக் கரைத்து வெய்யிலில் தெளிய வைத்து, அந்தத் தெளிவு ¼படி, ஒன்றாய்க் கலந்து காய்ச்சி வடித்து, முழுகி வர நீங்கும். 762

(வேறு)

சிற்றாமுட்டி, நன்னாரி, இருவேலி, முல்லை, நெய்தல் இவைகளின் வேர், சீந்தில் தண்டு, செங்கழுநீர், தாமரைக் கிழங்கு, தண்ணீர்விட்டான், சிறுகீரை வேர், வகைக்கு 1 பலம். இடித்து 8 மரக்கால் தண்ணீரிற் போட்டு, எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து அதில், தாழை விழுது, தாமரைக் கிழங்கு, பொன்னாங்காணி, கையாந்தகரை, ஓரிலைத்தாமரை, நெல்லிக்காய், எலுமிச்சம் பழம் இவைகளின் சாறு வகைக்கு 2 படி, நல்லெண்ணெய், ஆவின் பால் வகைக்கு 6படி, இவை ஒன்றாய்க் கலந்து, அதில், மஞ்சள் திரவியம், பச்சை கத்தூரி மஞ்சள், சிறுநாகப்பூ, செவியம், சடா மாஞ்சில் வகைக்கு 1 பலம். இவைகளை இளநீர் விட்டரைத்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து அதில் புனுகு, பச்சைக் கற்பூரம், பொடித்துப் போட்டு வைத்துக் கொண்டு தலை முழுகி வரத் தீரும். 763

## கண் புண்–குணம்

காட்டவே கண்புண்ணின் குணத்தைக் கேளும்
கடிதான விழியிரண்டும் சிவந்து மேதான்
நீட்டமுட னிமையோரம் நமைச்ச லுண்டாம்
நெடிதான கண்ணெல்லாம் புண்ணே யாகும்
வாட்டவேர் வைகளுடன் விழிகள் குத்தும்
வற்றியே நீர்வடிந்து வருத்தஞ் செய்யும்
தீட்டியே மைகளினாற் களிப்போ டூரல்
திரமாகச் சிகிச்சையது செய்தி டாயே. 764

(மருந்து)

சந்தனம், குமரிமணி, அதிமதுரம், வகைக்கு 1 பலம், இவைகளை ¼படி ஆவின் பாலிலரைத்துக் கலக்கிக் காய்ச்சித் தலையிற் தளமிட்டு மாலையில் முழுகி வரத் தீரும் 765

கண் பூ— குணம்

தோன்றவே கண்பூவின் குணத்தைக் கேளு
துடியான படலமது பரவிக் கொள்ளும்
சான்றலென்ற வெள்விழியி லாணிப் பூவாம்
சதாகாலம் நீர்ப்பாய்ச்ச லருவ லாகும்
பான்றலென்ற வாணிப்பூ நேத்திரப் பூவாம்
பாழாகு மிருவிழியில் பாச்சி குன்றும்
ஏன்றலென்ற கருவிழியு மங்கிப் போகும்
எழிலான கண்பூவி னியல்பு தானே 766

(மருந்து)

நத்தைக் கூடு, மிளகு, ஆமையோடு, முதலைப்பல், பன்றிக் கொம்பு, சேவல் நெஞ்செலும்பு, வெள்ளி, புலிநகம், இவைகளை ஒரு நிறையாய் முலைப்பால் விட்டு மை போல அரைத்துக் கயிறு செய்து கொண்டு தேனிலுரைத்துக் கண்ணிலிட— ஆணிப்பூ முளை மாறும்.

கண்மந்தம் நீர்ப்பாய்ச்சல்—குணம்

கட்டான கண்மந்தம் கண்ணீர்ப் பாய்ச்சல்
கடியதொரு மலங்கலுடன் காதி ரைச்சல்
திட்டமுடன் கண்சிவப்பு திரையோ மெத்த
தெளியாது யென்னேர மயக்க மாகும்
வட்டமுக ரவியொளியை யென்ன சொல்வேன்
வலியுடனே நீர்ப்பாய்ச்சல் வண்மை மெத்த
பட்ட கண்ணில் படலமது படரும் பாரு
பாலித்தார் யூகிமுனி பயின்றிட் டாரே 768

(மருந்து)

புளியம்பூ, கிராம்பு, வெள்ளைக் காக்கணம் வேர், அதிமதுரம் துத்தம், துருசு, நீலரத்தினம், முத்து, பவளம் சமமாய் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துக் கயிறு செய்து கொண்டு மேற்படி சாற்றி லுரைத்துப் போட மாறும். 769

கண் விரணம்—குணம்

சுற்றெல்லாம் வரையும் புண்ணும்
சூழவே தினவுண் டாகி
வற்றியே யிமைக ளெங்கும்
வலித்திடும் விழிசி வக்கும்

முத்தியே நோக்கிப் பார்க்கில்
முனைத்தொன்றுஞ் செய்ய வொட்டா
கத்தியே யிருக்கும் தூங்காக்
கண்ணினில் விரணந் தானே. 770

காசமுறுக்கி – குணம்

நல்ல கறுப்பு விழியதனில்
நரம்பு போலச் சிவந்துவரும்
சொல்ல வெளுத்த விழிமேலே
தோன்று மிரத்த மாங்கிசந்தான்
வல்ல குவளை தனையுறுத்தி
வடியும் நீரும் வற்றாது
பல்லை வலிக்குந் தலையிடிக்கும்
பகருங் காச முறுக்கியென்றே. 771

காசவெறி – குணம்

காட்டவே காசவெறிக் குணத்தைக் கேளு
கடிதான வட்சரத்தைப் பார்க்க வொட்டா
நீட்டவே யிருட்போல வெளிச்சங் காணும்
நெடிதான மனிதரையும் மறைக்கப் பேசும்
மூட்டவே மயக்கமுடன் வாந்தி காணும்
முடியான சிரசுமது கனத்தே காட்டும்
ஆட்டமுடன் தலைநடுக்க மதிக முண்டாம்
அயனுரைத்த படியாக வமருந் தானே. 772

(மருந்து)

நந்தியா வட்டப்பூ, பீச்சமலர், முருங்கைப்பூ, கொடுப்பை வேர், அதிமதுரம், ஏலம், கோட்டம், செங்கழுநீர்க்கிழங்கு, எலுமிச்சம்வேர். இலவங்கம், துத்தம், கடல்நுரை, பவளம், முத்து இவைகள் ஒரு நிறையாய் வெள்ளாட்டுப் பித்தாலாட்டிக் கயிறு செய்து எலுமிச்சம் பழச்சாறும் ஆவின் நெய்யுமொன்றாய்க் கூட்டி காய்ச்சிஅதிலுரைத்துத் தீட்டிவரத் தீரும். 773

(வேறு)

பலகறை சுட்ட சாம்பல், துத்தம், துருசு, மஞ்சள், இவைகள் ஒரு நிறையாய் நல்லெண்ணெய்யிலரைத்துச் சீலையிற் தடவிக் கட்ட அற்றுவிழும் மூலமுளையிற் கட்டினாலும் விழும். 774

காயான்

கருதாய் விழியின் கடையுற்று கதித்த சோதி யதுவழலாய்
மருவாய் வெள்ளை மேலோடு மருவுஞ் சென்ன வதுவொப்பாய்
உருவாய் மேவித் திரண்டல்லோ உருத்தோல் தன்னில் தசைபோல
வெறுவந் தருகத் தள்ளி வெளிசங் கொண்டே உரிப்பாயே. 775

வெளிசங் கொண்டே யுரித்தபின் வினவுங் கிரிகை நீகேளாய்
தெளியும் படியே நீதானும் ஆநெய் கொண்டுத் தியங்கவொற்றி
புளியந் துளிருஞ் சீரகமும் பூலாவேரில் புறத்தோலும்
தெளியச் சீவி முலைப்பாலில் தியங்க வொற்றி வொற்றாயே. 776

கடுக்காய் நெல்லி யதிமதுரம் காணும் புளிதளிர்கரு வேலிலையும்
நொடுத்திவை கொள்ள தன்னிலொக்க நொங்கிய குமரிமடல் குடைந்து
அடுத்திவை யெல்லா மதிலடைத்து ஆவார மக்கினால் பொன்றி
நடுப்புறத் தீபி லெரியவைத்து நல்ல பதத்தில் வாங்காயே. 777

வாங்கி யரைத்து முலைநீரில் வழித்துக் குழைத்து யிமையிலிடில்
வீங்கும் விழிவதை நீர்ப்பாய்ச்சல் விதன கோபம் யெறிப்பன்றி
ஓங்கும் மெழுத்து பூவெழுச்சி உடனே வந்த நோவுகளும்
தாங்கா மல்தான் ஓடிவிடுந் தம்பி ரானருள் தான்கொண்டே. 778

குந்தம் அமரம் - குணம்

குந்தமென்ற வமரத்தின் குணத்தைக் கேளு
கூரான பிடரிவலி தலைநோக் காடும்
சிந்தனையை மறக்கடித்து சீறிக் கோபம்
சிலாகையினாற் குத்துவது போலக் குத்தும்
பந்தனையா யிருவிழியில் மூடிக் குந்தம்
படருமே அமரமென்ற சிவப்பு காணும்
தொந்தமுட னிமைமயிரி லுதிர்தல் தோன்றும்
சூட்சமுடன் யாமுரைத்த சுருதி யாமே. 779

(மருந்து)

துத்தம், இரும்புப் பொடி, முட்டைத்தோல், பச்சைக்கற்பூரம் வகைக்கு 1 கழஞ்சு, செம்புப்பொடி 7 கழஞ்சு பொன், மஞ்சாடி, பவளம், வெள்ளி வகைக்கு ½ கழஞ்சு பொடித்துப் போட்டு எலுமிச்சம் பழச்சாற்றிலும் முருங்கைப் பூச்சாற்றிலும், காடி நீரிலும் தனித் தனியே அரைத்துக் கயிறு செய்து தேனிலாவது, கோசலம், செம்முலைப்பால் வகைக்கு ½படி ஒன்றாய்க் கலந்து நீர் வற்றக்காய்ச்சிவடித்த நெய்யிலாவதுஉரைத்துப் போடத்தீரும். 780

### மாத்திரை

கற்பூர மஞ்சனமுங் காரியந் திப்பிலியும்
நற்பெரிய தோர்மிளகு நல்லிரதஞ் —சொற்பெரிய
நந்திப்பூச் சாற்றரைத்து நாளுந்தேன் வார்த்திடினே
குந்தங்கண் தோடம்போங் கூறு. 781

### குந்தம்பூ - குணம்

கூறுவேன் குந்தம்பூவின் குணத்தைக் கேளு
கொடிதான விழியிரண்டும் மாசு பற்றி
நீறுவிழி மேற்பார்வை யதிக வோட்டம்
நேரான குந்தமது படரும் பாரு
வேறுமுளை தானூன்றி விரைத்து மேதான்
வெடித்துமே புண்ணாக்கி முளையுந் தோன்றும்
தாறுடைய நீர்போல சருவிச் சொட்டும்
சாற்றினார் யூகிமுனி சாற்றி னாரே. 782

### (மருந்து)

சமுத்திராப் பழத்தைச் சுத்தி செய்து கல்வத்திட்டு ஆவின் நெய்யைக் கூட்டிக் களிம்பு போலரைத்து விழியிற்றீட்டி இமை குழிந்து நீர் பரபரத்து வேதனை கண்டால் கதிரைக் காய்ச்சி நெற்றியில் சுடத்தீரும். 783

### குமரிதன் காசம்—குணம்

கடுவலி கண்கள் தன்னில் கலங்கியே பீளை சாறில்
நடுவிழி தன்னிற் குத்தும் நன்மணி புடைத்து வீங்கும்
வடுவெனத் திரண்டு காட்டி வாயுவுஞ் சலமுங் கோர்க்கும்
குடிதனைக் கெடுக்கு மின்னோய் குமரிதன் காசந் தானே. 784

காணவே குமரியிட காசங் கேளு
கனமான நீர்ச்செரிப்புத் தினவு காணும்
தோணவே கண்வீங்கிக் கடுப்புக் காணும்
துலையாத வலியுடனே துடிப்பு மாகும்
ஈனவே பீளையது மிகவே சாடும்
எழிலான வீக்கமுட னூதிக் காணும்
ஆணவே குமரிகா சத்தி னேர்மை
அறைந்திட்டார் யூகிமுனி சிகிச்சை யாமே. 785

(மருந்து)

வெடிவதின் கண்கள் தன்னை விதமுடன் பீளை சாறி
மடிபடும் வலிக டுப்பும் மணிபுடைத் திருண்டு காட்டும்
பொடியிடு துருசு துத்தம் புங்கம் வித்துடன் சங்கு
அடிபணி மாதுளம் பூவில் அதனுட னிதனைச் சேரே. 786

சேர்த்தபின் னாவின் நெய்யில் சிறக்கவே யரைத்துக் காய்ச்சி
மாற்றிய கண்ணி லிட்டால் வலியுடன் கடுப்பு மாறும்
கூற்றுவன் குமரி காசம் குலைகுலைந் தோடு மென்று
நாற்றிசை யுள்ளோர்க் கெல்லாம் நயந்துநீ பாரு மென்றே 787

(தைலம்)

ஆவின் நெய்யும் ஈருள்ளி அழகாய்ச் செங்கழு நீர்க்கிழங்கு
சீவன் சீந்தி யேலம்நெல்லி சண்பகப் பூவுடன் கொத்தமல்லி
பாவாய் கழுதைப் பாலும்நாழி பகரும் எலுமிச்சை யிருவேலி
கோலத் தலையில் தேய்த்துவிடில் குமரி காச மறுந்தானே. 788

(வேறு)

மிளகு, திப்பிலி வகைக்கு 3 கழஞ்சு கடுக்காய் விதை 3 கழஞ்சு அவைகளைத் தனித்தனி 3 வெள்ளாட்டுப் பித்துக்குள் அடைத்துப் புகைபடுகிற இடத்தில் ஒரு மண்டலங் கட்டி வைத்திருந்தெடுத்துப் புளியம் பூச் சாற்றிலும், பனை மட்டைச் சாற்றிலும் அரைத்துக் கயிறு செய்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணில் தடவி வர மாறும்.

(வேறு)

துருசு, துத்தம், புங்கம் வித்து, இந்துப்பு. சங்கு, மிளகு, மஞ்சள் இவைகளை ஓரளவாய் ஆவின் பால் விட்டரைத்து, மேற்படி நெய்யிற் போட்டுக் காய்ச்சி வடித்துக் கொண்டு கண்ணில் வார்த்தும், ஆவின் நெய், ஈருள்ளிச்சாறு வகைக்கு 1 படி, ஒன்றாய் கலந்து, அதில் செங்கழுநீர்க் கிழங்கு, சீந்திற் தண்டு, ஏலம், மல்லி, விலாமிச்சு, வெட்டிவேர், சண்பகப்பூ. நெல்லி முள்ளி வகைக்கு 4 பலம் ஆவின் பாலிலரைத்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து முழுகியும் வரத்தீரும். 790

குவளை எரிதல்–குணம்

கண்ணிற் தடிப்புண் டாகிக் கடுத்திடும் விழிக்கொ ணாது
திண்ணிய யிமைக னத்துத் தினவுடன் சிவந்து காட்டும்
நண்ணிய மயிர்க்கால் புண்ணாய் நாற்றமாய் பீளை பாயும்
குண்ணிய மனமு மாகுங் குவளைதன் னெரிதல் தானே 791

## குவளைக் கண் பிரிதல்

கருவிழி தன்னில் வெள்ளையிற் கனத்துவிம்மி
மருவியும் குமுரியு மழன்று நொந்ததானால்
குருகுசேர் குவளைக்கண் பிரிதலின் குணமெனச்
சருவிய விழியினாளே சாற்றக் கேளே 792

கருவளை முறியுடன் காந்தஞ் செவ்வியம்
பரிவுள்ள புள்ளடி படர்ந்த காக்கணான்
துருசியா முரியும் துத்தம் வெண்கலம்
நெரிய நிம் பழத்தின் நீர் நெய்முலைப் பாலிலிடே 793

திருகிய கொன்றையுந் தென்னம் பாளையும்
பெருகிய நீருடன் பதித்த வேருடன்
அரியவெண் குன்றியும் அட்டியும் கோட்டமும்
நெரியவே சந்தனம் நேரு மாகுமே 794

குதிரைகல் மதமுடன் குறித்த சண்பகம்
சதிபெருந் தகரமுந் தழைத்த ஏலமும்
பதிவள மொழியினாள் பாலில் காய்ச்சிவார்
இதுதனிற் குவளைக் கண் பிரித லேகவே. 795

(மருந்து)

கருவளையல், காந்தம், செவியம், வெள்ளைக் காக்கணான் வேர், துத்தம், துருசு, வெண்கலம் இவையெல்லாம் ஒரு நிரையாய் எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்துக் கயிறு செய்து ஆவின் நெய் யாலும், முலைப்பாலாலும் அரைத்துக் கண்ணில் போட்டு வரத் தீரும். 796

(வேறு)

துத்தம், துருசு, கம்பளி சுட்ட சாம்பல், தலைமயிர் சுட்ட சாம்பல் வகைக்கு 1 வராகனெடை வீதம் கல்வத்திட்டு கழக் கொடிச் சாற்றில் 2 சாமம் அரைத்துலர்த்திய பின்பு ஆவின் வெண் ணெய்யில் கூட்டிக் களிம்பு போலரைத்துக் கண்ணில் தீட்டி வரத் தீரும். இது கை கண்டது 797

(வேறு)

ஆவின் பாலும், நல்லெண்ணெய்யும் வகைக்கொரு படி வீதம் கலந்து அதில் திரிகடுகு, காந்தம், தென்னம் வேர், அதிமதுரம்,

மட்டிப்பால், கோட்டம், சந்தனம், ஏலம், குதிரை வாலி வேர், சல்மதம், சண்பகப்பூ, தகரம், சடாமாஞ்சில், வகைக்கு 3 கழஞ்சு இவைகளை நீரிலரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்துக் கொண்டு மேற்படி பிரயோகங்களில் ஒன்றைக் கண்ணிற் போட்டும், இந்த எண்ணெய்யை முழுகி வரத்தீரும்.

## குவளை காசம்—குணம்

புருவத்தில் நொந்து குத்திப் புடைத்திடுங் கடைக்கண் கூடக்
கருவுற்ற கருப்பி னுள்ளே கலந்திடு நீலம் போலத்
திருவுற்ற மேனி யாளைச் சேர்ந்திடி லதிக மாகும்
குருவுற்ற சூழ வெள்ளை குவளைதன் காச மாமே 799

## குவளை நெரிதல்—குணம்

காட்டும் கடைக்கண் தனிற்குத்தி
கனக்க வீங்கித் தினவுண்டாம்
மூட்டும் வீணை தெரித்தாற்போல்
முடுகி வலிக்குந் தலைநோவு
தீட்டுங் கருவி தனைப்போலச்
சிக்கிப் பருக்கு மிமைவீங்கும்
கூட்டுங் குணங்களிவை தாமும்
குவளை நெரித லெனலாமே 800

## குவளைப் படுவன்—குணம்

சுதிக்க வீங்கும் கண்ணடங்கக்
கடைக்கண் தன்னை மிகக்குத்தும்
பதித்த மணிபோ லசையாது
பரந்து சிவக்கும் விழிமூடும்
உதிக்கு முளைபோற் சீழ்கட்டி
உதிர நீரும் விழுந்துவிடும்
கொதிக்கு மனல்போல் முகமெல்லாம்
குவளைப் படுவ னெனலாமே 801

## குவளை விப்புருதி—குணம்

நீர்விழுங் கடைக்கண் குத்தி நிமைக்குள் ளேசீழ் பாயும்
ஊர்வது மிகவுண் டாகும் உறுத்தியே சிவந்த றுக்கும்
சீர்பெற விழிக்க வொட்டாச் சிறிதுநாள் குணமுங் காட்டும்
கூர்குண மிவைகள் தானும் குவளைவிப் புருதி யாமே 802

## கூசி விழித்தல்—குணம்

மாசுபோல் விழியின் மேலே
மறைக்குஞ்சூழ் தினவு முண்டாம்
பாசிபோ லிருகண்ணிற் பசுக்கும்
பீளை நீரும் வடியும்
வாசிபோற் சிறுக நாளும்
வளரும் பிறையில் வந்தெடுக்கும்
கூசி விழித் தல்தா னென்றும்
குணமா யுரைத்தார் புவிதனிலே

## கொமட்டிக் கண்—குணம்

கூறுவேன் கொமட்டிக்கண் கோரைக் கண்ணின்
குணா குணத்தைக் சொல்லுகிறேன் கூர்ந்து பாரு
நீறுமிடு நெற்றிதனில் திமிர்ந்துக் காட்டும்
நெருங்கியே யிருவிழியு மலர்ந்து பொங்கும்
சீறுபுடை யதிகரிக்கு மெரிச்ச லுண்டாம்
செங்கதிரோன் முன்நிற்க தியக்க மாகும்
மாறுடைய கோரைக்கண் ணயர்ந்து காட்டும்
மறைப்பான மதிமயக்க மிகவுண் டாமே 804

## கோரைக்கண்—குணம்

உண்டாகு மிதிற் தொந்தம் கோரை போல
உடனான விழியிரண்டு மிறுக்கிக் கொள்ளும்
தண்டுட னேநாசியுமே பரபரத்து
தங்கியே நீர்ப்பாய்ச்ச லதிகங் காணும்
கொண்டுடல் மிகவற்றிக் குளிர்ந்து காட்டும்
கோரைபோல் மயிரெல்லாம் திமிர்ந்துப் போகும்
பண்டுபோல் மேனியுமே பதுங்கி வாடும்
படபடத்து தலைநடுக்கம் பான்மை யாமே 805

(மருந்து)

பீதரோகணி, நற்பவளம், சாரடைவேர் இவைகளைச் சமமாய்த் தண்ணீரிலரைத்துக் கயிறு செய்து முலைப்பாலில் உரைத்துப் போட நீங்கும்.

சலகும்பம் – குணம்

சாந்தமாய் சலகும்பம் சாற்றக் கேளு
சதாகாலம் வெள்விழியில் நீரே பாய்ந்து
காந்தலுட னிமைவீங்கி கடுப்புக் காணும்
கடிதான பீளையது மிகவே சாடும்
பாந்தமுடன் முகம்வீங்கித் தலையும் நொந்து
படுமுன்னே விக்கலுடன் வாந்தி காணும்
ஏந்துவிழி மாதரசே யிந்த ரோகம்
ஏய்க்குமே நமனுமே மாறு வானே. 807

(மருந்து)

குங்குமப்பூ, பச்சைக்கற்பூரமும் சமமாய் எலுமிச்சம் பழச் சாற்றிலும் தேனிலும் குழம்பு போலரைத்துக் கொண்டு விழியிற் போட்டும்.

ஆனைத்திப்பிலி, அதிமதுரம், வெள்ளிலோத்திரம், சுக்கு திரிபலை, வரிபலை வகைக்கு 1 பலம், ஆவின் பாலிலரைத்து 1படி நெய்யிற் போட்டுக் காய்ச்சி வடிந்து முழுகி வரவும் தீரும். 808

(வேறு)

வெண்குன்றிப் பருப்பு, வேர், வெள்ளைக்காக்கணம் பூவும் அதன் விதையும், முலைப்பால் வார்த்தரைத்து உருட்டிக் கயிறு செய்து தேனிலுரைத்துக் கண்ணிற் போட்டு, ஆடு தீண்டாப் பாளை, ஆவரை, மணித்தக்காளி, வரிக்கற்றாழை இவைகளின் சாறு, நல்லெண்ணெய், ஆவின்பால் வகைக்குபடி, கொம்மட்டிப் பால், மதுரம், விலாமிச்சம்வேர், வெட்டிவேர், ஏலம், வகைக்கு ½ பலம் வீதமரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகி வரத்தீரும்

சலரூபம் - குணம்

ஊறியே வெண்கண் தன்னில் உற்றதோர் சலங்கள் கொள்ளும்
பாறிய நீரு போலே பகல்விளக் கொளிபோ லாகும்
மாறியே பீளை தானும் வடித்துக்கண் ணிமைதெ ரிக்கும்
சீறியே கண்கள் முன்னே சலரூபந் தானு மாமே. 810

கேளடா வெள்காக் குன்றி வேருடன் காக்க ணாம்வேர்
பாளடா பாலில் போட்டு பணமது மூன்று வீதம்
தேளடா தேனிற் கூட்டி சீறிடும் சலரு பந்தான்
பாளடா போகுமென்று பைந்தனர் முனிவர் தானே.

(தைலம்)

ஆவாரை மணித்தக் காளி ஆடுதீண்டாப்பாளை கூட
வாவாக வரிக்கற் றாழை வஞ்சிப்பு அத்திப் பட்டை
வேவுசீந்தி சிற்றமுட்டி வேரோடு எலுமிச் சம்வேர்
ஆவேழு மொக்கக் கூட்டி அத்துடன் ஏல மாமே. 813

கோட்டமும் அதிமதுரம் குறுகியே வெட்டி வேரும்
நாட்டியே யரைத்து நீயும் நல்லெண்ணெய் கொதிக்க வைத்து
வீட்டுள்ளே அடுப்பை வைத்து மெழுகினி லிறக்கிக் கொண்டு
நீட்டியே தலையில் வார்க்க நீர்ச்சல ரூபம் போமே

வெள்ளைக் குன்றி காடியிலும் வேருங் காக்கணான் பாலரைத்துக்
கொள்ளத் தனைத்தான் கண்ணிலிடக் கோவித்தாறுந் தினமூன்றில்
விள்ளப் பொருத விழியாளே வேண்டிச்சொன்னோங் கண்ணோவுத்
தெள்ளத் தெளியுஞ் சலரூபந் திறைந்து போகுந் திண்ணமிபத. 814

ஆடு தீண்டாப் பாளை ஆவரை மணித்தக் காளி
தாடுசேர் வரிக்கற் றாழை நல்லெண் ணெய்யுடன் சீந்தில்
கூடவே கொம்மட் டிப்பால் கோவின்பால் மதுர மேலம்
தேடிலா மிச்சம் வேரில் செய்யில்சல ரூபம் போமே. 815

(வேறு)

காடியில் வெள்ளைக்குன்றி, காக்கணாம் வேரைப் போட்டு பாலிலரைத்து 3 பண எடை தேனிலிட்டால் தீரும்.

சாய் கண் குருடு – குணம்

வாய்கண் மூக்கு நாக்கு வலமிட மிழுத்து நொந்து
காய்குணம் விழியில் நீரும் கடுகியே சிவந்து காட்டும்
நோய்குண நீட்சி யாக நொந்துதா னாளில் தீரும்
சாய்கண் குருடு யென்று சாற்றினார் தரணி யோர்க்கே. 817

சுக்கிரப் படுவன் – குணம்

இயலான வாயுவது மிகவே தங்கி
எழிலாக யிமையோரம் விழிகள் வீக்கம்
மயலான மினுமினுப்பு சிவப்பு தோன்றும்
மயக்கமுட னோவாகி யெரிச்சல் காணும்
கயலான மாங்கிசத்தைப் பெருக்கச் செய்யும்
கருவிழியி லிமைதானும் குத்த லாகும்
முயல்போலப் பாய்ச்சலுட னீரே பொங்கும்
முறையான சுக்கிரத்தின் படுவன் பாரே 818

(மருந்து)

சிற்றாமணக்கெண்ணெய், குமரிச்சாறு வகைக்கு 1படி' தேவதாரம், சந்தனம், பச்சைக்கற்பூரம், சாதிபத்திரி, அதிமதுரம், கடுகுரோகணி, தக்கோலம், மஞ்சள், சாதிக்காய், கிராம்பு, ஏலம், புனுகு சட்டம், முத்தக்காசு, சடாமாஞ்சில், விலாமிச்சுவேர், இலவங்கம், மஞ்சட்டி, நன்னாரிவேர், தாமரைக்கிழங்கு, செஞ் கழுநீர்க் கிழங்கு, சிறுநாகப்பூ, திரிபலை, வகைக்கு 2 கழஞ்சு மேற்படி சாற்றிலரைத்துப் போட்டுக் காய்ச்சி முழுகிவர நோய்கள் தீரும்.

(வேறு)

வெண்காரம், செம்புப் பொடி வெண்கலம், காரீயம், வளையலோடு, வெட்பூலா வேர்ப்பட்டை, ஓரிலைத்தாமரைவேர், வகைக்கு 1 வராகன் எடை, இந்துப்பு ¼ வராகன் இவைகளை முருங்கைச்சாற்றிலும் எலுமிச்சம் பழச்சாற்றிலும் அரைத்துக் கயிறாக்கி விரணசுக்கிரனுக்கு நாயுருவிச் சாற்றிலும் உத்தாமணிச் சாற்றிலும் போட நீங்கும். 820

(வேறு)

**முதலாவது:** தாலிப்பூவும் சிறுகுறடைக் கிழங்கும் பசுவின் வெண்ணெயில் குழப்பி, நாள் மூன்றுக்கு 3 தளம் போடவும்.

**இரண்டாவது:** உருத்திராட்சமும் வில்லைக் குடுக்கையும் கலங்கொம்பும், முத்து, பவளம், கோரோசனை தாமரைத்தண்டு இவைகளைத் தண்ணீரில் உரைத்து பசுவின் வெண்ணெய்யில் குழப்பி முன்போலவே தளம் போடவும்.

**மூன்றாவது:** தென்னங் குரும்பை, அதிமதுரம், ஏலம் செஞ்சந்தனம், பழம்பாசிவேர், செவ்வள்ளிக் கொடி, திப்பிலி, இவைகளை இளவாழைத்தண்டுத் தண்ணீரில் உரைத்து, பசுவின் வெண்ணெய்யில் குழப்பித் தளம்போடவும்.

**நான்காவது:** செங்கீரைக்கொழுந்து செம்பருத்திப் பூ, நெருஞ்சிப்பூ, அத்திப்பூ, ஆனை நெரிஞ்சிவேர், செந்நாயுருவிவேர், பழம்பாசிவேர், கோரோசனை இவைகளைக் கூட்டி அரைத்து, ஆவின் வெண்ணெய் கலந்துக் கண்ணிலிடவும்.

## இதற்கு முன்னதாகக் கண்ணிற்குப் பற்று

குமரிச்சதையும் புத்தாம்பழச்சோறும் அரைத்துக் கண்ணிற்கு வளையம் போடவும். கடுப்பு வலி நிற்கும்,

(தைலம்)

சிற்றாமணக்கெண்ணெய் இரண்டுபடி, ஏலம், மதுரம், சாதிக்காய், வலம்புரிக்காய், குங்குமப்பூ, கோரோசனை, பசுவின்பால் ஒருபடி, இளநீர் இரண்டு, சந்தனக்கட்டையை அரைத்துக்கூட்ட, பொன்னாங்காணிவேர் ஒரு புட்டி, பரமட்டிவேர் 2 பலம், தவசி முருங்கைவேர் 4 பலம், தாளிவேர் 1பிடி, பழம்பாசி சமூலம் 2 பலம் தாமரை வளையம், குழித்தாமரை, குழிமிட்டான்வேர், இவைகளையிடித்துச் சாறு வடித்து முதல் ஒரு துட்டெடை எண்ணெய் தலைக்கிட்டு 3 நாள் தேய்த்து முழுகவும் கண் சிவப்பு, கடுப்பு, நீர்ப்பாய்ச்சல் நிற்கும். பூ ஒதுங்கும்.

சுக்கிர ரோகம்–குணம்

வீங்கிடுங் கண்ணில் வெள்ளை விதமுடன் பலவாய்க் காணும்
தாங்கியே கண்ணிற் சுற்றும் தசைமுளை குத்தி நோகும்
ஏங்கியே சிரசிற் குத்தும் இருபுறங் கடைக்கண் புண்ணாம்
தூங்கிட வொட்டா திதுதான் சுக்கிர ரோக மாமே. 823

சுந்திர ரோகம்–குணம்

மூடுந் திறக்குங் கூச்சமுமாம் முன்னெற் றிதனிற் குத்துண்டாம்
ஓடுங் கண்ணில் நீர்வடியும் உருட்டி விழிக்க வொட்டாது
வாடுஞ் சோதி நேரமண் ணாந்து பார்த்தா லிமையில்வலி
சூடுந் தசைபோல் வளர்ந்துவரும் சுந்திர ரோக மெனலாமே.

சுடரதி மாங்கிசம்–குணம்

படருஞ் சோதி தன்னுள்ளே பச்சை வண்ணந் தான்காணும்
அடரும் புகைச்சல் நாள்தோறும் அடங்கு விழியுந் தசை
வளரும்
இடரு மெரியு நீர்பொழியும் எதிர்த்துப் பார்க்கி லகுகுத்தாம்
தொடருங் குணங்க ளிவைதானும் சுடரதி மாங்கிச
மெனலாமே

சுடர்பல தோற்றல்–குணம்

பார்க்க விளக்கைப் பலவிதமாய்ப்
பரந்து காணும் நீலம்போல்
கூர்க்க விழிக்கில் வலியுண்டாம்
குவளை தன்னை யுறுத்துவிக்கும்

கார்க்க வெள்ளை விழிசிவக்கும்
　　கனக்க வலிக்குந் தலையடங்கத்
தூக்க மதிகம் வாராது
　　சுடர்பல தோற்ற லெனலாமே. 826

## சுடுவளர்த்தி – குணம்

பரவியே கண்ணிமையில் வீக்க மாகி
　　பரபரத்து எந்நேரம் பீளை சார்ந்து
விரவியே தணலுடனே தீபம் போல
　　வெளிச்சமுட னிருகண்ணும் கூச்ச முண்டாம்
சரமுடனே பார்வையது குன்றிக் காட்டும்
　　சர்பம்போல் சீறியதோர் மூச்சுண்டாகும்
நிறமுறவே விழியிரண்டு மஞ்சளிக்கும்
　　நெறியான சுடுவளர்த்திக் குணமி தாமே. 827

### (மருந்து)

சங்கு, காந்தம், கடல் நுரை, சுட்ட செங்கற்பொடி, இந்துப்பு மனோசிலை, பீதரோகணி, பச்சைக் கற்பூரம், சமம், நந்தியா வட்டப் பூச்சாற்றில் அரைத்துலர்த்தி, வெண்ணெய் கூட்டி, மை போலரைத்து விழியிற் தீட்டி வரத் தீரும். 828

### (வேறு)

கோழி முட்டையை யுடைத்து வெள்ளைக் கருவைப் பீங்கானில் விட்டு, அதிற் கொஞ்சம் சீனக்காரத்தை போட்டுச் சிறுகீரை வேரால் கடைந்தால் வெண்ணெய் போல வரும். அதை விழியில் போட்டு, கருவேலங் கொழுந்தும், மாதுளங் கொழுந்தும், வகைக் கொருபிடி வீதம் இடித்து $\frac{1}{4}$ படி ஆவின் பாலில் போட்டு வேக வைத்துப் பிழிந்து குழம்பாய்க் காய்ச்சி, இரும்புத் தகட்டி விட்டு, இரும்புக் குழவியால் களிம்பு போலரைத்து, அல்லது இரும்புத் தகட்டை நெருப்பிற் காய்ச்சி அதில் சீனக்காரம், துத்தம் துருசு இவைகளை ஒரு நிறையாகப் பொடித்துப் போட்டு, எலுமிச்சம் பழச்சாறு விட்டு மை போலரைத்துக் கொண்டு விழியிற் புறவளையமிட்டு மேற்சொல்லிய புகையைக் காட்டி வரத் தீரும். 829

சுருங்கு கண்—குணம்

கருதவே சுறாங்கினிடக் குணத்தைக் கேளும்
கண்டமது நாளுக்குநாள் கம்ம லாகும்
திருதமுட னிருகண்ணும் சிவந்து காட்டும்
தெளியாது குவளையது புண்ணா மெத்த
ஒருதலைநோய் பிடரியது வலித்துக் காட்டும்
ஒகோகோ கண்சுருங்கும் வேர்வை யுண்டாம்
பருதிகண்ட பனிபோலே யோடிப் போக
பகுப்புடனே யூகிமுனி பாலித்தேனே 830

(மருந்து)

பூநாகம், வெள்ளைக் காக்கணான்வேர், வெள்ளைச்சாரணை வேர், துருசு, துத்தம், பவளம், முத்து, கெம்புப் பொடி, பொன் இவை ஒரு நிறையாக ஊமத்தஞ் சாற்றாலரைத்து விழியிற் போடத் தீரும். ஆணிப் பூவும் மாறும்.

(வேறு)

சங்கு, காந்தம், கடல்நுரை, நன்றாகச் சுட்ட செங்கற் பொடி, மனோசிலை, பீதரோகணி, பச்சைக் கற்பூரம், சமமாய் நந்தியா வட்டச் சாற்றிலரைத்து உலர்த்திப் பின்பு வெண்ணெய் கூட்டி மைபோல அரைத்துக் கண்ணில் தீட்டி வரத் தீரும். 832

சுழல் வண்டெரிதல்—குணம்

பறக்குங் கண்ணிற் பூச்சிபோற் பார்க்கு மிடந்த னிற்றோன்றும்
உறக்கந் தனிலு மவ்வடமே ஓடித் திரியும் போற்காணும்
துறக்குங் கூசும் புகைந்திருக்கும் சுடரைப் பார்க்கில் பலவிதமாம்
பிறக்குஞ் சுழல்வண் டெரிதலென்று பேசி யிருப்பார் பெரியோரே.

சுழல் விழி எரித்தல்—குணம்

எரியுங் கண்ணும் பலவிதமாய் எதிர்த்து விழிக்க வொட்டாது
சரியு மிமையுந் தினவுண்டாம் சாந்த மான வலியுண்டாம்
நெரியு முளைக்கும் பீளைகட்டும் நித்திரை தானும் வெறுப்பாகும்
சொரியுங் கண்ணில் நீர்வடியும் சுழல்விழி யெரித்த லிதுதானே.

செவ்வேர்—குணம்

சிறுகுங் கடுக்கும் வெளுத்தவிழி
சிவந்த யிழைபோற் பரந்துவரும்
அருகுந் தலையிற் குடைந்துகுத்தி
மாறா நீருங் கூச்சமுமாம்

இறுகு மிமையு மசைக்கவொட்டா
இடுக்குங் கடைக்கண் தினவாகும்
குறுகும் வகைக ளிதுதானே
குறித்த செவ்வேர் குணந்தானே 835

சாற்றவே செவ்வேரின் குணத்தைக் கேளு
சாங்கமாய் வெள்ளைவிழி சிவப்புத் தோற்றும்
காற்றலுடன் கடைக்கண்ணு நூற்போ லோடிக்
கடினமாஞ் செவ்வலரி படர்ந்தே யோங்கும்
நீற்றமுட நீர்வடியு மயக்க மாகும்
நிலையான பிடரிவலி யசதி காணும்
போற்றவே யிந்நோய்தான் தீரா தென்று
பூட்டினார் யூகிமுனி சிகிச்சை யாமே 836

(மருந்து)

வெண்குன்றிப் பருப்பு,வேர்,வெள்ளைக் காக்கணாம்பூ, வேர் முலைப்பால் வார்த்தரைத்து, உருட்டிக் கயிறு செய்து, தேனி லுரைத்து, நேத்திரத்திற் போடவும். 837

(வேறு)

ஆடு தின்னாப்பாளை, ஆவரை, மணித்தக்காளி, வரிக் கற்றாழை, இவைகளின் சாறு, நல்லெண்ணெய், ஆவின் பால், வகைக்கு 1படி' கோட்டம், மட்டிப்பால், அதிமதுரம், விலாமிச்சம் வேர், வெட்டிவேர், ஏலம், வகைக்கு ¼ பலம் வீத மரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். 838

## சோதி நெரிதல் – குணம்

முளைக்குங் கண்ணில் பலவாக
மூன்று நாளிற் போகும்வரும்
கிளைக்கு மதன்பின் வெளுப்பாகும்
கீழே விழியும் பார்வையுமாம்
வளைக்குஞ் சதையு மிமைசூழ
வாதை தலைநோய் நீர்ப்பீளை
துளைக்குங் பிடரி சுழியிற்குத்தும்
சோதி நெரிதல்தா னெனலாமே 839

## சோதிகா விரணம் – குணம்

கண்டிடும் பூவும் வெள்ளைக் கருவிழி யெங்குந் தோற்றும்
கண்டிடும் நீரும் பாயும் கூசிடும் விழிக்கொண் ணாது
நண்டினின் கண்கள் போல நடுவிழி தன்னிற் காணும்
வெண்டிடுஞ் சோதி காவின் விரணமு மாகு மென்றே. 840

## சோர்கண் துடிப்பு - குணம்

கூர்க்கண் சோதி தனைக்கடுத்து
குத்திப் பதைக்க யிமையடங்க
நீர்க்கண் பொசிந்து வுறக்கமற்று
நிலையிற் கிடக்க வொட்டாது
சீர்க்கண் போலச் சிறுநாளாம்
சினத்து வெடுக்குஞ் சடுதியிலே
சோர்க்கண் துடிப்பு யிதுவென்று
சொல்லி யிருப்பார் பெரியோரே. 841

## துத்திடு காசம்–குணம்

குத்திடுங் கண்ணைச் சூழக் குவளையி லருவு றுத்திப்
பத்திடும் வெள்ளை மூடிப் பரந்திடும் விழியு மடங்க
உத்திடும் பார்வை குன்றி ஒளியதும் நைந்து காட்டும்
துத்திடுங் காச மென்று சொல்லுவார் பெரியோர் தானே. 842

## துன்மாங்கிசம்–குணம்

வீங்கும் விதனம் சதைபோல
வெளுத்து விழியிற் றான்காணும்
வாங்கும் வளருஞ் சில காலம்
வாதை மிகவாம் நீர்பீளை
தேங்கும் நடக்க வொட்டாது
சினத்து முகமுங் கடுக்குதென்றும்
தூங்கும் விழிக்குங் கிடைகொள்ளாத்
துன்னு மாங்கிச மெனலாமே 843

## துன்னு காசம்-குணம்

வளர்ந்திடுஞ் சதைகண் சூழ வலித்திடு மிமைக னக்கும்
தளர்ந்திடு நீரும் பாயும் சளீரென விடித்துக் குத்தும்
உளந்தனி லெரிப்புக் கூச்சம் உறுதியாய்ப் புகைந்து காட்டும்
துளங்கிய குணத்தி னாளே துன்னிய காச மாமே. 844

### துன்னுவெண் புகைச்சல்—குணம்

கனத்து விழியுஞ் தசைவளர்ந்து
கறுத்த சோதி வெளுப்பேறிச்
சினத்து முகமுங் கடுப்புவலிச்
சிறுகத் தினவும் பீளையிடும்
இனத்துப் பார்வைப் பலவிதமாய்
எங்கும் வெளுப்பாய்த் தான்தோன்றும்
மனத்து மயக்கந்துன்னு வெண்புகைச்சல்
மாறா திந்தக் குணந்தானே

### தூயகண் குருடு—குணம்

கருமணி தெளிந்து நன்றாய்க் காண்பவர் போலத் தோற்றும்
பெருமணி வெள்ளை தன்னிற் பேதிக்குஞ் சுழியிற் குத்தும்
ஒருமணி போல கண்ணில் உறுத்தியே வுள்ளி ருத்தும்
துருமணி பூணு மாதே தூயகண் குருடு தானே 846

### நத்தைப் படுவன்—குணம்

குத்தி யிழுக்குந் தலையடங்க
கூடும் புருவஞ் சுழிநோகும்
முத்தி வலித்து முளைபோல
முளைக்குஞ் சோதி கறுப்பினுள்ளே
சுத்தி வலித்துப் புடைத்தெழுந்து
துயரத் தியக்க முண்டாகும்
நத்தி யுடைந்து சீழ்பெருகும்
நத்தைப் படுவ னெனலாமே 847

### நாக படலம்—குணம்

கடைக்கண் ணிருபுறத்தில் காணவே சிவந்துதோன்றி
துடைப்படி தசைபோல் வந்தநாளிலே சோதிதீண்டும்
அடைத்திடும் விழிகள் தன்னை அதிகநீர் தினவுண்டாகும்
நடைப்படிக் குணங்களெல்லாம் நாகமாம் படலமாமே 848

### நாகபடலம் எடுக்கிற நிதானம்

கருதாய் விழியிற் கடையுற்றுக் கறுத்த சோதி யதனுள்ளே
மருவாய் வெள்ளை மேலோடி மருவிச் செந்நூ லதுவொப்பாய்
உருவாய் மேவித் திரண்ட செவ்வேர்உரித்த தோல்தன்தசைபோல
வெருவாய் வந்த நற்கண்ணில் விஷிசங் கொண்டே உரியாயே 849

விலிசங் கொண்டே உரித்தபின் வினவிக் கிரியை நீகேளாய்
தெளியும் படியே நெய்கொண்டு தியங்க ஒற்றி தானொழுக்கி
புளியந் துளிரும் பூலாவேர் புதிய தேறல் தன்னுடனே
தெளியச் சீவி முலைப்பாலில் தியங்க நறுக்கி வார்த்திடுமே 850

நீரெழு காசம்–குணம்

கருவிழி கீழு மேலும் கலந்துதான் சிவப்பே யுற்று
வெருவிடு மின்னல் போல விசையுடன் நொந்து குத்தும்
பெருகிடுஞ் சலமு மோடும் பேசிடிற் கண்ணி ணோடும்
இருடியா யிவைகள் செய்யின் நீரெழு காச மாமே 851

நீரொளி காசம்-குணம்

சட்டமாய் விழிதனிலே சலமுங் கோர்த்து
சதுராகப் பிரண்டுமே விழியிற் தங்கித்
திட்டமுடன் விழியடியிற் சலமே போகும்
திரளான நீர்வடிந்து அருவி காணும்
முட்டைபோல் வெள்விழி பொறிப்போல் வீசும்
முகமினுக்கும் பூப்போல படலந் தோன்றும்
கட்டமாம் நீரொளியின் காசந் தானும்
கண்ணிரண்டு மங்கிவிடும் காட்சி யாமே 852

(மருந்து)

துத்தம் துருசு, கம்பளி சுட்டசாம்பல், தலைமயிர் சுட்ட சாம்பல், இவை வகைக்கு 1 வராகன் எடை, கல்வத்தில் இட்டு, கழற்கொடி சாற்றால் 4 சாமம் அரைத்து வற்றின பின்பு ஆவின் வெண்ணெய்யைக் கூட்டிக் களிம்பு போலரைத்து கண்ணிற் தீட்டி வரத்தீரும். 853

(வேறு)

கருவளையல், காந்தம், செவியம், வெள்ளைக் காக்கணான் வேர், துத்தம், துருசு, வெண்கலம் இவை ஒரு நிறையாய் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துக் கயிறு செய்து, ஆவின் நெய்யாலும், முலைப்பாலாலும் அரைத்து இடத்தீரும். 854

(வேறு)

கற்றாழஞ்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, நல்லெண்ணெய் இவை வகைக்குப் 1 படி காய்ச்சி, பச்சைக்கற்பூரம். புனுகு சட்டம், சந்தனம், சாதிக்காய் இவை வகைக்கு 1 கழஞ்சு வீதம் பொடித்துப் போட்டு வடித்து முழுகி வரத்தீரும். 855

(வேறு)

கருவிழி கீழ தாகிக் காந்தளம் பூப்போ லொத்து
வெருபொரி மின்னும் போல வெகுண்டிடுஞ் சலமும் கொள்ள
குருகின பழமுந் தேனும் குங்குமம் பூரந் துத்தம்
நிரவிரு முலைப் பாலுருண்டை நீரொளி காசம் போமே 856

(வேறு)

ஆவின் வெண்ணெய் அதிமதுரம் அத்தி திப்பிலி கச்சோலம் ·
கூவும் வெள்ளி லோத்திரம் கூறுஞ் சுக்குத் துருசு கடுகு
ஆவின் பாலிற் சுவறவரைத்து ஆனி பதத்தில் வடித்திறக்கி
நோவுந் தலையிற் தப்பிவிடிர் நீரொளி காசம் போய்விடுமே 857

(வேறு)

குங்குமப் பூவும் பச்சைக் கற்பூரமும் சமமாய் எலுமிச்சம் பழச் சாற்றிலும், தேனிலும் குழம்பு போல வரைத்துக் கொண்டு கண்ணிற் போட்டும், ஆனைத் திப்பிலி, அதிமதுரம், தக்கோலம், வெள்ளி லோத்திரம், சுக்கு, திரிபலை, வகைக்கு 1 பலம் வீதம், ஆவின் பாலிலரைத்து, ஒரு படி நெய்யிற் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவரத்தீரும். 858

## நீர்ப்பாய்ச்சல்–குணம்

சருவிநீ ரருகிக் காட்டித் தசைவளருந் தினவுண் டாகும்
கருவிழி வுறுத்தி நொந்து கனத்துட னெரிப்புண் டாகும்
மருவியே கண்கள் நொந்து மாறாதே நீரும் பாயும்
அரிவையே யிவைகள் தானும் அருவிநீர்ப் பாய்ச்ச லாமே 859

சொன்னோமே நீர்ப்பாய்ச்சலின் குணத்தைக் கேளு
சூட்சமுடன் கண்சிவந்து சுடுகை யாகும்
மன்னேகே ளிருவிழியு மறைத்துக் காட்டும்
மாசற்ற விழிதனிலே யருவி பாயும்
கன்னலெனும் தினவெடுத்துக் கதிரோன் முன்னே
கண்கூச்ச லாகியேதான் கடுப்புக் காணும்
பன்னவே விழிநொந்து பரித விக்கும்
பண்பான யூகிமுனி பாலித் தாரே 860

சலமிரு மருகிக் காட்டும் தான்மிகத் தினவு முண்டாம்
கருவிழி குமுறி நொந்து கனத்துட னெரிப்புண் டாகும்
அருவியே கண்சி வந்து அனலெழுங் கொதிப்பு முண்டாம்
மருவிய குழலி னாளே மருந்துதான் உரைக்கக் கேளே 861

துருசியும் குதிரைப் பல்லும் துத்தம்வரிக் கற்றா ழைவேர்
மருவியே யரைக்கும் போது வார்ப்பது முலைப்பால் கூட
ஒருகலத் தோடு தேய்த்து உறங்கிடும் கண்ணி லிட்டால்
சருமிகு குத்து மாறும் தணிந்தது போகுந் தானே 862

(வேறு)

குதிரைப் பல்லுந் துருசு துத்தம் குமரி வேர்சங் குங்கூட்டி
அதிரப் பொடிக ளிவைசெய்து ஆன தேன்முலைப் பால்வார்த்து
மதுரக் கலத்தில் புறந்தேய்த்து மருவும் பரணி தனிலடைத்து
விதருங் கண்ணீர்ப் பாய்ச்சலிடீர் வேறு மருந்து வேண்டாமே. 863

தைலம்

கையாந் தகரை கருவாழை காட்டி விருவேலி கம்பந்திராய்
மையாரத் தாளி வேரும் மணித்தக் காளி நந்தியுடன்
துய்யார தண்ணீர் வார்த்து துலங்கியே யிடித்து வேதுப்
பையாகப் பதத்தில் வடித்து பசுவின் நெய்நாழி யூட்டே 864

நெய்யது நாழிக் குள்ளே நல்லெண்ணெய் படிதான் விட்டு
துய்ய கோட்ட மதிமதுரம் துலங்கு மஞ்சட்டி சந்தனமும்
மையாரக் குரும்பை சதகுப்பை மாஞ்சி லரதை வசுவாசி
துய்ய யேலம் கச்சோலம் சொன்னே னிந்து துத்தம்
பைய்யா விடையம் வோரொன்று கழஞ்சு டனேப தத்தில்
மெய்யா மெழுகு பதத்திலிட விரைந்து போகும் நீர்ப்பாய்ச்சல்

(வேறு)

குதிரைப்பல், துருசு, துத்தம், குமரிவேர், சங்கு இவைகளை ஒரு நிரையாய்த்தேனும் முலைப்பாலும் விட்டுக் குழம்பு போலரைத்துக் கொண்டு கண்ணில் தீட்டியும், கையாந்தகரை, கருவாழைக் கிழங்கு, கம்பந்திராய், உத்தமதாளி, தைவேளை, மணித்தக்காளி, நந்தியாவட்டம், இவைகளின் சாறு வகைக்கு படி 4, நல்லெண்ணெய் படி 1, ஆவின் நெய் படி 5, இவைகளை ஒன்றாய்க் கலந்து அதில் வெட்டிவேர், விலாமிச்சம்வேர், வகைக்கு 1 பலம், அதிமதுரம், கோட்டம், சந்தனம், மஞ்சட்டி, குரும்பை, சதகுப்பை, கண்டில், சடாமாஞ்சில். கச்சோலம், வசுவாசி, இந்துப்பு, தான்றிக்காய்' வகைக்கு 2 கழஞ்சு வீதம் அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகியும் வரத்தீரும்.

(மருந்து)

சங்கு, திரிகடுகு, அரிதாரம், அதிமதுரம், புங்கம் வித்து, பீதரோகணி, துத்தம், மனோசிலை, இவைகளை ஒரு நிறையாக நந்தியாவட்டப் பூச்சாற்றிலைரைத்துக் கயிறு செய்து தேனிலுரைத்து விழியில் போட்டு, சிற்றாமுட்டி, முசுமுசுக்கை, குரும்பை, சீந்திற் கொடி, உத்தமதாளி, தாமரை வளையம் வகைக்கு 10 பலம் இடித்து, 10 படி நீரிற் போட்டு 2 படியாக வற்ற வைத்திறுத்து அதில் அதிமதுரம், சண்பகப்பூ, செவியம், கோட்டம் மஞ்சட்டி, ஏலம், இலவங்கம் வகைக்கு 1 வராகன் எடை ஆவின் பாலிலரைத்துப் போட்டு 1 படி நல்லெண்ணெய் விட்டுப் பதமாய்க் காய்ச்சி வடித்து முழுகி வரத் தீரும். 867

(வேறு)

முலைப்பால், நல்லெண்ணெய் வகைக்கு 1 பலம் வீதம் கலந்ததிற் கோட்டம், சண்பகப்பூ, ஏலம், அதிமதுரம், முத்தக் காசு, விலாமிச்சுவேர், வெட்டிவேர், சந்தனம் வகைக்கு ¼ பலம் வீதம் கலந்தரைத்துப் போட்டுக் காய்ச்சி முழுகி வரத்தீரும். 868

(வேறு)

மாதுளம் பூவும் பச்சைக் கற்பூரமும் ஒரு நிறையாய்க் கல்வத்திட்டு முலைப்பால் விட்டுச் சிதைத்துக் சீலையில் முடிந்து நேத்திரத்தில் பிழியவும். 869

## நீர்வடிதல் – குணம்

வெட்டான வெள்விழியில் சிவப்பு பாயும்
வெடியுடனே கொப்புளங்க ளதிகங் காணும்
கட்டான சோரியைத்தான் கட்டிக் கொள்ளும்
கருவிழியில் படலமது தோன்றும் பாரு
சட்டமுடன் வழுவழுத்து சதையே மீறி
சங்கையாய் கண்கூச்ச முச்ச முண்டாம்
திட்டமுட னீர்வடிதல் குணத்தின் தன்மை
திறமுடனே பாலித்தார் யூகி யாமே 870

(மருந்து)

வெண்காரம் 1வராகன் எடை, துத்தம் 2 வராகன் எடை, முட்டைத்தோல் 4 வராகன் எடை, பலகறை 8, இவைகளை எலுமிச்சம் பழச்சாற்றிலும், சிறுகீரைச் சாற்றிலும் மைபோல

ரைத்துருட்டிக் காயவைத்து, மேற்படி வேரை யரைத்துக் கவசஞ் செய்து சட்டியிலதை தெளித்துப் பொடித்துக் கொண்டு, எள் பிரமாணம் கண்ணிற் போட ஆணிப்பூ, நீர்க்குமிழ், குந்தம். சதை வளர்த்தி பற்பரோகம், அதிமாங்கிச வளர்த்தி, உறுத்தல், பில்லம், நீர்ப்பாய்ச்சல், சூடுவளர்த்தி, அமரம், தீரும், 871

(வேறு)

பொன்னாங்காணி, சிறுகீரை, விளா இவைகளின் வேர், திப்பிலி, துத்தம், துருசு. புளியம்பூ, இவை ஒரு நிறையாய் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துக் கயிறு செய்து மேற்படி சாற்றி லுரைத்துத் போடத்தீரும். 872

## நேத்திர சூலை—குணம்

நயனத்தில் வாயு நின்று நவில்புரு வத்திற் குத்தி
செயல்கெட விரண முண்டாய்த் திரண்டுநீர் மூக்கில் விழும்
இயல்பினை யறிந்து கொண்டு இவ்வலி ரோக மாற்ற
அயனுரை செய்த வுண்மை அறிந்துநீ மருந்து செய்யே 873

தீருமே வாத நோவு சிவப்புண்டாய்க் கனத்துக் கண்ணை
சேருமே பரிக்கு மாப்போல் தினவுடன் வலியு முண்டாம்
நீருமே நனைத்துப் போட்டால் நின்விரல் உலர்ந்து காணும்
சாருமே யிரவில் நோவு தானது மிகவுண் டாமே 874

நேத்திர வாயு நின்று நெருங்கிய யிடியுண் டாகி
மாத்திர கண்ணுஞ் சிவந்து வலித்திடுஞ் சிரசிற் குத்தும்
கேத்திர கேதஞ் சூகம் தம்பவம் கீச முற்றி
நீத்திலா காசம் போல நின்விழி குருட தாமே. 875

## நேத்திர நீரேற்றம் —குணம்

நாற்றமுட னிருகண்ணுஞ் சிவந்து மின்னும்
நடுக்கலுடன் உதடுகளும் நலிந்து மேதான்
சாற்றழலுங் கண்ணீரு மதிக மாகும்
சதாகாலம் நீர்தனிலே பீளை யோடி
வேத்துவிழி நூல்போலத் தாரை யாக
விடியுமட்டும் குத்தலுடன் தலைநோக் காடாம்
நேத்திரநீ ரேற்றமுடன் தசைவ ளர்ந்து
நெடுகியே குணாகுணத்தைக் காட்டும் பாரே. 876

(மருந்து)

சிற்றாமணக்கின் வேர்ப்பட்டை 1 பலம் இடித்து, 2 படி தண்ணீரிற் போட்டு வற்றவைத்திருத்து, குழம்பாய்க் காய்ச்சிக் கல்வத்திலிட்டு காயற் தூளும் சர்க்கரையும் சமமாய்ச் சேர்த்து, மை போலரைத்துப் பின்பு, தேன் விட்டுக் களிம்பு போலரைத்து விழியிற் போட்டாலும், கிருதத்தை எலுமிச்சம் பழச்சாற்றி லரைத்துக் கயிறு செய்து முலைப்பாலிலுரைத்து விழியிற் போட்டாலும் நீங்கும்.

(வேறு)

களிம்புள்ள வெண்கலத்தட்டில் முலைப்பாலாவது எருமைப் பாலாவது விட்டுச் செம்புக் குழவியாலரைத்துக் களிம்புண்டாக்கி, அந்தக்களிம்பைப் பருத்திப் பிஞ்சில் ஊட்டி, சுத்த நீரில் 3 வில்லை செய்து, ஒன்றின் மேல் ஒன்றை வைத்து, ஒரு சட்டியில் புளியம் பொறுக்குப் போட்டுத் தணலுண்டாக்கி, அதிலரை வீசம் படி எள்ளைப் பொடித்துப் போட்டுப் புகை பஞ்சி 7 படி வைத்து மூடிப் புகையடங்கின பின் காலை மாலை உதயத்தில் ஒவ்வொரு வில்லையாக நேத்திரத்தில் பிழிந்து வரத் தீரும்.

பக்கப் படுவன்—குணம்

விழியைக் கடுக்குஞ் சினத்திருக்கும்
மீறி நொந்து வெள்ளைதனில்
அழியும் புண்போற் குத்துண்டாம்
அந்தக் கணத்தில் முளைபோல
வெளியிற் தள்ளுஞ் சீழ்க்கொள்ளும்
வெடிக்கு நீராய்த் தான்வீழும்
பழியிற் படுவா யிவைபார்க்கில்
பக்கப் படுவ னெனலாமே 879

பஞ்சணிப் படலம்—குணம்

ஏர்க்கப் படரும் விழியடங்க
இயல்பாய் நோகும் வெளுப்பேறும்
நீர்க்கப் படவே புகைந்துவரும்
சிறுக நீரும் பீளையிடும்
ஊர்க்கப் படவே கடைக் கண்ணில்
உறுத்தி வலிக்கு மொருபுறத்தே
பார்க்குங் குணங்க ளிவைகண்டால்
பஞ்சணிப் படல மெனலாமே 880

## படலம் – குணம்

ஓதவே படலத்தின் குணத்தைக் கேளு
ஓங்குவிழி தானிரண்டு மூடிக் கொள்ளும்
நீதமுடன் மாசுபோல் நெருக்கிக் காட்டும்
நேரான பில்லமது படரும் பாரு
காதணியில் குத்தலுடன் கடுப்புக் காணும்
கடிதான ரோமமது சிலிர்த்துக் கொள்ளும்
பாதமுதல் சிரசுவரைக் காந்த லாகும்
பாடினார் யூகிமுனி பாலித் தாரே. 881

(மருந்து)

வெள்ளைச் சாரணை சடைக்கஞ்சா விதமுள்ளி தேனுஞ் சேர்த்து
தெள்ளிய பச்சைப் பூரம் திரிகடு கேலம் துத்தம்
கொள்ளவே சமன ரைத்துக் குலாவினி கண்ணிற் போட
வெள்ளையாம் படலந் தீரும் வெகுண்டுநீ பார்த்தி டாயே. 882

அஞ்ச னக்கல் முட்டையோடு அரிசி சங்கு திப்பிலி
விஞ்சு கின்ற தலையோடு வியன தான சந்தம்
தொஞ்சவே அரைத்து உருண்டை செய்துகண்ணி லேயிடில்
பஞ்சுபோல் பறந்து போகும் படல மான பாவமே. 883

வெய்ய யிரதம் ஒன்றாகும் வெள்ளைக் கிண்ணி யிரண்டுடனே
துய்ய வெண்காரம் மூன்றாகும் துலங்குஞ் சாரணை வேர்நாலும்
அய்ய துருசு ஐந்துடனே ஆன யெலுமிச்சம் சாற்றரைத்து
மையக் கண்ணி லிடுவீராய் படலந் தொண்ணூற் றாறுடன்போமே

## மாத்திரை

வேரும் வெள்ளைச் சாரணை மிகுந்த பீத ரோகணியும்
நேராய் சமனதாய் வாங்கி நீயரை மாதர் தன்பாலில்
பூராய் கயிறுதான் செய்து பூவையர் பாலி லுரைத்தெழுதில்
தீரும் பில்லம் பூப்படலஞ் சிதறிப் போகுங் கண்டீரே. 885

## நெய்

ஆவினெய் தேனு முட்டை அதில்விட்டுக் காய வைத்து
மேவிய தேசிச் சாறும் வியந்தயிந் துப்பு மொன்று
காவியின் விழியி னாளே கண்ணிலே ஒழுக்கி விட்டால்
பாவனை யாகச் செய்யப் படலங்கள் தீரு மன்றே. 886

(வேறு)

ஊசியினால் சதையைத் திரட்டி உரித்துப் போட்டு அதிமது ரத்தைத்தட்டி ஆவின் நெய்யிற் போட்டுச் சிவக்கக் காய்ச்சி விழியிற் கட்டி வந்தால் தீரும்

(வேறு)

மேற்படி மாசை ஊசியால் திரட்டியுரித்துப் போட்டு, வெட்பூலா வேரை முலைப்பாலில் விட்டு நேத்திரத்தில் பிழிய நீங்கும். 888

(வேறு)

மஞ்சள், சீமையிலை, சவுக்காரம், வெள்ளைச் சாரணைவேர் சமன் தண்ணீரில் அரைத்துக் கண்ணிலிடப் புரை மாறும்.

## படிகுந்தம்—குணம்

உள்ளமே நொந்து கண்ணில் உறுத்தியே வலிக்கு மாகில்
மெள்ளவே சந்திரன் தன்னை விழித்திடில் சிறுத்துக் காணும்
கள்ளமே யல்ல நோய்கள் கருவிழி கறுத்துக் காணில்
பள்ளமாம் பார்வை குன்றில் படிகுந்த மென்று சொல்லே. 890

## பருமுளை—குணம்

கடுத்து வலித்து நீர்ப்பாயும்
கண்கள் சிவக்கு மிமைவீங்கும்
இடுக்கும் விழிக்க வொட்டாது
இருண்டு வெளுத்து முளைகாணும்
நடுக்குந் தலையும் முகம்பிடரி
நரம்பை யிழுத்து மிகநோகும்
படுக்கு மிருக்கு மெழுந்திருக்கும்
பருமுளை யென்று பகர்வாரே. 891

## பருவணிகை—குணம்

பாடுகிறேன் பருவணிகைக் குணத்தைக் கேளு
பாங்காகக் கடைநேத்திரம் வலித்துக் காட்டும்
நீடுவிழி தசைவளர்ந்து மிகுந்து நோவாம்
நெடிதான கண்மீதில் வீக்கம் காணும்

ஓடுநீ ரதிகமுட னருவிப் பாயும்
ஓகோகோ யிப்பருவ நொந்து கொல்லுந்
தேடுகின்ற நூல்களெல்லாந் தெளிந்து மேதான்
திறமுடனே யிக்கோர்வை செப்பி னோமே. 892

(மருந்து)

விழியினிமையை உறுத்திப் பிடித்து ஊசியாற் குத்தியுரித்துப் போட்டு, ஆவின் பால், நெய், நல்லெண்ணெய், மூன்றையு மொன்றாய்க் கலக்கிக் கரண்டியிற் காய்ச்சி, அதில் எள்ளைப் பொடித்துச் சீலையில் முடிந்து தேய்த்து நெற்றி, புருவம், கன்னம், இவைகளில் ஒற்றடம் செய்து, பச்சைக் கற்பூரத்தை நெய்யிற் பொடித்துப் போட்டு, சற்று கொதிக்க வைத்து, அதில் சீலையை நனைத்து இமையின் பேரிற்போட்டு, பெருங்காயமும் சீரகமும் பொடித்துத் தணலிற் தூவிப் புகை காட்டி வரநீங்கும்.

பறவைப்பூ – குணம்

சினக்கும் வலிக்கு மெரிப்புண்டாம்
சிறுகப் படரும் வெளுத்திருக்கும்
கனக்குந் தலைநெற் றியிற்குத்தும்
கண்ணுஞ் சிவந்து நீர்வடியும்
இனக்கு முகமும் புகைந்திருக்கும்
எதிர்த்தார் பார்க்க வொட்டாது
தனக்குக் குணங்கள் பறவைப்பூ
தக்க குணங்க ளிவைதானே. 894

பிரிதல் நேத்திரம் – குணம்

சாற்றவே பிரிதலின்தன் குணத்தைக் கேளு
சாங்கமாய் விழியிரண்டு மிகவே ஊதி
மாற்றவே சிரசுமுதல் வீக்கம் கண்டு
மகத்தான துயரமுட னிசுவு மாகி
கூற்றனுக்கு யிடமாகி வலியும் கண்டு
கொடிதான சந்திநேத் திரமு மாகி
ஏற்றவே யிருவிழியு மங்கிக் காட்டும்
எழிலான நேத்திரத்தி னியல்பு தானே. 895

(மருந்து)

இந்துப்பு, கடுக்காய் விதையும் ஒரு நிறையாய் வெண்ணெய் யாலரைத்து, செம்புப் பாத்திரத்திலப்பி வைத்திருந்து களிம்பு

ஊறிப் பசுமையாகின்தின் பேரில் எடுத்துக் கொண்டு கண்ணிற் போடவும் அல்லது பூ நாகத்தைச் சீலையில் முடிந்து, உமிக் காந்தலிற் புதைத்தெடுத்து, அதற்கு நிகர் நாவற்கொழுந்து சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துலர்த்தி, வெண்கலம் கூட்டிக் களிம்பு போலரைத்துத் தீட்டிவர அழிகண், விரணச் சுக்கிரன் தீரும். 896

(வேறு)

சங்கு, புங்கவித்து, வெள்ளைக்காக்கணம், துத்தம், துருசு இவைகள் ஒரு நிறையாய்ப் பழச்சாற்றிலரைத்துக் கயிறாக்கி முலைப் பாலிலுரைத்து 1 நாளைக்கு 3 நேரம் போட்டுவரத் தீரும்.

## பிறவிக் குருடு – குணம்

மாதவின் கர்ப்பத்தில் வேகமான
மருந்துதான் கொண்ட தாலும்
போதான காலத்தில் [விடங்கள்தீண்டிப்
பொருந்தியே போகா தாலும்
வாதான வன்னந் தண்ணீர்
வளமுடன் கொள்ளா தாலும்
பேதான மைந்தன் கண்ணும்
பிறவியிற் குருட தாமே 898

## புகைச்சல் – குணம்

பகைக்கும் முகமும் பலவிதமாய்ப்
பார்வை பலவாய்த் தோற்றுவிக்கும்
திகைக்கு மிறுக்குங் கூச்சமுண்டாம்
சிறுக யிமையுந் தினவெடுக்கும்
தகைக்குங் கருமந் தனைசெய்தாற்
சற்றே வெளியா யிருண்டுவிடும்
புகைச்சற் குணங்க ளிவையென்று
புகன்றார் பெரியோர் புவிதனிலே. 899

காட்டவே புகைச்சலின்தன் குணத்தைக் கேளு
கடினமா யுருவமது பேதா பேதம்
நீட்டவே மங்கலுட னிருண்டு காணும்
நேர்மையாய் மயக்கமது மெத்த வாகும்

பூட்டவே ரோமமது சிலிர்த்துக் கொள்ளும்
பொல்லாத தணலுடனே பொசிப்புங் கொள்ளா
தீட்டவே யூகிமுனி சிகிச்சா சாரம்
செப்பினார் லோகத்து மாந்தர்க் காமே 900

(மருந்து)

ஒரெலுமிச்சம் பழத்தைக் கயிற்றிற் கோர்த்து, அதன் மேல் நூற்றெட்டுக் கிராம்பை வூன்றி விளாங்காய்ப் பிரமாணம் பசுவின் வெண்ணெய்க்குட் பொதிந்து மூடி, அதைப் புதுச் சட்டியில் அடியிற் படாமல் தொங்கவிட்டு, அன்றாடம் வெவ்வேறே சுத்த நீர் வார்த்து வந்து 40ம் நாள் எடுத்து, இலவங்கத்தையும், பழத்தையும் நீக்கி, வெண்ணெய்யைச் செப்புச் சிமிழிலடைத்துக் கொண்டு. சத்திச் சாரணைச் சாற்றில் கொஞ்ச வெண்ணெய்யை மத்தித்து 40 நாட்கள் வரை போட்டு வர வெள்ளெழுத்து மற்ற கண் ரோகங்களுந் தீரும். 901

(வேறு)

தும்பைப் பூவும் சீரகமும் அரைத்து முலைப்பால் விட்டு கண்ணிற் பிழியப் புகைச்சல் மாறும். 902

(வேறு)

எலுமிச்சம் பழச்சாற்றில் கிராம்பை உரைத்து மூன்று நாள் கண்ணிவிடத் தீரும். 903

(வேறு)

நல்லெண்ணெய் 2 படி, பசுவின்பால், கையாந்தகரைச்சாறு, கற்றாழை வேர்ச் சாறு, நெல்லிக்காய்ச் சாறு, முசுமுசுக்கைச் சாறு இவை வகைக்கு 1 படி, அதிமதுரம் 2 பசும் பாலில் அரைத்து எல்லாவற்றையும் சேர்த்துக் காய்ச்சி வடித்து, 8 நாளைக்கு இரண்டு முறை தலை முழுகவும். 904

(வேறு)

ஏலரிசி, மிளகு இவை வகைக்கு 1 பலம், அவற்றுள் மிளகை பசுவின் பாலில் ஒரு நாள் ஊற வைத்து எடுத்து ஏலரிசியும், மிளகும் சேர்த்து உடைத்து, நல்லெண்ணெய்யிலிட்டு, சூரிய புடம் வைத்துத் தலை முழுகவும். 905

(வேறு)

தோற்றாம் பழத்தைப் பிசைந்து அடைத்தட்டி நிழலிலுலர்த்தி நெய்யிலாவது, தேனிலாவது, உரைத்துக் கண்ணிவிடக் கண்புகைச்சல் தீரும். 906

(மருந்து)

கடுக்காய் பருப்பு 12. திப்பிலி 5, மிளகு 3, நெல்லிப் பழச்சாறு வார்த்தரைத்து, உருண்டைப் பண்ணி, நிழலிலுலர்த்தி, நெல்லிப் பழச்சாற்றில் உரைத்திடவும். கிடைக்காத போது நெல்லிப் பட்டையைத் தட்டி ஊறப் போட்டு அந்தத் தண்ணீரில் உரைத்திடவும், புகைச்சலும் உறுத்தலும் நிற்கும்.

(வேறு)

முயல் புழுக்கையைப் பசுவின் நெய்யிற் கலந்து, கலத்திலுரைத்துக் கண்ணிலிடப் புகைச்சல் மாறும் 908

(வேறு)

நல்லெண்ணெய் $\frac{1}{4}$ படி, முலைப்பால் $\frac{1}{4}$ படி, நாகம், அதிமதுரம் $\frac{1}{4}$ வராகன், நற்சீரகம் 1 வராகன் எடை, இவையெல்லாம் கூட்டி, மெழுகு பதமா யெரித்துத் தலையிற் தேய்த்து, உசிலம் பொடியாகிலும், சிறு பயறாகிலும் தேய்த்து வெந்நீர் வைத்து முழுகவும். 3 நாட்களுக் கொருமுறை தலை முழுகவும். கண்புகைச்சலும் காசமும் தீரும். 909

(வேறு)

நல்லெண்ணெய் $\frac{1}{4}$ படி, மிளகு 1 பலம், அதிமதுரம் கூட்டி எரித்து முழுகவும். புகைச்சல் போன்றவை மாறும். 910

## புத்தியழித்தல்– குணம்

உருவம் பலவாம் தோற்றாமுகம்
உதய காலம் புகைந்திருக்கும்
அருவும் நீரும் பீளைகட்டும்
அசைந்து அறிவு பேதிக்கும்
வெருவு மனத்தில் மிகவுண்டாம்
வேறுங் கருமந் தனைச்செய்யில்
புருவந் தனையே மேலிழுக்கும்
புத்தி யழித்த லெனலாமே 911

## பூப்படல காசம்—குணம்

புகலுவேன் பூப்படல காச நேர்மை
பொல்லாத காசத்தின் தினவு மிச்சம்
நிகலுவேன் புருவமது நிகழ்த்திக் காட்டும்
நேரான விழியதுவும் கடுப்போ மொத்த

பசலுறக்கம் வராது பின்னு மின்னும்
மெய்தளர்ந்து வாடுமல்லோ நீரே பாயும்
தகலும்விழி படலமது பரவும் பாரு
தப்பாது யூகிமுனி சாற்றி னாரே. 912

(மருந்து)

நல்லெண்ணெய் $\frac{1}{4}$ படி, சீதா செங்கழுநீர்ச்சாறு $\frac{1}{4}$ படி, இவைகளைக் கலந்து அதில் பூண்டு $\frac{1}{8}$ பலம், மிளகு 1 பலம், வெந்தயம் 1 பலம், இடித்துப் போட்டுப் பதமாய்க் காய்ச்சி வடிகட்டி, தலை முழுகி வரத்தீரும். 913

## பூப் படலம்—குணம்

பொற்கொடியே பூப்படலக் குணத்தைக் கேளு
பொல்லாத ரோகமது பூப்போல் தோற்றம்
நற்கமலத் தளிர்போன்ற படல மாகும்
நாடாது யெந்நேரந் தினவுண் டாகும்
கற்கரடு போலாகிக் கண்ணிற் பூவாம்
கசடுடனே கலங்கியல்லோ விழிநீர் சிந்தும்
சொற்பெரிய ரோகமது வதீத மெத்த
சூட்டினார் யூகிமுனி துறையாய்ப் பாரே. 914

(மருந்து)

துத்தம், துருசு, சிவந்த செங்கற் பொடி இவைகள் சமனெடையாய் மருட்கிழங்கை வாட்டி இடித்த சாற்றில் மை போலரைத்து உலர்த்திப் பின்பு, ஆவின் வெண்ணெய் கூட்டி மைப்போலாட்டி சூட்டின் மேற் போட நீங்கும் 915

(வேறு)

தோற்றான் விதை, கடுக்காய்த் தோல், புளிவிதைத் தோல் இவைகள் மை போற் பொடித்து துணியிற் கட்டி முலைப்பாலில் கட்டி பின் கண்ணிலிட நீங்கும்.

## பூப் படலம் அதிமாங்கிசம்—குணம்

நீங்கவே வதிமாங்கிச குணத்தைக் கேளும்
நேரான விழியுமே மலர்ந்து காட்டும்
தீங்குடனே தசைமூடி விழிக்க வொட்டா
திசைமாறிக் கண்ணிரண்டு மதிர்ச்சி காணும்
பாங்குடனே செவ்வலரிப் பூப்போல் மாறல்
பலகாலும் கண்சிவந்து பார மேகி
ஏங்கியேநீ ரேற்ற மதிக மாகும்
இடறுகள்தான் செய்யுமென்றே யியம்பினோமே 917

(மருந்து)

வேப்பங் கொழுந்து, கற்றாழைமடல், கடுக்காய், தேற்றான் விதை இவைகள் ஒரு நிறையாய் முலைப்பாலிலாட்டிக் கொதிக்க வைத்துப் புறவளையமிட்டு பொன்னாங்காணிவேர், அதிமதுரம் இவைகளை முலைப்பால் விட்டு நசுக்கி, வேட்டியில் கட்டி முலைப் பாலில் ஊற வைத்து நேத்திரத்தில் நாளொன்றுக்கு 4, 5 முறை விட்டுக் கரண்டியில் நெய்யை வெதுப்பி அதில் மேற்படி பொட்டணத்தை வெதுப்பி ஒற்றடம்போட்டு வர நீங்கும். 918

பூ வெள்ளெழுத்து-குணம்

புகலவே வெள்ளெழுத்தின் குணத்தைக் கேளும்
பொல்லாத எரிச்சலுடன் பொருமிக் குன்றும்
நிகலவே பூப்போலப் பொலிவு தோன்றும்
நெடிதான ராப்பகலு மொன்றுந் தோன்றா
அகலவே விழிதனிலே பீளை சாடும்
அவிச்சலுடன் தான்கரிப்பு வதிக மாகும்
சகலவிழி யிமைநடுவில் மதிபோல் தோன்றும்
சாற்றினார் யூகியென்ற முனிவர் தாமே. 919

(மருந்து)

பச்சைச் சூடத்தைப் பொன்னாங்காணிச் சாற்றிலரைத்து நாசியில் நசியஞ் செய்து ஆவாரங் கொழுந்தைச் சட்டியில் வறுத்து, ஆவின்பால் தெளித்து விழியில் ஆவி பிடித்து, அகிற் கட்டை, ஆயிறப்பட்டை, கருங்குங்கிலியம், சதகுப்பை, ஓமம், சுக்கு, மிளகு, வசம்பு, மஞ்சள், இவை சமனாய்ப் பொடித்துலர்த்தி உருட்டி, நெருப்பிற் கொளுத்தி, நாசியிற் புகை பிடிக்கச் சகல நீரேற்றமும் நீங்கும். 920

பொங்கிய விதனம்–குணம்

மங்கியே கண்ணும் வீங்கும் மாறாத வீக்கம் பீளை
அங்கிபோ லெரிந்து நொந்து அதிகமாய் நீரும் பாயும்
தங்கியே கங்குல் நேரம் தன்வச மறவே நோகும்
பொங்கிய விதன மென்று புவிதனி லுரைசெய் தாரே 921

மணி வளர்த்தி—குணம்

மட்டான மணிவளர்த்திக் குணத்தைக் கேளு
மார்க்கமுடன் கட்டிபோல் திரண்டு மேதான்
சட்டமுட னிருவிழியில் மணிபோ லாகிச்
சதிராகப் புடைத்துமே விம்மல் காணும்

கட்டமுட னென்னேர மருவ லாகும்
கண்ணோரம் வீங்கியே யோடுந் தண்ணீர்
திட்டமுடன் யூகிசொன்ன வாக்கு பொய்யா
திறமாகும் பூதலத்தி லுண்மை யாமே 922

கூரான கருவிழியில் ரத்தம் பொங்கிக்
கொடிதான குத்துலுட னெரிச்சல் காணும்
சேரான சீழுடனே யிமைகள் நொந்து
சீறியே கண்ணதனில் தோடந் தங்கித்
தாரான சலநீர்தா னருவி போலத்
தயங்கியே யிருவிழியும் பிதுங்க லாகும்
சீரான நீர்க்கம்மல் ரத்தம் போலாம்
சிறப்பான மணிவளர்த்தி வெடுத்த வாறே 923

(மருந்து)

கொடுப்பை, ஓரிலைத் தாமரை, வெள்ளைக் காக்கணாம், சிறுகீரை, இவைகளின் வேர்கள் ஒரு நிறையாக எலுமிச்சம் பழச் சாற்றில் மயனமாயரைத்து உலர்த்திப்பின் வெண்ணெய் கூட்டிக் களிம்பு போல அரைத்துத் தீட்டத்தீரும். 924

(வேறு)

சங்கு. புளி, வெள்ளைச் சாரணை, பொன்னாங்காணி, சிறுகீரை, கரிப்பான் இவைகளின் இலைச் சாற்றை ஒரு நிறையாகக் கலந்து, அதில் துணியை 6, 7 விசை நனைத்துலர்த்தி, நண்டு கொழுப்பிற் துவைத்துத் தீயிற் கொளுத்திச் சாம்பலாக்கி, அதில் வெண்ணெய்யைக் கூட்டிக் களிம்பு போலரைத்துத் தடவி வர நீங்கும். 925

(வேறு)

விழியின் இமையைப் பிதுக்கிக் கொண்டு அதில் சீரகப் பொடியைத் தூவிப் பேய்பீர்க் கெலையாற் தேய்த்து, இரத்தம் போக்கி, புளியிலையை இடித்துச் சாறு பிழிந்து, குழம்பாய்க் காய்ச்சி 3 நாட்கள் புறவளையமிட்டு துத்தம், துருசு, இந்துப்பு இவைகளை ஒரு நிறையாக உப்பிலி சாற்றில் மை போலரைத்துலர்த்தி, நெய்யும் தேனுமிட்டு, களிம்பு போலரைத்துப் போட்டு வரத் தீரும் 926

(வேறு)

மிளகு, செம்புபொடி, ஓரிலைத்தாமரைவேர், தலையோடு, துத்தம், பளிங்குகல் வகைக்கு 5 வராகனெடை, வறுத்த துருசு 2 வராகனெடை, இவைகளை எலுமிச்சம் பழச்சாற்றில் மூன்று நாள் அரைத்துச் செப்புச் சிமிழில் அடைத்து மருந்து மறையும்படி மேற்படிச் சாற்றைவிட்டு மூடிவைத்திருந்து உலர்ந்த பின்பெடுத்து, மேற்படி சாற்றாலரைத்துக் கயிறு செய்து முலைப்பாலிலரைத்துக் கண்ணில் தீட்டி வந்தாலும் தீரும். 927

(வேறு)

சூதம் 1 வராகனெடை, காரீயம் 2 வராகனெடை, துத்தம் 4 வராகனெடை, சங்கு 8வராகனெடை, தாமிரம் 16 வராகனெடை இவைகளை பழச்சாற்றிலரைத்துக் கயிறு செய்து ஆவின் நெய்யில் உரைத்துக் கண்ணிற் போட்டு வந்தாலும் தீரும். 928

(வேறு)

ஒரு பலம் சிற்றாமணக்கின் வேர்ப்பட்டையை இடித்து, இரண்டுபடி தண்ணீர் விட்டு வற்றவைத்திருந்து வடித்துக் குழம்பாய்க்காய்ச்சிக் கல்வத்திட்டுக் கடுக்காய்த் தூளும், சர்க்கரையும் சமமாய்ச் சேர்த்து மைபோல அரைத்துப்பின் தேன்விட்டுக் களிம்பு போலரைத்துக் கொண்டு கண்ணிற் போட்டு வந்தாலும் தீரும். 929

(வேறு)

துத்தத்தை எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து கயிறு செய்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணில் போட்டு வந்தாலும் தீரும்.

மேற்படி பிரயோகம் செய்யும்போது காலையில் முலைப்பாலில் புளியைக் கரைத்துக் கொதிக்க வைத்துத் துணியிற்கட்டி ஒற்றடம் செய்தும், கண்ணிற் புறவளையம் இட்டு, மாலையிற் கடுக்காய்த் தூளும், இந்துப்பும் சர்க்கரையும் வெதுப்பித் துணியில் முடிந்து ஒற்றடம் செய்து வரத்தீரும்.

## மணிநீல காசம்—குணம்

கூசிடுங் குணமும் நீரும் கூர்விழி தன்னிற் குத்தும்
வீசிடும் புகைந்து காட்டும் விம்மியே வலிக்கு மாகில்
பேசிடும் மணியி னுள்ளே புள்ளிபோற் கறுத்துக் காணும்
மாசிடுங் குணங்கள் கண்டால் மணிநீல காச மாமே. 931

## மதன மந்தாரம்—குணம்

கூறிடும் விழியிற் குத்தும் குவளையிற் பீளை கட்டும்
சீறிடும் புகைந்து காட்டிச் சிறிதுநாள் வெளிய தாகும்
தேறிடுந் தினவுண் டாகும் சிதறியே சிவப்புக் காணும்
மாறிடும் பச்சை போல மதனமந் தார மாமே. 932

இருண்டு கறுத்துப் புகைசூழ்ந்து
இரவி லதிக விதனமுண்டாம்
அருண்டு நடையுந் தலைவலிக்கும்
அமர்ந்து சிறுநாள் வந்தெடுக்கும்
உருண்டு கண்ணும் பீளையுடன்
உதிரம் போலச் சிவந்திருக்கும்
மருண்டு தினந்தா னதிகமுமாம்
மதனமந் தாரக் குணமிதுவே. 933

## மதி மந்தம்—குணம்

மறைப்பான மதிமந்த மறையக் கேளு
மன்னவனே மயக்கமுட னிருமல் காணும்
திறைப்பான கண்சிவப்பு பீளை சாடும்
தெளிவான விழியிரண்டு முறுத்திக் காணும்
கறைப்பான நீர்வடியும் கண்ணில் தானும்
கடினமாம் வலியுடனே நமைச்சல் தோன்றும்
குறைப்பான சுற்றோரம் தடித்துப் புண்ணாம்
கூறினார் சிகிச்சைமுனி கூறி னாரே. 934

### (மருந்து)

வெண்ணெய் 1 பலம், பீதரோகணி ¼ பலம், இவைகள் எலுமிச்சம் பழச்சாற்றால் ஒரு நாள் அரைத்துச் செப்புச் சிமிழி லடைத்துக் கொண்டு விழியில் போட்டுவரத் தீரும்.

மேற்படி வெண்ணெய் 1 பலம், மிளகு ½ வராகன் எடை இவைகள் கல்வத்திலிட்டு மைபோல அரைத்துக் கொண்டு, தீட்டிவரத் தீரும்.

### (வேறு)

கடல் நுரையும், கற்கண்டும் ஒரு நிரையாய்த் தேனிலரைத்துக் கண்ணிலிடத் தீரும். 936

(வேறு)

இதில் மாறாவிடில் இந்துப்பு, மரமஞ்சள், மனோசிலை, திரிகடுகு, இவைகளைச் சமமாய்ப் பசுவின் பாலிலரைத்துக் கயிறு செய்து மேற்படி நீரிலுரைத்துக் கண்ணிலெழுதி வரத் தீரும். 937

(வேறு)

இதிலும் நீங்காவிட்டால், இந்துப்பு, சதகுப்பை, சங்கு, மனோசிலை, கடல்நுரை, மிளகு, செங்கற்பொடி, ஓரளவா, எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துக் கயிறு செய்து ஆவின் நெய்யி லுரைத்துப் போட்டு வரத்தீரும்.

(வேறு)

இதிலும் நீங்காவிட்டால் நெற்றியிற் படர்ந்திருக்கும் நரம்பி லொன்றை ஊசியினாற் குத்தி, இந்துப்பு, திப்பிலி, பீதரோகணி இவைகளை ஒரு நிரையாய் நந்தியாவட்டப்பூச் சாற்றிலரைத்துக் கயிறு செய்துக் கொண்டு மேற்படி சாற்றிலரைத்துத் தலையிற் தேய்த்து அன்றாடம் ஸ்நானம் செய்து வந்தாற்பகலில் அருந்ததி தோன்றும்.

## மயிர்க்குத்து—குணம்

கனத்திமை தடித்துக் கண்ணும்
 கவிழ்ந்திடும் பார்வை யாகும்
சினத்துடன் மயிருங் குத்தித்
 தினவுநீர் பீளை சேரும்
இனத்துடன் பூவுங் காணும்
 இருண்டது நடையு மய்யம்
உனத்திடு மாதந் தோறும்
 முடமயி ரென்ன லாமே. 940

## மலங்குழி—குணம்

சாற்றுகிறேன் மலங்குழியின் குணத்தைக் கேளீர்
 சதாகாலம் நீரருவி யோடை போல
போற்றவே ராக்காலம் பருவந் தன்னில்
 பொல்லாத நீரதுதான் சேம்பிக் கொள்ளும்
கீற்றலுடன் பகலுறக்க மதிக மாகும்
 கிளையான ரோகமது கூறப் போகா
மாற்றலுட னமனாரின் சாட்சி யாக
 மாறாது யிந்தநோய் மாளு வாரே.

(மருந்து)

வேப்பிலையை மைபோலரைத்துக் கோழிப்பித்திற் கவசஞ் செய்து உமிக்காந்தலிற் சுட்டுக் கவசம் நீக்கி உள்ளுக்குக் கொடுத்தாலும், அல்லது மேற்படி பித்தை முன்போல வெதுப்பிப் பொடித்து 3 நாட்கள் விழியிற் தூவினாலும், மின்னிட்டான் புழுவையும் வெற்றிலையுங் கசக்கி விழியிற் பிழிந்தாலும், மருதம் பட்டை, நற்சீரகம், ஈருள்ளி, இவைகள் சிதைத்துப் பிழிந்தாலும், இலுப்பை நெய்யாவது, மகிழன் வித்தையாவது, காட்டமணக்கின் முத்தையாவது, அழிஞ்சில் விதையாவது முலைப்பாலில் உரைத்துப் போட நீங்கும். 942

(வேறு)

சமுத்திராப் பழத்தைச் சுத்தி செய்து கல்வத்திலிட்டு, ஆவின் வெண்ணெய்யைக் கூட்டிக் களிம்பு போலரைத்துக் கண்ணிற் தீட்டி, இதனடியிற் கண்டிருக்கும் பக்குவத்தைச் செய்து வரத் தீரும்

சந்தனம், குமரிமணி, அதிமதுரம் வகைக்கு 1பலம். இவைகளைக் கால்படி ஆவின் பாலிலரைத்துக் கலக்கிக் காய்ச்சித் தலையிற் தளமிட்டு மாலையில் ஸ்நானம் செய்து வரத் தீரும். 943

மாலைகாசம்– குணம்

மருவியே கண்கள் நொந்து வற்றியே யெரிப்புண் டாகிக்
கருவிழி தன்னில் சற்றே கலங்கியே ரூபம் வேறாய்
அருவியே யுறுத்தி நொந்து அதிகமாய்ப் புகைச்சல் நீரும்
உருவியே சாயுங் காலம் உதிக்குமே மாலை காசம் 944

மதிமாலைக் காசத்தின் குணத்தைக் கேளு
மயக்கமுடன் கண்ணிறுகி மாலை நேரம்
சதிருடனே திமிரவலியு மதிக மாகும்
சண்டாளக் கோபமுட னழலை காட்டும்
கதிரொளிபின் சூரியனைக் கண்ணிற் கண்டால்
கலங்கிவிழி யிரண்டாகத் தோற்றும் பாரு
விதிவசத்தில் வந்ததொரு காச மல்லால்
வினைதீர மைதனைனே தீட்டி டாயே 945

## முளையாணி – குணம்

மூடுபிறை முளையாணிக் குணத்தைக் கேளு
 முழிகளின் றனிமையோர மருப்புக் காணும்
நீடுவிழி தானிரண்டும் அலர்ந்து மேதான்
 நீர்சுண்டி முளையாணிப் பருவ மாகும்
கோடுமுனை லூகியது கூர்மை போலக்
 கொடிதான வாணியது சல்லி வேறாய்க்
காடுபுகல் கானலது நீரைப் போலக்
 காட்டுமே யெந்நாளுங் கண்ணிற் றானே 946

(மருந்து)

அரப்பொடியைச் சங்கிலைச் சாற்றிலும், குமரிச்சாற்றிலும், சங்கம்பழச்சாற்றிலும் மயனமாய் அரைத்துலர்த்தி நல்லெண்ணெய் விட்டுக் களிம்பு போலரைத்துக் கொண்டு போட்டுவரத் தீரும் 947

(வேறு)

முயலின் புழுக்கை சுட்ட சாம்பலை ஆவினெய் விட்டு மைப் போலரைத்துத் தடவி வரத்திரும். 948

## மெளிரு - குணம்

ஊகியாய் கருவிழியில் பார்வை கெட்டு
 உறுத்துமே ரணம்போலப் புடவைக் கப்பும்
தேகியே குத்தலுடன் சிலேத்மந் தன்னால்
 தினவெடுத்து சீதளமு மதிக மாகி
மேகியே கடுகையுடன் விழியும் வீங்கி
 மிக்கான துயரமது காணும் பாரு
தாகியென்ற மெளிருவின்தன் குணத்தைத் தானும்
 தப்பாது யூகிமுனி சாற்றி னாரே 949

(மருந்து)

ஓரிலைத் தாமரை வேர், பொன்னாங்காணி வேர், துத்தம், துருசு, பவளம், முத்து. தலையோடு இவைகளைச் சமமாய் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து வில்லை தட்டிக் காய வைத்து' ஓட்டில் வைத்து மூடிச் சீலை மண் செய்து, புளியம் பொறுக்கிற் புடம் போட்டெடுத்துப் பொடித்து, எள் பிரமாணம் தூவிவர, நீங்கும்.

(வேறு)

துருசு, சங்குப் பொடி, தலையோடு, பூலாவேர், ஓரிலைத் தாமரை வேர் இவைகள் வகைக்கு 1வராகன் எடை எலுமிச்சம் பழச்சாற்றில் 3 நாட்களரைத்து வில்லை தட்டி காய வைத்து ஓட்டிலிட்டுச் சீலை செய்து புடமிட்டு அதை இரு கூறு செய்து, ஒரு கூறுக்கு நாலிலொன்று பீதரோகணியும் 1 பண எடை பச்சைக் கற்பூரமுங் கூட்டிப் பொடித்து எள் பிரமாணம் கண்ணிற் தூவிவரப் பற்பரோகம் நீர்ப்பாய்ச்சல் தீரும் 951

## வருஞ்சல ரோகம்–குணம்

பெருஞ்சலம் விழுந்து கண்ணும் பேதமாய்ச் சிறுகிக் காணும்
கருஞ்சலம் போலும் பாயும் காந்தியு மந்த மாகும்
அருஞ்சல மருவி போல அனலுட னழற்றிக் காட்டும்
வருஞ்சல ரோக மென்று வகுத்தார் மறைவல் லோரே

## வளைந்தெழு ரோகம் –குணம்

புருவங் குவளைக் கடைக்கண்ணிற்
புண்போற் தசையும் வளர்ந்துவரும்
அருவுஞ் சிவப்பு நீர்முட்டும்
அண்ணாந்து விழிக்க வொட்டாது
உருவங் குலைக்குங் கண்முகமும்
ஒளியு மழுங்கிப் புகைச்சலுண்டாம்
வருவ திவைகள் குணந்தானும்
வளைஞ்தெழு ரோக மெனலாமே. 953

## வளைகீ காசம் - குணம்

கறுக்கும் பசுக்குஞ் சோதிதனிற்
கண்டார் முகமும் நீலம்போல்
அறுக்கு முறுத்துங் கடைக்கண்ணில்
அனலா யுடம்பு தலையடங்க
வெறுக்கும் வார்த்தையன் னம்விரும்பார்
வேறாஞ் சரீரம் நாள்தோறும்
வறுக்குந் தாகங் கண்புகையும்
வளைகீ காச மெனலாமே. 954

### வாரெழு காசம்— குணம்

நீர் விழும் புகைச்ச லுண்டாம் நித்தமும் கடுக்குங் கண்ணை
ஊர்வது சிவந்து கூசி உள்ளங்கை காலுங் குத்தும்
கார்முகில் போல வெங்கும் கனத்தது யிருண்டு தோற்றும்
வாரெழு காச மென்று வகையுட னுரைத்த வாறே.

### விதன மந்தாரம்—குணம்

கடுக்கும் வலிக்குங் குத்துண்டாம்
கண்ணைச் சூழச் சுருக்கென்னும்
இடுக்கு மிமையை மேனோக்கி
இழுத்து வலிக்குந் தலையடங்க
நடுக்குங் குளிரும் சுரமுண்டாம்
நாவும் வரண்டு தாகமுமாம்
விடுக்கு நீரும் பீளைகட்டும்
விதனமந் தாரக் குணமிதுவே. 956

### விழிக்கண் குருடு–குணம்

தாமேதான் சிலேத்துமமு மதிக மாகி
தாக்கான யிமைச்சந்தில் கட்டி போலாம்
ஆமேதா னிலந்தையின்தன் வித்தைப் போல
அடிகனத்து திரண்டுமல்லோ கட்டி காணும்
தேமேதான் வட்டவடி நீள மாகத்
திரண்டுமே சீழுடனே சோரி தங்கும்
போமேதான் பொருமலுடன் வீக்க மாகும்
பொல்லாத விழிக் குருடின் குணமி தாமே 957

(மருந்து)

நெல்லி முள்ளி, புங்கவிதை, வெள்ளுள்ளி, சிறுகீரை, இவை சமமாய், மெழுகு போலரைத்துருண்டை செய்து முலைப்பாலிலு ரைத்து வரத்தீரும். 958

(வேறு)

ஆவாரங்கரி, கடுக்காய்கரி, சவுக்காரம், வகைக்கு 1 வாரகன் எடை துருசு $\frac{1}{4}$ வராகன் எடை, எலும்பு 4 வராகன் எடை, இவை பசுவின் பால் விட்டு மைபோலரைத்துக் குளிகை செய்து முலைப்பாலிலு ரைத்து வரத்தீரும். 959

(வேறு)

துத்தம், துருசு, வெட்சாரணைவேர், சோகி வகைக்கு 1 கழஞ்சு எலுமிச்சம் பழச்சாற்றிலாட்டி கயிறு செய்துக் கொண்டு புளியிலைச் சாற்றிலுரைத்திடத்தீரும். 960

(வேறு)

காசாவிலை, கருவேலி, கடுக்காய், கசாயம் செய்து இவை களையொன்றாய் சிதைத்தாவது, அல்லது மருதம் பட்டை, சீரகம், அதிமதுரம், இவைகள் சமமாய்ச் சிதைத்தாவது சீலையில் கட்டி, அதைக் கரண்டியில் நெய் விட்டு வெதுப்பியதில் வைத்து ஒற்றடம் செய்தாவது, அல்லது 1 படி ஆவின்பாலில் 1 படி புளியங் கொழுந்தும் 4 கடுக்காய் தட்டிப் போட்டு வேகவைத்து விழியில் ஆவி பிடித்து, அதை துணியில் முடிந்து ஒற்றடம் செய்து, வளையம், தளம் முதலானவை செய்ய நன்மையுண்டாம் 961

## வீங்கி விழித்தல்–குணம்

தாங்கி யுறுத்தி யிமைகனத்துச்
சற்றே விழித்தாற் குத்துண்டாம்
மூங்கில் முளைபோற் கடைக்கண்ணில்
முதிர்ந்த தசைதான் எனக்காணும்
ஏங்கு விதனங் கண்சிவக்கும்
எரித்தே யிருக்கு மென்னேரம்
வீங்கும் புடைக்கும் நீர்முட்டும்
வீங்கி விழித்தல் குணந்தானே 962

## வெக்கடுப்பு அமரம்–குணம்

எடுத்துமே கனலேறி தோடந் தன்னால்
இமைநடுவில் சோரியது மிகவே தங்கி
கெடுக்குமே தோடத்தின் ரத்தந் தன்னால்
கெடியான நீர்க்கம்ம லதிக மாகும்
தொடுக்குமே வீக்கமுடன் சத்தி காணும்
தொலைதூர மார்க்கமது கறுப்பாய்த் தோன்றும்
நடுக்குமே திரேகமெல்லாம் மயிர்க்கூச்ச மாகும்
நலியான வெக்கடுப்பு நவின்ற வாறே 963

(மருந்து)

கடுக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, அதிமதுரம், தேற்றாவிதை கருவேலிலை, புளியங் கொழுந்து, இவை ஒரு நிறையாகக் கற்றாழை மடலினுட் பொதிந்து, உமிக்காந்தலிற் புதைத்து. வெந்த பதத்தில் மருந்தை எடுத்து, முலைப்பால் விட்டுக் களிம்பு போலரைத்துக் கொண்டு கண்ணிற் புறவளையமிட்டும் காசா, வரட்பூலா, புளி இவைகளின் இலைச் சாறு வகைக்கு ¼ படி ஒன்றாய்க் கலந்து, அதில் நெல்லி முள்ளி, சந்தனம், தோற்றா விதை, ஆமையோடு இவை ஆவின்பாலில் மை போலரைத்துக் குழம்பாக்கி முழுகி வரத்தீரும். 964

குரவையை முட்சிலாம்பு குடல் நீக்கி, அதன்மீது 7 விசை எருக்கம் பாலை உலர உலர ஊட்டிக் காய வைத்துப் பொடித்தும், துருசு, துத்தம் ஒரு நிறையாய் கூட்டி, வேப்பெண்ணெய்விட்டு, மைபோலரைத்து இமையில் போடத்தீரும். 965

(வேறு)

சிறுகீரைவேர், பொன்னாங்காணி வேர், சாரணைவேர் வெள்ளைக் காக்கணான், வேர், இவை ஒரு நிறையாக தேற்றான் விதை, மண்டையோடு, நாய்ப்பல், சேவல் மார்பெலும்பு, முத்து, பவளம், இவை நந்தியா வட்டப்பூச் சாற்றில் மை போலரைத் துலர்த்திப் பின் நல்லெண்ணெய் விட்டுக் களிம்பு போலரைத்துத் தீட்டி வரத்தீரும். 966

வெண் கண் வலி –குணம்

வாறான நடுக்கலுடன் வாந்தி காணும்
வலியுடனே நமைச்சலுட னெரிச்ச லாகும்
கூறான யிமையோரம் கொப்பு ளங்கள்
கொடிதான ரத்தமுடன் கட்டி போலாம்
தூறான கண்ணிமைக்குள் நோக்கா டுண்டாம்
துடிப்பான குத்தலுடன் முனைக ளோரம்
சேறான மாமிசத்தைப் பெருக்கச் செய்யும்
செழிப்பான வெண்கண்ணி னியல்பு தானே 967

(மருந்து)

தாமிரம், துருசு, துத்தம், பவளம், நீலம், கருவளையல், வெண்காரம், கணவாயோடு, இவைகளைச் சமமாய்ப் பழச்

சாற்றிலரைத்துக் கயறு செய்துக் கொண்டு இடத் தீரும். 968

## வெண்ணோக்காடு-குணம்

கூசுங் கடுக்கும் நீர்முட்டும் குளிர்ந்து சரீர மெரிவுண்டாம்
மாசுங் கண்ணுஞ் சிறுசிவப்பு மதியந் தன்னில் விழிக்காது
தேசுங் குண்ணு நடக்கவொண்ணா தயங்கிக் குணங்கள் பலவாகிப்
பேசுங் குணம்வெண் ணோக்காடு பேரிட் டழைப்பர் பெரியோரே,

## வெண்மாசுப் படலம்—குணம்

விரும்பியே வெண்மாசுப் படலந் தன்னை
விளங்கவே சொல்வதற்கு மயக்கந் தானும்
கரும்புபோல் நீர்வடியும் காதிற் சீழாம்
கடைக்கண்ணுந் தானிறுகி வெடிப்புக் காணும்
துரும்புவிழி மஞ்சள்நிற மாகும் பாரு
துடிப்புடனே கரகரத்துச் சுரமுண் டாகும்
பரும் பணைபோல் படருமல்லோ நேத்தி ரத்தில்
பட்சமுடன் மைதீட்டப் பறக்கும் பாரே. 970

(மருந்து)

வெண்கலப் பொடி, தலையோடு, வெள்ளை கற்பொடி, துத்தம், இந்துப்பு, இவை ஒரு நிறையாய்ப் பழச்சாற்றிலரைத் துலர்த்தி, பின்பு வெண்ணெய் கூட்டிக் களிம்பு போலரைத்து நேத்திரத்திற் தீட்டி வரநீங்கும். 971

## வெள்ளைப் படலம்-குணம்

கண்ணினில் வெள்ளை தன்னில்
கலந்ததோர் பாலி னாடை
உண்ணியே விழிக்கும் போது
உறுத்திடும் நுரைத்து வைத்து
நண்ணிய பளிங்கு போல
நலம்பெறப் புகைந்து காட்டும்
வெண்ணிய மதிமு கத்தாய்
வெள்ளையாம் படல மாமே 972

## 9. மாத்திரை வகைகள்

இவை, சில சரக்குகளை இடித்துத் தூள் செய்து வடிகட்டி எடுத்துச் சில இலைச் சாறுகளில் அரைத்து, பல அளவுகளாய் உருட்டி உலர்த்தி எடுத்து வைத்துக் கொள்வதாகும். இவை மாத்திரை, உருண்டை, கயிறு, குளிகை எனப் பல பெயர்களிலும் கூறப்படுகின்றன.

கண் நோய்களுக்காகக் கூறப்படும் பொதுவான மாத்திரை வகைகளைப் பற்றிய விளக்கங்கள் பல சுவடிகளிலும் காணப் படுகின்றன. அவற்றை ஒன்றாகத் தொகுத்துத் தலைப்புகளை அகர வரிசையில் முறைப்படுத்தி மொத்தம் 205 வகையான மாத் திரைகள் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன. (973-1264)

இவற்றுள், இரத்தினாதி மாத்திரை, கற்பூராதி மாத்திரை போன்றவை பல்வேறு வகைகளாகவும் கூறப்படுகின்றன. சில மாத்திரை வகைகளுக்குத் தலைப்பில்லாமலும் விளக்கம் தரப்படு கின்றன. அவற்றை, மாத்திரை 1, 2 என்னும் தலைப்புகளிலேயே காணலாம்.

இம்மாத்திரைகளை முறைப்படி செய்து, நிழலில் உலர்த்தி வைத்தெடுத்துத் தேவையான போது, ஆங்காங்கே கூறியுள்ள முறைப்படிப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்துக் கண்ணில் தீட்டவேண்டும்.

இவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்,

1. அஞ்சனாதிக் குளிகை

அஞ்சனக்கல், முட்டையோடு, சங்கு, திப்பிலி, தலையோடு சந்தனம் இவற்றைச் சேர்த்துப் பழச்சாறு விட்டரைத்துருட்டி, நிழலிலுலர்த்தி எடுத்து முலைப்பால் போன்ற தகுந்த துணை மருந்துகளில் உரைத்திடக் கண் நோய்கள் தீரும். (973)

2. அஞ்சனாதி உருண்டை

திரிகடுகு, வாலுளுவை, புங்கன்விதை, திரிபலை, விழலரிசி, பவளம், வசம்பு, செம்பு, பளிங்கு, அஞ்சனக்கல், சுக்கான்கல், துத்தம் இவற்றை ஒன்றாகச் சேர்த்துச் சிறுகீரை வேர்ச் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடப் பித்தகாசம், புகைச்சல், கண்ணெரிவு, நீர்வடிதல், பீளை வடிதல் போன்றவையும் தீரும். (974-975)

3. அந்தாதி மாத்திரை

துத்தம், திப்பிலி, பச்சைக் கற்பூரம், கடுக்காய் பருப்பு பீதரோகணி, வெள்ளிலோத்திரம் மிளகு, அஞ்சனக்கல், பளிங்கு, தலையோடு, ஓரிதழ்த்தாமரைவேர் இவற்றைஓரளவாய் எடுத்துக் கொடுப்பைச் சாற்றிலரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்து இடப்படலம், பில்லம், பூ இவைத் தீரும். உப்பிலியின் சாற்றில் உரைத்திடத் திமிரம் தீரும். (976-977)

4. அப்பிரகாதி மாத்திரை

துருசு, துத்தம், அப்பிரேகம், சங்கு, சீனக்காரம் இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி நிழலில் உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடப் படலம், காசம் போன்ற நோய்களும் தீரும். (978)

5. அரிதாரக் குளிகை

கடல்நுரை, மிளகு, சீனக்காரம், அதிமதுரம், வெண்காரம், கடுக்காய், துருசு, துத்தம், மனோசிலை, அரிதாரம், திப்பிலி, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருண்டை செய்துலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளிலிடவும்; கண்ணோய்கள் தீரும். (979)

6. அரிதகி மாத்திரை

சமுத்திராப் பழம், அதிமதுரம், ஏலம், பீதரோகணி, கடுக்காய், துத்தம், திரிகடுகு, மாசிக்காய், சந்தனத்தூள், கலைமான் கொம்பு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு நான்கு சாமம் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, முலைப் பாலில் உரைத்து இடவும், காசம், மந்தம், சிவப்பு, செவ்வேர், நீர்வடிதல், இவைத் தீரும். (980-981)

7. ஆக்குரோச மாத்திரை

புங்கன் விதை, மனோசிலை, சங்கு, புளியாரைவேர், சொரித் துத்தம், ஏலம், அதிமதுரம், அரிசித்திப்பிலி, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல் இவற்றை ஓரளவாய் எடுத்துப் புளியாரைச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்து இடவும். சிலேத்தும தோடங்கள், நீரெழுகாசம், சிவப்பு, தினவு, திமிரம், பில்லம் போன்றவைத் தீரும். (982-983)

8. ஆனந்தவைரவ மாத்திரை

பொன்னாங்காணி, சிறுகீரை, வெள்ளைக் காக்கணான், ஓரிதழ்த்தாமரை இவற்றின் வேர்கள் வகைக்கு 5 பலம், செம்புப் பொடி 4 பலம், துருசு, வெண்கல அரப்பொடி இவை வகைக்கு 3 பலம், சங்கு, துத்தம் இவை வகைக்கு 2 பலம் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துக்காடியில் ஊற வைத்திட எல்லா நோய்களும் தீரும். (984)

9. இந்தாதி மாத்திரை

இந்துப்பு, மஞ்சள், வெள்ளைச் சாரணைவேர், துத்தம் இவற்றை ஓரளவாய் எடுத்துப் பசுவின் பால் விட்டரைத் தெடுத்துப் பிறகு கழுதைப்பாலில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடப் பல நோய் களும் தீரும். (985)

10. இரணசிங்கி மாத்திரை

சாணிப்பாலில் ஊறவைத்துத் தூய்மை செய்த எண்ணெய் வெண்காரம் 10 வராகன் எடை, வீரம் 1 வராகன் எடை, உளுந் தின்மா 2 வராகன் எடை எடுத்துத் தண்ணீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தண்ணீர் விட்டுரைத்து இடவும், இமைப்பரு,

பருமுளை, இரணசுக்கிரன், விழிகுந்தம், படலம், பில்லம், இமைக் கழலை, இமைத்தடிப்பு, சிவப்பு, பூ, போன்ற பல கண் நோய்களும் தீரும். (986-989)

## 11. இரத்தினாதி மாத்திரை 1

பவளம், முத்து, பச்சை, நீளம், வைரம், வைடூரியம், புட்ப ராகம், கோமேதகம், மாணிக்கம், பொன், வெள்ளி, திரிபலா' செம்பு, பீதரோகணி, அஞ்சனக்கல், ஏலம், துருசு, துத்தம்' தேற்றான் விதை, இரும்பு, வெண்கலம் இவற்றை ஓரளவாய் எடுத்துப் புளியம் பூச் சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத் துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடப் பல கண் நோய்களும் தீரும் (990-991).

## 12. இரத்தினாதி மாத்திரை 2

ஒன்பது வகையான ரத்தினங்கள், ஐந்து வகையான உலோகங்கள், நரி, எருமை, குதிரை, கழுதை, நாய். புலி, பன்றி, கரடி இவற்றின் பற்கள், அரிதாரம். மஞ்சள், அதிமதுரம், ஏலம், பூநாகம், ஆமையோடு, புங்கன் விதை, கலைமான் கொம்பு, சங்கு, துத்தம், கடல்நுரை, இவற்றை ஓரளவாய் எடுத்துத் திரிபலா சாற்றில் ஒரு நாளரைத் துருட்டி நிழலில் உலர்த்தி எடுத்து, முலைப்பால். பனைமட்டைச் சாறு, தேன் பசுவின் நெய் இவற்றில் உரைத்து இடவும் கண் நோய்கள் தீரும் (992)

## 13. இரத்தினாதி மாத்திரை 3

துத்தம், துருசு, நெல்லிக்காய், கடுக்காய், பச்சைக் கற்பூரம், பொன்னாங்காணிவேர். சிறுகீரை வேர், வெட்பூலா வேர், புளியம் பூ, வெண்தலை ஓடு, ஒரிலைத் தாமரை வேர், நவரத்தினங்கள், பஞ்சலோகங்கள் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும். படலம், காசம், பில்லம், புகைச்சல் இவைகள் தீரும்.

## 14. இரத்தினாதி மாத்திரை 4

முத்து பவளம், தாமிரம், தாளகம், வெண்கலம், துத்தநாகம், பொன், வெள்ளி, கோரோசனை துத்தம் துருசு, அஞ்சனக்கல், வெள்ளைக்காக்கட்டான் பருப்பு இவற்றை ஓரளவாய் எடுத்துச் சாரணையிலைச்சாறு, கரிசாலைச்சாறு இவைகளில் அரைத்

துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் நீர்ப் பாய்ச்சல், பற்பரோகம், படலம், திமிரம் இவைகள் தீரும். (994)

## 15. இராம பாண மாத்திரை

வெள்ளைக்காக்கணம்வேர், கிராம்பு இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளிலிடவும். பூ போன்ற நோய்கள் தீரும். (995)

## 16. இராமபாண மாத்திரை

சுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, ஆலம்விதை, கடுக்காய்த்தோல் தான்றித்தோல், நெல்லி முள்ளித்தோல், கறிமஞ்சள், தாமரைக் கொட்டையினுள்ளிருக்கும் பருப்பு, பச்சைக் கற்பூரம் போன்ற வற்றை ஓரளவாய் எடுத்துக் கொண்டு இடித்து, கையாந்தகரைச் சாறு விட்டரைத்து, பிறகு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்திட வும், விரண சுக்கிரன், படலம், போன்ற நோய்களும் தீரும். (996)

## 17. இலகு சந்தனாதி உருண்டை

சந்தனம், பிச்சிமலர் இவை வகைக்கு 2 காசு எடை காவிக்கல் கோரோசனை, திப்பிலி, சீரகம் இவை வகைக்கு 1 காசு எடை, சேர்த்துத் தண்ணீர் விட்டரைத்துருட்டி, உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்திடவும். கண் குருடு, பில்லம், இழிகண், கண்ணெரிவு போன்ற நோய்கள் யாவும் தீரும். (997)

## 18. இலகு ரத்தினாதி உருண்டை

துத்தம், துருசு, நெல்லிவற்றல், கடுக்காய்த்தோல், பச்சைக் கற்பூரம், பொன்னாங்காணி, சிறுகீரை, பூலாவேர், புளியம்பூ தலையோடு, முத்து, பவளம், துத்தநாகம், இரும்பு, பொன், செம்பு, வெள்ளி, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத் திடவும் படலம், காசம், பில்லம், புகைச்சல் இவைகள் தீரும்.

## 19. இலிங்காதி குளிகை

புளியம் புறணியைச்சுட்ட சாம்பல், இலிங்கம் இவை வகைக்கு 1 பண எடை, துத்தம், துருசு, இவை வகைக்கு ½பலம் நாயின் மண்டையோடு 1 காசு எடை இவற்றை, பொன்னாங்காணி

இலைச்சாறு, புளியிலைச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, முலைப்பால் இவற்றில் தனித்தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும். புழுவெட்டு, பில்லம், பிரிசல் இவைகள் தீரும். (999)

## 20. ஊசிக் காந்த உருண்டை

ஊசிக்காந்தம் ½ வராகன் எடை, ஏலம், சீரகம் ¼ வராகன் எடை, சுக்கு, மிளகு, திப்பிலி, இவை வகைக்கு 1பண எடை சேர்த்து பசுவின் பாலில் ஊறவைத்தெடுத்து,எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் எல்லாக் கண் நோய்களும் தீரும். (1000)

## 21. ஒளிவாதி மாத்திரை

சங்கு 4 பங்கு. துருசு 2 பங்கு, இந்துப்பு, மஞ்சள் காவிக்கல், வங்காளப் பச்சை, மிளகு, குன்றிமணி இவை வகைக்கு 1 பங்கு ஆக எடுத்துப் பொடித்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1001)

## 22. கத்தூரி உருண்டை

கத்தூரி, சுக்கு, நொச்சியிலைக் கொழுந்துச் சாறு இவை வகைக்கு 1 வராகன் எடை, குங்குமம்பூ, சீரகம், முருங்கைப்பூ இவை வகைக்கு 2 வராகன் எடை, கிராம்பு 3 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முலைப்பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும். இதை நசியமாகக் கொள்ளவும் கண் நோய்கள் தீரும். (1002)

## 23. கபாலாதி மாத்திரை 1

தலையோடு 1 கழஞ்சு, அதிமதுரம், பீதரோகணி, துத்தம், சங்கு துருசு, வெண்கலத்தூள், இவை வகைக்கு 2 கழஞ்சு, வெட் பூலாவேர், ஓரிதழ்த் தாமரை வேர் இவை வகைக்கு 4 கழஞ்சு, சேர்த்து புளியிலைச் சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். பூ, படலம், போன்ற நோய்களும் தீரும். (1003—1004)

## 24. கபாலாதி மாத்திரை 2

சிறு குழந்தையின் தலையோடு, துத்தம், அதிமதுரம், சுக்கு, மிளகு, திப்பிலி, கடல்நுரை இவைகள் வகைக்கு 2 கழஞ்சு

எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும். காசம், பூ, பில்லம், படலம் இவைகள் தீரும். (1005)

25. கபாலாதி மாத்திரை 3

துருசு 4 பங்கு, துத்தம் 8 பங்கு தலையோடு 9 பங்கு, ஓரிதழ்த் தாமரைவேர் 2 பங்கு, சீனக்காரம் 2 பங்கு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1006)

26. கபாலாதி மாத்திரை 4

தலையோடு 4 பங்கு, கலைமான் கொம்பு 1 பங்கு, துத்தம் 4 பங்கு, சீனக்காரம் 1பங்கு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும், படலம், பூ போன்ற நோய்களும் தீரும். (1007)

27. களிம்பு உருண்டை

துத்தம், துருசு, வெங்காரம், வெண்கலச்சதா, செப்புச் சதா, இவை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிடவும். கண் நோய்கள் தீரும். (1008)

28. கருமேக மாத்திரை

துத்தம், துருசு, இவை வகைக்கு 1 வராகன் எடை; சங்கு 5 வராகன் எடை, இவற்றுள் துருசை நெருப்பிலிட்டுச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும், அமரம், திமிரம், பூ போன்ற நோய்களும் தீரும். (1009)

29. கற்பூராதி உருண்டை 1

பச்சைக்கற்பூரம், முத்தக்காசு, திரிபாலை, பலகறை, இந்துப்பு, துத்தம், கடல்நுரை, அஞ்சனக்கல், நிமிளை, பீத ரோகணி, மஞ்சள், காவிக்கல், அதிமதுரம், வெள்ளிலோத்திரம், இரும்பு அரப்பொடி இவற்றை ஓரளவாய் கையான் சாறு, விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுக்கவும். இதைத் தண்ணீரில்

உரைத்திடவும் சூலை, குந்தம், முடமயிர் தீரும்- முலைப்பாலில் உரைத்திடவும் சிவப்பு வரி, பற்பரோகம் தீரும். சீதேவி செங் கழுநீர்ச் சாற்றில் உரைத்திடவும் கருவிழியில் காசம், வெள் ளெழுத்து இவைகள் தீரும். (1010—1011)

## 30. கற்பூராதி உருண்டை

கோரோசனை, வெண்சாரணைவேர், மிளகு, துருசு, துத்தம், பச்சைக் கற்பூரம், பீதரோகணி, அதிமதுரம், கடுக்காய்ப் பருப்பு, அரிசித் திப்பிலி, ஏலம் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து நெல்லிச் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேன், முலைப்பால் இவற்றில் உரைத்திடவும் கண்புகைச்சல், சிவப்பு, கூச்சம் இவை கள் தீரும். (1012)

## 31. கற்பூராதி உருண்டை 3

பச்சைக் கற்பூரம் $\frac{1}{4}$ கழஞ்சு, இந்துப்பு $\frac{1}{8}$ கழஞ்சு, மிளகு திப்பிலி, காரீயம் இவை வகைக்கு $1\frac{1}{2}$ கழஞ்சு, பூநாகம், கடுக்காய்ப் பருப்பு இவை வகைக்கு 1 கழஞ்சு, அரிதாரம் 2 கழஞ்சு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். படலம், பில்லம், சிவப்பு, விரணம், திமிரம் போன்ற நோய்களும் தீரும்.

## 32. கற்பூராதி உருண்டை

கோரைக் கிழங்கு, பச்சைக் கற்பூரம், கடுக்காய், பலகறை நெல்லி வற்றல் தோல், துத்தம், அஞ்சனக்கல், நிமிளை, காவிக் கல், வெள்ளிலோத்திரம், இரும்புஅரப்பொடி, பீதரோகணி, அதிமதுரம் இவற்றை ஓரளவாய்த் தண்ணீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1015—1016)

## 33. கற்பூராதி உருண்டை 5

சிறுகீரைவேர், பொன்னாங்காணிவேர், வெண்காக்கணான் வேர், பன்றிக்கொம்பு, புலிநகம், துத்தம், தலையோடு, வெண் கலம், தாமிரம் இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலுரைத் திடவும் கண்நோய்கள் தீரும். (1017)

## 34. கற்பூராதி உருண்டை 6

பச்சைக் கற்பூரம் ½ பங்கு, துத்தம் 2 பங்கு, துருசு 2 பங்கு, வெள்ளிலோத்திரம் 1 பங்கு, அஞ்சனக்கல் 1 பங்கு கடல்நுரை 4 பங்கு எடுத்துச் சேர்த்து நந்தியாவட்டைப்பூச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1018)

## 35. கற்பூராதி உருண்டை 7

துத்தம் 2 பங்கு, இந்துப்பு 1 பங்கு, திப்பிலி 1 பங்கு எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி வெண்ணெய் பச்சைக் கற்பூரம் சேர்த்து இடவும். இழிகண், புகைச்சல் இவைகள் தீரும். (1019)

## 36. கற்பூராதி உருண்டை 8

முருங்கை விதை' தேற்றான் விதை, தலைஓடு, கோழி முட்டையோடு, மனோசிலை வேரும் இலையும், துத்தம், பச்சைக் கற்பூரம், மஞ்சட்டி இவற்றை ஓரளவாய் கையான் தகரைச்சாறு, பனை மட்டைச்சாறு இவற்றில் தனித் தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும் (1020)

## 37. கற்பூராதி உருண்டை 9

பச்சைக் கற்பூரம், மிளகு, இவற்றை ஓரளவாய் எடுத்துப் பனை மட்டைச்சாறு விட்டு அரைத்துருட்டி உலர்த்தி எடுக்கவும். இதை முலைப்பாலில் உரைத்திடவும் பூ தீரும், நந்தியாவட்டைப் பூச்சாற்றிலிடவும் படலம் தீரும். சிறுகீரை வேர்ச் சாற்றிலிடவும் காசம் தீரும். தேள் கொடுக்கு இலைச் சாற்றிலிடவும் மாலைக்கண் தீரும். பனை மட்டைச் சாற்றிலிடவும் எல்லாக் கண் நோய்களும் தீரும் (1021)

## 38. கனக தாம்பிராதி மாத்திரை

ஓரிதழ்த் தாமரை வேர்ப்பட்டை, குடோரி வெண்புலி இவை வகைக்கு 10 வராகன் எடை, துருசு, கருமணல், சோகி, முத்தக்காசு, பீங்கான், தலையோடு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்துச் சேர்த்து, முசுமுசுக்கை, கையான், எலுமிச்சம் இவற்றின் சாறுகளில் தனித் தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்திடவும் பில்லம், பிரிச்சல், எரிச்சல், பூ, பருமுளை போன்ற நோய்களும் தீரும். (1022)

## 39. கனக ரத்தினாதி உருண்டை

யானைக் கொம்பு, நாய்ப்பல், பசுவின்பல், பன்றிக் கொம்பு, சங்கு, திரிகடுகு, அரிதாரம், காவிக்கல், புங்கம்விதை, பீதரோகணி, தேற்றான் விதை, பளிங்கு. குங்குமப் பட்டை, ஏலம், துத்தம், பச்சைக் கற்பூரம், நாவற்சட்டம், முத்தெருக்கன் செவி. கோரோசனை' அஞ்சனக்கல், பஞ்ச லோகங்கள், இவை வகைக்கு $1\frac{1}{2}$ கழஞ்சு, முத்து, பவளம், வைரம், வைடூரியம், புட்ப ராகம், இந்திராணி, நீலம், கோமேதகம், சிவப்புக்கல், இவை வகைக்கு $1\frac{1}{8}$ கழஞ்சு எடுத்துச் சேர்த்து, கொடுப்பை நன்னாரி' துளசி, மாதுளை, பன்னீர் இவற்றின் சாறுகளில் தனித்தனியே அரைத்துருட்டி உலர்த்தி. எடுத்து வைக்கவும் இதைத் தேனில் உரைத்திடவும் பூ தீரும் மாதுளம் பழச்சாற்றிலிடவும் வெள் ளெழுத்து தீரும். புளியிலை, எலுமிச்சம் பழச்சாற்றிலிடப் புழு வெட்டுத்தீரும். கையான் சாற்றிலிடவும்; எல்லாக் கண்நோய் களும் தீரும். (1023-1027)

## 40. கனக ரத்தினாதிக் குளிகை

நவரத்தினங்கள், நவ உலோகங்கள், துத்தம், துருசு, சங்கு, நீலாஞ்சனம், பீதாஞ்சனம், பீதரோகணி, கடல் நுரை, மஞ்சள், கடுகுரோகணி, திப்பிலி, கோட்டம், புங்கம் விதை, ஆமையோடு தலையோடு, இந்துப்பு, பச்சைக்கற்பூரம், சந்தனம், செம்பஞ்சு, கடுக்காய், தாமரைக் கிழங்கு, நெல்லிக்காய். இவற்றை ஒரளவாய், எடுத்துக் கொள்ளவும், இவற்றை, எலுமிச்சம் பழச்சாறு, கொடுப்பைச்சாறு, சிறுகீரைச்சாறு. கரிப்பான் சாறு, பொடுதலைச் சாறு, பிச்சிப்பூச்சாறு, மல்லிகைப்பூச்சாறு, சண்பகப்பூச்சாறு, நந்தியா வட்டப்பூச்சாறு, அல்லிப்பூச்சாறு. முலைப்பால் என வரிசையாக இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாளாட்டி எடுத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருந்தமான துணை மருந்து களில் உரைத்திடவும் கண் நோய்கள் திரு. (1ம்028-1033)

## 41. கனத்த தாம்பிராதி மாத்திரை

துத்தம், துருசு, வெண்கலத்தூள், செம்பு, திரிகடுகு, பச்சைக் கற்பூரம், மெழுகு, கடுகு, மஞ்சள், நாகரவண்டு, கடல்நுரை, கோழி முட்டையோடு. இந்துப்பு, வெண்சாரடை, காக்கணம், செம்பருத்திப் பிஞ்சு, இவற்றை ஒரளவாய் எடுத்துச் செங்கழு நீர் மூலம். கையந்தகரைச் சாறு இவைகளில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும்; கண்நோய்கள் தீரும் (1034-1035)

## 42. காக்கண மாத்திரை

வெள்ளைக் காக்கட்டான் பூ, வெள்ளைச் சாரணைவேர், தொட்டி விதை, நாயுருவி விதை, கொன்றை விதை, அடப்பம் விதை, ஓரிதழ்த் தாமரை இவற்றை ஓரளவாய் முலைப்பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். சுக்கிரன் போன்ற பல நோய்களும் தீரும். (1036)

## 43. குக்குடாதி மாத்திரை

துத்தம், தேற்றான் கொட்டை, பலகறை, தலையோடு, மிளகு, அரிசித்திப்பிலி, சேவல்நெஞ்செலும்பு, இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும், கண்ணோய், பூ போன்றவை தீரும்.(1037)

## 44. குங்கும தாம்பிராதி மாத்திரை

குங்குமப்பூ, கொத்துமல்லி விதை, ஏலரிசி, அதிமதுரம், இலவங்கப்பட்டை, கோட்டம், சண்பகப்பூ, சாதிக்காய், சாதிப் பத்திரி, கோரோசனை, சீரகம், இலவங்கம் இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் அமரம், பில்லம், பற்ப ரோகம், படலம், புகைச்சல் பூ போன்ற நோய்களும் தீரும். (1038)

## 45. குங்குமாதிக் குளிகை

மேற்கண்ட முறையிலுள்ள மருந்துப் பொருள்களே இதிலும் கூறப்படுகின்றன (1039)

## 46. குணமுகரியன் குளிகை

வெண்காரம், செம்பு, வெண்கலம், வெட்பூலா வேர், ஏலம், ஓரிதழ்த் தாமரை வேர், விலாமிச்சுவேர், இவை வகைக்கு1 கழஞ்சு இந்துப்பு $\frac{1}{4}$ கழஞ்சு, சேர்த்து முருங்கைப்பூ, புளியம்பூ சாறுகளில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும். இதை நாயுருவிச் சாற்றில் உரைத்து இடவும் இரண சுக்கிரன் தீரும். வெட்பூலாச் சாறு, உத்தம தாளிப் பாலிலிடவும் ஆணிப்பூ, நீர்ப்பாய்ச்சல், எழுச்சி, கட்டி, சிவப்பு, அழிகண் போன்ற நோய்களும் தீரும்(1040)

47. கோதந்தாதிக் குளிகை 1

பசுவின்பல், குதிரைப்பல், யானைப்பல், கோழி முட்டையோடு, ஆமையோடு, சந்தனம், சங்கு, படிகம், துத்தம், மனோசிலை, மிளகு, தாமிரம், மஞ்சள், பூநாகம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும். இதைத் தேனில் உரைத்திடவும் சதை, படலம் தீரும். முலைப்பாலிலிடவும் பற்பரோகம் தீரும். தண்ணீரில் உரைத்திடவும் படலம் தீரும். காசம், போன்ற பல நோய்களும் தீரும். (1041-1042)

48. கோதந்தாதிக் குளிகை 2

பசுவின்பல் 1 பண எடை, சந்தனம் 10 பண எடை, அரக்கு 10 பண எடை, பிச்சி அரும்பு 2 பண எடை, செஞ்சந்தனம் 2 பண எடை, தேற்றாம் பால் 2 பண எடை, பீதரோகணி 1 பண எடை இவைகளை முலைப்பாலிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பால் அல்லது தேன் இவற்றில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1043)

49. சங்காதி உருண்டை 1

கடுக்காய்த் தோல், அரிசித்திப்பிலி, எண்ணெய் வெண்காரம், கடல் நுரை, வெள்ளிலோத்திரம், துத்தம் இவை வகைக்கு 1 கழஞ்சு, துருசு, சங்கு இவை வகைக்கு 10 கழஞ்சு எடுத்துச் சேர்த்து, முருங்கைப் பூச்சாற்றில் மூன்று நாட்கள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும் காசம், பூ, படலம் போன்ற நோய்களும் தீரும். (1044)

50. சங்காதி உருண்டை 2

சங்கு, துருசு, தலையோடு, இவை வகைக்கு 4 கழஞ்சு, துத்தம் 2 கழஞ்சு ஓரிதழ்த் தாமரை வேர் 1 பிடி எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும். (1045)

51. சங்காதி உருண்டை 3

சங்கு, மனோசிலை, தோற்றான் விதை, பச்சைக் கற்பூரம், அஞ்சனக்கல், பீதரோகணி, வெள்ளி லோத்திரம், அதிமதுரம், கடல்நுரை, துருசு, துத்தம், காவிமண் இவற்றை ஓரளவாய்

எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும். கண்நோய்கள் தீரும். (1046)

52. சங்காதி உருண்டை 4

சங்கு, திப்பிலி, பீதரோகணி, அரிதாரம், புங்கம் விதை, மிளகு, சுக்கு, துத்தம், மனோசிலை இவற்றை ஓரளவாய் நந்தியாவட்டைப் பூச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் காசம், படலம் போன்ற நோய்கள் தீரும். (1047)

53. சங்காதி உருண்டை 5

பலகறை, சங்கு, பீங்கான், படிகக்கல், குருந்து, துத்தம், கடல் நுரை, இந்துப்பு, அரிதகி, முட்டையோடு, சிப்பிநீர், பளிங்கு, தேற்றான் விதை, துருசு, வெள்ளைச் சாரணை வேர் இவற்றை ஓரளவாய்ப் புங்கம் பாலில் நான்கு சாமங்கள் அரைத்து உருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் படலம், குந்தம், பூபோன்ற நோய்கள் தீரும். (1048-1049

54. சங்கானாருண்டை

வெள்ளைக் காக்கணான் வேர், துத்தம், துருசு, பளிங்கு, சங்கு, மஞ்சள், திப்பிலி, சந்தனம், பச்சைக் கற்பூரம், செம்புப் பொடி இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். காசம், கண்ணோவு, நீர்க்குத்து, சுற்றுக்குலைவு, அழற்சி, சிவப்பு போன்ற நோய்களும் தீரும். (1050)

55. சத்துரு இரத்தினாதி மாத்திரை

துத்தம், திரிகடுகு, நெல்லிவற்றல், கடுக்காய், பீதரோகணி, பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர், பூலாவேர், புளியம்பூ, தலையோடு, முத்து, பவளம், வெண்கலம், இரும்பு, பொன், வெள்ளி, செம்பு இவைகளின் அரப்பொடி. இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி முலைப்பாலில் உரைத்திடவும் படலம், காசம் போன்ற நோய்கள் தீரும்.(1051-1052)

56. சந்தனாதி உருண்டை 1

சந்தனம், பிச்சி, நீர்ப்பூலாவேர், அதிமதுரம், ஏலம், ஓரிதழ்த் தாமரை வேர், பொன் மெழுகு, காவிக்கல், சாதிலிங்கம் இவற்றை

ஓரளவாய் எடுத்து இளநீர், பன்னீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். படலம், பில்லம், சுக்கிரன், குந்தம் போன்ற நோய்கள் தீரும்.

## 57. சந்தனாதி உருண்டை 2

பெரிய பிச்சியின் கொழுந்தும் அரும்பும், முருங்கைப்பூ' பீங்கான், பொன்மெழுகு, மடல்துத்தம், பச்சைக் கற்பூரம், மலாக்கா சந்தனம்; காவிக்கல், அதிமதுரம், வெள்ளைச் சாரணை வேர் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும். கண் நோய்கள் பலவும் தீரும். (1055)

## 58. சந்தனாதி உருண்டை 3

கடுக்காய், திப்பிலி, வெண்காரம், சந்தனம், கடல்நுரை, வெள்ளிலோத்திரம், இவை வகைக்கு 1 கழஞ்சு. துருசு, சங்கு பவளம் இவை வகைக்கு 4 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முருங்கைப் பூச்சாற்றில் மூன்று நாட்கள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். காசம், பூ, படலம் போன்ற நோய்களும் தீரும். (1056)

## 59. சந்தனாதி உருண்டை 4

அதிமதுரம் 1 பங்கு, பொன்மெழுகு 4 பங்கு, இருவாட்சி மலர் பீதரோகணி இவை வகைக்கு 2 பங்கு எடுத்துச் சேர்த்துப் புளியம் பூச்சாறு விட்டு அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண்நோய்கள் தீரும்.

## 60. சந்தனாதி உருண்டை 5

பொன்னாங்காணி, சிறுகீரை, ஓரிதழ்த்தாமரை வேர், மிளகு, நந்தியாவட்டப்பூவும் வேரும், வெள்ளைக்காக்கணாம் பூவும் வேரும், இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறுவிட்டு அரைத் துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். இழிகண் போன்ற பல நோய்களும் தீரும். (1058)

## 61. சந்தனாதி உருண்டை 6

சந்தனம், இந்துப்பு, கடல்நுரை, கோழி முட்டையோடு' சங்கு, முத்து, திப்பிலி, படிகாரம், மிளகு, தேற்றான் விதை,

துத்தம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறுவிட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்து இடவும். கண் நோய்கள் தீரும். (1059)

62. சந்திர காந்தக் குளிகை

திப்பிலி, வசம்பு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்துத் துணியில் கட்டிப் பசுவின் பாலில் போட்டுக் காய்ச்சி எடுத்து, அத்துடன் பச்சைக் கற்பூரம் சேர்த்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்த மான துணை மருந்துகளில் உரைத்திடவும். படலம், ஆணிப்பூ, நீர்ப்பாய்ச்சல், விழிகண் குருடு, அழிகண் போன்ற நோய்களும் தீரும். (1060)

63. சந்திரப் பிரகாசம் மாத்திரை

மிளகு, மரமஞ்சள், கோரைக் கிழங்கு, வேப்பமொட்டு, கடுக்காய்த்தோல், வாய்விளங்கம், இவை ஓரளவாய் எடுத்து வெள்ளாட்டு நீர் விட்டரைத்து உருட்டி உலர்த்தி எடுத்து வைக்க வும். இதை நீரில் உரைத்திடவும் திமிரம் தீரும். தேனில் உரைத் திடவும் படலம் தீரும். முலைப்பாலில் உரைத்திடவும் சுக்கிரன் தீரும். பசுவின் நீரில் உரைத்திடவும் பில்லம் தீரும். (1061-1062)

64. சந்திரோதய மாத்திரை 1

கடுக்காய், திப்பிலி, மனோசிலை, சங்கு, கோட்டம், மிளகு வசம்பு, இவற்றை ஓரளவாய் நீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் சதைப் படலம், பித்தகாசம், மாலைக்கண், கண்வலி, விரண சுக்கிரன் போன்ற நோய்கள் தீரும். (1063-1064)

65. சந்திரோதய மாத்திரை 2

பசுவின் வெண்ணெய், வசம்பு, கோட்டம், அரிசித் திப்பிலி, மிளகு, சங்குப்பொடி, மனோசிலை, மரமஞ்சள், தான்றிக்காய்ப் பருப்பு, இவற்றை ஓரளவாய் வெள்ளாட்டுப்பாலில் அரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். இமைத் தடிப்பு, சிவப்பு, துர்மாமிசம், பில்லம், படலம், தினவு, பூபோன்ற நோய்கள் தீரும். (1065)

66. சந்திரோதய மாத்திரை 3

அஞ்சனக்கல், மிளகு, பலகறை, மரமஞ்சள், குக்குடம் பீதரோகணி, இலவங்கம், அதிமதுரம், கடல்நுரை, மயிர்சுட்ட

சாம்பல், வெள்ளிலோத்திரம் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து, முலைப்பால், கையாந்தகரைச்சாறு, சாரணைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவற்றில் ஏதாவதொன்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். ற்ண் நோய்கள் பலவும் தீரும்.

இதற்கு மேல் மருந்தாக பசுவின் வெண்ணெய், துத்தம், துருசு சிற்றெறும்பு இவை ஓரளவாய், மூக்கரைச் சாரணைச்சாறு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துச் செப்பில் வழித்து வைத்திடவும் கண் வலி தீரும். (1066)

## 67. சந்திரோதய மாத்திரை 4

பொன்னாங்காணி வேர், சிறுகீரைவேர், வெள்ளைக் காக்கணம்வேர், சங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, திருத்துழாய், செங்கழுநீர்த்தாது, தாமரை வளையம், கோட்டம், இவை வகைக்கு 1 பலம், துத்தம் 3 பலம், வெண்கலம் 5 பலம் சேர்த்து முலைப்பால் விட்டு 4 நாட்கள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய், தலைநோய் போன்றவை தீரும். (1067)

## 68. சிங்காதி மாத்திரை

துருசு, துத்தம், அரிதாரம், காசுக்கட்டி, வெள்ளிலோத்திரம், மிருதார் சிங்கி, நாவி, வங்காளப் பச்சை, வெள்ளைக் குங்கிலியம் கடுக்காய் இவற்றை ஓரளவாய் புங்கம்பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும், நீர்வடிதல், வலி வீக்கம் இவைகள் தீரும்.

## 69. சிரசுவத்தி உருண்டை

திரிகடுகு, இந்துப்பு, திரிபலை, அதிமதுரம், ஏலம், யானைத் தந்தம், சாரடைவேர், பளிங்கு, முத்து, முத்தெருக்கஞ்செவி யிலை, வெண்கலம், காரீயம், நாகம், குங்குமப்பூ, இரும்பு, தாமிரம், சங்கு, பீங்கான், பொன், துருசு,துத்தம், இவற்றை வகைக்கு 1 கழஞ்சாகக் கூட்டி அத்துடன், வெள்ளி $\frac{1}{2}$ கழஞ்சு பொன் $\frac{1}{4}$ கழஞ்சு, சேர்த்துப் புங்கம்பால் கையாந்தகரைச்சாறு எலுமிச்சம் பழச்சாறு இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு சாமம் அரைத்துருட்டி உலர்த்தி வைக்கவும், இதை கையாந்தகரைச்

சாற்றில் உரைத்திடவும் புகைச்சல், மாலைக்கண் தீரும். எலுமிச்சம் பழச்சாற்றிலி —வும் பற்பரோகம்போன்ற நோய்கள் தீரும். (1070-1073)

## 70. சுடகுன் கற்பூரக் குளிகை

துத்தம், துருசு, பொன்னாங்காணி வேர், ஓரிதழ்த்தாமரை வேர், சுகுடன் கற்பூரம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் புகைச்சல் போன்ற பல கண் நோய்களும் தீரும். (1074)

## 71. சுனகேத்திராதி குளிகை

திரிகடுகு, வாலுளுவை, புங்கம்விதை, திரிபலை, பவளம், செம்பு, பளிங்கு, கனகக்கல், சுக்கான்கல், துத்தம், இந்துப்பு, பொன் மெழுகு, இவற்றை ஓரளவாய்ச் சேர்க்கவும் அத்துடன், அதி விடையம், காவிமண், பீதரோகணி, சந்தனம், ஒவ்வொன்றும் இரண்டு பங்கு சேர்த்து, புங்கிலைச்சாறு, கையான் தகரைச்சாறு தேன் இவற்றில் தனித்தனியே ஒவ்வொரு சாமம் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் படலம், பில்லம், பற்ப ரோகம், காசம், வெள்ளெழுத்து போன்ற நோய்கள் தீரும்.

## 72. சூத இரத்தினாதி மாத்திரை

நெல்லிவற்றல், கடுக்காய், புளியம்பூ, தலையோடு, பொன் னாங்காணி, சுக்கு, மிளகு, திப்பிலி, இந்துப்பு, கடுக்காய், தான்றிக் காய், அதிமதுரம், ஏலம், யானைத் தந்தம், வெள்ளைச் சாரணை வேர், அப்பிரகத்தகடு, சந்தனம், குதிரைப்பல், பன்றியின் பல், புலியின்பல், முத்தெருக்கஞ்செவி, தாமரை, குன்றிமணி, குங்குமப் பூ, இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து அத்துடன், இரும்பு, செம்பு பீங்கான் இவை வகைக்கு 1 கழஞ்சு, துத்தம், துருசு இவை வகைக்கு 2 கழஞ்சு, வெள்ளி 1 கழஞ்சு, பொன் $\frac{1}{4}$ கழஞ்சு சேர்த்துப் புங்கம்பால் கையாந்தகரைச்சாறு எலுமிச்சம் பழச்சாறு என இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு சாமம் அரைத்துருட்டி உலர்த்தி வைக்கவும். இதை நீரில் இழைத்திடவும் புகைச்சல் தீரும் கையாந்தகரைச் சாற்றில் இடவும் மாலைக் கண் தீரும் எலுமிச்சம் பழச்சாற்றிலிடவும் பற்பரோகம், காசம், பில்லம் போன்ற நோய்கள் தீரும். (1078-1082)

73. சூதத் தாம்பிராதி உருண்டை

பாதரசம் 1 பங்கு, காரீயம் 2 பங்கு, துத்தம் 4 பங்கு, சங்குத் தூள் 7 பங்கு, தாமிரத்தூள் 16 பங்கு சேர்த்து எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும், கண் நோய்கள் தீரும். (1083)

74. சூரியகாந்திக் கயிறு

கருங்கொள்ளு, முத்து, பவளம், துருசு, இவற்றை வகைக்கு 1 காசு எடை எடுத்து அத்துடன், பொன்னாங்காணியிலை, புளி யிலை, சங்கிலை ஆகியவற்றின் சாறுகளிற் தனித்தனியே அரைத்துச் செப்புச் சிமிழில் எடுத்து வைக்கவும் இதைப் பின்பும் சங்கிலைச் சாற்றிலைரத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பால், எலுமிச்சம் பழச்சாறு இவைகளில் உரைத்திடவும், பில்லம் படலம் புகைச்சல், காசம், திமிரம் போன்ற பல நோய்களும் தீரும்

75. செயசிந்தாமணி மாத்திரை

தோற்றான் கொட்டை, இந்துப்பு, சுக்கு, துத்தம், நெல்லி வற்றல், அதிமதுரம், அஞ்சனக்கல், பச்சைக் கற்பூரம், பீத ரோகணி இவற்றை ஓரளவாய், மாதுளம் பழச்சாறு, புளியிலைச் சாறு, இவைகளில் தனித்தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும், திமிரம், காசம்' சிவப்பு போன்ற நோய்கள் தீரும் (1085—1098.)

76. தந்த இரத்தினாதி மாத்திரை 1

மான். குதிரை, கழுதை, கரடி, புலி, முதலை, கீரி, நரி எருமை, முயல், குரங்கு, பூனை, ஆமை, பன்றி, பசு இவைகளின் பற்கள், யானைத் தந்தம், யானை நகம், யானைப்பல், கோழி முட்டையோடு' நாகரவண்டு, வெள்ளைச் சாரணை, ஆமை யோடு, திரிகடுகு, திரிபலை, நவரத்தினங்கள், பஞ்சலோகம், சங்கு, துருசு, துத்தம் இவற்றை ஓரளவாய் எடுத்து, எலுமிச்சம் பழச்சாறு, கையாந்தகரைச்சாறு இவைகளில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பால், பனை மட்டைச்சாறு இவைகளில் உரைத்திடவும், ஆணிப்பூ, படலம், காசம் போன்ற நோய்கள் தீரும். (1087)

77. தாம்பிராதி மாத்திரை 1

செம்பு, பளிங்கு, துத்தம், துருசு, சிறுரைவேர், பொன்னாங் காணிவேர் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்ட

ரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும் (1088)

## 78. தாம்பிராதி மாத்திரை 2

அஞ்சனக்கல், துத்தம், செம்பு, பீதரோகணி இவற்றை ஓரளவாய் படைமட்டைச் சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும், கண்நோய்கள் தீரும்(1089)

## 79. தாம்பிராதி மாத்திரை 3

செம்பு அரப்பொடி 16 பங்கு, வெள்ளி அரப்பொடி, இந்துப்பு இவை வகைக்கு 8 பங்கு, அதிமதுரம், கோட்டம் இவை வகைக்கு 12 பங்கு, அரிசித் திப்பிலி. வெள்ளைச் சாரணைவேர் இவை வகைக்கு 4 பங்கு எடுத்துச் சேர்த்து வெள்ளாட்டுப் பால் விட்டு 7 நாட்கள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும், பில்லம், அமரம், இமைக் கட்டி, காசம், முளைகள், அன்ன கோபம் போன்ற பல நோய் களும் தீரும். (1090)

## 80. தாம்பிராதி மாத்திரை 4

செம்பு அரப்பொடி 1 கழஞ்சு, பச்சைக் கற்பூரம் ½ கழஞ்சு துத்தம் ¼ கழஞ்சு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும். கண்நோய்கள் தீரும். (1090)

## 81. தாம்பிராதி மாத்திரை 5

துத்தம், துருசு, பீங்கான், கருமணல், பலகறை, தலையோடு வெம்புலி இவை வகைக்கு 1 வராகன் எடை, தாமரைக் கிழங்கு1 இந்துப்பு, கொத்துமல்லி விதை, சீரகம் இவை வகைக்கு 5 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முசுமுசுக்கைச்சாறு, எலுமிச்சம் பழச் சாறு இவைகளில் 8 சாமம் தனித்தனியாக அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும். பில்லம், படலம், துர்மாமிசம், வலி போன்றவை தீரும்

## 82. தாம்பிராதி மாத்திரை 6

துருசு, பலகறை, கருமணல், துத்தம், வெள்ளைப் பீங்கான், இவை வகைக்கு 1 வாரகன் எடை, வெண்காரம், வெம்புலி, ஓரிதழ்த் தாமரை வேர், குன்றிமணி, இவை வகைக்கு 4 வராகன்

எடை எடுத்துச் சேர்த்து அத்துடன், முசுமுசுக்கைச்சாறு, கையாந்தகரைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, இவை ஒவ்வொன் றிலும் ஒவ்வொரு நாள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். அமரம் திமிரம், பூ போன்ற நோய்களும் தீரும் (1093)

## 83. தாம்பிராதி மாத்திரை 7

துத்தம், துருசு, நெல்லிமுள்ளி, கடுக்காய், பச்சைக் கற்பூரம், பொன்னாங்காணிவேர், சிறுகீரை வேர், வெட்பூலாவேர், எருமைத் தயிர், ஓரிதழ்த் தாமரை வேர், முத்து, பவளம், கஞ்சம், இரும்பு, பித்தளை, செம்பு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும்(1094)

## 84. தாம்பிராதி மாத்திரை 8

செம்பு, பளிங்கு, துத்தம், தலையோடு, சுக்கு, சிறுகீரை வேர் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண் குளிர்ந்து நோய்கள் தீரும். (1096)

## 85. தாம்பிராதி மாத்திரை 9

அஞ்சனக்கல், சந்தனம், சங்கு, இந்துப்பு, செம்புப் பொடி, அல்லிக்கிழங்கு, மனோசிலை, இலவங்கம், பச்சிலை, ஏலம், மிளகு, மஞ்சள், கஞ்சம், திப்பிலி, சண்பகப்பூ, வெள்ளி, பளிங்கு, தேற்றான் விதை, மரமஞ்சள், வெண்காரம், கோழி முட்டை யோடு, சிறுகீரைவேர், பசுவின்பல், இவற்றை ஓரளவாய் கை யான் தகரைச்சாறு. வேப்பிலைச் சாறு இவைகளில் வகைக்கொரு நாளாக அரைத்துருட்டி, 3 நாட்கள் சென்ற பின்பு தேன், நெய் இவை விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். திமிரம், ஆணிப்பூ, அமரம், விழிவிழுங்கி, விரண சுக்கிரன், காசம், அழிகண், பற்ப ரோகம் போன்ற பல நோய்களும் தீரும். (1097—1100)

## 86. தாம்பிராதி மாத்திரை 10

தாமிரப்பொடி, வெண்கலச் சரிகை, சீரகம், ஓரிலைத் தாமரை வேர் இவை வகைக்கு 1 பலம், வெண் பீங்கான் அரப்பொடி, பலகறை, துத்தம், துருசு, படிகாரம், தலையோடு இவை வகைக்கு

1 வராகன் எடை, எடுத்துச் சேர்த்து எலுமிச்சஞ்சாறு, கையாந் தகரைச்சாறு இவைகளில் வகைக்கு 1 நாள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து. புளியம்பூச்சாறு. பனைமட்டைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவைகளில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும் (1101)

## 87. தாம்பிராதி மாத்திரை 11

தாமிரம் 16 பங்கு, அதிமதுரம் 14 பங்கு, கோட்டம் 12 பங்கு, வசம்பு 10 பங்கு, இந்துப்பு 8 பங்கு, திப்பிலி 6 பங்கு, வெள்ளி 4 பங்கு, பொன் 2 பங்கு எடுத்துச் சேர்த்து வெள்ளாட்டுப்பால் விட்டரைத்து 3 நாட்கள் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும் (1102)

## 88. தாம்பிராதி மாத்திரை 12

செப்புப் பொடி, வெள்ளறுகவேர், பொன்னாங்காணிவேர், இவற்றை ஓரளவாய் எடுத்து வல்லாரைச்சாறு, எலுமிச்சம் பழச் சாறு இவைகளில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்த மான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண்நோய்கள் தீரும்.

## 89. தாரா மாத்திரை

முத்து, பவளம், இரும்பு, பொன், வெள்ளி, செம்பு இவற்றை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1104)

## 90. தாலாதி உருண்டை

முத்து, பவளம் சந்தனம், பொன், மான்கொம்பு, வெட்டி வேர், பிச்சிப்பூ இவற்றை ஓரளவாய் பனைமட்டைச்சாறு விட்டரைத்து உருட்டி உலர்த்தி வைத்தெடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும். (1105)

## 91 திரிகடுகு உருண்டை

திரிகடுகு, பூநாகம், புங்கம் விதை, துத்தம், செம்புப் பொடி, இவை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும் புகைச்சல், கண்பிரிச்சல், முடமயிர், நீர்ப்பாய்ச்சல் போன்ற நோய்களும் தீரும். (1106)

92. திரிகாதி மாத்திரை

பொன், பவளம், வெள்ளி, குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், துத்தம் இவற்றை ஓரளவாய் முலைப்பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும் கண்நோய்கள் தீரும் (1107)

93. திருமணிக் குளிகை

சங்கு, புங்கம் விதை, துருசு, பலகறை, துத்தம், காக்கணம் விதை, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1105-1109)

94. துத்த மாத்திரை

துத்தம் 1 பங்கு, சுக்கு 2 பங்கு, பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர் வகைக்கு ½ பங்கு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும். (1110)

95. துத்தாதிக் குளிகை

துத்தம், திப்பிலி, பச்சைக்கற்பூரம், கடுக்காய் பருப்பு பீதரோகணி, வெள்ளிலோத்திரம், மிளகு, அஞ்சனக்கல், தலை யோடு, தாமரைவேர், இவற்றை ஓரளவாய் கொடுப்பைச் சாற்றில் 4 சாமம் அரைத்துருட்டி உலர்த்தி எடுக்கவும் இதைத் தேனில் உரைத்திடவும் படலம், பில்லம், பூ இவைகள் தீரும் (1111-1112)

96. துத்திர உருண்டை

துத்தம், துருசு, இரசம், அஞ்சனக்கல், சங்கு, கடல்நுரை சிலாசித்து, தோற்றான் விதை, சாரணைவேர், வேர்ப்பீர்க்கில் இவற்றை ஓரளவாய் சேர்த்து அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலிடவும் காசம், படலம், திமிரம் போன்ற நோய்கள் தீரும். (1113)

97. தேற்றாதி உருண்டை

தோற்றான் விதை, சங்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, மஞ்சள்' இந்துப்பு. புங்கம் விதை, கடுக்காய்த்தோல், நெல்லி வற்றல், வசம்பு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்

துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் புகைச்சல் போன்ற நோய்கள் தீரும். (11·4)

## 98. நவரத்தினாதி மாத்திரை

குதிரை, கழுதை, மான், கரடி, புலி, முதலை, ஒட்டகம், நரி, எருமை, முயல், நாய், பூனை, பன்றி, பசு இவற்றின் பற்கள், நாகர வண்டினோடு, கோழி முட்டையோடு, துத்தம், துருசு, சுக்கு, மிளகு, திப்பிலி, நிமிளை, அஞ்சனக்கல், நவரத்தினங்கள், அரிதாரம், சங்கு, தான்றிக்காய், கடுக்காய், நெல்லி வற்றல் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் படலம், காசம், திமிரம் போன்ற நோய்கள் தீரும். (1115)

## 99. நவலோக இரத்தினாதி மாத்திரை 1

சங்கு, வெண்கலப் பொடி, மிளகு, நாய்ப்பல், அரிசித் திப்பிலி, வசம்பு, நெல்லி முள்ளித்தோல், தான்றிக்காய்த் தோல், ஏலம், கிராம்பு, அதிமதுரம், வெருகு, மரமஞ்சள், சிறுநாகப்பூ, சந்தனம் மாதுளை வேர்த்தோல், பவளம், வெள்ளி, தங்கம், காரீயம், செம்பு இவற்றின் அரப்பொடிகள், பொன்னாங்காணிவேர், கடல்நுரை, சமுத்திராப் பழம், பீதரோகணி, முத்து, புலிப்பல், அடப்பம் விதை, ஆமையோடு, வெண்காக்கணம் வேர், வெள்ளைச் சாரணை வேர், கோழி முட்டையோடு, நந்தியா வட்டப்பூ, அலரிவேர், சிறுகீரை வேர், துளசிவேர் துத்தம் இவற்றை ஓரள வாய் எடுத்துக் கொண்டு, இவற்றுடன், எலுமிச்சம் பழச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, புளியிலைச்சாறு, கையாந்தகரைச்சாறு, கோவையிலைச்சாறு, இவற்றில் தனித்தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத் திடவும் சுக்கிரன், திமிரம், காசம், நீர்வடிதல், படலம் போன்ற பலநோய்களும் தீரும். (1116-1117)

## 100. நவலோக இரத்தினாதி மாத்திரை

சங்கு, வெண்கலப்பொடி, காந்தம், பவளம், வெள்ளி, முத்து, பொன், காரீயம், தாமிரம், துத்தம், துருசு, சிற்றண்ட ஓடு, தேற்றான் விதை, நாய்ப்பல், மிளகு, திப்பிலி, திரிபலை, ஏலம், இலவங்கம், மரமஞ்சள், சிறு நாகப்பூ, மலாக்காசந்தனம், மாதுளைவேர், கடல்நுரை. பீதரோகணி, காக்கணவேர், ஆமை

யோடு இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து காக்கணம் வேர்ச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய்கள் பலவும் தீரும். (1118)

## 101. நயன கோடாக் குளிகை

யானைக் கொம்பு, பன்றிக் கொம்பு, சேவல் நெஞ்செலும்பு, முதலைப்பல், குதிரைக்குளம்பு, கழுதைப்பல், முயற்பல், உடும்பு எலும்பு, சாரைப் பாம்பு முதுகெலும்பு, தேவாங்கு காலெலும்பு, நாரை மூக்கு, ஆமை ஓடு, கடல்நுரை, ஈயம், அரிதாரம், எஃகுப் பொடி, துத்தநாகப் பொடி, இவை வகைக்கு ஒரு பங்கு, நரிப்பல், நாய்ப்பல், ஆட்டுப்பல், மாட்டுப்பல், குதிரைப்பல், அண்டங் காக்கைத்தலை ஓடு, பச்சைத் தவளைக்கால் எலும்பு, மயிலிரகு குப்பி, வெள்ளெருக்கம் வேர், வெள்ளைச்சாறு வளைவேர்க் எவியாலம் வேர், முருங்கைவேர், வில்வவேர், காந்தம், அக்காரக் காரம், கோரோசனை இவை வகைக்கு $\frac{1}{2}$ பங்கு, புலிநகம், வெள் ளைிநகம், அதிமதுரம், கொந்தாழங்காய், குங்குமப்பூ, செப்புத் தகடு வகைக்கு $\frac{1}{4}$ பங்கு, செம்பருந்து முட்டையோடு, கோழி முட்டையோடு, நீர்க்காக்காய் முட்டையோடு, இவை வகைக்கு $\frac{1}{8}$ பங்கு, மனிதர் தலை புருவத்தின் ஓடு, இரசம், நீலாஞ்சனம், துத்தம், துருசு, இவை வகைக்கு 3 பங்கு, தாம்பூலப் பொடி, வெள்ளி, தங்கம், இவை வகைக்கு 4 பங்கு, முத்து, பவளம், சிவப்புக்கல் இவை வகைக்கு 2 பங்கு எடுத்துச் சேர்த்து, அத்துடன் பனை மட்டைச்சாறும் எலுமிச்சம் பழச்சாறும் விட்டு அரைத்து முறைப்படி உருண்டை செய்து வைத்தெடுத்து தேவை யான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய்கள் பலவும் தீரும் (1119)

## 102. நயனாமிர்த மாத்திரை

குதிரைப்பல், பன்றிக்கொம்பு, வெள்ளி அரப்பொடி இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து கையாந்தகரைச் சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும், பூ, முளை, இரணம் போன்ற பல நோய்களும் தீரும். (1120)

## 103. நாகாஞ்சனாதி உருண்டை

துத்தம், துருசு, அஞ்சனக்கல், பீதரோகணி, விழலரிசி, ஓரிதழ்த்தாமரை, பாசசொறிவேர், திரிபலை ,திரிகடுகு, கற்பூரம்,

இவற்றை ஓரளவாய் தண்ணீரிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும், இதைப் புளியிலைச் சாற்றில் உரைத்திடவும்புகைச்சல் தீரும் வெற்றிலைச் சாற்றிலிடவும் அழுகண் தீரும். தேன் முலைப் பாலில் உரைத்திடவும் நீர்ப்பாய்ச்சலும் தினவும் தீரும். கழுநீரி லுரைத்திடவும் எல்லா கண் நோய்களும் தீரும். (1121)

## 104. நீலகண்ட மாத்திரை

துருசு, அப்பிரகப்பொடி, கீழாநெல்லிவேர், சிறுகீரை வேர், கற்றாழைவேர் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் புளியிலைச்சாற்றில் உரைத்திடவும் படலம் பில்லம், குந்தம், சீணிப்பூ போன்ற பல நோய்களும் தீரும். (1122)

## 105. பஞ்சலோக அஞ்சனாதி உருண்டை 1

நவரத்திரனங்கள், இந்துப்பு, சங்கு, அதிமதுரம், படிகம், பச்சைக் கற்பூரம், பஞ்சலோகம், காவிமண், துருசு, துத்தம், கலைமான் கொம்பு, கடல்நுரை, குங்குமப்பூ, கோரோசனை, இவற்றை ஓரளவாய் கொடுப்பைச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில்உரைத்திடவும் படலம், பில்லம், குந்தம், இவைகள் தீரும். எலுமிச்சம் பழச்சாற்றிலிடவும் இமைத் தடிப்பு போன்ற நோய்கள் தீரும். (1123-1124)

## 106. பஞ்சலோகக் குளிகை

துத்தம், துருசு இவை வகைக்கு 2 கழஞ்சு, வெண்கலச்சதா, கீழா நெல்லி வேர், சிறுகீரைவேர், பொன்னாங்காணிவேர் இவை வகைக்கு 1 கழஞ்சு, சேர்த்துக் கூட்டி அத்துடன், பனை மட்டைச் சாறு, புளியிலைச் சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவற்றில் தனித் தனியே அரைத்தெடுத்து உருட்டி உலர்த்தி வைக்கவும். இதை எலுமிச்சம் பழச்சாற்றிலிடவும் தினவு தீரும். பனைமட்டைச் சாற்றிலிடவும் இமைத் தடிப்புத் தீரும். தண்ணீரில் இடவும் வெள்ளெழுத்துத் தீரும். முலைப்பால், அவுரியிலைச் சாறுகளில் இடவும் செவ்வேர் போன்ற பல நோய்களும் தீரும். (1125)

## 107. பஞ்சாதி மாத்திரை

பூலாவேர், பொன், பவளம், வெள்ளி, முத்து, திப்பிலி, செம்பு, துத்தம், தலையோடு, பீதரோகணி, இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப்

பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1126)

## 108. பச்சை உருண்டை 1

மிளகு, ஓரிதழ்த் தாமரைவேர், தலையோடு துத்தம், இந்துப்பு, பீங்கான், இவை வகைக்கு ½ கழஞ்சு, துருசு 2 கழஞ்சு, எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். எழுச்சி, மணிவளர்த்தி, நீர் வடிதல், போன்ற பல நோய்களும் தீரும் (1127—1128)

## 109. பச்சை உருண்டை 2

சங்கு, துத்தம், துருசு, தலையோடு வெண்கலப்பொடி ஓரிதழ்த்தாமரைவேர், சுண்ணாம்புக்கல், இவை வகைக்கு 1 கழஞ்சு, அபின், வேம்பின் பிசின், இந்துப்பு, பருத்திக் கொட்டை இவை வகைக்கு ⅛ கழஞ்சு சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண்நோய்கள் பலவும், தீரும். (1129—1131)

## 110 பச்சை உருண்டை 3

வெள்ளைக் காக்கணான் வேர் 1 பங்கு, வெண்குன்றி 2பங்கு, சாரணைவேர் 3 பங்கு, மஞ்சள் 4 பங்கு, துத்தம் 5 பங்கு, துருசு 6 பங்கு, பளிங்கு 7 பங்கு இவற்றை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும். பல கண்ணோய்களும் தீரும். (1132—1133)

## 111. பச்சைத் தாம்பிராதி மாத்திரை 1

செம்புப் பொடி, இந்துப்பு, சீனக்காரம், துருசு, சங்கு, தாமரை வளையம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும், கண் நோய்கள் தீரும். (1134)

## 112. பச்சைத் தாம்பிராதி மாத்திரை 2

துத்தம், துருசு, இவை வகைக்கு 1½ பங்கு, சங்கு 4 பங்கு, எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். பூ போன்ற பல நோய் களும் தீரும் (1135)

## 113. பச்சைத் தாம்பிராதி மாத்திரை 3

சங்கு 1 பங்கு, இந்துப்பு 1 பங்கு, நாகரவண்டு 20 பங்கு தேற்றான் விதை 10 பங்கு, துத்தம் 10 பங்கு, தாமிர அரப்பொடி 6 பங்கு, சேர்த்து, சிறுகீரை, கோவையிலை, கையாந்தகரை, மட்டைச்சாறு இவைகளில் தனித் தனியாக வகைக்கு 6 சாமம் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து எலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்திடவும். அன்னகோபம் போன்ற பல நோய்களும் தீரும்.

## 114. பச்சைத் தாம்பிராதி மாத்திரை 4

செம்பு, துத்தம், இந்துப்பு, சீனக்காரம், துருசு, கோரோசனை, ஓரிலைத் தாமரை வேர், இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும் (1137)

## 115. பச்சைத் தாம்பிராதி மாத்திரை 5

துத்தம், துருசு, சங்கு, பவளம், தாமிரப் பொடி, ஆமையோடு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். காசம், பூ படலம் போன்ற பல நோய்களும் தீரும் (1138—1139)

## 116. பளிங்காதி உருண்டை

வெள்ளைக் காக்கணாம்வேர், துத்தம், பளிங்கு, சங்கு, தலையோடு, அஞ்சனக்கல், அதுமதிரம், தேற்றான் விதை. மஞ்சள், திப்பிலி, சந்தனம், பச்சைக் கற்பூரம், செம்புப் பொடி இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் பலவும் நீரும். (1140)

## 117. பாச்சுருண்டை

இரசம், கந்தகம், மிளகு, சுக்கு, திப்பிலி, வசநாவி, மனோசிலை, அரிதாரம், கவுரி வெள்ளைப் பாடாணம், சாதிலிங்கம், துருசு, துத்தம், சீனக்காரம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் துளசிச்சாற்றில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1141)

### 118. பீதரோகணி மாத்திரை 1

முத்து, வெள்ளி, தாமிரம், சங்கு, துருசு, துத்தம், கலைக் கொம்பு, பொன், பீதரோகணி, புங்கம் விதை இவற்றை ஓரள வாய் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய் கள் தீரும். (1142)

### 119. பீதரோகணி மாத்திரை 2

இந்துப்பு, திப்பிலி, பீதரோகணி இவற்றை ஓரளவாய் நந்தியாவட்டப் பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய் கள் தீர்ந்துப் பார்வை தெளிவாகும். (1143)

### 120. பீதரோகணி மாத்திரை 3

பீதரோகணி, இலவங்கம், வலம்புரிக்காய், சங்கு, மிளகு, தாமிரப் பொடி, வங்கம், துருசு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும். (1144)

### 121. பீதரோகணி மாத்திரை 4

பீதரோகணி, தாமிரப் பொடி, வெள்ளிப் பொடி. துருசு, சீனக்காரம், இவற்றை ஓரளவாய் கோவையிலைச் சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும். (1145)

### 122. பீதரோகணி மாத்திரை 5

துத்தம், துருசு, பச்சைச் கற்பூரம், சுக்கு, திப்பிலி, மிளகு, நெல்லிவற்றல், செம்புப்பொடி, பளிங்கு, தலையோடு கடுக்காய்த் தோல், பொன்னாங்காணிக்கீரை, வெட்பூலாவேர், ஓரிதழ்த் தாமரைவேர், பீதரோகணி இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண் நோய்கள் பலவும் தீரும். (1146—1147)

### 123. பீதரோகணி மாத்திரை 6

பீதரோகணி, சங்கு, ஓரிதழ்த் தாமரை வேர் இவை வகைக்கு 3 பங்கு, பன்றிக் கொம்பு 1 பங்கு, தலையோடு 1 பங்கு, துருசு, பச்சை வளையல் இவை வகைக்கு 2 பங்கு, வெள்ளைக் காக்கணம்

வேர் 1 பங்கு எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுக்கவும். இதைச் சிறு பூளைச் சாற்றில் உரைத்திடவும் இமைத்தடிப்புத் தீரும். சாரணைச்சாறு, கரிசலாங்கண்ணிச்சாறு இவற்றில் உரைத்திடவும் கண்ணோவு தீரும் முசுமுசுக்கைச் சாற்றிலிடவும் செவ்வேர், படலம், புகைச்சல் போன்ற பல நோய்களும் தீரும் (1148—1149)

## 124. புங்காதி மாத்திரை

சங்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, அரிதாரம், அதிமதுரம், புங்கம் வித்து, பீதரோகணி, துத்தம் மனோசிலை இவற்றை ஓரளவாய் நந்தியா வட்டப் பூச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் காசம், படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1150)

## 125. பூபதி மாத்திரை

மருக்கொழுந்து 5 பங்கு, எலுமிச்சம் பழவிதை 28பங்கு திப்பிலி 8 பங்கு, சுக்கு 20 பங்கு, மிளகு 10 பங்கு, அதிமதுரம் 4 பங்கு, எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி வைக்கவும். இதைப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். காசம், அழிகண், பில்லம், படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1151—1152)

## 126. பூவந்தாதிக் குளிகை

கடப்பமலர், வெள்ளிலோத்திரம், துத்தம், பீதரோகணி, அதிமதுரம், பச்சைக் கற்பூரம், தலையோடு இவை வகைக்கு 2 காசு எடை எடுத்துத் தேன் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் சுக்கிரன், பூ, குந்தம் போன்ற பல நோய்களும் தீரும் (1153—1154)

## 127. மகா இரத்தினாதி மாத்திரை 1

காந்தம், பலகறை, கிராம்பு, புங்கம்விதை, மாசி, சுறாவரி, செங்கழுநீர், சீனக்காரம், முத்து, வெள்ளி, பீங்கான். யானைக் கொம்பு, கலைமான் கொம்பு, ஆமையோடு, மிளகு, சுக்கு, பவளம், சமுத்திராப் பழம், சீரகம் இவை வகைக்கு ¼ பலம் திப்பிலி, மிளகு, துத்தம். பீதரோகணி, துருசு, இரும்பு, தாமிரம், வெண்கலம், பித்தளை, உருக்கு, பலகறை இவை வகைக்கு 1 வராகன் எடை, கோழி முட்டையோடு, சங்கு இவை வகைக்கு 1 பலம் சேர்த்துக் கூட்டவும், இந்துப்பு, நேபாளந்தகரைச்சாறு

முகமுசுக்கைச்சாறு, புங்கம்வேரின் பால், முருங்கைப்பூச்சாறு, நெல்லிக் காய்ச்சாறு. பனை மட்டைச்சாறு, பொடுதலைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு இவை வகைக்கு 1 சேர், தேன் ¼ சேர் எடுத்து இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாளாகத் தனித் தனியே அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். பில்லம், படலம், முளை,சுக்கிரன், பூ நீர்ப்பாய்ச்சல் போன்ற பல நோய்களும் தீரும். (1155-1156)

## 128. மகா இரத்தினாதி மாத்திரை 2

துத்தம், அதிமதுரம், அரிதாரம், வெண்காரம், சீனக்காரம் துருசு, பீதரோகணி, சவுக்காரம், திப்பிலி, சுக்கு, விழலரிசி, நிமிளை, உவர்மண், தேற்றான் விதை, தாமரை, இந்துப்பு, மகிழம் விதை, காஞ்சிவிதை, பூவந்திவிதை, புங்கம் விதை, எலுமிச்சம் பழவிதை, அடப்பம் விதை, கொந்தளங்காய், சிற்றா மணக்கின் விதை, பொன்னாங்காணி வேர், சிறுகீரை வேர், வெள்ளைகாக்கணம்வேர், குறிஞ்சிவேர், துளசிவேர், கற்றாழை வேர், வெள்ளைச்சாரடைவேர், நந்தியாவட்டவேர், பசளைவேர், தூதுவளைவேர், பூலாவேர், மாதுளைவேர், மாஞ்சில், சிறு காசா வேர், சீதேவி செங்கழுநீர் வேர், செவ்வல்லிக் கிழங்கு ஓரிலைத் தாமரைவேர், நன்னாரிவேர், யானையின்பல், நகம், பசுவின் பல், நரிப்பல், நாய்ப்பல், முதலைப்பல், முயல்எலும்பு, நாகர வண்டினோடு, கருடன் முட்டை, சொரிச்சங்கு, தலையோடு, சேவல்நெஞ்செலும்பு, புலிநகம், வெருகின்முடி, கிளிஞ்சல், கெளதாரி எலும்பு, மான்கொம்பு, இரும்பு, செம்பு, வெண்கலம், கருவெள்ளி, காரீயம், முத்து, மாணிக்கம், பச்சைக்கல், கோமேதகம், நீலக்கல், பவளம், வைடூரியம், புட்பராகம், வைரம் பச்சைக் கற்பூரம், மரகதம், பளிங்கு, பொன், முருங்கைப்பூ. தாளி மலர், நந்தியாவட்டப்பூ, புளியம்பூ, மாதுளையின் பூ, இவை, ஒவ்வொன்றையும் ஒரளவாய் எடுத்துச் சேர்க்கவும். அத்துடன், கையாந்தகரை, பொடுதலை, செருப்படை, மாதுளம்பழம், நெல்லிக்காய், பனைமட்டை, நாயுருவி, தேன், எண்ணெய், எலுமிச்சம் பழம், இளநீர் இவற்றின் சாறுகள் ஒவ்வொன்றிலும் 1 உழக்காகத் தனித் தனியே இட்டு அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும். இதைப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1157-1150)

### 129. மகா தாம்பிராதி மாத்திரை

சுத்தமான செம்பு, வெண்கலம், வெள்ளி, கோழி முட்டை யோடு, நற்சீரகம், ஓரிதழ்த்தாமரைவேர் இவை வகைக்கு 1 பலம், துத்தம், துருசு, வெள்ளைப் பீங்கான், சீனக்காரம், இரும்பு, தலையோடு, பலகறை இவை வகைக்கு 1 வராகன் எடை, எடுத்துப் பொடித்து அத்துடன் எலுமிச்சம் பழச்சாறு, முசு முசுக்கைச்சாறு இவைகளில் தனித்தனியாக ஒவ்வொன்றிலும் 8 சாமம் அரைக்கவும். இதை உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பால் மாதுளம் பழச்சாறு பனைமட்டைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு போன்ற பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் பில்லம், படலம், சிவப்பு, குத்தல், கடுப்பு போன்ற பல நோய்களும் தீரும். (1161)

### 130. மதுராதி உருண்டை 1

இலவங்கம், அதிமதுரம், கோட்டம், வாலுழுவை, குங்குமப்பூ, சண்பகப்பூ, திரிகடுகு, தேவதாரம், திரிபலை, பீதரோகணி, ஓரிதழ்த்தாமரைவேர் இவற்றை ஓரளவாய் காசினிச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்து களில் உரைத்திடவும், புகைச்சல், எரிச்சல் போன்ற பல நோய் களும் தீரும். (1162)

### 131. மதுராதி உருண்டை 2

அதிமதுரம், மரமஞ்சள், வெள்ளிலோத்திரம், இவற்றை, ஓரளவாய் வெள்ளாட்டுப் பாலிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து தேன், நெய் இவைகளில் இழைத்துப் போடவும், பில்லம், சிவப்பு, படலம்போன்ற பல நோய்களும் தீரும். (1163)

### 132. மாலைத் திருமணி உருண்டை

துத்தம், எலிப்புழுக்கை இவற்றை ஓரளவாய்க் காடிநீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து நீரில் உரைத்திடவும், மாலைக்கண் போன்ற நோய்கள் தீரும். (1164)

### 133. மாறியாடி உருண்டை

வெட்டிவேர், சடாமாஞ்சில், பீதரோகணி, தலையோடு, சுக்கு இவை வகைக்கு 1 கழஞ்சு திப்பிலி, சங்கு, வெண்காரம், இவை வகைக்கு 2 கழஞ்சு, சின்னிவேர், பூலாவேர், மணலிக்கீரை,

தாமரைக் கொழுந்து இவை வகைக்கு 4 கழஞ்சு எடுத்துச்சேர்த்து நந்தியாவட்டப் பூச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி வைத்து எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய்கள் தீர்ந்து ஒளி பெறும்.

134. மீன் இரத்தினாதி மாத்திரை

வரால் மீன் தலையிலுள்ள கல், மிளகு, அஞ்சனக்கல், துத்தம் துருசு, வெள்ளைச்சாரணைவேர், சங்கு, முத்து இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும், சதை வளர்த்தி பூ படலம் போன்ற பல நோய்களும் திரும். (1166)

135. மேகவுரி கொட்டை குளிகை

தலையோடு, கோட்டம், விளாம்பிசின், துத்தம், துருசு இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலிடவும் புகைச்சல், போன்ற பல நோய்களும் தீரும். (1167)

136. வச்சிராயுத மாத்திரை 1

சேவல் நெஞ்செலும்பு, கிராம்பு, அதிமதுரம் மிளகு, வெள்ளைச்சாரடைவேர் இவற்றை ஓரளவாய் வெள்ளாட்டின் பித்தால் 1 சாமம் அரைத்தெடுக்கவும், பின்பு, இதனை எள்ளின் பூவால் அரைத்துத் துணியில் உலர்த்தவும் இதை உருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பால், நெருஞ்சில் சாறு இவைகளில் உரைத்திடவும். பில்லம், படலம், குந்தம் பூ போன்ற நோய்களும் தீரும். (1168)

137. வச்சிராயுத மாத்திரை 2

செந்தலை, மும்மூர்த்தி இவற்றை ஓரளவாய் வேலிப்பருத்திச் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். படலம், பூ போன்ற பல நோய்களும் திரும். (1169)

138. வராகாதி மாத்திரை

திப்பிலி, சமுத்திராப் பழம், வெள்ளிலோத்திரம், பீதரோகணி பன்றிக் கொம்பு இவற்றை ஓரளவாய் பரிசா விதையின் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்து களில் உரைத்திடவும். கண் நோய்கள் திரும். (1170)

## 139. விமலாதி மாத்திரை

பளிங்கு. துத்தம், கோரோசனை, பச்சைப்பாக்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, செம்புப் பொடி இவற்றை ஓரளவாய் நெல்லிக் காய்ச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் காசம், படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1171)

## 140. விரண தாம்பிராதிக் குளிகை 1

தாமிரப்பொடி, துருசு, துத்தம். பவளம், தாளகம், கரு வளையல், வெண்காரம், நீலமணி, சவுக்காரம், கண வாயோடு, இவற்றை ஓரளவாய் முருங்கைப் பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும். இதை முருங்கைப்பூச்சாற்றில் உரைத்திடவும். புழுக்கடி, செவ்வேர், தசை வளர்ச்சி போன்ற நோய்கள் தீரும். கிலுகிலு கிணியிலைச் சாற்றிலிடவும் நீர்ப் பாய்ச்சல், கூச்சம் போன்ற நோய்கள் தீரும். நிம்பத்தினிலை, கவரினிலைச் சாறுகளிலிடவும் புகைச்சல் தீரும். தும்பையிலைச் சாற்றிலிடவும் பூ தீரும். கையாந்தகரைச் சாற்றிலிடவும் படலம் போன்ற நோய்கள் தீரும். (1 72-1173)

## 141. விரண தாம்பிராதிக் குளிகை 2

ஓரிதழ்த்தாமரை வேர், செங்கழு நீர்க்கிழங்கு இவை வகைக்கு 1 கழஞ்சு, துத்தம், துருசு இவை வகைக்கு 2 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முலைப்பாலில் அரைக்கவும். இதை உருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1174-1176)

## 142. வில்வாதி உருண்டை

வில்வவேர், திரிகடுகு, பருத்தி விதை, காசுக்கட்டி, கொள்ளு, துருசு, பச்சை வளையல், தலையோடு, வெள்ளைச் சாரடைவேர், வெள்ளைக்காக்கணான்வேர், பொன்னாங்காணி வேர், சிறுகீரைவேர், செம்பு அரப்பொடி இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து, வெள்ளைக்காக்கணாம்பூ, நந்தியாவட்டப்பூ, பேய்த் தும்பைப்பூ, பேய்ப்புல், புளியிலை, பனைமட்டை, எலுமிச்சபழம், இவற்றின் சாறுகளில் தனித் தனியே அரைத்து, பச்சைக் கற்பூரம் கோரோசனை இவற்றைப் பொடித்துச் சேர்த்துருட்டி உலர்த்தி எடுத்துமுலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும் (1177).

## 143. வீரசங்கார மாத்திரை

கடுக்காய், திப்பிலி, வெண்காரம், கடல்நுரை, வெள்வீ ஜோத்திரம், துத்தம், துருசு, சங்கு இவற்றை ஓரளவாய் மூருங் கைப்பூச் சாற்றுலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்த மான துணை மருந்துகளில் உரைத்து இடவும். பூ படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1178)

## 144. மாத்திரை (பொது) 1

காவிக்கல், மரமஞ்சள். அரக்கு சந்தனம், சண்பகமொட்டு இவற்றை ஓரளவாய் தண்ணீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும். விரணம், சதை வளர்த்தி போன்ற பல நோய்களும் தீரும். (1179)

## 145. மாத்திரை 2

துருசு. கடல்நுரை, மிளகு, அரிசித் திப்பிலி, அரிதாரம், கடுக்காய்த் தோல், தான்றிக் காய்த்தோல், நெல்லி முள்ளித்தோல், கோரோசனை, துத்தம், அதிமதுரம் இவற்றை ஓரளவாய் முலைப் பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் புகைச்சல் போன்ற பல நோய்களும் தீரும்.

## 146. மாத்திரை 3

பூலாவேரின் தோல், பொன், பவளம், வெள்ளி, முத்து அரிசித் திப்பிலி. பச்சைக் கற்பூரம், செம்பு அரப்பொடி இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும் கண் நோய்கள் தீரும். (1181)

## 147. மாத்திரை 4

சந்தனம், மனோசிலை, பளிங்கு, சங்கு, திரிகடுகு, மரமஞ்சள், அஞ்சனக்கல், இந்துப்பு, காந்தம், இலிங்கம், பீதரோகணி இவற்றை ஓரளவாய் எடுத்துத் தண்ணீர் விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1182)

148. மாத்திரை 5

பூலாவேரின்'தோல் 2 பங்கு, துத்தம் ½ பங்கு, துருசு ½ பங்கு எடுத்துச் சேர்த்து, புளியம் பூச்சாறு, முலைப்பால் இவற்றிலரைத் துருட்டி உலர்த்தி எடுத்து, நீரில் உரைத்திடவும். காசம், பில்லம், படலம் போன்ற நோய்களும் தீரும். (1183)

149. மாத்திரை 6

சூதம் 1 பங்கு காரீயம் 2பங்கு, துத்தம் 4பங்கு, சங்கு 8 பங்கு தங்கம் 16 பங்கு, தாமிரம் 32 பங்கு என எடுத்துச் சேர்த்து, திரி பலைச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளிலிடவும் கண்நோய்கள் தீரும். (1184)

150. மாத்திரை 7

பொன்னாங்காணிவேர், சிறுகீரை வேர், புளியம்பூ, பூலா வேர், கடுக்காய்த் தோல், நெல்லிவற்றல் தோல், தான்றிக்காய்த் தோல், துத்தம், துருசு, இந்துப்பு இவை வகைக்கு 2 கழஞ்சு சேர்த்து, புளியிலைச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளிலிடவும். கண் நோய்கள் தீரும் (1185)

151. மாத்திரை 8

மிளகு ¼ வராகன் எடை, நெல்லி வற்றலின் தோல் ½ வராகன் எடை, புங்கம் ¾ வராகன் எடை எடுத்துச் சேர்த்து, கையாந் தகரைச் சாறுவிட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து நீரில் உரைத் திடவும் பார்வை தெளிவடையும். (1186)

152. மாத்திரை 9

பலகறையைத் தேன் விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் படலம், திமிரம், தினவு போன்ற நோய் கள் தீரும். (1187)

153. மாத்திரை 10

துத்தம், துருசு, அரிதாரம், கந்தகம், மனோசிலை, நேர் வாளம், வெண்ணெய் இவற்றை ஓரளவாய்க் குப்பைமேனி யிலைச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து இடவும் கண் நோய்கள் தீரும் (1188)

## 154. மாத்திரை 11

சமுத்திராப் பழத்தைச் சுத்தம் செய்து பசுவின் பாலில் அவித்தெடுத்துலர்த்தி, இதை முலைப் பாலில் உரைத்துப் போடவும். கண்நோய்கள் தீரும் (1189)

## 155. மாத்திரை 12

வில்வப் பழத்தின் விதையை எடுத்துச் சுத்தம் செய்து நந்தியா வட்டப்பூச்சாற்றில் உரைத்திடவும் கண்புகைச்சல், எரிச்சல் சூடு, நீர்ப்பாய்ச்சல், பூச்சிவெட்டு சடுப்புவலி, இழிகண் போன்ற பல நோய்களும் தீரும் (1189)

## 156. மாத்திரை 13

சங்கு, திரிகடுகு. அரிதாரம், அதிமதுரம், புங்கம் விதை, மனோசிலை, பீதரோகணி, துத்தம் இவற்றை ஓரளவாய் நந்தியாவட்டப் பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும். (1190—1191)

## 157. மாத்திரை 14

இரும்பீயம், காந்தமீயம், கெந்தியரிதாரம், வீரம், இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி, தேன், வெண்ணெய் இவைகளில் இடவும். காசம் போன்ற பல நோய்களும். தீரும் (1192—1193)

## 158. மாத்திரை 15

இந்துப்பு, துருசு, சீனக்காரம், துத்தம் இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, நந்திபத்திரிச் சாறு, தேன் இவற்றில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும் (1193—1194)

## 159. மாத்திரை 16

நெல்லிவேர், திப்பிலி இவற்றை ஓரளவாய்க் கரிசாலைச் சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும் (1194)

## 160. மாத்திரை 17

ஆமையோடு, அஞ்சனக்கல், தலையோடு, கல்மதம், குதிரைப் பல், பன்றிப்பல், யானைக் கொம்பு, சேவல் நெஞ்செலும்பு,

தேற்றன்விதை, துருசு, துத்தம், சங்கு, தாளகம், காவிக்கல், கடல் நுரை, பீதரோகணி, வெள்ளிலோத்திரம். இவற்றை ஓரளவாய்க் முருங்கைப் பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்திடவும். அழிகண், படலம், மணிவளர்த்தி போன்ற பலநோய்களும் தீரும் (1196-1197)

## 161. மாத்திரை 18

இந்துப்பு, கற்பூரம், பீதரோகணி, திப்பிலி இவற்றை ஓரள வாய் நந்திப்பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும். காசம், பூ படலம் போன்ற பல நோய் களும் தீரும் (1198)

## 162. மாத்திரை 19

கற்பூரம், மஞ்சள், திப்பிலி, மிளகு, நெல்லி முள்ளி இவற்றை ஓரளவாய் நந்திப் பூச்சாற்றிலரைத் துருட்டி உலர்த்தி எடுத்துத் தேன் விட்டரைத்திடவும். குந்தம் போன்ற பல நோய்களும் தீரும். (1199)

## 163. மாத்திரை 20

நெல்விமுள்ளி, அரிதாரம், பொன்னாங்காணிவேர், துத்தம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் .பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும். பல நோய்களும் தீரும் (1200)

## 164. மாத்திரை 21

நெல்விமுள்ளி, மிளகு, கோரோசனை, கோட்டம், பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரளவாய் முலைப்பால் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும். பார்வை தெளிவடையும் (1201)

## 165. மாத்திரை 22

மான் கொம்பு, உருத்திராட்சம், வெள்ளைச் சாரணைவேர், யானைத் தந்தம், சேவல் நெஞ்செலும்பு, வெள்ளிச் சரிகை, புலி நகம், குப்பைமேனிவேர் இவற்றை ஓரளவாய்ப் பசுவின் நீரில் 3 நாட்கள் ஊறப்போட்டு எடுத்து முலைப்பால் ஆட்டி எடுத்து வைக்கவும். இதைத் தேனில் உரைத்திடவும். ஆணிப்பூ, குந்தம் போன்றவையும் தீரும் (1203)

## 166. மாத்திரை 23

முத்து, வெள்ளி, தாமிரம், சங்கு, துருசு, துத்தம், தலையோடு. பொன், பீதரோகணி, புங்கம் விதை இவற்றை ஓரளவாய் வேப்பிலைச் சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும். இத்துடன், பொன்னாங்காணி, சிறுகீரை இவற்றின் வேர்கள், முத்தக்காசு, சீந்தில், வேப்பிலை, நாரத்தை, கோட்டம், அதிமதுரம், ஏலம், சண்பகப்பூ, வங்கம் இவற்றை ஓரளவாய் எடுத்து நல்லெண்ணெய் யிலிட்டுக் காய்ச்சி வடித்துத் தலையில் தேய்த்து முழுகவும், காசம், படலம், பில்லம் போன்ற பல நோய்களும் தீரும் (1206—1208)

## 167. மாத்திரை 24

ஆமையோடு முதலைப்பல், பன்றிக் கொம்பு, சேவல்நெஞ்செலும்பு. தேற்றாங்கொட்டை, துத்தம், வெள்ளிச் சரிகை, புலிப் பல், பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரளவாகக் கொண்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி நிழலில் உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்துக் கண்ணிலிடவும். படலம், நீர்ப்பாய்ச்சல், காசம் திமிரம் இவைகள் தீரும். (1209-1210)

## 168. மாத்திரை 25

எலுமிச்சம் பழச்சாறு 1 உழக்கு, புளியிலைச்சாறு 1 உழக்கு, கற்றாழைச்சாறு 1 உழக்கு, பசுவின்பால் 2 உழக்கு, இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி. அத்துடன், துத்தம், திப்பிலி இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி இறக்கிக்கொண்டு அதில் பச்சைக் கற்பூரம் $\frac{1}{4}$ கழஞ்சு போட்டுக் குழம்பானதும் சிமிழிலடைத்து வைக்கவும். சிறு பயறளவு எடுத்துக் கண்ணிலிடவும். காசம், இமைத்தடிப்பு இவைகள் தீரும். (1211-1213)

## 169. மாத்திரை 26

பொன்னி யரிதாரம், வசம்பு, சிவந்தசந்தனம் இவற்றை ஓரளவாய் இலைச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலிலுரைத்து இடவும் முடமயிர் தீரும். (1213-1214)

## 170. மாத்திரை 27

துத்தம், துருசு, அஞ்சனக்கல், பச்சைக்கற்பூரம், முத்து, பவளம், வெள்ளி, செம்பு, வெண்கலம், கொத்தமல்லி, கருங்கொள்

பீதரோகணி, சாத்திரவேதி, குருந்துக்கல், சந்தனம் இவை ஓரளவாய் கொண்டு, தேன், நெய், காடி இவற்றையும் சேர்த்து அரைத்துருட்டி உலர்த்தியெடுத்து முலைப்பாலில் உரைத்து இடவும் காசம் போன்ற நோய்கள் தீரும் (1219-1220)

## 171. மாத்திரை 28

அரிதாரம், மனோசிலை, பவளம், சங்கு, நெல்லிப்பருப்பு காவிக்கல் இவற்றை ஓரளவாய்க் கூட்டி இஞ்சிச் சாற்றுலரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலிடவும் காசம் தீரும்.

## 172. மாத்திரை 29

மஞ்சள், மனோசிலை, கடல்நுரை, ஏலம், செம்பு, மரமஞ்சள், பொன், காவிக்கல், கோழிமுட்டைக் கோது, திரிபலை, மான் கொம்பு, திரிகடுகு, இந்துப்பு இவற்றை ஓரளவாய்க் கூட்டி வெள்ளாட்டு நீரில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தண்ணீரில் உரைத்து இடத்தூசி தீரும். தேனில் உரைத்து இடவும் படலங்கள் தீரும். பிச்சிப்பூச்சாற்றிலும், எலுமிச்சம்பழச்சாற்றிலும் இட இழிசக்கண் தீரும். முலைப்பாலில் இடவும் விரண சுக்கிரன் தீரும்.

## 173. மாத்திரை 30

பூலா, பொன்னாங்காணி, சிறுகீரை, ஓரிலைத்தாமரை இவற்றின் வேர்கள், துத்தம், தேற்றாங்கொட்டை, அதிமதுரம், சண்பகப்பூ, பளிங்கு, சங்கு இவற்றை ஓரளவாய் முலைப்பால், எலுமிச்சம் பழச்சாறு இவற்றில் தனித்தனியே விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண்ணெரிச்சல் போன்ற நோய்கள் தீரும். (1231)

## 174. மாத்திரை 31

பீதரோகணி, பவளம், கற்பூரம், சாரணைவேர் இவற்றை ஓரளவாய் தண்ணீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து வைக்கவும். இதை முலைப்பாலில் உரைத்திடவும் பூ தீரும். தண்ணீர் உரைத்திடவும் வெள்ளெழுத்து தீரும். (1232)

## 175. மாத்திரை 32

செம்பு, துத்தம், வெண்கலம் இவற்றின் அரப்பொடிகள், வளையல், வெண்கல், ஓரிதழ்த்தாமரை வேர், வெட்பூலாவேர் இவற்றை வகைக்கு 1 கழஞ்சும் இந்துப்பு $\frac{1}{4}$ கழஞ்சாகவும் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1233)

176. மாத்திரை 33

தலையோடு, அதிமதுரம், சோட்டம், கோரோசனை பீதரோகணி, அஞ்சனக்கல், துத்தம், செம்புப்பொடி இவற்றை ஓரளவாய் புங்கம்பால், முலைப்பால், எலுமிச்சம் பழச்சாறு இவைகளில் தனித் தனியே அரைத்து எடுத்துருட்டி உலர்த்தி வைக்கவும். இதைப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்ணோய்கள் தீரும். (1234)

177. மாத்திரை 34

துத்தம், துருசு, சங்கு ஆமையோடு, ஓரிலைத்தாமரைவேர், இவை வகைக்கு 1வராகன் எடை எலுமிச்சம் பழச்சாறுவிட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து, இதை முசுமுசுக்கையிலைச் சாற்றில் உரைத்திடவும் நேத்திர வாய்வு தீரும். பனைமட்டைச்சாற்றிலிடவும் பூ தீரும். கையாந்தகரைச் சாற்றிலிடவும் மாலைக் கண் தீரும். (1235)

178. மாத்திரை 35

துத்தம், வெண்கலம், பொன்னாங்காணிவேர் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து, பனைமட்டைச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு புளியிலைச்சாறு, விரியிலைச்சாறு இவற்றில் தனித்தனியே அரைத் துருட்டி உலர்த்தி வைக்கவும். இதை சம்பீரச்சாற்றில் உரைத்திடவும் படர்த்தி நோய்கள் தீரும். புளியிலைச்சாற்றிலிடவும் தினவு தீரும். பனைமட்டைச் சாற்றிலிடவும் இமைத்தடிப்பு தீரும். தண்ணீரிலிடவும் வெள்ளெழுத்து தீரும் முலைப்பாலில் இடவும் கண்வலி தீரும். விரியிலைச் சாற்றிலிடவும் செவ்வேர் போன்ற நோய்கள் தீரும். (1236)

179. மாத்திரை 36

ஏல கிளிஞ்சிப்பொடி, பவளப்பொடி, வெண்காரம், வெண் கலப்பொடி இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (123 )

180. மாத்திரை 37

துத்தம், கற்பூரம், கையாந்தகரை சமூலம் இவற்றை ஓரள வாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து, நீரில் உரைத்து இடவும் இழிகண், புகைச்சல் போன்ற நோய்கள் தீரும். (1238)

181. மாத்திரை 38

மாதுளம்பூ, சீரகம், நெருஞ்சிக்காய், இவற்றை ஓரளவாய் பனை மட்டைச் சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண்ணெரிச்சல் போன்ற பல நோய்களும் தீரும். (1239)

182. மாத்திரை 39

வெண்கலப்பொடி 2 கழஞ்சு, தலையோடு 4 கழஞ்சு, இந்துப்பு, துத்தம் இவை வகைக்கு ½ கழஞ்சு எடுத்துச் சேர்த்துப் பனை மட்டைச் சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்திடவும். காசம், மந்தம், புகைச்சல் போன்ற நோய்கள் தீரும். (1240)

183. மாத்திரை 40

சீனக்காரம், வெண்காரம், துத்தம், துருசு, தலையோடு, பளிங்குக்கல் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். பூ, சதை வளர்த்தி போன்றவை தீரும். (1241)

184. மாத்திரை 41

ஓரிதழ்த் தாமரை வேர் 2கழஞ்சு, சிறுகீரைவேர், கொடுப்பை வேர், ஆமையோடு, கோழி முட்டையோடு, தலையோடு, பன்றிக் கொம்பு இவை வகைக்கு 1 கழஞ்சு, துருசு 1½ கழஞ்சு எடுத்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலிலிடவும். கண் நோய்கள் பலவும் தீரும். (1242)

185. மாத்திரை 42

முத்து, பவளம், துத்தம், துருசு, படிகக்கல், பீங்கான், காரீயம், சீனக்காரம், வெண்காரம், தலையோடு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். படலம், காசம் போன்ற பல நோய்களும் தீரும். (1243)

186. மாத்திரை 43

சங்கு, ஆமையோடு, துத்தம், பீதரோகணி, துருசு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண்நோய்கள் தீரும்.(1244)

187. மாத்திரை 44

துத்தம், துருசு, பலகறை, கருவேம்பின் பிசின் இவற்றை ஓரளவாய் எடுத்து, கையாந்தகரைச் சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும். கண்வலி, நீர்ப் பாய்ச்சல், வெள்ளெழுத்து போன்ற நோய்கள் தீரும். (1245)

188. மாத்திரை 45

கடுக்காய், வசம்பு, திப்பிலி, மிளகு, மரமஞ்சள், தாளி விதை பருப்பு, மனோசிலை, சங்கு இவற்றை ஓரளவாய் வெள்ளாட்டுப் பாலில் அரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத் திடவும் காசம், படலம், தழும்பு, புண் போன்ற பல நோய்களும் தீரும். (1246)

189. மாத்திரை 46

துத்தம், துருசு, சங்கு, ஆமையோடு, ஓரிலைத் தாமரை வேர் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முசுமுசுக்கைச் சாற்றில் உரைத்திடவும் கண் ணோய் தீரும். பனை மட்டைச் சாற்றிலிடவும் பூ தீரும். கையாந் தகரைச் சாற்றிலிடவும் மாலைக் கண் தீரும். (1247)

190. மாத்திரை 47

திப்பிலி, தேற்றான் விதை, செங்கழுநீர்க் கிழங்கு, கோட்டம், அதிமதுரம், துத்தம், துருசு, சந்தனம், கருணை வேர்த்தோல், பொன்னாங்காணி வேர், சிறுகீரை வேர், பளிங்கு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும். பூ, படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1248)

191. மாத்திரை 48

திப்பிலி, சீனக்காரம், சங்கு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலி லிடவும். சுக்கிரன் போன்ற பலநோய்களும் தீரும். (1249)

192. மாத்திரை 49

திரிகடுகு, திரிபலை, அதிமதுரம், பீதரோகணி, பொன் மெழுகு, வெண் காக்கணம் வேர் இவற்றை ஓரளவாய் பசுவின் பால், கழுதைப்பால், முலைப்பால் இவற்றில் அரைத்துருட்டி

உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். காசம், குந்தம், பூ இவைப் போன்ற நோய்கள் பலவும் தீரும். (1250)

## 193. மாத்திரை 50

மணிக்கொட்டைப் பாசியிலை, துத்தம், துருசு இவற்றை ஓரளவாய்ச் சிறு நீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப் பாலில் உரைத்திடவும் புகைச்சல் போன்ற நோய்கள் தீரும். (1251)

## 194. மாத்திரை 51

சங்கு, திப்பிலி, மிளகு, சுக்கு, தேவதாரம் அதிமதுரம், புங்கம் விதை, தலையோடு, பீதரோகணி, துத்தம், மனோசிலை இவற்றை ஓரளவாய் நந்தியா வட்டப்பூச்சாற்றில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் காசம், படலம் போன்ற நோய்கள் தீரும்.

## 195. மாத்திரை 52

மருதம்பூவை பசுவின் நீரில் அரைத்துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் நீர் வடிதல் தீரும். (1253)

## 196. மாத்திரை 53

மதரோசனி, துத்தம், வெள்ளிலோத்திரம், கற்பூரம், அஞ்சனக்கல், தோற்றான்விதை, படிகம், அதிமதுரம், சங்குநாபி, கடல்நுரை, காவிமண், சந்தனம் இவற்றை ஓரளளாய் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும். (1254)

## 197. மாத்திரை 54

பசுவின்பல், பளிங்கு, இந்துப்பு, மனோசிலை, அஞ்சனக்கல் மிளகு இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1255)

## 198. மாத்திரை 55

துத்தம், வெட்பூலாவேர், கீழா நெல்லிவேர், ஓரிலைத் தாமரை வேர், இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் திமிரம், படலம், போன்ற பல நோய்கள் தீரும். (1256)

199. மாத்திரை 56

பலகறை 10 துத்தம், துருசு இவை வகைக்கு ¼ கழஞ்சு கூட்டி எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண்ணோவு, புகைச்சல், கண் ணெரிச்சல், தினவு போன்ற பல நோய்களும் தீரும். (1257)

200. மாத்திரை 57

பசுவின்பல், குதிரையின் குளம்பு, பல், கழுதையின் குளம்பு பல், ஆமையோடு, பலகறை, சங்கு, செம்பு, மான் கொம்பு, பன்றிக் கொம்பு. முயல் கொம்பு, தேற்றான் விதை, கடல் சிப்பி, கோழி முட்டையோடு பூநாகம், வெள்ளைச் சாரணை வேர், புங்கம் விதை மகிழம் விதை, ஆட்டுக் கொம்பு, இந்துப்பு, மனோசிலை, கற்பூரம் இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பசுவின் நெய்யில் உரைத்திடவும் கண்நோய்கள் தீரும்.

201. மாத்திரை 58

கடல்நுரை, சீனாக்கற்கண்டு, நந்தியா வட்டப்பூ இவற்றை ஓரளவாய் நந்தியாவட்டப் பூச்சாற்றிலரைத்துருட்டி உலர்த்தி எடுத்து, பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் படலம், வலி, சிவப்பு, சதை வளர்ச்சி போன்ற நோய்கள் தீரும். (1259)

202. மாத்திரை 59

சமுத்திராப் பழவிதையை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத் துருட்டி உலர்த்தி எடுத்துத் தேனில் உரைத்திடவும் சதை வளர்ச்சி தீரும், புளியிலைச்சாற்றில் இடவும் தினவு தீரும். (1260

203. மாத்திரை 60

சங்கு 4 பங்கு, துத்தம் 2 பங்கு, பீதரோகணி 1 பங்கு, இவற்றுள் சங்கை காடியில் ஊறவைத்தெடுத்து, மற்றவையுடன் கூட்டி எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1261)

## 204. மாத்திரை 61

துத்தம். துருசு, இந்துப்பு. மிளகு வெண்கலம், பவளம், இரத்தினக்கல், முத்து, சங்கு, அதிமதுரம், அரிதாரம், மனோ சிலை, சுக்கு, சுருமாக்கல், கோட்டம், தலையோடு, செப்புப் பொடி, ஈயம், காக்கணான்பூ, நீர்ப்பூலாவேர், எடுத்துச் சேர்த்து முருங்கைப்பூச்சாறு, உப்பிலியிலைச்சாறு, புளியிலைச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, சிறுகீரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு எலுமிச்சம் பழச்சாறு, இளநீர் இவற்றில் தனித்தனியே வகைக்கு ஒரு நாளாக அரைத்துருட்டி, உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் இடவும் கண்நோய்கள் தீரும். (1262)

## 205. மாத்திரை 62

சந்தனம். பூங்காவி, கொம்பரக்கு, சாதிமொட்டு இவற்றை ஓரளவாய்த் தண்ணீர் விட்டரைத்துருட்டி உலர்த்தி எடுத்து முலைப்பாலில் உரைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1263)

## 206. மாத்திரை 63

நீலாஞ்சனம். கடுகு, கடுக்காய், தான்றிக்காய், சமுத்திராக் காய், அதிமதுரம், சமுத்திர நாடா, தோற்றாங் கொட்டை சண்பக மொட்டு, மஞ்சள், யானைநகம், குதிரை நகம், இலவங்கம் துத்தம் இவை வகைக்கு 2 வராகன் எடை, சாதிக்காய், சீரகம் இவை வகைக்கு 1 பலம். துருசு, செம்பு, இரும்பு, ஆமையோடு, சங்கு, சாதிபத்திரி, நந்தியா வட்டவேர், படிகாரம், காசுக்கட்டி, களிப்பாக்கு, கடப்பம் விதை, வெள்ளைச் சாரணைவேர், பொன், முத்து. பவளம், சமுத்திராப் பாலை விதை, கரடிக் கொம்பு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்துச் சேர்க்கவும், இவற்றுடன் எலுமிச்சம் பழச்சாறு, முசுமுசுக்கைச்சாறு, முருங்கைப்பூச்சாறு, கிளாப்பூச்சாறு, தும்பைப்பூச்சாறு, வெள்ளைக் காக்கணான்சாறு பொன்னாங்காணிச்சாறு, கரிசலாங்கண்ணிச்சாறு, புளியிலைச் சாறு, பனைமட்டைச்சாறு, வெங்காயச்சாறு ஆகியவற்றில் தனித்தனியே வகைக்கு ஒரு நாளாக அரைத்துப் பச்சைக் கற்பூரம் ¼ வராகன் எடை எடுத்துச் சேர்த்துருட்டி உலர்த்தி எடுத்துப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும் சுக்கிரன், ஆணிப்பூ, பித்தகாசம், நேத்திர வாய்வு, முடமயிர் போன்ற பல நோய்களும் தீரும். (1264)

## அஞ்சனாதிக் குளிகை

அஞ்ச னக்கல் முட்டையோடு அரிய சங்கு திப்பிலியும்
விஞ்சு கின்ற தலையி னோடு வியனந் தான சந்தனம்
தொஞ்ச வேயரைத் துண்டைபண்ணித் துயரறக் கண்ணி விடு வீராய்ப்
பஞ்சுபோல வலிபறந்து போகும் படல மாம்பல வும்போமே 973

(வேறு)

எங்கும் பெரிய திரிகடுகு இயல்வா லுழுவை புங்கவிதை
தங்கும் திரிபலை விழலரிசி தன்னிற் பவளம் வசம்புசெம்பு
பொங்கும் பளிங்கோ டஞ்சனக்கல் புகழுஞ் சுக்கான் கல்துத்தம்
தங்குஞ் சமூலம் சிறுகீரை சாற்றி லரைத்துருண் டைசெய்யே

உரைத்ததை முலைப்பால் தன்னில் உகந்துநீ ரிடுவீ ராகில்
மறைத்திடும் பித்த காசம் வாங்கிடும் புகைச்சல் நீங்கும்
கரைத்திடும் விழிக னப்பை கசிந்தநீர் பீளை மாறும்
திரைத்திவை நயன ரோகம் தீர்ந்திடு முண்மை தாமே 975

## அந்தாதி மாத்திரை

துத்தம் திப்பிலி கற்பூரம் துலங்குங் கடுக்கா யுடன்பருப்பு
சித்த பீத ரோகணியும் தீர்க்கும் வெள்ளி லோத்திரமும்
த்தி மிளகு மஞ்சனக்கல் புகழ்சேர் பளிங்கு தலையோடு
நித்தம் பெருகும் ஓரிதழ்வேர் நிகராய்க் கொடுப்பை வார்த்தரையே 976

அரைத்திடு நாலு சாம மானபின் நிழலு லர்த்தி
உரைத்திடப் படலம் பில்லம் உதிரும்பூ தேனிற் தீரும்
இரைத்தெழுந் திமிரந் தீரும் இசைந்தஉப் பிலியின் சாற்றில்
விரைத்திடக் கடிது நீங்கு மேவுமந் தாதி தானே 977

## அப்பிரகாதி மாத்திரை

கண்ணினில் காச முற்றால் கடியதோர் துருசு துத்தம்
நண்ணிய பளிங்கு சங்கு நத்திய சீனக் காரம்
ஒண்ணிய பழத்தின் சாற்றில் உரைகட லொத்த வுண்டை
விண்ணிய படலங் காசம் வெருண்டிடு மிதனைப் பாரே 978

## அரிதாரக் குளிகை

கடல்நுரை மிளகுசீ னக்காரம் கதிசத மதுரம் வெண்காரம்
அடல்மிகு கடுக்காய் துருசுதுத்தம் ஆன மனோசிலை
அரிதாரம்
பொடியது திப்பிலி செப்பிலிட்டுப் போதளலு மிச்சாற்ற
ரைத்துவிட்டுத்
திடமுடன் மூன்று நாளரைத்துச் செய்ய உண்டை குழம்பாமே

## அரிதகி மாத்திரை

சேர்த்திடும் சமுத்தி ராப்பழம் திரளதி மதுர மேலம்
தேற்றிடும் வித்து ரோணி தெசாவரக் கடுக்காய் துத்தம்
மாற்றிடுந் திரிகடுகு மாசிக்காய் சந்த னத்தூள்
தேற்றிடுங் கலைமான் கொம்பு தொடுத்தரை நிம்பஞ்
சாற்றில்
அரைத்திதை நாலு சாமம் அழகா யுருண்டை செய்து
உரைத்திட முலைப்பால் தன்னில் உட்புரை காச மந்தம்
கரைத்திடுஞ் சிவப்பு செவ்வேர் கசிந்தநீ ரிவைகள் மாறும்
இரைத்தெழுந் தோடும் பாரே இயலரி தகியின் வாறே 981

## ஆக்குரோச மாத்திரை

போற்றும் புங்கம் விதைசிலை சங்குடன்
புகல்புளி யாரை வேர்சொரி துத்தமும்
தேற்று மேலம் மதுரமுந் திப்பிலி
சேர்கடுக் காய்த்தோல் தான்றிக்காய்த் தோலொடு
சாற்றும் நெல்லிவற் றல்லிவை யாவுமே
சமனெ டைப்புளி யாரையின் சாற்றினில்
ஏற்றித்தக்க பதத்துருண்டை யாக்கியே
இமையி னிற்தீட்ட யேகும் வியாதிகேளே. 982

நேர்சி லேத்துமம் நீர்விழு காசமும்
சேர்சி வப்புந் தினவுந் திமிரமும்
தேர்சி றுமைசெய் பில்லமுந் தீர்ந்துபோம்
ஓரிதாக் குரோச மென்ன வுரைப்பரே. 983

## ஆனந்த வைரவ மாத்திரை

பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர், வெள்ளை காக்கணம் பூவேர், ஓரிதழ்த்தாமரை வேர் வகைக்கு 5 பலம், சங்கு, துத்தம்,

வகைக்கு 2 பலம், துருசு, வெண்கல அரப்பொடி வகைக்கு 3 பலம் செம்புப் பொடி 4 பலம், சமுத்திராப் பழம் 1 பலம் இவைகளை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து மாத்திரை செய்து நிழலி லுலர்த்திக்கொண்டு காடியில் ஊறவைத்துக் கண்ணிலிட எல்லா நோயும் தீரும்.

## இந்தாதி மாத்திரை

மருவியே கயற்கண் ணொந்து வற்றியே யெரிப்பு முண்டாய்க்
கருவிழி கண்ணில் சற்றே கலங்கியே ரூபம் வேறாய்ச்
சருவுமிந் துப்பும் மஞ்சள் சாரணை வெள்ளை துத்தம்
அரையான்பாற் கழுதைப் பாலில் அகன்றுபோம் மாலை காசம்

## இரணசிங்கி மாத்திரை

பொரியும்பூ விந்தும்தச மொன்றும்நிரை கொண்டு
புகழ்மாவதி லுளுந்தேநிரை அறுகாலரை யதனைத்
திருவுஞ்சிலை யதனில்பய மதனால்மெழு கதுபோல்
திறமாயரைத் ததனைவழி பதமாய்க்கயி றளவாய்
அருளும்படி நிழல்மீதினில் கயிறானதை உலர்த்தி
அழகாயதை எடுத்துக்குழ லடைத்துத்தினங் குறித்துக்
குருவாகிய கயிற்றையெழில் சலமீதினி லிழைத்துக்
குணமாறிய ரணமீதினில் திலதமதை யிடுகில்

வெடிகின்றதோ ரிரணம்மது படர்தாமரை யுடனே
ஏகும்அரி கிரந்திசொரி கிரந்திபரு முளையுங்
கொடியபக்கப் பிளவைஉச்சிப் பிளவைராஜப் பிளவை
குடிபோம்லிங்கப் புற்றுகண்ட மாலைஅழு கணியும்
படுமேபொத்துக் கடியாம்மேக ரணம்ஆசனக் கிரந்தி
படும்புண்ணதின் கோழைவெளி கண்டரண முதலாய்க்
கெடுமேயினம் விழிமீதினில் வரும்நோயிதன் விபரங்
கேளுமினி நோயின்வகை கிருபையுடனே யுரைப்பேன்

உரைப்போம் நிமைமீதில் பருவும்பரு முளையும்
ஓங்கும்ரண சுக்கிரனுடன் வீங்கும்விழி குந்தம்
மறைப்பாகிய படலம்சொரி பில்லம்நீர்ப் பில்லம்
வளர்க்கும்நிமைக் கழலையுடன் ஆகுமது குவளை
விரைப்பாம்விழிச் சூடும்நிமைத் தடிப்பும்அதிற் சிவப்பும்
வெளிகண்டிடு மிதனையுடன் ஒளிமங்கிடு ரணமும்
கரையாவிழிப் பூவுமதில் நோயான தநேகம்
கதிர்முன்பனி போலேவினை கலங்கிப்பயந் தோடும்

தீரும்வினை யுளதும்அதில் இனமும்வினை தீரும்
செய்வீரிய ரணசிங்கியின் நாமம்உரைத் திடவே
ஆருமிதன் பொருளோர்ந்திடா அசடர்க்குரை யாதே
அருள்மீறிய குணவானிடம் அமையுமிந்த நூலே
தேரும்புவி யோர்க்கெய்திய திறமாகிய பொருளைத்
தென்பொதிகையில் முனிவோரதை திறமாய்ப்பின் வலுவாய்
ஆரும்பகி ரண்டமெனும் புராணத்தொரு வேதப்
புராணந்தரும் பொதிகைமலை முனியோதிய நூலே

## இரத்தினாதி மாத்திரை

நயனரோகங் கட்கெல்லாம் நன்றாம் ரத்தி
னாதியென்னும் குளிகை மருந்து கேளாய்
பயனுடன் பவளம் முத்து பச்சைநீலம்
பாங்கான வைரம் வைடூரி யத்தோடு
இயல்புட்ப ராகம்கோ மேதகம் மாணிக்கம்
இவற்றுடனே பொன்வெள்ளி திரிப லாதி
செயமுடைய செம்பு ரோகணி அஞ்சனக்கல்லும்
சிறுகீரை பொன்னாங்காணி சேர்ந்த தைலமே. 990)

ஏலமே துருசு துத்தம் ஏற்றிய தேற்றாங் கொட்டை
போலுமே யிரும்பு கஞ்சம் பொடியிவை நிறைகளொன்றாய்
சாலவே புளியம் பூவின் சாறுவார்த் தரைத்த வுருண்டை
மேலுமே லுழன்றார் கண்ணில் வியாதியொன் றில்லை தானே

(வேறு)

நற்பருதி யொத்தவொளி பெற்றநவ ரத்தினமும்
நலமான பஞ்ச லோகமும்
நரியெருமை பரிகழுதை நாய்புலி வண்டினொடு
நற்கரடி பற்க ளிவையும்

பொற்பரவு தாரம்மஞ்ச ளதிமதுர மேலமும்
பூநாக மாமை யோடு
புங்கம் வித் தும்கலை மான்கொம்பு சங்குதுத்தம்
புலவுகடல் நுரைகாத பாதலஞ்

சிற்பெறவே யிவையெல்லாந் தன்னிலொக்கக் கூட்டியே
திரிபலை தனியிற் சாற்றிற்
தினமே யரைத் துருண்டைச் சிக்கென உருட்டி
சீராக நிழலு லர்த்தி
இற்பரவு மாதர்தம் முலைப்பால் பனங்கருக்கு
இதமான சாறு தேன்நெய்
இவைதனி லுரைத்தெழுத நயனநோய்த் தீர்ந்துவிடும்
இரத்தினாதி யாவ திதுவே 992

(வேறு)

நீலம், பவளம், வைடூரியம், கோமேதகம், முத்து, பலகறை கடல்நுரை, கடல்நாக்கு, துத்தம், பீதரோகணி, மாதொதிரக்கல், மரமஞ்சள், சங்கு, இந்துப்பு, பழமிளகு 4, இவையெல்லாம் சமனாகப் பொடி செய்து சீலையிலிட்டு அரித்துக் குழம்புப்பால் தெளித்துப் பிறகு, பொன்னாங்காணிச்சாறு விட்டு அரைத்து, உருண்டை பண்ணி நிழற்பட உலர்த்தி முலைப்பாலிலிடப் பூ, இரணசுக்கிரன், பொட்டைக்கண், முடமயிர்க்கண், மாலைக்கண் மற்றுமுள்ள தொண்ணூற்றாறு வியாதியும் தீரும்.

(வேறு)

முத்து, பவளம், தாமிரம், தாளகம், வெண்கலம், துத்தநாகம், பொன், வெள்ளி, கோரோசனை, துத்தம், துருசு, அஞ்சனக்கல், வெள்ளைக் காக்கட்டான் பருப்பு இவைச் சமன் கூட்டி, சாரணை யிலைச்சாறு. கரிசாலைச்சாறு இதிலரைத்து கயிறு கட்டவும்' முலைப்பாலிலிடவும். கண்வேதனை, நீர்ப்பாய்ச்சல், பற்பரோகம், படலம், திமிரம் இவை தீரும். 994

இராம பாண மாத்திரை

வெள்ளை காக்கணம் வேருங் கிராம்புடன்
துள்ள வேயிடித் துப்பழச் சாற்றினில்
மெள்ளமை போலரைத் துருண்டை செய்திடில்
இல்லைப் பூவும் இராமன்கைப் பாணமே 995

(வேறு)

திரிகடுகு நவியாலம் வித்துதிரி பலையுடன்
சேருகறி மஞ்சளினும்
திறமான தாமரை வித்துளப் பருப்பதும்
சேர்பச்சைப் பூரம் நிரைசேர்

பரிவுட னிடித்துவடி செய்துசீ லைதனி
லரைபகர் கரிப்பா னதுவுமே
பண்புட னிம்பரசம் விட்டரை நீமயனப்
பதமுடன் தான்வ ழித்து
வரிசையுள் கயிறுசெய் நிழலினுலர்த் தானதை
வாங்கிமுன் ரசத்தெ ழுதிடில்
வரிசையுள விழிதனில் பரிசரண சுக்கிரனும்
வளர்படல விழிமு தலையும்
அருமையுள செயராம பாணமிதன் பேர்சொல்
அகன்றுகுடி போகும் நோய்கட்
கானதென பொதிகைமா மலையகத்திய ருரைசெய்
அருளு முறை கைபாகமே 996

## இலகு சந்தனாதி உருண்டை

வாசமுறு சந்தனம் பிச்சமல ரோரொன்று
வருகாசசெடை யிரண்டதாய்
வரிசையுள்ள காவிக்கல் கோரோசனை திப்பிலி
வளர்சீர கங்காசெடை
நேசமுட னேதண்ணீர் வார்த்தரைத் தோர்சாமம்
நீளவே கயிறுசேர்த்து
நிழல்தன்னி லுலர்த்தியே முலைப்பாலி லிடுகண்
ணெரிவு சதைவளர்த்தி
காசமுடன் திமிரங் கண்குருடு பீல்லமும்
கடியநிமை யிழிகண்ணுமே
கண்ணெரிவுந் திடுமன்ன கோப முற்றும்
கண்ணுள்நோய் களெல்லாம்
தேசமுறும் ஆதவன் கண்டவிருள் போலவே
தீருமே யெட்டுநாளில்
சீர்பெற்ற வாகடந் தேர்ந்தவர்கள் கண்டபடி
சேர்சந்த னாதியிதுவே 997

## இலகு ரத்தினாதி உருண்டை

துத்தமே துருசு நெல்லி துவர்கடுக் காய்கற் பூரம்
சித்தமே பொன்னாங் காணி சிறுகீரை பூலா வேரும்
வித்தகப் புளியம் பூவும் வெண்தலை யோடு மிக்க
முத்தொடு பவளம் நாக மிரும்புபொன் செம்பு வெள்ளி

இத்தனை யெல்லாம் பாகம் எலுமிச்சம் பழச்சாற் றரைத்து
உத்தம முலைப்பால் தன்னில் உரைத்திரு போது மிட்டால்
பித்தமே படலங் காசம் பில்லமே புகைச்சல் தீரும்
இத்தலங் கண்ணே காக்கும் இரத்தினாதி உருண்டை தானே

## இலிங்காதி குளிகை

புளியம் புறணிச் சாம்பலும் லிங்கமும்
பொருந்தவே பணவெடையதாய்ப்
புகழ்பெரிய துத்தமுந் துருசுமோ ரரைப்பலம்
போற்றுவை ரவன்கபாலந்
தெளியவே காசெடை சீருட னெடுத்ததைச்
சேரவே பொடிகள்செய்து
சிறப்புடன் காணியும் புளியிலை முசுக்கையுஞ்
சேர்கையின் பழச்சாறும்
வளியவே பெண்தனப் பால்தனி லரைத்துருண்டை
செய்து பின் னிழலுலர்த்தி
வருகின்ற புழுவெட்டு பில்லமும் பிரிச்சலும்
வருகதிர் முன்போலவே
வெளியாகு வென்றுமுன் பெரியோர்கள் சொன்னபடி
வேண்டியே செய்வதன்றி
வீறுபெறு லிங்காதி குளிகையைப் புவிதனில்
வெளிப்பட உரைத்ததிதுவே 999

## ஊசிக் காந்த உருண்டை

ஊசிக் காந்தம் ½ வராகன் எடை, ஏலம் ¼ வராகன் எடை சீரகம் ¼வாரகன் எடை, சுக்கு, மிளகு, திப்பிலி வகைக்கு 1 பண எடை இவையெல்லாம் பசுவின் பாலில் ஊறப்போட்டு, மறுநாளெடுத்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் கருக்கிக் கடுகுரண்டு முலைப்பாலில் உரைத்திடச் சகல நயன வியாதியுந் தீரும். 1000

## ஒளிவாதி மாத்திரை

கண்டநற் சங்கு நாலு கலந்தநற் றுரிசு ரண்டும்
கொண்டநல் லிந்து காவி குலவுவங் காளப் பச்சை
திண்டென மிளகு குன்றி தேசிநீர் வார்த்த ரைத்து
வண்டென விலங்குங் கண்கள் வளரும்பூ கரைந்து போமே. 1001

## கத்தூரி உருண்டை

கத்தூரி 1 வராகன் எடை, குங்குமப்பூ 2 வராகன் எடை, கிராம்பு 3 வராகன் எடை, சீரகம் 2 வராகன் எடை, முருங்கைப் பூ 2வராகன் எடை, சுக்கு 1 வராகன் எடை, நொச்சியிலைக் கொழுந்துச் சாறு 1 வராகன் எடை, முலைப்பால் விட்டரைத்து சிறு பயறு பிரமாணம் உருண்டை பண்ணி நசியம் பண்ணக் கண்ணிலே வரப்பட்ட வியாதியெல்லாங் குணமாம். 1002

## கபாலாதி மாத்திரை

அலைக்குந் தலையோ டதுகழஞ்சு அதிமதுரம் பீத ரோகணியும்
மலைக்குந் துத்தம் சங்கிவைதான் மற்றுந் துருசு வெண்கலத்தூள்
இலைக்கு மோரொான் றிருகழஞ்சு இன்னஞ் சொல்வேன் வெட்பூலா
நிலைக்கும் வோரிலைத் தாமரைவேர் நிசமாய்க் கழஞ்சு நாலாமே
புலைக்கும் புளியிலை சாறுதன்னால் பொருந்த வரைத்துருண்டை செய்து
மலைக்கும் தனத்தாள் பாலிலிட வளரும் படலம் பூகரையும்
துலைக்கும் மாங்கிச முளைகழலும் தோன்றிய வேதனை வீக்கம் போம்
இலைக்கும் நோய்கள் மாறிடுமென் றெங்கள் பெருமா னுரைத்ததுவே

(வேறு)

சிறிய பாலன் தலையோடும் சேர்ந்த துத்தம் அதிமதுரம்
திரிய கடுகு கடல் நுரையும் சேர வோரொான் றிருகழஞ்சு
அரிய நிம்பச் சாற்றரைத்து அறிந்து கண்ணில் விடுவீரேல்
பரியும் காசம் பூப்பில்லம் படலம் போகும் கபாலாதியே 1005

(வேறு)

சேர்ந்தநற் றுருசு நாலு செய்துத்த மெட்ட தாகும்
சார்ந்த சீனக் காரமிரண்டு தலையினோ டொன்ப தாகும்
போர்ந்த ஓரிதழ்த் தாமரையிரண்டு புகழ்தே தேசிச் சாற்றில்
ஆய்ந்தரை பச்சை தன்னை அயற்கண்ணில் நோய்தான் போமே

(வேறு)

மாண்டார் தலையோ டொருநாலும் மண்ணிற் பிறந்த கலங் கொம்பு
பூண்டார் துத்தம் ஒருநாலும் புதிய சீனக் காரமுடன்
நீண்டார் நிம்பச் சாறுதனில் நோக வரைத்தே யுருண்டைசெய்து
தூண்டார் நொந்த கண்ணிலிடத் தூய படலம் பூப்போமே 1007

## களிம்பு உருண்டை

துத்தம், துருசு, வெண்காரம், வெண்கலச்சதா, செப்புச்சதா தற்சமன், எலுமிச்சம் பழச்சாறு விட்டு களிம்பு உருண்டையுள்ள கலத்திலரைத்து உருண்டை செய்துகண்ணிலிட தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1008

## கருமேக மாத்திரை

சொரியதன்கூடச் சதாசிவஞ் சரியாய்ச்
சொன்னதோர் சங்கமும் பூதஞ்
செரதனைப் படியே யிரண்டதை யெடுத்துச்
சுருதியாந் தேயுவில் வெதுப்பிப்
பிரியமாய் நிம்பரசந் தன்னா லரைத்துப்
பேணியே வழித்ததை யுருட்டிப்
பின்புநீ கயிற்றை நிழல்தனி லுலர்த்திப்
பேதையர் பாலினா லெழுதில்
குறிப்புடன் கண்ணில் அமரமுந் திமிரமுங்
கூறிய பூமுத லனைத்துங்
குணமதாங் கருத்த மேக மிப்பேரென்
றுரைத்தன ரறிவுளோ ரவர்முன்
அறிவுடன் புவியில் அகத்திய முனிவர்
அறைந்தனர் ஒருகவி யதனில்
அன்பினா லறிந்து தெரிந்தவன் வைத்தியன்
அறிவிலான் மடையனென் றுரையே 1009

## கற்பூராதி உருண்டை

சீராருங் கற்பூர முத்தக் காசு
திரிபலை பலகறை யிந்துப்பு துத்தம்
பேராருங் கடனுரை யஞ்சனக்கல் நிமிளை
பீதரோகணி மஞ்சள் காவிக் கல்லும்
ஓராமதி மதுரம்வெள்ளி லோத்திர மிரும்பூரல்
உறுபொடி யெல்லாஞ் சரியாகக் கூட்டிக்
காராருங் கையாநீ ரதனிலாறு சாமங்
கருத்தாக யரைத்து நிழலிலுலர்த்திக் கொள்ளே 1100

உலர்த்திய மருந்து தன்னை நிறையோடுரைக்க
உயர்ந்து வருஞ்சூம்புக் குந்தந் தீரும்
சலத்திலுரைத் திடவு முடமயிர்கள் தீரும்
சிவப்புவரி பற்பரோக முலைப்பாலில் தீரும்
நலத்துடனே திருதேவிச் சாற்றி விட்டால்
நடுவிழியிற் காசம்வெள் ளெழுத்துத் தீரும்
அலைகடலில் விடமருந்து மானார் முன்னோர்
அழகியகற் பூராதி ஆகுமென்றே 1011

(வேறு)

கோரோ சனையோடு சாரணைவேர்
குலையாக வருமிளகு துருசுதுத்தம்
நேரான கற்பூரம் பீதரோகணி
நீண்மதுரம் கடுக்காயின் பருப்புங்கூடச்
சீரான திப்பிலியு மேலத்தோடே
சிறந்தநெல்லிக் காய்ச் சாற் றிலுண்டை
தீராத கண்புகைச்சல் சிவப்புக்கூச்சம்
தேனில்தனப் பாலிலிடத் தெளிந்து போமே 1012

(வேறு)

அனைத்தும்போம் வகைகேளீர் கற்பூ ராதிக்
கானபச்சைக் கற்பூரம் இந்துப்பு அரைக்கால்
வினைத்திடுநல் வீர்தங்காற் கழஞ்சே யாக
நீடியமிளகு திப்பிலி காரீ யந்தான்
நினைத்தளவோ ரொன்றரை யப்பூ நாகத்
தீயத்துடனே கடுவின் பருப்பும் வாங்கித்
தனித்தனியே வொவ்வொன்றோர் கழஞ்சே யாகத்
தானிரண்டு கழஞ்சுடனரி தாரந் தானே. 1013

தார்மேவு மெலுமிச்சம் பழத்தின் சாற்றிற்
தகைமையுட னரைத்திதனை மூன்று நாளும்
பார்மேவு நிழலு லர்த்திப் பின்னைப்
பரிந்திடுவீர் முலைப்பாலிற் படல பில்லம்
கார்மேவு விழிசிவந்து விரணமே கவிழ்ந்து
திரிந்திடு தலன்றி மேலே பார்க்கில்
நீர்மேவு திமிரபடலந் தான்போ மாகி
நேத்திரத்திற் தோடமொன்று நின்றி டாதே. 1014

(வேறு)

முத்தக் காசு கற்பூரம் முதிய கடுக்காய் பலகறை நெல்லி
துத்தத் தோடே அஞ்சனக்கல் தோன்றும் நிமிளை தன்னுடனே
கத்திக் கல்லும் வெள்ளிலோத்திரம் கடிய யிரும்புப் பொடியுடனே
சுத்த பீதரோ கணிமஞ்சள் தோன்று மதுர மிவையனைத்தும் 1015

ஆன படியே யொருநிறையாய் அந்தக் கற்பூ ராதியென்னும்
தானே தண்ணீர் விட்டரைத்துத் தகரா துருண்டை யானபின்பு
ஊன நயன நோய்களெல்லாம் உற்ற தனப்பால் தன்னிலிட்டால்
மானே நயனப் பிணிதீரும் வகைதா னிதனைப் பாராயே 1016

(வேறு)

நின்றிடு நல்வகை சேனீர் பூராதிக்கு
நிறை றக்கும்வேர் சிறுகீரை பொன்னாங்காணி
வெண்டிய வெண்காக்கணான் வேணம்புலி துத்தம்
விரல்தரு நற்தலையோடு வெண்கலத்தோடு
ஒன்றிடவே தாம்பிரத்தி னோடு கூட்டி
உகந்திதனைச் சமனாக்கி நிறுத்து நாளும்
உண்டிடவே யெலுமிச்சம் பழச்சாற்றிற் றுவளநீ
யரைத்தி தனை யளவாய் நீளவுருட்டிப்
பின்நிழலுலர்த் திதனை வீர கண்ணிலுற்ற
நோயறிந்தவர்க் குண்மை யாமே. 1017

(வேறு)

பருகுகற் பூரம் பாதி பகர்மடல் துருசு யிரண்டுள்
தருகுகை வெள்ளி லோத்திரம் தான்சாறு நிறையொன் றாகக்
கருகுமஞ் சனக்கல் லொன்று கடல்நுரை நால தாகப்
பெருகுறு நந்திச் சாற்றில் பெயர்த்தரைத் துருண்டை செய்யே 1018

(வேறு)

துத்தம் 2, இந்துப்பு 1, நிப்பிலி 1, எலுமிச்சம்பழச் சாற்றால் அரைத்து வெண்ணெய்யில் கலப்புரம் செய்து, பச்சைக் கற்பூரம் சேர்த்து இட இழிகண், புகைச்சல், பலவுந் தீரும். 1019

(வேறு)

முருங்கைவிதை, தேற்றான் விதை, தலைஓடு, கோழி முட்டை ஒடு, மனோசிலை வேரும் இலையும், துத்தம் 2, கற்பூரம், மஞ்சிட்டி, கையான் தகரை, பனைமட்டை இந்தச் சாறுகளில் அரைத்து. பிறகு தேனால் அரைத்துக் குழம்பாக்கிக் கண்ணில் இட தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1020

(வேறு)

கற்பூரமும் மிளகும் சரிகூட்டி பனைமட்டைச் சாறு வார்த்து 1 சாமம் அரைத்து நிழலிலுலர்த்தி, பூ விழுந்த கண்ணுக்கு முலைப் பாலிலும், படலத்திற்கு நந்தியாவட்டைச் சாற்றிலும், காசத் திற்குச் சிறுகீரைச் சாற்றிலும், மாலைக் கண்ணுக்குத் தேள் கொடுக்கிலைச் சாற்றிலும், மற்ற கண் ரோகங்களுக்குப் பனை மட்டைச் சாற்றிலும் உரைத்துப் போடத் தீரும். 1021

கனக தாம்பிராதி மாத்திரை

ஆணியோ ரிதழும் குடோரிவெண் புலியும்
ஐயிரு வராகனோ டதனில்
அரசுகுங் காளன் கருமணல் சோகி
அதனுடன் முத்தமும் பீங்கான்
பேணிய பிரம கபாலமும் நிரைகேள்
பின்னொரு வராகனா யெடுத்துப்
பிரியமா யிடித்து முசுக்கையும் கையான்
பின்பழச் சாற்றினால் அரைத்து
வாணியாஞ் சிலையின் மருந்தினை வழித்து
மதுரையின் கலந்தனி லுருட்டி
வரிசையாய் நிழலில் உலர்த்திய கயிற்றை
வாங்கிபின் ரசந்தன்னா லெழுதில்
காணுமுன் பில்லம் பிரிச்சலும் எரிச்சல்
கடுமையாம் பூப்பரு முளையும்
கலங்கியே மயங்கிக் கருங்கடல் புகுமே
கனகதாம் பிராதியின் கயிறே. 1022

கனக ரத்தினாதி உருண்டை

செய்ய கரியின் தந்தமுதல் திகழுஞ் சுவான பல்லீறாய்
அய்யா கரியின் தந்தமுதல் அளவாம் பன்றிக் கொம்புதாட்டு
மெய்யாந் திரிகடுகு சங்குடனே விளங்கு மதுர மரிதாரம்
பொய்யாங் காணி லிபதருமணி புங்கம் வித்துப் புகழ்வீரே 1023

வித்து தேற்றாம் பால்பளிங்கு விளங்குங் குங்கும பட்டையேலம்
துத்தமும் முத்தெருக் கின்செவி சொல்லுங் கோரோ சனைநிமிளை
சித்த கற்பூ ரம்காவி சட்டம் திகழுஞ் சனக்கல்லும்
நித்தத் திகழார் பஞ்சலோகம் நிறுப்பீர் ஒரொன் றரைக் கழஞ்சு.

ஓரோர் முத்துப் பவளமெனும் உடனே வைர வைடூரியம்
ஓரார் புலித்தார் புட்பராகம் இந்திர மணிநீல கோ மேதகம்
சீரார் சிவப்புத் தாளெனவே சிறப்பாங் கல்லொன் பதுந்தானே
நேரோ ரொன்ற ரைக்காலாய் நிறுத்துக் கொள்ளு வீரே 1025

கொள்ளு நாம மதுபுங்கு கொடுபட்டை நன்னாரி துளசி
பள்ளமாம் பச்சை மஞ்சள் பரிந்த மாதுளம் பழத்தின்நீர்
மெள்ளவோர் நாளா கத்தான் விளங்கவே யரைத்துத் தானே
வள்ளலெனக் கயிறாக்கி வளர்நிழ லுலர்த்திக் கொள்ளே 1026

வளமிகு நரையிற் பூப்போல மாதுளைநீர் வெள்ளெழுத்தை நீக்கும்
தளமிகு புழுநோய் கதலி தன்பழச் சாற்றால் தீரும்
உளமுருங் காயங் கையான் உற்றநோய் தொண்ணூற் றாறும்
கழலறத் திருந் தப்பாக் கனகரத்தி னாதி யீதே 1027

(வேறு)

போடுதற்கு நேத்திரத்தின் நோய்கட் கெல்லாம்
பூட்டுகின்றேன் கனகரத்தி னாதி தன்னை
ஆடுதற்கு இதுவொன்றாய்க் கண்ணோ வெல்லாம்
ஆச்சரிய மொழிந்துபோம் விபரங் கேளு
நீடுதற்குச் செம்பு வச்சிரம்
நேரான மரகதமும் புட்பராகம்
கோடுதற்குக் கோமேதகம் பவளம் பச்சைக்
கொடிவை டூரியத் தொன்ப தாச்சே 1028

ஆச்சப்பா ரந்தினங்க ளொன்ப தாகும்
அப்பனே லோகங்க ளொன்ப தாகும்
வாச்சப்பா தங்கமொடு வெள்ளி செம்பு
மைந்தனே பித்தளையுந் துத்த நாகம்
மோச்சப்பா வெள்ளீயங் காரீயங் கஞ்சா
உத்தமனே வொன்பதையு மொக்கக் கூட்டு
நீச்சப்பா துத்தமொடு துருசு சங்கு
நீலாஞ்சனம் பீதாஞ் சனமும் பாரே 1029

பாரப்பா பீதரோகணியும் கடல் நுரையும்
பரிவான மஞ்சளொடு கடுகுரோ கணியும்
நேரப்பா திப்பிலியுங் கோட்டந் தானும்
நிரையான நீர்ப்புங்க விதையி னோடு

காரப்பா வண்டோடு வாமை யொடு
கபாலோடு யிந்துப்புக் கற்பூரந் தானும்
தாரப்பா சந்தனமுஞ் செம்பஞ்சு கடுக்காய்
தாமரையின் கிழங்குடனே நெல்லிக் காய்தானே 1030

காணப்பா மருந்துவகை நாற்பத் தைந்தும்
காளொன்றுங் குறையாமல் நிறுத்தி வாங்கி
ஊணப்பா கல்வத்தி லிட்டு நீயும்
உத்தமனே பழச்சாற்றா லோர்நா ளாட்டி
பூணப்பா கொடுப்பைச்சாறு மறுநா ளாட்டி
புகழாக மூன்றாநாட் சிறுகீரைச் சாறும்
தோணப்பா நாலாநாட் கரிப்பான் சாறு
சுகமாக ஐந்தாம்நாட் பொடுதலையின் சாறே. 1031

சாறுகே ளாறாநாட் பிச்சிப்பூச் சாறும்
சாதகமா யேழாநாள் மல்லிகைப் பூச்சாறும்
வாறுகே ளெட்டாம்நாட் சண்பகப் பூச்சாறு
மைந்தனே யொன்பதாம்நாள் நந்திச் சாறு
வீறுகேள் பத்தாம்நாள் அல்லிப்பூச் சாறு
மேலான பதினோராம்நாள் முலைப்பா லப்பா
வேறுகே ளரைத்துடனே கயிறு போலே
விபரமுட னுருட்டியே நிழலில் வையே 1032

வைத்ததொரு கயிறெடுத்து நேத்திர ரோகம்
மைந்தனே தொண்ணூற் றாறுந் தீர
நைத்ததொரு அனுபானம் பார்த்து நன்றாய்
நயமாகத் தீட்டிடவே யருந்ததியுங் காணும்
மொய்த்ததொரு பூவெழு வகைச்சாறு கொண்டு
இருபூ சூத்திரத்திற் சொன்னமருந் தெல்லாம்
எய்த்ததொரு ஏழுவகைச் சாறு கொண்டு
இடுகனக ரத்தினத்தை யெல்லாம் போமே, 1033

கனத்த தாம்பிராதி மாத்திரை

துத்தந் துருசு வெண்கலத்தூள் துலங்கும் செம்பு திரிகடுகு
சுத்த சூடன் கற்பூரம் சொர்ண மெழுகு கடுகுமஞ்சள்
நத்த நன்னா கரவண்டு கடனுரை முட்டை யிந்துப்பும்
சுத்த வெண்சா ரடைகாக்கணம் செம்பருத்திப் பிஞ்சையும்
சேரே 1034

சேர்த்துச் செங் கழுநீர் மூலம் சிறுகையாந் தகரைச் சாற்றில்
கார்த்தரை நாலு சாமம் கனத்ததாம் பிராதி தன்னை
மாத்திரை விதமாய்ப் பண்ணி மாதர்தம் பாலி லிட்டால்
நேத்திர ரோக மெல்லாம் நிலைகெட்டு விட்டுப் போமே- 1035

## காக்கண மாத்திரை

வெள்ளைக்காக் கட்டான் பூவும் வேருஞ்சா ரணையுந் தொட்டி
வள்ளல்நா யுருவி கொன்றை வளரடப் பாங்காய் வித்து
மெள்ளவோ ரிதழால் வந்த மேவுந்தா மரையுங் கூட்டித்
தள்ளில்லா தனப்பால் கூட்டில் சார்ந்தசுக் கிரனும் போமே 1036

## குக்குடாதி மாத்திரை

துத்தந் தேற்றான் பலகறையுந் தொடுக்கும் புருடர் தலையோடு
மெத்த மிளகு திப்பிலியும் மேவுஞ் சேவல் நெஞ்செலும்பும்
உத்த கழஞ்சிவை யோரொன்றோடு உகந்த நிம்பச் சாற்
றரைத்துச்
சுத்த உருண்டை யுரைத்திடுக தோற்குங் கண்வலி பூப்போமே

## குங்கும தாம்பிராதி மாத்திரை

குங்குமம் மல்லிவிதை யேலமுடன் மதுரமும்
கூறிலவங்கப் பட்டையும்
கோட்டமுடன் சண்பகம் காய்பத்திரி ரோசனை
கூர்சீரகம் லவங்கம்
பங்குசம னாகவே பதமா யிடித்ததைப்
பழச்சாற்றி னாலரைத்துப்
பதமுடன் கயிறுசெய்து நிழலுலர்த் தாகவே
பானமதினா லெழுதிடில்
அங்குவரு நயனமதில் அமரமும் பில்லமும்
ஆனதோர் பற்பரோகம்
அடங்காத படலமும் புகைச்சலும் பூமுதல்
அனேகரோ கங்களெல்லாங்
தங்காம லோடுமது தவறாம லுண்மையாய்த்
தான்குங்கு மாதியெனவே
தரணியிற் பண்டிதர்க ளுக்கா வகத்தியர்
தயவுட னுரைத்ததிதுவே 1038

## குங்குமாதிக் குளிகை

ஏலம், இலங்கைப்பட்டை, கிராம்பு, அதிமதுரம், கோட்டம் கொத்தமல்லி, சண்பகப்பூ, கோரோசனை, சாதிக்காய், சாதி பத்திரி, சீரகம், குங்குமப்பூ இவைச் சமன், எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் குளிகை பண்ணி முலைப்பாலில் உரைத்துக் கண்ணிற் போடவும். கண்ணிலுள்ள படலம் முதலான தொண்ணூற்றாறு வியாதிகளும் போம் 1039

## குணமுகரியன் குளிகை

விடுவதோர் வெண்காரம் செம்பு வெங்கலமு
மீதுயர் காயமண் வளையில்
விளங்கிய வெள்ளைப் பூலாவேர்ப் பிரந்தேல
வினவுவோ ரிதழ்த்தா மரைக்கமலம்

விடுவிலா வேர்ஓ ரொன்று கழஞ்சாக
வகுத்து இந்துப்பிவை காலாய்
வன்மையாய் முருக்கம் புளியி லரைத்து
வரிசை யாலே நிழலுலர்த்தியிடு

இடுமனுப் பான மிரணசுக் கிரனுக்கேத
மிலாநா யுருவிச் சாற்றிலுரை
யெமிரிக்க ரியவெட் பூலாச் சாற்றில்
உத்தம தாளிப் பாலிலிட

கொடியஆணிபூ படலம் நீர்ப்பாய்ச்ச லெழுச்சிவளநெரிவு
கட்டி கூரிய சிவப்பு அழிகண்தான்
கூடில்நீர்ப் பூலாவேர் புரநண்ணிர
கூட்டியுரை சின்ன மெனங் காரமே 1041

## கோதந்தாதிக் குளிகை

பசுவின்பல் குதிரைப்பல் லானைப்பல்
பண்பான முட்டைத்தோ டாமையோடு
வசுவன்றிச் சந்தனஞ்சங்கு படிகந் துத்தம்
மனோசிலை மிளகுதாம் பிராதி மஞ்சள்

முசுவன்றிப் பூநாக மிதுவெல் லாந்தான்
முருகுபழச் சாறதனில் மூவிரட்டிச் சாமம்
கசுவின்றி யரைத்துருட்டி யெடுத்துநிழ லுலர்த்தி
கைக்கணக்காய்த் தேனிலுரைத் திடுகவென் றாயே.

இயன்றவகை யேசெய்யச் சதைப்படலந் தீரும்
ஏந்திழையாள் முலைப்பாலிற் பற்பரோகந் தீரும்
அயன்றதனைத் தறுகநன் னீரிலுரைத் திட்டால்
வலியுட னோபட்டு மலறி யோடு
மயன்றியரும் பற்பரோ கங்க ளெல்லாம்
வளமைமிகு கருவியொப்பா யறுத்தே நீக்குங்
குயன்றுதலாய் வருஞ்சாச குணமுந் தீர்க்குங்
கோதந்தாதிக் குளிகைவகை கூற லாமே 1042

(வேறு)

பசுவின்பல் பண எடை, சந்தனம் 10 பண எடை, அரக்கு 10 பண எடை, பிச்சி அரும்பு 2 பண எடை, செஞ்சந்தனம் 2 பண எடை, தேற்றாம்பால் 2 பண எடை, பீதரோகணி 1பண எடை இவை முலைப்பாலிலரைத்து உருண்டை பண்ணி வைத்து, பல வியாதிகளுக்கும் இடலாம். முலைப்பால், தேன் இவற்றில் இட ோம்.

## சங்காதி உருண்டை

கடுக்காய் திப்பிலி வெண்காரம்
கடிய கடல்நுரை லோத்திரமும்
தொடுத்தார் துத்த மோர்கழஞ்சு
துருசு சங்கு பதின்கழஞ்சு
மடுத்தார் முருங்கைப் பூச்சாற்றில்
மதியாய் மூன்று நாளரைத்து
எடுத்தோர்ப் பூக்காசம் பூப்படலம்தான்
ஏகுஞ் சங்காதி யீதே 1044

(வேறு)

சங்கு துருசு தலையோடும் சமனாய் நாலு கழஞ்சதனில்
பொங்கு துத்த மிருகழஞ்சு ஓரிதழ்த் தாமரை வேர்பிடியாம்
தங்கும் பழச்சாறு தனிலரைத்துத் தாமிரத்திற் கயிறு செய்து
பொங்கு தனப்பால் தன்னிலிடப் போகுநோய் தொண்ணூற்
றாறும்

(வேறு)

சங்கு மனோசிலை தனித்தேற் றான்கற் பூரம்
அங்கஞ் சனக்கல் பீதரோகணி அழப்படம் வெள்ளி லோத்திரம்
துங்க மதுரம் கடல்நுரை துருசு துத்தம் காவிமண்
இங்கெ லுமிச்சஞ் சாற்றரைத் திடுகிற் தொண்ணூற் றாறோடும்

(வேறு)

சங்கு திப்பிலி பீதரோகணி தார மோடதி மதுரமும்
புங்கம் வித்தொடு மிளகுசுக்கு புதிய துத்தம் மனோசிலை
அங்க ரைப்பது நந்திபத்திரி சாறு தேனுட னுலாவியே
கங்குல் பற்றிய விழியி லெழுதிடில் காசமாம் படல நாசமே

(வேறு)

பலகறை சங்கு பீங்கான் படிகக்கல் குருந்து துத்தம்
அலைகடல் நுரையோ டிந்து அரிதகி முட்டை யோடும்
சலசிப்பி பளிங்கு தேற்றான் வித்துடன் துருசு கூட
நிலவெள்ளை சாரணை வேரும் நீயரைபுங்கம் பாலில் 1048
அரைத்திடு நாலு சாமம் ஆனசங் காதி தன்னை
உரைத்திதை யனுபா னத்தில் உவந்துநீ ரிடுவீ ராகில்
மறைத்திடும் படலம் குந்தம் வளர்ந்திடு மிதனைப் பூக்கள்
இரைத்தெழுந் தோடு மென்றே இறையவ ருரைத்த வாறே

சங்கானாருண்டை

வெள்ளைக்காக்கணான்வேர், துத்தம், துருசு, பளிங்கு, சங்கு, மஞ்சள், திப்பிலி, சந்தனம், பச்சைக் கற்பூரம் தற்சமன். இவை யெல்லாவற்றுக்கும் சரி செம்புப் பொடி கூட்டி, தேசிச் சாற்றி லரைத்து முதற்சொன்ன மருந்தெல்லாம் பிறகு இட்டு, அரைத்து மூன்று நாளைக்குப் பிறகு கயிறு செய்து நிழலிலுலர்த்தி முலைப் பாலிலிடவும். தீரும் வியாதிகள்: பலவகைக் காசமும் கண்ணோவும், நீர்க்குத்து, சுற்றுக்குலைதல், அழற்சி, ஊக்கொண்டு குத்துவதுபோல் இருப்பது, சிவப்பு, இன்னும் கண்ணிலுள்ள வியாதியெல்லாம் தீரும். 1050

சத்துரு இரத்தினாதி மாத்திரை

துத்த முந்திரி கடுகுநெல்லி தூய கடுக்காய் பீதரோகணி
சித்த மாம்பொன் னாங்காணி சிறுகீரை பூலா வேரும்
வித்தகப் புளியம் பூவும் வெண்தலை யோடு தானும்
முத்தொடு பவளம் கஞ்சம் இரும்புபொன் வெள்ளி கூட்டே,

கூட்டிடும் செம்பு தானும் கூட்டெலு மிச்சஞ் சாற்றை
ஊட்டியே அரைத்து நிழலில் உலர்த்தியே முலைப்பால்வார்த்து
காத்திரு கண்ணி லிட்டால் கண்பித்தம் படலம் காசம்
ஓட்டிடும் விரைவி லீசன் ஒண்டொடிக் குரைத்த வாறே. 1052

## சந்தனாதி உருண்டை

சந்தன மிரண்டு பிச்சி தக்கநீர்ப் பூலா வின்வேர்
வந்திடு மதுர மேலம் மருவோரிதழ்த் தாமரை யின்வேர்
புந்திபொன் மெழுகு காவி புகழ்பெறு சாதி லிங்கம்
இங்கிவைச் சமபாக மிளநீ ரிவைபன்னீர் வார்த்தரைத் தப்பே.

அரைத்திடு நாலு சாமம் அழகுற அரைத்துப் பின்னை
வசத்துட னுருட்டிக் கொண்டு வன்மையாய் நிழலிலு லர்த்தி
உரைத்திடப் படலம் பில்லம் உயர்ந்த சுக்கிரன் குந்தம்
இரைத்தெழுந் தோடும் பாராய் இயல்பெறு சந்தனாதி
யின்பேரே. 1054

(வேறு)

பெரியவிச்சி கொழுந்தரும்பும் முருங்கைப் பூவும்
பீங்கான் பொன்மெழுகு மடல்பேசு துத்தம்
அரியபச்சைக் கற்பூரம் மலாக்கா சந்தம்
ஆனதொரு கல்காவி அதிமதுரத் தோடே
உரியவெள்ளைச் சாரணைவேர் ஒக்கக் கூட்டி
உகந்திடவே பூக்கரைத்து உருண்டை செய்து
வரிசைபெறும் புகழ்சந்த னாதி யென்னும்
வரும்நயனப் பலநோய்கள் தீருந் தானே. 1055

(வேறு)

கடுக்காய் திப்பிலி வெண்காரம்
சந்தங் கடல்நுரை வெள்ளிலோத்திரமும்
தொடுத்தா லொன்றோர் கழஞ்சு
துருசுசங்கு பவளமோ ரொன்றுநாக்கழஞ்சு
அடுத்தே முருங்கைப் பூச்சாற்றில்
அரிய மூன்று நாளரைக்கிற்
கடுத்தார் காசம் பூப்படலம்
தருதுஞ் சந்த னாதியிதே. 1056

(வேறு)

கார்அதி மதுரம் ஒன்றாம் கவர்பொன்னின் மெழுகு நாலு
சேரிரு வாட்சி ரெண்டு திகழ்பீத ரோணி யிரண்டு
நேர்புளி யம்பூச் சாற்றில் நேகவரைத் துருண்டை செய்து
பார்சந்த னாதி கண்ணில் பருகிட நோய்கள் போமே. 1057

(வேறு)

பொன்னாங் காணி சிறுகீரை பொய்த்தாமரை பருத்த மிளகு
நந்தியா வட்டப் பூவேர் வெள்ளைக்காக்கணம் வேரும் பூவும்
மின்னா யிரண்டு பழச்சாற்றில் மேவவுரைத்த உண்டை
தன்னை
மின்னார் கண்ணில் தேய்த்தெழுத மிழிகண் தெரிந்து
நலமாமே. 1058

(வேறு)

சந்தனம், இந்துப்பு, கடல்நுரை, கோழிமுட்டை ஓடு, சங்கு, முத்து, திப்பிலி, படிகாரம், மிளகு, தேற்றாங்கொட்டை, இவை கூட்டி, சமன் மடல் துத்தம், எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்து, உருண்டை பண்ணி நிழலிலுலர்த்தி, தேனில் உரைத்துக் கண்ணி விடவும். கண்ணோ வென்னப்பட்டதற்கெல்லாம் இடலாம்.

சந்திர காந்தக் குளிகை

திப்பிலி, வசம்பு, சீலையில் கட்டி, பசுவின் பாலில் போட்டுக் காய்ச்சி, இப்படி மூன்று முறை காய்ச்சி, கற்பூரம் சேர்த்து' அரைத்துருண்டை செய்து, செம்பில் உரைத்திட படலம், ஆணிப் பூ, நீர்ப்பாய்ச்சல், விழிகண் குருடு, அழிகண் பல வியாதியும் தீரும்.

சந்திரப் பிரகாசம் மாத்திரை

சந்திரப் பிரகாச மென்னுமுரை யதனைச்
சாற்றுகிறேன் மரீசமர மஞ்ச ளொடு
கந்தக்கோ ரைக்கிழங்கு வேப்ப மொட்டு
கடுக்காயும் வாய்விளங்கம் கனிவாய்த் தேடி
இந்தவகைக் கோர்நிறையா யெடுத்துக் கொண்டு
இட்டரைவெள் ளாட்டுநீர் தன்னால் நீயும்
அந்தமாம் மாத்திரைசெய் நிழலு லர்த்தி
அழகான சிமிழிக்குள் ளடைத்துக் கொள்ளே. 1061

குடத்தினது தண்ணீரில் உறைத்துப் போடக்
குணமாகுந் திமிரமுடன் கூடுங் கூடும்
அடைத்தேனி லுறைத்திடவே படலம் போகும்
ஆயிழையாள் தனப்பாலில் சுக்கி ரன்போம்
திடமான கோசலத்தி லுரைத்துப் போடத்
தீங்கான பில்லமது தீர்ந்து போகும்
படைத்தபுவி மனுவோர்கள் பிழைக்க வேண்டிப்
பார்புகழும் மலைமுனிவர் பகர்ந்த நூலே 1062

சந்திரோதய மாத்திரை

கடுக்காய் திப்பிலி மனோசிலையும்
கனத்த சங்கு முடிகோட்டம்
முடுக்கா யுறைக்கும் மிளகுடனே
முத்த வசம்பு குறிநிறையாய்
சடக்கா யரைத்து நீரதனால்
சாமம் வெள்ளாட் டுப்பாலால்
மடக்கி யரைத்து மைபோலே
மாத்திரை செய்து நிழலுலர்த்தே 1063

உலர்த்தும் சந்திரோ தயவடிவை
உரைத்துப் போடு மிளகதுபோல்
பிலத்து வளர்ந்த சதைப்படலம்
பித்த காசம் மாலைக்கண்
வலுத்த கண்ணின் வலியுடனே
விரணச் சுக்கிரன் வாங்கிவிடும்
தலத்தோர் புகழும் மலைமுனிவர்
சாற்று முறையைத் தான்பாரே 1064

(வேறு)

குறித்ததோர் வெண்ணெய் வசம்பொடு கோட்டம்
கூறிய திப்பிலி மரீசம்
கொடியவெண் சங்குப்பொடி மனோ சிலையும்
குணம்பெறு மரமஞ்ச ளதுவும்
திறத்துடன் தான்றிக்காய் விதைப்ப ருப்பும்
சிறப்புடன் சரியெடை யெடுத்து
சேரவே பொடித்துப்பிள்ளையின் பாலால்
சிலைதனிற் சாமமே யரைத்துச்

சறத்துடன் வழித்து கயிறு நிழலுலர்த்தித்தான்
சங்கபா னத்தா லிழைத்துத்
தரணியில் பிணியோர் விழிதனி லிடுகில்
தானிமைத் தடிப்புடன் சிவப்பும்

உறத்ததுர் மாங்கிசம் பில்லமும் படல
மோங்கிடும் தினவுடன் பூவும்
ஓதிடும் பூத நாளையி லகன்று
உதித்திடும் சந்திரோ தயமே 1065

(வேறு)

அஞ்சனக்கல், மிளகு, பலகறை, மரமஞ்சள், குக்குடம் பீதரோகணி, இலவங்கம், அதிமதுரம், கடல்நுரை, மயிர் சுட்ட சாம்பல், வெள்ளிலோத்திரம் இவை 1 பண எடையாகச் சரி நிறைக் கொண்டு, முலைப்பாலிலாவது, கையாந்தகரைச் சாற்றி லாவது சாரணைச் சாற்றிலாவது எலுமிச்சம் பழச்சாற்றிலாவது அரைத்து, பயறுபோல மாத்திரை பண்ணி வைத்துக் கொண்டு, இந்தச்சாற்றில் ஏதுவான சாற்றில்ஒரு மாத்திரை உரைத்துக் கண்ணிலே போடவும். சகல வியாதியும் தீரும்.

## இதுக்கு மேல் மருந்து

பசுவின் பால் பச்சைப் பாலுறைய வைத்து அதிலே வெண் ணெய் எடுத்து ஒரு காண பிரமாணம் துத்தம், அந்தப் பிரமாணம் துருசும், சிற்றெறும்பும், மூக்கரைச் சாரணை, இச்சாறு, எலுமிச்சம் பழச்சாறும் விட்டரைத்து, செப்பில் வழித்து வைத்துக் கொண்டு கண்ணிற் போடவும். இப்படி 3 நாட்கள் போடவும். சகல கண் வலியும் தீரும். 1066

(வேறு)

பொன்னாங்காணி வேர், சிறுகீரை வேர், வெள்ளைக் காக்கணம் வேர், சங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, திருத்துழாய், செங் கழுநீர் தாது, தாமரை வளையம், கோட்டம் வகைக்கு 1 பலம் வெண்கல சாசுமம் 5 பலம், இவைகளை 4 நாட்கள் முலைப்பால் வார்த்தரைத்து மாத்திரை செய்து நிழலிலுலர்த்திக் கண்ணிலிட தலைநோய், சீகான் இவை தீரும். 1067

## சிங்காதி மாத்திரை

அத்திய துருசு துத்தம் அரிதாரங் காசுக் கட்டி
மெத்திய வெள்ளி லோத்திரம் மிருதார்சிங் கோடு நாவி
பத்திய பச்சைகுங் கிலியம் பசர்தரு கடுக்காய் கூட
முத்திய புங்கம் பாலில் முனைந்தரை நாலு சாமம் 1068

அரைத்திதை யுருண்டை செய்து அழகதாய் நிழலு லர்த்தி
உரைத்திட முலைப்பால் தன்னில் உச்சிகண் குவளை குத்தி
நிரைத்தநீர் சீழு மாறி நீங்கிடும் வலியும் வீக்கம்
இரைத்தெழுந் தோடு மென்றே இறையவ ருரைத்த வாறே 1069

## சிரசுவத்தி உருண்டை

சிரந்திரி கடுகிந் துப்பு திரிபலை மதுர மேலம்
வரந்தரு கரிமா தந்த மருவு சாரடை பளிங்கு
விரந்தரு முத்தே தந்த முயர்குறிஞ் சிரிப்பான் தந்தம்
தரந்தரு மானை மேதி புகழ்தலை யிபத்தின் கொம்பே 1070

இவத்தில் முத்தெருக் கின்செவிஇதழ் கஞ்ச மீயம் நாக்கு
தவத்தில் குங்குமம் மிரும்பு தாம்பிரம் சங்கு பீங்கான்
அவத்த மொன்றில்லா துத்தந் துருசுநிற் சமனி ரண்டுந்
தவத்தி னாலது வெவ்வேறே தான்கழஞ் சியல்பாங் கூட்டே 1071

கூட்டரைக் கழஞ்சு வெள்ளிக் கூறிடுங் கனகங் காலும்
மீட்டமாம் புங்கு கையாந் தகரையும் நிம்பச் சாறு
வாட்டமில் லொருநாற் சாமம் வகையுமிப் படியே யாக
நாட்டமா யுரைத்துக் கூட்டி நலமுட னுருட்டிக் கொள்ளே 1072

உருட்டியே நிழலுலர்த்தா யுலர்த்தியே நிறையோ ரிட்டால்
மருட்டிய புகைச்சல் தீரும் வாதை கையான் நீரில்
இருட்டலா மாலை நிம்ப மியந்தெழு பற்ப ரோகம்
திருட்டது வெல்லாந் தீரும் சிரசுவத்தி தன்பே ரென்றே 1073

## சுகுடன் கற்பூரக் குளிகை

துத்தம் 1, துருசு 1, பொன்னாங்காணி வேர் 1, ஓரிலைத் தாமரை வேர் 1, சுகுடன் கற்பூரம் 1 தேசிப் பழச்சாற்றால் அரைத்து உருண்டை செய்து முலைப்பாலில் தேய்த்திட புகைச்சல், கண்ணில் பலகுற்றமும் தீரும். 1074

## சுனகேத்திராதி குளிகை

எங்கும் பெரிய திரிகடுகு இயல்வாய் புழுவை புங்கம்விதை
தங்குந் திரிபலை விளரால் தனிபவளஞ் சம்பு செம்பு
பொங்கு பளிங்கு கனகக்கல்லும் புகழுஞ் சுக்காங் கல்துத்தம்
இங்குஞ்சேர் யிந்துப்புபொன் மெழுகு இவைசம னாகக்
கொள்ளே 1075

இயற்கன் னதிவி டையம் இவைசேர் காவிமண் தனிலே
புயக்கன் பீத ரோகணியும் புகழ்சந் தனமோ ரிரண்டெனவே
தயக்கிய லுண்கண் மடவாய் கருதும் புங்கிலை கையான்
செயலுக் கிசையும் பச்சைமஞ்சள் சிறுதே னிறையில் மிகவரையே

அன்பா யோரோர் சாமமென அழகாய் வேறு வேறரைத்து
பின்பாந்தேனி லுரைத்திடவே பிரியுங் காசம் வெள்ளெழுத்து
துன்பாம் படலம் பில்லமென சொல்லும் பற்ப ரோகமெல்லாம்
இன்பா யிரவி பனிபோலே இயலுஞ் சுனகேத்தி ராதியதே 1077

## சூதஇரத்தினாதி மாத்திரை

துத்தமே துருசு நெல்லி தூயதோர் கடுக்காய் கூட்டி
வித்தகப் புளியம் பூவும் வெண்தலை யோடுங் கூட்டிச்
சித்தமாம் பொன்னாங் காணி வெள்ளிபொன் செம்பி ரும்பு
பத்தியா யதனில் கூட்டப் பட்சமாய் மருந்து கேளே. 1078

செறந்திரி கடுகிந் துப்பு திரிபலை மதுர மேலம்
மறந்தரு கரிமாத் தந்தம் மருவு சாரணை பளிங்கு
உறந்தரு முத்த கெந்தம் உயர்ந்ததோர் குதிரைத் தந்தம்
பொறந்தரு பன்றி யின்பல் புலியின்பல் இவற்றி னோடே.

இலங்கு முத்தெருக் கஞ்செவி இதழ்க்கஞ்சச் குருவி நாக்கு
தலத்தில் குங்குமம் இரும்பு தாமிரத் துடனே பீங்கான்
நலத்திதம் புரியுந் துத்தம் துருசி னீர்சமம் யிரண்டு
தலத்தினி லதுவெவ் வேறே தான்கழஞ் சியல்பாய்க் கூட்டே.

கூட்டுநற் கழஞ்சு வெள்ளி கூரிங் கு கனகங் காலும்
ஈட்டமாம் புங்கு கையான் இயல்புட னிம்பச் சாறும்
வாட்டமில் வொவ்வோர் சாமம் வகையிந்தப் படியே வொக்க
நாட்டமா யரைத்துக் கூட்டி நலமுட னுருட்டிக் கொள்ளே

உருட்டியே நிழலு லர்த்தாய் உலர்த்தியே நீரி லிட்டால்
மருட்டிய புகைச்சல் திரு மல்லது கையா நீரில்
இருட்டிலா மாலை நிம்பம் எழுபற்ப ரோகம் பித்தந்
திருட்டமாங் காசம் பில்லந் திரளுமங் குழம்ப னேகஞ்
சுரட்டது எல்லாந் தீருஞ் சூதரத்தி னாதி யாமே.

## சூதத் தாம்பிராதி உருண்டை

சூதத் திரட்டி காரீயம் சொரியாந் துத்த மதற்குரெட்டி
சாதிச் சங்கு மதற்குரெட்டி தாம்பிர மதற்கு ரெட்டி
ஏதிட்ட ரைப்ப மெனில் நிம்பஞ் சாற்றில் தாமரைத்து
ஓதிச் சொன்னோங் கண்நோய்கள் ஒன்றும் நில்லா தோடுமே

## சூரிய காந்திக் கயிறு

கருங்கொள்ளு முத்துடன் பவளமுந் துருசுமே
காசெடை தானெ டுத்துக்
காணியிலை யும்புளி சங்கிலைச் சாற்றால்
கருத்துட னரைத்த பின்பு
மருங்குடன் மதுரைக் கலத்தூரில் வைத்ததை
வளர்சங்கி னாலி ழைத்து
மருவுடன் கயிறுசெய் தேநிழ லுலர்த்திவை
மாதர்பால் பழச்சாற் றதனில்
பெருங்கண்ணில் வந்ததொரு பில்லமும் படலமும்
புகைச் சலுடனீர்ப் பாய்ச்சலும்
பெருகுவெங் காசமுந் திமிரமும் போமதின்
பேர்சூரிய காந்தி யெளிதில்
அருக்கன்முன் வந்தயிருள் அகல்கின்ற தன்மைபோல்
அரியகண் ணோய்க ளெல்லாம்
அகலுமென் றேமுனம் பெரியோர்கள் சொன்னதிது
அருஞ்சூரிய காந்திக் கயிறே.

## செயசிந்தாமணி மாத்திரை

தெத்திடும் பழத்தின் வித்தும் சிறந்தஇந் துப்பு சுக்கு
பத்திடுத் துத்தம் நெல்லி பயன்படு மதுரந் தானும்
செத்திடு மஞ்ச னக்கல் சிறந்தகற் பூரந் தானும்
மத்திடும் பீத ரோகணி மாதுளம் பழத்தின் சாறே. 1085

மாதுளம் பழத்தின் சாற்றால் மருவிய புளியஞ் சாற்றால்
கோதற அரைத்துப் பின்னை குளிரவே யுருண்டை பண்ணிப்
போதறக் கண்ணில் போடப் பொருந்திய திமிரங் காசம்
சீதளஞ் சிவப்புந் தீரும் செயசிந்தா மணியீ தாமே.

## தந்த இரத்தினாதி மாத்திரை

மானுடன் பரிகழுதை மரைகரடி புலிமுதலை
வன்கீரி ஞமலி யுடனே
வளமான நரியெருமை மாவேக முயல்சுணங்கன்
மதித்திடு குரங்கு பூனை
கூனுடன் கரிவராகம் கோவுமி வைகள்பல்
குறித்தகரி கொம்பு நகம்பல்
குறிகோழி நாகர வண்டொடு சாரணை
குறித்ததோ ராமை யோடும்
கானதிரி கடுகுடன் திரிபலை நவரத்தின
கனபஞ்ச லோகம் சங்கு
கருதிடுந் துருசு துத்தமும் நிம்மப்பழக்
கரிசாலம் சாற்ற ரைத்து
ஆனபனை மட்டைமுலைப் பாலிலிட வேஆணிப்
பூவுடன் படலம் காசம்
தீருமிதில் வெகுரோகம் திரிபோக நவரத்தின
தந்தரத்தி னாதி யிதுவே 1087

## தம்பிராதி மாத்திரை

செம்பொடு பளிங்கு துத்தம் சேர்வது துருசே யாக
நம்பிடும் சிறுகீரை வேர்நற் பொன்னாங் காணி வேரும்
கம்பணி தேசிச் சாற்றில் காலந்தரைத் துருண்டை செய்து
அம்பணி விழியாள் பாலி லிடவிழி சிவப்புப் போமே 1088

(வேறு)

அஞ்சனக் கல்லு துத்தம் அதனில் தாம்பிரம் ரோகணி
மிஞ்சவே தாலஞ் சாற்றில் மிகவரைத் துருண்டை யாக்கித்
துஞ்சவே முலைப்பால் தன்னில் சூழ்த்திடும் கண்ணில் போடத்
தஞ்சமாம் தாம்பி ராதி சகலரோ கங்கள் போமே 1089

(வேறு)

நன்றான தாம்பிராதி செம்பொடு பதினாறு
வெள்ளியெட் டதிமதுரமும்
நற்கோட்டம் பனிரண் டாகவே யிதனிலே
நல்லிந்து யெட்டாகவே
இந்தான திப்பிலி நாலாகவேஇவைகள்
ஏற்றமுட னேயெடுத்து
இதமாக வேநல்ல வெள்ளைச் சாரடையின்வேர்
ஏற்றமுட னாலாகவே
சந்தான வெள்ளாட்டுப் பால்வார்த்து ஏழுநா
ளதையரைத் துருண்டைசெய்து
சதிராக நிழலுற்று அனுபான மதிலிடு
சார்ந்தவெகு ரோகமகலும்
பொந்தாம லெழுகின்ற பில்லமும் அமரமும்
பொரிகின்ற நிமையடிசலும்
போகாத பூவொடு படலமும் காசமும்
பொருந்தியெழு கின்றமுளையும்
மந்தார காசமும் மாங்கிச வளர்த்தியும்
அன்னகோபம் சிவப்பும்
அதிராக நயனத்தில் எழுகின்ற நோயெலாம்
அகற்றுமிது தாம்பிராதியே 1090

(வேறு)

செம்பு கழஞ்சு சேர்பூரம் பாதியுமாம்
நம்பு துத்தந்தான் கால்பாதி—கொம்பனையாய்
கூட்டிப் பழச்சா றதனா லரைத்துருண்டை
நாட்டில்தனப் பாலிலிட நன்று 1091

(வேறு)

நலமுள சொரியின் சதாசிவன் பீங்கான்
நன்மையாங் கருமணல் சோகி
நாட்டினில் மனிதர் கபாலம்வெம் புலியும்
நயமுடன் வராகனோ டதனில்
குணமுள மரையின் கிழங்குடன் மதியும்
கூர்மையா மந்தலை யுருளைக்
குறிப்புடன் சீரகம் பஞ்சமும் வகைக்குக்
கூறிய திசையதா யெடுத்துப்

பலமுட னிடித்து முசுக்கையின் பழச்சாற்
றாலரை சாமமோ ரெட்டும்
பேணிநீ வழித்துக் கயிறதா யுருட்டிப்
பிரியமாய் நிழல்தனில் உலர்த்தி
வலமுள விழிநீர்ப் பில்லமும் படலம்
வாங்குந்துர் மாங்கிசங் குத்தல்
வகைபெறு நாகப் படலமு மனைத்தும்
வாங்கும்தாம் பிராதியின் வலிவே.

(வேறு)

துருசுடன்சோகி கருமணல் சொரியன்
அதனுடன் சுத்தவெண் பீங்கான்
சேரதனை வராகனெடை யுடனதில்
சொன்ன வெண்காரம்வெம் புலியும்
வரிசையோ ரிதழின் வேர்செந் தலையும்
வகையுடன் திசையதா யெடுத்து
வாகுட னிடித்துச் சேலையால் வடித்து
வளர்பெருஞ் சிலைதனி லமைத்துப்
பரிசமா முசுக்கை கரிப்பநிம் பழச்சாற்
றாலரை வாரமோர் தினமாய்ப்
பேணியே வழித்துக் கலந்தனி லுருட்டிப்
பிரியமாய் நிழல்தனி லுலர்த்தி
கரிசமாங் கண்ணில் அமரமுந் திமிரம்
கதித்தெழு பூமுத லனைத்தும்
கலங்கியே மயங்கிக் கருங்கடல் புகுமே
கனகதாம் பிராதியின் கயிறே. 1093

(வேறு)

துத்தம் துருசு நெல்விமுள்ளி தூய கடுக்காய் கற்பூரம்
சித்தம் மகிழும் பொன்னாங் காணி சிறிய கீரை பூலாவேர்
மத்த பெருமைத் ததியோடு மருவு மோரிதழ்த் தாமரைவேர்
முத்துப் பவளம் கஞ்சமொடு முயன்ற யிரும்பு பித்தளையே 1094

செம்புமுதலா யெலுமிச்சம் பழச்சாற்றிற்
சேரவரைத் துண்டை பண்ணி
கும்ப முலைப் பால்தனி லுரைத்துக்
கூர்வேல் விழியிலிட வேதான்

அம்புவிழி யாய்கண் ணோய்தான்
அறுபத் தாறுமுப் பதும்போம்
நம்பா நந்திக் குரைத்தமொழி
நாமும் புவியோர்க் குரைத்தோமே 1095

(வேறு)

செம்பது பளிங்கு துத்தம் சேர்தலை கபாலஞ் சுக்கு
நன்சிறு கீரை யோடு நற்பொன்னாங் காணி வேரும்
கம்மிடு தேசிச் சாற்றிற் கலந்தரைத் துருண்டை செய்து
தம்முலைப் பாலிற் தேய்த்திடில் தீகோப மெல்லாம் போமே 1096

(வேறு)

மாஞ்சிலக் குழஞ்சான் அஞ்சனக்கல்
வாரினுரையுஞ் சந்தனமும்
தேஞ்சங்கு யிந்துப்பு செம்புப்
பொடியோ டல்லிக் கிழங்கு
பாஞ்ச மனோசிலை யிலவங்கம்
பச்சிலை யேலம் மிளகுமஞ்சள்
காஞ்ச திப்பிலி சண்பகப்பூ
கருது வெள்ளிப் பளிங்காமே 1097

பளிங்கு தேற்றான்விதை மரமஞ்சள்
பகரும் வெங்கார முடன்கோழி
களிக்குஞ் சிறுகீ ரையின்வேர்
கோவின் பல்எடை சரியாய்
களிக்கும் பிக்குகை யான்தகரை
கதித்த வேப்பி னிலைச்சாறு
அளிக்குஞ் சாறுக் கொவ்வொருநாள்
அரையீர் மூன்று நாளைக்கும். 1098

மூன்று நாளும் சென்றபின்பு முதிய தேனும் நறுநெய்யும்
வேண்டும் படியே விட்டரைத்து மிகவே பாராய் நிழலுலர்த்தி
கூண்டுந் திமிரம் ஆணிப்பூக் கொடிய அமரம் விழிவிழுங்கி
தோன்றும் விரண சுக்கிரனும் தொடர்ந்த மதன காசமுமே 1099

தொடர்ந்த காசம் செவ்வாப்பு தூய அழிகண் பற்பரோகம்
அடர்ந்த முலையின் பால் தன்னில் பைய்யப் பைய்ய விடுவீராய்
மடர்ந்தே நாளும் சிவனாணை மாறி யோடுங் கண்டீரே 1100

(வேறு)

தாம்பிராதி பொடி 1 பலம், வெண்கலச்சரிகை 1 பலம், சீரகம் 1 பலம், ஓரிலைத்தாமரைவேர் 1 பலம், வெள்ளைப் பீங்கானோடு அரப்பொடி, சோழிப் பலகறை, துத்தம், துருசு, படிகாரம், மனிதர்தலையோடு இவை வகைக்கு 1 வராகன் எடை, இவையெல்லாம் எலுமிச்சம்பழச்சாற்றில் ஒருநாள் அரைத்துக் குளிகை பண்ணி முலைப்பால் புளியம்பூச்சாறு, பனைமட்டைச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு இவைகளிற்பொருந்தும் வகையறிந்து உரைத்துக் கண்ணிலிடப் படலம் முதலாகிய தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1101

(வேறு)

தாமிரம் 16, அதிமதுரம் 14, கோட்டம்12, வசம்பு 10, இந்துப்பு 8, திப்பிலி 6, வெள்ளி 4, பொன்2, இவை கூட்டி வெள்ளாட்டுப்பால் வார்த்து 3 நாட்கள் அரைத்துக் குளிகை பண்ணித் தாமிரத்தில் வைத்துக் கொண்டு, அனுபானமறிந்து உரைத்துக் கண்ணிலிடக் கண்ணிலுள்ள தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1102

(வேறு)

செப்புப் பொடி. வெள்ளறுக வேர், பொன்னாங்காணிவேர் இவை சமன், வல்லாரைச் சாறும் எலுமிச்சம் பழச்சாறும் விட்டு, செப்புப்பொடி மாத்திரம் போட்டு ஒருநாள் வெய்யிலிலே வைத்து, மற்ற நாள் எல்லாம் ஒன்றாய்க் கூட்டி, இந்தச்சாறுகள் விட்டு அரைத்துக் குளிகை பண்ணிக் கண்ணிலிடக் கண்ணிலுள்ள தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1103

தாரா மாத்திரை

முத்தொடு பவளங் கழஞ்சு இரும்பு பொன் வெள்ளி செம்பு
இத்தனை யனைய தெல்லாம் எலுமிச்சம் பழத்தின் சாற்றில்
மெத்தென வரைத்து வுண்டை வெயில்படா நிழலிலு லர்த்தி
சத்தியம் பில்லம் பித்தம் காசம்பூ படலம் போமே 1104

தாலாதி உருண்டை

முத்தொடு பவளந் தானும் முதிர்ந்ததோர் கந்தந் தங்கம்
தத்துறு கலையின் கொம்பு தறியுறு மானைக் கொம்பும்
கொத்துறு வெட்டி வேருங் குளிர்ந்ததோர் விச்சிப் பூவும்
வித்தகப் பெண்ணைச் சாற்றில் விரவத்தா லாதி யாமே 1105

## திரிகடுகு உருண்டை

திரிகடுகு, பூநாகம், புங்கம் விதை, துத்தம், செப்பரைப் பொடி தற்சமன், எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து உருண்டை செய்து கண்ணிலிட எல்லா வியாதிகளுக்கும் ஆம். புகை, பிரிவு, புழுமேய்ச்சல், முடமயிர், நீர்முட்டு உளப்படத் தீரும். 1106

## திரிகாதி மாத்திரை

கருவிழி சீழ தாகிக் காந்தளின் பூப்போ லொத்து
வெருபொரி மின்னாம் போல வெருண்டிடுஞ் சலமுங் கொள்ளில்
குருகுபொன் பவளம் வெள்ளி குங்குமம் பூரந் துத்தம்
நிரவிய முலைப்பால் உருண்டை நீரொளி காசம் போமே

## திருமணிக் குளிகை

சங்கொடு புங்கு வித்துச் சமனிடு துருசு மூன்றும்
பங்கரை வெள்ளை துத்தம் பழுத்தகாக் கணத்தின் வித்தும்
இங்கெலு மிச்சஞ் சாற்றில் இதம்பெற நனைத்து வாங்கி
மங்கிடா தரைத்துக் குன்றி மணியள வுருட்டிக் கொள்வீர் 1108

கண்களாற் கரித்துக் குத்திக் கலங்கியே தண்ணீர் பாய்ந்து
பொங்கியே தலைகள் நொந்து பொறுக்கொணாக் கண்க ளுக்கு
உங்கள்தாய் முலைப்பால் தன்னில் உரைத்திடு மூன்று காலை
திங்களாய்த் தரியு மென்றார் திருமணிக் குளிகை தானே 1109

## துத்த மாத்திரை

துந்தந்தா னொன்று மிக்க சுக்கது ரெண்ட தாகும்
மெத்தவே பொன்னாங் காணி விரைந்தரை சிறிய கீரை
வைத்திட வளவோ நிம்பம் வார்த்தரைத் துருண்டை யாக்கி
நித்திட வெண்ணோக் காடு நிசமுடன் தீருந் தானே. 1110

## துத்தாதிக் குளிகை

துத்தந் திப்பிலி கற்பூரந் துலங்குங் கடுக்கா யுடன்பருப்பும்
சித்த பீத ரோகணியுஞ் சிறந்த வெள்ளி லோத்திரமும்
புத்தி மிளகு அஞ்சனக்கல் புகழ்சேர் பளிங்கு தலையோடு
அத்தம் பெருகுதலை தாமரைவேர் அதிக கொடுப்பை
வார்த்தரையே 1111

அரைத்திடு நாலு சாமமு மன்பரி நிழலி லுலர்த்தி
உரைத்திடப் படலம் பில்லம் உதிரும்பூத் தேனிற் றீரும்
இரைத்தெழு திமிரி லைத்தண் ணீரிற் றீரும்
வரைத்திரல் கண்கள் நன்மை மேவுதுத் தாதி யன்னே 1112

## துத்திர உருண்டை

துத்தம், துருசு, இரசம், அஞ்சனக்கல், சங்கு, கடல்நுரை, சிலாசத்து, தேற்றான்விதை, சாரணைவேர், வேர்ப்பீர்க்கில் இவையெல்லாம் கசாயம் வைத்துக் குழம்பாக்கி, காய்ச்சி, நன்றா யரைத்துக் கயிறு உலர்த்தி முலைப்பாலில் உரைத்து இடவும். காசம், திமிரம், படலம் இவை தீரும்.

## தேத்தாதி மாத்திரை

தேத்தான் சங்கு திரிகடுகு சீர்சேர் மஞ்ச ளிந்துப்பு
சேத்தார் புக்குந் திரிபலையுஞ் சிறந்த வசம்பு சமன்கூட்டி
மாத்தால் நிம்பச் சாற்றரைத்து மருவா வுருண்டை தனையாக்கி
ஆத்தாள் கண்ணில் தான்போட அடுத்த புகைச்சல் போய்விடுமே.

## நவரத்தினாதி மாத்திரை

தன்னுடன் பரிகழுதை மரைகரடி புலிமுதலை
சார்கின்ற ஒட்டை யுடனே
தளமான நரியெருமை தங்குமுயல் நாயொடு
சலித்திடும் பூனை யுடனே
குன்றுடன் கரிபன்றி கோயிவைக ளின்பல்லும்
கூடியே சேர்த்தெ டுத்துக்
கொடிநாக ரத்தோடு குக்கிடத் தண்டமுங்
கொன்ற துத்தந் துருசுமே
தன்னுடன் திரிகடுகு தன்னிமுளை யஞ்சனம்
தயங்கிவிளை நவரத் தினமும்
தளராம லுயர்கின்ற அரிதார சங்கமும்
தான்றிகடு நெல்லி சமனாய்
உண்டிட வரைத்திடு நிம்பப்பழச் சாறுதனில்
உருண்டைசெய் நிழலு லர்த்தி
உற்றபட லங்காசந் திமிரமு மொழியும்நவ
ரத்தினாதி யென்ப திதுவே 1114

## நவலோக இரத்தினாதி மாத்திரை

நந்தான சங்குவளை வெண்கலப் பொடிமிளகு
நாய்ப்பல் திப்பிலியுடனே
நற்கடு வசும்புநெல்லி முள்ளியுடன் தானியும்
நல்லேலை மிலவங்கமும்
வந்தாரை யதிமதுரம் வெருகுமுடி தன்னுடன்
மரமஞ்சள் நாகமலரும்
மணம் வீசும் சந்தனம் மாதுளை வேரிதன்
வலித்தோ லொடுகந்நமும்
பந்தாடு மாதர்கைப் பவளமும் வெள்ளியும்
பசும்பொன் னுடன்காணிவேர்
பரவுகா ரீயமொடு செம்பிரும் பின்பொடி
பாற்கட னுரையும் செப்பவே
பிந்தாத கொந்தாளை பீதரோ கணிமுத்து
புலிப்பல் அடப்பம்விதையும்
பேசாத ஆமையோடு காக்கணஞ் சாரடை
பெருங்கோழி முட்டைக்கூடுமே
சந்தாரும் நந்தியா வட்டமலர் அலரிவேர்
தருசிறு கீரைவேரும்
தாதுணந் துளசியுந் துத்தமு மாகத்
தனித்தனி கழஞ்சுகொண்டே
சிந்தாமல் நற்சா றெனுமிச்சை நெல்லிபுளி
செய்யகை யாந்தகரையும்
தேனொழுகு நற்கோவை யின்நீ ருழக்கு
தினமுமொரு சாற்றரைத்தே
உந்தாம லொருபதம் பார்த்தரைத் துருண்டைசெய்
தொருநிழற் பட உலர்த்தி
ஓங்குரண சுக்கிரன் கண்ணில்வரு வியாதிகள்
திமிரொளிவு நீல காசம்
சந்தார நீர்ப்பெருகு மந்தார காசமுஞ்
சதைப்படலம் விழிவேதனையும்
சாறுபா லதனிலிடத் தீரும்நவ ரத்தினாதி
சங்கர ருரைத்தபடியே 1115

(வேறு)

சங்கு, வெண்கலப்பொடி, காந்தம், பவளம், வெள்ளி, முந்து, தங்கம், காரீயம், தாமிரம், துத்தம், துருசு, சிற்றண்ட ஓடு,

தேற்றான்விதை, நாய்ப்பல், மிளகு, திப்பிலி, திரிபலை, ஏலம், இலவங்கம், மரமஞ்சள், சிறுநாகப்பூ மலாக்காசந்தனம், மாதுளைவேர், கடல்நுரை, பீதரோகணி, காக்கணாம்வேர், ஆமைஓடு, இவை வகைக்குக் கழஞ்சு, இதிலரைத்து மாத்திரை கட்டவும்.

இரண சுக்கிரன், நீலகாசம், திமிரம், படலம், ஆணி, முளை, இன்னும் அநேக வியாதி தீரும். 1118

## நயன கோடாக் குளிகை

யானைக் கொம்பு 1, பன்றிக்கொம்பு 1, சேவல் மாரெலும்பு 1 முதலைப்பல் 1, நரிப்பல்½, நாய்ப்பல்½, ஆட்டுப்பல் ½,மாட்டுப்பல் ½ குதிரைப்பல் ½, குதிரைக் குளம்பு 1, கழுதைப்பல் 1, முயற்பல் 1, புலிநகம் ¼, வெள்ளெலி நகம் ¼, அண்டங் காக்கைத் தலை ஓடு ½, உடும்பு எலும்பு 1, மனிதர் தலை புருவத்தின் ஓடு 3, செம்பருந்து முட்டை ½, தேவாங்குக் காலெலும்பு, கரும்பூனை தலைஓடு 2, சாரைப் பாம்பு முதுகெலும்பு, பச்சைத் தவளைக்கால் எலும்பு ½, நாரை மூக்கு 1, மயிலிரகு குப்பி ½, ஆமை ஓடு 2, வெள்ளெருக்கம் வேர்,½ வெள்ளைச்சாறுவளை வேர்½, எலியாலம்வேர்½, முருங்கை வேர்½, வில்வவேர்½, இவை பாலில் புடம். அதிமதுரம்¼, கொத் தாழங்காய்¼, கடல்நுரை 1, காந்தம்½, அக்காரக்காரம்½, குங்குமப் பூ¼, கோரோசனை ½, ஈயம் 1, இரசம் 3, நீலாஞ்சனம் 3, துத்தம் 3, துருசு 3, அரிதாரம் 1, சந்திர காந்தம் 1, சூரிய காந்தம் 1, வெண்கலப்பொடி 1, எஃகுப்பொடி 1, துத்த நாகப்பொடி 1, தாமிரப் பொடி 4, வெள்ளி 4, தங்கம் 4, படிகம் 1, முத்து 2, பவளம் 2, சிவப்பு 2, சங்கு மூக்கு 8, இவை யெல்லாம் கூட்டி ¼ வராகன் எடை செம்புத்தகடு தட்டிக் கூட போட்டு, அது கரைய பனை மட்டைச் சாறும் எலுமிச்சம் சாறும் விட்டு அரைத்துப் பின்பு பெருவிரல் அளவு உருண்டை பண்ணி நிழலிலுலர்த்தி வைத்து, இதுக்கு அனுபானம் பூவுக்குத் தேனிலிட, நேத்திரத் துக்கு பனை மட்டைச்சாறு, இரணசுக்கிரனுக்கு எலியாலயிலை, கரிசலாங்கண்ணிச்சாறு, பித்த காசத்திற்கு நந்தியாவட்டப் பாலி லிட, நத்தைப் படுவனுச்கு சாறுவளைச் சாற்றிலிட, மற்ற வியாதிக் கெல்லாம் முலைப் பாலிலிடவும். விடத்துக்கு மேனியி லிடவும்.

## நயனாமிர்த மாத்திரை

பந்திப்பரி தந்தத்தொடு பருபன்றியின் கோடும்
பசுவெள்ளியின் பொடியும்மிகு பரிவாகவே கொண்டு
விந்தைப்பட சரியாகவ ராகனெடை தன்னை
வேண்டிக் கையான் சாற்றினி லரைத்தேகயி
றிழைத்து
முந்தத்திரி பொழுதிட்டிடில் முளைப்பூவுட னிரணம்
மீளும்பதி னெண்காசமும் முறிந்தோடுமே பறந்து
தந்திக்குரு வருள்பெற்றிடு நயனாமிர்தக் கயிற்றைப்
தரைமீதினில் பொதிமாமலை முனியோதினினர்
நலமே 1120

## நாகாஞ்சனாதி உருண்டை

துத்தம், துருசு, அஞ்சனக்கல், பிதரோகணி. விழலரிசி, ஓரிதழ்த்தாமரை, பாசசொறிவேர், திரிபலை, திரிகடுகு, கற்பூரம் இவை சமன் கொண்டு, தன்ணீரிலரைத்து, உருண்டை பண்ணி நிழலிலுலர்த்தி வைத்து, காணாத கண்ணுக்குப் புளியிலை, அழுகண்ணுக்கு வெற்றிலை, நீர்ப்பாய்ச்சல், தினவுக்கு முலைப்பாலில், நீர்முட்டுதற்குத் தேன், எல்லா வியாதிக்கும் கழுநீரிலே உரைத்திடவும்.

## நீலகண்ட மாத்திரை

கண்டதொரு துருசொடுகண் ணாடியிதன் பொடிகீழ்க்
காய்நெல்லிச் சிறுகீரை கன்னியின்வே ரிவற்றைக்
கொண்டுகணக் கன்சாற்றி லரைகயிறு செய்பின்
கொடும்புளியின் சாற்றிலுரைத் தேவிழிகட் கெழுதில்
பண்டுவிழி யிற்படலம் பில்லமொடு குந்தம்
பதித்திடும்பூ வாணியிவை பிரிந்திடுவ துண்மை
நன்றிதரு நீலகண்ட நாமமிதன் பெருமை
நலமுடனே யகத்தியனார் பலமெனச் செய்தாரே.

## பஞ்சலோக அஞ்சனாதி உருண்டை

எல்லோர் புகழு மிரத்தினம் இந்துப்பு சங்கு மதுரம்
பல்லோர் படிகங் கற்பூரப் பஞ்ச லோகங் காவிமண்
கல்லாந் துருசு துத்தமுடன் கலையின் கொம்பு கடல்நுரையும்
வல்லோர் குங்குமங் கோரோசனை மருவுங் கொடுப்பை
வார்த்தரையே 1123

அரைத்த வுருண்டை தனைச் சேர்த்து அழகாய்த் தேனி
லுரைத்திடவே
பெருத்தப் படலம் பில்லம் பெருகுங் காயங் குந்தம்போம்
தரித்த நிம்பச் சாற்றிலிட தடிக்குங் கண்ணுந் தடியாது
பரித்த குருவின் தந்தானை பஞ்ச லோகப் பரிசிதுவே 1124

## பஞ்சலோகக் குளிகை

துத்தம், துருசு 2 கழஞ்சு, வெண்கலச்சதா கழஞ்சு, கீழா நெல்லி வேர் கழஞ்சு, சிறுகீரை வேர் கழஞ்சு, பொன்னாங்காணி வேர் கழஞ்சு, எல்லாம் கூட்டி, பனைமட்டைச்சாறும் புளியிலைச் சாறும் விட்டு அரைத்து, உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்து, தினவுக்கு எலுமிச்சம் பழச்சாறும், புளியிலைச்சாறும் இமைத் தடிப்புக்குப் பனைமட்டைச் சாறும், வெள்ளெழுத்துக்குத் தண்ணீரில், நொந்த கண்ணுக்கு, செவ்வேருக்கு முலைப்பால், அவுரியிலைச்சாறு இப்படி உரைத்திடவும்.

## பஞ்சாதி மாத்திரை

பூலாவேர் தன்னுடனே பொன்பவளம் வெள்ளிமுத்து
சிலார்த்திப் பிலிமூலஞ் செம்புத்துத்தம்—மேலாந்
தலையோடு ரோகணியுந் தானிம்பச் சாற்றிலுருண்டை
விலகிவிடுங் கண்ணோய்கள் விட்டு 1126

## பச்சை உருண்டை

இடுமிளகு செம்போ ரிதழ்ச்சேர்கஞ் சத்தின்
வேர்தலை யோடு மருளபசெந் துத்த
வடிவுப்பில் வெண்பீங்காவே ரொவ்வொன் றரையாய்
வளந்தருநற் பசுந்துருசு மிருகழஞ்சாய் வகுத்தத்
திடமையுடனே எலுமிச்சம் பழச்சாற்றி லரைத்துச்
சேர்த்திதனைச் செம்புதனிற் தப்பியிந்தப் படியே
அடவுடனே மூன்றுநா ளரைத்துடனே திரட்டி
அருக்கனில்வைத் துலர்த்தாமல் நிழலிலுலர்த் தாயே
1127

இழைபயிலும் துடியிடையா பச்சை யுண்டை
இதனுக்கிதம் படுக்கு கண்ணோய் புகலவே
எழுச்சிமணி வளர்த்திமனை யாலுந்துளி போலநீர்த்
ததும்பி வழிதல்வா சித்தல்சொரி வுற்றல்மணியில்

எழுந்துடைதல் குழைபடு முலைப்பாலி லரைத் தொழுக்கு
குத்திடி விவைமாறும் கூச்சமுடன் வலியாய்
விழிதுயிலா திருபொழுதுந் துயர்படுவோர் தமக்கு
வெச்சென வைத்துக்கீ ரறுக்கவிழி பொறுக்கவிடுமே

(வேறு)

சங்கு துத்தந் துருசு தலையோடு சமன தாக
வெண்கலப் பொடிய ரைக்கால் விரும்பியே கழஞ்ச தாக
மங்கையோ ரிதழின் கஞ்சம் வளர்கின்ற வேரு மாக
துங்கவெண் சுண்ணாம் புக்கல் சுருக்கதாய்க் கொள்ளு வீரே.

கொள்ளுவீர் முன்னே சொன்ன கூடிய மருந்து நாலும்
துள்ளவே சரிச ரியாய்ச் சுருக்கென கழஞ்சு கொண்டு
கள்ளவின் வேம்பு தன்னில் கடுகிய பிசின ரைக்கால்
அள்ளுவீர் கழஞ்ச ரைக்கால் அத்துட னிந்துப் புவே.

இந்துவும் பருத்திக் கொட்டை இயல்வுட னளவ தாக
தந்திரு மாதே கேளும் தேசிக்காய்ச் சாறு விட்டு
விந்தையா யரைத்து ருண்டை விரும்பிய நிழலிலு லர்த்தி
கொந்தவிழ் முலையாள் பாலில் கூட்டிடீர் பச்சை உருண்டை

(வேறு)

வெள்ளைக் காக்கணான் வேரொன்று
விளைவெண் குன்றி தானிரண்டு
பள்ளச் சாரணை வேர்மூன்று
பரவு மஞ்சள் நாலுடனே
உள்ள துத்த மஞ்சாகும்
உகந்து துருசுஆ ரேழ்பளிங்கு
மெள்ள எலுமிச்சஞ் சாற்றரைத்து
மேவு முலைப்பாலிற் தேய்த்திடுமே. 1132

மேவும் பலபல கண்ணோவும்
விரையவிட் டேகும் தேனிலிடப்
பாவும் படலம் தொண்ணூறும்
பலமுளை தானு மிமைத்தடிப்பு
தாவும் புழுமேய்ச்சல் பிரிச்சல்
சலமே மெத்த விழுவதுவும்
மேவும் பச்சை யின்யுண்டை
இதுனென் றேபேராய்ச் சொல்லுவதே. 1133

பச்சைத் தாம்பிராதி மாத்திரை

செம்பு துத்த மிந்துப்பும் சீனக் காரம் துருசுடன்
சங்கு தாமரை வளையமுடன் தலைநிம்பச் சாற்றிலுருண்டை
செம்பி லரைத்துத் தானெழுதச் சேர்ந்த பச்சைத் தாம்பிராதி
கம்பி நயனத் தெழுநோய்கள் கனவது போல வகன்றிடுமே.

(வேறு)

துத்தம் துருசு வொன்றரையும் தூய சங்கு நாலுடனே
மெத்தத் தொண்ணூறு நாழிகையும் மேவு நிம்பச்
சாற்றரைத்துச்
சுத்தக் கயிறுபோற் தானுருட்டிச் சுகமாய் நிழலி லுலர்ந்த
பின்பு
மெத்த தனப்பால் தன்னிலிடப் பூப்போம் பச்சைத்
தாம்பிராதியே

(வேறு)

சங்குமதி யொன்று நாகவண்டூர் பத்து
தனங்கள் ரத்தின நிறையுமாம்
தாந்தேற் றானுந் தத்தம் வோர்பத்துடன்
தாம்பிரம் ஆறினுடனே
இங்கிதம தாய்ச்சிறு கீரையோடு கோவையும்
இதில்கையான் பனைமட்டையும்
இனமுடனே வரிசையுள மருந்த தனையும்
இதமுடன் தானெடுத்துப்
பொங்குமிவை யாவையும் யிங்கிதத் துடன்வளம்
போன்றவம்மி தனிலே கூட்டியிரு
பத்துநால் சாமமதை யாட்டியே
புகழ்ந்தநல் கயிறுமாக்கிச்
தங்குநிழ லுலர்த்தி பின்ரசத் தெழுதத்
தோற்குநோய் தனையறிகில்
தண்சூடு மதிகோப நீர்ப்பாய்ச்ச லுடனே
தரும்பச்சைத் தாம்பி ராதியே.

(வேறு)

செம்புதுத்த மிந்துப்பு சீனக்காரம் நற்துருசும்
சங்கு கோரோ சனைத் தாமரைவேர் ஒத்த-நிம்பழச்
செம்பில் வைக்கத்தன் பச்சைத்தாம்பி ராதியென்று
நம்பியிட கண்ணோய்போம் நன்று.

(வேறு)

துத்தமே துருசு சங்கு தூயநற் பவளம் செம்பு
வைத்திடு மாமை யோடு வகையடி நிரையொன் றாக
எத்திய பனைமட்டைச் சாறு எலுமிச்சம் பழத்தின் சாற்றால்
ஒத்திட வரைத்து ருட்டி உருண்டைதான் சோர்த்தி டாயே

உருண்டையைத் தனப்பால் தன்னில் உரைத்திரு கண்ணி லிட்டால்
மண்டையைப் பிளக்கும் பித்தம் மருவிய கண்ணில் காசம்
வண்டுரைபூப் படலம் மணிதனில் நீல காசம்
சண்டப்பிர சண்டன் பச்சைத் தாம்பிராதி யாகுந் தானே.

பளிங்காதி உருண்டை

வெள்ளைக் காக்கணம் வேர், துத்தம், பளிங்கு, சங்கு. தலை ஓடு, அஞ்சனக்கல், அதிமதுரம், தேற்றாங் கொட்டை, மஞ்சள், திப்பிலி, சந்தனம், பச்சைக் கற்பூரம் தற்சமன், இவை எல்லா வற்றுக்கும் சரி தாம்பிரப்பொடி, தேசிச்சாற்றால் அரைத்து, முதற்சொன்ன மருந்தெல்லாம் பிறகு யிட்டு, அரைத்து, மூன்று நாள் பிறகு கயிறு செய்து, முலைப் பாலிலிடத் தீரும் வியாதி. பல வகை காசமும் கண்ணோயும் நிற்கும். நீர்க்குத்து, சுற்றுக் குலைதல், அழற்சி, உல்லுக் கொண்டு குத்து, குறுப்போலிருப்பது, சிவப்பு, இன்னும் கண்ணிலுள்ள வியாதியெல்லாம் தீரும்.

பாச்சுருண்டை

சூதங் கந்தக மிளகுடனே சுக்கு திப்பிலி வசநாவி
சீத மனோசிலை யரிதாரம் கவுரி வெள்ளை பாடாணம்
சாதி லிங்கம் துருசுதுத்தம் சமனே கொண்டு காரமுடன்
சேரும் நிம்பப் பழச்சாற்றிலுண்டை திகழக் கண்வலி
யெடுத்தாக் காற்
போத துளசி சாற்றரைத்துப் போதக்கிரிக் கட்டுவதேயிதனை
பாச்சுண்டை யென்று செப்பலாமே. 1141

பீதரோகணி மாத்திரை

உரைத்திடும் முத்து வெள்ளி உயர்ந்த தாமிரம் சங்கு
கரைத்திடும் துருசு துத்தம் கலந்தலை யோடு பொன்னும்
திரைத்திடும் பீத ரோகணி சேர்ந்தபுங்கு நிம்பச் சாற்றில்
அரைத்திடுங் கண்ணிற் தொண்ணூற் றாறுமே அகன்று போமே,

(வேறு)

மந்தித்த கண்ணுக்கு மருந்துண்டு மாதேகேள்
இந்துப்புத் திப்பிலி இயல்பீத ரோகணி
நந்திப்பூச் சாற்றால் நயம்பெற வரைத்திட
அந்திக்கு முன்னே அருந்ததி தோன்றுமே.

(வேறு)

பீதரோகணி, இலவங்கம், வலம்புரிக்காய், சங்கு, மிளகு, தாமிரப் பொடி. வங்கம், துருசு சமன் சேர்த்துப் பழச்சாற்றில் மாத்திரை கூட்டவும். தொண்ணூற்றாறு நோய்களும் தீரும். 1144

(வேறு)

பீதரோகணி, தாமிரப்பொடி, வெள்ளிப் பொடி, துருசு, சீனக் காரம் சமன் கோவையிலைச்சாறு விட்டரைத்துக் கட்டவும். தொண்ணூற்றாறு நோய்களும் தீரும். 1145

(வேறு)

துத்தம் துருசு கற்பூரம் திப்பிலி மிளகு நெல்லி
மத்துஞ் செம்புப் பொடி பளிங்கு மரையோடு தலையோடு
பொத்துக் கடுக்காய் கீரை பொன்னாங் காணிவெட் பூலாவேர்
தத்தளத் தாமரை வேர்பீத ரோகணி சமனுங் கூட்டே 1146

கூட்டு மெலுமிச்சம் பழச்சாற்றில் குமிர வரைத்து இருசாமம்
காட்ற் பொன்னாங் காணிதனிற் கதிக்க வரைத்துக் கயிறுபண்ணி
நாட்டில் மாதா கிலமதில் கலக வுரைத்திடு வீராய்க்
கோட்டி கொள்ளும் நயனவியாதி தொண்ணூற் றாறுங்
குலைந்திடுமே 1147

(வேறு)

பீதரோ கணிமூணு சங்கு மூணு
பலமான வராகியின்கொம் பொன்றுங் கூட்டி
சீதளமா மோரிலைத்தா மரைவேர் மூணு
சிரசொடுதான் சிறக்கக் கூட்டி
மாதளையாய் துருசிரண்டு பச்சைவளை யிரண்டு
மருவு வெள்ளைக் காக்கணம்வே றொன்று சேர்த்து
போத நிம்பச் சாற்றரைத்து மூன்று நாளாய்
பொருந்துமருந்துண்ட பீதரோ கணியென் பீரே1148

என்னவே சிறுபூளை யிலிமைத்தடிப்புந் தீரும்
இனியமாக் கண்ணதற்குச் சாரணையிற் றீரும்
மன்னவர் கொண்டாடு கரிசாலந் தன்னில்
வருந்தியிடக் கண்ணோவு பலவுந் தீரும்
தின்னவரு முசுமுசுக்கைத் தன்னி லுரைத்திட
செவ்வேர் படலமுடன் புகைச்சல் தீரும்
சொன்னபடி யஞ்சனம் பீதரோகணிக்கு விழிகள்
துலங்குமென முனிவுரைத்த சொல்லை மறவேனே

## புங்காதி மாத்திரை

சங்கு சுக்கொடு மிளகுதிப்பிலி தார மோடதி மதுரமும்
புங்கம் வித்தொடு பீதரோகணி போற்று துத்தம் மனோசிலை
அங்க ரைப்பது நந்திபத்திரி தேனளாங் குளிகை கொளக்
கங்குல் பற்றிய விழியில் தீட்டிடக் காசமே படல நாசமே 1150

## பூபதி மாத்திரை

பாண்டவர் மருக்கொழுந்து பகர்நிம்ப விதைநா லேழாம்
தீண்டவெண் கார மூன்று திப்பிலி யொட்டு சுக்கு
நீண்டதோ ரஞ்சு நாலு நிகரில்லா மிளகு பத்து
ஆண்டதோர் மதுரம் நாலாம் அதில்நிம்பச் சாற்றில் கூட்டே

கூட்டுபூ பதியைக் கண்ணில் கூர்ந்திட வாத காசம்
தீட்டுமாம் பித்த காசம் சிலேத்தும காச மன்றில்
வாட்டநேத் திரத்தில் வாயு வருந்திய அழிகண் பில்லம்
நாட்டினில் படல மாறும் நயனரோ கங்கள் போமே, 1152

## பூவந்தாதி குளிகை

மிஞ்சுநீர் கடம்பின் பூவும் வெள்ளி லோத்திர முந்தான்
செஞ்சொல்லார் நிமிளை துத்தந் திப்பிலி சிறந்த பீதரோகணி
தஞ்சமா மதுரங் கற்பூரம் தலையோடு யீதெல்லாம்
வஞ்சமற யிரண்டுகாசெடை வகுத்துக் கூட்டே 1153

வகைப்படி மருந்தை யெல்லாம் மருவுநற் சிறுதேன் வார்த்து
திகைப்பட நாலு சாமம் திருந்தவே அரைத்து ருட்டி
சுகம்பெறு தேனி லிட்டால் சுக்கிரன் உதிரிப் பூக்கள்
தொகைப்பட் டருந்தற்குத் துயர்தரு பூவந் தாதி தானே 1154

## மகா இரத்தினாதி மாத்திரை

காந்தமுடன் பலகறை கிராம்புடன் புங்கம்விதை
கனமாசி சுறா வரியுடன்
காசினியில் செங்கழுநீர் சீனக் காரமும்
கனமுத்து வெள்ளி பீங்கான்
பாந்தமுடன் யானைக் கலங்கொம்பு ஆமையும்
பருமிளகு சுக்கு பவளங்
பார்சமுத் திராப்பழம் சீரகம் வகையொன்று
பலங்கால தாய்யெடுத்து
வாந்தமுடன் திப்பிலி மிளகு துத்தம் பீத
ரோகணி துருசு அயமும்
வளமான தாமிரம் வெண்கலம் பித்தளை
வளமுட னுருக்கு முதலாய்
ஆந்தமுடன் பலகறை ஆனைகுதி ரைப்பல்லும்
அன்புடன் வராக னொன்று
அண்டவோடு சங்கமும் அன்புடன் பலமொன்று
ஆட்டுதற் கினி கேளுமே 1155

கேளுமே கரிசாலை முசுமுசுக்கை புங்கம்வேர்
முருங்கைப் பூவினுடன்
கிருபையுடன் நெல்லிக்காய் பனைமட்டை பொடுதலை
கிருபையா மின்னீருடன்
நாளுமே நிம்பரசம் வகையொன்று சேரதாய்
நற்றேன் சேர்காலதாய்
நன்மைபெற வேநித மோர்சாறு வார்த்ததை
நலமுடன் தானரைத்து
வாளுமே மதுரைக் கலத்தூரில் வைத்ததை
வகையுடன் கயிறுசெய்து
வரிசையுடன் முன்ரசந் தனிலுரைத் தெழுத
வளர்நயன மீதில்வருநோய்
மீளுமே பில்லமும் படலமும் குறுமுளையும்
மேலான ரணசுக்கிரன்
மேகநீர்ப் பாய்ச்சலும் பூப்படல மேகுமே
மகாரத்தி னாதியிதுவே 1156

(வேறு)

துத்தமதி மதுரமரி தாரம்வெண் காரமொடு
தூயசீ னக்காரமும்
துருசொடு பீதரோ கணிசவுக் காரமும்
தூயதிப் பிலிசுக்குடன்
நத்து விழலரிசி நிமிளை யுப்புமண்
நல்லதேற் றான்விதையுடன்
நந்துமர விந்த மிந்துப்பு மகிழம்விதை
நற்காஞ்சி விதையுடன்
சுத்தமுள பூவந்தி புங்கம்விதை தன்னுடன்
சொல்லெலு மிச்சம்பழவிதையும்
தோன்றிடு மடப்பம்விதை யும்கொந்தளங் காயொடு
கொள்ளா மணக்குமுத்து
வெத்திபுனை பொன்னாங் காணிவேர் சிறுகீரை
வேர்குறிஞ்சா வேரும்வெள்ளை
காக்கணம் வேருடன் துளசிகற் றாழைவேரும்
வெள்ளைச் சாரடையின்வேரும் 1157

மற்றுமொரு நந்தியா வட்டம்வேர் பசளைவேர்
வளர்தூது வளைவேருடன்
வந்தபூ லாவின்வேர் தாதுமா துளையின்வேர்
மாஞ்சில்சிறு காசாவுடன்
சித்தமுள சீதேவி செங்கழுநீர் வேருடன்
செவ்வல்லி யின்கிழங்கும்
செவ்வையாம் ஓரிதழ்த் தாமரை வேருடன்
சிறந்தநன் னாரிவேரும்
அத்தியின் பற்குளம் பாவினது பல்லுமே
ஆனநரிப் பற்குளம்பும்
அழகான நாய்ப்பல்லும் அப்பில்முத லைப்பல்லும்
அடுக்காக வேயெடுத்து
தத்தத்தில் வருமுயல் எலும்புடன் நாகர வண்டோடு
தருகருடன் முட்டைகூட
தவளைச்சங்கு வளையொடு தலையோடு இரவறிவான்
நெஞ்செலும்பு முட்டை

கத்தும்நற் புலியின்நகம் வெருகின் முடியீரல்
கிளிஞ்சிகௌ தாரியெலும்பு
தாவுசிறு மான்கொம் பிரும்புசெம்பு வெண்கலம்
கருவெள்ளி மதித்தநற்காரீயம்
முத்துமா ணிக்கமொடு பச்சைகோமேதகம்
நீலமும்பவளமும்
முத்தும்வை டூரியம் புட்பரா கம்வைர
முற்பட்ட கற்பூரமும்
பத்திசெறி மரகதம் பளிங்குக்கல் பசும்பொன்
முருங்கை நட்புயர்
தாளிமலர் நந்தியா வட்டமலர் புளியின்மலர்
மருவுமா துளையின்மலரும்
இத்தனையு மொன்றி லொன்று குறையில்லாமல்
இவை தன்னி லொத்தநிறையாய்
இவைகூட்டி யேசாறு வார்த்தரைக்கும் படியாய்
இனியுரைக்க லுற்றேனே 1159

ஒத்தகையாந் தகரைபொடு யொடுதலை செருப்படி
யோடுமா துளைநெல்லிக்காய்
உயர்பனையின் மட்டை நாயுருவி தேனெண்ணெய்
உறுமெலு மிச்சம்பழமும்
புத்தியுட னேநல் விளநீ ரதுவெல்லாம்
போதவே கொண்டுவந்து
பொய்யாம லொவ்வொன்று சாறுழக் காகவே
புகழ்வேறு மருந்துதன்னை
நித்தமு மோருழக் குச்சாறு வார்த்ததை
நேகவே தானரைத்து
நீடுகவிழ்க்க வுருண்டை பண்ணியபின்
நிழலிலு லர்த்தி
வைத்தே யிவைகொண்டு கண்ணிற்தொண் ணூற்றாறு
வியாதியாய் வந்தது
வெல்லாம் தீருமிது ரத்தினாதியின் உருண்டை
விதமா யுரைத்தபடியே 1160

## மகா தாம்பிராதி மாத்திரை

ஆதிதனைப் போற்றி அன்பாகத் தேவியுடன்
பேதமுட னிண்ணயமாய்ப் பேசினது—ஓதக்கேள்

அம்மை பகவதி அகிலாண்ட யீஸ்வரியே
கர்மந் தனையகற்றும் கரணியே—நன்மை பெற்ற

பூவுலகோர் மாதாவே பொற்கொடியே லட்சுமியே
ஏக வினையகற்றி ஈடேற்றும்—நாயகியே

சுந்தரியே மாந்தர்கட்குத் தோன்றும் நயனநோய்
அந்தணர்க் கோரவிழ்தம் அருள்வாயே—எந்தனுட

தாயே யென வினவத் தயாபரியு மப்பொழுது
பேதமில் லாமலே பேசுவாள்—போதறவே

சுத்தசெம்பு வெண்கலமும் சொல்லுவெள்ளி யண்டமதின்
முத்தினதோர் வோடதுவும் மொழியக்கேள்—இத்தனையும்

ராவி யரப்பொடியாய் நற்சீ ரகமுடனே
தாவியே வோரிதழ்த் தாமரைவேர்—மேவியே

இத்தனையும் வோரெடையா யேற்கநன்றா யோர்பலமும்
துத்தம் துருசு வெள்ளைப் பீங்கானும்—மற்றவுமே

சீனம் அரப்பொடியும் சேர்மனிதர் ஓடதுவும்
பானமுள்ள சோழிப் பலகறையும்—ஞானமுடன்

தூக்கு வராகனெடை சொன்னமருந் தத்தனையும்
ஏற்கவே நீகொண்டு இன்பமுடன்—நோக்கியே

தேசிச் சாறெண்சாமம் சேர்முசுக்கை யெண்சாமம்
வீசியிந்த சாற்றரைத்து மீறியே—காசினியில்

கம்பிபோல் தானுருட்டக் காணுமகா தாம்பிராதி
பம்பு பானம்தனப் பாலுடனே—இன்புளிப்பு

சாறுபனை மட்டையதன் சாறதுவும் சம்பீரம்
சாறுடனே நீயரைத்துத் தாக்கினால்—ஊறை விட்டு

ஓடுமே நீர்ப்பில்லம் ஒடுங்கும் படலமதும்
கூடுவிடு மந்தமுதல் கூறக்கேள்—ஓடுதனில்

தூர்மாங் கிசமுளதும் சோருமப்போ தேகண்ணில்
நிர்மலமாய்ச் சிவப்புவலி காணாது—நன்மையில்லாக்

குத்தல் கடுப்பதுவும் குலைகுலைந்தே யோடிவிடும்
மற்றுமொரு நோவதுவும் வாராது—இத்தனையும்

போக்கிவிடு மென்ற பொற்கொடியாள் சொற்கேட்டு
நோக்கிக் குறுமுனிதன் வந்திரியா—ரோர்க்கு
ஈனமெய்தா வண்ண மினிதெடுத்து மானேகேள்
ஞானமுடன் சொன்னார் நலம் 1161

## மதுராதி உருண்டை

மருவள ரிலவங்கமொடு மதுரங் கோட்டம்
மணந்தரு வாலுழுவை மற்றும் வையமெச்சும்
திருவளருங் குங்குமப்பூ சண்ப கப்பூ
திரிகடுகு தேவதா ரமுமே கூட்டித்
திரிபலைகள் பொன்னின்ரோ கணியுஞ் சேர்த்து
செப்பியவோ ரிதழ்மரையின் நிரையொன் றாக்கி
கருவுடன்கா சினிச்சாற்றில் உருண்டை செய்து
கண்ணிலிடப் புகையெரிவு கடுகிற் போமே 1162

(வேறு)

மதுரமும் பயமு மன்றி மரமஞ்சள் மிகுதி தானும்
பதிபெறும் வெள்ளி லோத்திரம் பகரும்வெள் ளாட்டுப் பாலால்
மதிபெற உருண்டை யாக்கி மருவுதேன் நெய்யால் போடத்
துதிபெறும் படலம் பில்லஞ் சொல்லிடுஞ் சிவப்பு போமே. 1163

## மாலைத் திருமணி

துத்தங் கண்டாய் எலிப்புழுக்கை
சொல்லோர் நிரையாய்க் காடிதனில்
வெற்றி பெறவே யரைத்துமைபோல்
விரல்போல் செய்துலர்த்தி நீரில்
பற்றி யுரைத்துக் கண்ணிலிடப்
பறக்கு மந்தி மாலையது
சத்தி யுரைத்த திருமணியைச்
சங்கர னருளிச் செய்தாரே. 1164

## மாறியாடி உருண்டை

வெட்டிவேர் சடாமாஞ்சில் நல்வியன் பீத ரோக ணிப்பின்
ஒட் டிய கபாலஞ் சுக்கு மூரொன்று கழஞ்ச தாக்கி
மட்டில்திப் பிலியுஞ் சங்கும் மலிந்தவெண் காரந் தன்னைத்
திட்டமாய் எடையிரண் டாக்கிச் சின்னிவேர் பூலா வேரும்

வட்டமா மணலி கஞ்சம் வகையொன்றில் நால தாக்கித்
துட்டென நந்திச் சாற்றில் துலங்கிட அரைத்து ருண்டை
நெட்டைவேல் விழியாய் கண்ணில் நீயிட யிரவில் பார்க்குந்
திட்டமாய் மாறி யாடி யென்னும்பேர் செப்ப லாமே.

### மீன் இரத்தினாதி மாத்திரை

தேறி முதிர்ந்த வரால்மீனின் சிரசின் கல்லைத் தாமெடுத்து
பாரில் மிளகு அஞ்சனக்கல் பகருந் துத்தம் துருசுடனே
சேரீர் வெள்ளைச் சாரணைவேர் சிறந்த சங்கு முத்துநிம்பச்
சாறி லரைத்துக் கண்ணிலிடச் சதையும் படலம் பூப்போமே.

### மேகவுரி கொட்டை குளிகை

தலை ஓடு 1, கோட்டம் 1, விளாம் பிசின் 1, துத்தம் 1, துருசு 1, இவையெல்லாம் எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து உருண்டை செய்து கண்ணிலிடக் கண்ணில் புகை, பல குற்றமும் தீரும்.

### வச்சிராயுத மாத்திரை

கருத்தசே வகனின் பொடியுநெஞ் செலும்புங்
காயுடல் செந்தலை ராசி
கிராம்புடன் மதியும் மிளகுடன் வெள்ளை
சாரடை வேர்நிரை சரியாய்ப்
பெருத்த வெள்ளாட்டின் பித்தினா லதனைப்
பேணிநீ யரைத்திரு சாமம்
பின்னெள்ளின் பூவால் அரைத்ததை மைபோல்
பேணிய சீலையு ளதனைத்
திருத்தமாய் மதியின் முகந்தனி லமைத்துத்
தேயுவின் சுடரொளி வருமுன்
தென்கையால் வழித்துக் கயிறதா யுருட்டித்
திறமுட னிழல்தனி லுலர்த்தி
வருத்தமாம் பில்லம் படலமே குந்தம்
மருவிய பூமுதல் மந்தம்
வகைபெறு நங்கை மாதர்பால் நெருஞ்சில்
வாங்குமிப் பேர்வச்சிரா யுதமே. 1168

(வேறு)

செந்தலை யுடனே சிறந்தழும்மூர்த்தி சிறப்புடன் சரியெடை
யெடுத்து
விந்தையாய் வேலிப் பருத்தியின்ரசத்தால் மிகுதிசை சாமமா
யரைத்து
அந்தமா யோசை தனிலதையுருட்டி அருமையாய் நிழல்தனி
லுலர்த்தி
மந்தமாம் படலப் பூமுதலனைத்தும் வாங்குமிப் பேர்வச்சிரா
யுதமே 1169

## வராகாதி மாத்திரை

ஓங்கு திப்பிலி வெள்ளி லோத்தி ரங்கொந் தாழையுடன்
தாங்கு பீத ரோகணி பன்றிக் கொம்புஞ் சரியாககூட்டி
பாங்கும் படியே தானரைத்து பரிசா வரையின் சாற்றிலிட
நீங்குங் காசம் வெள்ளெழுத்தும் நெடுமா லானே நிச்சயமே 1170

## விமலாதி மாத்திரை

பளிங்கு துத்தங் கோரோசனை பச்சைப் பாக்குத் திரிகடுகு
துளங்கு செம்பு முதலாக துகைசேர் நெல்லிக் காய்ச்சாற்றில்
களங்க மறவே அரைத்தெழுந்த காயம் படலந் தீர்ந்துவிடும்
விளங்கும் பெருமை தவறாத விமலாதி யாகு மென்றே 1171

## விரண தாம்பிராதிக் குளிகை

மடிசேரும் விரணதாம்பிராதி தன்னைப் பகுத்திருக்கில்
தாமிரம் துருசுதுத்தம் பவளமுடன தாளகம்
வடிசேருங் கருவளையல் வெண்காரம் நீலமணி
யுடனே சவுக்காரம் வாயோ டிதனைத்
துடிசேர் நல்லிடை மடவோய் சமனாகத்
தூக்கி யரைத்திடு முருக்கம்பூச் சாற்றில்
அடவாயில் வெய்யிலுலர்த் தாதேநிழ லுலர்த்தி
விரையவே செப்பிலடைத்து விழியிலுரைத் திடுமே 1172

விழியிலிடு மனுப்பான மருபுழுக்கடி செவ்வேர்தசை
வளர்ந்திருட்சி மிகுந்திடில் முருக்கம் பூவினில்
இழிகண் ணுடனீர்ப் பாய்ச்சல் கூச்சம்பொருந்தி
யிருந்திடு கிலுகிலுகிணி யிலைச்சாரதனில்
வளிநெரி பூகட்டி நெருஞ்சியிலை வெண்ணோச்சி
மருவுநிம்பந் தினிலை கவரினிலை புகைச்சல்
ஒளிவிடும் பூவுக்குத் தும்பையிலை படலமுத்
திடில்கையாந் தகரை யிலையா மென்றுரையே 1173

(வேறு)

உரைபயிலு மருந்திடுகிற் சொற்கே ளாமல்
உட்ணமா யழற்றியன லுடனெரிப் புண்டானால்
தரைபயில மோரிதழ்த்தா மரையின் வேர்நீர்ச்
சார்ந்திடுவேர் இவைவொவ் வொன்றே யாக
விரவுடனே துத்தமிரு கழஞ்சே யாக
வீறுபயில் முலைப்பாலிற் சுவரி னால்விட்
டரையதனைக் கலத்தினிலே பரக்கத் தட்டி
யார்த்திடவே பொருக்கானா லெடுத்தி டாயே 1174

ஆயிழையா யெடுத்ததனை முலைப்பால் தன்னில்
அடவாக விட்டரைந்துச் சீலையில் நிழலுலர்த்த
லாயுலர்த்தியே தானிசைந் தொழுகதிர் முலைப்பாலி
லெழிலார் கண்ணுந் தூயமதி போற்குளிர்ந்து
கண்ணிலே
வியாதிக் குணமுந் தோன்றும் பின்னையே
நிழலுலர்த் தாயுலர்த் திடதான் தோன்றும்
மேவிச் சாற்றதனா லிதற்கே தாமென்றுரைத்
தோர்க்குத் தாம்பிராதி விதித்தி டாயே 1175

விதித்திடவேர் கொடுப்பைச் சாரணை வேரும்
பூலயுகினி சிறுகீரை வெள்ளைக் காக்கணத்தோடு
உரித்தே நற்பளிங்கு செம்பார வினுடனே
கருஞ்சித் தினராவோ டொண்டம்
பரித்திடு யிவைவொவ் வொன்றே யாகப்
பான்மையுள துருசு துத்த மீரிரண்டாய்
அரைத்திடுவீர் முருககந்தனிப் பனத்தில்
அழிப்புத் தழும்பு பில்லமனைத்தும் போமே 1176

## வில்வாதி உருண்டை

வில்வவேர், திரிகடுகு, பருத்தி விதை உள்பருப்பு, காசுக்கட்டி, இடுகொள்ளு, துருசு, பச்சை வளையல். ஓடு, வெள்ளைச் சாரடை வேர், வெள்ளைக்காக்கணான்வேர், பொன்னாங்காணிவேர், சிறு கீரைவேர், அரவைத்தசெம்பு இவையெல்லாம் சமன்கூட்டி, வெள்ளைக்காக்கணம்பூ, நந்தியாவட்டப்பூ, பேய்த்தும்பைப்பூ, பேய்ப்புல், புளியிலை, பனைமட்டை, எலுமிச்சம் பழச்சாறு, கற்பூரம், கோரோசனை இவையெல்லாம் பொடி பண்ணிக் கலத்தில் புறத்திலிட்டு, இந்தச் சாறெல்லாம் வார்த்து, செம்பாலேத் தேய்த்து, மூன்றுநாள் அரைத்து, உருண்டை பண்ணி, நிழலிலுலர்த்தி, முலைப்பாலில் தேய்த்துக் கண்ணிலிடவும். கண்ணோக் காடு தீரும்.

## வீரசங்கார மாத்திரை

கடுக்காய் திப்பிலி வெண்காரம் கடல்நுரை யும்வெள்ளி லோத்திரம்
தொடுத்த துத்தம் மொருகழஞ்சு துருசு சங்குடன் கழஞ்சும்
மடுத்த முருங்கைப் பூச்சாற்றால் மதிய மூன்றுநா ளரைத்து
எடுத்த பூக்காசம் பூப்படலம் எங்கும் சங்காதி தானிதுவே.

## மாத்திரை (பொது)

காவிக் கல்லு மரமஞ்சள் காட்டி லரக்குஞ் சந்தனமும்
பூவிற் சிறுசண் பகத்தரும்பும் பொருந்த யிவைதான் நீரால்
மாவிக் கினஞ்செய் விழிநல்லாய் மசிய வரைத்தே கண்ணதனில்
மேவத் தேனில் பலநோயும் விரணஞ் சதையும் வெளியாமே.

(வேறு)

துருசு கடலி னுரைமிளகு திப்பிலி தாரந் திரிபலையும்
அரிசன மாமி ரோசனையும் ஆன துத்தம் அதிமதுரம்
பரிசன மான தனப்பாலில் பைய வரைத்தே யெழுதியிடத்
தரிசன மாகும் விழிபுகைச்சல் நீரும் உள்ள நோய்களுமே. 1180

(வேறு)

பூலாவேர் பத்துடனே பொன்பவளம் வெள்ளிமுத்து
சீலார்திப் பிலிபூரஞ் செம்புதுத்தம்—மேலாம்
தலையோடு ரோசனையும் சம்பழச் சாற்றில்
விலகிவிடுங் கண்ணோய்கள் விட்டு, 1181

(வேறு)

சந்தனம் மனோசிலை தயங்கிடு பளிங்கு
சங்குகடு காரமொடு பூரமிவைக் கொண்டு
வந்தமர மஞ்சளுட னஞ்சனமோ டிந்து
வன்மைபெற அன்பாக வேசேர்த்து நீதான்
கந்தமுள காந்தமுடன் லிங்கமுத லாகக்
காதல்மிகு பீதரோ கணிநீர்வார்த் தரைத்துச்
சிந்தைநல்ல மங்கையர்கள் பாலிலுரை யலது
தேனிலுரை யெழுதுவிழி நோய்கள்பல போமே.

(வேறு)

சொன்னதோர் பூலா வேரின் தோலது இரண்ட தாகும்
பன்னிய துத்தம் பாதி பகருநற் துருசு பாதி
மன்னிய புளியம் பூவில் மாதர்தம் பாலிற் கூட்ட
உன்னிய கண்ணில் காசம் உயர்பில்லம் படலம் போமே. 1183

(வேறு)

சூதத் திரட்டிக்காரீயம் சொரியார் துத்த மதற்குரெட்டி
சாதித் தங்க மதற்கிரட்டி தங்கத் திரட்டி தாம்பிரமும்
ஏதிட் டரைப்போ மென்றெண்ணா திசைந்த திரிபலைச் சாற்றில்
ஓதிக் கண்ணோய் தொண்ணூற்றா றொன்று மில்லா தோடிடுமே

(வேறு)

பொன்னாங் காணி சிறுகீரை புளியம் பூவும் பூலாவேர்
சொன்னோங் காணுந் திரிபலையுந் துத்தந் துருசு தானிந்து
தன்னா லொவ்வொன் றிருகழஞ்சு தனியே புளியிலை சாற்றரைத்து
சொன்னோங் கண்ணி லுறுபிணிகள் தொண்ணூற் றாறுந்
தீர்ந்திடுமே

(வேறு)

மரிசங்கால் நெல்லியரை வாளரவின் நெல்லின்
பொரியனைய புங்கரிசி முக்கால்—கரிசாலைச்
சாற்றி லரைத்துருண்டை தண்ணீரில் தேய்த்துவிடில்
தோற்றாமீன் தோற்றும் பகல்.

(வேறு)

பச்சைத்தேன் விட்டுப் பலகறையைத் தேய்த்தெடுத்து
இச்சையுட னேவிழியி லிட்டிடிலோ—மெச்சு
படலந்திமி ரந்தினவும் பரியு மிருபொழுதில்
வடகடலிற் செல்லும்நோய் மாண்டு

(வேறு)

துத்தந் துருசு அரிதாரம் தூய தான கந்தகமும்
மற்றுஞ் சிலையும் நேர்வாளம் வடிவாய் வெண்ணெ யுடன்கூட்டி
மெற்றும்மேனி யிலைச்சாற்றில் மெலிய வரைத்து ருண்டைசெய்து
கொத்திக் கட்ட நெற்றிநெரி குலைந்தே போகுங் கண்ணோயே.

(வேறு)

சூட்சமாஞ் சமுத்தராப் பழத்தை வாங்கித்
துப்புரவா யாவின்பா லவித்து லர்த்தி
சூட்சமாய் நேத்திரநோ யாவற் றிற்கும்
சொல்லரிய முலைப்பாலி லரைத்துப் போடு
சூட்சமாய்க் கண்ணுற்ற நோயெல் லாந்தான்
தொலைந்துபோ மிதனைவிட மருந்தொன் றில்லையே
சூட்சமாங் கூவிளத்தின் பழத்தின் வித்து
சுத்திசெய்து நந்தியா வட்டம் போடே. 1189

போடவே கண்புகைச்ச லெரிவு காந்தல்
புகைமேகம் நீர்ப்பாய்ச்சல் பூச்சி வெட்டு
நாடாது கடுப்புவலி யிழிகண் வாய்வு
நலமான ரோகம் போமுளைவு தீரும்
வாடாத நேத்திர நோயெல்லாம் போக
மகத்தான குளிகையொன்று வழுத்தக் கேளே
சாடவே சங்கு திரிகடுகு தாரம்
தருவாக அதிமதுரம் புங்கம் வித்தே
வித்தான மனோசிலையும் பீத ரோகணியும்
விருதான துத்தமிவைப் பத்துங் கேளு
நத்தியே சமன்கொண்டு கல்வத் திட்டு
நந்தியா வட்டப்பூச் சாற்றா லாட்டி
சித்தியாக் கயிறாக்கி நிழலிலு லர்த்தி
தேனிலுண்ண நேத்திரநோய் தொண்ணூற் றாறும்
சத்தியமாய்ச் சொல்லுகிறேன் தீர்ந்து போகும்
சண்டாளாக் கினிநூலைக் தொண்டா லென்னவே.

(வேறு)

கர்மமெனுங் காயத்தில் முதலா யுள்ள
கர்மாந்த நோய்குணங்கள் கருதிக் கேளு
நிர்மலமா மிகுகாந்தம் யீய மான
இரண்டுடனே கெந்தியரி தாரம் வீரம்
வீரமாம் யெலுமிச்சம் பழச்சாற் றாலே
விதமாக ஒருசாம மரைத்துக் கூட்டி
சீராக முளப்புடத்தில் ராசி கண்டு
சிந்தூரம் புடத்தன்னில் சந்தானஞ் செய்தால்
வாரமாந் தேனதிலே பணவெடை தூனப்பா
மண்டலந்தான் கொண்டிடவே பால்நெய் யாகும்
சாராமல் கொடுப்பைசிறு கீரை யோடு
தனித்தநெல்லி மிளகுடனே சார்ந்து கொள்ளே 1192

கொள்ளேயிலை பச்சைவெண்ணெய்க் காலி லிட்டு
கூறாகக் கறங்கியே உதய காலம்
உள்ளியே தவிடுகொண்டுத் தேய்த்துப் போடு
உற்றவெந்நீர் காலிலிட்டுக் கழுவிப் போடு
துள்ளமென்ற நயனத்திற் கேனா மப்பா
துருவான யிந்துப்பு துருசு சுன்னம்
வெள்ளையென்ற மடற்துத்தம் மரப்பொடியு மாகும்
வெண்படி சரியெடையா நிறுத்துக் கொண்டே 1193

நிறுத்தனை சம்பழத்தின் சாற்றா லாட்டி
நீளமாக கயிறுசெய்து வைத்துக் கொண்டு
உறுத்துகின்ற நயத்தில் முற்றும் போது
உத்தமனே நந்திபத்திரிச் சாறுந் தேனும்
சிறுத்தநெல்லி வேருடனே திப்பிலியுஞ் சமனாய்ச்
சீர்பெறவே கரிசாலைச் சாற்றி லாட்டி
ஒறுத்தமுலைப் பாலைதனி லுரைத்துப் போடு
ஒருபொழுது அம்மருந்து ஒருநா ளாமே

ஒன்றொன்றுக் கிருநேர மருந்து கொண்டு
உத்தமனே செய்திடவே தீருங் கண்ணில்
வென்றென்று வந்ததொண்ணூற் றாறு ரோகம்
விரைந்துபோ மிம்மருந்தல்ல வேறே வேண்டாம்

தூளென்றுங் கம்பமென்றுங் குளிகை யென்றும்
சொல்வா ரதைமெத்தவே உலகத் துள்ளோர்
தேனென்றுங் கொட்டுமப்பா சஞ்சீவி யாகும்
சிரசுக்குத் தைலமொன்று செப்பக் கேளே 1195

(வேறு)

ஆமையினோ டஞ்சனக்கல் தலையி னோடும்
அடர்ந்திடுகல் மதங்குதிரை பன்றி
யானைக் கொம்புமிகிந் திடும்பல்லுச் சேவல்நெஞ்
செலும்புடனே தேற்றான் கொட்டை
தாமமிகிந் திடுதுருசு துத்தம் சங்கு
தாளமுடன் கற்காவி கடலின் பேமை
வாமமிகும் பீதரோ கணியும் சீராய்
வளர்ந்தவெள்ளி லோத்திரமும் வகையாகக் கூட்டே

கூட்டே சமன்முருங் கைப்பூச் சாற்றிற்
குணம்பெறவே அரைத்திடுநாள் மூன்றுஞ் சென்றால்
தேட்டமுட னிழலுலர்த்தி முலைப்பால் தன்னிற்
திகழ்த்திடவே யுரைத்திடு வீராகில்
வாட்ட மிகுவலி அழிகண்படலந் தீராமணி
வள்ர்த்திமுத லெல்லாவகையும் போமே
நாட்ட மயிற்போலு மயில்சாயல் நடையனம்
போல முத்தம்போல் நகையினாளே

(வேறு)

இந்துவொன்று கற்பூரம் இரண்டு ரோகணி மூன்று
மந்துடனே திப்பிலி யைந்தும்—நந்திப்பூ
சாற்றரைத்துத் தேனுரைக்கில் கண்காசம் பூப்படலம்
மாற்றிடும் செய்யாய் மகிழ்ந்து 1198

கற்பூர மஞ்சள் முதலாய்த் திப்பிலி
நற்கரிய தோர்மிளகு நெல்லிதான்—சொற்பெரிய
நந்திப்பூ சாற்றரைத் துள்ளதேன் நூற்றுவிடில்
குந்தங்கண் தோடம்போம் கூறு 1199

(வேறு)

நெல்லி யரிதம்பொன் னாங்காணி துத்தம்
கல்லில் நெகவரைத் துருண்டை செய்திடில்
இல்லை யில்லை யழலு நோயதில்லை
இல்லை யில்லைபல் கூத்தர்சீர் பாதமே 1200

(வேறு)

நெல்லி முள்ளியும் நேர்மிளகும் கூட்டினால்
நெல்லினும் தோன்றும் மெழுத்தென்ப—மெல்லியர்கேள்
கோரோ சனைகோட்டங் கற்பூரங் கூடெழுதிலங்
கோரோ சனைதோன்றுங் காண். 1201

(வேறு)

புங்கந்தோல் கொண்டு புறத்தோல் தனைச்சீவி
பங்கப் படலதின் பால்பிழிந்து—நங்கார்கொள்
கோரோ சனைகோட்டம் கற்பூரங் கூட்டெழுதிலங்
கோரோ சனைதோன்றுங் காண். 1202

(வேறு)

மொழியுறேன் கலங்கொம்பு ருத்தி ராட்சம்
முனையான வெள்ளைச்சா ரணையின் வேரும்
தெளிவான தேசிப்பல் லானைத் தந்தம்
சேவலுட நெஞ்செலும்பு சரிகை வெள்ளி
வளியான புலிநகமும் மேனி வேரும்
வாகாக யெடைசமனா யாவி னீரிற்
களியாமல் மூனுநா ளூறப் போட்டுக்
கல்வத்தி லிட்டுமுலைப் பாலா லாட்டி
அளியாமற் கயிறுசெய்து நிழலு லர்த்தி
ஆணிப்பூ குந்தத்துக் கரையக் கேளே 1203

அறையிறேன் தேனிலிடக் கரைந்து போகும்
அப்பனே கைகண்ட வித்தை பாரு
இறையிறேன் மேற்தலைநோய் கண்வலிக் கெல்லாம்
எலுமிச்சம் பழத்தினுட முகத்தைச் சீவி
அறையான கதிர்கொண்டு பொத்து நன்றாய்
அரப் பொடியை யதனுள்ளே செலுத்தி மேலே
பறையாதே மெலிசான தூசு கொண்டு
பந்துபோலப் பொட்டணமாய்ப் பிடித்துக் கொண்டு
திறையான முலைப்பாலை மேலே விட்டுத்
தீமுகத்திற் காட்டியே கசக்கி டாயே 1204

கசக்கியே கையிலே வைத்துக் கொண்டு
கண்தனிலே மறாம லொத்தும் போது
மசங்காது கண்வலிகள் கடுப்புக் குத்தல்

மாறாத சிவப்பொடுமேல் தலைவாய் வெல்லாம்
இசக்கில்லா நாள்மூன்றிற் தீர்ந்து போகும்
இதைப்போல நேத்திரத்துக் கேறா தொன்றும்
குசமச்சாய்ச் செய்யாதே நேத்ரநோய்க் கெல்லாம்
குறியறிந்து நோயறிந்து குணமாய்ச் செய்யே 1205

(வேறு)

இந்தமா நீல காச மியல்பறும் பித்த காசம்
மந்தமா படலம் பில்லம் மயிர்க்குத்து புழுவெட் டோடு
சந்திமா மாலைக் கண்கள் கழறும்நீர்க் கண்ணிற் குத்தல்
வந்தவாய் வுடனே நல்ல மருந்தினி உரைக்கக் கேளே 1206

உரைத்திடு முத்து வெள்ளி உயர்ந்த தாமிரஞ் சங்கு
கரைத்திடுந் துருசு துத்தம் கலந்தலை யோடு பொன்னும்
திரைத்திடும் பீத ரோகிணி சேர்புங்கு நிம்பச் சாற்றில்
அரைத்திடக் கண்ணிற் றொண்ணூற் றாறுநோ யகன்று போமே

போமிது பொன்னாங் காணி புகழ்சிறு கீரை முத்தம்
ஓமிது சீந்தில் நிம்பம் உயரும்நா ரத்தை கோட்டம்
ஆமிது மதுரம் ஏலம் அடவஞ்சண் பகப்பூ வங்கம்
நாமிது சொன்னோ மெண்ணெய் நயந்தெரி முழுகப் போமே 1208

(வேறு)

கண்ணில் படலம் நீர்ப்பாய்ச்சல்
காச மிவையெல் லாம்தீரும்
இன்னம் வேறு மருந்துசொல்வேன்
எல்லாக் காசப் படலங்கள்
வண்ண ஆணிப் பீளைக்கும்
மருந்து ஆமை தன்னோடு
தண்ணீர் வாழு முதலைப்பல்
தக்க பன்றிக் கொம்புயெடே 1209

உடனே சேவல் நெஞ்செலும்பு
உற்ற தேற்றாங் கொட்டைதுத்தம்
படறும் வெள்ளிப் புலியெகிறும்
பச்சைக் கற்பூ ரமிவைகள்

திடனா யிவைகள் சமன்கொண்டு
தேசிச் சாறு வார்த்தரைத்து
அடவா யுருண்டை தான்செய்து
ஆன தேனி லுரைத்துயிடே 1210

உரைத்து இடவே காசம்போம்
உற்ற திமிர மாறிவிடும்
பெருத்த காச மாறிவிடப்
பெருகுந் தேசிப் பழச்சாறு
பருத்த உழக்குப் புளியிலைச்சாறு
பகருங் குமரிச் சாறுழக்கு
திருத்தும் பசும்பா லிரண்டுழக்குந்
தீயிற் குறுகக் காய்ச்சிடீரே 1211

காய்ச்சுங் குழம்ப துதனிலே
கனத்த துத்தந் திப்பிலியுங்
கூச்ச மில்லா மற்போட்டுக்
குறுகக் காய்ச்சிக் குழம்பரைத்து
பாய்ச்சும் பச்சைக் கற்பூரம்
பகருங் கழஞ்சி காற்போட்டு
தேய்ச்சே யரைத்துக் குழம்பாக்கிச்
சிமிழில் வைத்துக் கொள்வீரே. 1212

கொள்ளுஞ் சிறிய பயறளவு
கூட்டிக் கண்ணி லிடுவீராய்க்
கள்ளக் காச மிமைத்தடிப்பு
கண்ணில் வியாதி மாறிவிடும்
துள்ளு முடம்பா ரிதற்குத்
தோற்ற மருந்து சொல்லக்கேள்
விள்ளும் பொன்னி யரிதாரம்
மேவும் வசம்பு இவைகூட்டே 1213

சிவந்த சந்தன மிலையாற்
கொள்ளுஞ் சாற்றா லரைத்துருண்டை
சேர்த்தே முலைப்பால் தனிலுரைத்துச்
செய்ய கண்ணி லிடுவீராய்
பார்த்தே யோடு முடம்பாடும்
பைய்ய வோடும் பானாணை
சாற்றி னோங்கா னுலகோர்க்குத்
தக்க மருந்து இதுவாமே. 1214

(வேறு)

வரைதங்கு மாதி முன்னாள்
மன்னுயிர் படைத்த போதே
பரைதங்கும் நாலு வேதம்
படைத்தொளி கொழுந்து வீசி
உரைதங்கும் விழியி னோய்க்கு
உண்மையாய் மருந்து திண்ண
கரைதங்கும் நரர்க்கு நாற்காற்
பறவைகண் ணோய்க்குச் சொல்வாம். 1215

சொன்னவவ் வுரையைக் கொண்டு
தொழுதானை முகத்தோனை மாலை
அன்னவா கனஞ்சேர் வேலன்
அருள்முனி வோரைப் போற்றி
மின்னவ மணியி லங்கும்
விளங்குநா மாதே முள்ளம்
மன்னவ னிலங்கைச் சிங்கம்
வளர்கீர்த்தி மருந்தே சொல்வாம். 1216

முத்துபோல் கண்ணைக் கையால்
மூடியே கசக்கிப் பார்த்தால்
குத்திர காச மானாற்
கூடியே பிரிந்து காணும்
மற்றுள காசத் துக்கு
மருந்துட னெண்ணெய்ப் பாலே
சித்தியாங் கேளு நல்லத்
திரிபலை கியாழங் கொள்ளே. 1217

கொள்ளவே பிடரி தன்னிற்
கூடிய நரம்பை விட்டுத்
துள்ளவே யிரும்பு காய்ச்சிச்
சுட்டுமடி கயிறு கோர்த்துத்
துள்ளியே யிழுத்துக் காரந்
தடவியே தண்ணீர்க் காய
உள்ளகா சங்கள் கண்ணில்
ஒளிதெளி வாகிப் போகும். 1218

(வேறு)

துத்தந் துருசு அஞ்சனக்கல்
தூயதாய் பச்சைக் கற்பூரம்
முத்து பவளம் பொன்வெள்ளியு
மோதும் செம்பு வெண்கலமும்
கொத்த மல்லி கருங்கொள்ளுங்
கூறும் பீத ரோகணியுஞ்
சத்திர வேதி குருந்துக்கல்
சந்தன மிரண்டுஞ் சரியெடையே 1219

நிறையே தேன்நெய்க் காடியுடன்
நெருங்க வரைத்து ருண்டைபண்ணி
மறையும் விழிக்கு முலைப்பாலில்
மானே தீரும் வகைகேளு
மறையா மிலங்கை சிங்கமன்ன
மெதிர்த்த மன்னர் பெரும்படைகள்
திரையை யேந்தி வணங்குவர்போல்
திருந்த விழிகள் சீராமே. 1220

(வேறு)

அரிதார மனோசிலை நற்பவளம்
ஆனசங்கு காவிநெல்லிப் பருப்புத் தானும்
சரியாக வொன்றொன்று கழஞ்சு கூடி
தானரைத் துருண்டைசெய் திஞ்சிச் சாற்றில்
தரியாத காசமெல்லா முலைப்பாலி லிடவேத்
தாந்தீரும் பொன்னிலங்கை-சிங்க முன்னே
எதிர்த்த மன்னன் புறங்கொடுத் தோடுவதுபோற்
பேசாம லோடிவெளி யறுங்கள் தானே. 1221

(வேறு)

மஞ்சள்மனோ சிலைவாரி னுரையேலஞ் செம்பு
மரமஞ்சள் பொற்காவிக் கோழிமுட்டைக் கோது
அஞ்சாமற் திரிபலையுங் கலம்பொடுத் தானும்
ஆனதிரி கடுகிந்துப்பு ஒரொன்று கூட்டி
மிஞ்சாம லாட்டுமுத் திரத்தரைத் துருண்டை
மீளுமே பலதூசி தண்ணீரி லிடவே
பஞ்சாகும் பலபடலந் தேனிலிடத் தீரும்
பலவர்ணப் பிச்சிப்பூச் சாற்றிலிட லாமே. 1222

ஆகுமே யிழிச்சக்கண் ணெனுமிச்சம் பிழியில்
நற்புக்க தலைமுலைப் பாலிலிடத் தீரும்
ஏகனே வொருவனுட உதவிக் கொண்டு
இரணசுக்கிரன் விழியி லறியா தோடும்
பாகணைய விழியிள்ள நோய்கள் தீரும்
பகரக்கேள் பொன்னிலங்கை வாழும் மன்னன்
வாகனே யிராசாக்கள் தங்கள்முன்னே திரைக்கு
வரும்படை போலாடி வெளியாகுந் தானே. 1223

(வேறு)

போகுமப்பா பத்தியங்கேட்சக் கிரந்திப் பண்டம்
புளியாகா கைப்பாகா ரல்துவர்ப் பாகா
ஆகுமப்பா வுப்புடனே பால்நெய் யாகும்
அப்போது அருந்ததியி னளவு காணும்
ஏகுமப்பா குந்தங்கண் கரைவ தாகும்
இயம்புகிறேன் சூதமொன்று காரீய மிரண்டு
வேகுமப்பா காரீயம் ரெட்டி துத்தம்
இதற்குரெட்டி தாமிர மின்னங் கேளே. 1224

கேளப்பா தாமிரத்தி னிரட்டி சங்கு
ரெட்டியாக இதுவெல்லாம் பழச்சாறு கொண்டு
நாளப்பா மூன்றுதின மாட்டி வாங்கி
நலமாகக் குளிகைக்கட்டி நிழலு லர்த்தி
வேளப்பா பழச்சாற்றி லுரைத்துத் தீட்ட
விரணம்போங் குந்தம்போம் வெளியு மாகும்
நீளப்பா சுறுக்குமெத்த வெளியுங் காணும்
நேத்திரத்து நோய்க்கெல்லாம் நிலைத்துப் பாரே 1225

(வேறு)

கள்ளி வயிரங் குன்றிமணி
கலையின் கொம்பு பருத்திவிதை
துள்ளு மானைக் கொம்பெலும்பைத்
தோண்டும் வயிர முதலைப்பல்
தள்ளி யொன்றுங் குறையாமற்
தண்ணீர் தனில ரைத்துருண்டை
வெள்ள மதுவி லுரைத்தானே
விழியி லிடவே நோய்த்தீரும். 1226

(வேறு)

கடாட்சமுள்ள காசமாங் குடாரி யொன்று
காட்டுகிறேன் புலத்தியரே கண்டு பாரு
கடாட்சமுள்ள தங்கமொன்று வெள்ளி யொன்று
கடும்புலியின் நகமொன்று பீத ரோகணி
கடாட்சமுட னிவைச்சமனாய் நிறுத்துக் கொண்டு
கனக்கவே நாலுவகைப் பாலும் விட்டு
கடாட்சமுறுங் கயிறுபோற் திரட்டி நீயும்
காரிகையாள் முலைப்பாலி லரைத்துப் போடே. 1227

போட்டவுடன் நேத்திரநோ யனைத்தும் போகும்
பூட்டுகிறே னின்னமொரு குளிகை தன்னை
நாட்டவே யரிதாரஞ் சங்கு சுக்கு
நலம்பெரிய நன்மிளகு பீத ரோகணி
நீட்டவே திப்பிலியு மதுரந் தானும்
நேரான புங்கவிதை சிலைதான் துத்தம்
மூட்டவே யிவைச்சமனாய் நிறுத்துக் கொண்டு
முக்கியமுள்ள நந்திப்பூ சாற்றி லாட்டே 1228

ஆட்டியதைக் கயிறுகட்டி வைத்துக் கொண்டு
அப்பனே முலைப்பாலி லுரைத்துக் கொண்டு
மாட்டியதை நேத்திரநோய்க் கெல்லாம் போட
வாகாகத் தொண்ணூற் றாறும் போகும்
மூட்டியிதிற் திட்டாந்த மூலிகையி லொன்று
முத்திருக்கஞ் செவியதனைக் காரி நாளில்
நாட்டியதிற் காப்பிட்டு பார்பரைக்குப் பூசை
நயமாகச் செய்துவே ரறாமல் வாங்கே 1229

வாங்கப்பா வருக்கநாட் பிடுங்கி வந்து
மைந்தனே யந்தயிலைச் சாற்றி லாட்டி
வாங்கப்பா கண்ணிலிடு குருடுக் கெல்லாம்
வானிலுறு மருந்ததியை மருவிக் காண்பார்
வாங்கப்பா புறவளைக்கு மருந்து சொல்வோம்
மகத்தான நேத்திரநோய்க் கெல்லா மாகும்
வாங்கப்பா கடுக்காயுங் காசுக் கட்டி
மடற்துத்தம் பொன்மெழுகு சீனந் தானே 1230

(வேறு)

பூலாவேர், பொன்னாங்காணிவேர், சிறுகீரை வேர், ஓரிதழ்த் தாமரைவேர், துத்தம், தோற்றாங் கொட்டை, அதிமதுரம், சண்பகப் பூ, பளிங்கு, சங்குப் பொடி இவை சரிகொண்டு, முலைப் பாலிலிட்டு, அரைத்து, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துப் போடவும் கண்ணெரிவு மாறும். 1231

(வேறு)

பீதரோகணி, நற்பவளம், கற்பூரம், சாரணைவேர், சமன் தண்ணீர் வார்த்தரைத்துக் கயிறு செய்து நிழலில் உலர்த்தி வைத்து, பூப்போட்ட கண்ணுக்கு முலைப்பாலிலிடவும். வெள் ளெழுத்துக்குத் தண்ணீரிலிடவும் 1232

(வேறு)

செம்பு, துத்தம், வெண்கலச்சதா, வளையல், வெண்கல், ஓரிதழ்த்தாமரைவேர், வெட்பூலாவேர் இவை ஒரொன்று கழஞ்சு, இந்து$\frac{1}{4}$ கழஞ்சு இவை கூட்டி எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருண்டை பண்ணி முலைப்பாலில் உரைத்து, இடவும். கண்ணோவும் அனலும் தீரும். 1233

(வேறு)

தலை ஓடு, அதிமதுரம், கோட்டம், கோரோசனை, பீத ரோகணி, அஞ்சனக்கல், துத்தம், செப்பரைப் பொடி, இந்த 8 மருந்தும் சமன் கூட்டி, புங்கம் பால் விட்டரைத்து பிறகு முலைப்பால் விட்டரைத்து, மற்றநாள் தேசிப் பழச்சாறு விட்ட ரைத்து, உருண்டை பண்ணி, முலைப்பால், புளியிலை, எலுமிச்சம் பழச்சாறுகளில் போடவும், 1234

(வேறு)

துத்தம், துருசு, சங்கு, ஆமையோடு, ஓரிலைத் தாமரைவேர், வகைக்கு 1 வராகன் எடை. அம்மியிலிட்டு, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, 2 சாமம்அரைத்து, நெடுமாத்திரையாக உருண்டை பண்ணி, நிழலிலே காயவைத்துக் கொண்டு, நேத்திர வாய்வுக்கு முசுமுசுக்கைச் சாற்றில் உரைத்துப் போடவும். பூப்பட்டால் பனைமட்டைச் சாற்றிலிட்டாற்போம் மாலைக்குக் கையான் சாற்றில் இடவும். கண்வலி எல்லாந் தீரும். 1235

(வேறு)

துத்தம், வெண்கலம், பொன்னாங்காணிவேர் இவை மூன்று மருந்து ஒவ்வொரு காசு எடை கூட்டி, பனை மட்டைச் சாறும், எலுமிச்சம் பழச்சாறும் புளியிலைச்சாறும், விரியிலைச்சாறும் கலந்து, அரைத்து உருண்டை பண்ணி, நிழலி லுலர்த்தி வைத்துக் கொண்டு அனுபானம் படர்ந்த கண்ணுக்கு சம்பீரச்சாற்றிலிடவும்.

தினவுக்குப் புளியிலைச் சாற்றிலிடவும், இமைத்தடிப்புக்குப் பனை மட்டைச் சாற்றிலிடவும், நீல வெள்ளெழுத்துக்குத் தண்ணீரிலிடவும் நொந்த கண்ணுக்கு முலைப்பாலிலிடவும், செவ் வேருக்கு விரியிலைச் சாற்றிலிடவும், 1236

(வேறு)

ஏல கிளிஞ்சிப் பொடி 1 வராகன் எடை, பவளப் பொடி 1, பொரித்த வெண்காரம் 1, வெண்கலப் பொடி 1, எலுமிச்சம் பழச்சாறுவிட்டு நன்றாய் 2 நாட்கள் அரைத்துருட்டி, கண்ணி லிடத் தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1237

(வேறு)

துத்தம் 4, கற்பூரம் 4, கையாந்தகரை சமூலம் 4, எலுமிச்சம் பழச்சாற்றாலரைத்து, களிம்பு செய்துருட்டி உலர்த்தி, நீரிற் தேய்த்துஇடவும் இழிகண், புகைச்சல் தீரும். 1238

(வேறு)

மாதுளம்பூ, சீரகம், நெருஞ்சிக்காய், சரியொன்று பனை மட்டைச்சாறு விட்டரைத்து உருண்டை பண்ணி முலைப்பாலிலி டவும். கண்ணெரிவு நீங்கும்.

(வேறு)

வெண்கலச்சதா இரு கழஞ்சு, தலையொடு நாற்கழஞ்சு இந்துப்பு ½ கழஞ்சு, துத்தம் ½ கழஞ்சு, இது சேரப் பனை மட்டைச் சாறு விட்டரைத்து உருண்டை செய்து முலைப்பாலில் உரைத்துக் கண்ணிலிடவும். காசம், மந்தம், புகைச்சல் தீரும். 1240

(வேறு)

சீனக்காரம், வெண்காரம், துத்தம், துருசு, தலையோடு, பளிங்குக்கல் சமன் கொண்டு எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து உருண்டை பண்ணி முலைப்பாலிலிடவும். பூ, சதை வளர்த்தி, துர்மாங்கிசப்படலம், சகலமும் தீரும். 1241

(வேறு)

ஓரிதழ்த் தாமரை 2 கழஞ்சு, சிறுகீரைவேர் 1, கொடுப்பை வேர், ஆமை ஒடு, முட்டைத்தோல், மண்டை ஒடு, பன்றிக்கொம்பு கணவாயொடு வகைக்கு 1 கழஞ்சு, துருசு 1½ கழஞ்சு, இந்தப்படி கூட்டி, எலுமிச்சம் பழச்சாறுவிட்டு அரைத்து உருண்டை பண்ணி முலைப்பாலிலிடவும். பல நோயும் தீரும். 1243

(வேறு)

முத்து, பவளம், துத்தம், துருசு, படிகக்கல். பீங்கான் ஓடு, காரீயம், சீனக்காரம், வெண்காரம், தலையோடு இவை சமன் சாறு விட்டரைத்து நேக வரைத்துக் கயிறு செய்து நிழலிலுலர்த்தி முலைப்பாலில் உரைத்திடவும் கண்ணில் படலம், காசம் சகலமும் தீரும். 124ͻ

(வேறு)

சங்குப்பொடி 1 வராகன் எடை, ஆமை ஓட்டுப் பொடி 1 வராகன் எடை, துத்தம் 1 வராகன் எடை, பீதரோகணி 1வராகன் எடை, துருசு 1 வராகன் எடை இவை ஐந்து மருந்தும் எலுமிச்சம் பழச்சாற்றில் அரைத்துக் கயிறு சேர்த்து நிழலில் உலர்த்தி முலைப் பாலில் உரைத்திடவும். 15 நாளிடவும். 1244

(வேறு)

துத்தம், துருசு, பலகறை, கருவேம்பின்பிசின் இவை வகைக்கு 1 வராகன் எடை கையான் சாறு விட்டரைத்துக் கயிறு செய்து முலைப்பாலில் அரைத்துக் கண்ணிலிடக் கண்வேதனை, நீர்ப் பாய்ச்சல், வெள்ளெழுத்து தீரும். 1246

(வேறு)

கடுக்காய், வசம்பு. திப்பிலி, மிளகு, மரமஞ்சள், தாளி விதை பருப்பு, மனோசிலை, சங்குப்பொடி இவை சரி கூட்டி, வெள்ளாட்டுப்பாலில் அரைத்துக் கயிறு செய்து முலைப்பாலில் கண்ணிலிடக் காசம், படலம், நெறி, தழும்பு, புண், ஐந்து நாட் களில் தீரும். 1246

(வேறு)

துத்தம், துருசு, சங்கு. ஆமையோடு, ஓரிலைத் தாமரைவேர், இவை வகைக்கு 1 வராகன் எடை எலுமிச்சம் பழச்சாற்றால் இரண்டு சாமம் அரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து

நிழலிலுலர்த்தி வாயுவால் வந்தகண்ணோய்களுக்கு முசுமுசுக்கைச் சாற்றிலும் கண்பூவுக்குப் பனைமட்டைச் சாற்றிலும் மாலைக் கண்ணிற்குக் கையாந்தகரைச் சாற்றிலும் உரைத்துப் போடத் தீரும். 1247

(வேறு)

திப்பிலி, தோற்றான்விதை, செங்கழுநீர்க் கிழங்கு, கோட்டம் அதிமதுரம், துத்தம், துருசு, சந்தனம், கருணைவேர்ப் புறந்தோல் பொன்னாங்காணிவேர், சிறுகீரைவேர், பளிங்கு ஒரொன்று 1 வராகன் எடை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துருண்டை செய்து பாதி மருந்து தேனில் கலப்புரஞ் செய்து சிமிழில் வைத்து கண்ணிலிடவும். பூ படலம் உள்ளிட்ட நோவும் தீரும், 1248

(வேறு)

திப்பிலி, சீனக்காரம், சங்கு இவைகள் வகைக்கு 1 வராகன் எடை, எலுமிச்சம் பழச்சாற்றில் மூன்று சாமம் அரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து உலர்த்தி, இதை முலைப்பாலில் அரைத்துக் கண்ணிலிடச் சுக்கிரப் படுவன் போன்றவை தீரும்.1249

(வேறு)

திரிகடுகு, திரிபலை, அதிமதுரம், பீதரோகணி, வெண்காரம், பொன் மெழுகு, வெள்ளைக் காக்கணம் வேர் இவை வகைக்கு 1 வராகன் எடை பசுவின் பால், கழுதைப்பால், முலைப்பால் இவை சமமாய்க் கூட்டி, விட்டு அரைத்து, மாத்திரை செய்து, முலைப் பாலில் உரைத்துக் கண்ணிலிடக் காசம், குந்தம், வெள்ளைப் பூ, இவை தீரும். 1250

(வேறு)

மணிக்கொட்டைப் பாசியிலை, துத்தம், துருசு இவை வகைக்கு 1 வராகன் எடை சிறுநீர்விட்டரைத்து உருட்டி, முலைப் பாலில் உரைத்து இருபது நாட்களுக்குக் கண்ணிலிடப் புகைச்சலும், விழி மயக்கமும் தீரும். 1251

(வேறு)

சங்கு, திப்பிலி, மிளகு, சுக்கு, தேவதாரம், அதிமதுரம், புங்கு ஓடு, பீதரோகணி, துத்தம், மனோசிலை இவை வகைக்கு 1 கழஞ்சு, நந்தியா வட்டைப் பூச்சாறு விட்டு, அரைத்துக் குளிகை செய்து, மேற்படி சாற்றில் உரைத்துக் கண்ணிலிடக் காசம், படலம் இவை தீரும். 1252

(வேறு)

மருதம் பூவை கோமூத்திரத்தில் அரைத்து மாத்திரை செய்து, தேனில் உரைத்து, நெல் எடை, கண்ணிலிட நீர்வடிதல் போகும்.

(வேறு)

மதரோசனி, துத்தம், வெள்ளிலோத்திரம், கற்பூரம், அஞ்சனக்கல், தேற்றான்விதை, படிகம், அதிமதுரம், சங்குநாபி, கடல் நுரை, காவிமண், சந்தனம், எலுமிச்சம் பழச்சாற்றால் அரைத்து' உருண்டை செய்து இடவும். கண்ணில் தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1254

(வேறு)

பசுவின்பல், பளிங்கு, இந்துப்பு, மனோசிலை, அஞ்சனக்கல் மிளகு, எலுமிச்சம் பழச்சாற்றாலரைத்து உருண்டை செய்து கண்ணிலிடத் திமிரம், படலம் போன்ற தொண்ணூற்றாறு வியாதியும் தீரும், 1255

(வேறு)

துத்தம், வெட்பூலாவேர், கீழாநெல்லிவேர், ஓரிலைத் தாமரை வேர் இவைசமன் எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்து, களிம்பாக்கி உருண்டை செய்து முலைப்பாலிலிடத் திமிரம், படலம், உள்ளிட்ட வியாதியெல்லாந் தீரும். 1256

(வேறு)

பலகறை 10, துருசு, துத்தம் $\frac{1}{4}$, கூட்டி, எலுமிச்சம் பழச்சாற்றிலரைத்துருட்டி நிழலிலுலர்த்தி முலைப்பாலிலிடவும். கண்ணோவு, புகைச்சல், எரிவு, தினவு, பலவும் தீரும். 1257

(வேறு)

பசுவின்பல், சேவல் நெஞ்செலும்பு, குதிரைக் குளம்பு, பல், கழுதைக் குளம்பு, பல், ஆமையோடு, பலகறை, சங்கு, செம்பு, மான்கொம்பு, பன்றிக்கொம்பு, முயற்கொம்பு, தேற்றான்விதை, கடல் சிப்பி, முட்டையோடு, பூநாகம், வெள்ளைச் சாரணைவேர், புங்கம் விதை, மகிழம் விதை, ஆட்டுக்கொம்பு, இந்துப்பு, மனோசிலை, கற்பூரம் வகைக்கு 1 பலம். இவைகளை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து மாத்திரை செய்து நிழலுலர்த்தி நெய்யிலுரைத்துக் கண்ணிலிடச் சகல கண்ரோகங்களும் தீரும், 1258

(வேறு)

கடல்நுரை, சீனாக்கற்கண்டு, நந்தியாவட்டப்பூ இம்மூன்றும் சரி எடைச் சேர்த்து நந்தியாவட்டப்பூச்சாற்றால் அரைத்து, கடலைப் பிரமாணம் மாத்திரை செய்து உலர்த்திக் கொண்டு கண்ணில் படலம், சிவப்பு, துர்மாமிச வளர்ச்சி, வெள்ளை வலி, வகைக்கொரு மாத்திரை வெள்ளைத் துணியில் தளரமுடிந்து முலைப்பாலில் ஊறவைத்துப் பிழியவும் 1259

(வேறு)

சமுத்திராச்சோதி விதையை எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து உருண்டை செய்து நிழலிலுலர்த்தித் தேனில் உரைத்து இட நீலகாசம், பித்தகாசம் தீரும். சதை வளர்ந்த கண்ணுக்குப் பாகலிலைச் சாற்றிலிடவும், தினவுக்குப் புளியிலைச் சாற்றிலிடவும். 1260

(வேறு)

சங்கை உடைத்து மூன்று நாட்கள் காடியில் ஊறப்போட்டு, பிறகு, செப்பு வட்டிலில் காடிவிட்டு, 8 நாட்கள் வைத்த பிறகு சங்கு 4, துத்தம் 2, பீதரோாணி 1, தேசிப்பழச்சாறு விட்டு அரைத்துருட்டி, முலைப்பாலில் இடவும். 1261

(வேறு)

துத்தம் 2, துருசு ½, இந்துப்பு 2, மிளகு 2, இந்தப்படிக்கு முருங்கைப்பூச்சாறு விட்டு கலத்திலே செப்பு கொண்டு இழைத்து உருட்டி, ஆறவிட்டு வெள்ளைக்காக்கணான்பூ நீர்ப்பூலாவேரும், வெண்கல சதா, துத்தம், துருசு, கற்பூரம் கூட்டி, அரைத்து, கிண்ணியிலிட்டு, வெதுப்பி, தேன்விட்டு குழப்பி, பரணியில் வைக்கவும். பவளம், இரத்தினக்கல், துத்தம், துருசு, சங்கு, அதிமதுரம், அரிதாரம், மனோசிலை, சுக்கு, மிளகு, சுருமாக்கல், கோட்டம், தலை ஓடு, செப்புப் பொடி, வெண்கலம், ஈயம் வகைக்கு கழஞ்சு கூட்டி, முத்து பவளம், ரத்தினம் வகைக்கு பணவெடை கூட்டி உப்பிலிஇலை, புளியிலை, பொன்னாங்காணி, சிறுகீரை, நெல்லி, எலுமிச்சம் பழம், இளநீர் இந்த ஏழுவகை சாறுகள்விட்டு தினமொரு சாறாக அரைத்து, கற்பூரம் பண எடை கூட்டி அரைத்து, குளிகை பண்ணி, நிழலில் உலர்த்தி வைக்கவும். 1262

(வேறு)

சந்தனம், பூங்காவி, கொம்பரக்கு, சாதிமொட்டு இவற்றை சமபாகமாக எடுத்து நீர்விட்டரைத்து மாத்திரையாகத் திரட்டி நிழலிலுலர்த்தி முலைப்பாலில் இழைத்திடவும். பூ, படலம் தீரும்.

## கண்ணில் வரப்பட்ட வியாதிக்கெல்லாம் கலிக்கம்

நீலாஞ்சனம், கடுகு, கடுக்காய், தான்றிக்காய், சமுத்திராக் காய், அதிமதுரம் இவை வகைக்கு **2** வராகன் எடை. சாதிக்காய், சீரகம் 1 பலம், சமுத்திரநாடா, தேற்றாங்கொட்டை சண்பக அரும்பு, மஞ்சள், ஆனைநகம், குதிரைநகம், இலவங்கம், துத்தம் இவை வகைக்கு 2 வராகன் எடை. துருசு, செம்பு, இரும்பு, ஆமையோடு, சங்கு, சாதிபத்திரி, நந்தியாவட்டம்வேர், படிகாரம் காசுக்கட்டி, களிப்பாக்கு, கடப்பம் விதை, வெள்ளைச்சாரணை வேர், பொன், முத்து, பவளம், சமுத்திராப் பாலை விதை, கரடிக் கொம்பு இவையெல்லாம் வகைக்கு 1 வராகன் எடை. இந்த மருந்தெல்லாம் செப்புச் சட்டியிலே போட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு, மூன்று நாட்கள் ஊறவிட்டு நோகவரைத்துச் செப்புச்சட்டி யிலே வைத்து முசுமுசுக்கைச் சாறுவிட்டு ஒருநாள் அரைக்கவும். முருங்கைப் பூச்சாறு, கிளாப்பூச்சாறு, தும்பைப் பூச்சாறு, வெள்ளைக்காக்கணான் சாறு, பொன்னாங்காணிச்சாறு, கரிசலாங் கண்ணிச்சாறு, புளியிலைச்சாறு, பனைமட்டைச்சாறு, ஈரவெங் காயச்சாறு, இந்தச் சாறுகளிலே ஒவ்வொரு நாள் தனித்தனியே அரைத்து, பிறகு ¼ வராகன் எடை பச்சைக் கற்பூரம் போட்டு, சாறுவளைச்சாறு விட்டரைத்து, ஆனைத்திப்பிலி மாத்திரம் கலிக்க உருண்டை பண்ணி நிழலிலே உலர்த்தி, உலர்ந்த பிறகு சட்டி காயவைத்து கரிசலாங்கண்ணிச்சாறும், நந்தியாவட்ட யிலைச்சாறும் மட்டும்விட்டு, இந்த கலிக்க உருண்டையைப் போட்டு வறுத்துச்சாறு சுவறின பிறகு எடுத்துப் பரணியிலே வைத்துக்கொண்டு இடவும். இந்த மருந்திலே தீரும் வியாதி: இரணசுக்கிரன், ஆணிப்பூ, ஆணி, பயித்திய காசம், மந்தாரகாசம், இருட்காசம், நேத்திர வாய்வு, முடமயிர், பிரிசல், புண், கண்ணோவு போன்றவை. நீலகாசமும் பித்தகாசமும் மருள் பக்குவத்திலே ஆனால் ஆம். முன்சொன்னசாறு வகையிலே திறமறிந்து உரைத்துப் போடவும். 1264

நாற்கால்சீவன் விழி நோய்க்கு மருந்து

1. இலுப்பை வைரத்தைத் தேனில் உரைத்து இடத்தீரும்.

2. அதிமதுரம், பொரிக்காரம், நீலத்துத்தம், அஞ்சனக்கல் இந்துப்பு, பளிங்கு, கடுகுரோகணி, செம்பு, ஈயம், திரிபலை தேற்றான் விதை இவற்றை ஓரளவாய் மஞ்சள் பூச்சாற்றிலரைத் துருட்டி உலர்த்தி எடுத்துக் காடியில் உரைத்திடவும் தீரும்.

3. சதுரகள்ளிச் சமூலத்தை உலர்த்திப் பொடி செய்து அத்துடன் சந்தனமும் கூட்டி மாத்திரைகளாக உருட்டி வைத்து உலர்த்தி எடுக்கவும். இதைக் காடியில் உரைத்திடவும் தீரும்.

பறவை விழிநோய்க்கு மருந்து

உப்பும் முருங்கையிலைச்சாறும் கூட்டி இடவும் தீரும்.

(1265—1269)

நாற்கால் சீவன் விழிநோய்க்கு

எண்ணு மிலுப்பை வைரத்தை
இணங்கத் தேனி லுரைத்திடவே
கண்ணி விடவே நோய்தீரும்
காணு நாற்கால் மிருகத்தின்
உண்மை யிலங்கை சிங்கமுன்னே
உரைத்த மன்னர்ப் பெரும்படைகள்
மண்ணில் விழுந்து புலக்கவ்வி
வணங்குங் களம்போல் வெளியாமே. 1265

(வேறு)

அதிமதுரம் பொரீக்காரம் நீலத்துத்தம்
அஞ்சனக்க லிந்துசந்துப் பளிங்குதானும்
பதிகடுகு ரோகணிசெம் பீயந்திரி
பலைதேற் றாங்கொட்டை நிரையோறொன்று
மதிமஞ்சட் பூச்சாற்றி லரைத்துருண்டை
மதுவதே னிலரைத் திட்டால்
அதிக விலங் கைசிங்க முன்னெதிர்த் தோடு
மனேக விழிநோய் குணந்தானே. 1266

சதுர கள்ளி சமூலத்தைச்
சயங்க வுலர்த்திப் பொடிசெய்து
அதிர மணக்குஞ் சந்தனமும்
அரைத்த குளிகை யுரைத்திடவே
குதிரை முதலாய் நாற்காலிங்
கூறு மிருக விழிநோய்கள்
கதிரோ னிலங்கை சிங்கத்தைக்
கண்ட படைபோல் வெளியாமே 1267

## பறவை விழி நோய்க்கு

இணங்கும் பறவை விழி கலங்கில்
இதமா மானை வணங்கியிலைவேர்
குணங்கள் விழியும் வெளியாகுங்
கூறக் கேளு மெதிர்த்தபடைக்
கணங்கள் காளிக் கிரைக்கொடுக்கும்
கனக யிலங்கை சிங்கமன்னன்
வணங்கித் திரைக ளேந்தாத
மன்னர் படைபோல் வெளியாமே 1268

உப்பு முருங்கை யிலைச்சாறும்
உடனே பிழியிற் பறவைவிழி
செப்ப முடனே வெளியாகும்
தீருந் திடனாம் சொற்கேளு
தப்பா திலங்கை சிங்கமுன்னே
தரணி மன்ன ரெதிர்த்தாலும்
அப்பா பிழைத்தோ மென்றோடும்
அதுவே போல நாட்டுமே 1269

## 10, குழம்பு வகைகள்

இவை, சில சாறுகளையும் சில சரக்கு வகைகளையும் பொடி செய்து துணியில் வடிகட்டிக் குழம்புப் பக்குவத்தில் காய்ச்சி எடுத்துக் கொள்வனவாகும்.

கண் நோய்களுக்கென்றே கூறப்படும் பொதுவான குழம்பு வகைகள் பற்றிய விளக்கங்கள் பல சுவடிகளிலும் காணப்படுகின்றன. அவைகள் ஒன்றாகத் தொகுக்கப்பட்டுத் தலைப்புகள் அகர வரிசையில் முறைப்படுத்தப்பட்டு மொத்தம் 47 வகையான குழம்புகளாக இங்குக் கொடுக்கப் பட்டுள்ளன.

இவற்றுள், இளநீர்க் குழம்பு, கற்பூரக்குழம்பு போன்றவை பல்வேறு வகைகளாகவும் கூறப்படுகின்றன. சில குழம்பு வகைகள் தலைப்பில்லாமலும் விளக்கப்படுகின்றன. அவற்றை, குழம்பு 1, 2 என்னும் தலைப்புகளிலேயே காணலாம்.

இக் குழம்புகளை முறைப்படி செய்து எடுத்து, செப்புச் சிமிழில் அல்லது மான்கொம்புச் சிமிழில் பாதுகாப்பாக வைத்தல் வேண்டும். தேவையான போது இவற்றில் ஆங்காங்கே கூறியுள்ள அளவுப்படி எடுத்துக் கண்ணிலிட வேண்டும்,

இவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

## 1. இரத்தினாதிக் குழம்பு

கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், சுக்கு,மிளகு, திப்பிலி வசம்பு, சங்கு, வளையல், வெண்கலம், செம்பு, இரும்பு, நெருப்பு இவற்றின் சாளம், குளவிந்தம், மஞ்சள்தாது, மாதுளை வேர்த் தோல். தேற்றான் விதை, யானை, கழுதை, மான், பசு, நாய், வெள்ளாடு இவற்றின் பற்கள், ஆமையோடு, கோழி முட்டை ஓடு, வேப்பமுத்து, முதலைத் தலையோடு, இலவங்கத் தோல், காந்தம், அரிதாரம், விழலரிசி, அகில், நாகப்பூ, கடல்நுரை, ஏலம், காராம் பூ, அகில், நாகப்பூ, கடல்நுரை, பீதரோகணி, கோட்டம், செங்கல், காரீயம், முத்து, பவளம், பளிங்குக்கல் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்க்கவும். இத்துடன், கையாந்தகரைச்சாறு நெல்லிக்காய்ச்சாறு, இளநீர்இவற்றைத்தனித்தனியே விட்டரைத் துருட்டிக் குழம்பாக வைக்கவும். இதைப் பொருத்தமான துணை மருந்துகளில் உரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1270)

## 2. இலவணக் குழம்பு

இந்துப்பு. தலையோடு இவற்றை ஓரளவாய் மாதுளம் பழச் சாறு விட்டரைத்துக் குழம்பாக்கிச் சிமிழில் வைக்கவும். இதைக் கண்ணிலிடவும் கண் நோய்கள் தீரும். (1271)

## 3. இளநீர்க் குழம்பு 1

பொன்னாங்காணி, சிறுகீரை, சந்தனம், விலாமிச்ச வேர், நெல்லிவற்றல்தோல், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல், வசம்பு, அதிமதுரம், மரமஞ்சள் இவற்றை ஓரளவாய் எடுத்து அரைத்து அத்துடன், இளநீரைச் சேர்த்தரைத்துக் குழம் பாக்கிச் சிமிழில் வைக்கவும், இதை எடுத்துக் கண்ணிலிடவும் கண் நோய்கள் தீரும். (1272)

## 4. இளநீர்க் குழம்பு 2

இளநீர், பசுவின்பால், நன்னாரி, விலாமிச்சவேர், அதிமதுரம், சந்தனம்,நெய்தற்கிழங்கு, நல்லெண்ணெய் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்துக் காய்ச்சி வைக்கவும். இதைக் கண்ணிலிடக்கண் விரணம், உளைவு போன்ற நோய்கள் தீரும். (1273)

## 5. இளநீர்க் குழம்பு 3

இளநீர், திரிபலை, மரமஞ்சள், அதிமதுரம் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்துக் காய்ச்சி, அத்துடன் இந்துப்பு, பச்சைக்

கற்பூரம், தேன் இவற்றை எடுத்துக் கண்ணிலிடப் பூ, சதை வளர்ச்சி, சூடு, எரிச்சல், போன்ற பல நோய்களும் தீரும். (1274)

## 6. இளநீர்க் குழம்பு 4

கற்றாழைச்சாறு, கையாந்தகரைச்சாறு. ஆரையிலைச்சாறு, சிறுகீரைச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, தாமரையிலைச்சாறு, வேலிப்பருத்திச்சாறு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து அத்துடன் நெல்லி முள்ளித்தோல், இளநீர், பனை மட்டைச்சாறு இவற்றையும் சேர்த்து வடிகட்டிக் கொள்ளவும். அத்துடன், மஞ்சள், கோட்டம், அதிமதுரம் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து, இளநீர், எலுமிச்சம் பழச்சாறு சேர்த்துக் காய்ச்சி வடிகட்டித் தேன், பச்சைக் கற்பூரம் இவற்றைச் சேர்த்துக் குழப்பி வைக்கவும் இதைக் கண்ணிலிடக் கண் நோய்கள் தீரும். (1276-1277)

## 7. இளநீர்க் குழம்பு 5

செவ்விளநீர் 1 குறுணி எடுத்து அதில், பொன்னாங்காணி, சிறுகீரை, அதிமதுரம், ஏலம், கடுக்காய்த் தோல், தான்றிக்காய்த் தோல், நெல்லி முள்ளித் தோல், மரமஞ்சள், கோட்டம், சீரகம், இருவேலி, இலவங்கப் பட்டை, சந்தனம் இவற்றை வகைக்கு 1 பலம் எடுத்துச் சேர்த்து நாலில் ஒன்றாகக் காய்ச்சி வடிக்கவும் அத்துடன், துருசு, துத்தம், பீதரோகணி, பச்சைக் கற்பூரம், அஞ்சனக்கல் இவற்றைச் சேர்த்தரைத்துக் கலந்து வைக்கவும், இதைக் கண்ணிலிடவும். நீர்ப்பாய்ச்சல், புகைச்சல், பீல்லம், பற்பரோகம், காசம், பிரிச்சல், படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1278-1279)

## 8. இளநீர்க் குழம்பு 6

இளநீர் 1 குறுணி எடுத்து அதில் பொன்னாங்காணி, சிறுகீரை இவற்றின் வேர்கள் வகைக்கு 1 பலம், நெல்லி, தான்றிக்காய், சந்தனம், அதிமதுரம், தேவதாரம், சண்பக மொட்டு, கோட்டம், இலவங்கம், மரமஞ்சள், விலாமிச்சவேர், இருவேலி, புன்னைத்தாது, செங்கழுநீர்க் கிழங்கு இவை வகைக்கு 3 கழஞ்சு சேர்த்துக் காய்ச்சவும். அத்துடன், துத்தம், துருசு, கடல்நுரை, சந்தனம், பீதரோகணி இவை வகைக்கு 6 கழஞ்சு சேர்த்துக் குழம்பாக்கிக் கலக்கவும். இத்துடன், பச்சைக் கற்பூரம் 1 பண எடை சேர்த்துக் குழப்பிச் செப்புச் சிமிழில் வழித்து வைக்கவும் இக்குழம்பைக் கண்ணிலிடவும். புகைச்சல், வெள்ளெழுத்து, நீர்ப்பாய்ச்சல், எரித்தல், காசம் போன்ற பல நோய்களும் தீரும் (1281)

## 9. இளநீர்க் குழம்பு 7

செவ்விளநீர் 2 பங்கு, சங்கம் பழச்சாறு 2 பங்கு, துருசு 1 பண எடை சேர்த்துக் காய்ச்சி வடித்து அத்துடன், பச்சைக் கற்பூரம் $\frac{1}{2}$ கழஞ்சு சேர்த்து வழித்து வைக்கவும். இதைக் கண்ணிலிடப் பல நோய்களும் தீரும். (1282)

## 10. இளநீர்க் குழம்பு 8

இளநீர் $\frac{1}{8}$ படி, மரமஞ்சள், திரிபலை, முத்தக்காசு, சிறுகீரை வேர் இவற்றை வகைக்கு 1 பலம் கூட்டி, மூன்று நாட்கள் ஊற வைத்து வடித்துக் காய்ச்சி அத்துடன், துத்தம், துருசு, பச்சைக் கற்பூரம் இவற்றையும் சேர்த்துக் குழைத்துச் சிமிழில் வைக்கவும். இதைக் கண்ணிலிடக் கண்நோய்கள் தீரும். (1283)

## 11. இளநீர்க் குழம்பு 9

இளநீர் 3 எடுத்து அத்துடன், பொன்னாங்காணி வேர், சிறு கீரைவேர், நன்னாரி வேர், ஓரிலைத்தாமரைவேர், வெட்டிவேர், விலாமிச்சவேர், செங்கழுநீர்க் கிழங்கு, கோரைக் கிழங்கு, ஏலம், இலவங்கம், மரமஞ்சள், அதிமதுரம், சண்பகமொட்டு, சீரகம், கோட்டம், நெல்லிக்காய், தானிக்காய், கடுக்காய், சந்தனம் இவை வகைக்கு 1 வராகன் எடை இடித்துச் சேர்த்துக் காய்ச்சி வடிக்கவும் அத்துடன், துத்தம், துருசு, கடல்நுரை, பித்தாஞ்சனம், பீத ரோகணி, கறுத்த வெண்ணெய்க்கல் இவற்றை ஓரளவாய்ப் பொடித்துச் சேர்த்து, பச்சைக்கற்பூரம் 1வராகன் எடை கூட்டிக் குழைத்து வைக்கவும். இதைக் கண்ணிலிடவும். கண்நோய்கள் தீரும். (1284)

## 12. இளநீர்க் குழம்பு 10

இளநீர் 4 நாழி, அதிமதுரம், திரிபலை இவை வகைக்கு 12 வராகன் எடை எடுத்துப் பொடித்துச் சேர்த்துக் காய்ச்சவும். இதில், துத்தம், துருசு, இந்துப்பு, பச்சைக் கற்பூரம், தேன் இவற்றையும் கூட்டிக் குழைத்து வைக்கவும். இதைக் கண்ணிலிடவும் கண்நோய்கள் தீரும். (1285)

## 13. இளநீர்க் குழம்பு 11

இளநீர் 4 நாழி, தென்னம் மட்டைச்சாறு 4நாழி, கருவேலம் பட்டை, கடுக்காய், தான்றிக்காய் இவை வகைக்கு 2பலம், துத்தம் 4 வராகன் எடை, அதிமதுரம் 8 வராகன் எடை, இந்துப்பு 2

வராகன் எடை, சேர்த்துக் காய்ச்சி வடித்து அத்துடன், பச்சைக் கற்பூரம், தேன் இவற்றையும் சேர்த்துக் குழப்பி வைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1286)

## 14. இளநீர்க் குழம்பு 12

இளநீர் 4 படி, குமிழம்பழம் 50, துத்தம், துருசு, அஞ்சனக்கல், கடுகுரோகிணி, பச்சைக்கற்பூரம், கடல்நுரை இவை வகைக்கு 1 கழஞ்சு கூட்டிக் காய்ச்சி வடித்து வைத்திடவும். காசம், படலம், முடமயிர் போன்ற பல நோய்களும் தீரும். (1287)

## 15. இளநீர்க் குழம்பு 13

இளநீர் 1 படி எடுத்து, அத்துடன், அதிமதுரம், தான்றிக்காய், மரமஞ்சள், கடுக்காய், நெல்லிக்காய் இவை வகைக்கு 1 பலம், சேர்த்துக் காய்ச்சி வடித்து அத்துடன் தேன், இந்துப்பு, பச்சைக் கற்பூரம் இவை வகைக்கு 1 வராகன் எடை சேர்த்துக் குழப்பி வைத்திடவும். கண்நோய்கள் தீரும். (1288)

## 16. இளநீர்க் குழம்பு 14

இளநீர் 2 குறுணி, எலுமிச்சை வேர், சங்கம் வேர், அதிமதுரம் ஏலம், ஓரிதழ்த்தாமரை, கோரைக் கிழங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, சிறுகீரை, சாத்திரவேதி, பொன்னாங்காணி, தாமரை இலைச் சுருள், கோட்டம் இவை வகைக்கு 2 கழஞ்சு, சேர்த்துக் காய்ச்சி வடிக்கவும். அத்துடன், இந்துப்பு, பச்சைக்கற்பூரம் இவை வகைக்கு 2 வராகன் எடை சேர்த்துக் குழப்பி வைத்திடவும். கண்நோய்கள் பலவும் தீரும். (1289)

## 17. கற்பூரக் குழம்பு 1

கிராம்பு, வெள்ளைச் சாரணைவேர், சந்தனம், சண்பகப்பூ, இலவங்கப்பத்திரி, பீதரோகணி, குங்குமப்பூ, செங்கழுநீர்மூலம், பச்சைக் கற்பூரம் இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து அத்துடன் தேன் விட்டு 4 சாமம் ஆட்டிக் குழம்பாக்கி எடுத்து மான்கொம்பில் வைத்திடவும். காலையும் மாலையும் கண்ணிலிடவும். காசம், பூ, நீர்ப்பாய்ச்சல், மாலைக்கண், சுக்கிரன், நாகப்படலம் போன்ற நோய்களும் தீரும். (1290-92)

## 18. கற்பூரக் குழம்பு 2

பச்சைக்கற்பூரம், கிராம்பு, வாலுழுவை, குங்குமப்பூ, இலவங்கப் பத்திரி, சந்தனம், பீதரோகணி இவற்றை ஓரளவாய் எடுத்துத் தேன் விட்டரைத்துக் குழம்பாக்கி வைத்திடவும். காசம் போன்ற பல நோய்களும் தீரும். (1293)

## 19. கற்பூரக் குழம்பு 3

புளியம்பூ, தலையோடு, பச்சைக்கற்பூரம், கற்கண்டு, சர்க்கரை மிளகு, திப்பிலி, தான்றிக்காய்த்தோல், கடுக்காய்த்தோல், நெல்லி வற்றல் இவற்றை ஓரளவாய் தேன், எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் குழம்பாக்கி வைத்திடவும். கண்நோய்கள் தீரும். (1294)

## 20. கற்பூரக் குழம்பு 4

படிகம், துத்தம், மிளகு, திப்பிலி, சங்கு, வீரம், துருசு, பச்சைக் கற்பூரம், கடல்நுரை, நிமிளை, தேற்றான் விதை, மரமஞ்சள், பீத ரோகணி, மனோசிலை இவற்றை ஓரளவாய் எடுத்துத் தேனி விட்டுக் குழைத்துக் குழம்பாக்கிடவும் காசம், படலம் போன்ற பல நோய்களும் தீரும். (1295)

## 21. காக்கணக் குழம்பு

வெள்ளைக் காக்கணவிதை, செம்பு அரப்பொடி இவற்றை ஓரளவாய் எடுத்துப் பசுவின் நெய்யில் அரைத்துக் குழம்பாக் கிடவும். படலம் போன்ற நோய்களும் தீரும். (1296)

## 22. காளமேகக் குழம்பு

வெம்புலி, கருநாகம், இவற்றைச் சேர்த்திடித்து நந்தியா வட்டம் மலர்ச்சாற்றால் அரைத்திடவும். பூ, முளை போன்ற பல நோய்களும் தீரும். (1297)

## 23. கோரோசனைக் குழம்பு

நெல்லிவற்றல், கொத்துமல்லிவிதை, மிளகு இவற்றை ஓரள வாய்க் கூட்டி, அத்துடன் கோரோசனை, கோட்டம், குங்குமப்பூ, இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து அரைத்துக் குழம்பாக்கி இடவும், கண் பார்வைத் தெளிவடையும். (1298)

24. நன்னாரிக் குழம்பு

நன்னாரி வேர், பச்சைக்கற்பூரம் இவை வகைக்கு $\frac{1}{4}$ வாரகன் எடை சேர்த்திடித்துக் காய்ச்சிக் குழம்பாக்கிஇடவும் கண்நோய்கள் தீரும். (1299)

25. நெல்லிக் குழம்பு

நெல்லியிலை, பட்டை, சாரனைசமூலம், அத்தியிலை, காய், கொன்றைப்பட்டை, நாவற்பட்டை, இலை, வெள்ளைக்காக் கணான்வேர், பொன்னாங்காணிவேர், புளியிலை, பூ, மூக்கிலை, முருங்கையிலை, சிறுகீரைவேர், பூளையிலை. நத்தைச்சூரியிலை, நாயுருவிவேர், நீர்ப்பூலாவேர், ஆவாரையிலை, நெல்லிமுள்ளி, கடுக்காய், கற்றாழை மடல் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து அத்துடன் நீர் 1 குறுணி சேர்த்துக் காய்ச்சி வடித்து, அத்துடன் துத்தம், துருசு, பீதரோகணி, வெண்காரம், அதிமதுரம், சேர்த்து எலுமிச்சம் பழச்சாறும் கூட்டிக் குழம்பாக்கியிடவும் கண் நோய்கள் தீரும். (1300)

26. பொடுதலைக் குழம்பு

பொடுதலையை இடித்துச் சாறு பிழிந்து, அத்துடன், கடுக்காய்த் தோல், துத்தம், துருசு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்துக் காய்ச்சி வடித்து அத்துடன் இந்துப்பு, பச்சைக்கற்பூரம் இவற்றையும் சேர்த்துக் குழப்பி வைத்திடவும். குந்தம் போன்ற கண் நோய்கள் பலவும் தீரும். (1301)

27. மதுராதிக் குழம்பு

அதிமதுரம், கடல்நுரை, கடுக்காய், இந்துப்பு, துத்தம், துருசு, மனோசிலை, அரிதாரம், திப்பிலி, மிளகு இவை ஓரளவாய்ச் சேர்த்து எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்து, பசுவின் வெண்ணெய் சேர்த்து வைத்திடவும். எலுமிச்சம் பழச்சாறு, முலைப் பால் இவற்றையும் சேர்த்துக் குழைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1302)

28. மரீசக் குழம்பு

மிளகைத் தோல் நீக்கி எலுமிச்சம் பழத்திலடைத்துச் செவ்விள நீருக்குள் வைத்து மூடிச்சீலை செய்து, புடம் போட்டெடுக்கவும். இதிலுள்ள நீருடன், மிளகு, இந்துப்பு இவை வகைக்கு $\frac{1}{4}$ பண எடை, துத்தம் $\frac{1}{2}$ பண எடை கூட்டியரைத்துத் தேன், பச்சைக்கற்பூரம் இவற்றையும் சேர்த்துக் குழம்பாக்கி இடவும். கண் நோய்கள் தீரும். (1303)

## 29. மான் குழம்பு

கலைமான் கொம்பைப் பசுவின் நெய், தேன் இவை விட்டரைத்துக் குழம்பாக்கி வைத்திடவும். படலம் போன்ற பல நோய்கள் தீரும். (1304)

## 30. வேட்டுவன் குழம்பு

கருவளையல், கிட்டம், கடுக்காய், நெல்லிவற்றல், தான்றிக் காய்த்தோல், சுக்கு, மிளகு, இந்துப்பு, குளவிக்கூடு இவற்றை ஓரளவாய் எடுத்து, நல்லெண்ணெய், புளியிலைச்சாறு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்துக் குழம்பாய் அரைத்திடவும். கண் நோய்கள் பலவும் தீரும். (1305)

## 31. குழம்பு (பொது) 1

பசுவின் பால் 1 குறுணி எடுத்து அதில், கொடிக் கொழுஞ்சி, கடுக்காய், கருவேம்பினிலை, களிப்பாக்கு இவை வகைக்கு 4 பலம் சேர்த்து அவித்துப் பிழிந்து கொள்ளவும். இத்துடன் தேன் $\frac{1}{4}$ படி இட்டுக் குழப்பி வழித்து வைத்திடவும். இக்குழம்பைக் கண்ணி லிடவும். புழுவெட்டு, புண்கள் போன்ற பல நோய்களும் தீரும், (1306-1307)

## 32. குழம்பு 2

கடல்நுரை, அரிதாரம், அதிமதுரம், வெண்காரம், கடுக்காய், துருசு, துத்தம், மனோசிலை, திப்பிலி இவற்றை ஓரளவாய் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் குழம்பாக்கவும், இத்துடன், பசுவின் நெய், தேன், கற்றாழைச்சாறு, முலைப்பால் இவற்றைக் கூட்டிக் கண்ணிலிடவும். திமிரம், காசம், படலம், முளை போன்ற பல நோய்களும் தீரும். (1308-1309)

## 33. குழம்பு 3

துத்தம், துருசு, வெண்காரம், மிளகு, இந்துப்பு, திப்பிலி, பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்தரைத்து அத்துடன், பசுவின் வெண்ணெய், தேன் இவற்றையும் கலந்து இடவும். சுக்கிரன், காசம், படலம், முளை, தினவு, அனல்கோபம்' அழிகண், பூ, திமிரம், நீர்ப் பாய்ச்சல் போன்ற பல நோய்களும் தீரும். (1310-1311)

## 34. குழம்பு 4

பொன்னாங்காணி, சிறுகீரை, நாயுருவி, கரிசலாங்கண்ணி இவற்றின் சமூலங்கள் கூட்டி அதில் பசுவின் வெண்ணெய்யும் கூட்டிக் குழைத்திடவும் கண் நோய்கள் தீரும். (1312)

## 35. குழம்பு 5

சிற்றாமணக்கம் பருப்பு 3 பண எடை எடுத்து அதில், பனை மட்டைச்சாறு, சிறுபுள்ளடிச்சாறு, நந்தியாவட்டப் பூச்சாறு பசுவின் வெண்ணெய் இவற்றை ஓரளவாய்க் கூட்டிக் குழைத் திடவும். கண்நோய்கள் தீரும். (1313)

## 36. குழம்பு 6

எலுமிச்சம் பழச்சாறு, நல்லெண்ணெய், இலுப்பைப் பிண்ணாக்கைப் பிழிந்தசாறு, இவற்றை வகைக்கு ஒரு துளியாகக் கூட்டிக் குழைத்துக் கண்ணிலிடவும். புகைச்சல், காசம் போன்ற பல நோய்களும் தீரும். (1314)

## 37. குழம்பு 7

பளிங்கு, பொன், வெள்ளி இவற்றின் பொடிகள், அரிதாரம், இந்துப்பு, சந்தனம், சிவப்புச் சந்தனம், நீலாஞ்சனம், துத்தம், துருசு, திப்பிலி, அதிமதுரம், செங்கழுநீர், கோட்டம், கடுகு ரோகணி, கடல்நுரை, சுக்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல், வெள்ளி லோத்திரம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து அத்துடன், நந்தியாவட்டப் பூச்சாறு, முருங்கைப்பூச் சாறு, கையாந்தகரைச்சாறு, முலைப்பால் இவற்றை ஓரளவாய்க் கூட்டி அரைத்து அத்துடன் தேன் விட்டுக் குழப்பி வைக்கவும். இதில் 1 பயறளவு எடுத்து முலைப்பாலில் குழைத்துக் கண்ணி லிடவும். சதை வளர்ச்சி, படலம் புழுவெட்டு போன்ற பல நோய்களும் தீரும். (1315)

## 38. குழம்பு 8

ஆமணக்கவேர், ஆணாவேர், பொன்னூமத்தைவிதை, தலையோடு, காட்டுக் கோழி முட்டையோடு, நாட்டுக் கோழி முட்டையோடு, மனோசிலை இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து அத்துடன் தேன் விட்டரைத்துக் குழம்பாக்கவும், இதைக் கண்ணிலிடவும். ஆணிப்பூ போன்ற பல நோய்களும் தீரும். (1316)

## 39. குழம்பு 9

சீனக்காரம் பொரித்தது, தலையோடு இவற்றை முலைப் பால் விட்டரைத்து வழித்தெடுத்துக் கண்ணிலிடவும். நேத்திர வாய்வு, புகைச்சல், வலி, நீர்ப் பாய்ச்சல், குத்தல், கடுப்பு, சதை வளர்த்தி, பூ, சுக்கிரன் போன்ற பல நோய்களும் தீரும். (1317)

## 40. குழம்பு 10

சங்கு இலை, பொன்னாங்காணியிலை, புளியிலை, தகாயிலை, சீந்திஇலை இவற்றை ஓரளவாய் பனைமட்டையில் பொதிந்து தனலில் வேக வைத்து எடுத்தச் சாறுடன் துத்தம் $\frac{1}{4}$ கழஞ்சு, பச்சைக் கற்பூரம் $\frac{1}{4}$ கழஞ்சும் கூட்டி இழைத்துக் குழம்பாக்கிக் கண்ணில் இடவும். கண் பார்வை தெளிவடையும். (1318)

## 41. குழம்பு 11

மனோசிலை, இந்துப்பு, சங்கு, கடல்நுரை, பீதரோகணி, பச்சைக் கற்பூரம், செங்கல் பொடி, செஞ்சந்தனம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்தரைத்து அத்துடன் வெண்ணெய், தேன் இவற்றையும் கூட்டிக் குழைத்து வைக்கவும். இதைக் கண்ணிலிடவும். பல நோய்களும் தீரும். (1319)

## 42. குழம்பு 12

துத்தம், துருசு, படிகாரம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து அத்துடன் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துக் குழம் பாக்கி வைக்கவும். இதைக் கண்ணிலிடவும் பல நோய்களும் தீரும்.

## 43. குழம்பு 13

முயல் புழுக்கைச் சுட்ட சாம்பலுடன் பசுவின் வெண்ணெய் கூட்டிக் குழம்பாக்கியிடவும். கண் நோய்கள்தீரும். (1321)

## 44. குழம்பு 14

நாயுருவிவேர், எலுமிச்சம் பழச்சாறு, சீனக்காரம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்துக் குழப்பிக் கண்ணில் புறவளைய மாக இடவும். கண்வலி தீரும். (1322)

## 45. குழம்பு 15

நல்லெண்ணெய், பசுவின் நெய், தயிர், பன்னீர் இவற்றை ஓரளவாய் எடுத்து, அத்துடன், கட்டெறும்பு 10, செந்நாயுருவி

1 வராகன் எடைச் சுட்டுக் கூட்டி அரைத்துக் குழம்பாக்கி முலைப் பால் சேர்த்துக் குழப்பிக் கண்ணைச் சுற்றிப் புறவளையமாக இடவும். கண்வலி தீரும். (1323)

## 46. குழம்பு 16

தாழை விழுது. இந்துப்பு, தான்றிக்காய், கடுக்காய், நெல்லி முள்ளி, சுக்கு, திப்பிலி, மிளகு, பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரள வாய் எடுத்துத் தேன் விட்டரைத்துக் குழப்பி அத்துடன், பொருத்தமான துணை மருந்துகளில் குழைத்திடவும். மாலைக் கண், காசம், படலம், திமிரம், ஆணிப்பூ போன்ற பல நோய்களும் தீரும். (1324)

## 47. குழம்பு 17

துத்தம், துருசு, சினக்காரம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து அத்துடன், பசுவின் வெண்ணெய் கூட்டி, செங்கொட்டை இரண்டையும் சுட்டுப் புடம்போட்டு அரைத்துச் சேர்க்கவும்.(1325)

### இரத்தினாதிக் குழம்பு

கடுக்காய், நெல்லி, தானி, சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, சங்கு, வளையல், வெண்கலச் சாளம், செப்புச் சாளம், இரும்புச் சாளம், நெருப்புச் சாளம், குளவிந்தம், மஞ்சள் தாது, மாதுளை வேரின் தோல், தேற்றான் விதை, ஆனைப்பல், குதிரைப்பல், கழுதைப்பல், மரைப்பல், பகவின்பல், நாய்ப்பல், வெள்ளாட்டுப் பல், ஆமை ஓடு, கோழி முட்டை ஓடு, வேப்பமுத்து, முதலைத் தலை ஓட்டில் உச்சி, இலவங்கத்தோல், முகமுள்ள காந்தம், அரிதாரம், விழலரிசி, கற்பூரம், சந்தனம், மரமஞ்சள், ஏலம், காராம்பூ, அகில், நாகப்பூ, கடல்நுரை, பீதரோகணி, கோட்டம், கல்லுச் செங்கல், காரீயம் இவை ஒரொன்று காற் கழஞ்சு கொண்டு, முத்து, பவளம், பளிங்குக்கல் இவை ஒரொன்று காற் கழஞ்சு விழுக்காடு கூட்டி கையாந் தகரைச் சாறு, நெல்லிக்காய்ச் சாறு, இளநீர் இப்படிக் கோசத்தும் விட்டு உருண்டை, குழம்பு செய்திடக் கண்ணில் பல குற்றமும் தீரும். தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1270

### இலவணக் குழம்பு

இந்துப்பு மாந்த ரெலும்புபொடி யொன்றாக்கித்
தொந்த முடன்தூ துளம்பழத்தின்—வந்தரசம்
வாங்கிக் கலத்திழைத்து மையாக்கிக் கண்ணிலிட
ஓங்குபில்லங் காசம்போ மோது. 1271

## இளநீர்க் குழம்பு

பொன்னாங் காணி சிறுகீரை புதிய கந்தம் விலாமிச்சம்
தன்னார் நெல்லிக் கடுதான்றித் தாவும் வசம்போ டதிமதுரம்
மன்னார் நல்ல மரமஞ்சள் மசியக் கொண்டு அரைத்திட்டு
என்ன யிளநீ ரெண்ணாமல் இதனோ டொக்கக் கலந்து
கொள்ளே. 1272

(வேறு)

இளநீர் பாலும் நன்னாரி இருவேல் மதுரஞ் சந்தனமும்
வளமாய் நெய்தல் நல்லெண்ணெய் மருவும் பதமாய்த் தான்காய்ச்சி
உளையுங் கண்ணில் வார்த்துவிடில் உடைந்தே போகுங்
கண்விரணம்
தெளியுங் கண்ணோ யுள்ளதெல்லாம் தீரும் பிணிகள் தானிதுவே.

(வேறு)

இளநீரில் திரிபலையை யிட்டு மரமஞ்சள்
வளமா யதிமதுரம் வைத்துக்—களகளெனக்
காய்ச்சிநீ யிந்துப்புக் கற்பூரம் தேன்கலந்தால்
வாய்த்தவிள நீர்க்குழம்பாம் வை. 1274

கண்ணிற்பூ சதை வளர்ச்சி கனத்தகு டிவற்றை நீக்கும்
கண்ணெரிச் சலுமே போகும் கண்ணினிற் குளிர்ச்சி யெய்தும்
மண்ணினி லெதனா லென்றால் மைவிழி மாதே கேளாய்
நண்ணிள நீர்க்கு ழம்பின் நல்லுப யோகத் தானே. 1275

(வேறு)

கற்றா ழைக்கை யாந்தகரை கடிய ஆரை சிறுகீரை
பொற்றாங் காணி தாமரையும் போற்றும் நெல்லி முள்வேலி
உற்றே யிடித்துத் தெங்கிளநீ ருடனே மட்டைச் சாறுவிட்டு
முற்றா னால்முன் வெயிலில்வைத்து மூடிப் பிழிந்து வடிகொள்ளே.

நித்த மஞ்சள் மரமஞ்சள் நேருங் கோட்ட மதிமதுரம்
சித்தார் காவளை யெலுமிச்சம் பழநீர் சமனாய் நிறைகூட்டி
வித்தா ரிவைகள் பொடிதூவி வேகக் காய்ச்சிப் பிழிந்தெடுத்துச்
சுத்தார் சுத்தஞ் சமன்கொண்டு தோன்றும் பூரந் தேன்கொண்டு
பத்தாய்க் கலத்தின் புறத்திழைக்கிற் பசரு மிளநீர்க் குழம்பிதுவே

(வேறு)

செவ்விளநீர் குறுணியதில் பொன்னாங் காணி
சிறுகீரை அதிமதுரம் சிறந்த ஏலம்
நவ்விதிரி பலையும்மர மஞ்சள் கோட்டம்
நங்சீரகம் இருவேலி லவங்கப் பட்டை
அவ்வியுளஞ் சந்தனமும் பலமோ ரொன்று
அதற்கெடையாய் இளநீரும் நாலொன் றாக்கிப்
பவ்விபெற வடித்திதனைக் குழம்பு காய்ச்சிப்
பதந்தனிலே யிடுமருந்து பகரக் கேளே. 1278

கேளுமே துருசு துத்தம் பிதரோகணி
கிருபையாம் பூரம்அஞ் சனக்கல் கூட்டி
நாளுமே பூரத்தில் யிழைத்துக் கண்ணில்
நன்மைபெற யிருபோது நயனத் திட்டால்
மாளுமே நீர்ப்பாய்ச்சல் புகைச்சல் பில்லம்
மயங்கு பற்ப ரோகமுதல் வாதகாசம்
பாளுமே படலமுடன் பிரிச்சல் தானும்
பண்பாகத் தீருமென்றே பரமன் சொன்னார். 1279

(வேறு)

கொள்ளும் மஞ்சள் மரமஞ்சள்
கூறுங் கோட்ட மதிமதுரம்
பள்ளுஞ் சாளை யெலுமிச்சம்
பழத்தின் சாற்றைச் சமன்கூட்டி
வெள்ளு மிவைகள் பொடிகூட்டி
மேலாய்க் காய்ச்சி வடித்திருத்து
பள்ளு முத்துடன் பூரம்தேனும்
பார்த்துக் கலத்தில் புறந்தேய்த்து
எள்ளும் சிமிழில் தனிலடைப்பீர்
இளநீர்க் குழம்பு தானிதுவே. 1280

(வேறு)

இளநீர்க் குழம்புபண் ணோவென்னில்
இளநீர் குறுணிக்கிடு மருந்தாவன்
பொன்னான் காணி சிறுகீரை
பெருத்த வேரிவை ஒருபலமும்

அரிந்து நெல்லி கடுதான்றி
அரியுஞ் சந்தனம் அதிமதுரம்
தேவ தாரம்சண் பகமுதிழங்
கோட்ட மிலவங்கம் மரமஞ்சள்
கொள்ளு மிலாமிச்சம் இருவேலி
புன்னைத் தாதுசெங் கழுநீர்க்கிழங்கு
போத முக்கழஞ் சாகயிட்டு
பைய்யக் காய்ச்சிப் பாதி யானயின்
பார்த்துப் பிழிந்தொரு சட்டியி லிட்டு
பேணிக் காய்ச்சிப் பெருக்கு ழம்பினில்
சேர்க்கும் மருந்து துத்தம் துருசு
சொல்லுங் கடல்நுரை பெருத்த
சந்தனம் பீத ரோகணி
அடுத்திவை ஒரொன்று அறுகழஞ் சாக
பொடிசெய் திட்டு அந்தக் குழம்பை
அம்மியி லரைத்துபின் னொருகலப் பிரத்தில்
கோந்தென விட்டுக் குழம்புறத் தேய்த்து வைத்த
குழம்பு கழஞ்சினி மன்னிய பச்சைக்
கற்பூரம் பணவெடை இத்துடன் சேர்த்து
செப்புச் சிமிழில் அடைத்து நெற்றிதனில்
நித்தலு மிட்டால் புகைச்சல்வெள் ளெழுத்து
பெருந்துநீர்ப் பாய்ச்சல் நீர்கரைதல் எரித்தல்
நீலகா சத்தொடு வாதகாசம் மண்டலக் காசம்
பேதை செய்யும்பித்த காசம் என்றிவை
எல்லாங் கண்ணை யிழந்த பசுப்போலே
கத்தி ஓடுவர் கண்டீரே. 1281

(வேறு)

செவ்விளநீர் 2, சங்கம் பழச்சாறு 2 இவை மூன்று நாள் இளங் கொதியிட்டு பாகுபதமானவாறே, ஒரு பணஎடை துருசுபொரித்து பொடி செய்துப் போட்டு, அரைக்கழஞ்சு பச்சைக் கற்பூரம் பொடி செய்துப் போட்டு, குறுகினவாறே, இறக்கிப் பீங்கான் பரணியில் வைத்து, முதல் நாள் முழுகப் பண்ணி மற்ற நாளிடவும். 1282

(வேறு)

இளநீர் $\frac{1}{8}$, மரமஞ்சள், திரிபலை, முத்தக் காசு, சிறுகீரைவேர், பொன்னாங்காணி வேர் இவை ஓரொன்று ஒருபலங்கூட்டி,

இடித்து மூன்று நாள் ஊறவைத்து, வடித்துக் காய்ச்சி, பாகுபத மானவாறே இறக்கி, துத்தம், துருசு, பச்சைக்கற்பூரம் கூட்டி யிடவும். 1283

(வேறு)

பொன்னாங்காணி வேர், சிறுகீரை வேர், நன்னாரி வேர், ஓரிலைத்தாமரை வேர், வெட்டிவேர், எலுமிச்சம்வேர், செங்கழு நீர்க் கிழங்கு, கோரைக்கிழங்கு, ஏலம், இலவங்கம், மரமஞ்சள், அதிமதுரம், சண்பகமொட்டு, சீரகம், செங்கழுநீர், கோட்டம், நெல்லிக்காய், தான்றிக்காய், கடுக்காய், சந்தனம், இவை ஒவ்வொரு வராகனெடை இடித்து 3 இளநீர் போட்டுக் காய்ச்சி, பாதியான பிறகு வடியிட்டுக் கொண்டு காய்ச்சி, கோலிலே ஒட்டுப் பதத்திலே காய்ச்சி இறக்கி, ஒரு கலத்திலே வார்த்து, ஒரு கலமிட மூடி வைக்க. ஆறிக் குழம்பாயிருக்கும். இதிற் கூட்டும் மருந்து துத்தம், துருசு, கடல்நுரை, பித்தாஞ்சனம், பித்தரோசனை, கறுத்த வெண்ணெய்க்கல் இவை ஒவ்வொன்றும் ஆடையிட்டுப் பொடி செய்து கலத்தில் புறம்பேயிட்டு, குழம்பு வார்த்துக் கலத்தொடு கலம் வைத்துத் தேய்த்து, நன்றாக மைபோல ஆன பிறகு, இதிற்பச்சைக் கற்பூரம் வராகனெடை கூட்டித்தேய்த்து, சிமிழில் வைக்கவும். எட்பிரமாணம் கண்ணுக்கிடவும். கண்ணி லுள்ள வியாதிகள் குணமாம். 1284

(வேறு)

அழுப்பற்றாத செவ்விளநீர் தானாழியில் அதிமதுரம் 12 வராகனெடை, திரிபலை 12 வராகனெடை இவை இடித்து இளநீரிற்போட்டு ஊறவிட்டுப் பிசைந்து வடியிட்டுக் காய்ச்சி பதத்தில் இறக்கி, இதிற்பச்சைக் கற்பூரம், துத்தம், துருசு, இந்துப்பு இவை கூட்டித்தேன் வார்த்து, கலத்தொடு கலம் தேய்த்து சிமிழில் வைக்கவும். வியாதியெல்லாம் குணமாம். 1285

(வேறு)

இளநீர் 4 நாழி, இந்த மட்டைச்சாறு 4 நாழி, இத்துடன் கரு வேலம்பட்டை பலம் 2, கடுக்காய் பலம் 2, தானிக்காய் பலம் 2, இடித்துப் போட்டு, நாலொன்றாகக் காய்ச்சி வடியிட்டுக்கொண்டு இதில் துத்தம் 4 வராகனெடை அதிமதுரம் 8 வராகனெடை இந்துப்பு 2 வராகனெடை கூட்டிக் கசாயநீர் வார்த்தரைத்துக் கரைத்துக் குழம்பாகக் காய்ச்சிப் பச்சைக் கற்பூரம் பொடி செய்து போட்டு, தேன் வார்த்துக் கலத்தொடு கலம் சாரித்துச் சிமிழில் வைக்கவும். எட்பிரமாணம் கண்ணிலிட கண்ணிலுள்ள வியாதி யெல்லாம் குணமாம். கண் கலங்கும் குணமாம். 1286

(வேறு)

இளநீர் 4 படியுடன் 50 குமிழம் பழங்களை ஊரப்போட்டுப் பிசைந்து வடிக்கட்டிக் காய்ச்சி, இத்துடன் துத்தம், துருசு' அஞ்சனக்கல், கடுகுரோகிணி. பச்சைக் கற்பூரம், கடல்நுரை இவை வகைக்கு 1 கழஞ்சு பொடித்துக் கலக்கி, பரணியிலிட்டு, பயறளவு கோலிலெடுத்துக் கண்ணிலிடக் காசம், படலம், பதுமநோய் முடமயிர் இவை தீரும். 1287

(வேறு)

இளநீர் 1 படி, அதிமதுரம், தான்றிக்காய், மரமஞ்சள், கடுக்காய், நெல்லிக்காய் இவை வகைக்கு 1 பலம், இடித்து 3 நாட்கள் ஊறவைத்துக் காய்ச்சவும். இவை ¼ படியாகக் காய்ச்சி' இத்துடன் தேன் 1 வராகன் எடை, பச்சைக் கற்பூரம், இந்துப்பு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்து நன்றாகப் பொடித்துக் கலக்கி வைக்கவும். பல கண்ணோயும் தீரும். 1288

(வேறு)

இளநீர் 2 குறுணி, எலுமிச்சைவேர், வெட்டிவேர், சங்கம் வேர், அதிமதுரம், ஏலம், ஓரிதழ்த்தாமரை, கோரைக்கிழங்கு, செங்கழுநீர்க் கிழங்கு, சிறுகீரை, சாத்திரவேதி, பொன்னாங்காணி தாமரையிலைச் சுருள், கோட்டம் இவை வகைக்கு 2 கழஞ்சு சேர்த்து இடித்துக் கலக்கிக் காய்ச்சவும். 4 படியாக வற்றியபின் வடிகட்டி, அத்துடன் தேன் 1 நாழி விட்டுக் காய்ச்சவும். பதமான பின், இந்துப்பு, பச்சைக் கற்பூரம், துத்தம் இவை வகைக்கு 2 வராகன் எடை இடித்துச் சேர்த்து இறங்கி வைக்கவும், செப்புச் சிமிழில் வைத்துக் கண்ணிலிடப் பித்தகாசம், முடமயிர், கண் வாதம், இமைத்தடிப்பு, இழிகண், பில்லம், வெள்ளெழுத்து போன்ற நோய்கள் தீரும். 1289

## கற்பூரக் குழம்பு

செப்புறேன் கிராம்பு வெள்ளைச் சாரணைவேர்
சந்தன மும்சண் பகப்பூ
ஒப்பில்லா லவங்க பத்திரி பீத
ரோகணி குங்குமப்பூ செங்கழுநீர்மூலம்
அப்பெரிய பச்சைகற் பூரம் கூட
ஆகவகைக் கோர்க்கழஞ் சடவாய்ச்சேரே. 1290

செய்யா யிவையெல்லாம் கல்வத்தி லிட்டுச்
சேரவரைப்பாய் நாற்சாமம் தேனி லேதான்
நொய்யா மைபோலே ஆட்டி வாங்கி
நிசமானமான் கொம்பினுட பரணி சேர்த்து
பொய்யல்ல நயனத்தில் வந்த ரோகம்
பிரிந்துவிடப் பயறளவு கண்ணிற் தீட்டநீ
அய்யாகா சமெல்லாம் தட்டுண் டேபோம்
நெடுநாளை ரோகமெல்லாம் நீங்கிப் போமே 1291

போமப்பா அந்திசந்தி நடுகண்ணிற் தீட்ட
காசமொடு கண்மயக்கம் பூவுந் தீரும்
நாமப்பா நீர்ப்பாய்ச்சல் மாலைக் கண்ணும்
நண்டுகால் நாகபட லத்தி னோடு
ஓமப்பா ஓடிவிடும் கண்கொ தித்தால்
உத்தமனே நல்லெண்ணெய் தேய்த்து மூழ்கு
காமப்பா புளியிலையு மாவி காட்ட
கண்கொதிப்பு தீர்ந்துவிடும் கமல மாமே. 1292

(வேறு)

வாசஞ் சொரியுங் கற்பூரம் மகிழுங் கிராம்பு வாலுழுவை
தேசம் புகழுங் குங்குமப்பூ சிறந்த லவங்கம் பச்சிலையும்
பூசைக் கினிய சந்தனமும் பொன்னின் ரோகணி யிலையெல்லாம்
காசந் திருந் தேனிலிடக் கனகப் பூரக் குழம்பிதுவே. 1293

கற்பூராதிக் குழம்பு

ஓடிடும் புளியம் பூவும் உயர்ந்திடுங் கபாலஞ் சுக்கும்
வாடிடும் பூரங் கண்டு மருவுசர்க் கரைம ரீசம்
கூடுதிப் பிலியே தான்றி கூர்திரி பலையும் வித்தும்
நாடுநிம் பத்தால் தேனால் நயனகற் பூரங் கூட்டே. 1294

(வேறு)

வெய்யபடி கந்துத்தம் மிளகுதிப் பிலிசங்கு
வீரசீ தைத்துருசும்
வீசுகற் பூரமும் வெள்ளைநுரை நிமிளையும்
மேலான தேற்றான்விதை
செய்யமர மஞ்சளும் பீதரோ கணிநந்தி
திகழ்மனோ சிலைதேனுடன்
சேரவே கூடக் குழம்புசெய் தேபின்பு
சிந்தாத சிமிழில்வைத்து

ஐய்யமற வந்ததொரு அந்தகர்கள் கண்ணிவிடு
ஐந்தாறு நாளெண்ணியே
அப்பொழுது வெளிசெயும் கற்பூரக் குழம்பினது
அடைவுமீ தல்லாமலே
துய்யகா சம்படலம் நொய்யகா சத்தடைவு
தொலையாது எண்ணாமலே.
தொண்ணூறு மாறுமுள கண்ணோய்கள் தீருமிது
சொன்னோமி தாறுமிகவே. 1295

## காக்கணக் குழம்பு

வெள்ளைக் காக்கண வித்தினை ஆவினெய்
வள்ளத்தின் புறத்தே வைத்துக் கெட்டியாய்
உள்ள செம்புகொண் டொக்க வரைத்திடக்
கள்ள மான படலங் கரையுமே. 1296

## காளமேகக் குழம்பு

மகராசர் மெச்சுமுறை செகமீதில் வெம்புலியும்
மரிசைதொடு கருநாகமும்
மதிவயிர வன்சிங்க மோடிதனை யாவையும்
மறவாம லேயிடித்துச்
செகமீதில் வளர்சிலையின் நந்திமலர் சாறதும்
செயசிங்க பாணமதனால்
செய்தமுன் மருந்ததனை வைத்துநாற் சாமமரை
சேர்த்துமெழு காய்வழித்துப்
புகழான சிமிழ்தனி லடைத்துவிழி தனிலிடப்
பொங்கிவரும் நீர்ப்பில்லமும்
போந்தசொரிப் பில்லமும் படலமொடு துன்மாங்
கிசம்போகும் விழிபூமுளை
தகைமைபெறு காளமே கக்குழம் பதனையிடத்
தரிபடா தோடிவிடுமே
தன்மையுள பொதிகைமலை முனிவரிந் நூலிங்கு
தானுரைக் கின்றமுறையே. 1297

## கோரோசனைக் குழம்பு

நெல்லியும் மல்லியொடு நேர்மிளகுங் கூட்டினால்
எல்லியுந் தோன்றும் எழுத்தென்பார்-மெல்லியே
கோரோ சனைகோட்டங் குங்குமப்பூ கூட்டெழுதிலங்
கோரோ சனைதோன்றுங் கண் 1298

## நன்னாரிக் குழம்பு

நன்னாரி பச்சைக் கற்பூரம் நயந்தே கால தாய்க்கொண்டு
ஒன்றாய்த் தட்டிப் பொடிசெய்து தூவிக் காய்ச்சிக் குழம்பானால்
சொன்னோஞ் சொன்னோங் கண்ணிலிடத் தோற்றும் நன்னா
ரிக்குழம்பே
அன்னான் அழிகண் பற்பமுதல் அடுத்த பில்லந் தான்போமே 1299

## நெல்லிக் குழம்பு

நெல்லி இலை, இதன் பட்டை, சாரடை சமூலம், அத்தி இலை, காய், கொன்றைப் பட்டை, நாவற் பட்டை, இலை, வெள்ளைக் காக்கணான் வேர், பொன்னாங்காணிவேர், புளியிலை பூ, மூக்கிலை, முருங்கையிலை,சிறுகீரைவேர்,பூளையிளை, நத்தைச் சூரியிலை, நாயுருவி வேர், நீர்ப்பூலாவேர், ஆவாரையிலை, நெல்லிமுள்ளி, கடுக்காய், கற்றாழை மடல், இதில் குறுணி நீர் வார்த்து நாழியாகக் காய்ச்சி, வடித்து, இழையக் காய்ச்சி, வடித்து, துத்தம், துருசு பீதரோகணி, வெண்காரம், அதிமதுரம், இவை பொடி செய்து புளியுருக்கி, இதிற் கூட்டி, நாகப் பாம்புக் கொட்டைகையில் எட்டு எலுமிச்சம் பழச்சாறு பிழிந்து வெய் யிலில் வைத்து, உருக்கின நீர் கூடக் கலந்து, கலத்திலிழைத்து, சிமிழில் வைத்துக் கண்ணில் இடப் பல பல வியாதியும் போம். 1.00

## பொடுதலைக் குழம்பு

தாவுந் தலையில் பொடுதலையைத் தயங்கக் காய்ச்சி வடிகொண்டு
மேவுங் கடுக்காய் இந்துப்பு விரவுந் துத்தந் துருசு பொடி
தாவும் பூரந் தான்சேர்த்துத் தூய பரணி தனிலடைத்துக்
கூவும் பொடுதலைக் குழம்பினிடிற் குந்தந் தீருங் கண்டீரே. 1301

## மதுராதிக் குழம்பு

அதிமதுரம் கடல்நுரை, கடுக்காய் இந்துப்பு, துத்தம், துருசு, மனோசிலை, அரிதாரம், திப்பிலி, மிளகு 2, மற்ற மருந்தெல்லாம் சரியாகக் கூட்டி, பொடி செய்து செப்புக் கிண்ணியிலிட்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு மூன்று நாள் உலர வைத்து, மற்ற நாள் கலப்பூரஞ் செய்து நன்றாய் இழைத்து வெண்ணெய் சேர்த்து இழைத்துச் செப்புச் சிமிழில் வைத்துப் பல குற்றத்துக்கும் எலுமிச்சம்பழம், முலைப்பாலில் இடவும். 1302

## மரீசக் குழம்பு

பருமிளகு தோல் போக்கி எலுமிச்சம் பழத்திலைடைத்துச் செவ்விள நீருக்குள்ளே பழத்தை வைத்து மேல் மூடியைச் சீலை செய்து, கீழே பதித்து இரண்டு கூடை வரட்டி புடம் போட்டு வெந்தவாறே எடுத்துப் பார்க்க ஆழாக்குத் தண்ணீர் இருக்கும். கலத்தில் ஊற்றிக் கொண்டு மிளகு, இந்துப்பு ¼ பண எடை, துத்தம் ½ பண எடை, அந்த நீர் விட்டரைத்துத் தேன், பச்சைக் கற்பூரமும் சாரித்து, செப்புச் சிமிழில் அடைத்துக் கண்ணிலிடத் தொண்ணூற்றாறு வியாதியும் தீரும். 1303

## மான் குழம்பு

மானின் கொம் பு வளர்பெற ஆவினெய்
தேனில் நேக உரைத்துச் செலுத்திடக்
கான மாமுனி சொன்னதைக் கண்ணினில்
ஊன மான படலங்க ளோடுமே. 1304

## வேட்டுவன் குழம்பு

கருவளையல் கிட்டங் கடுக்காய் நெல்லி தான்றி சுக்கு
பெருகிய மிளகு உப்பும் பொருந்தவேட் டுவன்கூ டொக்க
பருகிய புளியஞ் சாறும் பருகநல் லெண்ணெய் தன்னில்
உருகவே யரைத்துப் போட ஓடிடுங் கண்ணோய் தானே. 1305

## குழம்பு (பொது)

ஆகவே குழம்பொன்று சொல்லக் கேளு
அழகான கொடிக் கொழுஞ்சி யதுநான் காகும்
வேகமுள்ள கடுக்காயும் பலமவ் வீதம்
வேம்பான கருவேம்பி னிலையவ் வீதம்
தாகமுள்ள களிப்பாக்கு மவ்வீ தான்
தருவான பசுவின்பால் குறுணி யாகும்
சாகவே யவித்ததனைப் பிழிந்து கொண்டு
தனியான தேனதிலே காற்படிநான் வாரே 1306

வார்த்தெரித்துக் குழம்பாக்கி வழித்து வைத்து
வாள்விழியில் வரிப்புருவம் புழுக்கள் புண்கள்
தீர்த்துவிடு மண்டலமே பூசும் போது
திகழ்விழிநோய் பலவும்போம் தீர்க்கம் பாரும்

பார்த்திடவே மேகரா சாங்க மானால்
பாரிலுள்ள நோய்களுக்குச் சஞ்சீவி யாகும்
சாற்றியயிம் மூன்னூறு் வைத்திய ராசாங்கம்
தாரணியி லுள்ளவர்க்கு மமுத மாமே. 1307

(வேறு)

கடல்நுரை யரிதாரம் கதித்த மதுரம் வெண்காரம்
அடல்மிகு கடுக்காய் துருசு துத்தம் ஆன மனோசிலை திப்பிலி
பொடியது செய்து செப்பில் வைத்து போத வெலுமிச்சஞ் சாறு விட்டு
திடமுடன் மூன்றுநா ளரைத்துக் கலப்பிரஞ் செய்துண்டை குழம்பாமே 1308

ஆன குழம்பு பசுவின்நெய் அதில்நீ தேய்த்து இட்டிடவும்
பானுண்டாம் குமரி மடல் பரித்தசாறு முலைப் பாலில்
தேனே மொழியாய்த் தேய்த்துவிடில் திமிரங் காசம் படலமுளை
ஆனக் கண்ணில் தொண்ணூற் றாறு வியாதி யுற்றிடுமே. 1309

(வேறு)

துத்தந் துருசு வெண்காரம் தூய மிளகு இந்துப்பு
வைத்த திப்பிலி யுடனே வகையாய்ப் பச்சைக் கற்பூரம்
ஒத்த எடைகொள் வகைக்கழஞ்சாய் உகந்தே யிதனைச் சேர்த் தரைத்து
மொத்த மாவெண்ணெய் தேன்கலத்தில் மேவியேத் திடவிரணசுக் கிரன்போமே 1310

போமே காச படலம்முளை பொருந்துந் நினவு சோரிவுளது
ஆமே அனல்கோ பமுடன் அழிகண் மாம்பூத் திமிரம்
தாமே உண்டாம் நீர்ப்பாய்ச்சல் சகல வியாதி யுந்தான்
போமே யென்று புகன்றனர் யாண்டுமே மாதே பொய்யாதே 1311

(வேறு)

பொன்னாங்காணி, சிறுகீரை, நாயுருவி. கரிசலாங்கண்ணி இந்த ஐந்து மருந்தும் சமூலம் கூட்டி புதுச்சட்டியிலிட்டுக் கறுக்கி, இதில், பசுவெண்ணெய்யும் சேர்த்துக் கலப்பிரத்தில் செப்பு கொண்டு நன்றாய் இழைத்துக் கொம்புச் சிமிழில் வைக்கவும். 1312

சிற்றாமணக்கம் பருப்பு 3 பண எடை, பனை மட்டைச்சாறு, ஓறு புள்ளடிச்சாறு, நந்தியா வட்டப்பூச்சாறு, பசுவின் வெண்ணெய் இட்டு, கலப்பிரத்தில் நன்றாய் இழைத்துக் கொம்புச் சிமிழில் வைக்கவும். 1313

(வேறு)

நிம்பச் சாறு ஒரு துள்ளி, நல்லெண்ணெய் ஒரு துள்ளி, இலுப்பைப் புண்ணாக்கைப் பொட்டணங்கட்டி நனைத்துப் பிழிந்து ஒரு துள்ளி இவை மூன்றும் உள்ளங்கையில் வட்டுச் சூரக கத்தி கொண்டு மத்தித்துக் கண்ணில் போடவும். முதல் நாள் ஒரு பொழுது, மறுநாள் இரு பொழுது, இப்படி வியாதி தீரும் மட்டும் போடவும். கண் புகைச்சல், காசம், கண்மாசாட்டம் இவை தீரும். இது கை கண்டது. 1314

(வேறு)

பளிங்குப் பொடி, பொன்பொடி, வெள்ளிப் பொடி, அரிதாரம் இந்துப்பு, சந்தனம், சிவப்புச் சந்தனம், நீலாஞ்சனம், துத்தம் துருசு, திப்பிலி, அதிமதுரம், செங்கழுநீர், கோட்டம், கடுகு ரோகணி, கடல்நுரை, சுக்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல், வெள்ளிலோதிரம் இவை சரி கூட்டி, நந்தியாவட்டப் பூச்சாறு, முருக்கப் பூச்சாறு, கையாந்தகரைச்சாறு, முலைப்பால் இவற்றைச் சரிகூட்டி, அரைத்துப்பின் 2 சாமம் வெண்கல வட்டிலிற் போட்டு, தேன்விட்டு செம்புக் குழவியால் 1 சாமம் மத்தித்து, செம்புச் சிமிழில் வைத்துக் கொண்டு, பயறளவு முலைப் பாலிற் குழைத்துக் கண்ணிலிட அனுமாமிசம், துன்மாமிசம் படலம், புழுவெட்டு முதலியவை தீரும். கைகண்டது. பத்தியம்-புளியும் மாமிசமும் நீக்கவும். 1315

(வேறு)

வடக்கே போகும் ஆமணக்கவேர், வடக்கே போகும் ஆணா வேர், பொன்னூமத்தை விதை, மண்டைத்தலையோடு, காட்டுக் கோழி முட்டையோடு, நாட்டுக் கோழி முட்டையோடு, மனோசிலை இவை எல்லாம் சமன் கூட்டிச் சுயம்புத் தேன் விட்டரைத்துச் செம்புச் சிமிழில் அடைத்துக் கண்ணிலிட ஆணிப்பூ இருந்தாலும் பிரிந்துபோம். 1316

(வேறு)

சீனக்காரம் வேண்டும் மட்டும் கொண்டு வந்து குளிர்ந்த தண்ணீரிற் கழுவி, ஓட்டில் வைத்துப் பொரித்து எடுத்து வைத்துக் கொண்டு, மறுக்ஷணத்தில் மண்டை ஓடு வெந்தது எடுத்து வந்து வைத்துக் கொண்டு, கறை கல்லு மேலே முலைப்பால் வார்த்து, அது மேலே சீனக்காரம் பொரித்து வைத்து, அதுமேலே மனிதன் தலையோடு கொண்டு இழைத்துக் கண்ணுக்குப் போட்டு வரத் தீரும் வியாதி: நேத்திர வாய்வு, கண்புகைச்சல், கண்நோவு, கண் நீர்ப் பாய்ச்சல், கண்குத்தல், கண்கடுப்பு, சதை வளர்த்தி, பூ, இரணசுக்கிரன், நேரத்தித்திற் பிறக்கும் வியாதியெல்லாம் தீரும்.

(வேறு)

சங்கு இலை, பொன்னாங்காணி இலை, புளி இலை, தகா இலை, சீந்தி இலை, பனை மட்டையிற் பொதிந்து வெந்தணலிற் புகைத்துச் சாறு கொண்டு, துத்தம் $\frac{1}{4}$, கற்பூரம் $\frac{1}{4}$ ஆகக் கூட்டிக் கலப்பிரஞ் செய்து, கண்ணிலிடக் கண் தெளிந்து தெரியும். 1318

(வேறு)

மனோசிலை, இந்துப்பு, சங்கு, கடல்நுரை, பீதரோகணி, கற்பூரம், செங்கல், செஞ்சந்தனம் இவற்றை வெண்ணெய்யில் அரைத்துத் தேனில் கலப்பிரஞ் செய்து, பரணியில் வைத்துக் கண்ணிலிடப் பலகுற்றமும் தீரும் 1319

(வேறு)

துத்தம், துருசு, படிகாரம் இவைகளைப் பொடித்து ஓர் ஆள வாகக் கொண்டு, எலுமிச்சம்பழச்சாறுவிட்டு, செப்புக் குழவியால் அரைத்துப் போடக் கண்நோய் தீரும். 1320

(வேறு)

முயல் புழுக்கையைச் சுட்டு,வெண்கலத்திலிட்டு இருப்புலக்கை கொண்டு சிறிது சிறிதாக பசுவின் வெண்ணெய் கூட்டி, அரைத்து, களிம்பாக்கி வைத்துக் கொண்டு, மாலையில் 10 நாட்கள் போடக் கண்நோய்கள் தீரும். 1321

(வேறு)

நாயுருவிவேர், எலுமிச்சம் பழச்சாறு, சீனக்காரம் இவற்றை கூட்டி, காய்ந்த இரும்புத் தகட்டின் மீது வைத்து, இழைத்துக், களிம்புபோல் அரைத்து வழித்து, மூன்று நாட்கள் புறவளைய மிடக் கண்வலி தீரும். 1322

(வேறு)

எண்ணெய், நெய், தயிர், பன்னீர் இவை வகைக்கு 1 கரண்டி யளவு கொண்டு. கட்டெறும்பு பத்தும், செந்நாயுருவி 1 வராகன் எடைச் சுட்டுக் கூட்டி, கடப்பைக் கல்லில் மேற்படி மருந்துகளைத் தேய்த்து, அரைத்துக் குழப்பி, முலைப்பால் 1 கரண்டி விட்டு மத்தித்து, கண்ணைச் சுற்றிப் புறவளையமிடக் கண்வலி தீரும்.

(வேறு)

தாழை விழுது, இந்துப்பு, தான்றிக்காய், கடுக்காய், நெல்லி முள்ளி, சுக்கு, திப்பிலி, மிளகு, பச்சைக்கற்பூரம் இவை வகைக்கு 1 வராகன் எடை தேனில் அரைத்து வைத்துக்கொண்டு, அதில் சிறிது மாலையில் முலைப்பால், தேன், பழச்சாறு, கரிப்பான் சாறு, நந்தியாவட்டைச்சாறு, முருங்கைப்பூச்சாறு இவை ஏதேனும் ஒன்றிற் குழைத்துக் கண்ணிலிட மாலைக்கண், காசம், படலம், திமிரம், ஆணிப்பூ இவை தீரும். 1324

(வேறு)

தட்டான் நிறுக்கிற தராசிலே துத்தம் ஒரு தட்டிலும் துருசு ஒரு தட்டிலும் நிதானமாய் நிறுத்தி, இதுக்குச் சரி எடை சீனக் காரம் ஒரு தட்டிலே போட்டு, அது இரண்டு பங்கும், இது ஒரு பங்குமாய்க் கூட்டி அம்மியிற் போட்டு இராத்திரிகாலம் அரைத்து பசுவின் வெண்ணெய் போட்டு அரைத்துக் கொண்டு இரண்டு செங் கோட்டை நன்றாகச் சுட்டு புடம் பண்ணி, ஒக்க நன்றாக அரைத்து, சிமிழில் அடைத்துக் கொண்டு நேத்திர வாய்வுக்கும் சகல ரோகத்துக்கும் கண்ணில் போடவும். அவ பத்தியம் தவிரவும். மற்றதெல்லா மாம். 1325

## 11. தைல வகைகள்

இவை, எள்ளெண்ணெய்யுடன் சில சாறு வகைகளையும் சில சரக்கு வகைகளையும் முறைப்படி கூட்டிப் பதமாகக் காய்ச்சி வடிப்பனவாம்.

கண் நோய்களுக்காகக் கூறப்படும் பொதுவான தைல வகைகள் பற்றிய விளக்கங்கள் பல சுவடிகளிலும் காணப்படுகின்றன அவற்றை ஒன்றாகத் தொகுத்து, தலைப்புகளை அகர வரிசையில் முறைப்படுத்தி மொத்தம் 72 வகையான தைலங்கள் இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

இவற்றுள், குமரித்தைலம், நெல்லிக்காய்த்தைலம் போன்றவை பல்வேறு வகைகளாகவும் கூறப்படுகின்றன. சில தைல வகைகள் தலைப்பில்லாமலும் விளக்கப் படுகின்றன. அவற்றை, தைலம் 1, 2 என்னும் தலைப்புகளிலேயே காணலாம்.

தைலம் அல்லது எண்ணெய் என்றே அழைக்கப்படும் இவற்றை முறைப்படி செய்து எடுத்து, ஆங்காங்கே கூறியுள்ளபடி சூரியபுடம் அல்லது தானிய புடங்களில் வைத்தெடுத்துத் தலையில் நன்றாகத் தேய்த்துவிட்டுப் பின்பு முறைப்படி தலை முழுக வேண்டும்.

இத்தைல முழுக்குகளினால் தலையில் குளிர்ச்சி ஏற்படுவதுடன் கண் நோய்கள் தீர்ந்து பார்வை தெளிவு பெறுமெனவும் அறியப்படுகிறது.

இவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

1. அகத்தியர் குளிர்ச்சி எண்ணெய்

எள்ளெண்ணெய், கற்றாழைச்சாறு, இளநீர், நெய்ச்சிட்டிச் சாறு, ஆவாரைச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, பசுவின்பால் இவை வகைக்கு 1படி, சாம்பிராணி 2 பலம், கிச்சிலிக் கிழங்கு 2 பலம், மிளகு 1 பலம் இவற்றைப் பால் விட்டரைத்து, மேற் கூறிய சாறுகளுடன் கூட்டிக் காய்ச்சி வடித்து வைக்கவும், இத்தைலத் தால் தலைமுழுகி வரவும். பித்தம், கண்ணெரிச்சல், தலைக் குத்தல், இரணங்கள், கண்குத்தல், செவிநோய் போன்ற பல நோய்களும் தீரும். (1326—1330)

2. அகத்தியர் சிந்தாதி எண்ணெய்

சித்தண்ட யெண்ணெய் 1சேர், தேங்காய்ப்பால், வேலிப் பருத்திச்சாறு இவை வகைக்கு 8 சேர். இவற்றுடன், காயம், உள்ளுவாழம், வெண்காரம், காட்டெருமைப்பால், கடுக்காய், இந்துப்பு, சீரகம், திப்பிலி இவற்றை வகைக்கு 1 கழஞ்சாகச் சேர்த்து பால் விட்டரைத்துக் கூட்டிக் காய்ச்சி வடித்து வைக்கவும் இத்தைலத்தால் தலை முழுகி வரவும். கண்ணெரிச்சல், தலை நோய், குன்மம், காது.நோய் போன்ற பல நோய்களும் தீரும். (1331—1338)

3. அசனாவமிருத வில்வாதித் தைலம்

எள்ளெண்ணெய், பசுவின் பால் இவை வகைக்கு 1படி, வேங்கை வேர், நாமமுட்டி, சீந்திற் கொடி, வில்வவேர் இவை வகைக்கு 100 பலம் இவற்றை 16படி நீரிலிட்டு 4 படியாக வற்றக் காய்ச்சி அத்துடன், அமுக்குரா, தான்றிக்காய், சந்தனத்தூள், கறிமஞ்சள், இலவங்கப்பத்திரி, சண்பகமொட்டு, நன்னாரி வேர், வால்மிளகு, விலாமிச்சவேர், கடுக்காய், அகில், பூலாங் கிழங்கு, மரமஞ்சள், ஏலம், அதிமதுரம், வெட்டிவேர், தேவ தாரு, தாமரைக் கிழங்கு, நெல்லிக்காய், திராட்சை, கிராம்பு, சடாமாஞ்சில், தக்கோலம், சிற்றரத்தை, தாளிசபத்திரி, கத்தூரி மஞ்சள், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம் இவை வகைக்கு 1 வராகன் எடை கூட்டிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய் கள் தீரும். (1339)

4. அமிருத ஆமலகத் தைலம்

சீந்தில் கொடி, முசுமுசுக்கை, நெல்லிக்காய் கையாந்தகரை சோற்றுக் கற்றாழை இவற்றின் சாறுகள், பசுவின்பால் இவை வகைக்கு 1படி, நல்லெண்ணெய் 2 படி, இத்துடன் இலவங்கப் பட்டை, இலவங்கப்பத்திரி, சாதிபத்திரி, வெட்டிவேர், செங் கோட்டம், ஏலம், சாதிக்காய், திராட்சை, தான்றிப் பருப்பு, விலாமிச்சவேர், சந்தனம், செஞ்சந்தனம், அதிமதுரம் இவை வகைக்கு 1வராகன் எடை சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1340)

5. அமிருத இலவங்கத் தைலம்

நெல்லிக்காய்ச்சாறு 6 படி, இளநீர், பசுவின்பால், நல்லெண் ணெய் இவை வகைக்கு 3படி, வில்வம், விலாமிச்சம்வேர் இவை வகைக்கு 10 பலம், மசெங்கழுநீர்க்கிழங்கு, கொத்தமல்லி, குராசானி ஓமம், கத்தூரி மஞ்சள், கடுகுரோகணி, சிற்றரத்தை, கோட்டம், அதிமதுரம், சுக்கு, பேய்ப்புடல், வெட்டிவேர், தேவ தாரம், திப்பிலி, சிறுநாகப்பூ, கிராம்பு, சந்தனத்தூள், சடா மாஞ்சில், சமுத்திராப்பழம் இவை வகைக்கு 1½ வராகன் எடை, மிளகு ¼படி எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி முழுகவும் கண் நோய்கள் தீரும் (1341)

6. அமிருத கலை எண்ணெய்

சிற்றாமணக் கெண்ணெய் 1 உழக்கு, பசுவின் நெய் 1 உழக்கு, நல்லெண்ணெய் 1 நாழி, பசுவின் பால் 2 நாழி. இவற்றுடன், செங்கழுநீர், நெல்லிக்காய், தான்றிக்காய், வெட்டிவேர், கோட்டம், கோரைக்கிழங்கு, கொத்தமல்லி விதை, விலாமிச்ச வேர், செங்கழுநீர்வேர். அதிமதுரம், சிற்றாமுட்டி, சண்பகப்பூ, பொன்னாங்காணிவேர் இவை வகைக்கு 1¼ பலம், புனுகு சட்டம், சந்தனத்தூள் இவை வகைக்கு 1 வராகன் எடை, எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும் (1342)

7. ஆமலகத் தைலம்

நெல்லிக்காய்ச்சாறு 2 படி, பசுவின் பால் 4 படி, நல்லெண் ணெம் 1 படி, அதிமதுரம் 1பலம் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும்.(1343)

## 8. இளநீர்த் தைலம்

தேங்காய்ப்பால், நல்லெண்ணெய் இவற்றை ஓரளவாய்க் கொண்டு அத்துடன், அதிமதுரம், சந்தனம், குங்குமம், நன்னாரி அகில், கோட்டம், இலவங்கம், பச்சிலை, ஏலம், இருவேலி, செங் கழுநீர்க் கிழங்கு, தாமரை வளையம், தகரம், சடாமாஞ்சில், சதமூலிகை, சண்பகமுகிழ், விலாமிச்சுவேர், புனுகுசட்டம், கச்சோலம், பச்சைக் கற்பூரம், சிற்றேலம், சாதிக்காய், தேவ தாரம், கடுகுரோகணி, குளுத்திக் கிழங்கு இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1344)

## 9. கற்பூராதித் தைலம்

நல்லெண்ணெய், பசுவின்பால், கற்றாழைச்சாறு, முசுமுசுக் கைச்சாறு இவை வகைக்கு 1நாழி, கற்பூரவல்லி அரைத்த விழுது 1 எலுமிச்சங் காயளவு, சந்தனம், எலுமிச்சம்வேர், வெட்டிவேர், ஏலம், குங்குமப்பூ, கிராம்பு, சீரகம், கொத்தமல்லி, மரமஞ்சள், கிளியூரல் பட்டை, சண்பகமுகிழ், சிறுநாகப்பூ, கத்தூரி மஞ்சள், குளவிந்தம், சிறுதேக்கு, பச்சிலை, வாலுழுவை, வெட்பாலை, வெட்பூலாவேர் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து முறைப் படிக்காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும் (1345-1348)

## 10. கற்றாழைத் தைலம்

வரிக்காற்றாழைச்சாறு, நல்லெண்ணெய், பசுவின் பால் இவை வகைக்கு 2 படி. இவற்றுடன், மஞ்சட்டி, நீலாஞ்சனம், நன்னாரி, முத்தக்காசு, கடுகுரோகணி, தக்கோலம், புட்டில், தாளிசபத்திரி, சாதிக்காய், கற்பூரம், கடுக்காய், நெல்லிதான்றி, மாஞ்சில், பிசின், அதிமதுரம், ஏலம், இலவங்கம், பச்சிலை, சிறுநாகப்பூ, விலாமிச்சம் வேர், அகில், அடவிகச்சோலம், சிற்றேலம், புனுகுசட்டம், சந்தனம், செங்கழுநீர்க்கிழங்கு, தாமரை வளையம், கோட்டம் இவை வகைக்கு ¼ பலம் எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1349)

## 11. கீழ்க்காய் நெல்லித் தைலம்

கீழ்க்காய் நெல்லித்தூள் 1 வீசை, பசுவின் பால் 1 படி, சீரகம் 1 பலம். இவற்றைக் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1350)

12. குமரித் தைலம் 1

கற்றாழைச்சாறு, நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 குறுணி எடுத்து அத்துடன், தகரம், சந்தனம், கொத்தமல்லி விதை, மாஞ்சில், முத்தக்காசு, வெட்டிவேர், ஏலம், திரிபலை, நன்னாரி, சாதிக்காய், இலவங்கம், நெய்தற்கிழங்கு, கோரைக்கிழங்கு, மதுரம், தக்கோலம், பச்சைக் கற்பூரம், புட்டில், மஞ்சட்டி, இவற்றை வகைக்கு 1 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1351-1353)

13. குமரித் தைலம் 2

கற்றாழைச்சாறு 4 படி, நல்லெண்ணெய், பசுவின் பால் இவை வகைக்கு 1 படி. இவற்றுடன், நன்னாரிவேர், கிராம்பு, கத்தூரி மஞ்சள், அகில், சாதிபத்திரி, கையாந்தகரை, செவ்வல்லிக்கொடி, கடுக்காய்ப்பூ, வெட்பாலை, நீலோற்பலக் கிழங்கு, சிற்றரத்தை, பூலாங்கிழங்கு, சாதிக்காய், சடாமாஞ்சில், செங்கழுநீர்க்கிழங்கு வெட்டிவேர், சந்தனம், வெள்ளிலோத்திரம், தாமரை இலைச் சுருள், கோரைக் கிழங்கு, அதிமதுரம், கடுகுரோகணி, தக்கோலம், மரமஞ்சள், கத்தூரி, பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1354)

14. குமரித் தைலம் 3

கற்றாழைச்சாறு 1 குறுணி, கரிசாலை, தண்ணீர் விட்டான் கிழங்கு, சீந்தில்கொடி, தாமரை வளையம் இவை வகைக்கு 4படி. இவற்றுடன், அதிமதுரம், அகில், சாதிக்காய், சண்பகப்பூ, விலாமிச்சவேர், கிராம்பு, கோட்டம், இலவங்கப்பத்திரி, சந்தனம், தேவதாரம், ஏலம், திப்பிலி, சடாமாஞ்சில், வெட்டிவேர், புனுகு சட்டம் இவை வகைக்கு 2 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1355)

15. குமரித் தைலம் 4

கற்றாழைச்சாறு 4 படி, பசுவின்பால் 4 படி, நல்லெண்ணெய் 2 படி, இளநீர் 2 படி, சீந்தில்கொடி, கோவை, முசுமுசுக்கை, கையாந்தகரை, வெட்டிவேர் இவை வகைக்கு 1 பலம் இடித்த சாறு. இவற்றுடன், பச்சிலை, சந்தனச்சிராய் இவை வகைக்கு 3 பலம், நன்னாரிவேர், கோரைக் கிழங்கு, தக்கோலம், அகில்,

நெல்லிக்காய், கிராம்பு, கோட்டம், செங்கழுநீர்க்கிழங்கு, சாதிக் காய், கடுகுரோகணி, கச்சோலம், தான்றிக்காய், விலாமிச்சவேர், வெட்டிவேர், கண்டில் வெண்ணெய், கடுக்காய், ஏலம், அதிமதுரம் தாமரை வளையம் இவை வகைக்கு 1 கழஞ்சு. பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும்.

## 16. குமரித் தைலம் 5

கற்றாழைச்சாறு, நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 படி, பசுவின்பால் 2 படி. இவற்றுடன், செவ்வல்லிக்கொடி, ஏலம், சிறு நாகப்பூ, சாதிக்காய், மரமஞ்சள், நீலாஞ்சனம், நெல்லிக்காய், அதிமதுரம், வெட்டிவேர், நன்னாரிவேர், அகில், சந்தனச்சிராய், கிராம்பு, கத்தூரி மஞ்சள், கோட்டம், தான்றிக்காய், தக்கோலம், தாமரை வளையம், கடுகுரோகணி, விலாமிச்சம்வேர், தகரம், செங்கழுநீர்க்கிழங்கு, சடாமாஞ்சில், கடுக்காய், கோரைக்கிழங்கு, பூலாங்கிழங்கு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்துச்சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும்.

## 17. கையாந்தகரை எண்ணெய் 1

கையாந்தகரைச்சாறு 4 படி, நல்லெண்ணெய் 5 உழக்கு, அதிமதுரம், ஏலம், சந்தனத்தூள், கிராம்பு, நன்னாரிவேர், சாத்திரவேதி இவை வகைக்கு 2 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முறைப் படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (13ç8)

## 18 கையாந்தகரை எண்ணெய் 2:

கையாந்தகரை, நெல்லிக்காய் இவை 4நாழி. நல் லெண்ணெய், பசுவின் பால் இவை வகைக்கு 5 உழக்கு. அதி மதுரம் 2 பலம், திரவியம் 1 பலம், எடுத்துச் சேர்த்துமுறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும்.

## 19. கையாந்தகரை எண்ணெய் 3 :

கையாந்தகரை, நெல்லிக்காய் இவற்றின் சாறுகள், நல் லெண்ணெய் இவை வகைக்கு 2 படி, பசுவின் பால், 4 படி, இவற்றுடன், சிற்றாமுட்டி, பேராமுட்டி, அதிமதுரம், நாகமல்லி வேர், திராட்சை, சதகுப்பை, கோட்டம், சந்தனக்கட்டை, மஞ்சள், பூலாங்கிழங்கு, விலாமிச்ச வேர், கொத்து மல்லி விதை, முசுமுசுக்கை வேர், சிற்றரத்தை, இலவங்கப்பட்டை, இலவங்கப் பத்திரி இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1360)

20. சந்தனாதி எண்ணெய் :-

சிற்றாமுட்டி, சீந்திற் கிழங்கு, பொன்னாங்காணி நன்னாரி, இருவேலி, விலாமிச்ச வேர், வில்வம் வேர், சந்தனம் இவை வகைக்கு 10 பலம் சேர்த்து இடித்து, 2 தூணி நீரில் போட்டுக் காய்ச்சவும். அத்துடன், நல்லெண்ணெய் 1 நாழி, பசுவின் பால் 7 குறுணி சேர்க்கவும். இவற்றுடன், முந்திரிகை, சிறுதேக்கு, கோட்டம், பேரீச்சம், கண்டில் வெண்ணெய், கோரோசனை, கூகைநீறு, சாத்திரவேதி, குங்கிலபட்டம், அதிமதுரம், ஏலம், இலவங்கம், பெருகுரும்பை, தேவதாரம், சிறுநாகப்பூ, கிராம்பு, சதகுப்பை, மாஞ்சில், வெட்பாலை, மஞ்சிட்டி, மரமஞ்சள், கற்கடம், தகரம், பச்சிலை, கச்சோலம், புனுகுசட்டம், அகில், சந்தனம், திப்பிலி, சிறுமூலம், சண்பகப்பூ, கொத்தமல்லி விதை' இவற்றை வகைக்கு 1 கழஞ்சாகச் சேர்த்தரைத்துக் கூட்டிக்காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1361-1365)

21. சிறு சந்தனாதித் தைலம் :-

சந்தனம் 100 பலம், வெட்டிவேர், விலாமிச்சவேர், வில்வவேர் நிலப்பனை, அமுக்குரா, நன்னாரிவேர், சாரடைவேர், மிளகரணைவேர், குறுந்தொட்டி வேர், பேராமுட்டிவேர், தூதுவளை, காட்டுமல்லி தேற்றான்வேர், அத்திப்பட்டை, நெல்லி, ஆயிலியப் பட்டை, ஆலவிழுது, சித்திரமூலம், பாலைபட்டை, கற்றாழைவேர் இருவேலி, வட்டத்திருப்பி, தென்னம்பூப் பாளை, புன்னை, கருஞ்செம்பை, முத்தக்காசு, மரவள்ளி, நீர்ப்பூலா. முந்திரிகைவேர் இவை வகைக்கு 5 பலம் எடுத்துச் சேர்த்து 2 தூணி நீரிலிட்டு $\frac{1}{8}$ ஆக காய்ச்சி வடிக்கவும். சந்தனத்தைத் தனியாக 2 தூணி நீரிலிட்டு $\frac{1}{8}$ ஆக காய்ச்சி வடிக்கவும். இவ்விரண்டையும் ஒன்றாகச் சேர்த்து அத்துடன் நல்லெண்ணெய் 1 படி, செவ்விளநீர் 4 படி, பசுவின் பால் 4 படி, வல்லாரை, கரிசாலை. பொன்னாங்காணி, கற்பூரவல்லி, செருப்படி, முசுமுசுக்கை, மணித் தக்காளி, சீதேவிச் செங்கழுநீர்க், கிழங்கு, பருத்திக்காய். தண்ணீர் விட்டான் கிழங்கு, அல்லிக் கொடி, நந்தியா வட்டம், கொத்தமல்லி, சிறுகீரை, மாதுளை, கற்றாழை. முடக்கொற்றான், பற்பாடகம், தாழை விழுது, நெல்லிக்காய். தழுதாழை, நொச்சி, வெள்ளறுகு, பெருநெருஞ்சி, அமிர்தவல்லி, சீந்தில், காணாவேளை, அவுரிப்பழம் பாசி இவற்றின் சாறுகள் வகைக்கு $\frac{1}{2}$ படி எடுத்துச் சேர்த்து அத்துடன் திரிகடுகு. திரிபலா, ஏலம், இலவங்கம், கோட்டம்' உத்தம

தாளி, ஓமம், அதிமதுரம், சீரகம், கொத்தமல்லி விதை, சாதிக்காய், சாதிபத்திரி, கிராம்பு, வால்மிளகு, இந்துப்பு, சடாமஞ்சில்' வாய்விளங்கம், சேவலையம், சோம்பு, மஞ்சள், கூகைநீறு கத்தூரி, மஞ்சள், கிளியூறல் பட்டை, கருவாப்பட்டை, குளவிந்தம், வங்காளப் பச்சை, திப்பிலி, வெட்பாலை, வாலுழுவை அரிசி, சிறுநாகப்பூ, கற்கடகசிங்கி, வலம்புரி, கோரோசணை, கார்போகரிசி வித்து, வெட்பாலை யரிசி, பெருவிளா அரிசி இவை வகைக்கு ¼ பலம் எடுத்துப் பசுவின்பால் விட்டரைத்துக் கூட்டவும். இவை எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து 3 நாட்கள் சிறுதீயிற் காய்ச்சவும். நான்காம் நாளும் கருகாமல் காய்ச்சி மெழுகு பதமானதும் அத்துடன் முருங்கைப்பூ, சண்பகப்பூ, இலுப்பைப்பூ, சம்பங்கிப்பூ, பன்னீர், மாதுளை, முல்லை, புங்கம், மாற்புரண்டிப்பூ, மருக்கொழுந்து இவை வகைக்கு 1 பிடி போட்டு முறைப்படி காய்ச்சி வடிக்கவும். வடிகலசத்தில் குங்குமப்பூ, கோரோசணை, கத்தூரி, சாதிக்காய், புனுகுசட்டம், செங்கழுநீர், பச்சைக்கற்பூரம் இவை வகைக்கு 4 கழஞ்சு சேர்த்து, அதில் தைலத்தை வடிக்கவும். இத்தைலத்தை நெல்தானியப் புடத்தில் வைத்தெடுத்து முறைப்படி முழுகவும். கண் நோய்கள் பலவும் தீரும்] (1366-1380)

## 22. சீதேவி செங்கழுநீர்த் தைலம்

சீதேவி செங்கழுநீர்க் கிழங்குச்சாறு, பசுவின் பால் இவை வகைக்கு 1 குறுணி, நல்லெண்ணெய் 1 நாழி, இவற்றுடன் ஏலக்காய், கிராம்பு, சந்தனத்தூள், சிறுநாகப்பூ, விலாமிச்சம்வேர், வெட்டிவேர், கோட்டம், அதிமதுரம், கடுகுரோகணி, நன்னாரி வேர் இவை வகைக்கு 2½ பலம் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி முழுகவும். கண் நோய்கள் தீரும்.(1381)

## 23. சீந்தில் தைலம்

சீந்தில் கொடிச்சாறு, கற்றாழை, நெல்லிக்காய், வெட்டிவேர், விலாமிச்ச வேர், நன்னாரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, தாழை விழுது, பொன்னாங்காணி, முடக்கொற்றான், ஓரிதழ்த்தாமரை இவற்றின் சாறுகள், இளநீர், நல்லெண்ணெய் இவை வகைக்கு 4 படி, எடுத்துச் சேர்த்து அத்துடன், வெட்டிவேர், விலாமிச்ச வேர், தகரம், வெள்ளிலோத்திரம், ஏலரிசி, இலவங்கப்பட்டை இலவங்கப்பத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், கிச்சிலிக் கிழங்கு, நாணல்தாது, அல்லிக் கிழங்கு, நீலாஞ்சனம், கற்பூரம் திராட்சை, சடாமாஞ்சில், சிறுநாகப்பூ, முசுமுசுக்கை வேர்,

சாதிபத்திரி, சோனப்புல் இவை வகைக்கு 1பலம் சேர்த்தரைத்துக் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து நெற்புடம் வைத்தெடுத்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1382)

## 24. சீரகத் தைலம்

நல்லெண்ணெய் 1 படி, சீரகம் 1 பலம் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும் கண்நோய்கள் தீரும். (1383)

## 25. தாழம் விழுதெண்ணெய்

கையாந்தகரை, நெல்லிக்காய், பசுவின் பால் இவை வகைக்கு 1 நாழி, நல்லெண்ணெய் 2 நாழி இவற்றுடன். அதுமதுரம் 10 கழஞ்சு அரைத்துக் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும், கண் நோய்கள் தீரும். (1384-1385)

## 26. தித்த கோஷாதித் தைலம்

பேய்ப் பீர்க்கிலைச்சாறு, பசுவின் நெய், ஆமணக்கெண்ணெய், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1படி, வெள்ளான்பால் 4 படி, இவற்றுடன் திரிகடுகு. வெட்டிவேர், மஞ்சள் சண்பகப்பூ, கோட்டம், மரமஞ்சள், விலாமிச்சவேர், சண்பகப்பூ இவை வகைக்கு 1பலம், அதிமதுரம் 10பலம். இவற்றை அரைத்துக் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள்தீரும்.

## 27. நயன சஞ்சீவி எண்ணெய்1

பசுவின் பாலும் நெய்யும் வகைக்கு 1 படி, அதிமதுரம். கோட்டம், ஏலம், சண்பகப்பூ, வெட்டிவேர், பொன்னாங்காணி வேர், விலாமிச்சவேர், கிராம்பு, சிறுகீரை வேர் இவை வகைக்கு ¼ கழஞ்சு, முள்ளி நிடகம் 4 கழஞ்சு சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1390-1392)

## 28. நயன சஞ்சீவி எண்ணெய் 2

நல்லெண்ணெய் 1½படி, பொன்னாங்காணி, சிறுகீரை, ஓரிலைத் தாமரை, நாய்க்கோவை, கறுங்கோவை, பற்படாகம், சீந்தில்தண்டு. முடக்கொற்றான், செங்கழுநீர், ஓலைப்பூ, இலுப்பைப்பூ கோவைக் கிழங்கு, நீர்முள்ளி இவற்றின் சாறுகள் வகைக்கு 1 படி. இவற்றுடன், அதிமதுரம், தக்கோலம், காசுகட்டி மிளகு, தான்றிக்காய், மஞ்சள், இஞ்சி, செஞ்சந்தம், சிறுடி தேக்கு. ஈருள்ளி, விலாமிச்சம் வேர், சவுக்காரம், கோட்டம்,

கத்தூரி, புனுகு சட்டம், கோரோசனை இவை வகைக்கு 2 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1392)

## 29. நிர்க் குண்டித் தைலம்

கருநொச்சிச்சாறு, கரிசலாங்கண்ணிச்சாறு இவை வகைக்கு 2 குறுணி, பசுவின் பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 5 படி இவற்றுடன், ஊசிமல்லிகை, மருள்வேர், துளசி, இஞ்சி, பசு மஞ்சள், மிளகரணை, எருக்கம் பழுப்பு, தாழை விழுது, தென்னம் பாளை, மிதிபாகலிலை, வாழை மட்டை, முருங்கையிலை, வெள்ளைப் பூண்டின் இலை, பனை மட்டை, இலவங்கப்பத்திரி பேரரத்தை இவற்றின் சாறுகள் வகைக்கு 1 நாழி செங்கழுநீர்க் கிழங்கு, சிற்றரத்தை, வாய்விளங்கம், திப்பிலி, கடுகு, கோட்டம். அதிமதுரம். சுக்கு, பெருங்காயம், வசம்பு, தேவதாரு, மிளகு' தகரம் இவை வகைக்கு ½ பலம், புனுகுசட்டம் ¼ பலம் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும்.

## 30. நெல்லித் தைலம் 1

நெல்லிக்காய்ச்சாறு, சீந்திற் சாறு இவை வகைக்கு 4 படி, பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 2 படி, தாமரை வளையம், கற்கண்டு இவை வகைக்கு 1 காக எடை, சிற்றமுட்டி வேர், நன்னாரி, விலாமிச்சவேர், பதுமுகம், காகொளிசீவகம், கடல் நுரை, அகில், செங்கழுநீர்க் கிழங்கு, கற்பூரம், தக்கோலம் புட்டில், சாதிக்காய், புனுகுசட்டம், சந்தனம், முத்தக்காசு, அடவிகச்சோலம் இவை வகைக்கு 2 கழஞ்சு சேர்த்தரைத்துக் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1395)

## 31. நெல்லித் தைலம் 2

நெல்லிக்காய், பொன்னாங்காணி, சுற்றாழை, சிறுகீரை, கரிசலாங் கண்ணி, நந்தியாவட்டப்பூ, கம்மாறு வெற்றிலை, முசுமுசுக்கை இவற்றின் சாறுகள், இளநீர், பசுவின்பால் இவை வகைக்கு 1 உழக்கு, நல்லெண்ணெய் 1படி, கருஞ்சீரகம், மிளகு, கொத்தமல்லி, சீரகம் இவை வகைக்கு ½பலம் சேர்த்தரைத்துக் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1396-1397)

### 32. பிருங்காமலகத் தைலம் 1

சிற்றாமணக்கெண்ணெய், நல்லெண்ணெய் இவை வகைக்கு ½ படி, கையாந்தகரைச்சாறு, ஆடாதோடை யிலைச்சாறு இவை வகைக்கு 1 படி, நெல்லிக்காய்ச்சாறு 2 படி இவற்றை முறைப்படி காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1398)

### 33. பிருங்காமலகத் தைலம் 2

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு இவை வகைக்கு 1 குறுணி பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 2 படி. இவற்றுடன், அதிமதுரம், கோட்டம். சண்பகப்பூ, கிராம்பு, ஏலம், சிறுநாகப்பூ விலாமிச்சவேர், பச்சிலை, மஞ்சிட்டிவேர், பூலாங் கிழங்கு, சந்தனத்தூள் இவை வகைக்கு 4 கழஞ்சு அரைத்துக் கூட்டிமுறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1396)

### 34. பிருங்காமலகத் தைலம் 3

நெல்லிக்காய்ச்சாறு, கரிசலாங்கண்ணிச்சாறு. கபிலைப் பசுவின் பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 நாழி, அதி மதுரம் 1 பலம் சேர்த்து அரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும். (1400)

### 35. பிருங்காமலகத் தைலம் 4

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, சீந்தில் கொடிச் சாறு, சோற்றுக் கற்றாழைச்சாறு, பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 குறுணி எடுத்து அத்துடன், அதிமதுரம், சண்பகப்பூ, பச்சிலை, கோட்டம், கண்டில் வெண்ணெய், தக்கோலம், விலாமிச்சவேர், நன்னாரி, சந்தனத்தூள், வெட்டி வேர், தாமரை வளையம், கோட்டம், கார்போகரிசி, கோரைக் கிழங்கு சிறுநாகப்பூ, இவை வகைக்கு 1 பலம் சேர்த்தரைத்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1401)

### 36. பிருங்காமலகத் தைலம் 5

நல்லெண்ணெய், கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச் சாறு, நன்னாரிக் கிழங்குச்சாறு, வாசனைப்புல்லின்சாறு, பொன்னாங்காணிச்சாறு இவை வகைக்கு 1 படி. இத்துடன் கோட்டம், அதிமதுரம், சிற்றரத்தை இவை வகைக்கு 1 பலம்,

சந்தனம், விலாமிச்சவேர் இவை வகைக்கு ! சேர், கடுகுரோகணி 2 வராகன் எடை, சேர்த்து முறைப்படி காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1402)

## 37. பிருங்காமலகத் தைலம் 6

கையாந்தகரைச்சாறு 4 படி, பசுவின் பால் 2 படி, நல்லெண்ணெய் 1 படி, இவற்றுடன், மரமஞ்சள், மஞ்சிட்டிவேர், செங்கோட்டம், வெற்றிலைக்கொடி, தாமரையிதழ். தாமரைக்கிழங்கு, சந்தனம் இவை வகைக்கு 1 பலம் எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1403)

## 38. பிருங்காமலகத் தைலம் 7

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, பொன்னாங்காணிச்சாறு, பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1படி அதிமதுரம் 1 பலம், சந்தனம் கடுக்காய், சிற்றரத்தை, நெல்லிமுள்ளி, கடுகுரோகணி, தான்றிக்காய், விலாமிச்சவேர் இவை வகைக்கு ¼ எடுத்துச் சேர்த்து முறைபடிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1404)

## 39. பிருங்காமலகத் தைலம் 8

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, நல்லெண்ணெய், இவை வகைக்கு ! படி, பசுவின் பால் 4 படி, அதிமதுரம் 10வராகன் எடை, சிற்றாமுட்டி வேர்த்தோல், கோட்டம் இவை வகைக்கு 3 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1405)

## 40. பிருங்காமலகத் தைலம் 9

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, நல்லெண்ணெய், இவை வகைக்கு 1 படி, தயிரின் தெளிவு நீர் 3 படி, இவற்றுடன், கோட்டம், அதிமதுரம், கோரைக்கிழங்கு, விலாமிச்சவேர், வெட்டிவேர், கடுகரோகணி, கற்றாழைச்சரகு, நீலோற் பலம் இவை வகைக்கு ½ பலம் எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1406)

## 41. பிருங்காமலகத் தைலம் 10

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, பசுவின்பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 4 சேர், இவற்றுடன், நெல்லி

முள்ளி, கடுக்காய், தான்றிக்காய், தேவதாரம், கோரைக்கிழங்கு, செம்புளிச்சை, வெட்டிவேர், பனைவேர், தென்னைவேர், விலாமிச்சவேர் இவை வகைக்கு 1 பலம், சீரகம், கருஞ்சீரகம், அதிமதுரம், கிராம்பு, திப்பிலி, சடாமாஞ்சில், சுக்கு, கோட்டம், சாதிக்காய், மிளகு இவை வகைக்கு 4 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1407)

## 42. பிருங்காமலகத் தைலம் 11

நெல்லிக்காய்ச்சாறு, கையாந்தகரைச்சாறு, கற்றாழைச்சாறு, அசுவகெந்திச்சாறு, தாழை விழுதுச்சாறு, கருமத்தம்சாறு, புளியிலைச்சாறு, தயிரின் தெளிவு நீர், பசுவின்பால் இவை வகைக்கு 1 படி, ஆதெண்டையிலை நல்லெண்ணெய் 2படி எலுமிச்சம் பழச்சாறு 1 படி, இவற்றுடன், அதிமதுரம், கோட்டம், கடுகரோகணி, திப்பிலி, ஏலம், மரமஞ்சள், கத்தூரிமஞ்சள், சுக்கு, தாமரைக் கிழங்கு, எலுமிச்சம்வேர், ஓமம், உள்ளி, மஞ்சள், வேப்பம் பருப்பு சீரகம் இவை வகைக்கு 3 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுக்கவும். கண் நோய்கள் தீரும். (1408)

## 43. பூதிகாதி தைலம்

ஆயிலப்பட்டை 100 பலம், தசைமூலம் 70 பலம், சிற்றாமுட்டி, செம்புஞ்சை வேர், அழுக்குரா வேர், மாவிளங்கை, நொச்சி, ஆமணக்கு மூலம், தழுதாழை புங்கு, செம்முள்ளி, அழிஞ்சில், சாரடை, எருக்கு, சவுரி, முட்கா வேளை, சிறுகாஞ்சோரி, வேப்பிலை, வெட்டிவேர், சங்கிலை, முருங்கைப்பூ, தூதுளை இவை வகைக்கு 5 பலம், நல்லெண்ணெய், வெள்ளாட்டுப் பால், இவை வகைக்கு 3 படி, தகரை, குக்கில், சடாமாஞ்சில், ஏலம், இலவங்கப்பத்திரி திரிபலை, சிறுநாகப்பூ, வாய்விளங்கம், கடுகுரோகணி, திரிகடுகு பூலாங்கிழங்கு, செம்புளிச்சை மூலம், ஏலரிசி, வசம்பு, வட்டத்திருப்பி, சந்தம், மாமரத்துமூலம், செவ்வியம், கிராம்பு, சண்பகப்பூ, ஓமம், கோட்டம், மஞ்சிட்டி, சதகுப்பை, கடுக்காய் சாதிக்காய், தேவதாரம், விலாமிச்சம் வேர் இவை வகைக்கு 3 கழஞ்சு கூட்டி முறைப்படிக் காய்ச்சி முழுகவும். கண் நோய்கள் தீரும். (1409-1414)

## 44. பொன்னாங்காணித் தைலம் 1

பொன்னாங்காணிச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, நல்லெண்ணெய், பசுவின் பால் இவை வகைக்கு 2 படி, அதிமதுரம் 2 பலம் எடுத்து முலைப் பாலில் அரைத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1415 1416)

## 45. பொன்னாங் காணித் தைலம் 2

பொன்னாங்காணிச்சாறு, சிறுகீரைச் சாறு. கோரைக் கிழங்கு சீந்தில், எலுமிச்சம்பழம், நாரத்தம்பழச்சாறு, கோட்டம், அதிமதுரம், ஏலம், சண்பகப்பூ, இலவங்கம் இவற்றை வேண்டிய அளவு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1417)

## 46. மணித் தக்காளித் தைலம்

நல்லெண்ணெய்யில் மணித்தக்காளியின் சமூலத்தைப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும் (1418)

## 47. மாவலிங்க எண்ணெய்

நல்லெணணெய்யில் மாவலிங்க சமூலம், மிளகு, வசம்பு உள்ளிப்பூண்டு இவற்றை வேண்டிய அளவு போட்டு வெய்யிலில் வைத்தெடுத்துத் தலையில் தேய்த்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1419)

## 48. மிளகு எண்ணெய் 1

மிளகு ½படி, வெற்றிலைச் சாறு 1படி, கலியாண முருங்கையிலைச்சாறு 1படி, நல்லெண்ணெய் 1½படி, இவற்றுடன், நன்னாரி வேர், விலாமிச்சம் வேர், சிற்றாமுட்டி வேர், அடவிக் கச்சோலம், ஏலம், ஓமம், சாதிக்காய், கிராம்பு, பச்சிலை, பூலாங் கிழங்கு, சந்தனம், அதிமதுரம், கருஞ்சீரகம் இவை வகைக்கு 1 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1420)

## 49. மிளகு எண்ணெய் 2

மிளகு 5½பலம் எடுத்து அதை முசுமுசுக்கைச் சாறு, தாழை விழுதுச் சாறு, சிறுகீரைச்சாறு, நெல்லிக்காய்ச் சாறு, பொன்னாங் காணிச்சாறு, இளநீர், பசுவின் பால் இவைகளில் தனித்தனியே ஒவ்

வொரு நாளாக ஊறவைத்து உலர்த்தி எடுத்துத் துணியில் முடிந்து நல்லெண்ணெய்யில் ஊறவைத்து எடுத்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1421)

## 50. மகா சந்தனாதித் தைலம்

வேங்கை வேர். குறுந்தட்டிவேர், பாலைவேர், வில்வவேர், நெல்லிமுள்ளி, சதகுப்பை, கொம்பரக்கு, கஞ்சவளை, தாழை விழுது, விலாமிச்சு, இருவேலி, மிளகு, அகில், வெட்டிவேர், முத்தக்காசு, தேவதாரம், சீந்தில், தாமரைக் கிழங்கு இவை வகைக்கு 4 பலம் எடுத்து இடித்து 8 மரக்கால் நீரிலிட்டு 1 மரக் காலாகக் காய்ச்சி வடிக்கவும். அத்துடன், நல்லெண்ணெய், இளநீர், பொன்னாங்காணி, முசுமுசுக்கை, வெற்றிலை, கஞ்சா, சிறுகீரை, கற்பூரவள்ளி இவற்றின் சாறுகள் வகைக்கு 4 படி சேர்க்கவும். இத்துடன், ஏலம், கோட்டம், அதிமதுரம், குங்குமப் பூ, கத்தூரி, பச்சைக் கற்பூரம், சிலாசத்து, கொட்டிக் கிழங்கு, கோரோசனை, நன்னாரி, சண்பகப்பூ, கொம்பரக்கு, செங்கழுநீர், கொத்தமல்லி விதை, கற்பூரம், நாகணம், சடாமாஞ்சில், வங் காளப் பச்சை, மரமஞ்சள், வால்மிளகு, பெருங்குரும்பை, செஞ் சந்தனம், தகரம், புனுகு சட்டம், அஞ்சனக்கல், மஞ்சள், சந்தனம் தாமரைவேர், தாளிசபத்திரி, ஓமம், கொடிவேலி, வெள்ளி லோத்திரம், சிற்றரத்தை, சிறுநாகப்பூ, சிவதை, கடுகுரோகணி, திரிகடுகு, சீரகம், கருஞ்சீரகம், சாதிக்காய், தக்கோலம், இலவங்கப் பத்திரி, இலவங்கப்பட்டை, மஞ்சிட்டி, கார்போகரிசி, செவ்வள்ளி, வாய்விளங்கம், கண்டில் வெண்ணெய், தேக்கு, திரிபலை, குளமாஞ்சி, விளாம்பிசின், மகரப்பூ, பாக்கு, இருவேலி இவை வகைக்கு 4 கழஞ்சு எடுத்து சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1422)

## 51. முக்கூட்டுத் தைலம்

எள்ளெண்ணெய், சிற்றெரண்ட எண்ணெய், பசுவின் நெய் இவை வகைக்கு 2 படி, பசுவின் பால் 4படி, செவ்விளநீர் 4 படி, கரிசாலை, பொன்னாங்காணி, வல்லாரை, அவுரிக்கொத்தான், தழுதாழை, செருப்படை, நொச்சி, முருக்கிலை, கற்றாழை, கற்பூரவல்லி, தூதுவளை, கண்டங்கத்திரி, புளியாரை, முசு முசுக்கை, சங்கங் குப்பி, குப்பைமேனி, சிறுகீரை, வேளை, தாழை

விழுது, ஆடாதோடை, பிச்சி, புன்புருங்கை, முல்லை, காட்டுமுல்லை ஆதண்டை, கீழ்க்காய் நெல்லி, சோற்றுக் கற்றாழை, நெல்விக் காய், அல்லி, கொட்டி, நெய்தல், ஆம்பல், நிலக்குமிழி, தண்ணீர் விட்டான், மணித்தக்காளி, பொடுதலை, நெருஞ்சி, துத்தி, சிறு முள்ளாங்கி, வெள்ளறுகு, செங்கழுநீர், முத்தெருக்கு, ஆனா வலத்தி, ஓதியம்பட்டை, முள்ளங்கி, திருநாமப்பாலை, மூக்குரட்டை வேர், கருடக்கிழங்கு, கரந்தை, பெருநெருஞ்சி, கொன்றை, ஆலவிழுது, சிறுகுரட்டை, பிரமி, தேள்கொடுக்கிலை, பற்படாகம் இவற்றின் சாறுகள் வகைக்கு ½ படி எடுத்துச் சேர்க்கவும் இவற்றுடன் வெட்டிவேர், விலாமிச்சவேர் வில்வவேர், நன்னாரி, சிற்றாமுட்டி, பேராமுட்டி, இருவேலி, மிள கருணைவேர், சங்கு, வெள்ளைச் சாரணை வேர், குருதொட்டி வேர், சிற்றமல்லி, பேராமல்லி, ஆயிலியப்பட்டை, மருது இலந்தை, அமுக்கிராவேர், சித்திரமூலி, சிறுபீளை, நிலப்பணை வேர், முத்தக்காசு, தூதுவளை, நொச்சி, கண்டங்காலி, மரவள்ளி முந்திரிகைவேர், தேற்றான், கருங்குருத்து, ஆவாசு, இலுப்பை, வீழி முருங்கை வேர், ஆச்சா, சம்பங்கி, விட்ணு கிரந்தி, ஆவாரைவேர் அறுகு, பொன் முசுட்டை, சிறுகாஞ்சோறி, ஆதொண்டை வெட்பாலை, அகத்தி, செம்பை, சண்பகப்பூ, முட்காவேளை அகில், தேவதாரம், மலக்காய் சந்தனம், இருவெட்டி, நீர்ப்பூல, வேர், காட்டகத்தி, சிறு வழுதலைவேர் இவை வகைக்கு 2 பலம் சேர்த்து அத்துடன், 2 தூணி நீரிட்டுக் காய்ச்சி ⅛ ஆக வற்ற வைத்து அத்துடன், திரிகடுகு, திரிபலா, திப்பிலிமூலம், கோட்டம், சிற்றரத்தை, பேரரத்தை, கொத்தமல்லிவிதை, ஏலம் இலவங்கம், மாஞ்சில், கோட்டம், தாளிசபத்திரி, சீரகம், வாய் விளங்கம், சிறுநாகப்பூ, அதிமதுரம், இந்துப்பு, செவ்வியம், மர மஞ்சள், சாதிக்காய், கிராம்பு, சாதிப்பத்திரி, மஞ்சிட்டி, வாலுழுவை, சிருங்கி, வால்மிளகு, கூகைநீறு, சண்பகப்பூ, வலம் புரிக்காய், கருவாப் பட்டை, கிளியூறல்பட்டை, பச்சிலை, பூலாங் கிழங்கு, சோம்பு, மஞ்சள், சமுத்திராப்பழம், கச்சோலம், வங்காளப் பச்சை, முத்தக்காசு, பெருங்குரும்பை, அக்காரக்காரம், அத்தி திப்பிலி இவை வகைக்கு ½ பலம் எடுத்துப் பசுவின் பால் விட்டரைத்துச் சேர்த்துக் காய்ச்சவும், அத்துடன், முருங்கைப்பூ, மருக்கொழுந்துப்பூ இவை வகைக்கு 1 பிடி போட்டு முறைப்படி காய்ச்சி வடிக்கவும், வடிகலசத்தில், குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம்,

கோரோசனை, கத்தூரி, இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து அதில் மேற்கண்ட தைலத்தை வடிக்கவும். இதைத் தானிய புடத்திலிட்டு எடுத்து முழுகவும். கண் நோய்கள் தீரும் (1423—1440)

## 52. மேருத் தைலம்

நல்லெண்ணெய். பால், தும்பைப்பூ இவை வகைக்கு 1படி எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1441)

## 53. வேங்கைத் தைலம்

வேங்கை மரவைரம், சிற்றாமுட்டிவேர், சீந்திற்கொடி இவை வகைக்கு 37½ பலம், நீரிலிட்டு எட்டிலொன்றாக வற்றக் காய்ச்சி, அத்துடன் நல்லெண்ணெய் 1படி, கடுக்காய், நெல்லிக்காய்' தான்றிக்காய், அதிமதுரம், பாலைவேர், சுக்கு, கிராம்பு இவை வகைக்கு 3 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முறைப்படி காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1442)

## 54. தைலம் (பொது) 1

பேராமுட்டி, சிற்றாமுட்டி, இருவேலி, நீர்ப்பூலா,முத்தக்காசு சீந்திற்கிழங்கு, பொன்னாங்காணி, நன்னாரி, குதிரைவாலி' நிலக்குமிழவேர், நீர்முள்ளி, ஓரிதழ்த் தாமரை, பனைக்கிழங்கு' சதாவாரி, பனங்கருக்கு, விலாமிச்சவேர், தாமரைக் கிழங்கு, இவை ஓரளவாய்க் கொண்டு, அத்துடன் சண்பகப்பூ, செவ்வள்ளி கிளியூரல், நாகப்பூ, இருவேலி, கொத்தமல்லி, வசுவாசு, சாதிக் காய், ஏலம், இலவங்கம், கச்சோலம், கொழுந்துபச்சை, கோட்டம் அதிமதுரம், குங்குமப்பட்டை, கருஞ்சீரகம், கிராம்பு, குங்குமப்பூ இவை வகைக்கு 2 கழஞ்சு, அத்துடன், நெல்லிக்காய்ச்சாறு தாமரைக்கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு இவற்றின் சாறு கள் வகைக்கு 1நாழி, நல்லெண்ணெய், பசுவின் நெய் இவை வகைக்கு 3 நாழி, சந்தனம் 5 கழஞ்சு சேர்த்து முறைப்படி காய்ச்சி வடித்து, புனுகு, பச்சைக் கற்பூரம் இவை வகைக்கு 1 கழஞ்சு சேர்த்து வைத்து முழுகவும். கண்நோய்கள் தீரும் (1443—1447)

## 55. தைலம் 5

வெள்ளெருக்கு மூலம், சீதேவி மூலம், கொடுப்பை, கலுங்கை தோனி மூலம், குருந்தொட்டி மூலம், விலாமிச்சுவேர், இருவேலி மூலம், மறுநீராடி இவை வகைக்கு 1 பலம் எடுத்து 12 படி நீரி

விட்டு 2படியாக வற்றக் காய்ச்சி அத்துடன், நல்லெண்ணெய் 1 நாழி, அதிமதுரம், கோட்டம், தக்கோலம், அமுக்கிராவேர், சடா மாஞ்சில், மஞ்சிட்டி, சுக்கு, விலாமிச்சம், இருவேலி, சந்தனம், குங்குமப்பூ, ஏலம், தானி, அரேணுகம், வெட்பாலை, திரிபலை, சிறுநாகப்பூ, சண்பகப்பூ. தேவதாரம் இவை வகைக்கு 1 கழஞ்சு எடுத்துச் செவ்வாழை நீர் விட்டரைத்துக்கூட்டிப் பசுவின் பால் 2 படி சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண், நோய்கள் தீரும் (1448—1450)

## 56. தைலம் 3

ஆதொண்டைச்சாறு, அறுகஞ்சாறு, நல்லெண்ணெய், பொன்னாங்காணிச்சாறு, கையான்சாறு, பசுவின் பால் வெள்ளாட்டு நீர், இவை வகைக்கு 1 படி எடுத்துச் சேர்த்து அத்துடன், அகிற்பட்டை, மிளகு இவை வகைக்கு 1 பலம். வால்மிளகு, கிராம்பு, ஏலம், கத்தூரி மஞ்சள், நெல்லிவற்றல், வேப்பமுத்து, கடுக்காய் இவை வகைக்கு 4 வராகன் எடுத்து அரைத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1451—1453)

## 57. தைலம் 4

நல்லெண்ணெய், இளநீர், தாழை விழுது இவை வகைக்கு 1 நாழி. இத்துடன், ஏலம், இலவங்கம், தான்றிக்காய், நெல்லி, அதிமதுரம், சாதிக்காய், கோட்டம், கடுகுரோகணி, கத்தூரி மஞ்சள், கடுக்காய், சதகுப்பை, சந்தனம், சண்பகப்பூ, திரிகடுகு இவை வகைக்கு 1பலம், குருந்தொட்டிவேர், வெட்டிவேர், விலாமிச்சவேர், மிளகு இவை வகைக்கு ½ பலம். எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1454—1457)

## 58. தைலம் 5

கையாந்தகரை, குமிழ் மீட்டான், நொச்சி, பொடுதலை, சிற்றாமுட்டி, வள்ளி, விலாமிச்சம், இருவேலி, முத்தம், நன்னாரி இவை வகைக்கு 1 பலம், எடுத்து, நல்லெண்ணெய் 4 நாழி விட்டுச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1458)

## 59. தைலம் 6

பொன்னாங்காணிச்சாறு, ஆமணக் கெண்ணெய், சிறுகீரைச் சாறு, நெல்லிக்காய்ச்சாறு, இளநீர், பசுவின்பால் இவை வகைக்கு

1படி, முலைப்பால் ¼ படி, இவற்றுடன், விலாமிச்சவேர், நெல்லி முள்ளி, சண்பகப்பூ, வெட்டிவேர், நீர்பூலாவேர், புளிப்புப் பிரண்டைக் கிழங்கு, கொத்தமல்லி விதை, கற்பூரம், கிராம்பு, ஏலம், கோட்டம், இலவங்கப் பட்டை, இலவங்கப் பத்திரி, செவ் வல்லிப்பூ, சிறுதேக்கு இவை வகைக்கு 2 வராகன் எடை, சந்தனம் 1 பலம் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1460)

## 60. தைலம் 7

பொன்னாங்காணிச்சாறு, சிறுகீரைச்சாறு, கோரைக் கிழங்குச் சாறு, சீந்திற் கொடிச்சாறு, எலுமிச்சம் பழச்சாறு, சண்பகப் பூச் சாறு இவற்றை ஓரளவாய் எடுத்து அதில், இலவங்கப்பட்டை, அதிமதுரம், ஏலம், செங்கழுநீர், கோட்டம் இவற்றை ஓரவளாய்ச் சேர்த்தரைத்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1461)

## 61. தைலம் 8

சிவதைச்சாறு, குறுந்தொட்டிச்சாறு இவை வகைக்கு 1 படி, நல்லெண்ணெய், பசுவின் பால் 2 படி, இவற்றுடன் தேவதாரம் 3 பலம், குறுந்தொட்டிவேர், சந்தனம் இவை வகைக்கு 2 பலம் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும் (1462)

## 62. தைலம் 9

கற்றாழைச்சாறு, கரிப்பான்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, பசுவின் பால் இவை வகைக்கு 1 படி, நல்லெண்ணெய் 2 படி, அத்துடன் நன்னாரிவேர், விலாமிச்சவேர், அதிமதுரம், சந்தனம் இவை வகைக்கு 2 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி முழுகவும். கண்நோய்கள் தீரும். (1463)

## 63. தைலம் 10

நல்லெண்ணெய் 2 படி, ஆமணக்கெண்ணெய், வேப்பெண் ணெய், பசுவின் நெய், புங்கெண்ணெய் இவை வகைக்கு ½ படி, நொச்சியிலைச்சாறு. தழுதாழைச். சாறு, முடக்கொற்றான்சாறு இவை வகைக்கு 1படி, இவற்றுடன், செங்கழுநீர், கோட்டம். அதிமதுரம், கடுகுரோகணி இவை வகைக்கு 5 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறையாகக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1464)

## 64. தைலம் 11

நல்லெண்ணெய் 1 நாழி, எலுமிச்சம் பழச்சாறு, தேங்காய்ப் பால் இவை வகைக்கு 2 நாழி, சிற்றரத்தை, அதிமதுரம், நற்சீரகம் சதகுப்பை, கோட்டம், சண்பகப் பூ, ஏலம் இவை வகைக்கு 1 கழஞ்சு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண்நோய்கள் தீரும். (1465)

## 65. தைலம் 12

நல்லெண்ணெய், கையாந்தகரைச்சாறு இவை வகைக்கு ¼ படி மஞ்சட்பொடிச் சேர்த்து சூரிய புடம் வைத்தெடுத்து முறைப்படிக் காய்ச்சி முழுகவும். கண் நோய்கள் தீரும். (1466)

## 66. தைலம் 13

கருநொச்சிச்சாறு, பசுவின் பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 1 குறுணி, இவற்றுடன், நன்னாரிவேர், வாய்விளங்கம், சிறுநாகப்பூ, வசம்பு, கருஞ்சீரகம், இலவங்கப்பத்திரி, திப்பிலி, தானிக்காய், நற்சீரகம், மரமஞ்சள், அமுக்கிராக்கிழங்கு, இலவங்கப்பட்டை, சாதிக்காய், அரிசித்திப்பிலி, கடுக்காய், கத்தூரி மஞ்சள், கோட்டம், சுக்கு, கிராம்பு, சதகுப்பை. தாளிச பத்திரி, மஞ்சிட்டி, நெல்லி வற்றல் இவை வகைக்கு 3 காசு எடை, சேர்த்தரைத்து முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1467)

## 67. தைலம் 14

கற்றாழைச்சாறு, தாழை விழுதுச்சாறு, சிறுகீரைச்சாறு, சிறுபிணைச்சாறு, கற்பூரவல்லிச்சாறு, பினிசாங் கொடிச்சாறு, பொன்னாங்காணிச்சாறு இவை வகைக்கு 1 நாழி, பசுவின்பால் காடி, இளநீர் இவை வகைக்கு 4 நாழி, நல்லெண்ணெய் 3 நாழி, இவற்றுடன், செங்கழு நீர், கோட்டம், நற்சீரகம், கொத்தமல்லி, சண்பகமொட்டு, கல்நார் இவை வகைக்கு 1 கழஞ்சு கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் தீரும். (1468)

## 68. தைலம் 15

கருவேலம்பட்டை 20 பலம், சீந்தில், சிற்றாமுட்டி, சிறுகீரை, பொன்னாங்காணி, சீதேவி செங்கழுநீர்க்கிழங்கு, தாமரைக் கிழங்கு, நன்னாரி, விலாமிச்சு, சந்தனம் இவை வகைக்கு 4 படி,

இளநீர் 2 படி, அதிமதுரம், கோட்டம், சதகுப்பை, இலவங்கப் பட்டை, சந்தனம், பச்சைக் கற்பூரம், சாதிக்காய், செவ்வள்ளிக் கொடி, ஏலம், பச்சை திப்பிலி மூலம், மல்லி, அகில், வாலுழுவை, செஞ்சந்தனம், முத்தக்காசு, சடாமாஞ்சில், கோரோசனை இவை வகைக்கு 2 கழஞ்சு கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும் கண் நோய்கள் தீரும். (1469)

## 69. தைலம் 16

சந்தனத்தூள் 6 பலம், விலாமிச்சவேர், வெட்டிவேர், முத்தக் காசு, அதிமதுரம், ஏலம், இலவங்கம், இந்துப்பு, கார்போகரிசி இவை வகைக்கு 1 பலம், நல்லெண்ணெய் 3 படி, பசுவின் பால் 6 படி, கச்சோலம், வெட்டிவேர், விலாமிச்சவேர், அதிமதுரம், ஏலம், இலவங்கம், சிறுநாகப்பூ, நன்னாரி, குங்குமப்பூ, மரமஞ்சள் செங்கழுநீர்க்கிழங்கு, சண்பகப்பூ, அகில், சந்தனம், செவ்வள்ளிக் கொடி, கோட்டம் இவை வகைக்கு 3 கழஞ்சு, புனுகு, குங்குமப் பூ, பச்சைக் கற்பூரம் இவை வகைக்கு 1 வராகன் எடை கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும்.

## 70. தைலம் 17

கற்றாழைச்சோறு 2 படி, இளநீர் 1படி, நல்லெண்ணெய் 3 படி, பசுவின் பால் 6 படி. இவற்றைச் சூரிய புடம் வைத்து அத்துடன், செங்கழுநீர்க் கிழங்கு, ஏலம், இலவங்கம், பச்சை சந்தனம்,விலாமிச்சு வேர்,வெட்டிவேர்,இலுப்பைப்பூ, வெள்ளைக் குங்கிலியம், சிறுநாகப் பூ, மாஞ்சில், அதிமதுரம், அரேணுகம், மரமஞ்சள், தகரம், புன்னைத்தாது, தாமரை வளையம், ஞாழல் தாது, கொட்டிக் கிழங்கு, நன்னாரி, முத்தக் காசு இவை வகைக்கு 3 கழஞ்சு கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். (1471)

## 71. தைலம் 18

பேவாழை, வெள்ளறுகு, பிரமி, பொன்முசுட்டை, பாதிரி, நாய்வேளை, தகரை, நெல்லி முள்ளி இவை வகைக்கு 1 பலம் சேர்த்துக் காய்ச்சி வடித்து, நீர் 1 படி, பசுவின் நெய் 1படி, அத்துடன், முசுமுசுக்கை, சிறுதேக்கு, மலைதாங்கிவேர், மரமஞ்சள் தான்றிக்காய், அதிமதுரம், பூமிச்சர்க்கரைக்கிழங்கு இவை வகைக்கு 3 வராகன் எடை கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண் நோய்கள் தீரும். (1472)

## 72. தைலம் 19

கரந்தொட்டி, வெற்றிலை, மரமஞ்சள், கஞ்சா இவற்றின் சாறு வகைக்கு ¼படி, பசுவின் பால், நல்லெண்ணெய் இவை வகைக்கு 2படி, மிளகு, கருஞ்சீரகம், கோட்டம் இவை வகைக்கு 1 கழஞ்சு கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும். (1473)

### அகத்தியர் குளிர்ச்சிஎண்ணெய்

பூரணமா யறுமுகவன் பாதம் போற்றிப்
புலத்தியனே தைலமதைப் புகலு கிறேன்கேள்
காரணமாய்க் காரெள்ளு யெண்ணெய் வாங்கு
கற்றாழைச் சாறுபடி யொன்று கேளு
வாரணமா யிளநீரு படிதா னாகும்
வகையுடனே நெய்ச்சிட்டி படிசா றாகுந்
தாரணியி லாவாரை படிசா றாகுந்
ததியுடனே காணிச்சாறு படியும் வாங்கே 1326

வாங்கியே ஆவின்பால் படியு மாகும்
வாங்குவாய் சாம்பிராணி பலமி ரண்டாம்
பாங்கமாய்ப் பச்சிலிகிச் சிலிக்கி ழங்கு
பண்புடனே மிளகுபலம் பண்பாய்ச் சேரு
சேர்க்கவே கலுவத் திட்டு மைந்தா
தன்மையாம் மைபோ லாட்டு வாய்நீ
சாங்கமாய்க் கண்டதொரு பாலுஞ் சாறுந்
தப்பாமல் யெண்ணெய்யுடன் குழப்பிக் கொள்ளே

கொள்ளவே பாண்டத்தில் விட்டு மையை
குணமுடனே அடுப்பேற்றித் தீயை மூட்டு
கள்ளமில்லா மெழுகுபத மாகுங் கண்டாய்
கசடறவே மறுபாண்ட மிறுத்துக் கொள்ளு
விள்ளவே யெட்டுநா ளிரண்டு வட்டம்
விருப்பமாய்த் தைலமது முழுகு வாய்நீ
துள்ளவே பன்னிரண்டுத் தலைமுழுகி வந்தாற்
தொலையுமென்ற வியாதிகளைச் செப்பு வேனே

வேனென்ற பத்தியமும் விரும்ப வேண்டாம்
வெகுசுருக்கா யேகுமடா மேக மெல்லாம்
மானென்ற மயக்கமொடு பித்தம் போகும்
மாறுமே தலைக்குத்தல் கண்ணெ ரிச்சல்
கோனென்ற ரணங்களொடு சொரியும் போகும்
கூறுகெட்ட படர்மேகங் குதித்தே யேகும்
ஏனென்ற கரப்பன்முத லெரிவு காந்தல்
இருக்காது வியாதியெல்லா மேகுந் தானே 1329

ஏகமாய்த் தைலமதை முழுகு வோர்க்கு
எவ்வர்ண மென்னமேனி பொன்வர்ண மாகும்
போகமே அதிகமடா பலமுண் டாகும்
புண்ணியனே நேத்திரத்தின் குத்தல் போகும்
சோகமாஞ் செவிநோயுஞ் சிதறிப் போகுஞ்
சிறப்பாக வசீகரமுஞ் செயலு முண்டாம்
தாகமாய்ப் பண்டிதற்குத் தயவு கூர்ந்துத்
தரமாயு ரைத்திட்டேன் தானு முற்றே. 1330

அகத்தியர் சித்தாதி எண்ணெய்

சீர்சிறந்த உடல்தனிலே கவுசை ரோகஞ்
சிரசுகளிற் குடியிருந்த மைற்ற ரோகம்
பார்தனிலே விழுந்தெழுந்த சூலை ரோகம்
பம்பரம்போ லாடுகின்ற நிராம்பற் கட்டி
நீரிழிந்த கற்கூடு நிர்மலத்தின் கட்டு
நேரான சொரியோடு ரணங்கள் தானும்
பேர்பெரும் பாடுநா வடையும்
பின்னுமொரு கிரந்தியொடு மேகந் தானே 1331

தானென்ற தலையிடிகள் வாயிற் புண்ணுந்
தளும்புகின்ற கண்ணெரிவும் ஊது வாய்வும்
ஊரென்று உயிரிழந்து குடிபோ கத்தான்
உத்தமான யெண்ணெயொன்று உரைக்கக் கேளு
வேரென்ற காயமொடு உள்ளு வாளம்
விரும்பியே வெண்காரம்காட் டெருமைப் பாலுங்
காரென்ற கடுக்காயு மிந்துப் பாகுங்
கருத்ததொரு சீரகமுந் திப்பிலியுஞ் சேரே 1332

சேரேநீ தினுசுக்கு ஒருக ழஞ்சு
சேகரமாம் வாளமொடு பலமொன் றாகும்
காரேநீ உள்ளிச்சேர் கணக்காய் வாங்கு
கடுக்காயு மப்படியே வாங்கு வாங்கு
சீரேநீ சித்தண்ட யெண்ணெய்சே ராகுஞ்
சிறப்பாகத் தேங்காய்ப்பால் சேரெட் டாகும்
வாரேநீ வேலிப்ப ருத்திச் சாறு
வகையுடனே சேரெட்டு வாங்கு வாங்கு. 1333

வாங்குவாய் கண்டதொரு சரக்கை யெல்லாம்
வகைவகைக்கு ஒருகழஞ்சி மைந்தா கேளு
பாங்குடனே கலுவமிட்டு மைபோ லாட்டிப்
பாலகனே பாண்டத்திற் பால்சார் எண்ணெய்
தேங்கியே சக்கையெல்லாங் குழப்பிக் கொள்ளு
தயங்காமல் வேகமுள்ள விரகால் நீயும்
சாங்கமாய் தீமூட்டு சட்ட மாகச்
சம்பிரமுடன் வெந்திறக்கச் சரிசொல் வேனே 1334

சொல்லுவேன் யெண்ணெய்தனைத் தொட்டுப் பார்த்
தாற்
சுந்தரனே சுத்தசலம் போலி ருக்கும்
மல்லுவேன் மறுபாண்ட மிறுத்துக் கொள்ளும்
மைந்தனே உண்பதற் கொருகழஞ் சென்ணெய்
அல்லவே தொட்டிட்டாற் பசாசு போகும்
அப்பனே அழலையென்ற தாகம் போமே 1335

போமேதான் விக்கலிசத்தி குன்மம் போகும்
புத்தியுள்ள புலத்தியனே கவுசை போகும்
போகுமேதான் கிரந்தியரை யாப்புப் போகும்
பொல்லாத பெரும்பாடு பயித்தியம் போகும்
போமேதான் சூலையொடு பரங்கிப் புண்ணும்
பொல்லாத உட்கவுசை விக்கல் தானும்
போமேதான் நாவடையும் சூலை போகும்
கும்பிவலி யுந்தான் பறந்து போமே. 1336

தானுமே காதடைப்பு வயிற்றில் ரோகம்
தலைகாது கண்ணெரிவு பூச்சி வெட்டு
வானுமே மயங்குமடா குன்ம மெட்டும்
வகைகெட்டுச் சூதகத்தின் வெட்டை போகும்

பாருமே யின்னூகிச் சித்தா கூட்டிப்
பக்ஷமுடன் மகிழவே பேரிட் டாரே 1337

பேரிட்ட சித்தாதி யெண்ணெய் தன்னைப்
புலத்தியனே பூசைசெய்து பூரணமாய் வாங்கு
நேரிட்ட சிறியோர்க்கு மாகும்
நிகமையாய்ப் பத்தியங்கள் நீகூட் டாதே
வாரிட்ட யின்னூலை வெளிவி டாதே
வாங்காதே தோடத்தை வாங்கி டாதே
காரிட்ட பண்டிதங்கள் கருத்தாய்ப் பார்த்துக்
கண்டுகொள்ளு யீரெட்டு கடைகூடி முற்றே. 1338

## அசனா வமிருத வில்வாதித் தைலம்

வேங்கை வேர், நாகமுட்டி, சீந்திற்கொடி, வில்வவேர் இவை வகைக்கு 100 பலம் எடுத்து நறுக்கி, 16படி தண்ணீர் விட்டு, நாலி லொன்றாய்க் காய்ச்சி வடிகட்டி, இத்துடன், எள்ளெண்ணெய் 1 படி, பசுவின்பால் 1 படி விட்டு, இத்துடன், அமுக்குரா, தான்றிக் காய், சந்தனத்தூள், கறிமஞ்சள், இலவங்கப் பத்திரி, சண்பக மொட்டு, நன்னாரிவேர், வால்மிளகு, விலாமிச்சவேர், கடுக்காய், **அகில்**, பூலாங்கிழங்கு, மரமஞ்சள், ஏலம், அதிமதுரம், வெட்டி, வேர், தேவதாரு, தாமரைக்கிழங்கு, நெல்லிக்காய், திராட்சை கிராம்பு, சடாமாஞ்சில், தற்கோலம், சிற்றரத்தை, தாளிசபத்திரி, கத்தூரி மஞ்சள், குங்குமப்பூ. இவை வகைக்கு 1 வராகன் எடை கலந்து அரைத்து எண்ணெய்யிற் குழப்பிப் பக்குவமாயெரித்து இறக்கி. வடிகட்டி, அத்துடன் பச்சைக் கற்பூரம் 1 வராகன் எடை போடவும், ஒரு வாயகன்ற சட்டியில் எண்ணெய்யை விட்டு மேலே ஒரு வலைத் துணியைக் கட்டி, அதன்மீது தாழை மடலைப் பிரித்துக் கத்தரித்து வைத்து, மேலே மற்றொரு சட்டியினால் மூடவும், இப்படிக் காற்றில்லாத அறைக்குள் 3 நாட்கள் வைத் திருந்து பிறகு முழுகவும்,

கண் நோய்கள், தலைவலி, காதுவலி, போன்ற பலவும் தீரும்.

## அமிருத ஆமலகத் தைலம்

சீந்தில் கொடியின் சாறு, முசுமுசுக்கைச் சாறு, நெல்லிக்காய்ச் சாறு, கையாந்தகரைச்சாறு, சோற்றுக் கற்றாழைச்சாறு, பசுவின் பால் இவை வகைக்கு 1படி ஒன்றாகக் கூட்டி இவற்றுடன் நல்லெண்ணெய் 2படி சேர்த்து, 3 நாட்கள் அடுப்பிலேற்றி மெது

வாகக் காய்ச்சி, இத்துடன், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சாதிபத்திரி, வெட்டிவேர், செங்கோட்டம், ஏலம், சாதிக்காய், திராட்சை, தான்றிப் பருப்பு, விலாமிச்சுவேர், சந்தனம், செஞ் சந்தனம், அதிமதுரம் இவை வகைக்கு 1 வராகன் எடை வீதம் எடுத்துப் பால் விட்டு நன்றாயரைத்துக் கலக்கவும், காய்ச்சி வடித்து முழுகவும். பலவித கண்நோய்களும், தலைச் சுற்றலும் தீரும். 1340

## அமிருத இலவங்கத் தைலம்

நெல்லிக்காய்ச்சாறு சாறு 6 படி, இளநீர் 3படி, பசுவின் பால் 3 படி, நவ்லெண்ணெய் 3 படி, இவற்றைக் கலந்து இத்துடன், வில்வம் 10 பலம், விலாமிச்சம் வேர் 10 பலம், இவ்விரண்டையும் இடித்து 8 படி தண்ணீர் விட்டு 1 படியாகச் சுண்டக் காய்ச்சி முன் சொன்ன சாறு கூட்டிய எண்ணெய்யுடன் விட்டு, இத்துடன், செங் கழுநீர்க் கிழங்கு, கொத்தமல்லி, குராசானி ஓமம், கத்தூரி மஞ்சள், கடுகுரோகிணி, சிற்றரத்தை, கோட்டம், அதிமதுரம், சுக்கு, பேய்ப்புடல், வெட்டிவேர், தேவதாரம், திப்பிலி, சிறுநாகப் பூ, கிராம்பு, சந்தனத்தூள், சடாமாஞ்சில், சமுத்திராப்பழம் இவை வகைக்கு 1½ வராகன் எடை, மிளகு ¼ படி இவைகளை முன் கூறிய கசாயம் விட்டரைத்து எண்ணெய்யுடன் குழப்பி, அடுப்பில் பதமாகக் காய்ச்சிப் பயன் படுத்தவும். தொண்ணூற்றாறு கண் நோய்களும் தீரும்.

## அமிருதகலை எண்ணெய்

சிற்றாமணக் கெண்ணெய் 1 உழக்கு, பசுநெய் 1 உழக்கு எள் ளெண்ணெய் 1 நாழி, ஆவின்பால் 2 நாழி, செங்கழுநீர், நெல்லிக் காய், தானிக்காய், வெட்டிவேர், கோட்டம், கோரைக் கிழங்கு கொத்தமல்லி, விலாமிச்சம் வேர், செங்கழுநீர்வேர், அதிமதுரம் சிற்றாமுட்டி, சண்பகப்பூ பொன்னாங்காணிவேர் இவை வகைக்கு 1¼ பலம் எடுத்துப் பசுவின் பால்விட்டு நன்றாக அரைத்து எண்ணெய்யுடன் குழப்பி, காய்ச்சி, இத்துடன் புனுகு சட்டம், சந்தனத்தூள், வகைக்கு 1 வராகன் எடை எடுத்துக் கொதிக்கும் போது தைலத்தில் போட்டு இறக்கவும். இதைத் தினமும் முழுகி வரத் தொண்ணூற்றாறு வகைக் கண் நோய்களும் தீரும். 1342

## ஆமலகத் தைலம்

நெல்லிக்காய்ச்சாறு 2 படி, பசும்பால் 4 படி, எள்ளெண்ணெய் 1படி, அதிமதுரம் 1 பலம் ஆவின் பால் விட்டு அரைத்துச் சாறு கலந்த எண்ணெய்யில் குழப்பிக் காய்ச்சி வடித்து முழுகவும்,

வெப்பத்தாலுண்டாகும் கண் நோய்கள், பல்வலி கால் வெடிப்பு இவை தீரும். 1343

## இளநீர்த் தைலம்

பால், எண்ணெய், அதிமதுரம், சந்தனம், குங்குமம்' நன்னாரி, அகில், கோட்டம், இலவங்கம், பச்சிலை, ஏலம், இரு வேலி. செங்கழுநீர்க் கிழங்கு, தாமரை வளையம், தகரம், மாஞ்சில், சதமூலிகை, சண்பகமுகிழ், விலாமிச்சம்வேர் புனுகு சட்டம், கச்சோலம், கற்பூரம், சிற்றேலம், சாதிக்காய், தேவ தாரம், கடுகுரோகணி, குளுத்திக் கிழங்கு இவை பிறத்தேகம் அரைத்துக் கரைத்து வடித்துத் தலையிலிடப் பித்த கோபமெல் லாம் போம். கண்வேதனை போம். 1344

## கற்பூராதித் தைலம்

நல்லெண்ணெய் ஆவின் பாலும் நலந்தரு மிளநீர் நாழி
வல்லதோர் தாழைக் கற்றாழை வகுத்ததோர் முசுமு சுக்கை
சொல்லும்படி கற்பூர வல்லி தொகுத்த யெலுமிச்சங் காயளவு
வெல்லுபடி யெண்ணெய் பாலும் விரையநா நாழிஉரி யாமே. 1345

சந்தனம் எலுமிச் சம்வேர் தாரவான வெட்டி ஏலம்
எந்தவே குங்குமங் கிராம்பு ஏற்ற சீரகம் கொத்தமல்லி
சிந்திய மரமஞ்சள் தானும் கிளியூரல் கற்கடக மாமே. 1346

கடகம் சண்பகம் நாகப்பூ கத்தூரி மஞ்ச ளோடு
குடுகொள் விந்தம் சிறுதேக்கு குருவிய பச்சிலை வாலுழுவை
வெடும் பாலை பூலாமூலம் வேருங் கூறுமெந் திருபத்தைந்தும்
உடனரைத்து வெண்ணெய் கலந்து உடனே மெழுகு பதமிறக்கே

முன்னே மூக்கு நீர்ப்பாய்ச்சல்
மூக்கு சிறுதல் சலம்விழுதல்
உன்னி நாசி தான்கனப்பு
உறவே மண்டை யுடன்குத்து
சென்னி தன்னி லோர்பாகம்
சிதைக்கும் மண்டை பலக்கடியும்

அன்னி கபாலந் தன்னில்நோய்
அஞ்சன நாற்றி நாற்பத்தெட்டும்
இன்னி நயனந்தொண் ணூற்றாறும்
இப்படி முழுகத் தீர்ந்திடுமே. 1348

## கற்றாழைத் தைலம்

வரிக்கற்றாழைச்சாறு, எண்ணெய், பால் 2, மஞ்சிட்டி, நீலாஞ்சனம், நன்னாரி, மூத்தக்காசு, கடுகுரோகணி, தக்கோலம், புட்டில், தாளிசபத்திரம். சாதிக்காய், கற்பூரம், கடுக்காய். நெல்லி, தான்றி, மாஞ்சில், அதிமதுரம், ஏலம், இலவங்கம், பச்சிலை, நாகப்பூ. விலாம்பிச்சம், அகில், அடவி கச்சோலம், சிற்றேலம், புனுகுசட்டம், சந்தனம், செங்கழுநீர்க் கிழங்கு, தாமரை வளையம், கோட்டம் இவை வெவ்வேறே, ¼ பலம் அரைத்துக் கரைத்து, வடித்து, தலையிலிட கண்ணோவு தீரும். 1349

## கீழ்க்காய் நெல்லித் தைலம்

கீழ்க்காய் நெல்லித் தூள் 1 வீசை, பசுவின் பால் 1 படி, நல்லெண்ணெய் 1 படி, சீரகம் 1 பலம், கீழ்க்காய் நெல்லித்தூளை 8 படி நீரிலிட்டு 1 படியாகக் காய்ச்சி வடித்துத் தலை முழுகவும். கண் எரிச்சல், தலை சுற்றல் போன்ற நோய்கள் தீரும்.

## குமரித் தைலம்

குமரிநீர் ஓர்குறுணிக் கூரெள்ளி னெண்ணெய்
தமது குறுணி தகாரம் - அமரசந்து
கொத்தமல்லி மாஞ்சிமுத்தங் கொள்வெட்டி வேரேலம்
நத்துந் திரிபலைநன் னாரி. 1351

நாரியல்லால் சாதிக்காய் நல்லவங்க மவ்விலையும்
தாரினது நெய்தல் தன்கிழங்கும் - மூரிபெருங்
கோரையின் கிழங்கு பேசு மதுரம்
பூரம்வாழுந் தக்கோலம் புட்டில். 1352

புட்டிலல்லால் மஞ்சிட்டி போர்ந்தவகைக் கோர்கழஞ்சி
மட்டுமிது வெல்லா மகிழ்ந்தெடுத்தே - தொட்டிறுக்கு
எண்ணெய்க் குமரித் தைலமிது சிரசுநோய்க்
கண்ணிலங்கும் நோய்களுமே காண். 1353

## குமரித் தைலம்

குமரிச்சாறு 4படி, எள்ளெண்ணெய் 1படி, பசுவின் பால் 1படி. இவற்றுடன், நன்னாரி, கிராம்பு, கத்தூரி மஞ்சள், அகில், சாதி பத்திரி, கையாந்தகரை, செவ்வல்லிக்கொடி, கடுக்காய்ப்பூ, வெட்பாலை, நிலோற் பலக்கிழங்கு, சிற்றரத்தை, பூலாங்கிழங்கு, சாதிக்காய், சடாமாஞ்சில், செங்கழுநீர்க் கிழங்கு, வெட்டிவேர், சந்தனம், வெள்ளிலோத்திரம், தாமரை இலைச் சுருள், கோரைக் கிழங்கு, அதிமதுரம், கடுகுரோகிணி, தக்கோலம், மரமஞ்சள். இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்து, பொடி செய்து, எண்ணெய்யிற் குழப்பிக் காய்ச்சவும், கத்தூரி, பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ இவை வகைக்கு 1 வராகன் எடை இடித்துச் சேர்க்கவும். இதை முழுகவும், நசியமாக உபயோகிக்கவும் திமிரம் முதலான பல நோயும் தீரும். 1354

### (வேறு)

குமரிச்சாறு 1 குறுணி, கரிசாலைச்சாறு, தண்ணீர் விட்டான் கிழங்குச்சாறு, சீந்திற் கொடிச்சாறு, தாமரை வளையம் சாறு-வகைக்கு 4 படி, இவற்றுடன், அதிமதுரம், அகில், சாதிக்காய், சண்பகப்பூ, விலாமிச்சம் வேர், கிராம்பு, கோட்டம், இலவங்கப் பத்திரி, சந்தனத்தூள், தேவதாரு, ஏலக்காய், திப்பிலி, சடா மாஞ்சில், வெட்டிவேர், புனுகு சட்டம் இவை வகைக்கு 2 கழஞ்சு விதம் எடுத்துப் பசுவின்பால் விட்டு மைபோல அரைத்து, எள்ளெண்ணெய் 1படி விட்டுச் சேர்த்துக் காய்ச்சி வடிக்கவும், இதை முழுகி வரக் கண் கூச்சம், அழற்சி, எரிச்சல், தலைவலி, பித்தம் இவை தீரும். 1355

### (வேறு)

சோற்றுக் கற்றாழை மடல் 50 எடுத்துக் கடுக்காய்த் தூள் சேர்த்துச் சிறு துண்டுகளாக்கி, இடித்து வைக்க வரும் சாறு 4 படி, சீந்திற்கொடி, கோவை, முசுமுசுக்கை, விலாமிச்சவேர், கையாந்த கரை, வெட்டிவேர் இவைகளைச் சேர்த்திடித்து, இத்துடன் இள நீர் 2 படி விட்டு ஊறவைத்து மறுநாள் பிசைந்து இறுத்த நீர் 2 படியுடன் பசுவின்பால் 4 படி, எள்ளெண்ணெய் 2 படி, பச்சிலை 3 பலம், சந்தனச்சிராய் 3 பலம், நன்னாரி, கோரைக்கிழங்கு, தக்கோலம், அகில், நெல்லிக்காய், கிராம்பு, கோட்டம், செங்கழு நீர்க்கிழங்கு, சாதிக்காய், கடுகுரோகணி, கச்சோலம், தான்றிக் காய், விலாமிச்சவேர், வெட்டிவேர், கண்டில் வெண்ணெய், கடுக்

காய், ஏலம், அதிமதுரம், தாமரை வளையம் இவை வகைக்கு 1 கழஞ்சு எடுத்து இளநீர் விட்டரைத்துச் சேர்த்து, நான்கு நாட்கள் மந்தாக்கினியால் எரித்து 5வது நாள் பதத்தில் வடித்து, அத்துடன் பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ வகைக்கு 1 வராகன் எடை கலந்து, 8 நாட்கள் தானியப் புடம்வைத்தெடுக்கவும்.

மண்டைக்குத்து, தலைநோய், கண்நோய், போன்றவை தீரும்.

(வேறு)

குமரிச்சாறு 1 படி, பசுவின்பால் 1படி, எள்ளெண்ணெய் 1படி, இவற்றுடன், செவ்வல்லிக்கொடி, ஏலக்காய், சிறுநாகப்பூ, சாதிக்காய், மரமஞ்சள், நீலாஞ்சனம், நெல்லிக்காய், அதிமதுரம், வெட்டிவேர், நன்னாரிவேர், அகில். சந்தனச்சிராய், கிராம்பு, கத்தூரி மஞ்சள், கோட்டம், தான்றிக்காய், தக்கோலம், தாமரை வளையம், கடுகுரோகணி, விலாமிச்சம்வேர், தகரம், செங்கழுநீர்க் கிழங்கு, சடாமாஞ்சில், கடுக்காய், கோரைக்கிழங்கு, பூலாங் கிழங்கு இவை வகைக்கு 1 வராகன் எடை சேர்த்து, குழப்பிக் காய்ச்சி வடித்து தலை முழுகிவர தலைவலி, கண்ணோய் குண மாகும். 1357

## கையாந்தகரை எண்ணெய்

கையாந்தகரைச் சாறு 4 படி, எள்ளெண்ணெய் 5 உழக்கு, அதிமதுரம், ஏலக்காய், சந்தனத்தூள், கிராம்பு, நன்னாரிவேர், சாத்திரவேதி இவை வகைக்கு 2 கழஞ்சு வீதம் எடுத்தரைத்து, எண்ணெய்யுடன் குழப்பிக் காய்ச்சி, தலைமுழுகவும், காசம், காது. நோய்கள் குணமாகும். பார்வை தெளிவாகும்.

(வேறு)

கையாந் தகரை நெல்லிக்காய் கரிய சாறு நானாழி
மையார் எண்ணெய் ஐயுழக்கு மருவும் பாலு மதன்படியே
செய்யா மதுரம் பலமிரண்டு சேரத் திரவிய மதிற்பாதி
பைய வரைத்து அடுப்பில்வைத்துப் பதமா யெரித்துத் தலைமுழுக
ஐயா வந்த கண்காசம் அடுத்த செவிநோ யகன்றிடுமே. 1359

(வேறு)

கையான்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, எள்நெய் இவை வகைக்கு 2 படி, பசும்பால் 4 படி, இத்துடன், சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர், அதிமதுரம், நாகமல்லிவேர், திராட்சை, சதகுப்பை, கோட்டம், சந்தனக்கட்டை, மஞ்சள், பூலாங்கிழங்கு, விலாமிச்சம் வேர், கொத்துமல்லி விதை, முசுமுசுக்கைவேர், சிற்றரத்தை, இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி இவற்றைச் சமனெடையாய் எடுத்துப் பால் விட்டரைத்துச் சேர்த்துக் கரைத்து அடுப்பேற்றி எரித்து மெழுகு பதத்தில் வடித்து வைத்துக் கொள்ளவும். இதை நான்கு நாட்களுக்கு ஒருமுறை தலைமுழுகிவர கண் நோய்கள் குணமாகும்.

சந்தனாதி எண்ணெய்

மெல்லியளே நீகேளும் சந்த னாதி
விளங்குமெண் ணெய் விரித்துரைக்கில் சிற்றா முட்டி
நல்லசீந் திற்கிழங்கு பொன்னாங் காணி
நன்னாரி யிருவேலி விலாமிச் சோடு
வில்வம்வேர் வோரொன்று பலமே பத்து
வெவ்வேறே தரித்திடித்து மிடாவிற் போட்டு
வல்லதொரு சந்தனமும் பலமே பத்து
வார்க்கும்நீ ரிருதூணி வகையாய்க் காய்ச்சே 1361

காய்ச்சியே வடித்தபின்பு யெண்ணெய் நாழி
கருதியே யெழுகுறுணி பசும்பால் விட்டு
வாச்சதொரு முந்திரிகை சிறிய தேக்கு
வளர்கோட்டம் பேரீச்சு கண்டில் வெண்ணெய்
கூச்சமருங் கோரோசணையும் கூகை நீறும்
குலவியசாத் திரவேதி குங்கில பட்டமாம்
பேச்சூரி யதிமதுர மேலம் வங்கம்
பெருகுரும்பை தேவதாரம் நாகப் பூவே 1362

பூவையரே செல்லவெளி கிராம்பு குப்பை
புகழ்மாஞ்சில் புகழும் வெட்பாலை
தூவியதோர் மஞ்சிட்டி மரத்தில் மஞ்சள்
துய்யகண்ணாற் கற்கடம் தகரம் பச்சை
தாவியதோர் கச்சோலம் புனுகுச் சட்டம்
தக்கஅகில் சந்தனமும் தயவ தாக
மேவியேதிப் பிலிமூலம் சிறுமூலம்
மிக்கசெவ்வி சண்பகப்பூ கொத்த மல்லி 1363

கொந்தவிழுங் குழலாளே சேரொவ் வொன்று
குலாவியதோர் நற்கழஞ்சி கொண்டு நீதான்
விந்தைசரக் கத்தனையு மிடித்த ரைத்து
வேகமுடன் கசாயத்தில் விட்டு நீதான்
கந்தமகிழ் எள்ளெண்ணெய் தன்னைநற் பதத்தில்
கடுகவே காய்ச்சி யெடுத்த பின்பு
முந்தவே சிரசில்வைத்து உடம்பிற் பூசி
முன்கொள்ளப் போம்நடவின் முறைமை கேளும். 1364

நயனமதி லெழுவறட்சி பித்தம்
நல்லதொரு கண்ணெரிப்பு கண்ணீர்ப் பாய்ச்சல்
துயரமிகும் பிறமியம்போம் தாது உண்டாம்
துய்யயிரு விழிதெரியும் சூடும் சாறும்
மயமுட்டணங் கைகா லெரித்தல்
மாறாத காமாலை பாண்டு ரோகம்
செயமுடனே தீருமிது உண்மை சொன்னோம்
சிவனார்தன் திருவாணை செய்தி டாயே. 1365

## சிறு சந்தனாதித் தைலம்

ஒன்றான சந்தனமோ பலந்தா னூறு
உற்றவெட்டி விலாமிச்சை [1]வில்லைச் சங்கு
நன்றான நிலப்பனையு[2] மமுக்குராவும்
நன்னாரிச் சாரடை மிளகரணை வேருங்
கன்றான குருந்தொட்டி பேரா முட்டி
காஞ்சொரியுந் தூதுவளை காட்டு மல்லி
குன்றான தோற்றம்வே ரத்திப் பட்டை
குலநெல்லி யாயிலியப் பட்டை தானே 1366

பட்டையொடு ஆலவிழுது சித்திர மூலம்
பாலையாம் பட்டையொடு குமரி வேரும்
நட்டமி லிருவேலியொடு வட்டத் திருப்பி
[3]நற்றென்ன மாப்பாளை விடத்தொல் வீழி

பா. வே.

1. வில்வஞ்சங்கு,
2. முத்தக்காசு;
3. தென்னம்பூப் பாளையொடு

மட்டமரு முன்னைகருஞ் செம்பை முத்தம்
மரவள்ளி நீர்ப்பூலா முந்திரிகை வேரும்
இட்டமுடன் வகைக்குப் பலந்தா னைந்து
இடித்துவொரு தாழியிலே விட்டுக்·கேளே 1367

கேளப்பா விருதூணி சாலந்தான் விட்டுக்
கெடியான சந்தனமோ தாழி யிட்டு
வேளப்பா விருதூணி நீர்தான் விட்டு
வெவ்வேறே யடுப்பேற்றி யெட்டொன் றாக்கி
நாளப்பா கியாழமிரண்டு மொன்றாய்ச் சேரு
நலமான யெள்ளெண்ணெய்ப் படிதா னெட்டு
ஆளப்பா செவ்விளநீர்ப் படிதா னாலு
ஆவின்பாற் படிநாலு மதிலே வாரே 1368

வாரேநீ சாறுவகை சொல்லக் கேளு
வல்லாரை கரிசாலை பொன்னாங் காணி
சேரேநீ கற்பூர வல்லி யோடு
செருப்படையும் முசுமுசுக்கை மணித்தக் காளி
பாரேசீ தேவிச்செங் கழுநீர்ச் சாறும்
பருத்திக்காய் நீர்மீட்டா னல்லி கொட்டி
வேரேநீ நந்தியா வட்டத் தோடு
மிகுமல்லிச் சிறுகீரைச் சாறுங் கூட்டே 1369

கூட்டடா நீருமா துளையின் சாறுங்
குமரியொடு முடக்கொற்றான் பற்பா டகமும்
நீட்டடா தாழையிட விழுதுச் சாறும்
நெல்லிக்காய் தழுதாழைச் சாறு நொச்சி
ஆட்டடா வெள்ளறுகு பெருநெ ருஞ்சி
அமிர்தவல்லி சீந்தியொடு காணா வேளை
வாட்டடா அவுரிப்பழம் பாசி யோடு
மைந்தனே வகைக்குப்படி யரைதான் சாறே 1370

சாறோடு கியாழவகை யெல்லா மொன்றாய்ச்
சாதித்துத் தாளியொன்றிற் சாற்றக் கேளு
ஆறோடு திரிகடுகு திரிப லாதி
அழகான ஏலமொடு லவங்கங் கோட்டம்

வீரோடு தாளிசையு மோம மிரண்டு
விதமான மதுரமிரு சீரமல்லி
[1]கூறோடு சாதிக்காய் பத்திரி கிராம்பு
குலவும்வால் மிளகிந்து சடாமாஞ் சீயே 1371

மாஞ்சியொடு வாய்விளங் கஞ்சே வலையம்
வளமான சொம்போடு மஞ்சள் கூடத்
தாஞ்சமமாய்க் கூகைநீறு தானுங் கூட்டு
சாற்றுங்கத் தூரிமஞ்சள் தனையுஞ் சேரு
வாஞ்சைமிகு கிளியூறல் கருவாப் பட்டை
மாதினிய குளவிந்தம் வங்காளப் பச்சை
ஆஞ்சினமில் லத்தித்திப் பிலிவெட் பாலை
அடல்பெற்ற வாலுழுவை அரிசி யாமே 1372

அரிசியு நாகப்பூ கற்கட சிங்கி
அழகான வலம்புரி கோரோ சணைதான்
கரிசியுள காா்போகி வித்துங் கூட
கனமான வெட்பாலை யரிசிபெ ரும்விளா
அரிசி வகைக்குப் பலங்காலாய்ச்
சொன்னோமட லா கலங் காதேநீ
துரிசான ஆவின்பா லதனா லாட்டித்
தொடர்பாக யெண்ணெயிலே கரைத்து வாரே 1373

கரைத்துவார் சிற்றாக அடுப்பி லேற்றிக்
கனமாக மூன்றுநாள் சிறுகொ திப்பாய்
கரைத்தனிலே யோர்விறகாற் தீயை மூட்டு
சாலமுட நாலாநாள் கடுந்தீப் போடு
உரைத்தமருந் தடிப்பற்றிக் கருகா மல்தான்
உண்மையுடன் மெழுகுபதம் வருதல் பார்த்து
திரைத்தவுடன் முருங்கைப்பூச் சண்ப கப்பூ
சிறப்பிலுப்பைப் பூவுஞ்சம் பங்கிப் பூவே 1374

---

1. கூறான செவ்வியமுஞ் சோம்பு மஞ்சள்
கூகைநீர் மரமஞ்சள் கத்தூரி மஞ்சளாமே

பூவொடு பன்னீர் மாதளையு முல்லைப்
புங்கொடு கொங்கிலவு[1] மாற்புரண்டிப் பூவும்
பூவொடு வகைக்கு ஒருபிடிதான் சொன்னோம்
பொற்பான மருக்கொழுந்து பிடிதான் போடு
பூவொடு யிவையெல்லாம் போட்டுக் கிண்டு
பொங்காமல் மெழுகுபதம் வருதற் கண்டு
காவொடு கையிட்டுக் கிண்டிப் பாரு
கருகுருண்டு மெழுகாம் பின்னடுப்பை யாற்றே

ஆற்றலே வடிகலசந் தன்னிற் கேளு
அணிகுங் குமப்பூ ரோசனைகத் தூரி
தேற்றமிகுஞ் சாதிக்காய் புனுகுக் கோட்டம்
செங்கழுநீர்ப் பச்சைக்கற் பூர மெல்லாம்
போற்றியே வகைவகைக்கு நாற்க ழஞ்சு
[2]பொற்புடனே யடிகலசத் துள்ளே யிட்டு
ஆற்றியே தைலத்தை வடித்து வாங்கு
ஐங்கரனை யறுமுகனைப் பூசை பண்ணே 1376

பண்ணியே தானியநெற் புடந்தா னிட்டு
பாங்குடனே நாலுநாள் வட்ட மூழ்கு
நண்ணியே பசும்பயறு சீயக்கா யாகும்
நலமாகப் புளிபுகையும் பெண்ணுந் தள்ளு
கண்ணியே மச்சமா மிசமுந் தள்ளு
கனமான பால்நீரு மோரு மாகா
[3]திண்ணமாம் பலகார வர்க்க மாகா
தின்பண்ட மானதெல்லா மாகா தள்ளே 1377

தள்ளியே மற்றா நாளெல்லாங் கூட்டுச்
சாதகமாய்த் தீருகிற நோயைக் கேளு
துள்ளியே மேகமென்ற திருபத் தொன்று
தொடர்வாத பித்தசேற் றுமற்றி னோயும்
உள்ளியே அஸ்திசுர மஸ்தி வெட்டை
உடகாய்ச்சல் முறைகாய்ச்சல் கைகால் காந்தல்
தெள்ளியே கையெரிவு கண்ணெ ரிச்சல்
திடுக்கிட்டு நடுக்க முற்றுத் தியங்கும் பாரே. 1378

1. பாற்குறண்டிப் பூவும்
2. பொடித்துமே வடிகலசத்துள்ளேயிட்டு
3. பெண்ணொடு பலகார வர்க்க மாகா

தியங்குமடா சயகாசம் பதினெண் சூலை
தீராத குலையெரிவு அஷ்ட குன்மம்
மயங்குமடா மாதூக்கஞ் சிரசில் நோயும்
வல்லிடுப்பூச் சூலைமுதல் குன்மக் கட்டி
தயங்குமடா தேகத்தில் நாடா தேதான்
தனிச்சிறங்கு சொறிகரப்பான் குட்டம் வாய்வு
வயங்கொள்நீ ரழிவுவெண் குட்ட மோடு
மண்டையிடி வலிகடுப்பும் பறந்து போமே. 1379

பறந்துபோம் திமிர்வாதம் வாய்வுச் சூலை
பழுதான கண்ரோகந் தொண்ணூற் றாறும்
இறந்துபோஞ் சண்டாள ரோக மெல்லாம்
என்னென்று சொல்லுவேன் மருந்தின் சூட்சஞ்
சிறந்ததடா சந்தனாதித் தைலம் போலே
தேசத்திற் கிட்டாது தெளிவாய்ப் பாரு
திறந்தருமிம் மருந்தோ தான் மண்ணில் புண்ணியஞ்
செய்தவர்க்கே யெய்துங்காண் தேர்ந்து பாரே, 1380

## சீதேவிச் செங்கழுநீர் தைலம்

சீதேவி செங்கழுநீர்ச் சாறு, பசுவின் பால் வகைக்கு 1 குறுணி எள்ளெண்ணெய் 1 நாழி, இத்துடன் ஏலக்காய், கிராம்பு சந்தனத்தூள், சிறுநாகப்பூ, விலாமிச்சம் வேர், வெட்டிவேர் கோட்டம், அதிமதுரம், கடுகுரோகிணி, நன்னாரிவேர் இவை வகைக்கு $2\frac{1}{2}$பலம் எடுத்துப் பால் விட்டரைத்து, எண்ணெய்யிற் குழப்பிப் பதமாகக் காய்ச்சி முழுகவும் பல விதமான கண்நோய் களும் தீரும். 1381

## சீந்தில் தைலம்

சீந்தில், கற்றாழை, நெல்லிக்காய், வெட்டிவேர், விலாமிச்சம் வேர், நன்னாரி, தண்ணீர் விட்டான் கிழங்கு, தாழை விழுது, பொன்னாங்காணி, முடக்கொத்தான், ஓரிதழ்த்தாமரை. இவற்றின் சாறுகள், இளநீர், நல்லெண்ணெய் இவை வகைக்கு 4 படி, இவற்றுடன், வெட்டிவேர், விலாமிச்சவேர், கிரந்திதகரம் வெள்ளிலோத்திரம், ஏலரிசி, இலவங்கப்பட்டை, இலவங்கப் பத்திரி, சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், ஓமம். பெருங் காயம். இந்துப்பு, சந்தனம், குங்குமப்பூ, கிச்சிலிக் கிழங்கு, நாணல்தாது, அல்லிக் கிழங்கு, நீலோற்பலக் கிழங்கு, கற்பூரம்,

திராட்சைப்பழம், சடாமாஞ்சில், நீலாஞ்சனம், சிறுநாகப்பூ, முசுமுசுக்கைவேர், சாதிப்பத்திரி, சோனப்புல் இவற்றை வகைக்கு 1 பலம் எடுத்துச் சேர்த்து பால் விட்டரைத்துக் கூட்டி, காய்ச்சி வடித்து, நெற்புடம் வைத்தெடுத்து முழுகவும் கண்நோய்கள் தீரும். 1382

## சீரகத் தைலம்

நல்லெண்ணெய் 1படியில் சீரகம் 1 பலம் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள், தலை நோய்கள் குணமாகும்

## தாழம் விழுதெண்ணெய்

கைய்யாந் தகரை நெல்லிக்காய்
கருது பசுவின் பாலுடனே
மெய்யாச் சாறு நாழிவிடு
விரும்பு மெண்ணெய் யிருநாழி
பொய்யா மதிர மதின்கழஞ்சு
போத வரைத்துக் கரைத்ததில்
ஐய்யா மெழுகுப் பதம்வடித்து
அன்பாய் சிரசில் வைப்பீரே. 1384

வைத்தே மூன்று நாள்கழித்து
வளர்கண் ணெரிப்பு தலையெரிப்பு
பித்தங் கிறுகிறுப்பு கண்ணெரிச்சல்
பெருகுஞ் சூடு உள்வெக்கை
வற்றுஞ் சரீர முந்தேறி
வளர்ந்து தாது மிகவுண்டாய்
முற்றும் சொன்னோம் உண்மையிது
உலகோ ரறிய உரைத்தோமே. 1385

## தித்த கோஷாதித் தைலம்

பேய்ப்பீர்க் கிலைச்சாறு பேசுபடி யொன்றாய்நெய்
தூய்விளக்கெண் ணெய்யெள்ளெண் ணெய்சொல்மூன்று மாய்படி
ளொன்றாம்வெள் ளான்பால் ஓங்குபடி நான்குவிட்டே
நன்றா மதுகற்கம் நாடு. 1386

நாட்டும் திரிகடுகு நல்லவெட்டி வேர்மஞ்சள்
கோட்ட மரமஞ்சள் கொள்பிச்சம் - நீட்டுமன
சண்பகப்பூ தன்வகைக்குச் சேர்ந்த நிகடமோரொன்று
பண்மதுரம் ஓர்பலமாம் பத்து. 1387

பற்று மிதுவெல்லாம் பாலி லரைத்துவிட்டே
உற்றதெல்லாங் காய்ச்சி யுகந்தனுக்கும் - நற்றைலம்
மாந்தித்த கோஷாதி மன்னுபேர்த் தைலஞ்
சேர்ந்தித்தை மூழ்கியிடுந் தேய்த்து. 1388

தேய்த்துடன்போஞ் சன்னிவலித் தீராத வாய்வுவலி
நேத்திரத்தின் வாய்வுமுதல் நீர்ப்பாய்ச்சல்-கோர்த்தகண்ணில்
உள்ளரோ கங்களும்போம் ஒண்ணுதலே யிப்புவியில்
மெள்ள வுரைத்திடுவாய் விண்டு. 1389

## நயன சஞ்சீவி எண்ணெய்

உற்றபசும் பால்நெய்யு மொவ்வோர் படியொன்று
நற்று மதிமதுரம் நற்கோட்டம் - வெற்றேலஞ்
சண்பகப்பூ வெட்டி செந்தபொன்னாங் கண்ணிவேர்
வெண் விலாம் பிச்சைவேர் விள்ளு. 1390

விள்ளுங் கிராம்புசிறு கீரைவேர் வகைக்கா
முள்ளிநிட்க மோர்நான்கு முச்சிதமாய் - மெள்ளப்
பதமாய் வடித்திறக்கும் பண்கிருதப் பேர்க
ளிதநயன சஞ்சீவி யென். 1391

என்னு மதுமுழுக வேகண்ணி னுள்வருத்து
மன்னு படலமறை நாசம் - பின்னைந்தான்
தொண்ணூற்றா றுள்ளநோய் தோற்றுவிடுங் கண்விளங்கு
மெண்ணூற்றாண் டாம்வயது மேத்து. 1392

(வேறு)

பொன்னாங்காணி, சிறுகீரை, ஓரிலைத்தாமரை, நாய்க் கோவை, கறுங்கோவை, பற்படாகம், சிந்தில் தண்டு, முடக்கொற் றான், செங்கழுநீர், ஓலைப்பூ, இலுப்பைப்பூ, கோவைக் கிழங்கு, நீர்முள்ளி இவற்றின் சாறு வகைக்கு 1படி, அதிமதுரம், தக்கோலம், காசுக்கட்டி, மிளகு, தான்றிக்காய், மஞ்சள், இஞ்சி, செஞ்சந்தனம், சிறுதேக்கு, ஈருள்ளி, விலாமிச்சம் வேர், சவுக்

காரம், கோட்டம், கத்தூரி, புனுகுசட்டம், கோரோசனை இவை வகைக்கு 2 வராகன் எடை அரைத்துப் போட்டு, நல்லெண்ணெய் 1½ படி விட்டு சிறு தீயால் எரித்து, மெழுகு பதத்தில் வடித்துத் தலை முழுகக் கண் ரோகங்கள் எல்லாந் தீரும். 1393

## நீர்க்குண்டித் தைலம்

கருநொச்சிச்சாறு, கரிசலாங்கண்ணிச்சாறு இவை வகைக்கு 2 குறுணி, ஆவின்பால், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 5 படி, இவற்றுடன், ஊசி மல்லிகை, மருள்வேர், துளசி, இஞ்சி, பசு மஞ்சள், மிளகரணை, எருக்கம் பழுப்பு, தாழை விழுது, தென்னம் பாளை, மிதி பாகலிலை, வாழை மட்டை, முருங்கை இலை, வெள்ளைப் பூண்டின் இலை, பனை மட்டை, இலவங்கப் பத்திரிக் கசாயம், பேரரத்தைக் கசாயம் இவற்றின் சாறு தனித்தனியே 1 நாழி விட்டுக் கலந்து, இவற்றுடன், செங்கழுநீர்க்கிழங்கு, சிற்ற ரத்தை, வாய்விடங்கம், திப்பிலி, கடுகு, கோட்டம், அதிமதுரம், சுக்கு, பெருங்காயம், வசம்பு, தேவதாரு, மிளகு, கிரந்தி தகரம் இவை வகைக்கு ½ பலம் பால் விட்டரைத்துக் குழப்பிக் காய்ச்சி இறக்கி, ¼பலம் புனுகு சட்டத்தைச் சிறுதுண்டுகளாக்கிப் போட்டுத் தானியபுடமாக வைக்கவும். இதனால் தலை முழுகி வரவும், நசியம் செய்து வரவும் கண் நோய்களும், சகல வாயுவும் தீரும்.

## நெல்லித் தைலம்

நெல்லிக்காய்ச் சாறு 4, சிந்திற் சாறு 4, பால் 2, எண்ணெய் 2, தாமரை வளையம், கற்கண்டு காசெடை, சிற்றமுட்டி வேர், நன்னாரி, இலாம்மிச்சம், பதுமுகம், காகொளி சீவகம், கடல் நுரை, அகில், செங்கழுநீர்க்கிழங்கு, கற்பூரம், தக்கோலம், புட்டில், சாதிக்காய், புனுகு சட்டம், சந்தனம், முத்தக்காசு, அடவிக் கச்சோலம், பிரத்தேகம்,இருகழஞ்சு,அரைத்துக் கரைத்து, வடித்துத் தலையிலிட தலைநோவு, கண்ணெரிப்பு நீங்கும். 1395

(வேறு)

கொள்ளப்பா நெல்லிக்காய் பொன்னாங் காணி
குமரிசிறு கீரையொடு கரிசலாங் கண்ணி
விள்ளப்பா நந்தியாவட்ட மலர்க்கம் மாறு
வெற்றிலை முசுக்கையிள நீரா வின்பால்

உள்ளப்பா வகைக்குச்சா றாழாக் கொன்று
உற்றமே யெள்ளெண்ணெய் படிதான் விட்டு
தெள்ளப்பா கருஞ்சீரக மிளகு மல்லி
சீரகம் வகைக்கரைப் பலமுந் தூக்கே. 1396

## தைலம் உபயோகிக்கும் விவரம்

தூக்கடா பொடித்து எண் ணெய்யிலே போடு
சுண்டவே மெழுகுபத மெரித்து வாங்கி
தேக்கடா நெல்லிக்காய்த் தைலந் தன்னை
தொந்தித்து சிரசுள்ளங் காலிற் தேய்த்து
நீக்கடா ஆவாரைத் துளிர்சீ யக்காய்
நேரவரைத் திட்டொருமண் டலமே மூழ்கு
போக்கடா கைகால்மெய் யெரிவு பித்தம்
புத்திரனே கண்ணெரிவு புகைச்சல் தீரே. 1397

## பிருங்காமலகத் தைலம்

சிற்றாமணக்கெண்ணெய், எள்ளெண்ணெய் இவை வகைக்கு ½ படி, கையாந்தகரைச் சாறு, ஆடாதோடை இலைச் சாறு இவை வகைக்கு 1 படி, நெல்லிக்காய்ச்சாறு 2 படி, இவற்றைக் கலந்து, காய்ச்சி வடிக்கவும். இத்தைலத்தை 3 நாட்களுக்கொரு முறை தலையில் தேய்த்து முழுகிவரக் கண் புகைச்சல், நீர்ப்பாய்ச்சல், குத்து, தடிப்பு, சிவப்பு, கண்ணோய்கள் தீரும். கண்குளிர்ச்சி உண்டாகும். 1398

(வேறு)

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு இவை வகைக்கு 1 குறுணி, பசுவின்பால் 2 படி, எள்ளெண்ணெய் 2 படி, இவற்றுடன், அதிமதுரம், கோட்டம், சண்பகப் பூ, கிராம்பு, ஏலக்காய், சிறு நாகப்பூ, விலாமிச்சம் வேர், பச்சிலை, மஞ்சிட்டி வேர், வெட்டி வேர், பூலாங் கிழங்கு, சந்தனத்தூள் இவை வகைக்கு 4 கழஞ்சு சேர்த்து, அரைத்து எண்ணெய்யிற் குழப்பிக் காய்ச்சி வடித்து முழுகவும். வெள்ளெழுத்து, புகைச்சல், எரிச்சல் இவை தீரும்.

(வேறு)

நெல்லிக்காய்ச்சாறு, கரிசாலங்கண்ணிச்சாறு, கபிலைப் பசுவின் பால், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 1 நாழி, இவற்

றுடன் அதிமதுரம் 1 பலம் பால் விட்டரைத்து எண்ணெய்யுடன் குழப்பிக் காய்ச்சி வடித்து முழுகவும், கண்ணோய்கள் பலவும் தீரும். 1400

(வேறு)

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, சிந்தில் கொடிச் சாறு, சோற்றுக் கற்றாழைச் சாறு, பசுவின் பால், எள்ளெண் ணெய் இவை வகைக்கு 1 குறுணி, இவற்றுடன் அதிமதுரம், சண்பகப்பூ, பச்சிலை. கோட்டம், கண்டில் வெண்ணெய், தக்கோலம், விலாமிச்சம் வேர், நன்னாரி, சந்தனத்தூள், வெட்டி வேர், தாமரை வளையம், கோட்டம், கார்போக அரிசி, கோரைக் கிழங்கு, சிறுநாகப்பூ இவை வகைக்கு 1 பலம் பால் விட்ட ரைத்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்ணோய், புகைச்சல், காசம் இவை தீரும். 1401

(வேறு)

கையாந்தகரைச்சாறு, நெல்லிக்காய்ச் சாறு, நன்னாரிக் கிழங்குச் சாறு, வாசனைப் புல்லின் சாறு, பொன்னாங்காணிச் சாறு இவை வகைக்கு 1 படி, இவற்றுடன், கோட்டம், அதி மதுரம், சிற்றரத்தை வகைக்கு 1 பலம். சந்தனத்தூள்,விலாமிச்சம் வேர் இவை வகைக்கு 1 சேர், கடுகரோகிணி 2 வராகன் எடை கூட்டி இடித்து, சாறுகளுடன் சேர்க்கவும். இவற்றுடன் நல்லெண் ணெய் 1 படி கலந்துக் காய்ச்சி வடித்து முழுகவும். பித்த காசம் முதலான எல்லாக் காசங்களும், காது நோய்களும், தலை நோய் களும் தீரும். 1402

(வேறு)

கரிசலாங் கண்ணிச் சாறு 4 படி, பசுவின் பால் 2 படி, எள் ளெண்ணெய் 1 படி, இவற்றுடன் மரமஞ்சள், மஞ்சிட்டி வேர், செங்கோட்டம், வெற்றிலைக் கொடி, தாமரையிதழ், தாமரைக் கிழங்கு, சந்தனம் இவை வகைக்கு 1 பலம் கூட்டிப் பொடித்து, சாறு கூட்டிய எண்ணெய்யிற் சேர்த்துக் காய்ச்சி வடிக்கவும், தலை முழுகி வரக் கண் நோய்கள் தீரும். 1403

(வேறு)

கரிசாலங்கண்ணிச் சாறு, நெல்லிச்சாறு, பொன்னாங்காணிச் சாறு, பசுவின் பால், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 1 படி இவற்றுடன் அதிமதுரம் 1 பலமும், சந்தனம், கடுக்காய், சிற்ற

ரத்தை, நெல்லிமுள்ளி, கடுகுரோகிணி, தான்றிக்காய், விலாமிச்ச வேர் இவை வகைக்கு ¼ பலமும் சேர்த்து இடித்து, எண்ணெய் யுடன் குழப்பிக் காய்ச்சி வடித்துத் தலை முழுகவும். கண் ரோகங்கள் தீரும். 1404

(வேறு)

பசுவின் பால் 4 படி, கையாந்தகரைச் சாறு 1 படி, நெல்லிக் காய்ச் சாறு, எள்ளெண்ணெய் இவை வகைக்கு 1 படி, அதிமதுரம் 10 வராகன்எடை சிற்றாமுட்டி வேரின் தோல் 3 வராகன் எடை கோட்டம் 3 வராகன் எடை இவற்றை பசுவின் பால் விட்டரைத் துச் சாறுடன் கலந்த எண்ணெய்யில் குழப்பிக் காய்ச்சவும், தலை முழுகவும், கண் புகைச்சல் உட்ண ரோகங்கள் பலவும் தீரும். 1405

(வேறு)

கரிசலாங்கண்ணிச்சாறு, நெல்லிக்கனிச்சாறு, எள்ளெண் ணெய் இவை வகைக்கு 1 படி, தயிரின் தெளிவுநீர் 3 படி, இவற் றுடன், கோட்டம், அதிமதுரம், கோரைக்கிழங்கு, விலாமிச்சம் வேர், வெட்டிவேர், கடுகுரோகிணி, கற்றாழைச் சரகு, நீலோற் பலம் இவை வகைக்கு ½ பலம் தயிரின் நீரினாலரைத்து, எண்ணெய் உடன் கலந்து காய்ச்சி வடித்து முழுகவும். கண்ணோய், பித்தம், கபம், வலிப்பு, தலை நோய், காது வலி இவை தீரும். 1406

(வேறு)

நெல்லிக்காய்ச்சாறு, பசுவின் பால் கரிசலாங்கண்ணிச்சாறு, எள்ளெண்ணெய் இவை வகைக்கு 4 சேர், இவற்றுடன், நெல்லி முள்ளி, கடுக்காய், தான்றிக்காய், தேவதாரம், கோரைக்கிழங்கு, செம்புளிச்சை, வெட்டிவேர், பனைவேர், தென்னை வேர், விலா மிச்ச வேர் இவை வகைக்கு 1 பலம் எடுத்திடித்து 8 படி தண்ணீர் விட்டு 1 படியாகக் காய்ச்சி வடிக்கவும். இத்துடன், சீரகம், கருஞ் சீரகம், அதிமதுரம், கிராம்பு, திப்பிலி, சடாமஞ்சில், சுக்கு, கோட்டம், சாதிக்காய், மிளகு இவை வகைக்கு 4 வராகன் எடை கூட்டி அரைத்துச் சாறுடன் கலக்கிக் காய்ச்சி வடித்து முழுகவும். கண்நோய்கள் தீரும். 1407

பத்தியம்—புளி நீக்கவும்.

(வேறு)

நெல்லிக்காய்ச்சாறு, கரிசாலைச்சாறு, குமரிச்சாறு, அசுவ கெந்திச்சாறு, தாழை விழுதுச்சாறு, கருமத்தம்சாறு, புளியிலை, மோர்விட்டதுச்சாறு, பசுவின் பால், வகைக்கு ஒன்று கூட்டி, ஆதண்டையிலைச்சாறு நல்லெண்ணைய் இரண்டு படி, பழச்சாறு ஒரு படி, மேல் கற்கம் மதுரம், கோட்டம், ரோகணி, திப்பிலி, ஏலம், மரமஞ்சள், கத்தூரி மஞ்சள், சுக்கு, தாமரைக் கிழங்கு-எலுமிச்சம் வேர், ஓமம், உள்ளி, மஞ்சள் வேப்பம் பருப்பு' சீரகம், வகைக்கு மூன்று வராகனெடை சேர்த்து வடித்து சாதிக்காய் பத்திரி, பொடித்துப் போட்டு முழுகவும்.

கண் சிவப்பு, தலைவலி, ஒருதலைவலி, பித்த வாய்வு, தலை கிறுகிறுப்பு இவை தீரும்.

## பூதிகாதி தைலம்

சொன்னதோர் ஆயிறப் பட்டை தொடுத்ததோர்பலமும்நூறாய்ப்
பன்னிய திசைமூ லந்தான் பகர்பல மெழுப தாக
மன்னிய சிற்ற முட்டி வளரும் செம்புஞ் சைவேர்
கன்னிய அமுக்குறாவும் தளருமா விளங்கை நொச்சியே 1409

நொய்யவா மணக்கு மூலம் நுகர்தழு தாழை புங்கு
செய்யமா முருவகை கொண்டு செம்முள்ளி அழிஞ்சி கூட்டி
தைய்யசா ரடையெ ருக்கு சவுரியும் முட்கா வேளை
பைய்யவசு சிறுகாஞ் சோரி பகரும்வெட் பாலை யாமே

வெட்டிவேர் சங்கு நொச்சி வியலுங்கா முருங்கை கொள்ளு
தட்டிதூ தளைதான் பண்ணி தரித்ததை வகையொன் றுக்கு
முட்டியே பலமஞ் சாக முதிர் கிண்ட அரதை நூறு
அட்டிபண் ணாமல் தண்ணீர் அதில்பதி னெட்டு வாரே 1411

வார்த்திடு மெண்ணெய் மூன்று வளருமாட் டுப்பால் மூன்று
சேர்த்திடும் தகரை குக்கில் சேர்சடா மாஞ்சில் ஏலம்
பேர்த்திய லவங்கப் பத்திரி புகழ்ந்திரி பலைநா கப்பூ
சர்த்திடும் விளங்கம் ரோணி தருதிரி கடுகு தானே 1412

தானேகேள் பூலாங் கிழங்கு தளரும்செம் புளிச்சை மூலம்
வானேலம் வசம்ப ரத்தை வட்டத் திருப்பிகந் தந்தான்
நேனேமா மரத்து மூலம் நிகழும்செவ் வியம்கி ராம்பு
தோனமாம் சண்பகப் பூவும்துலங்கிய ஓமந் தானே 1413

கோட்ட மஞ்சிட்டி சதகுப்பை கூறிய கடுக்காய் சாதிக்காய்
வாட்டமாம் தேவ தாரம் வள்ளிலாம் பிச்சை யோடு
நாட்ட மாமங் கழஞ்சிமூன்று நறும்பெள் கூட்டிச் சேர்த்து
தேட்டமா யெரித்து முழுக சிரசினில் ரோகம் போமே 1414

பொன்னாங்கண்ணி தைலம்

நாமப்பா பொன்னாங்காணி தைலம் கேளு
அப்பனே காணிச்சாறு படிதான் ரெண்டு
தாமப்பா காணிச்சாறு படிதா னொன்று
நலமான நெல்லிக்காய்ச்சாறு படிதான் ரெண்டு
தாமப்பா யெள்ளெண்ணெய் படிதான் ரெண்டு
தப்பாமல் ஆவின்பால் படிதான் ரெண்டு
வேமப்பா மதுரமது பலந்தான் ரெண்டு
விருதான முலைப்பாலால் அரைத்துப் போடே 1415

போடப்பா நேத்திர நோய் தொண்ணூற் றாறும்
நிலைகெட்ட காசமெல்லாம் தவறுண்டே போகும்
தலைமயக்கம் வாயூறல் சாந்தக மாகும்
தேங்கியே உள்சுரங்கள் நீந்து போகும்
திரேகத்தில் நடுக்குமுதல் தீர்ந்து போகும்
ஏங்கியே திரியாதே மனஞ்சோம் பாதே
எளிதல்லா நோயி அப்பா யிறங்கிப் பாரே 1416

(வேறு)

போமிது பொன்னாங் காணி புகழ்சிறு கீரை முத்தம்
ஓமிது சீந்தில் நிம்பம் உயர்ந்தநா ரத்தை கோட்டம்
ஆமிது மதுர மேலம் அலர்ந்தசண் பகம்ல வங்கம்
நாமிது சொன்னோ மெண்ணெய் நயந்தெரி தலைக்கு வாரே 1417

மணித் தக்காளித் தைலம்

மழை காலத்தில் மணித் தக்காளிச் செடியைச் சமூலமாகக் கொண்டு வந்து நறுக்கி 1 எள்ளெண்ணெய்யிற் போட்டுக் காய்ச்சி வடித்து, தலை முழுகி வர, கண் புகைச்சல், பார்வைக் குறைவு இவை தீரும் 1418

மாவலிங்க எண்ணெய்

மாவலிங்கஞ்சமூலம், மிளகு, வசம்பு, உள்ளிப் பூண்டு இவற்றைக் கல்லுரலிலிட்டு இடித்து, எள்ளெண்ணெய்யிற் குழப்பி

1½ நாட்கள் வெய்யிலில் வைத்துப் பொன்னிறமான பிறகு இதை தலையிலும், உடலிலும் தேய்த்து, அரபபிட்டு, வெந்நீரில் முழுக வும். கண்வாயு போன்ற தொண்ணூற்றாறு நோய்களும் தீரும் 1419

## மிளகு எண்ணெய்

மிளகு ½ படி, வெற்றிலைச்சாறு 1படி, கலியாண முருக்கிலைச் சாறு 1 படி எள்ளெண்ணெய் 1½படி இவற்றுடன் நன்னாரிவேர், இலாமிச்சம்வேர், சிற்றாமுட்டிவேர், அடவிக் கச்சோலம், ஏலம், ஓமம், சாதிக்காய், கிராம்பு பச்சிலை, பூலாங்கிழங்கு. சந்தனம், அதிமதுரம், கருஞ்சீரகம் இவை வகைக்கு 1 கழஞ்சு பால் விட்டு அரைத்துக் கரைத்துக் காய்ச்சி வடிக்கவும். பித்தகாசம் போன்றவை தீரும் 1420

(வேறு)

முசுமுசுக்கைச்சாறு, தாழை விழுதுச் சாறு, சிறுகீரைச்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, இளநீர். பசுவின்பால், பொன்னாங்காணிச் சாறு இவை வகைக்கு 2 சேர் எடுத்துக் கொள்ளவும். மிளகு 5½ பலம் எடுத்து ஒரு சட்டிக் குள்ளிட்டு முதல் சாற்றில் ஒரு நாள் ஊறப் போட்டு, வெய்யிலில் உலர்த்திக் காய்ந்தபின், முறத்தில் தேய்த்துப் புடைத்து, பிறகு மாற்றொரு சாற்றிலும் இவ்வாறே செய்து, இவ்வாறு ஏழுவகைச் சாற்றிலும் ஏழு முறை ஊறியபின் புடைத்து முட்டைக் கட்டி எள்ளெண்ணெய் 2சேரில் ஊறவைத்து, தலை முழுகவும், கண்ணெரிச்சல், புகைச்சல், கைகால் எரிவு, மேக நோய்கள் இவை தீரும். 1421

## மகா சந்தனாதித் தைலம்

வீசுபுக ழான மிகுத்தசந்த னாதிதனை
ஓசைபெற வேதைல முரைப்பதுகேள் - பூசுகின்ற
வாசமலர்க் காவேங்கை வளறுங் குறுந்தட்டி
பாசங் கிளைசுகந்தப் பாலைவில்வம் - நேசமுள்ள
நீர்வாழி முள்ளிநெல்லி நிகழ்த்துஞ் சதகுப்பை
கார்பூத்த கொம்பரக்குக் கஞ்சவளை - சீர்பூத்த
தாழை விழுதுமிச்சு தாரிரு வேலிமிளகு
காளமகில் வெட்டிமுத்தக் காசுடனே - வாழுகின்ற
தேவதார முடனே சீந்தில்மெரு கங்கிழங்கு
பாவகமாய் நாலுபலம் வகைக்கு - யாவலுடன்

இத்தனையும் நன்றா யிடித்து மிடாவதனில்
பத்திரமா யெண்மரக்கால் பாணிவிடு - சித்திரம்போற்
சூட்டடுப்பி லேற்றிச் சுவறயெரித் தெட்டொன்றாய்க்
கூட்டுங் கசாயத்திற் கூறக்கேள் - வாட்டமுடன்
நல்லெண்ணெய் நாலுபடி நலம்பெறவே தாளிவிட்டுச்
சொல்லக்கேள் சாறுவகை தோகையரே - வல்லோர்முன்
வைக்க மருந்துவகை பொன்னாங் காணியுடன்
தக்க முசு முசுக்கை தான்தரிப்பான் - சிக்கெனவே
கார்த்தொட்டி வெற்றிலை கஞ்சா சிறுகீரை
சீற்றமுறு பூரவள்ளி சேரவே - சேர்த்திடித்துச்
சாறுவகைக் குப்படி தானாலு கூட்டியபின்
கூறுகின்றோம் பின்னிளநீர் கூறுங்கா - லாதலாய்
நாலுபடி வகைக்கு நன்றா யுடன்கலந்து
சீலமுடன் கற்கவகை செப்பக் கேள் - ஏலமுடன்
கோட்ட மதிமதுரம் குங்குமப்பூ கத்தூரி
சட்டமுடன் கற்பூர சிலாசத்து - வெட்டுகின்ற
கொட்டிக் கிழங்குடனே கோன்றோசே னைக்கிழங்கு
திட்டமுடன் நன்னாரி சண்பகப்பூ - இட்டமுடன்
கொம்பரக்கு செங்கழுநீர் கொத்தமல்லி சூடனுடன்
தம்புலுவாய் நாகணஞ் சடாமாஞ்சி - சிம்புசெறி
வருங்காளப் பச்சை மரமஞ்சள் வால்மிளகு
பெருங்குரும்பை தானசுவஞ் - சங்கை பெறு
செஞ்சந்த னந்தகரஞ் சேர்புனுகு சட்டமுடன்
அஞ்சனக்கல் மஞ்ச ளதுவுடனே - கஞ்சமுறுந்
தாமரையின் வேருடனே தாளிச பத்திரிநல்
லோமங் கொடிவேலி வெள்ளிலோத்திரமும் - நேமமுள்ள
சிற்றரத்தை நாகப்பூ சிவதை கடுகுரோகணியும்
பற்றி திரிகடுகு பகர்புனுகு - சிற்றமுறு
சீரக மிருவகையும் சேர்சாதிக் காயுடனே
வீரமுடன் தக்கோலம் வேண்டியே - வாரமுள்ள
இலவங்கப் பத்தரி நல்லிலவங்கப் பட்டையுடன்
கலகமில்லா மஞ்சிட்டி கார்போகு - தலைமைபெறு
செவ்வள்ளி வாய்விளங்கம் சிற்றரத்தை கண்டில்வெண்ணெய்
கவ்வையில்லாச் சங்கை கருஞ்சூரை - பவ்வுசிறு
தேக்குடனே நல்ல திரிபலை குளமாஞ்சி

மார்க்கம் விளாம்பிசின் மகரப்பூத் - தாக்குடனே
பாக்குமிரு வேலி பருவமாய் நீவகைக்கு
நாற்கழஞ்சு வாங்கி நறுக்கியே - சீக்கிரமாய்
நன்றா யுடனரைத்து நல்லெண்ணெய் யுடன்கலந்து
துன்றாமற் காய்ச்சி சுவறினால் - குன்றாமல்
நல்லபதம் வந்ததென்ற நாளிலே நீவடிக்க
வல்லவரே கேளும் வகைவிவரம் மெல்லவே
ஆனைமுக வன்தனக்கு அருள்பூசை செய்ததற்பின்
மானனையீ ரென்னை வகைகேளு - கானலுறும்
வாசஞ் சுகந்த வாசவகை புட்பமெல்லாம்
பாசமுடன் சட்டிதனிற் பரப்பியே - கூசாமல்
பார்த்து வடித்திதமாய்ப் பருங்கலசந் தனில்வைத்து
வாய்த்ததொரு நாளறிந்து வாகுபெறத் - தேய்த்துத்தான்
வென்னீர் முழுகிவர மிகுத்தபிணி தீர்வதுகேள்
எண்ணிய மேக மிருபதும்போம் - துண்ணிமையாம்
நீரழிவு காந்தல் நிணமுருக்கி யுள்ளுருக்கி
சாறு மெலும்புருக்கி தான்சூலை - தீருநோ
யின்னம் வகைகேளு மிளைப்புக் கசரோக
மன்னு செறிபித்தம் வளர்வேர்வை - நன்னயமாய்
எண்ணமுடன் கண்ணி லெழுந்த நோய்தொண் ணூற்றாறு
திண்ணமுடன் புகைச்சல் சேரப்போம் - வண்ணமுடன்
குட்டங் கடிவிடங் கொடிய சுரங்கரைப்ப
னட்டணையாம் பாண்டுபின்பு நான்சொலக்கேள் - திட்டமுடன்
காதிலிடி யிரைச்சல் காதுவலி குத்துடனே
தாதுபயில் பல்லுளைவு தான்வாழ்வு - மாதவரே
சோகையுடன் கக்கல் சுழற்பித்தம் பீனிசம்போம்
ஆகமுறும் விக்க லரோசிகம்போம் - பாகமாய்
வேண்டு மெண்ணெய்ப் பேர்தான் விளம்பவே நோய்போகும்
பாண்டிதத்தோர் செய்வீர் பகர்ந்து.

## முக்கூட்டுத் தைலம்

தானென்ற முக்கூட்டுத் தைல மொன்று
சாற்றுகின்றேன் சருவநோ யெல்லாந் தீர
வானென்ற வெள்ளெண்ணெய் சிற்றெ ரண்ட
வல்வெண்ணெய் யாவின்நெய் வகைவ கைக்கு

ஆனென்ற விரண்டுபடி யளவாய்ச் சொன்னோம்
ஆவின்பால் நாலுபடி யதிலே வாரு
பானென்ற செய்விளநீர்ப் படிதான் நாலு
பக்குவமா யின்னம்வகை பகரக் கேளே 1423

பகருகிறேன் கரிசாலைப் பொன்னாங் காணி
பருமவீழி வல்லாரை யவுரிக் கொத்தான்
முகருகிறேன் தழுதாழைப் படையு நொச்சி
முருக்கிலைக் கற்றாழையுங் கற்பூர வல்லி
புகலுகிறேன் தூதுவளை கண்டங் கத்தரி
புளியாரை முசுமுசுக்கை சங்கங் குப்பி
நகருகிறேன் மேனிசிறு கீரை வேளை
நற்றாழை விழுதாடா தோடை யென்னே 1424

தொடையொடு [1] பிச்சிபுன் முருங்கை கூந்தல்
சொல்லரிய மணமுல்லை [2] காட்டு முல்லை
தொடையொடு ஆதெண்டை கீழ்க்காய் நெல்லி
[3] சொற்றாழை விழுதுபரு நெல்லிக் காயுந்
தொடையொடு அல்லிகொட்டி நெய்த லாம்பல்
துளக்கரிய நிலக்குமிழி தண்ணீர் மிட்டான்
பொடவேயூ ழலர்த்திமணித் தக்காளி சொல்லு
பொடுதலை [4] நெருஞ்சி துத்தி யாமே. 1425

ஆமேசிறு முள்ளங்கி வெள்ளறுகு தானும்
அடைவான செங்கழுநீர் முத்தி ருக்குந்
தாமேதா னாவலத்தி யொதியம் பட்டை
தனிசுண்டி முள்ளங்கி திருநாமப் பாலை
சேமேழுக் கிரட்டைவேர் கருடக் கிழங்கு
செப்பிடுநற் கரந்தைபெரு நெருஞ்சிக் கொன்றை
நாமேயா லவிழுது சிறுகுரட்டை பிரமி
நற்பருத்தித் தேள்கொடுக்குக் கரந்தை நாரே. 1426

---

பா.வே.

1. நொச்சி, 2. காட்டு மல்லி, 3. சொல்லாலம் விழுது
4. துளசி துத்தி முள்ளங்கி யாமே.

நாரோடு பற்படகம் வகைவ ணைக்கு
நவிலுமரைப் படியாகத் தனிச்சா றாக
சீரோடு வாங்கியெண் ணெய்யிலே வார்த்துச்
செயலாக வெட்டிவிலா மிச்சம் வில்லை
ஏரோடு நன்னாரி சிற்றா முட்டி
இயல்பேரா முட்டிமுகை யிருவே வித்தான்
வீரோடு மிளகருணை சங்கு முத்தி
வெள்ளைச்சா ரணையுங்குருந் தொட்டி வேரே 1427

குருந்தான சிற்றமல்லி பேரா மல்லி
கூறான ஆயிலிய மருதி லந்தை
மருந்தான அமுக்கராவேர் சித்தர மூலி
வகையான சிறுபூளை நிலப்ப னைவேர்
வருந்தாது நன்மைபெற்ற முத்தக் காசு
வளைதூது நொச்சியொடு கண்டங் காலி
திருந்தான மரவள்ளி முந்திரிகை வேருந்
தேற்றானுங் கருங்குருத்தும் முன்னை வேரே. 1428

முன்னையொடு ஆவாசு மிலுப்பை வீழி
முடியுற்ற நரியுடை யுஞ்சிறு விளாவுந்
தன்னையொடு முள்ளிலவு முருங்கை வேருந்
தனியாச்சா சம்பங்கி விட்ணு காந்தி
பின்னையுள ஆவாரை வேரு மைந்தா
பேசுமேருகங் கிழங்கும் பிசகில் லாமல்
நன்னயமாய்ச் சரக்கெல்லாஞ் சேர்த்துக் கூட்டு
நவிலுகிறே னின்னமொன்று அறுகு தானே. 1429

அறுகோடு பொன்முசுட்டை சிறுகாஞ் சோறி
[1]ஆதொண்டை வெட்பாலை [2]யத்தி செம்பை
அறுகோடு சண்பகப்பூ முட்கா வேளை
அகில்தேவ தாரமொடு மலாக்காய் கந்தம்
அறுகோடே [3]யிருவெட்டி நீர்ப்பூ லாவேர்
அரசு [4]காட் டத்திசிறு வழுத லைவேர்
அறுகோடு வகைக்கிரண்டு பலந்தான் சொன்னோ
மாட்டியே யிடித்துவோர் தாழி சேரே. 1430

---

பா.வே.
1. ஆதாளை, 2. அகத்தி, 3. பிறாய்முட்டி, 4. காட்டகத்தி

சேரேநீ பிரம்பினிட கிழங்கி ரண்டு
சேர்த்தொன்றா யிருதூணி நீரி விட்டு
வாரேநீ யடுப்பேற்றி யொருவிறகுத் தீயால்
மாட்டியே யெட்டிலொன்றாய்க் குறுகக் காய்ச்சி
காரேநீ முன்னெண்ணெய்க் [1]கியாழத் தோடு
கலந்துவிடு கடைச்சரக்கின் வகையைக் கேளு
தேரேநீ திரிகடுகு திரிப லாதி
திப்பிலியின் மூலமொடு கோட்ட மாமே. 1431

கோட்டமாஞ் சிற்றரத்தைப் பேர ரத்தை
கொத்தமல்லி யேலமொடு லவங்க மாஞ்சி
கோட்டமொடு தாளிசையிரு சீர கந்தான்
கொடிதான வாய்விளங்க மோமி ரண்டுந்
தீட்டியே நாகப்பூ மதுர மிந்து
செவ்விய மரமஞ்ச [2]ளுடனே மற்றும்
வாட்டமாஞ் சாதிக்காய்க் கிராம்பு பத்திரி
மஞ்சிட்டி வாலு ழுவைச் சிங்கி யாமே. 1432

சிங்கியொடு வால்மிளகு கூகை நீறு
சண்பகப்பூ வலம்புரிக்காய் கருவாப் பட்டை
பங்கியாங் கிளியூறல் பட்டை யோடு
பச்சிலை பூலாக்கிழங்கு சோம்பு மஞ்சள்
வங்கியொடு சமுத்திராப் பழங்கச் சோரி[3]
வங்காளப் பச்சையொடு [4]முத்தக் காசு
அங்கியே பெருங்குரும்பை அக்காரக் காரம்
அத்திதிப் பிலிவகைக்கு அரைப்பல மாமே. 1433

பலமாக யிவையெல்லா மாவின் பாலால்
பக்குவமா யாட்டியவ் வெண்ணெய்யிலே யப்பா
நலமாகக் கரைத்தொன்றாய்க் கலக்கி நீதான்
நற்றாளி சேர்த்தடுப்பி லெரியை மூட்டு
புலமாக வோர்விரகா லடிபற் றாமல்
பொங்காம லகப்பையினாற் கிண்டு கிண்டு
குலமான [5]கியாழகற்க மெல்லாம் வற்றிக்
குறுகியே மெழுகுபதம் வருதல் காணே. 1434

---

பா. வே
1. கசாயத் தோடே, 2. கத்தூரி மஞ்சள்.
3. கச்சோலம், 4. கோரைக் கிழங்கு, 5. கசாயம்.

வருதலால் முருங்கைப்பூ பிடியோ வொன்று
மருக்கொழுந்துப் பூவொன் றதிலே போடு
[1]நருகாம லடுப்பேற்றிப் பதம தானால்
நழுவாமற் றீயெரிவ துற்றுப் பார்த்து
பருவமாய்த் தைலமதை வடிக்கச் சொல்லிப்
பாங்கான வடிகலாசத் துள்ளே கேளு
சருவமாய்க் குங்குமப்பூக் கழஞ்சு போடு
தனிப்பச்சைக் கற்பூரங் கழஞ்சு போடே. 1435

போடப்பா கோரோசனை [2]கழஞ்சு போடு
[3]புனிதமொடு கத்தூரி கழஞ்சு போடு
[4]ஆடப்பா வடிகலசத் துள்ளே போடு
ஆதியென்ற குருவிலொரு கழஞ்சு போடு
வாடப்பா போட்டுநீ தைலந் தன்னை
வடித்துமே கணபதியைப் பூசை செய்து
நாடப்பா சத்தியைத்தான் மனதிற் குள்ளே
நற்தானியப் புடமாக வைத்து மூடே. 1436

மூடியே மண்டலந்தான் வைத்தா னன்றாம்
முடியாட்டால் பட்சமொன்றி லெடுத்து மூழ்கு
சாடியே கிருதமொடு தைலங் கற்கந்
தானியப்புடம் வைத்தெடுக்க மெத்த நன்று
சாடியே சூரணங்க ளெல்லா மைந்தா
சாம்பிராணிப் பதங்கத்தி லேற வேண்டுந்
தேடியே யிம்முறைதா னில்லா விட்டாற்
தேகத்துக் கேறாது குற்றங் காணே 1437

குற்றங்கள் வாராமற் றைல மூழ்கு
குணங்கேளு வைத்தியரே கூறு வேனான்
பற்றியே நாலுநாள் வட்ட மூழ்கு
பசும்பருப்புச் சீயக்காய் வெந்நீ ராகும்

---

பா.வே.
1. கருகாது மெழுகுபத மானாற் பாகங்
கையிட்டுக் கிண்டியப்பா லடுப்பை யாற்று.
2. நான்கழஞ்சு போடு.
3. புகலுகிறேன் புழுகு ஒரு கழஞ்சி போடு.
4. சாடவே செங்கழுநீர்க் கோட்ட மோடு
சாதிக்காய் வகைவகைக்குக் கழஞ்சு போடு.

வெற்றியுடன் தீருகிறநோய் சொல்லக் கேளே
மேகவகை யிருபதுந்தான் கடலே புக்கும்
வற்றிப்போ மத்திசுர ்மஸ்தி வெட்டை
மயங்காதே மெய்யெரிவு காந்தற் போமே. 1438

காந்தலொடு பித்தவாய்வு முட்ண வாய்வு
கண்ணெரிவு கிறுகிறுப்பு மயக்கந் தயக்கம்
வாந்தியொடு வாய்நீரு மண்டை சூலை
வறட்சியொடு காமாலை பாண்டு சோகை
ஏந்திவரு மண்டையிடி மண்டைக் குத்து
எழில்மூக்கு நீர்ப்பாய்ச்சல் பீனி சந்தான்
சாந்தியாங் கண்ணெரிவு கண்பு கைச்சல்
சாற்றுங்கால் கையசதி சூலை வாய்வே, 1439

வாய்வோடு சூலையெரி நீர்ச்சு ருக்கு
வாதபித்தஞ் சிலேட்டுமத்தா லெடுத்த ரோகஞ்
தேய்வாகு மற்றுமுள்ள ரோக மெல்லாந்
திடுதிடென் றிடிவிழுந்தாற் போலே யோடுங்
காய்வேது கண்ணொளியாங் குளிர்ச்சி காணுங்
கண்புகைச்சல் வெள்ளெழுத்து மாறிப் போகும்
பேய்போலே யலையாதீர் வைத்தியரேநீர்
பேசுகிறேன் சிறுசந்த னாதி யொன்றே. 1440

குறிப்பு: 1425-ஆம் பாடலுக்குப் பிறகு கீழ்வரும் 3 பாடல்களும் ஒரு சுவடியில் கிடைக்கிறது.

முள்ளங்கி வெள்ளறுகு செங்கழுநீர் தானு
முத்திருக்கம் நீர்வலத்தி ஓதியம் பட்டை
முள்ளங்கி திருநாமப் பாலை யோடு
மூக்கிரட்டை மேருகினுட் கிழங்குச் சாறு
முள்ளங்கி கரந்தைபெரு நெருஞ்சி கொன்றை
முனையான பிரமி சிறுகுறட்டை தானு
முள்ளங்கி பருத்திதேள் கொடுக்கி பற்படாக
முதிரனாறு கரந்தை வகைவகைக்குக் கேளே.
வகைவகைக்கு ஒருபடியாந் தனிச்சா றாக
வாங்கியந்த யெண்ணெய்யிலே வார்த்துக் கேளு

நகையாத வெட்டிலா மிச்சம் வில்வம்
நன்னாரி சிற்றாமுட்டி பேரா முட்டி
முகையாத யிருவேலி மிளகரணை சங்கு
முதியவெள்ளைச் சாரணைவேர் குறுந்தொட்டி வேரும்

அகையான சிற்றமல்லி பேரா மல்லி
ஆயிலிய மருதிலந்தை யமுக்கிறா வேரும்
வகையான சிறுபூளை சித்திர மூலம்
வாகான நிலைப்பனைவேர் முத்தக் காசே

காசொடு தூதிகண்டங் காரி நொச்சி
கருவாகை மரவள்ளி முந்திரிகை தேற்றான்
மாசில்லாப் புனலிசிறுக் குறுஞ்சாப் புன்னை
மயிலாடி வீழிவேர் பூவரசு யிலுப்பை
தேசில்லா நரியுடையுஞ் சிறுவி ளாவும்
செப்பரிய முள்ளிலவு முருங்கை வேம்பு
ஆசில்லாச் சம்பங்கி விட்ணு கிராந்தி
ஆவாரையின் வேரறுகங் கிழங்கு மாமே.

(இதன் பிறகு 'அறுகோடு' எனத் தொடங்கும் 1430ஆம் பாடலிலிருந்து இறுதி வரையுள்ள பாடல்கள் உள்ளன. இவற்றிலுள்ள பாட வேறுபாடுகள் அங்கங்கே குறிக்கப்பட்டுள்ளன.)

## மேருத் தைலம்

எள்ளெண்ணெய் படியொன்று பால்தும்பை மலரோர்படி
எரித்துப் பதத்திறக்கி
இனமுடன் மூன்றுமுறை முழுகுமதின் விபரமும்
எடுத்துரைக்கக் கேளுமே
கள்ளமற சிரசுமட் டாகவே தேய்த்துப்பின்
காய்ச்சுசிகைக் காயதனையே
கருத்துடன் வெந்நீரில் பச்சைசல மன்றியே
கணக்குடன் முழுகியன்று
தள்ளிவிடு புளிமோர் குளிர்ந்தசல மன்றியே
தானமுது கொண்டுவரிலோ
தாங்காத சிரசிடிகள் பீனிசம் நேத்திரநோய்
தான்பயந் தோடுமிதனில்

வள்ளிதெய் வானையர னார்கிருபை சேர்பொதிய
மாமலை யகத்தியரெழில்
வரிசைமேருத் தைலமாமிதைக் கவிதையாய்
வகுத்துரைத்தனர் பாருமே. 1441

## வேங்கைத் தைலம்

வேங்கை மரத்தின் வைரம் (மேல்தோல் போக்கியது) சிற்ற முட்டி வேர், சீந்தில் கொடி இவை வகைக்கு $37\frac{1}{2}$ பலம் எடுத்து இடித்து, இத்துடன் 8 மரக்கால் தண்ணீர் விட்டுக் வற்றக் காய்ச்சவும். இத் துடன், சுத்தமான எள்ளெண்ணெய் 1 படி, கடுக்காய்' நெல்லிக்காய், தான்றிக்காய், அதிமதுரம், பாலை வேர், சுக்கு, கிராம்பு இவை வகைக்கு 1 சழஞ்சு எடுத்துக் கசாயம் விட்டரைத்து, எண்ணெய்யுடன் குழப்பி எரித்துப் பதத்திலிறக்கி முழுகவும்.

வாத, பித்த, கப ரோகங்களும், கண்ணோய், தலை வலியும் தீரும்.

## தைலம் (பொது)

### நயனத்தில் பல தோடம் பற்றினால் எண்ணெய்

மருவியதோர் நயனமீதில் தோடத் திற்கு
வளரெண்ணெய் பேராமுட்டி சிற்றா முட்டி
இருவேலி நீர்ப்பூலா முத்தக் காசு
இசைந்தசீந் திற்கிழங்கு பொன்னாங் காணி
திருமேவு நன்னாரி குதிரை வாலி
செப்பெரிய நிலக்குமிழ்வேர் நீரின் முள்ளி
தருமேவு மோரிதழின் தாமரையும்
தக்கபனைக் கிழங்கு சதாவாரி. 1443

சாற்றியதோர் பனங்கருக்கு விலாமிச் சம்வேர்
சாதனதா மரைக்கிழங்கு சரிய தாக
சேர்த்தமிகு கடைமருந்து சண்ப கப்பூ
செவ்வள்ளிக் கிளியூரல் நாகப் பூவும்
மாற்றரிய மலையிருவேல் கொத்த மல்லி
வசுவாசு சாதிக்காய் யேலம் வங்கம்
ஏற்றமுள்ள கச்சோலம் கொழுந்து பச்சை
இலகோட்ட மதிமதுர மின்னங் கேளே, 1444

இன்னங்கேள் குங்குமத்தின் பட்டை கூட்டி
இயல்கருஞ்சீர் கிராம்பு குங்கு மப்பூ
சொன்னேன்கேள் கடைமருந்து கழஞ்சு கூட்டி
துய்யவே யிருகழஞ்சி சுகம தாக
பொன்னேகேள் நெல்லிக்காய்ச் சாறு நாழி
புகழ்மிகு நல்லெண்ணெய் முன்னா ழிட்டு
மின்னாரே நறுநெய்யு முன்னாழி கொண்டு
மேவியே தாமரைக்கிழங்கு விரும்பு வீரே. 1445

விரும்பியே தாவாரி கிழங்கு தண்ணீர்
மெல்லியரே தாமரையின் கிழங்கு தண்ணீர்
தரும்படியே ஒவ்வொன்று நாழி கொண்டு
சந்தனமு மைய்க்கழஞ்சி சரிய தாக
விரும்பியதோர் கசாயத்தில் எண்ணெய் நெய்யும்
விட்டுநீர் மெழுகுப்பதம் வடித்துக் கொண்டு
திரும்பியதோர் தாழ்ப் புனுகு பச்சை
செய்யும்கற்பூ ரங்கழஞ்சி சிறக்கத் தேடே. 1446

தேடியதோர் எண்ணெய்தனி லுள்ளே போட்டு
திடனாகக் கட்டிவைத்துச் சிரசிற் பூசி
நீடியதோர் கண்ணிலுள்ள வியாதி யெல்லாம்
நிறகுழந்து தலைகுளிறும் நித்தம் நித்தம்
கூடியதோ ரிந்தயெண்ணெய் உள்ளங் காலிற்
குறிப்புடனே தான்பூசும் கோதை மானே
பாடியதோர் சிவனார்தன் பாதந் தன்னை
பறந்துவிடும் விழிநோய்கள் பத்து நூறே. 1447

(வேறு)

செப்புகின்ற வெள்ளருக்கு மூல மொன்று
சீதேவி மூலமொன்று கொடுப்பை யொன்று
வெப்பகலுங் கைதோனி மூல மொன்று
விருதான குருந்தொட்டி மூல மொன்று
இப்புவி யிலாமிச்சு வேர தொன்று
இருவேலி மூலமொன்று மறுநீராடி யொன்று
ஒப்புடனே வகையொன்று பலமொன் றாக
உறவாக விடுசலந்தான் பன்னி ரண்டே. 1448

இரண்டுபடி யாகவே வொட்டக் காய்ச்சி
எள்ளெண்ணெய் நாழிவிடு அதிமதுரங் கோட்டம்
கொண்டதொரு தக்கோலம் அமுக்கி ராவேர்
குருவான சடாமாஞ்சி மஞ்சிட்டி யோடு
வண்டுசெறி வால்மிளகு நல்மிளகு சுக்கு
வளரிலா மிச்சிருவேலி தக்கோல முடனே
தண்டுடைய சந்தனமுங் குங்குமப்பூ வேலஞ்
சாரமிகு தானிய ரேணுகம் வெட்பாலே. 1449

பாலைதிரி பலையுடனேசிறு நாகப் பூவும்
பாரிலுள்ள சண்பகப்பூத் தேவ தாரம்
சீலமுடன் வகையொன்று கழஞ்சி யொன்று
செவ்வாழை நீர்விட்டு அரைத்துச் சேர்த்துப்
பாலதிலே படியிரண்டு கூட விட்டு
பதமாக வேவடித்து முழுகி னாக்கால்
ஆலமென்ற நீர்விடங்கள் யெல்லாந் தீரும்
அப்பனே கண்குளிர்ச்சி யாகுந் தானே. 1450

(வேறு)

உரையான நேத்திரத்திற் சிவப்புத் தண்ணீர்
ஊடுருவிப் பாயுதற்கு மவிழ்தங் கேளு
நிரையான யெண்ணெய்யொன்று முழுகச் சொல்லே
நிசமான வாதொண்டை யறுகஞ் சாறு
பரையான நல்லெண்ணெய் பொன்னாங் காணி
பகர்ந்த கையான் சாறுடனே பசுவின் பாலும்
குரையான வெள்ளாட்டின் நீருங் கூட்டிக்
குவிந்தலரும் பெருவாயன லத்திச் சாரே. 1451

செய்யும் விவரம்

சாரப்பா வொவ்வொன்று படிதான் வாங்கி
சாதகமாய்ப் பாண்டத்தி விட்டுக் கேளு
வாரப்பா பசுவின்நெய் படிதான் வாங்கி
வளமான அகிற்பட்டை மிளகு சேர்க்க
ஆரப்பா வகையொன்று பலமொன் றாக
அப்பனே வால்மிளகு கிராம்பு ஏலம்
காரப்பா கத்தூரி மஞ்சள் நெல்லி
கருவான வேப்பமுத்து கடுக்காய் சேரே. 1452

## கொள்ளும் விவரம் அனுபானம்

சேரப்பா வகையொன்று வராகன் நான்கு
சேர்த்துமே அரைத்ததிலே கலக்கிப் போடு
பாரப்பா தீயெரித்துக் காய்ச்சி வாங்கி
பக்குவமாய் மெழுகுபதம் வடித்துக் கொண்டு
கூரப்பா தலையிலிட்டுத் தேய்த்துப் பாரு
குளிர்ந்த சலத்தை நேரம்போய் நீர்விட்டாட்டு
தாரப்பா இத்தைலம் முழுகிப் பாரு
தவறாது ரோகம்போம் தப்பா தன்றே. 1453

(வேறு)

கண்ணில் வியாதிக் குடைய கருது மெண்ணெய் தனைக்கேளும்
பண்டே யேல மிலவங்கம் பகருந் தான்றிக் காய்நெல்லி
கொண்ட மதுரம் சாதிக்காய் கோட்டங் கடுகு ரோகணியும்
விண்டொங் கருவாய்ப் பட்டையுடன் விளங்குஞ் சிவந்த
சந்தனமே 1454

சந்த னஞ்சேர் கத்தூரிமஞ்சள் தக்க கடுக்காய் சதகுப்பை
கந்த மகிழுஞ் சண்பகப்பூ கருதும் பச்சைத் திரிகடுகம்
விந்தை யாகப் பலங்கொண்டு வேரின் வகைகேள் குருந்தொட்டி
இந்த வெட்டி வேருடனே இலா மிச்சையின் வேர்த்தேடே 1455

தேடே மிளகு பொற்காளி சிறுகு நறுக்கிப் பலமரைகள்
ஓசாடா யரைத்து நல்லெண்ணெய் தூய யிளநீர்த் தாழையுடன்
கோடாய் வளரும் விழுதினுடக் கொடிய சாக மொவ்வொன்றும்
நாடா நாழி தான்கொண்டு நல்குங் கசாயம் போடுவதே. 1456

போடு மெண்ணெய்ப் பதமெழுகு புகட்டி வடித்து முழுகிடவே
நீடும் பலகண் ணோக்காடு நிமையிற் தடிப்பு நீர்ப்பாய்ச்சல்
கூடு மிரண்டு சுக்கிரனும் கொடிய பற்ப ரோகமுடன்
ஓடு மிந்த வியாதி யெல்லாம் உரைத்தோம் சிவனார் தன்னாணை

(வேறு)

கையாந் தகரை குழிமீட்டான்
கடிய நொச்சி பொடுதலையும்
பெய்யுஞ் சிற்றா முட்டியுடன்
பெருகு வள்ளி விலாமிச்சை

உய்யும் வகையி லிருவேலி
உற்ற முத்தம் நன்னாரி
செய்யும் வகைக்குப் பலமொன்று
திகழெள் ளெண்ணெய் நாநாழி
நைய்ய வரைத்துப் பதத்தில்வடி
நலமாய்த் தலையிற் தேய்த்திட்டு
வைய்யுஞ் சுடுநீ ரதில் முழுகி
வரவெப் பகலும் நோய்தனைக்கேள்
செய்யு முச்சி வாதங்கள்
சூழ்ந்த செவிநோய் கண்காசம்
மெய்யாய் விட்டுக் கடல்புகுந்து
விரைந்தே போகு மெய்யிதுவே.

(வேறு)

குதிரை குளம்பிலைச் சாறும் நல்லெண்ணெய்யும் சரிகூட்டி தண்ணீரிற் கலக்கி, திரிபோட்டு அதில் வடிக்கின்ற நீரை வேறாக வைத்துக் கொண்டு, முழுகுநாள் மேற்படி எண்ணெய்யுடன் மேற்படிநீர் கொஞ்சம் சேர்த்து முழுகி மறுநாள் மிளகைப் பாலிலரைத்துத் தலைக்குத் தேய்த்து முழுகவும். இப்படி 5. 6, நாட்கள், முழுகினபின், வாரத்திற்கொரு முறை முழுகி வர கண்மங்கல், படலம் இவை தீரும். 1459

(வேறு)

பொன்னாங்காணிச்சாறு 1படி, விளக்கெண்ணெய் 1 படி, கலந்து, அதில் இலாமிச்சம்வேர், நெல்லிமுள்ளி, சண்பகப்பூ, வெட்டிவேர், நீர்ப்பூலாவேர், புளிப்புப் பிரண்டைக் கிழங்கு, கொத்தமல்லி, கற்பூரம், கிராம்பு, ஏலம், கோட்டம், இலவங்கம், இலவங்கப் பத்திரி, செவ்வல்லிப்பூ, சிறு தேக்கு இவை வகைக்கு 2 வராகன் எடை, இவற்றை அரைத்துக் கலக்கிக் காய்ச்சி, பதத்தில் சிறுகீரைச்சாறு, நெல்லிச்சாறு, இளநீர், பசுவின்பால் இவை வகைக்கு 1படி. முலைப்பால் ¼ படியும் சேர்த்து மூன்று நாள் சிறு தீயிட்டு எரித்து, நான்காம் நாள் சந்தனம் 1 பலம் அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து, நான்கு நாட்களுக்கு ஒருமுறை தலை முழுகி. பாசிப் பயறை அரைத்துத் தேய்த்து முழுக கண் மேகம், படலம், கண்காசம், சுக்கிரப்படுவன் முதலியவை தீரும். 1460

பத்தியம்-காரம், புகை நீக்கவும்

(வேறு)

பொன்னாங்காணிச்சாறு, சிறுகீரைச்சாறு, கோரைக் கிழங்குச் சாறு, சிறுகீரைச்சாறு, கோரைக் கிழங்குச்சாறு, சிந்திற் கொடிச் சாறு, எலுமிச்சம் பழச்சாறு, சண்பகப் பூச்சாறு, இலவங்கப் பட்டை, அதிமதுரம், ஏலம், செங்கழுநீர், கோட்டம் இச்சாறு களை விட்டரைத்துக் காய்ச்சி வடித்து முழுகவும், சீக்காயிட்டு, வெந்நீர் விட்டு முழுகவும். 1461

(வேறு)

சிவதைச் சாறும், குறுந்தொட்டிச்சாறும் வகைக்கு 1படி, தேவதாரம் 3 பலம், குறுந்தொட்டி வேர் 2 பலம், சந்தனம், 2 பலம், நல்லெண்ணெய் 2படி, இவற்றுள் அரைத்த சரக்குகளைச் சாற்றுடன் கலக்கிப் பசுவின் பால் 2படி சேர்த்துக் காய்ச்சி, வடித்துத் தலை முழுகவும். கண்வாதம், ஆணிப்பூ, காசம், குந்தம். படலம், பில்லம் இவை தீரும். 1462

(வேறு)

கற்றாழஞ்சாறு, கரிப்பான்சாறு, நெல்லிக்காய்ச்சாறு, பசு, வின்பால் இவை வகைக்கு 1 படி, நல்லெண்ணெய் 2படி சேர்த்து, அதில் நன்னாரி வேர், இலாமிச்சம்வேர், அதிமதுரம், சந்தனம், இவை வகைக்கு 2 வராகன் எடை அரைத்துப் போட்டு பதமாய்க் காய்ச்சித் தலை முழுகி வரக் கண்சிவப்பு, தலைவலி, கண்வலி, காதுவலி இவைதீரும். 1463

(வேறு)

நல்லெண்ணெய் 2படி, விளக்கெண்ணெய், வேப்பெண்ணெய், பசுவின் நெய், புங்கெண்ணெய் இவை வகைக்கு ½ படி, நொச்சி யிலைச்சாறு, தழுதாழைச்சாறு, முடக்கொற்றான்சாறு இவை வகைக்கு 1படி, இவற்றைக் கலந்து, அதிற் செங்கழுநீர், கோட்டம் அதிமதுரம், கடுகுரோகணி இவை வகைக்கு 5 வராகன் எடை சூரணித்துப் போட்டு, மெழுகு பதமாய்க் காய்ச்சி, 3 நாட்கள் தானிய புடம் வைத்து, 8 நாட்கள் அல்லது 4 நாட்களுக் கொருமுறை தலைமுழுகி வரக் கண்ரோகம் தீரும். 1464

பத்தியம்—பூசணிக்காயும், தேங்காயும் 40 நாட்கள் நீக்கவும்,

(வேறு)

நல்லெண்ணெய் 1 நாழி எலுமிச்சம் பழச்சாறு 2, தேங்காய்ப் பால் 2, சிற்றரத்தை, அதிமதுரம், நற்சீரகம், சதகுப்பை, கோட்டம், சண்பகப்பூ, ஏலம் வகைக்கு 1 கழஞ்சு, அரைத்து, 3 நாட்கள் ஊறி, நான்கு நாட்கள் காய்ச்சிப் பதத்தில் வடித்துத் தலைக்குத் தேய்த்து, சாமம் ஊற வைத்து, சீயக்காயிட்டு, வெந்நீரில் முழுக நேத்திர வாயு, கண் வியாதி, நீர்முட்டல், கண்ணிலுள்ள சகல வியாதியும் தீரும். 1465

பத்தியம்-இறைச்சி, மிளகாய்,

(வேறு)

எள்ளெண்ணெய், கையாந்தகரைச்சாறு இவை வகைக்கு ¼ படி ஒன்றாய்க் கலந்து, இவற்றுடன், நன்குப் பொடி செய்த மஞ்சட் பொடியை ஒரு எலுமிச்சம் பழ அளவு அதிலிட்டு, 5 அல்லது 6 நாட்கள் சூரிய புடத்தில் வைத்துப் பின்பு காய்ச்சி வடித்து முழுகவும். நேத்திர வாய்வு, தலைநோய்கள் குண மாகும். 1466

பத்தியம்—புளிநீக்கவும்.

(வேறு)

கருநொச்சிச்சாறு. பசுவின்பால், எள்ளெண்ணெய் இவை வகைக்கு 1 குறுணி, இவற்றுடன், நன்னாரிவேர், வாயுவிடங்கம், சிறுநாகப்பூ, வசம்பு, கருஞ்சீரகம், மரமஞ்சள், அமுக்குரா கிழங்கு, இலவங்கப்பட்டை, சாதிக்காய், அரிசித்திப்பிலி, கடுக்காய், கத்தூரி மஞ்சள், கோட்டம், சுக்கு, கிராம்பு, சதகுப்பை, தாளிச பத்திரி, மஞ்சிட்டி, நெல்லி வற்றல் இவை வகைக்கு 3 காசு எடை நிறுத்துக் கொண்டு, இடித்துப் பசுவின் பால் விட்டரைத்துக் கலக்கிக் காய்ச்சி வடிக்கவும், 15 நாட்கள் தானிய புடம் வைத்துத் தலை முழுகி வரப் பார்வை மந்தம், தடிப்பு, சிவப்பு, இவை தீரும். 1467

(வேறு)

கற்றாழஞ்சாறு, தாழம் விழுதுச்சாறு, சிறுகீரைச்சாறு, சிறு பிணைச்சாறு, கற்பூரவல்லிச்சாறு, பினிசாங் கொடிச்சாறு, பொன்னாங்காணிச்சாறு இவை வகைக்கு நாழிச்சாறு கூட்டி பானையில் வார்த்து, இதுவும் பசுவின்பால் நானாழி காடி நானாழி

இளநீர் நானாழி, நல்லெண்ணெய் மூன்று நாழி, இவைகளையும் கூட வார்த்துக் காய்ச்சும்போது கற்க மருந்து, செங்கழுநீர், கோட்டம், நற்சீரகம், கொத்தமல்லி, சண்பகமொக்கு, கல்நார், இவை கழஞ்சு கூட்டி பொடி செய்து பசுவின் பால்விட்டுக் காயும் எண்ணெய்யில் விட்டு வகையாகக் காய்ச்சி மெழுகு பதத்தில் இறக்கி வைத்துக்கொண்டு வடித்து வைத்துக் கொள்ளவும். 1468

இந்த எண்ணெய்யை ஐந்து நாளைக்கொருகாற் தலைக்கு முழுகி வரத் தீரும் வியாதி உட்டிண காசம். பித்தகாசம் விரண சுக்கிரன், ரணசுக்கிரன், படலசுக்கிரன், விழிவியமும் நத்தைப் படலம், பற்பரோகம், ரத்தகுந்தம், நீர்குந்தம் இவையெல்லாம் தீரும்.

(வேறு)

கருவேலம் பட்டை 20 பலம், சீந்தில், சிற்றாமுட்டி, சிறுகீரை, பொன்னாங்காணி, சீதா செங்கழுநீர், தாமரைக்கிழங்கு, நன்னாரி விலாமிச்சு, சந்தனம் வகைக்கு 4 பலம். இவையெல்லாம் இடித்துத் தூணி நீரிற் போட்டு எட்டில் ஒன்றாய்க் காய்ச்சி, அதில் நல்லெண்ணெய், ஆவின் பால், வகைக்கு 4 படி, இளநீர் 2 படி விட்டு கலந்து அதிமதுரம், கோட்டம், சதகுப்பை, சன்ன லவங்கப்பட்டை, சந்தனம், பச்சைக்கற்பூரம், சாதிக்காய், செவ்வள்ளிக்கொடி, ஏலம், பச்சை திப்பிலி மூலம், மல்லி, அகில், வாளுழுவை, செஞ் சந்தனம், முத்தக்காசு, சடாமாஞ்சில், கோரோசனை வகைக்கு 2 கழஞ்சு. இவைகளை அரைத்துப் போட்டுக் காய்ச்சி முழுகிவர 96 நோயும் தலைவலியும் தீரும். 1469

சந்தனத்தூள் 6 பலம், விலாமிச்சுவேர், வெட்டிவேர், முத்தக் காசு, அதிமதுரம், ஏலம், இலவங்கம், இந்துப்பு, கார்கோலரிசி, வகைக்கு 1 பலம். இவைகளை இடித்துத் தூணி நீரிற் போட்டு நாலிலொன்றாய் வற்ற வைத்து, அதில் நல்லெண்ணெய் 3 படி. ஆவின் பால் 6 படி பச்சைகச்சோலம், வெட்டிவேர், விலாமிச்சம் அதிமதுரம், ஏலம், லவங்கம், சிறுநாகப்பூ, நன்னாரி, குங்குமப்பூ, மரமஞ்சள், செங்கழுநீர்க்கிழங்கு, சண்பகப்பூ, அகில், சந்தனம், செவ்வள்ளிக்கொடி, கோட்டம் வகைக்கு 3 கழஞ்சு அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து அதில் குங்குமப்பூ, புனுகு, பச்சைக் கற்பூரம், வகைக்கு 1 வராகன் எடை பொடித்துப் போட்டு முழுகி வர காசம், படலம், பற்பரோகம், புகைச்சல் போன்றவை தீரும்.

(வேறு)

கற்றாழஞ்சோறு 2படி, இளநீர் 1 படி, நல்லெண்ணெய் 3 படி, இவைகளைக் கலந்து 3 நாட்கள் ரவியில் வைத்து நாலிலொன்றாய் காய்ச்சி, அதில் செங்கழுநீர்க் கிழங்கு, ஏலம், இலவங்கம், பச்சை சந்தனம், விலாமிச்சுவேர், வெட்டிவேர், இலுப்பைப்பூ, வெள்ளைக் குங்கிலியம், சிறுநாகப்பூ, நறும்பின் மாஞ்சில், அதிமதுரம், அரேணுகம், மரமஞ்சள், தகரம், புன்னைத்தாது, தாமரை வளையம், ஞாழல், தாது, கொட்டிக்கிழங்கு, நன்னாரி, முத்தக் காசு வகைக்கு 3 கழஞ்சு வீதம் அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகவும். பல கண் ரோகங்களும் தீரும்.

(வேறு)

பேவாழை, வெள்ளறுகு, பிரமி, பொன்முசுட்டை, பாதிரி, நாய் வேளை, தகரை, நெல்லிமுள்ளி வகைக்கு 1 பலம், இடித்து 8 படி தண்ணீரில் போட்டு வற்றவைத்து, இறுத்தது 1 படி, ஆவின் நெய் 1 படி, ஒன்றாகக் கலந்து அதில், முசுமுசுக்கை அரைத்து, சிறுதேக்கு, மலைதாங்கிவேர், மரமஞ்சள், தான்றிக்காய், மதுரம், பூமி சர்க்கரைக்கிழங்கு வகைக்கு 3 வராகன் எடை, ஆவின் பாலி லரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகி வரத் திமிரம், காசம் நீங்கும். 1472

(வேறு)

கரத்தொட்டி, வெற்றிலை, மரமஞ்சள், கஞ்சா இவைகளின் சாறு வகைக்கு ¼ படி, ஆவின்பால், நல்லெண்ணெய் வகைக்கு 2படி மிளகு, கருஞ்சீரகம், கோட்டம் வகைக்கு 1 கழஞ்சு, அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவர விழியில் நீர் வடிதல், பில்லம் இவை தீரும். 1473

## 12. நெய் வகைகள்

இவை, பசுவின் நெய்யுடன் சில சாறுகளையும், சில சரக்கு வகைகளையும் முறைப்படிக் கூட்டிப் பதமாகக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடுவனவாம்.

கண் நோய்களுக்கென்றே கூறப்படும் நெய் வகைகள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

இவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

### 1. சந்தனாதி நெய்

சந்தனம், அதிமதுரம், கோட்டம், தாமரைவளையம், கொட்டிக்கிழங்கு, மான்கொம்பு, வெள்ளாட்டுப்பால், பசுவின் நெய் இவற்றைச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணி விடவும். பித்தம் தொடர்பான கண் நோய்கள் தீரும். (1474)

### 2. சிறுகீரை நெய்

சிறுகீரைச்சாறு, அதிமதுரம், சந்தனம், கருநெய்தற் கிழங்கு, தாமரைவளையம், பசுவின் நெய், சர்க்கரை இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1475)

### 3. செங்கழுநீர் நெய்

செங்கழுநீர்க்கிழங்கு, முல்லைவேர், நெய்தற்கிழங்கு, சங்குப் பொடி, தாமரைக்கிழங்கு, பெருஞ்சீரகம், அதிமதுரம், வெள்ளி லோத்திரம் பசுவின் நெய், பசுவின் பால் இவற்றைச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1476).

### 4. நெய் (பொது)

நந்தியாவட்டப்பூச்சாறு, பனைமட்டைச்சாறு, முலைப்பால், முருங்கைப்பூச்சாறு இவை வகைச்கு 1 உழக்கு, சந்தனம், அதி மதுரம், மஞ்சள், பனைக்குருத்து இவை வகைக்கு 1 கழஞ்சு, ஓரிதழ்த்தாமரைச்சாறு, பசுவின்நெய் இவை வகைக்கு 1 உழக்கு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1477)

### 5. நெய் 2

சந்தனம், அதிமதுரம், கொடுப்பைவேர்ச்சாறு, சிறுகீரைவேர்ச் சாறு, பசுவின்நெய் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து முறைப் படிக்காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். சுக்கிரன் போன்ற பல நோய்களும் தீரும் (1478)

### 6. நெய் 3

கொத்தான்சாறு, பசுவின் நெய், வகைக்கு 1 உழக்கு, அதி மதுரம் கூட்டிச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணி லிடவும். கண் நோய்கள் தீரும். (1479)

### 7. நெய் 4

பசுவின்நெய், பனைமட்டைச்சாறு, தண்ணீர், மட்டியிறைச்சிப் பால் இவற்றை ஓரளவாய் எடுத்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1480)

### 8. நெய் 5

பசுவின் நெய், மட்டியிறைச்சிப்பாலும் ஓரளவாய்க் கூட்டி முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். (1481)

## 9. நெய் 6

சிறுகீரைவேர், பொன்னாங்காணிவேர், நந்தியாவட்டப்பூ, முருங்கைப்பூ, பனை மட்டை, கோவையிலை, பசுமஞ்சள் இவற்றின் சாறுகள் வகைக்கு 1 ஆழாக்கு, 5 எலுமிச்சம் பழச்சாறு, பசுவின் நெய் $\frac{1}{2}$ படி, எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1482)

## 10. நெய் 7

பசுவின் நெய் 1 படி நற்சீரகம், ஈருள்ளி, நத்தைப்பால், இவற்றையும் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1483)

## 11. நெய் 8

புளியிலைச்சாறு, முருங்கைப் பூச்சாறு, துளசிச் சாறு, பனை மட்டைச்சாறு, வில்வ இலைச்சாறு, குளக்கிழிஞ்சி நீர், பசுவின் நெய், முலைப்பால் இவை வகைக்கு 1 உழக்கு, காவிக்கல், அதிமதுரம், சந்தனச் சாந்து, ஏலம், பொன் மெழுகு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1484)

## 12. நெய் 9

பனை மட்டைச்சாறு, தும்பைப்பூச்சாறு, நந்தியாவட்டப் பூச்சாறு, வெள்ளைக் காக்கணப் பூச்சாறு, கிழிஞ்சி நீர், இழைத்த சந்தனம், மான் கொம்பு இழைத்தது, பசுவின் நெய் இவை வகைக்கு 1 உழக்கு எடுத்துச் சேர்த்து முறைப்படிக் காய்ச்சி வடித்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1485)

### சந்தனாதி நெய்

சந்தன மதுரம் கோட்டம் தாமரை வளையங் கொட்டி
கந்தமான் கலங்கொம் போடு கருதுவெள் ளாட்டுப் பாலும்
முந்தவே நெய்யும் நாழி முறைமையாய்ப் பண்ணிக் கண்ணில்
சிந்துறப் பித்தம் போக்குஞ் செழுஞ்சந்த னாதி யாமே.

### சிறுகீரை நெய்

சிறுகீரை வேர்மதுரம் சேர்ந்தகந்தங் கருநெய்தல்
உறுகின்ற தாமரையின் உகவளையம்—நறுக்கினபின்
நெய்யிலுஞ் சர்க்கரையும் நேகவெந்து கண்ணிலிடச்
செய்வாய் சிறுகீரை நெய்.

## செங்கழுநீர் நெய்

வீசு செங்கழு நீர்முல்லை நெய்தலும்
விளங்க வேகொடி யோடுநற் கண்டியும்
பேசு சங்கு வீரப்புண்ட ரீகமும்
பெருத்த சீரக மும்மடை வாகவே
வாசி யான மதுரமும் லோத்திரம்
வந்த நெய்யுடன் பாலது வுங்கூட்டி
மாசி லாதனல் காட்டி வடித்திட
வளரு நோய்கதிர் முன்பனி யாகுமே.

## நெய் (பொது)

நந்தியா வட்டப் பூச்சாறும்
நற்பனை மட்டை யின்சாறும்
மந்தியார் திண்ணு முலைப்பாலும்
வளரு முருங்கைப் பூச்சாறும்
சந்தித்த நாலு வகையும்
தன்னிற் தன்னிற் சாறுழக்கு
வெந்தியா சந்த மதிமதுரம்
மருவு மஞ்சட் பனைக்குருத்து
முந்த யான்சொன் னவைநாலும்
மூடிக் கழஞ்சரை யோரொன்றும்
எந்தியான் சொல்வே ணீகேளாய்
எரியிறச் சியுமிப் படிக்கொள்க
தந்த மிட்டு மூடிவைத்துத்
தன்னு மோரிதழ்ச் சாறுழக்கு
பந்திப் பசுவின் நெய்யுழக்கு
மருவ வெந்துவடித் துநிறுத்தக்
கந்தித் திரளுங் கண் சிவப்பும்
கண்ணிற் சாரங் கையிதுவே. 1477

(வேறு)

சந்தன மதிமதுரம் சாற்றுங் கொடுப்பை சிறுகீரை
முந்த யிவைவே றரைத்தெடுத்து முதிய நெய்யிற் பதம்வடித்து
வந்தே கண்ணி லொழுக்குவீராய் மாறு மிரண சுக்கிரனும்
குந்த முள்ளே தான்வாங்கும் கொதிக்குங் கண்ணில்வியா தியும்
போமே. 1478

(வேறு)

கொத்தான் சமூலத்துடனே கொண்டு வந்து பசுவின் பால் தெளித்து, இடித்து, நாழிச்சாறு கொண்டு, அந்தச் சாற்றில் நறு நெய் உழக்குக் கலந்து, அதிமதுரம் அரைத்துக் கரைத்து, எரித்து வடித்துக் கண்ணுக்கு நிறுத்தக் கண்ணோக்காடு, காசம், படலம், மந்தம், திமிரம், அதிகோபம் எல்லாம் தீரும். 1479

(வேறு)

பசுவின் நெய், பனை மட்டைச்சாறு, நல்ல தண்ணீர், மட்டி யிறைச்சிப் பால் இவை சமன் மூன்றும் கூட்டி எரித்துக் கண்ணுக் குக் குத்தவும். கண்ணிற் கொப்புளமும், நெருப்புப் பட்டதும் ஆறும், 1480

(வேறு)

பசுவின் நெய்யும், மட்டி யிறைச்சிப் பாலும் கூட்டி எரித்து கண்ணில் குத்தவும். கை கண்டது. 1481

(வேறு(

சிறுகீரை வேர், பொன்னாங்காணிவேர், நந்தியா வட்டப்பூ, ஒவ்வொன்று அரைத்து மூன்று பாக்களவு முருங்கைப்பூ தட்டிச் சாறு பிழிந்து, சாறு ஆழாக்கு, பனை மட்டைச்சாறு, கோவைச் சாறு ஆழாக்கு, பசு மஞ்சட்சாறு ஆழாக்கு, ஐந்து எலுமிச்சம் பழச் சாறு, பசுவின்நெய் ½ படியும் கூட்டி, வெந்து வடித்து கண்ணில் இரண்டு நேரமும் விடவும். கண்ணில் விரணமும், சீழும் ஓடுவும் தீரும். 1482

(வேறு)

பசுவின் நெய் 1 படி, இதில் நற்சீரகம் ஒரு சிரங்கை, பச்சைத் தண்ணீர் வார்த்தரைத்துப் போடவும். ஈருள்ளி யுரித்து அரிந்து அரைப்படவும். நத்தைப் பால் சிறுகரண்டியாலே ஒரு கரண்டி விடவும். இவையெல்லாம் கூட்டி, அடுப்பில் வைத்து, தீபாக்கனி ஆக மெள்ள எரித்து மெழுகு பதத்தில் வடித்து வைத்துக் கொண்டு, கண்ணுக்கு இரண்டு மூன்று துளி விழப் பிழியவும். ஒரு நாளைக்கு மூன்று நேரம் விழப் பிழியவும். இப்படி நாற்பது நாட் கள் பிழியவும். விரண சுக்கிரன், குந்தம், கண்வலி, நேத்திர வாய்வு, படலம், சதை வளர்த்தி, நீர் வடிதல், கண்ணில் பல வியாதியும் தீரும்.

இந்த நெய் குத்துவதற்கு முன்னே பச்சிலைச் சாறு மூன்று நாட்கள், நான்கு நாட்கள் கண்ணுக்குக் குத்திப் பிறகு நெய் குத்தவும்.

பச்சிலை எது துரோண பத்திரியாவது, கண்ணுப் பூனைப் பூண்டு இது பச்சையாகக் கசக்கிக் கண்ணுக்கு இரண்டு துளியாக விடவும்.

இரண்டு நாட்கள் விட்டு பிறகு நெய் குத்தவும். இரண சுக்கிரனுக்கு மாத்திரமல்லாமல் மற்ற நோவுக்கும் குத்தவும். பத்தியம் பசுவின் பால் நெய், துவரை, பாசிப் பயறு, சிறுகீரை, முருங்கை இலை, காய், வாளை. 1483

(வேறு)

புளியிலைச் சாறு, முருங்கைப் பூச்சாறு, துளசிச்சாறு, பனை மட்டைச்சாறு, வில்வ இலைச் சாறு, குளக்கிழிஞ்சி நீர் இவை வகைக்கு 1 உழக்கு எடுத்து வடிகட்டி, இவற்றுடன் பசுவின் நெய், முலைப்பால் வகைக்கு 1 உழக்கு சேர்த்து, இவற்றுடன், காவிக்கல், அதிமதுரம், சந்தனச் சாந்து. ஏலம், பொன் மெழுகு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்து, அரைத்துச் சாறுடன் கலந்து, காய்ச்சி வடிக்கவும். இதில் ஒரு துளி தினமும் கண்ணிலிட விரண சுக்கிரன், விழிவிழுங்கி, நத்தைப் படுவன், படலம், பிரிசல், காசம், வெள்ளெழுத்து, புகைச்சல், சதை வளர்த்தி இவை தீரும். 1484

(வேறு)

பனைமட்டைச் சாறு, தும்பைப் பூச்சாறு, நந்தியா வட்டப் பூச்சாறு, வெள்ளைக் காக்கணப் பூச்சாறு, கிழிஞ்சியின் நீர்' இவை வகைக்கு 1 உழக்கு, இழைத்த சந்தனம், இழைத்த மான் கொம்பு இவை இரண்டையும் 1 உழக்கு பசுவின் நெய்யில் சேர்த்து, முன் சொன்ன சாறுகளுடன் கூட்டிக் காய்ச்சி வடித்து, கண்ணில் ஒரு துளி விடக் காசம், இரணசுக்கிரன் கண்ணோய் போன்றவை தீரும். 1485

## 13. மை வகைகள்

இவை, சில சாறு வகைகளையும், சில சரக்கு வகைகளையும் முறைப்படித் துணியில் சேர்த்துத் திரியாக்கி, விளக்கிலிட்டு ஏற்றி அதன் மீது புதுச் சட்டியில் மை பற்ற வைத்து, அத்துடன் பசுவின் வெண்ணெய் கலந்து வைப்பதாம்.

இவை, வெண்ணெய் மருந்து என்றும், களிம்பு என்றும், வெவ்வேறு வகைகளாகவும் கூறப் படுகின்றன, எல்லா வகைகளிலும் வெண்ணெய் கூட்டி மை போல இழைத்துத் தாமிரச் சிமிழ், கொம்புச் சிமிழ் இவற்றில் அடைத்து வைத்துத் தேவையான போது கண்ணிலிடச் செய்வர்.

கண் நோய்களுக்கென்றே கூறப்படும் மை வகைகள் தொகுத்து இங்குக் கொடுக்கப் பட்டுள்ளன. இவற்றில், பெயருள்ள வற்றின் தலைப்புகளை அகர வரிசையில் முறைப்படுத்தியும், பிற மை வகைகளை மை 1, 2 போன்ற தலைப்பு களிலும் காணலாம்.

இவ்வாறு கூறப்படும் 48க்கும் மேற்பட்ட மை வகைகளின் விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

### 1. கருடாஞ்சனம் 1

சிறுகீரை, பொன்னாங்காணி, வெள்ளைச் சாரணை வேர், வெள்ளைக் காக்கணம் வேர், தேற்றான் விதை, தலையோடு, சேவல் நெஞ்செலும்பு, பவளம், முத்து இவற்றை ஓரளவாய்

நல்லெண்ணெய் விட்டு மை போலாட்டிக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1486-1487)

## 2. கருடாஞ்சனம் 2

துத்தம், இந்துப்பு, திரிகடுகம், வெண்காரம், திரிபலை, சீனக் காரம், பீதரோகணி, இரும்பு, செம்புதிராய், கற்பூரம், மனோ சிலை, புங்கம்விதை இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து அரைத்துக் கண்ணிலிடவும். (1488)

## 3. கபால மை

வெள்ளைப் பஞ்சைக் கள்ளிப் பாலில் தோய்த்து உலர்த்தித் திரியாகச் செய்து, இலுப்பை யெண்ணெய், பசுவின் நெய் இவற் றைத் தலையோட்டில் ஊற்றி, அதில் திரியைப் போட்டு விளக் கெரித்து மேலே சட்டி மூடி மை யெடுத்து வைக்கவும். இதைக் கண்ணிலிட அழிகண் போன்ற பல நோய்களும் தீரும். (1489)

## 4. குமரி மை

சோற்றுக் கற்றாழையைத் தோல் நீக்கி, சோற்றை எடுத்து அதை எலுமிச்சம் பழத்தினுள் 3 நாட்கள் வைத்தெடுத்து, மீண்டும் இதே போன்று மூன்று நாட்கள் வேறு பழத்தில் வைத் தெடுத்து எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து மையாகத் திரட்டி வைக்கவும். இதைக் கண்ணிலிடக் கண்ணோய்கள் தீரும். (1490)

## 5. சங்கிலை மை

சங்கிலைச் சாற்றைப் பிழிந்து முறைப்படி மையாக்கி இடவும். (1491-1494)

## 6. சுத்த அஞ்சனம்

துருசைப் பொடித்துத் துணியில் வைத்துத் திரித்து, அகல் விளக்கில் பசுவின் நெய் விட்டு அதில் திரியைப் போட்டு விளக் கேற்றி, மேலே ஒரு புது சட்டி கொண்டு மூடவும். சட்டியின் உட் புறம் படியும் மையுடன் கருவைப் பிசினும் சேர்த்து எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து வெண்ணெய் கூட்டிச் சிமிழில் வைக் கவும். இதைக் கண்ணிலிடவும் பல கண் நோய்களும் தீரும். (1495)

7. சூதரஞ்சனம்

அஞ்சனக்கல், நிமிளை, இரசம், காரீயம், பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரளவாய் கூட்டி மை போலாட்டி எடுத்துக் கண்ணி லிடவும். கண் நோய்கள் தீரும். (1496)

8. தும்பை மை

சிறு தும்பையின் சாற்றைப் பிழிந்து முறைப்படி மை யாக்கிக் கண்ணிலிடவும். கண்நோய்கள் தீரும். (1497-1498)

9. நயனாமிர்த மை

சதுரக் கள்ளிப்பாலைத் துணியில் ஏழு முறை ஊட்டி நிழலிலுலர்த்தி எரித்து எடுத்து, அதே அளவு பசுவின் வெண் ணெய் கூட்டி இழைத்து மையாகத் திரட்டி வைத்திடவும். கண் ணொளி பெறும். (1499)

10. நயனாமிர்த மை

வெள்ளைத் துத்தமுடன், வெள்ளைச் சாரடைச் சாறு. பசுவின் வெண்ணெய் இவற்றையும் சேர்த்தரைத்து மையாக்கி வைத்திடவும் கண்நோய்கள் தீரும் (1500)

11. நீல கருடாஞ்சனம்

துத்தம், இந்துப்பு, சுக்கு, மிளகு, அரிசித் திப்பிலி, தேற்றான் விதை, அஞ்சனக்கல், வெண்காரம், கடுக்காய்த்தோல், தான்றிக் காய்த்தோல், நெல்லி வற்றல், சீனக்காரம், பீதரோகணி, இரசம், இரும்பு, செம்பு, ஈயம், நாகம், பச்சைக் கற்பூரம், மனோசிலை, சங்கு இவற்றை ஓரளவாய் எடுத்து அரைத்து மையாக்கி இடவும். (1501)

12. பொன்னாங்காணி மை

பொன்னாங்காணிச் சாற்றைப் பிழிந்து முறைப்படி மையாக்கி இடவும் கண்நோய்கள் தீரும். (1502-1503)

13. மச்ச இரத்தின அஞ்சனம்

பெரிய வரால்மீன் தலையிலுள்ள கல்லும் குங்குமப்பூவும் ஓரளவாய்க் கொண்டு, அஞ்சனக்கல் 1 காசு எடையும் சேர்த்து, புளிப்பு மாதுளம் பழச்சாறு விட்டரைத்துலர்த்தி மையாக்கி இடவும். (1504-1505)

## 14. மலரஞ்சனம்

இரசம், அஞ்சனக்கல், வெற்றிலை, காரீயம் இவை வகைக்கு 3 பலம் எடுத்து குகையில் வைத்துருக்கிப் பதமாக எடுத்து வைத்திடவும். கண்நோய்கள் தீரும். (1506)

## 15. முசுமுசுக்கை மை

முசுமுசுக்கைச் சாற்றைப் பிழிந்து முறைப்படி மையாக்கி இடவும். கண்நோய்கள் தீரும். (1506-1507)

## 16. வரால்மீன் மை

வரால்மீன் குடலும் பசுவின் வெண்ணெய்யும் ஓரளவாய், கொண்டு அரைத்து வைத்திடவும். கண்நோய்கள் தீரும். (1508)

## 17. வல்லாரை மை

வல்லாரைச்சாறு, வில்வயிலைச் சாறு, பசுவின் வெண்ணெய் சுத்தமான எள் இவை ஓரளவாய் எடுத்தரைத்து இடவும். கண் நோய்கள் தீரும். (1509)

## 18. மை (பொது) 1

இந்துப்பு, மிளகு, அஞ்சனக்கல், வெள்ளைச் சாரணை வேர், வெள்ளிலோத்திரம், மரமஞ்சள், கடுக்காய், திப்பிலி, பசுவின் வெண்ணெய், சங்கு, சீனக்காரம், சந்தனம். அதிமதுரம், வேப்ப மொட்டு, பெருங்காயம், கடல்நுரை, மனோசிலை, துத்தம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து, தேன் விட்டு முறைப்படி அரைத்திடவும். இதைக் கடுகளவு எடுத்துக் கண்ணிலிடவும் கண் நோய்கள் தீரும். (1510-15 1)

## 19. மை 2

வரட் பூலாயிலை, கருவேலானிலை இவை வகைக்கு 1 குத்து, தான்றிக்காய், மாசிக்காய், கடுக்காய், காசுக்கட்டி இவை வகைக்கு 1 வராகன் எடை, இவற்றை வேக வைத்துப் பிழிந்திடவும். இத்துடன், அபினியும் படிகாரமும் வகைக்கு $\frac{1}{4}$ வராகன் எடை சேர்த்துக் காய்ச்சி முறைப்படி மையாக்கி இடவும். (1512-1514)

## 20. மை 3

எருக்கம் பாலைத் துணியிலூட்டி உலர்த்தித் திரியாக்கி வெள்ளாட்டு நெய்யில் விளக்கேற்றி மையெடுத்துக் கண்ணி விடவும். கண்நோய்கள் தீரும். (1518)

## 21. மை 4

சூதம் 2 பங்கு, கெந்தி 3 பங்கு, வெள்ளைச் சாரணை வேர், நேர்வாளம் இவை வகைக்கு 4 தூக்கு சேர்த்து சம்பீரச் சாற்றினாலாட்டி மையாக்கி இடவும். கண்நோய்கள் தீரும் (1519)

## 22. மை 5

எருமை வெண்ணெய் 1 பலம், சீனக்காரம், $\frac{1}{4}$ பண எடை எடுத்துச் சேர்த்து மை போலாட்டிச் சிமிழிலடைத்து வைக்கவும். இதைக் கண்ணிலிடவும். பல கண்நோய்களும். தீரும். (1528-1530)

## 23. மை 6

பசுவின் வெண்ணெய் 1 பலம் எடுத்துப் புதுசட்டியிலிட்டு, குளிர்ந்த நீரை முழுகுமளவு விடவும். இந்நீரைத் தினமும் மாற்றவும் இவ்வாறு 6 மாதம் செய்து எடுத்துப் பீதரோகணி $\frac{1}{4}$ பலம் சேர்த்துப் பழச்சாறு விட்டரைத்துக் களிம்பு போலாக் கிடவும். கண்நோய்கள் தீரும். (1531-1532)

## 24. மை 7

மடல் துத்தம் பொடியுடன் எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து வெண்ணெய் கூட்டியிடவும் (1533)

## 25. மை 8

பொன்னாங்காணி இலை, வேர் இவற்றை மை போலரைத்து வெண்ணெய் கூட்டி இடவும். (1535)

## 26. மை 9

பருத்தியிலைச் சாறுடன் மிளகு, திப்பிலி, சுக்கு இவற்றை அரைத்து வெண்ணெய் கூட்டி இடவும். (1537)

## 27. மை 10

தும்பைப்பூ, திப்பிலிப்பூ, காரெள்ளுப்பூ, நந்தியாவட்டப்பூ, புளியம்பூ இவற்றை ஓரளவாய்த் தேன் விட்டரைத்து மையாக்கி இடவும். (1538)

28. மை 11

சுகுளப் பருப்பு பிளவை, மிளகு இவற்றைக் கடுக்காய்க்குள் புதைத்துச் சீலை செய்து எரித்து எடுத்த கரியுடன், பசுவின் வெண்ணெய் கூட்டி, அத்துடன், பொன்னாங்காணிச்சாறு, முசுமுசுக்கைச் சாறு, சடைப்பூண்டுச்சாறு, உகாய்த்தழைச்சாறு, பிண்ணாக்குத் தழைச்சாறு, நாயுருவிச்சாறு, மைப்பூண்டுச்சாறு, அத்தித்தழைச் சாறு, முலைப்பால் இவற்றை ஓரளவாய்ச் சேர்த்துக் காய்ச்சி எடுத்து அரைத்திடவும். கண்நோய்கள் தீரும். (1539)

29. மை 12

பல மாணிக்கம், வசம்பு, கடுக்காய், கருஞ்சீரகம், அசமோதகம் திப்பிலி, உள்ளி, வெண்காரம், சீனக்காரம், இந்துப்பு இவற்றை ஓரளவாய்ச் சேர்த்து அரைத்துத் துணியிலூட்டி உலர்த்தி, பசுவின் நெய் விளக்கேற்றி மை பற்றி, அத்துடன் வெண்ணெய் சேர்த்திடவும். (1540)

30. மை 13

புங்கம் பட்டைச்சாறுடன், தேன், பச்சைக்கற்பூரம் இவற்றைச் சேர்த்தரைத்து மை போலாக்கி இடவும். கண் நோய்கள் தீரும். (1541)

31. மை 14

வெள்ளெருக்கம்பாலைத் துணியிலூட்டி உலர்த்தித் திரியாக்கி நல்லெண்ணெய் விளக்கிலிட்டு மை பற்றி எடுத்து அத்துடன், குப்பைமேனிச்சாறு தடவி அத்துடன், துத்தம், துருசு, பலகறை, இந்துப்பு இவற்றை முசுமுசுக்கைச்சாறு விட்டரைத்துச் சேர்த்து, வெண்ணெய் கூட்டி இடவும். கண் நோய்கள் தீரும். (1542)

32. மை 15

துத்தம், துருசு, வெண்கலப்பொடி, திப்பிலி, உப்பு, மணக் கடுக்காய், களிப்பாக்கு இவற்றை ஓரளவாய்க் கூட்டி எலுமிச்சம் பழச்சாறு, வேப்பிலை, புளியிலை, விளாயிலை, பிலியிலை, கையாந்தகரையிலை இவற்றின் சாறுகளை ஓரளவாய்ப் பிழிந்துத் துணியிலூட்டி மை பற்றவும். இச்சாறுகளைச் சட்டியில் பூசி அதில் படிந்த மையுடன், பற்றி எரிந்த திரிச்சாம்பலும் கூட்டி, அத்துடன், பசுவின் வெண்ணெய் கூட்டியிடவும். கண் நோய்கள் தீரும். (1543)

## 33. மை 16

செங்கற் பொடியும் பசுவின் வெண்ணெய்யும் கூட்டி மை போல அரைத்துப் போடவும். (1545)

## 34. மை 17

பச்சைக் கற்பூரம், பசுவின் வெண்ணெய், புளியிலைச்சாறு இவற்றைச் சேர்த்து மை போலரைத்து இடவும். (1546)

## 35. மை 18

துத்தம், துருசு இவை வகைக்கு 1 பலம் எடுத்து அத்துடன், சாரணை, கையாந்தகரை, வெற்றிலை இவற்றின் சாறுகளை விட்டரைத்துப் புதுச் சட்டியில் பூசி நெய் விளக்கேற்றி மை பற்றவும். இத்துடன் வெண்ணெய் கூட்டி இடவும். கண் நோய் கள் தீரும். (1547)

## 36. மை 19

வெள்ளாட்டு நீரைக் காய்ச்சி மையாக எடுத்துத் தண்ணீரில் குழைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1550)

## 37. மை 20

செங்கடுக்காய் சுட்ட கரி, துருசு எரித்த பொடி, கோரோசனை இவை வகைக்கு 1 வராகன் எடை, பசுவின் வெண்ணெய் 1 பலம் கூட்டி அரைத்து இடவும். கண் நோய்கள் தீரும். (1551)

## 38. மை 21

கடுக்காயைச் சீலை செய்து எரித்து எடுத்த சாம்பலுடன் பசுவின் வெண்ணெய் கூட்டி மை போல ரைத்து இடவும். கண் நோய்கள் தீரும். (1554)

## 39. மை 22

மல்லிகை, நந்தியாவட்டை, விஷ்ணுக்கிராந்தி, சீதேவி செங் கழுநீர், கையாந்தகரை, பொன்னாங்காணி, பேயகத்தி இவற்றின் வேர்களை ஓரளவாய் எடுத்துப் பொடித்துத் துணியில் பரப்பி எடுத்து நல்லெண்ணெய் விளக்கில் மை பற்றி அத்துடன், வெண் ணெய் கலந்து வைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1552)

40. மை 23

துத்தம், துருசு, களிப்பாக்கு, காசுக்கட்டி இவை வகைக்கு ¼ பலம் சேர்த்து எலுமிச்சம்பழச்சாறு விட்டரைத்துப் புதுச் சட்டியில் பூசி, கடுக்காயைப் பொடித்துத் துணியிலிட்டுத் திரியாக்கி நல்லெண்ணெய் விளக்கிலிட்டு மை பற்றவும். இத்துடன் வெண்ணெய் கூட்டி இழைத்து எடுத்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1553)

41. மை 24

துத்தம், துருசு இவற்றை ஓரளவாய் எடுத்து அத்துடன், கையாந்தகரை, வெற்றிலை இவற்றின் சாறுகளையும் கூட்டி யரைத்துப் புதுச் சட்டியில் பூசி, நெய் விளக்கில் மை பற்றவும். இத்துடன் வெண்ணெய் கூட்டி இடவும். (1555)

42. மை 25

துத்தம், துருசு, தலைமயிர் சுட்ட சாம்பல் இவற்றைச் சேர்த்து, அத்துடன் பசுவின் வெண்ணெய் கூட்டி இடவும். (1556)

43. மை 26

துத்தம், துருசு இவை வகைக்கு 1 வராகன் எடை, இரதம் ¼ வராகன் எடை, எடுத்துச் சேர்த்து அத்துடன் வெற்றிலைச்சாறு கூட்டியரைத்து, மெழுகு, பசுவின் வெண்ணெய் கூட்டி மையாக்கி இடவும். (1557)

44. மை 27

துத்தம், துருசு, கடுக்காய் சுட்டது, புளியம் பொறுக்கு சுட்டது இவற்றை ஓரளவாய் எடுத்துப் பசுவின் வெண்ணெய் கூட்டியரைத் திடவும். (1558)

45. மை 28

சமுத்திராப்பழம் ஒன்றுக்கு பெருகாந்தரளங்காயைப் பசுவின் நெய்யில் அரைத்து வழித்திடவும். கண் நோய்கள் தீரும். (1559)

46. மை 29

செங்கற்பொடி, அரிசி திப்பிலித்தூள், துருசுத்தூள் இவற்றை பொடுதலைச் சாற்றில் அரைத்து, வெண்ணெய் கூட்டி இழைத்து மையாக்கி இடவும். (1561)

## 47. மை 30

துருசு, துத்தம் இவை வகைக்கு 1 வராகன் எடை, சீனக்காரம் 2 வராகன் எடை, சேராங் கொட்டை, சுட்டகரி, பசுவின் வெண்ணெய் 2 பலம் இவற்றைச் சேர்த்து மைபோலரைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1562)

## 48. மை 31

தலையோடு, வெண்கலச்சதா, துத்தம், இந்துப்பு இவற்றை ஓரளவாய் எடுத்து பனைமட்டைச்சாறு விட்டரைத்து, அத்துடன், பசுவின் வெண்ணெய் கூட்டி இழைத்திடவும். கண் நோய்கள் தீரும். (1563)

கருடாஞ்சனம்

பற்றிநின்ற கண்ணோய்கள் தொண்ணூற் றாறும்
பற்றறுக்கச் சிறுகீரை பொன்னாங் காணி
சிற்றவெள்ளைச் சாரணைவேர் வெள்ளைக் காக்கணம்
சேர்வெவ் வேரெல்லாம் வாங்கு வாங்கே 1486

வாங்கடா தேற்றின்விதை தலைமண்டை யோடு
வளர்சுணங்கின் பலக்கோழி மார்பி லற்றி
வாங்கடா பவளமுத்து யிவைதான் சேர
வரிசையுடன் சமனாகநல் லெண்ணெய் விட்டு
வாங்கடா கல்வத்தில் மயனம் போல
மாட்டிநீ சிமிழிலே வைத்துக் கொண்டு
வாங்கடா கண்ணிலிடு நெடுநாட் சென்ற
வியாதிபோகுங் குந்தம்பூ மாறுந் தானே. 1487

(வேறு)

இக்கதோர் துத்தம் இந்துப்பு
இனியதிரி கடுகம் வீரும் தேற்றாஞ்சாம்
தக்கவெண் காரமுந் திரிபலை சீனக்காரம்
தகபீத ரோகணி ரேசம்
திக்கருமிரும்பு செம்புதிராய் நற்கற்பூரம்
திகழ்மனோ சிலைபுங்கம் விதையிவை
அரைத்து விழிதனி லிடில்வெளி யாகும்
அணிய கருடாஞ் சனமிதே 1488

## கபால மை

காற்றுப் படாமல் வெண்பஞ்சைக்
கள்ளிப் பாலில் தோய்த்துலர்த்தி
ஊற்று மெண்ணெ யிலுப்பையெண்ணெய்
உடனெய் யதையுந் தலையோட்டில்
சேர்த்து விளக்காய் மையாக்கிச்
செலுத்த அழிகண் தீருமென்று
பார்த்து இதனைச் செய்திடிலோ
பறந்தே போகுங் கண்டீரே. 1489

## குமரி மை

குமரியின் கருவைக் கொடுநிம்பப் பழத்தில்
கூர்மையாய் மூன்றுநா ளரைத்துக்
குணமுட னெடுத்து மறுபழந் தனிலே
குறிப்புடன் வைத்ததை யெடுத்து
அமுதைமுன் படியாய் அப்பழந் தன்னில்
வைத்துமுன் படியாதா யெடுத்து
வரிசையா யதைமுன் ரசந்தனி லரைத்து
வகையுடன் விழிதனி லிடுகில்
அமரமும் வெள்ளைப் படலமும் பில்லமும்
ஆனநீர்ப் பாய்ச்சலுந் திமிரம்
அழிகண்ணும் ஆணிப் பூமுத லனைத்தும்
அப்பொழு தேகுமே யொழிந்து
திமிர்தமாம் புவியில் மானிடர் தமக்குச்
செப்பிய மருந்தினைக் கவியாய்த்
தென்திசை வாழும்அகத்திய முனிவர்
திறமுட னுரைத்தனர் பரிந்தே 1490

## சங்கிலை மை

ஓடு வெண்கல மொன்றுகீ ழாகவைச்
சாடுஞ் சங்சிலைச் சாறுபிழிந் திட்டுமேல்
ஆடுஞ் செம்பினா லப்பாமை யானபின்
போடும் நாளேழ் புளிச்சக்கண் ணாறுமே 1491

ஆறும் பாசிப்பய றுபருப் பாவின்பால்
சேரு நல்புழுங் கலரிசி யின்மை
நேருஞ் சர்க்கரை நெய்சுக்கு சீரகம்
கேளும் நற்களிக் கிண்டுண்ணுப் பில்லையே 1492

இல்லை யெடுக்குடச் சீரக கொண்டைகொய்
தில்லை யேகுரு தியெடுத் தேயதை
அல்லை யேபக லாத்தின மேயிடில்
செல்லை யேவிழிச் சியும்புண் ணாறுமே 1493

ஆறு மேசது ரக்கள் ளித்தணல்
நேறு மேவதக் கியிரு நேரமும்
சாறு மேவிழிற் தாடை செவியின்நோய்
தீரு மேபத்தி யம்புளித் தள்ளிடே 1494

## சுத்த அஞ்சனம்

அருமையா முனிவோ ரவனியின் மீது
அழகுடன் மைதனைப் புகழ்வார்
அன்புள ஆதி சுடலையைத் தூசில்
அமர்த்தியே நெய்விளக் கேற்றிப்
பரிவுடன் கருவைப் பிசினுமந் நிறையாய்ப்
பண்புள்ள தேசிச்சா றதனால்
பதமுட னரைத்து ஆவெண்ணெய் சேர்த்துப்
பரிவுட னுரைத்ததை வழித்துத்
திறமுட னதனைச் சிமிழினி லடைத்துத்
தெரிவையே கண்ணைநீ பிரித்துத்
தினங்கடு களவு பிணியினர் விழியில்
செலுத்துமுன் போம்வினை பரிந்து
குறிகெட வந்த பில்லமுங் குந்தம்
கூறிய பூமுதல் மந்தம்
குணமதாஞ் சுத்த அஞ்சன மிதனைக்
கூறினார் மலைமுனி விரித்தே 1495

## சூதரஞ்சனம்

நீடல ரஞ்சனமும் நிமிளைரசங் காரீயம்
ஏடலர்கற் பூர மிவையாவுங்—கூடுகொடி
சேதரஞ்சனம் விழியிற் சேரில் விழியாய்
சூதரஞ் சனத்தின் தொழில். 1496

## தும்பை மை

தீர டாசிறு தும்பையின் சாறது
சேர டாபிழிந் தீர்கறத் தாலிழைப்
பார டாமைப்ப ரிந்திடு கண்ணினுள்
மார டாஅந்தி மாலைவிட் டோடுமே 1497

ஆடப் பாபத்திய முண்டறிந் துக்கொள்
போடப் பாயெழு போதிரு நேரமுஞ்
சாடப் பாபுகை யும்புளி யுந்தவிர்
நாடப் பாவெந்நீ ரன்னமுண் டோடுமே 1498

நயனாமிருத மை

சங்கையாஞ்சதுரக் கள்ளிப்பா லதனைச்
சலவையாந் துணிதனி லூட்டிச்
சாதித்து ஏழு தரமதை யூட்டிச்
சருகது போலவே யுலர்த்தி
அங்கதை யெரித்த கருக்கதை யெடுத்து
அதனொடை ஆவெண்ணெய் சேர்த்து
ஆனவெண் கலத்துப் புறந்தனி லமைத்து
அழகுடன் செம்பினி லிழைத்து
அங்கையால் வழித்துச் சிமிழினில் வைத்து
அரிவையர் பாலினி லிழைத்துத்
தினங்கடு களவு புழுவெட்டு நிமையில்
சாதித்து திசைப்பொழு திடுகில்
மங்கைய ரருளால் அங்கவர் நயனம்
மதியொளி போலவே துலங்கும்
மகிமைசேர் நயனா மிருதமீ தென்று
வகையுட னுரைத்தனர் பெரியோர் 1499

(வேறு)

நலமுடன் முனிவோர் நற்பதி யோர்க்கு
நன்மையா யுரைத்தமை நவில்வேன்
நாட்டினில் வெள்ளை துத்தமா மதனை
நன்மையாய்ப் பொடித்துநீ யதனில்
பலமுடன் வெள்ளைச் சாரடை ரசத்தால்
பேணியே வெண்கலந் தனிலே
பிரியமா யிழைத்து ஆவெண்ணெய் சேர்த்துப்
பேணிநீ மைதனை வழித்துக்
குலமுடன் புவியில் மானிடர் விழியில்
கூட்டின மைதனை யிடிலோ
குடிகெடும் பில்லம் படலமுங் குந்தங்
கொடியதோர் நாகமாம் படலம்

சலமுடன் அறுமென விதிமுறைப் படிமுன்
சான்றினர் அறிவுள்ளோ ரவர்முன்
சங்கையாம் நயனா மிருதமீ தெனமுன்
குறுமுனி யுரைத்தமை குறியே 1500

## நீல கருடாஞ்னம்

மிக்கதோர் துத்த மிந்துப் பினிய திரிகடுகு வீறுதோற்றா மஞ்சனம்
தக்கவெண் காரமொடு திரிபலை சீனாக்காரம் தரும்பீத ரோகணி ரசம்
திக்கா மிரும்புசெம் பியம்நா கம்பூரந் திகழ்ம னோசிலை சங்குடன்
கக்குவே லாமறை விழியதனி லிடநீல கருடாஞ் சனத்தி னியல்பே

## பொன்னாங்காணி மை

தள்ளும் பொன்னாங் கண்ணிரசங் கற்கண்டு
உள்ளு விட்டுறவு செய்த ரைத்துடன்
விள்ளு கம்மாறு வெற்றிலைச் சாறுதுளி
கொள்ளு நற்பற ணைக்குள் மாட்டிடே. 1502

மாட்டு தூபமும் வந்தனை செய்துமை
நாட்டு மண்டலம் நாளிரு போதிடில்
கூட்டு குத்தலும் சூலை புகைச்சலை
ஓட்டும் பத்திய மொன்றிலை தின்றிடே. 1503

## மச்ச இரத்தின அஞ்சனம்

பெரிய வரால்மீன் கல்குங்கு மப்பூ பேசும் அந்நிறையாங்
கரியஞ் சனக்கல் துட்டெடையுங் கனக்கக் குழியில் தானிட்டுத்
தெரியப் புளிமா துளைச்சாற்றில் திறமா யரைத்தே யதிலுலர்த்தி
அரிய பொடியைக் கண்ணிலிட அகலும் பூச்சதை அஞ்சனமே

## மலரஞ்சனம்

முந்தரசம் அஞ்சனம் தம்பலங் காரீயம் மூன்றுபலம் வளமாகவே
அந்தமுள குகைதனில் வைத்துருக்கிப் பதமாய் வந்தபின் பொடியதாய்
அந்தரத சிமிழிலடை அந்தகர் கண்ணிவிடு வெளியாகுமிவை யுண்மையாம்
அந்தமுள துர்மாங்கிசம் பில்லமும் போகுமல ரஞ்சனத்தி னடைவே 1505

## முசு முசுக்கை மை

சுருதி யானமுசு முசுக்கைச் சாறுதனைச்
சுத்த நாதமதில் விட்டுமே
சேதி யானசெம் பதனை வாங்கியதைச்
சுகம தாயிழைத் தானபின்
உருதி ராட்சக்கனி யளவ தானதிலே
உற்ற தோர்எடை வராகனொன்று
உடைத்த தூளது சேர்த்துச் சங்கிலிழை
உறுதி யாயுபய சாமமும்
விருது முற்றவிழை செப்பினால் விபர
மாயரை மயன மாகவே
வெய்ய நீர்சுவர வேவெள் ளெண்ணெய்தனை
விட்டி ழைத்துவழி மைதனைக்
குருதி செம்பதனில் வைத்தெ டுத்ததனைக்
கொடுமை யானவிழி தனிலிடில்
கோல காலவிழி நோய்தன் பேரதனைக்
கூறுவேன் சிறிது பாருமே. 1506

பார மானவிழி கழலை குந்தமொடு
பங்க மானவிழி மந்தமும்
பாலர் தங்கள்விழி மிதளை சூடுகளும்
பரவ லானபுழு வெட்டுடன்
ஆர மானநிமைக் கழலை பூமுளைக
ளான நாகமின் படலமும்
அருவி நீர்விழுகும் பில்ல மானதுவும்
அநேக மானவிழி நோய்களும்
பேர தானமுசு முசுக்கை மையதனின்
பேரு ரைக்கவிழி நோயறும்
பிரிய மாகவினி முழுக வேணுமெனில்
பேணி யாமணக் கெண்ணெயாம்
வீர தாம்பொதிகை வாழ்அகத் தியமுனி
மெய்மை யானமுறை சொன்னதே
விருது கட்டிவிழி மீதிலிட் டிடிலோ
பழுது பட்டவிழி பதுமமே. 1507

## வரால்மீன் மை

நலமுடன் வரால்மீன் இரைக்குடல் தன்னை
நன்னிரை ஆவெண்ணெய் யதனை
நன்மையாம் மதுரைக் கலந்தனி லமைத்து
நல்முறிச் செம்பதா விழைத்துப்
பெலமுடன் வழித்துச் சிமிழ்தனி லடைத்துப்
பேணி நிமைதனைக் குறித்துப்
பிரியமாய்ச் சிறிய பயறள வெழுதிப்
பிணியாளர் கண்ணினை விரித்து
வலமதாய் நீயும் மதிமுகம் நோக்கி
வரிசையாய்ப் பார்க்குமப் பொழுதில்
வசைகெட வந்த படலங் குந்தம்
மருவிய நாகமாம் படலம்
குலமதாங் கழலை ஆணிப்பூ முதலாய்க்
குடியொடுங் கடிகைநா லாறில்
குணமுள வமிர்த சஞ்சீவி யெனும்பேர்
கூறினார் மலைமுனி தெரிந்தே

## வல்லாரை மை

வல்லாரை வில்வரசம் வாங்குமொரு நிறையதில்
வளராவின் நவநீதமும்
வரிசையாய்ச் சுத்தித்த எள்ளுமதில் சேர்த்ததை
வாங்கியே கல்வமேற்றிச்
சொல்லான சுத்தசெம் பதனா விழைத்ததைச்
சுருதியுட னேவழித்துச்
சுகமுள்ள செம்பதில் அடைத்தந்த மைதனைச்
சொல்லுவது நீர்கேளுமே
பொல்லாத பில்லமொடு படலமே குருமுளையும்
போகுவிழி குந்தமதுவும்
போகாத இமைதடித்தல் விரணசுக் கிரனொடு
பொங்கிவரு புழுவெட்டுடன்
மல்லாடி யோடிவிடும் வராமலிரு பொழுதிடில்
மாண்டிடும் நேத்திரரோகம்
வரிசையுள பொதிகைமா மலைமுனிவ ருரைசெய்த
வல்லாரை மைபாருமே. 1509

மை (பொது)

இந்துப்பு மிளகுநீ லாஞ்ச னக்கல்
எடுத்தவெள்ளைச் சாரணைவேர் வெள்ளிலோத்திரம்
மந்தமறு மரமஞ்சள் கடுக்காய் திப்பிலி
மாவெண்ணெய் சங்குமுடி சீனம்
அந்தமதி மதுரம் வேப்பமொட்டு தன்னோடிங்கு
ஆனகட னுரைமனோ சிலையுந்துத்தம்
இந்தவகை சமன்பொடித்து வடித்துக் கொண்டு
இருப்புரலி லிட்டுச்செப் புலக்கையாலே. 1510

ஆட்டுவாய் தேனைவிட்டு மைபோ லாகும்
அத்தனையு மெடுத்தோர்நற் சிமிழில் வைத்து
நீட்டிடவே விழியதனில் கடுகு போலே
நிலைவிட்டுப் போம்படலந் திமிரஞ் சுக்கிரன்
நாட்டினார் தென்பொதிகை மலைவா ழீசர்
நலமுடனே பிரகாசத் தமிழி னாலே
பாட்டாகப் பாடிவைத்தார் உலகத் தோர்கள்
பார்த்தறிந்து பண்டிதர்கள் பிழைக்க வென்றே

(வேறு)

பாடினேன் கண்ணில்நீர் வடிந்த தானால்
பரிவாக வரட்பூலா யிலையோர் குத்து
நாடினேன் கருவேலா னிலையோர் குத்து
நலமான தான்றிக்காய் மாசிக் காயும்
சூடினேன் கடுக்காயுங் காசுக் கட்டி
சுகமாக வகைவகைக்கு வராக னொன்று
கூடினே னிவையெல்லாம் பொடித்துப் போட்டு
குணமாக வேகவைத்துப் பிழிந்தி டாயே 1512

பிழிந்திடுவாய் கரண்டியிலே வேண மட்டும்
புனிதமுடன் அபினியது வராகன் கால்தான்
செறிந்திடுவாய் சீனமது பொரித்துக் கொண்டு
செயலான பொரியதுவும் வராகன் கால்தான்
குழிந்திடுவா யடுப்பிலே காயும் போது
கூசாம லாவரையின் குச்சி யாலே
சுழிந்திடுவாய் மைபோலே கடைவா யப்பா
சுகமாக கண்ணைச்சுற்றி வுளைத்துப் போடே

போடுமுன்னே புளியிலையை வேக வைத்துப்
பொங்கமுடன் கண்ணையுநீ கழுவிப் போட்டு
ஆடுமுன்னே யிந்தயிலை வேது வைத்து
அடவாகப் போட்டவுடன் கண்ணீர் நிற்கும்
நாடுமுன்னே சிவப்பெல்லாம் வாங்கிப் போகும்
நலமான அழுகுகண்ணுந் தீரும் பாரு
கூடுமுன்னே யின்னமொரு வைத்தி யந்தான்
குணமாகச் சொல்லுகிறேன் கேளு கேளே 1514

(வேறு)

பொன்னாங் காணி சிறுகீரை புளியம் பூவும் பூலாவேர்
சொன்னோங் காணும் திரிபலைதுத்தந் துருசு தானே ரிந்துப்பு
தன்கா லொன்று இருகழஞ்சு தனியே புளியிலைச் சாற்றிலரைத்து
சொன்னோங் கண்ணி லாடுபிணிகள் தொண்ணூற் றாறுந்
தீர்ந்திடுமே 1515

(வேறு)

இந்துப்பு திப்பிலி யியல்பீத ரோகணி
நந்திப்பூச் சாற்றில் நயந்தே யுரைத்திட
அந்தகன் கண்ணுக் கருந்ததி தோன்றிடும்
நந்திக்கு நாதனன் நயந்துரைத் தாரே. 1516

(வேறு)

இந்துப்புக் கெடைக்கொத்த சரடுக் கடுக்காயா
யாவெண் ணெய்யிலேற் றரைத்தே வழித்து
பந்தித்த செம்பின் புறத்தப்பி வைத்தால்
பச்சைப் பசுங்கிளிக் கொக்கப் பசுக்கும்
கெந்திக் கொதிட் டழித்திட்ட கண்ணில்
கொள்ளுப் பருப்பத னையொக்க விட்டால்
அந்திக்கு முன்வந்த சேலைப் பழித்த
காரத்தை வென்றிந்திர நீலத் தராமே 1517

(வேறு)

எருக்கம்பால் தன்னை யிழைசீலை யூட்டித்
திருக்கறவெள் ளாட்டுநெய்யால் தீபஞ் – சுருக்காமல்
மையாகப் பண்ணி வளருமழி கண்ணிலிடப்
பொய்யாது மெய்யே புகல். 1518

(வேறு)

செவ்வாக மாலைக்கண் சன்னி பேய்க்குச்
செப்புகிறே னஞ்சனத்தைச் சினக்கக் கேளு
செவ்வாகுஞ் சூதமொன்று கெந்தி மூன்று
தீர்க்கவெள்ளைச் சாரணைவேர் நாலு தூக்கு
செவ்வாக நேர்வாளம் நாலு தூக்கு
சம்பீர சாற்றினாற் குழைய வாட்டி
செவ்வாகு மான்கொம்புச் சிமிழில் வைத்துத்
தேவையென்றாற் பழச்சாற்றில் தீட்டி டாயே.

(வேறு)

சூலை வெற்றிலைச் சாற்றிட்டுச் சுக்கரைத்
தாலைச் சத்தெடு தேத்தரி கண்ணினில்
மேலை வாய்வு வெளிப்பட நீங்கியப்
பாலை யோடிப் பறந்திடுந் தூர்த்திடே. 1520

தூர்த்தி டுஞ்செம்புத் தட்டைக் கவுளத்தில்
பார்த்தி டும்பசு வெண்ணெய் பலமெடை
சேர்த்து வைத்தினைச் செம்பி ரமியின்
சார்த்தி விட்டிடாய் சாமம்நா லாட்டியே. 1521

ஆட்டி டாயிருந் தாரிரு நாழிகை
தீட்டி டாய்தீப தூபங் கொடுத்துடன்
கூட்டி டாய்பறணிக் குள்ள டைத்துமை
நாட்டி டாய்பத்து நாளிரு போதிடே 1522

போதி டும்பட லம்புழு வெட்டொடு
மீதி டுசில மிட்ட குடைச்சலும்
சாற்றி டுபறக் குந்தவ றாமுறை
ஊற்றி டுபுளி யும்புகை தள்ளிடே 1523

(வேறு)

கண்டி டாவில்விலை காண ரசம்பலம்
தண்டி டச் செப்புத் தகட்டைக் கவிழ்த்ததில்
விண்டி டப்பசு வெண்ணெய்விட் டோற்பலம்
உண்டி டப்பீத ரோகணி யாட்டிடே, 1524

ஆட்டி டாய்கழஞ் சுயெடை யானபின்
மாட்டி டாமேல் மறுச்செம்பி னாலிழை
நாட்டி டாயொரு நாட்தவ றாமலே
கூட்டி டாய்ப்பற ணிக்குள்ளும் போட்டிடே 1525

போட்டிடு மையைப் பொற்பணந் தானெடை
ஏற்றி டுமிரு நேரமு மேழுநாள்
பார்த்தி டுங்கண் படலஞ் சிவப்புநீர்
ஆற்றி டுஞ்சூலை யோடிடுஞ் செய்திடே. 1526

செய்யா டாபுளிச் சேரொாங்ணா துபுகை
மெய்ய டாயிள வெந்நீரோ டன்னம்
அய்யடா டாயீ தரிந்திடும் பத்தியம்
பொய்ய டாயிலை பெண்மயல் தீரிடே. 1527

(வேறு)

நிலைத்துப்பார் மேதிவெண்ணெய் பலந்தா னொன்று
நேர்சீனங் காற்பலந்தான் பீத ரோகணி
நிலைத்துப்பா ரரைப்பணந்தான் தூக்கிக் கொண்டு
நீவெண்ணெய் யன்றியிந்த மருந்து மூன்று
நிலைத்துப்பார் தூளாட்டிக் கல்வத் திலிட்டு
நீட்டுவாய் வெண்ணெய்தனைக் கூட யிட்டு
நிலைத்துப்பார் சாமமொன்று வாட்ட வோங்கி
நிசமான வெண்கலத்தின் தூரில் வையே. 1528

வைத்ததொரு மருந்துதனைச் செம்பு கொண்டு
மயனம்போ லிருசாம மாட் டி வாங்கி
மொய்த்ததொரு தாமிரத்தின் சிமிழுக் குள்ளே
முறையாக வமைத்தேதான் மூடிப் போட்டு
எய்த்ததொரு நேத்திரத்தின் நோய்கட் கெல்லாம்
என்மகனே யிடுகடுகுப் பிரமா ணந்தான்
மைத்ததொரு கண்ணிலிடு தீரும் நோயை
மைந்தனே வகையாகக் கேளு கேளே. 1529

கேளப்பா நேத்திரத்தின் வாய்வு தானும்
கெட்டியான மாலைக்கண் யிழிச்சக் கண்ணும்
சூளப்பா கண்ணோவு வலிகள் தானும்
சுற்றுக்கள் குலைந்தகண்ணும் பிரிந்த கண்ணும்

வாளப்பா விழிகுருடு நீர்ப்பில்லம் பூவும்
வளமான குந்தமுத லனைத்துந் தீரும்
வேளப்பா நேத்திரநோய் தொண்ணூ ற் றாறும்
வெல்வதற்கு வெண்ணெய்தனை விள்ளுறேனே 1530

விள்ளுறேன் பசுவின்வெண்ணெய் பலந்தா னொன்று
விவரமுடன் புதுப்பாண்டத் துள்ளே போட்டு
விள்ளுறேன் குளிர்ந்தசலம் நிரம்ப விட்டு
மென்மேலு மிப்படியே நித்த நித்தம்
விள்ளுறே னாறு திங்கள் மறந்தி டாமல்
மேற்பீத ரோகணியை யெடைக்காற் சேரே. 1531

சேர்த்தேதான் செம்பதனாற் பழச்சாறு குற்றி
திரமாக யிருசாமங் களிம்பு சேர்த்து
பார்த்தேதான் காசெடைதான் கண்ணிற் றீட்டிற்
பறக்குமடா தொண்ணூற் றாறும் பாரு
போர்த்தேதா னாறுதிங்கள் மண்டலந்தா னொன்று
போட்டிருந்த வெண்ணெய்யுமாம் போக்குக்
கெல்லாம்
கார்த்தேதான் குருப்பிறகே கவடு நீக்கிக்
கார்த்ததினாற் கருணையிற் கடாட்சிப் பாரே. 1532

(வேறு)

என்றைக்கும் நீர்பொசி வுனிடாய் தினவுற் றிலிங்கண் ணுக்கு
வன்றிக்கு நன்மடற் துத்தப் பொடி செய்து வட்டிலிலே
கன்றிக்க மிச்சம் பழச்சாறு விட்டுநற் காவிச் செம்பால்
துண்டித் தரைத்த ரைத்தா வெண்ணெய் கூட்டித்துடி பெறவே

துடிபெற நாளிரண்டு தானரைத் தானபின் சோதி னைக்கு
வடிவுடன் கண்ணி லெழுதிடு மண்ட லம்வாள் விழியாய்
மருகுடன் வரையம் மேனிக்கு வெண்ணெ யென்ன வெந்து
குடியொரு மண்டல மிப்படிச் செய்யக் குருடில் லையே. 1534

குருடில்லை யுப்புப் புளியும் விலக்கிடு கொள்ள மட்டும்
மருவிலைக் கண்ணினில் மாசியு மில்லை மருந்தொன் றுகேள்
பெருகும் பொன்னாங் காணி வேருந் தழையும் பிடிங்கிவந்து
முருக வரைத்துக் கலத்தினி லப்பி முழக்கு மையே. 1535

முழக்குமையா வெண்ணெய் யாலே நன்றாய்க்
கிழதிறவதை யிளக்கிச் சிமிழிலெடுத்து வைத்தபின்
இளங்கண்ணுக்கு பழக்கி விழியிலெழுத வுண்மீனும்
விளகாற்றருமிக மாலைக்கண் தீரவும் விளக்குகிறேன். 1536

வில்லும் பருத்தியிலைச் சாறு மிளகுக்கு விடம ரைத்துத்
துள்ள வுருட்டி யுரைத்திடு மாலைக்கண் துலங்கும் இன்னம்
உள்ளபடி சுக்கு திப்பிலி தனிலுரைத்து விட்டால்
கள்ளமரும் பலநேந்திர வியாதிக்குக்கா லனிதே. 1537

சாலவும் நந்தியா வட்டம் புளியம்பூ தானிவை யைந்து
காலையிற் தும்பைப்பூ திப்பிலிப் பூவுடன் காரெள் ளுப்பூ
மாலையிற் தேன்விட் டரைத்தே விழிக்கிடு மாசி வெள்ளை
போலவும் வெள்ளெழுத் தெல்லா மகன்றி டும்போக் கிதுவே. 1538

(வேறு)

கடுக்காயை இரண்டாக வெட்டி, உள் விதையை நீக்கி, அதில் 2 பண எடை சுகுளப் பருப்பு பிளவை ஒன்று, மிளகு 2 இவை களைக் கடுக்காய்க்குள் வைத்துச் சீலை சுற்றி, மண்சீலை செய்து, ஒட்டிலிட்டு, ஒரு விறகால் 4 நாழிகை எரித்து, வேகவிட்டு, அந்தக் கரியை வெண்கலத் தட்டில் இட்டு, செம்புக் குழவியால் பொடித்து, மேற்படி பொடியுடன் எலுமிச்சங்காயளவு பசுவின் வெண்ணெய் சேர்த்து, அத்துடன், பொன்னாங்காணிச் சாறு, முசுமுசுக்கைச்சாறு, சடைப்பூண்டுச் சாறு, உகாய்த்தழைச்சாறு, பிண்ணாக்குத் தழைச்சாறு, நாயுருவிச்சாறு, மைப்பூண்டுச்சாறு, அத்தித்தழைச்சாறு, முலைப்பால் இவற்றையும் சரிசமன் கூட்டிச் சேர்த்துக்காய்ச்சி, மீண்டும் வெண்கலத்தட்டில் செப்புக் குழவி யால் ஒரு சாமம் அரைத்து, வெந்தயப் பிரமாணம் எடுத்துக் கண்ணிமை, நடுக்கண், கடைக்கண் இவைகளிற் போடவும்.

சுக்கு, மிளகு, சீரகம் இவைகளைத் தட்டி முலைப்பாலிற் சேர்த்து நசியமிட்டுப் பொட்டணங்கட்டி முகர்ந்தும் பார்க்கவும். 1539

(வேறு)

மாணிக்கம், வசம்பு, கடுக்காய், கருஞ்சீரகம், அசமோதகம், திப்பிலி, உள்ளி, வெண்காரம், சீனக்காரம், இந்துப்பு இவை கூட்டி அரைத்துச் சீலையிற் தடவி, பசுவின்

நெய்யிற் தோய்த்து மை பற்றி வெண்ணெய்யிற் கலப்பிரஞ் செய்து, சிமிழில் வைத்துக் கண்ணிலிட பிரிவு, தினவு, புகை தீரும். 1540

(வேறு)

முற்றின புங்கம் பட்டையை யிடித்துச் சாறு கொண்டு, மேல், தேன் சமன் கலந்து, கலப்பிரத்தில் பச்சைக் கற்பூரம் மூன்று பணவெடை கூட்டி, சாறும் தேனும் விட்டு, மறுகலங் கொண்டு தேய்த்து, கலம் வெளுத்தவுடனே வழித்துச் சீசாவில் வைக்கவும். ஒவ்வொரு கண்ணிற்கும் பயறு அளவு இடவும். காசம் பில்லம், திமிரம், இரணசுக்கிரன், பூப்படலம், நீர்ப்பாய்ச்சல் இவைதீரும். 1541

(வேறு)

வெள்ளெருக்கம் பால் சீலையிலூட்டி உலர வைத்து திரி பண்ணி, மேலே ஒரு சீலை சுற்றினால் கொண்டு கட்டி, நல்லெண்ணெய் வார்த்து மை பற்ற வைத்துக் கட்டி, குப்பை மேனிச்சாறு தடவி, உலர்த்தி, ஏற்றி உதிர்த்து, பிறகு துத்தம், துருசு, பலகறை, இந்துப்பு நான்கும் கூட்டி, முசுமுசுக்கைச்சாறு விட்டரைத்து, பிறகு வெண்ணெய் கூட்டி கலப்பிரஞ் செய்து கண்ணில் எழுந்த வியாதிக்கெல்லாமிடவும் பொறுக்கும். 1542

(வேறு)

துத்தம், துருசு, வெண்கலப்பொடி, திப்பிலி உப்பு, மணக்கடுக் காய், களிப்பாக்கு ஆக 7 மருந்தும் 7 கழஞ்சு கூட்டி, எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, பிறகு வேப்பிலை, புளியிலை, பிலியிலை கையாந்தகரையிலை இவை சாறு வகைக்குச் சரிபிழிந்து சீலை யிலூட்டி, இரண்டு திரி திரித்துச் சட்டியில் இந்தச்சாறு முக்கால் பூசி, இந்தத் திரி கொளுத்தி, சட்டியில் மை பற்ற வைத்து, திரிச் சாம்பலும் சட்டியில் பற்றின மையும் எடுத்துக் கொண்டு, பசுவின் வெண்ணெய்யும் கூடப் போட்டு, இழைத்து வைத்துக் கொண்டு கண்ணுக்குப் போடவும். தீரும் வியாதி கண்ணெழுச்சி, நெறிப்பூ, பிரிச்சல், புழுவெட்டு, இமைதடிப்பு, புகைச்சல், நீர் முட்டு, சிவப்பு, படலம், காசம் இவை மாறும். கைகண்டது. 1543

(வேறு)

சட்டியில் உப்பிட்டுத் தண்ணீர் வார்த்து அடுப்பில் வைத்து ஐந்தெண்ணெய்யும் கூட்டி விளக்கு வைத்துப் பற்றின மையை உதிர்த்துக் கொண்டு துத்தம், துருசு, பசுவின் வெண்ணெய் இவை

யெல்லாம் கலத்திற் போட்டு மறளச்சாறு விட்டரைத்து வைத்துக் கொண்டு கண்ணிலிட பிரிசல்கண் தீரும்.மயிர் முளைக்கும். 1544

(வேறு)

செங்கற் பொடியும் பசுவின் வெண்ணெய்யும் கலத்திற் போட்டுச் செம்பு கொண்டிழைத்து, இரண்டு சாமம் இழைத்துப் போடவும். பிரிசல் கண் தீரும். மயிர் முளைக்கும். 1545

(வேறு)

பச்சைக் கற்பூரத்தைப் பசுவின் வெண்ணெய்யும் புளியிலைச் சாறும் சேர்த்து வெண்கல வட்டிலில் செம்புக் குழவியால் மை போல அரைத்து வைத்துக் கொண்டு கடுகளவு கண்ணில் போடவும். 1546

(வேறு)

துத்தம், துருசு, சீனக்காரம், தலைமயிர் சுட்ட சாம்பல், இவைகளை வட்டிலிலிட்டு, ஆவின் வெண்ணெய் எலுமிச்சம் பழச்சாறும் விட்டு, செம்புக் குழவியால் மைபோல அரைத்து, நெல் எடை கண்ணிலிட நேத்திர வாய்வு, பூச்சி, புழுவெட்டு பூ இவை தீரும். 1547

(வேறு)

துத்தம், துருசு, வெண்காரம் இவற்றைப் பொடித்து ஓரளவாகக் கொண்டு எலுமிச்சம் பழச்சாறு விட்டு, செப்புக் குழவியால் அரைத்துப் போட கண் வியாதிகள் தீரும். 1548

(வேறு)

துத்தம், துருசு இவை வகைக்கு 1 பலம் கொண்டு சாரணை கையான்தகரை, வெற்றிலை இவற்றின் சாற்றில் வெண்கலத் திட்டுச் சங்கால் அரைத்து, புதுச்சட்டியின் மேல் பூசி, விளக்கில் நெய் விட்டுத் திரிகொளுத்தி மேற்படி சட்டி கவிழ்த்து மூடி, மேற்படி சட்டியில் பற்றிய மையை ஆவின் வெண்ணெய்யில் குழைத்துக் கண்ணிலிட கண்ணோய் தொண்ணூற்றாறும் தீரும்.

(வேறு)

வெள்ளாட்டு நீரை .இரண்டு படி வாங்கி வந்து வடிக்கட்டி, ஒரு சட்டியிலிட்டுத் திரளக் காய்ச்சி, சிமிழில் வைத்துக் கொண்டு பண எடை மையெடுத்துத் தண்ணீரிற் தொட்டு இளக்கிக் கண்ணில் விடவும். இப்படி 1 மண்டலம் விடவும். சகல ரோகமும் தீரும். 1550

(வேறு)

செங்கடுக்காய் சுட்ட கரி 1 வராகன் எடை, துருசு தூசில் கட்டி எரித்து பஸ்பம் 1 வராகன் எடை, வெள்ளைப் பசுவின் வெண்ணெய் ! பலம் போட்டு கோரோசனை 1 வாரகன் எடை, கஞ்ச பாத்திரத்தின் புறத்தியிற் காவிச் செம்பு கொண்டு உரைத்து நான்கு சாமம் அரைத்து, மாட்டுக் கொம்புச் சிமிழில் வைத்து அந்தி, சந்தி ஏழு தினங்கள் கண்ணிற் போடவும். 1551

மல்லிகை வேர், நந்தியா வட்டைவேர், விஷ்ணுக் கிராந்தி வேர், சீதா செங்கழுநீர் வேர், கையாந்தகரை வேர், பொன்னாங் காணிவேர், பேயகத்தி வேர் இவை ஒரு சமன்கொண்டு உலர்த்திப் பொடி செய்து வெள்ளிய சீலையிற் பரப்பித் தேய்த்து, நல்லெண்ணெய் தேய்த்து, சட்டியில் மை பதத்தில் வைத்து, அந்த மையை வழித்துப் பசுவின் வெண்ணெய்யிற் கலந்து, கலத்தில் வைத்துக் கண்ணிலிடக் கண் வியாதி தீரும். 1552

(வேறு)

துத்தம், துருசு, களிப்பாக்கு, காசுக்கட்டி வகைக்கு ¼பலம் கூட்டி எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துப் புதுச் சட்டியிற் பூசிக் கடுக்காய் 10 பொடி செய்து சீலையிற் பரப்பி, திரித்து விளக்கிற் போட்டு, நல்லெண்ணெய் விட்டு விளக்கேற்றி மை பற்றவிட்டு, வழித்துக் கொண்டு, அதிலே பசுவின் வெண்ணெய் ஒரு எலுமிச்சங் காயளவு கூடப் போட்டு, கலங்கொம்பு கொண்டு இழைத்து வழித்துக் கொள்ளவும். கண் வியாதி வந்தால் சிறு கண்ணிலிடக் கண்ணிலுள்ள வியாதி, பூச்சிவெட்டு, பூப்பட்டது இவையெல்லாந் தீரும். 1553

(வேறு)

கடுக்காய் 10 உடைத்து, விதைத்தள்ளி, சீலை துணிற் பொட்டணங் கட்டி, ஐந்து சீலை மண் செய்து, ஒரு சாமம் காட்டு விராட்டியிற் புடம் போட்டு ஆர விட்டுப் பொடி பண்ணி கலத்தில் வைத்து, பசுவின் வெண்ணெய் போட்டு, களிம்பு வெண்கலச் செம்பாலிழைத்துச் செம்புச் சிமிழில் வைத்துக் கொண்டு கண்வலி, அழிகண், கோளழை, அரிப்பு, மயிர் உதிர்தல், பூ இவைகளுக்குப் போடத் தீரும். 1554

(வேறு)

துத்தம், துருசு, சாரணை, கையான் சாறுவிட்டு வெற்றிலைச் சாறு கூட்டி, வட்டிலில் தூரியிட்டு, சங்காலாட்டி வழித்துப் புதுச்சட்டியிலிட்டு அப்பி, விளக்கில் நெய் விட்டு திரிக் கொளுத்தி, சட்டியை மூடி எரியிட்டு, தூரிற் பற்றின மையை ஆவின் வேண்ணெய்யிற் குழப்பிக் கண்ணிலிடக் கண்ணோய் போம். தொண்ணூற்றாறு வியாதியும்போம் சுகமாம் பாரே.

## வெண்ணெய் மருந்து

துத்தம் ½ தேற்றான் விதை அளவு, துருசு அதிற்பாதி, பொரி காசரித்தது ½தேற்றான் விதை அளவு. தலைமயிர் சுட்ட சாம்பல் மூவிரற் கொண்டது. மருந்தைப் பொடி பண்ணிக் கலத்திற் போட்டு பசுவின் வெண்ணெய் சுவறி எரிந்து, நீர்வற்றினவாறே எடுத்து, அந்த வெண்ணெய் மருந்துக்கு இரண்டு பங்கு போட்டு நேர்த்தியாக அரைத்து மை பக்குவத்தில் சிமிழில் அடைத்து வைத்துக் கொண்டு கண் படலம், புழுவெட்டு, இழிகண், அமரம், சூடு, வளர்த்தி, பூவுக்கும் போடத் தீரும். 1556

(வேறு)

துத்தம் 1 வராகன் எடை, துருசு 1 வராகன் எடை, இரதம் ¼ வராகன் எடை மூன்றுங் கூட்டி வெற்றிலைச் சாறு விட்டரைத்து, பதமான பிறகு மெழுகு சற்றுக் கூட்டி வெண் ணெய்யும் கூட்டி, பதத்தில் அரைத்து வைத்துப் புண்ணுக்குப் போடவும். கண்ணோவுக்குப் போடவும்.

(வேறு)

கடுக்காய் சுட்டு, துத்தம், துருசு, புளியம்பொறுக்கு சுட்டு இவை சரியாகக் கூட்டிப் பசுவின் வெண்ணெய் இரண்டு பங்கு போட்டு நன்றாயரைத் தெடுத்து வைத்துக் கொண்டு கண்ணிலுண் டானதுக் கெல்லாம் போடவும். இது நல்ல மருந்து.

(வேறு)

சமுத்திராப் பழம் ஒன்றுச்கு பெருகாந்தரளங்காய் கொண்டு வந்து பசுவின் நெய்யில் நன்றாக வெண்ணெய் போல இழைத்து வழித்துச் சிமிழில் அடைத்து வைத்துக் கொண்டு கண்ணிலுள்ள வியாதிக்கெல்லாம் போடவும். பத்திய மில்லை, கண்ணிலுள்ள வியாதி தொண்ணூற்றாறுக்கும் நல்ல மருந்து. 1559

(வேறு)

நாக்கப் பாம்பு தண்ணீர் விட்டுக் கழுவி உருவிப் போட்டு மணல் கழித்துப் போட்டு, ஊமத்தங்காய்ச் சதையைத் தோண்டிப் போட்டு, அதிலடைத்து வாய் மூடிச் சீலை மணஞ் செய்து சாம்ப பலாகப் புடம் போட்டு, அந்தச் சாம்பலெடுத்து ¼ வராகன் எடை, துத்தம் ½வராகன் எடை துருசும் போட்டு களிம்புள்ள கலத்தில் வெண்ணெய்யும் கூடப் போட்டுச் செம்பால் இழைத்துக் கண்ணிலிடப் பிரிச்சல், புழுவெட்டுக்கண் இவை தீரும். 1560

(வேறு)

செங்கற்பொடி 1 வராகன் எடை, அரிசித் திப்பிலித்தூள் 1 வராகன் எடை, துருசுத்தூள் 5 வராகன் எடை, பொடுதலைச் சாறு செல்லத்தக்க அளவு, பசுவெண்ணெய் 2 பலம். இவைகளை ஒன்றாயரைத்து மை பக்குவத்தில் வழித்துத் தாமிரச் சிமிழில் வைத்துக் கண்ணிலிடக் கண்புகைச்சல், வெள்ளெழுத்து, வெண் கடுப்பு நீங்கும். 1561

(வேறு)

துத்தம், துருசு வகைக்கு 1 வராகன் எடை, சீனக்காரம் 2 வாரகன் எடை, சேராங் கொட்டை 2 இதைச் சுட்டுக் கரியாக்கிய பொடி, பசுவெண்ணெய் 2 பலம். இவற்றை ஒன்றாக மைப் போலரைத்து வழித்துத் தாமிரச் சிமிழில் வைக்கவும். இதைக் கண்ணிலிட நேத்திர வாயு போன்றவை தீரும்.

(வேறு)

தலையோடு 4 பண எடை, வெண்கலச் சதா 4, துத்தம் 4, இந்துப்பு 4 ஆக இவை பனை மட்டைச்சாறு விட்டரைத்து மூன்று சிலவுகளில் ஆவின் வெண்ணெய்யில் போட்டுக் கலப்பிரத்தில் களிம்பாக்கி அரைத்துக் கண்ணிலிட அதிமாங்கிச வளர்ச்சி மற்றும் தொண்ணூற்றாறு நோய்களும் தீரும்.

## 14. பொடி வகைகள்

இவை, சில மருந்துப் பொருட்களை நன்கு பொடியாக்கி இடுவதும், சில மருந்துப் பொருட்களைச் சில சாறு வகைகளில் அரைத்து வில்லையாகத் தட்டி நிழலில் உலர்த்தி எடுத்து, முறைப் படிப் புடமிட்டு எரித்துஎடுத்துப் பொடியாக்கி இடுவதும் ஆம்.

கண் நோய்களுக்கென்றே கூறப்படும் பொடி வகைகள் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. 15க்கும் மேற்பட்ட இப் பொடி வகைகளுக்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வரு மாறு காணலாம்.

### 1. அஞ்சனப் பொடி

அதிமதுரம், நெய்தற்கிழங்கு, கடல்நுரை, சங்கு, சந்தனம், திப்பிலி, கோரோசனை, சிறுசண்பகம், மஞ்சிட்டி, சடாமாஞ்சில், கிராம்பு, தாளிசப்பத்திரி, நீலாஞ்சனம் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்துப் பொடியாக்கி வடிகட்டிக் கண்ணில் இடவும். கண் நோய்கள் தீரும். (1564)

### 2. அஞ்சனப் பொடி 2

கந்தகம் 5 பலம், அஞ்சனக்கல் 3 பலம், வெள்ளி 2 பலம், செம்பு 2 பலம், காரீயம் 3 பலம், தங்கம் 1 பலம் எடுத்துச் சேர்த்து குகையிலிட்டு உருக்கி எடுத்துப் பொடியாக்கி இடவும். கண் நோய் கள் தீரும். (1565)

## 3. அஞ்சனப் பொடி 3

சந்தனம், தோற்றான் விதை, துத்தம், துருசு, பீதரோகணி பச்சைக் கற்பூரம் இவற்றை ஓரளவாய்ப் பொடித்துஇடவும் (1566)

## 4. கண்டர் அஞ்சனப் பொடி

துருசைப் பொடித்துக் கடுகளவு கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1567)

## 5. தாமோதரன் பற்பரோகப் பொடி

ஓரிதழ்த் தாமரை வேர், பொன்னாங்காணிவேர். துத்தம், துருசு, பவளம், முத்து, தலையோடு, சங்கு இவை வகைக்கு 1 கழஞ்சு, எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து அடையாகத் தட்டி, புடமிட்டு எரித்து எடுத்துப் பொடியாக்கிக் கண்ணிலிடவும். கண்ணோய்கள் தீரும். (1568)

## 6. பற்பரோகப் பொடி 1

துத்தம் 2 வராகன் எடை, முட்டை ஒடு 4 வராகன் எடை, பலகறை 8 வராகன் எடை, சீனக்காரம் 3 வராகன் எடை, வெண்காரம் 1 வராகன் எடை எடுத்துச் சேர்த்து அத்துடன், எலுமிச்சம்பழச்சாறு சிறுகீரைச்சாறு சேர்த்தரைத்துக் குகையிலிட்டுப் புடமாக எரித்தெடுக்கவும். அத்துடன் பச்சைக்கற்பூரம் ½ பண எடை கூட்டிப் பொடியாக்கிக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1569)

## 7. பற்பரோகப் பொடி 2

துத்தம் 2 வராகன் எடை, சங்குப் பொடி, வரட்பூலாவேர், ஓரிதழ்த்தாமரை வேர் இவற்றை ஓரளவாய் எடுத்துச் சேர்த்து எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்துலர்த்திப் புடமிட்டு எரித்துப் பொடியாக்கவும். அத்துடன் பீதரோகணி, பச்சைக்கற்பூரம் இவற்றையும் பொடித்துச் சேர்த்து வைத்திடவும் (1570)

## 8. வெள்ளைப் பொடி 1

பாற்றுத்தம் 4 வராகன் எடை, வெள்ளிச்சரிகை 1 மாடை எடை, பீதரோகணி 1 வராகன் எடை, வெள்ளைச் சாரணை வேர்ப் பட்டை 4 வராகன் எடை எடுத்துச் சேர்த்து எலுமிச்சம்

பழச்சாறு விட்டரைத்துத் துணியில் சேர்த்துருட்டி புடமிட்டு எரித்துப் பொடியாக்கவும். இதைக் கண்ணிலிடக் கண் நோய்கள் தீரும். (1571)

9. வெள்ளைப் பொடி 2

துத்தம், சிறுகீரை வேர், பொன்னாங்காணி வேர், ஓரிலைத் தாமரை வேர் இவற்றை ஓரளவாய் எடுத்து எலுமிச்சம் பழச் சாறு விட்டரைத்து வில்லையாகத் தட்டி உலர்த்திப் புடமிட்டு எரித்துப் பொடியாக்கவும். இதைக் கண்ணிலிடவும் கண் நோய்கள் தீரும். (1572)

10. பொடி (பொது) 1

வெள்ளி $1\frac{1}{4}$ வராகன் எடை, சீனக்காரம் $1\frac{1}{2}$ பலம். இவற்றைச் சேர்த்துப் புடமிட்டு, பொடியாக்கி எடுக்கவும். இதைக் கண்ணிலிடவும் கண் நோய்கள் தீரும். (1573)

11. பொடி 2

சொறித் துத்தம் 5 வராகன் எடை சங்கு 2 வராகன் எடை, பீங்கான் ஓடு அல்லது பூநீறு 2 வராகன் எடை, கடல்நுரை 1 வராகன் எடை இவற்றைத் தனித்தனியே பொடித்துக் கலந்து வைக்கவும், இதைக் கண்ணிலிடக் கண்நோய்கள் தீரும். (1574)

12. பொடி 3

சீனக்காரம், தலையோடு இவற்றை ஓரளவாய்ப் பொடித்து எடுத்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும். (1575)

14. பொடி 4

துத்தம், துருசு இவை வகைக்கு 1 வராகன் எடை எடுத்து வறுத்து அத்துடன், எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து, அத்துடன், சிறுகீரை வேர், பொன்னாங்காணிவேர், ஓரிதழ்த் தாமரை வேரையும் கூட்டி யரைத்து வில்லையாகத் தட்டி உலர்த்திப். புடமிட்டு எரித்துப் பொடியாக்கவும். இதைக் கண்ணிலிடவும் கண் நோய்கள் தீரும். (1576)

15. பொடி 5

சீனக்காரம், கல்நார், வெள்ளைக்கற்கண்டு, துருசு இவை வகைக்கு 1வராகன் எடை, தலையோடு 2 வராகன் எடை எடுத்துச் சேர்த்துப் பொடித்து வைக்கவும். இதைக் கண்ணிலிடக் கண் நோய்கள் தீரும். (1577)

## 16. பொடி 6

சீனக்காரத்தைப் பொடித்து எடுத்துக் கண்ணிலிடவும். கண் நோய்கள் தீரும் (1578).

### அஞ்சனப் பொடி

அதிமதுரம் நெய்தல்கடல் நுரைசங்கு சந்தனம்
அரிசிதிப்பிலி ரோசனம்
ஆனசிறு சண்பகம் அன்புபெறும் மஞ்சிட்டி
அழகான மாஞ்சிலோடு
துதிசேரு மிலவங்க மொடுதாளி சப்பத்திரி
சொல்லிவை சரியானபின்
தூயநீ லாஞ்சன மிவையொக்க வேயிவைகள்
தூள்செய்து வளமாகவே
புதியசிமிழ் தனிலடை பூவான கண்ணிலிடில்
போடுமே பித்தகாசம்
பொல்லாத காசமும் நில்லாத நீர்விழுதல்
போகுமே செவ்வேரதும்
முதியவலி பில்லமும் வளராது உருண்டையிது
முண்டகண் சொன்னதல்லால்
முன்னோர்கள் செய்தபரி காரமுன் னோதுமிதை
முனிந்துநீ செய்துபாரே. 1564

(வேறு)

கந்தகம் பலமஞ்சு அஞ்சனம் பலம்மூன்று
கேளாய் வெள்ளி செம்பிருபலம்
வந்தபொன் னொருபலம் காரீய மூன்றுபலம்
வளமாக வேயிவை குகையிலிட்டுச்
செந்தநிழ லுருக்கிட்டுப் பொடி செய்து
சிந்தாத சிமிழில் வார்த்தே
அந்தக ரானவர்கள் கண்ணிலிட வேதீரும்
அமராஞ்ச னத்தி னியல்பே. 1565

(வேறு)

சந்தனந் தேற்றான் கொட்டை தன்றுந் துத்தந் துருசுடனே
வந்த பீத ரோகணியு மற்றும் பச்சைக் கற்பூரம்
இந்த ஏழுமா கக்கொண்டே இழைக்கப் பொடிசெய்து வைத்தே
சிந்தை மகிழ்தே கண்ணிலிடத் தீரு மஞ்சனந் தானிதுவே. 1566

## கண்டர் அஞ்சனப்பொடி

கண்டரைப் பொடித்துக் கண்ணில்
கடுகென வெழுதும் போது
முண்டிடும் அடுக்குப் பில்லம்
முளையெழுஞ் சுக்கிர ரோகம்
கொண்டிடுஞ் சொரியும் பில்லங்
குடிகெடும் பற்ப ரோகம்
அண்டிடுங் கழலைப் பூவும்
அகன்றிடு மிதனைச் செய்யே. 1567

## தாமோதரன் பற்ப ரோகப் பொடி

ஓரிதழ்த் தாமரை வேர், பொன்னாங்காணி வேர், துத்தம் துருசு, பவளம், முத்து, தலையோடு, சங்கு, இவை ஒரொரு கழஞ்சு எலுமிச்சம் பழச்சாறு விட்டரைத்து ஓரட்டியாகத் தட்டி ஓட்டில் வைத்து மூடியுந் தாயும் போலே தட்டி அதிலே வைத்துக் கீழும் புளியம் பொறுக்கு வைத்து, அதன் மேலே மருந்தை வைத்து. மேலும் புளியம் பொறுக்கை அமுக்கி நீள சுட்டுப் பின் கீழே பொடி செய்து சிமிழில் வைத்துக் கண்ணுக் கிடவும். இதுக்குத் தீரும் வியாதி பற்பரோகம், படலம். பூப்பட்டது, இரண சுக்கிரன் இவை தீரும். 1568

## பற்பரோகப் பொடி

துத்தம் 2 வராகன் எடை, முட்டை ஓடு 4 வராகன் எடை பலகறை 8 வராகன் எடை, சீனக்காரம் 3 வராகன் எடை, வெண் காரம் 1 வராகன் எடை இவை யெல்லாங் கூட்டி, எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து, மறுபடி சிறுகீரைச்சாறு விட்டரைத்து, இந்த வேர்க் குகை பண்ணி, அந்த குகைக்குள் வைத்து மூடி மூன்று சீலை மண் செய்து, மேலே சாணி பொதிந்து குக்கிடப் புடத்தில் வைத்துத் தணிஞ்சாலெடுத்து அம்மியிலரைத்துப் பச்சைக் கற்பூரம் ½ பண எடை கூடக் கூட்டி அரைத்துக் கண்ணில் எள் எடை இடத் தீரும் வியாதி ஆணிப்பூ, நீர்க்குமிழி, குந்தம், சதை வளர்த்தி, பற்பரோகம், அதிமாங்கிசம் வளர்த்தி, உறுத்தல். பில்லம், நீர்ப் பாய்ச்சல், சூழ வளர்த்தியும் தீரும். கை கண்டது. 1569

(வேறு)

துத்தம் 2 வராகன் எடை, எருமைத் தயிரில் ஒரு நாள் முப்பது நாழிகையும் ஊறப் போட்டுக் கழுவி, எடுத்து, சங்குப் பொடி அந்த நிறை வரட்பூலா வேர், அந்த நிறை ஓரிதழ்த் தாமரை வேர், அந்த நிறை இவை சேர்க்குழி கல்லிலிட்டு, எலுமிச்சம் பழச்சாறு வார்த்து ஒருநாள் ஒரு சாமமாக மூன்று நாளரைத்து, தகடு தட்டிச் சிறு வில்லையாகப் பிடித்துச் சீலையிற் சுற்றி, புளியம் பொறுக்கிற் புடமிட்டு எடுத்துப் பொடி செய்து, பொடிக்கு நாலத்தொன்று பீதரோகணி கூட்டிக் பச்சைக் கற்பூரம் பண எடை கூட்டிப் பொடி செய்து, சிமிழில் வைத்துக் கொள்ளவும். இதுக்குத் தீரும் வியாதி பற்பரோகம், நீர்ப் பாய்ச்சல், குத்துக்கும் இரண்டு நேரமும் எள்ளளவு பொடி போடவும்,

இந்த பஸ்பமான மருந்தைத் தகடாகத் தட்டி வைத்து, மற்ற பாதியைச் சீலை கொண்டு மூடி, புது ஓட்டில் வட்ட ஓட்டில் வைத்து. மேலும் அந்த ஓடு கொண்டு மூடிச் சீலை மண் செய்து புளியம் பட்டைச் சிராய் ஒரு குழியிலடியில் அதன் மேலே மருந் தட்டை வைத்து, அதன் மேலும் புளியஞ் சிராய் அடுக்கி, அக்கினி புடம் போடவும். ஆறவிட்டெடுத்துத் தாலத்திற் கொட்டிச் சங்கு கொண்டு பொடி பண்ணிச் சிமிழில் வைக்கவும். கண்ணுக்கு ½ பண எடை போடவும். ஆணி தோணப் பண்ணவும். இதுக்குத் தீரும் வியாதி சுக்கிரப் படுவன், இழிகண், குருக்கு, துர்மாங்கிச வளர்த்தி நீர்முட்டு, நேத்திர வாய்வு, பித்தகாசம், கண்ணில் பூ, மணிகாசம், பசுகாசம், மந்தாரகாசம், நெரிமுளைப்பது, அடிப்பட்டுக் கலங்கினது, இரத்தப் படலம், செவ்வேரோடினது இவை தீரும்.

## வெள்ளைப் பொடி

கழுநீரிற் சுத்தி பண்ணின பால்துத்தம் 4 வராகன் எடை, வெள்ளிச் சரிகை' 1 மாடை எடை, பீதரோகணி 1 வராகன்எடை, வெள்ளைச் சாரணை வேர்ப்பட்டை உலர்ந்தது 4 வராகன் எடை இவை யெல்லாம் எலுமிச்சம் பழச்சாறு வார்த்தரைத்து உருட்டி, வெள்ளைச் சீலையாற் பந்து போல சுற்றி எருமுட்டையிற் புடம் போட்டு, ஆறின பின்னெடுத்துச் சீலைச் சாம்பலை ஊதிப்போட்டு இதில் எள்பிரமாணம் கண்ணிலிட நீர்ப்பாய்ந்து, சிவந்து வலி யுண்டாயிருக்கிற நேத்திர வாய்வு முதலான ரோகமெல்லாம் போம். 1571

(வேறு)

துத்தம், சிறுகீரை வேர், பொன்னாங்காணி வேர், ஓரிலைத்தாமரைவேர், இவைகளைத் தேசிச் சாறு விட்டரைத்து வில்லையாய்ப் பிடித்து, அக்கினியிற் புடம்போட வெண்மையாம். இந்தப் பொடி முலைப் பாலிற் குழப்பிக் கண்ணிலிடத் தொண்ணூற்றாறு வியாதியுந் தீரும். 1572

பொடி (பொது)

தூய்மை செய்த வெள்ளி $1\frac{1}{4}$ வராகன் எடை, சீனக்காரம் $1\frac{1}{2}$ பலம். வெள்ளியைப் புளியிலைக் கனமுள்ள தகடாக அடித்துக் கொள்ளவேண்டும். சீனக்காரத்தைப் பொடித்து இரண்டு பாகமாக்கி, ஒரு பாகத்தை ஒரு ஓட்டில் பரப்பி, அதன்மேல் வெள்ளித் தகட்டை வைத்து, அதன்மேல் மறுபங்கு சீனக்காரப் பொடியைத் தூவி அழுத்திச் சமன்படுத்தி, மேலோடு மூடி 5 சீலை மண் செய்து உலர்த்தி, சதுர கசப்புடமிட்டு, ஆறின பின் எடுக்கச் சீனக்காரம், வெள்ளித்தகடு ஆகிய இரண்டும் பற்பமாகி இருக்கும். இதையெடுத்துக் கல்வத்திலிட்டுக் கலந்தரைத்து எடுத்து, 1 அரிசி எடை பற்பத்தைக் கண்ணில் போட்டு வரப் படலம், பில்லம், சதை சிவத்தல், சதை வளர்ச்சி, கண்ணில் நீர் வடிதல் முதலிய நோய்கள் தீரும். 1573

(வேறு)

சொறித்துத்தம் 5 வராகன் எடை, இதனைக் காட்டெருவில் புடமிட்டு எடுத்துக் கொண்டு, அத்துடன், சங்கு 2 வாரகன் எடை, நாட்டு வெள்ளைப் பீங்கான் ஓடு அல்லது பாகப்படுத்தின பூநீறு 2 வராகன் எடை, கடல்நுரை 1 வராகன் எடை, ஒவ்வொன்றையும் தனித்தனியே பொடித்துக் கலந்து, கைவிடாமல் 4 சாமம் அரைத்துப் பீங்கான் சிமிழில் வைத்து, எள் அளவு கண்ணிலிட கண் கூச்சம், சதை வளர்ச்சி, பூ, இமைத்தடிப்பு, நீர்வடிதல் இவை தீரும். 1574

(வேறு)

சீனக்காரம் 1 பங்கு, வெந்தலையோடு 1 பங்கு தனித்தனியே பொடித்துக் கலந்து 4 சாமம் அரைத்துக் கொம்புச் சிமிழில் வைத்து, எள் அளவு கண்ணிலிடக் கண் படலம், கண்ணோவு, கண் சிவப்பு ஆகியவை தீரும். 1575

(வேறு)

துத்தம் 1 வராகன் எடை, துருசு 1 வராகன் எடை இவை யிரண்டும் கருகாமல் வறுத்துக்கொண்டு எலுமிச்சம் பழச்சாறு வார்த்து நேகவரைத்துச் சிறுகீரை வேர், பொன்னாங்காணிவேர், ஓரிதழ்த்தாமரைவேர் வகைக்குப் பாக்களவு முன் மருந்துபோட்டு, எலுமிச்சம் பழச்சாறு வார்த்து நேகவரைத்து, வில்லைக்காசு போலத் தட்டி நிழலிலுலர்த்தி, ஐந்து நாட்கள் காயவைத்துப் புதுச்சட்டியிற் பரப்பி, மறுசட்டி கொண்டு மூடி நான்கு நாழிகை எரிக்க, பஸ்மமாம் திருநீறு போலே இருக்கும். எடுத்துப் பொடி பண்ணிச் சிமிழிலே அடைத்து வைத்துக்கொண்டு கண்ணிலுண் டான வியாதிக்கெல்லாம் இரண்டு எள் பிரமாணம் பொடி கண்ணிற் தூவி வரக் கண்கரியாது. 1576

(வேறு)

சீனக்காரம் 1 வராகன் எடை, கல்நார் 1 வராகன் எடை, வெள்ளைக் கற்கண்டு 1 வராகன் எடை, துருசு 1 வராகன் எடை, வெந்தலை 2 வராகன் எடை இவை கூட்டி எல்லாம், பொடி பண்ணி வைத்துக்கொண்டு சகல வியாதிக்கெல்லாம், படலம், காசம், மறைவு. நேத்திர வியாதிக்கும் ஒரு நெல் எடைப் பிரமாணம் போடவும். ஐந்து நாட்கள், ஒன்பது நாட்கள் இரண்டு வேளையும் போடவும்.

பத்தியம்-உப்பு, கிறாமுள்ளி, ஓலைவாளை, பசுவின்நெய், கத்தரி, முருங்கைப்பிஞ்சு ஆம், புகையிலை, பச்சைமீன் ஆகாது. 1577

(வேறு)

சீனக்காரம் பொரித்துப் பொடி செய்து கண்ணிற்போடக் கண் வியாதி எல்லாம் தீரும், 1578

## 15. புகை வகைகள்

இவை, சில மருந்துப் பொருட்களைப் பொடி செய்து துணியில் திரியாக திரித்துக் கொளுத்தி வரும் புகையைப் பிடித்தலாகும்

கண்நோய்களுக்கென்றே கூறப்படும் சில புகை வகைகளின் விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

### 1. புகை 1

முருங்கைப் பிசின், இலந்தை மரப்பிசின், வேப்பமரப்பிசின் இவற்றில் ஏதாவதொன்றுடன் கொம்பரக்கு, சாம்பிராணி, குக்கில் இவற்றை இடித்துத் தூள் செய்து, பசுநெய்யும் கூட்டி வைத்துப் புகையிடவும். கண்ணில் நீர்வடிதலும், வலியும், சிவப்புந் திரும். (1579)

### 2. புகை 2

கத்தூரி மஞ்சள், சந்தனத்தூள், கருங்குங்கிலியம் இவற்றைத் தூள் செய்து புகையிடவும். கண்நோய்கள் தீரும். (1580)

### 3. புகை 3

எள், பயறு, வேம்பினிலை, கடுகு இவற்றைப் பொடித்துப் புகையிடவும், கண் நோய்கள் தீரும், (1581-1585)

## 4. புகை 4

அடப்பம்விதை, இலுப்பைக்கட்டி, சிற்றரத்தை, சீனக்காரம் கக்கு, மிளகு, திப்பிலி, பேய்ப்பீர்க்கங்கூடு, தேங்காய் ஓடு சுட்டகரி கிராம்பு, மஞ்சள், சாம்பிராணி இவற்றைச் சேர்த்து இடித்துத் திரியாக்கிப் புகையிடவும். கண்நோய்கள் தீரும். (1586-1587)

## 5. புகை 5

சதுரக்கள்ளிப் பாலைத் துணியிலூட்டி திரியாக்கிப் புகையிடவும். கண்நோய்கள் தீரும். (1588)

## 6. புகை 6

கடுகு, சதகுப்பை, கருஞ்சீரகம், எள், மிளகு, வேப்பம் விதை கோட்டம் இவற்றை வேளைச்சாறு, நொச்சிச்சாற்றில் அரைத்துத் திரியாக்கி, புகை பிடிக்கவும். கண்நோய்கள் தீரும். (1589)

புகை

முருங்கை யிலந்தை முதிர்ந்த வேம்பி னில்முளைத் தபிசின்
நெருங்கிய கொம்ப ரக்கொடு சாம்பி ராணிநிறை குக்கிலும்
சுருங்கிய நெய்யில் பிசறித் தனித்தனி தூப மிட்டால்
சிறுகிய கண்வலி சலங்க ளுங்கோ பஞ்சி வப்புமே 1579

(வேறு)

மஞ்சள் பொடியும் சந்தனத்தூள் வன்னங் கருத்த குங்கிலியம்
வஞ்சப் பொடியாய்த் தூள்செய்து உருகுந் தணிலில் புகைகாட்ட
மிஞ்சிக் குடையுங் கண்ணோவும் விளையும் நீரும் தலைநோவும்
அஞ்சிக் குடியோ டுமென்றே அறியச் சொன்னோங் கண்டீரே.

(வேறு)

எள்ளுடன் பயறு வேம்பி னிலையொடு கடுகுங் கூட்டித்
தெள்ளிதாய்ப் பொடிகள் செய்து திறக்கவே புகையுங் காட்ட
உள்ளது சொன்னோ மென்று உவந்துநீ செய்வா யாகில்
மெள்ளவே கண்சி வப்பும் விலகுநீர் தலைநோ வன்றே. 1581

(வேறு)

மஞ்சட் பொடியுங் கந்தகமும் மருவுங் குங்கிலி யங்கூட்டி
உஞ்சப் பொடிக ளதுசெய்து உருகு தனலிற் புகைகாட்ட
மிஞ்சக் குடையுங் கண்ணோவும் விளையு நீரு மதுமாறிக்
கெஞ்சிக் கெடியிற் புத்துமென அறியச் சொன்னோம் கண்டீரே.

(வேறு)

எள்ளுட னுவந்து வேம்பி னிலையோடு கடுகுங் கூட்டி
தெள்ளிய பொடிகள் செய்து சிறக்கவே புகையுங் காட்டி
உள்ளது சொன்னோ மென்று உகந்துநீ செய்வை யாகில்
மெள்ளவே கண்சி வப்பும் விலகும்நற் கண்நோ யன்றே. 1583

(வேறு)

கூட்டும் பற்ப மிரதமுடன் கொள்ளு தாமிர பற்ப முமாய்த்
தீட்டும் பற்ப மேகுடனே திகழுந் துத்தந் திரிகடுகும்
ஏட்டினக் கார மெருக்கப்பாலி விசைய வரைத்துத் திரியாக்கி
நீட்டிச் சிதனிற் புகையை நிலைகுலையக் கண்விரணச் சூலையதே.

(வேறு)

குட்டங் குர தங் காரீய மதிலே கந்தக மோரிரண்டாய்
திட்டங் காந்தந் துருசுதுத்தம் சிலையரி தாரங் கவுரிவெள்ளை
விட்ட வாளங் குங்கிலியம் கருவேலிலை யோரொரு கழஞ்சு
பொடித்
தட்டிப் புகையெழு பொழுது மிடிற்புண் கண்ணோய் சூலையதே
கிடவே. 1585

## வத்திப் புகை

சென்னியி லடப்பம் வித்து சேரரைப் பரத்தைக் காரம்
மின்திரி கடுகி னோடு மிகுந்தபேய்ப் பீர்க்கங் கூடுங்
கன்னிய கொட்டாங் கச்சி கரியொடு கிராம்பு மஞ்சள்
நண்ணிய சாம்பி ராணி நற்புகை மருந்தி லூட்டே. 1586

ஊட்டிய ஆக்கி ராணம் உவந்திதைச் செய்வீ ராகில்
சூட்டிய கண்ணில் மந்தம் தொடர்ந்தநோய் தொண்ணூற் றாறும்
மூட்டிய விழிக்கு டைச்சல் முதிர்நிமை யிறுகல் கூச்சம்
பூட்டிய கபால சூலை பீனிசம் சன்னி போமே. 1587

(வேறு)

வெள்ளிய சீலை தன்னில் மிகுந்ததோர் சதுரக் கள்ளி
தெள்ளிய பாலை யூட்டித் திரிபுகை மூக்கில் வாங்கத்
துள்ளிய கபால சூலை தொலைவிலா விரண மாறும்
ஒள்ளிய கண்க டுப்பும் உறுத்தலுஞ் சிவப்பும் போமே. 1588

(வேறு)

கடுகுசத குப்பை கருஞ்சீ ரகம்எள்
கொடுமிளகு வேம்புவிதை கோட்டம் - முடுகியரை
வேளைநொச்சிச் சாறுகளை வேண்டுந் திரிமுகர
நாளையில்லை கண்சூலை நாடு. 1589

(வேறு)

மிளகு, நொச்சி, மஞ்சள், சுக்கு, குந்தரிக்கம், அம்பூச்சி, சிலந்தி இவை கூட்டி அரைத்து சீலையிலூட்டி, திரியாக்கி, நாசியிற் புகை விடத் தீரும். 1590

(வேறு)

சுக்கு, இலுப்பைக் கட்டி, குங்குலிப்பு, மஞ்சள், கருஞ்சீரகம், கடுக்காய், உள்ளித்தோல், ஓமம், சாம்பிராணி, சமன் சீலையிற் திரித்து தீக் கொளுத்தி நாசியில் புகை பிடிக்கவும் தீரும். 1591

## 16. வேது வகைகள்

இவை, சில மருந்துப் பொருள்களால் ஆவியை உண்டாக்கி முக்காடிட்டு ஆவியை உள்ளே வாங்கி வியர்வையை உண்டாக்கிக் கொள்ளுதலாம்.

கண்நோய்களுக்கென்றே சில வேது வகைகள் கூறப்படுகின்றன. அவற்றைப் பின்வருமாறு காணலாம்.

வேது 1:-

புதிய செங்கல்லைச் சிறு துண்டுகளாக உடைத்து நெருப்பிலிட்டு நன்கு காய்ந்தவுடன் எடுத்து, செம்பு அல்லது வெண்கலப் பாத்திரத்தில் போட்டு அதன்மீது முலைப்பாலைத் தெளிக்கவும். இதில் வரும் ஆவியை முகத்தில் காட்டவும். கண் நோய்கள் தீரும். (1592)

வேது 2:-

காடி நீரில் திரிபலையை யிட்டுக் காய்ச்சி முன்பு போலவே செங்கல்லைச் சுட்டு அதில் காடிநீர் தெளித்து வரும் ஆவியை முகத்தில் காட்டவும். கண் நோய்கள் தீரும். (1593)

வேது

தெள்ளுறு செங்கல் காய்ச்சிச் செம்புவெண் கலத்தி லிட்டு
ஒள்ளிய முலைப்பால் தூவி உகந்ததோர் புகையுங் காட்ட
நள்ளிய நயன ரோகம் நற்றலை வலியும் போகும்
வள்ளலும் வாக டத்தில் மகிழ்ந்துட னுரைத்த வாறே. 1592

(வேறு)

கருவிழி சிவந்து நொந்து கடுப்புடன் தலைக்கு டைச்சல்
பெருகிய கபால சூலை பெயர்ந்ததோர் காடி தன்னில்
திரிபலை யிட்டுக் காய்ச்சிச் செங்கல் வேதுடன் கலந்து
மருவிய விழியில் கொள்ள மறைந்தகண் தெளிந்து போமே. 1593

## 17. பொட்டண வகைகள்

இவை, சில மருந்துப் பொருட்களை இடித்துத் துணியில் முடிந்து, சில சாறுகளிலோ அல்லது தைலங்களிலோ வெதுப்பி நனைத்து நோயுற்ற இடங்களில் ஒற்றடம் கொடுப்பதாகும்.

கண் நோய்களுக்கென்றே சில பொட்டண வகைகள் கூறப்படு கின்றன. அவை இங்குத் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றின் விளக்கங்களைப் பின்வருமாறு காணலாம்.

### பொட்டணம் 1:-

பசுவின் பால் 1 நாழியில் புளியிலை 1பிடி போட்டு வற்றக் காய்ச்சி எடுத்துத் துணியில் முடிந்து கண்ணைச் சுற்றி வெது வெதுப்புடன் ஒற்றவும். கண் நோய்கள் தீரும். (1594)

### பொட்டணம் 2:-

கடுக்காய். கருவேலிலைத்துளிர், கற்றாழைச் சோறு இவற்றை நறுக்கித் துணியில் முடிந்து வெதுப்பி ஒற்றவும். கண் நோய்கள் தீரும். (1595)

### பொட்டணம் 3:-

மருதம் பட்டை, சீரகம், அதிமதுரம் இவற்றை நறுக்கித் துணியில் முடிந்து வெதுப்பி ஒற்றவும். கண் நோய்கள் தீரும். (1597)

### பொட்டணம் 4:-

உள்ளி, சுக்கு, கொள்ளு. மிளகு, மஞ்சள் இவற்றைப் பொடித்துத் துணியில் முடிந்து வெதுப்பி ஒற்றவும். கண் நோய்கள் தீரும். (1598)

### பொட்டணம் 5:-

எலுமிச்சம் பழத்தைச் சீவி கதிர் போல வெட்டி அதனுள் இருப்புப் பொடியைத் தூவி மூடி அதை ஒரு துணியில் மூடி உருட்டவும். இதை அனலில் காட்டி வெதுப்பி ஒற்றவும். கண் நோய்கள் தீரும் (1599-1600)

### பொட்டணம் 6:-

எள், கடுக்காய், ஆமணக்கிலை, வேர், விதை இவற்றை நறுக்கித் துணியில் முடிந்து வெண்ணெய்யில் வெதுப்பி ஒற்றவும். கண் நோய்கள் தீரும். (1601)

### பொட்டணம் 7:-

கத்தூரி, பச்சைக் கற்பூரம், புனுகு, சவ்வாது, கோரோசனை, சந்தனம், பன்னீர் இவற்றை ஓரளவாய்க் கூட்டிப் பொட்டணமாகக் கட்டி முகரவும். கண் நோய்கள் தீரும். (1606)

#### பொட்டணம்

ஆவின் பால்நா ழிதன்னில் ஆன புளியிலை யொருபிடியாம்
மேவிக் காய்ச்சி வற்றியபின் மெல்லிய சீலை யிதைக்கட்டி
கோவி வலிக்கும் கண்சிவப்பும் கூச்சந் தினவும் யிமைதடிப்பும்
ஆவிப் படவே ஒற்றிடவே அகன்று போகும் வேதனைதான். 1594

#### (வேறு)

காசரக் கடுக்கா யோடு கருவேல் தன்னிலைத் துளிரும்
வீசரக் குமரிச் சோறு விடுசீலை தன்னிற் கட்டி
ஆசரக் கண்ணில் தானும் அடவே ஒற்றிடத் தினம்மூன்று
வீசரக் கண்ணோய் தானும் விட்டது போகுந் தானே. 1595

#### பின்னும்

நிம்ப ழத்தில் லரைபொடியை நீரி லலம்பித் தானடைத்து
நம்பி வெள்ளை சேலைகட்கு நாயு ருவிபூ ளையிலை
தம்பி பிழிந்து சாறுவிட்டு தானே கண்ணில் ஒற்றிவிட
நம்பி கண்ணோய் உறுத்தலும்போம் நாடா சிவப்பும் நன்னுதலே.

பின்னும்

மருதம்பட்டை, சீரகம், மதுரம், சீலைமுடிந்து, ஒற்றடம் பிடிக்கவும். கண்ணீர்ப் பாய்ச்சல், அரிப்பு, கண்வலி இவை தீரும்.

(வேறு)

உள்ளியுங் கொள்ளு சுக்கும் ஒன்றிய மிளகுமஞ்சள்
ஒள்ளிய பொட்டணங்கட்டி ஒற்றி னக்கால்
வள்ளிய வாதகாசம் வந்தவலிக ளெல்லாம்
தள்ளியும் மெள்ளப்போகும் தாழ்விலைத் தோடமில்லை. 1598

(வேறு)

வித்தைபார் கண்ணிலுற்ற நோய்கட் கெல்லா
மேலாகத் தலையிலுற்ற வலிகட் கெல்லாம்
சித்தையா யெலுமிச்சம் பழமு கத்தைச்
சீவியே கதிர்செய்து அயப்பொ டித்தூள்
அத்தைதா னுட்செலுத்தி யதன்தன் மேலே
அடைவாகச் சாண்துகி லைக்கொண் டெய்தால்
மொத்தைபோ லேகுட்டிப் பந்தா கத்தீ
முன்காட்டி பின்புநீ கசக்கி டாயே. 1599

கசக்கியே கைதனில்தான் வைத்துக் கொண்டு
கண்தனிலே மாறாம லொற்றும் போது
வசக்காத கண்வலிகள் வலிப்புக் குத்து
மாறாத சிவப்பொடுமேற் தலையி னோயும்
இசைப்பின்றி நாண்மூன்றி லசைப்பும் போகும்.
இதுபோலே மருந்தொன் றிவ்வுலகி லுண்டோ
பிசக்கென்று நினையாதே நேத்தி ரநோய்
புலனொடுங்கி நெறிமுறியுங் குணமாய்ச் செய்யே. 1600

(வேறு)

எள்ளுக் கடுக்கா யாமணக்கு
இலைவேர் முத்து மெடுத்துமுன்னே
துள்ள நறுக்கிப் பொட்டணமாய்
தூய வெண்ணெய் காயவைத்து
மெள்ளக் கண்ணி லொற்றிடவே
விதனந் தீருவெந் தரசிங்கம்
வெள்ளைப் படையை வென்றகனம்போல்
வியாதி தீர்ந்து வெளியாமே. 1601

(வேறு)

தின்றி டும்நற் சீரகம் கடோரிலை
மண்டி டீருள்ளி வாங்கு மதிநிறம்
கண்டி டுவகைக் கொன்று கழஞ்செடை
தொண்டிடு நசித்துத் துணிக்குள் ளேவையே. 1602

வைய்ய டாபொட்டண மாகக்கண் ணில்ரசஞ்
செய்ய டாபிழிந் துயிரு மூன்றுநாள்
பைய்ய டாபூப் படலம்விட் டோடிடும்
மெய்ய டாபுளி விட்டுண்ணத் தீருமே. 1603

தீரும்வெண் வில்வத் திலைக் காடியில்
சேரும் விட்டவித் தேயிரு நேரமும்
பாரு நாளேழு பாவைமேற் கட்டிடில்
ஏறுங் கண்பட லமிழிந் தோடுமே. 1604

ஓடும் பத்திய முப்பு புளிதள்ளி
ஆடும் வெந்நீ ரோடன்னம் புசித்திடில்
நாடுந் தேரையர் நன்மொழி யாமிது
தேடு மிம்முறை செய்துகை கண்டதே. 1605

(வேறு)

மெத்தியே கண்ணுஞ் சிரத்த நோவும்
மீறியே மருந்துதனக் கடங்கா தாகில்
கத்தூரி கற்பூரம் புனுகு சவ்வாது
கனகநற் கோரோசனை சந்தனம் பன்னீர்
உற்றநீரை கண்டரைத்துப் பொட்டணமாய்க் கட்டி
ஓங்குபுகழ் மண்டலமும் வாசங் கொள்ள
கத்துகடல் சூழிலங்கை சிங்கமுன் னெதிர்த்த
படைபோ லோடிவெளி யேறுங்கள் தானே. 1606

## 18 நசிய வகைகள்

நசியம், ஆக்கிராணம் என்னும் மருந்து வகைகள் மூக்கிலிடும் மருந்துகளாகும்.

சில மருந்துப் பொருள்களைச் சாறுகளால் அரைத்து மாத்திரையாக்கி வேண்டும்போது முலைப்பால் அல்லது சாறுகளில் ஊறவைத்து வடிகட்டி மூக்கில் பிழிவதும், சில பூக்களைக் கசக்கிச் சாறு எடுத்து மூக்கில் பிழிவதும் நசியம் எனப்படும்.

சில மருந்துப் பொருள்களை இடித்துத் தூளாக்கி வடிகட்டி மூக்கில் இழுக்கச் செய்வது ஆக்கிராணம் எனப்படும்.

கண்நோய்களுக்கென்றே கூறப்படும் சில நசியம், ஆக்கிராணம் வகைகள் இங்குத் தொகுக்கப்பட்டுள்ளன. அவற்றிற்கான விளக்கங்களைச் சுருக்கமாகப் பின்வருமாறு காணலாம்.

### 1. நசியம் 1

தும்பைப்பூ, துளசியிலை, நொச்சியிலை, பழைய பூவந்திக் கொட்டை, திரிகடுகு, சிற்றரத்தை, படிகாரம் இவற்றைச் சேர்த்து முலைப்பால்விட்டு நறுக்கிப் பிழிந்து மூக்கில் நசியமிடவும் கண் நோய்கள் தீரும். (1607)

## 2. நசியம் 2

பேய்ப்புடல், கொன்றைப்பிசின், அதிமதுரம், முலைப்பால் இவற்றைப் பசுவின் நெய் விட்டுக் காய்ச்சி மூக்கில் நசியமிடவும். கண்நோய்கள் தீரும். (1608)

## 3. நசியம் 3

மாதுளம் பூச்சாறு, பசுவின் நெய் இவ்விரண்டையும் கலந்து அதில் அருகங்கொழுந்தை அரைத்துப் போட்டுக் காய்ச்சி வடித்து மூக்கில் நசியமிடவும். (1609)

## 4. நசியம் 4

எருக்கம்பாலும் நல்லெண்ணெயும் ஓரளவாய் எடுத்து அத்துடன், முல்லையிலை, கருநொச்சி, சிற்றாமுட்டிவேர், நீர் முள்ளி இவற்றை அரைத்துக் குழப்பிக் காய்ச்சி வடித்து மூக்கில் நசியமிடவும். (1610)

## 5. நசியம் 5

வேப்பெண்ணெயை மூக்கில் நசியமிடக் கண்நோய்கள் தீரும். (1611)

## 6. நசியம் 6

பச்சைக் கற்பூரம், சுக்கு, சர்க்கரை இம்மூன்றையும் முலைப் பால் விட்டரைத்துக் கலக்கி வடிகட்டி மூக்கில் நசியமிடவும். கண்ணோய்கள் தீரும். (1612)

## 7. நசியம் 7

நொச்சிக் கொழுந்து, மிளகு, பச்சைக் கற்பூரம் இவற்றை முலைப்பால் விட்டரைத்துக் கலக்கி வடிகட்டி மூக்கில் நசியமிடவும். (1613)

## 8. நசியம் 8

திரிகடுகு, வேளைவேர் இவற்றை வெந்நீர் விட்டரைத் துருட்டி எடுத்து அதை வெந்நீரிற் கலக்கிப் பஞ்சிலூட்டி மூக்கில் நசியமாகப் பிழியவும். கண்நோய்கள் தீரும். (1614-1616)

## 9. நசியம் 9

ஏலம், அதிமதுரம், இலவங்கப்பட்டை, குங்குமப்பூ, படிகாரம் கத்தூரி, செங்கழுநீர், கோட்டம் இவற்றை ஓரளவாய்க் கருநொச்சிச் சாற்றிரைத்துருட்டி உலர்த்தி எடுக்கவும். இதை நீரில் கரைத்து மூக்கில் நசியமிடவும். (1617)

## 10. நசியம் 10

சுக்கு, மிளகு, மரமஞ்சள், மஞ்சள், வெண்காரம், திப்பிலி கடல்நுரை, இலுப்பைப் பழத்தோல் இவற்றை ஓரளவாய் நல்லெண்ணெய்யில் இட்டுக்காய்ச்சி வடித்து மூக்கில் நசியமிடவும்.

## 11. நசியம் 11

மிளகு, மஞ்சள், மனோசிலை இவற்றை ஓரளவாய் எடுத்து நறுக்கி முலைப்பாலில் கூட்டி வடித்து மூக்கில் நசியமிடவும். (1619)

## 12. நசியம் 12

அடப்பம் விதை, திரிகடுகு, அக்கிராகாரம் இவற்றை ஓரளவாய் அரைத்து முலைப்பாலில் கூட்டி வடித்து மூக்கில் நசியமிடவும். (1620)

## 13. நசியம் 13

எருமைப்பால், நல்லெண்ணெய், கருநொச்சிச்சாறு, முல்லைச் சாறு, சிற்றாமுட்டிவேர், நீர்முள்ளிவேர் இவற்றைச் சேர்த்து வடித்து மூக்கில் நசியமிடவும். (1621)

## 14. நசியம் 14

சமுத்திராப்பழம், திப்பிலி இவற்றை ஓரளவாய்க் கரிசாலைச் சாற்றிலரைத்துருட்டி எடுத்துக் காடி, தேன் இவற்றிலுரைத்து மூக்கில் நசியமிடவும் கண்நோய்கள் தீரும். (1623)

## 15. ஆக்கிராணம்: 1

திரிகடுகு, சிற்றரத்தை, சீனக்காரம், மனோசிலை, நாபி, ரசம் துருசு, கந்தகம் இவற்றை ஓரளவாய்ப் பொடித்து வடிகட்டி எடுத்து மூக்கிலிடவும். (1624)

16. ஆக்கிராணம்: 2

சுண்டைவேர் 1 பங்கு, சிற்றரத்தை ½ பங்கு சேர்த்திடித்துப் பொடித்து வடிகட்டி அதை மூக்கிலிடவும், (1625)

17. ஆக்கிராணம் .3

தேற்றான் விதை, திரிகடுகு, சீயக்காய் இவற்றை ஓரளவாய்ப் வடிகட்டி அதை மூக்கிலிடவும். (1626)

18. ஆக்கிராணம் :4

எருக்கம் பால், திரிகடுகு, திருநீறு இவற்றை ஓரளவாய்ப் பொடித்து வடிகட்டி அதை மூக்கிலிலிடவும் கண்நோய்கள் தீரும். (1627)

நசியம்

கூறிய தும்பைப் பூவுங் குறித்திடுந் துளசி நொச்சி
தேறிய பழம்பூ வந்தி திரிகடு கரத்தை காரம்
நாரியர் முலைப்பால் வார்த்து நறுக்கியே மூக்கில் வார்க்க
ஆறிடுங் கபால சூலை அதிர்வலி சிவப்பும் போமே. 1607

(வேறு)

பேய்ப்புடலுங் கொன்றைப் பிசினோ டதிமதுரம்
மூப்பிலாப் பெண்தனப்பா லாவினெய்யில்—நீர்ப்படரும்
நாசியிடக் காய்ச்சி நிமைவலிகண் ணோய்தீரும்
காசினியில் மானேநீ காண் 1608

(வேறு)

ஓடவே மாதுளம்பூச் சாற்றிலுகந் தாவின்நெய்யில்
கூட அருகங் கொழுந்தரைத்து—நாடியிதைப்
பார்த்து வடித்துப் பரிவாக மூக்கிடக்
கூர்த்தரத்த பித்தம் போங் கூறு. 1609

(வேறு)

எருக்கம் பாலில்நல் லெண்ணெய் இனிய முல்லை கருநொச்சி
நெருக்குஞ் சிற்றா முட்டியின்வேர் நீர்முள் ளியுமே சேர்த்தரைத்து
செருக்கக் காய்ச்சி நாசிதனில் செலுத்தக் கண்ணோய் நீர்ச்சிவப்பு
நெருக்குந் தலைநோய் விட்டகலும் நில்லா தோடும் பீனிசமே 1610

(வேறு)

நேத்திர வாதம் நீர்முட்டும் நெருக்கல் கூச்சங் கபாலவலி
காத்திர மான சிரசுதனில் கலநீர் கனத்து வீழ்வதற்குப்
பாத்திர மானவேப் பெண்ணெய் பரிவாய் மூக்கில் நசியமிட
நேத்திர வாயு கண்ணோய்கள் நிலைவிட் டோடும் நிச்சயமே 1611

மருவுகற் பூரத் தன்னில் மலர்ந்தவேர்க் கொம்பு தானும்
பருகுநற் சீனி யோடு பாவையர் தனத்தின் பாலால்
கருவுற வரைத்துப் பின்னை கரைப்பது செய்யு மங்கே
இருளுறு கண்ணோய் போக்கும் இயல்பிது நசியந் தானே 1612

(வேறு)

நொச்சிக் கொழுந்து நுகர்மிளகு கற்பூரம்
அச்சமற வேதனப்பா லாட்டியே—கச்சணியும்
மானே நசியமிட வாங்கும் புகைச்சலெல்லாந்
தானே வெளியாகுந் தான் 1613

(வேறு)

அரைத்ததொரு மருந்தினைக் கொதிக்க வைத்து
அப்பனே புறவளைதான் போடு போடு
நிரைத்ததொரு நேத்திரநோய்க் கெல்லா மாகும்
நேரான யின்னமொரு வழியைக் கேளு
விரைத்ததிரி கடுகுடனே வேளை வேரும்
வெந்நீரை விட்டரைத்துக் கயறு பண்ணிக்
கரைத்ததொரு வெந்நீரிற் கலக்கிக் கொண்டு
கட்டாகப் பஞ்சிலே துவைத்தி டாயே 1614

வைத்ததொரு மருந்துதனை நாசி யொன்றில்
சுறுக்காக நசியமிடு துன்பம் போகும்
வைத்ததொரு மூலிகையி லுசித மொன்று
வாய்திறந்து சொல்லுகிறேன் மைந்தா கேளு
வைத்ததொரு பார்பரையைத் தியானஞ் செய்து
இயல்வான வருக்கநாள் மூலம் வாங்கே
வைத்ததொரு வெள்ளையா வரையின் வேரைப்
பாகமாய்ச் சனிக்கிழமைக் காப்புக் கட்டி 1615

வாங்கியதோர் வேருடைய யிலைச்சாறு கொண்டு
வளவாக உரைத்தேதான் கண்ணீற் றீட்ட
ஓங்கியதோர் தேவர்களும் ரிசிகள் சித்தர்
சத்திமுதல் வைத்தியத்தைச் சாற்றி னார்கள்
பாங்கிதோர் சூத்திரத்தைப் பார்க்கப் பார்க்கப்
பண்டிதத்திற் சிரோமணியாம் பாரு பாரே 1616

(வேறு)

ஏலமகிழ் மதுர மிலவங்கப் பட்டை
இயல்வன குங்கும மினிய காரமுடன்
சீலமுடன் கத்தூரி செங்கழுநீர் கோட்டம்
திரமாக வோரொன்று சரிநிறைய தாக
நீலமெழுங் கருநொச்சிக் கசாயத்தி லரைத்து
நிரைபய றளவுருட்டி நிழலிலே யுலர்த்தி
ஓலமிடு நேத்திரத் திலுற்பத் திரியந்தி
ருலைநீரில் கறைமுக்கி லொழுக்க வினையோடும்

(வேறு)

சுக்கு மிளகு மரமஞ்சள் துய்ய மஞ்சள் வெண்காரம்
மிக்க திப்பிலி கடனுரையும் வீறா மிலுப்பைப் பழத்தோலும்
ஒக்கக் கொண்டு நல்லெண்ணெய் உடனே காய்ச்சி நாசிவிட
தொக்க மண்டை நோயெல்லாம் துயர்கெட் டோடுங் கண்மடீரே.

(வேறு)

மின்னே ரிடையீர் சொல்லக்கேள் மிளகு மஞ்சள் மனோசிலை
நன்றாய் நறுக்கி முலைப்பாலில் நலமாய் நாசி தனிற்பிழியக்
கண்ணோ யனேகந் தீர்ந்துவிடும் கனமாந் தலைநோய் குணமாகும்
பண்ணே ரிசைந்து மொழி மடவீர் பகர்ந்தோ மறிந்து செய்வீரே.

(வேறு)

அடப்பம் விதையும் திரிகடுகும் அடவே அக்கிராக் காரமுடன்
மிடுக்கா யரைத்து முலைப்பாலில் விடுக நாசி தனில்மூன்றில்
இடிக்கும் வலிக்கும் தலைநோவும் இசையுங் கண்ணோய் நீர் விழுதல்
நடுக்கும் கதிர்கண்ட பனிபோல நாடி யோடுங் கண்மடீரே 1620

## கண்வலி பேரிலே தலைவலி கண்டால் நசியம்

நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், இரண்டும் சரி, எருமைப் பால், முள்ளிவேர், கருநொச்சி, சிற்றாமுட்டி வேர்ப்பட்டை, எண்ணெய் ஆழாக்குக்குப் பாக்களவு விழுது கரு நொச்சிச்சாறும் கொஞ்சம் விட்டு எண்ணெய் எரிக்க, கண்டதிப்பிலி மூலம் பொடி வராகன் எடை தூவி எண்ணெய் வடித்து நாசியில் துட்டெடை எண்ணெய் நசிப்பு பண்ண நாலு நாளில் தலை வலி தீரும். 1621

(வேறு)

எருமைப்பால், நல்லெண்ணெய், கருநொச்சிச்சாறு, முல்லைச் சாறு, சிற்றாமுட்டிவேர், நீர்முள்ளிவேர், இவைகளைச் சேர்த்து வடித்து நாசியில் விடவும் கண்ணோய், கண்ணீர்ப்பாய்ச்சல், பீனிசம், தலைவலி இவை தீரும். 1622

(வேறு)

சமுத்திராப்பழம், திப்பிலி சமன். கரிசாலைச் சாற்றில் உருண்டைப் பண்ணி, காடி, தேன் இவற்றுள் இரண்டுதுளி நசிய மிடவும் கண்ணீர்ப் பாய்ச்சல், ஒரு தலைவலி, சன்னிவலிப்புத் தீரும். 1623

ஆக்கிராணம்

திரிகடு கரத்தை காரம் சிலையொடு நாபி சூதம்
நெரிவிடந் துருசு கூட நிரைசமன் கந்த கந்தான்
பரிவொடு நாசித் தூளைப் பாங்கதாய் வாங்கும் போது
தெரிகெடு கபால சூலை திகழ்சுரஞ் சன்னி போமே 1624

(வேறு)

சுண்டைவே ரரத்தை பாதி தூள்செய்து மூக்கில் வாங்க
மண்டையில் விளையும் நீரை வாங்கிடுந் தும்ம லாகத்
தொண்டையில் கரக ரப்பு தொடங்கிய சன்னி சூலை
பண்டையில் கண்ணோய் வாயு பழஞ்சுரம் பறந்து போமே. 1625

(வேறு)

தேற்றாம் வித்தொடு திரிகடுகு சீயக்காய்
சேர்த்தா லிருநாசி சேர்பொடித்தூள்—மோர்ந்தக்கால்
சன்னி பலவுந் தலைவலியும் நீரேற்றம்
விண்ணில் விரைந்தோடும் விட்டு 1626

(வேறு)

எருக்கம் பாலும் திரிகடுகும் இடையுந் திருநீ றுடனாக
நருக்கிப் பொடிகள் தானைந்தும் நன்றாய்ச் சிமிழில் தானடைத்து
சுருக்க வாங்கும் நாசிதன்னில் தும்மற் காணும் சன்னியறும்
இருக்க வந்தக் கண்ணோவும் ஏகுந் தலைநோய் விடந்தானே

## 19. காதிலிடும் மருந்து, புறவளையம்

மேனியிலைச் சாற்றைப் பிழிந்து, வலக்கண்ணில் நோயென்றால் இடக் காதிலும், இடக்கண்ணில் நோயென்றால் வலக் காதிலும் இடவும். கண்ணீர் பாய்ச்சல், சிவப்பு போன்றவையும் தீரும்.

புறவளையம் :

1. நாயுருவி வேரை எலுமிச்சம் பழச் சாற்றிலாட்டி கண்ணைச் சுற்றிப் புறவளையமாக இடவும்.

2. தேற்றான் விதை, துத்தம், பீங்கான், சீனக்காரம் இவற்றை எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்துப் புறவளைய மிடவும்.

3. கடுக்காய், காசுக்கட்டி, மடல்துத்தம், பொன்மெழுகு, சீனக்காரம், அதிமதுரம், புளிசுப்பாக்கு, தேற்றான் விதை, அபினி இவற்றை எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்துக் கயிறாகத் திரட்டி நிழலிலுலர்த்தவும். இதைக் காடி, ஊனாச்சாறு, கருவேலங் கசாயம் இவற்றில் அரைத்து வெதுப்பிப் புறவளையமாக் இடவும். கண் நோய்கள் தீரும்.

### கண் நோய்க்குக் காதிலிட மருந்து

விளம்புகிறேன் வலக்கண்ணில் நோவென்றால் மைந்தா
மேனியிலை கசக்கியிடக் காதி லூற்று
தளம்பியதோ ரிடக்கண்ணில் நோவென்றால் மைந்தா
சாற்றுவாய் வலக்காதில் சாறு தன்னை

களங்கமற் றிரண்டுகண்ணும் நொந்த தானாற்
காதிலாண்டி லொருமிக்கக் கசக்கி வாறு
துளம்பியதோர் சிவப்புமறும் நீரு மாறும்
சுட்டிறென புறவளையைத் துணிந்து காணே.

புறவளையம்

துணிந்துகேள் நாயுருவி சிவந்த வேரைத்
தோண்டியே பிடுங்கிவந்து மண்வெட்டி காய்ச்சி
கனிந்தபழச் சாற்றினால் வேரை யாட்டிக்
கண்ணிலே புறவளையுங் கட்டச் சொல்லு
அணிந்திடவே அந்தஇலைச் சாறு வாங்கி
அம்மியிலே மத்தித்துப் பூசத் தீரும்
உனிந்துடைய மாலைக்கண் காணா தென்றால்
உத்தனட்டி வேர்முலைப்பா லூட்டி யாட்டே 1629

முலைப்பாலி லாட்டியங்கே கண்ணிற் தீட்ட
மோசமன்றி மாலைக்கண் தானும் மைந்தா
முலைப்பாலில் பால்மெழுகு நல்லெண்ணெய்க் குள்ளிட்டு
ஈரைந்து தினமூன்றி லெடுத்துக் கொண்டு
நிலைப்பாக யெண்ணெய்குற்றி யுரைத்துத் தீட்டு
நேர்ப்பாக மாலைக்கண் நிவர்த்தி யாகும்
மலைக்காம லெட்டுநாட் தீட்டி னாக்கால்
மயங்காம லிருட்டறுத்து விழிசெவ் வாமே. 1630

(வேறு)

ஆமே கண்ணிற் புறவளையம்
ஆழுந் தேற்றா விதைதுத்தம்
நாமே கண்ணிற் பீங்கானும்
நல்ல சீனக் காரமுடன்
தாமே தேசிப் பழச்சாற்றில்
சாடி யிரும்பிற் கொதிபூசிற்
போமே யிலங்கை சிங்கமன்னன்
பொருதப் படைபோல் வெளியாமே. 1631

(வேறு)

வாங்கப்பா வருக்கநாட் பிடுங்கி வந்து
மைந்தனே யந்தயிலைச் சாற்றி லாட்டி
வாங்கப்பா கண்ணிலிடு குருடுக் கெல்லாம்
வானிலுறு மருந்ததியை மருவிக் காண்பார்

வாங்கப்பா புறவளைக்கு மருந்து சொல்வோம்
மகத்தான நேத்திரநோய்க் கெல்லா மாகும்
வாங்கப்பா கடுக்காயுங் காசுக் கட்டி
மடல்துத்தம் பொன்மெழுகு சீனந் தானே. 1632

தானென்ற மதுரமொடு புளிசுப் பாக்கு
சாதகமாய்ச் சரியாகத் தூக்கி வாங்கி
கோனென்ற தூளாட்டி யிதனோ டொக்க
கூட்டுகிற மருந்துதனைக் கூர்ந்து கேளு
கானென்ற தேற்றான்விதை யபினி யோடு
கடியதொரு கடுக்காயும் புளியும் நேராய்
தேனென்ற பழச்சாற்றா லாட்டி வாங்கித்
திரும்பவதைத் தூளுடனே சேரு சேரே. 1633

சேர்த்திரண்டு மொன்றாக்கிப் பழச்சாறு விட்டுத்
திரளவே பிசைந்து வைத்துக் கொண்டு
கார்த்திநெய்யைப் புரட்டியே மருந்தைத் தானும்
மைந்தனே யிரண்டுவிரற் கனத்தில் நீயும்
பார்த்துவொரு விரல்நீளங் கயிறு கட்டிப்
பாங்காக நிழலுலர்த்திப் பழச்சாற்ற தாலே
கார்த்துனிரை காடியா லூனாச் சாற்றாற்
கருவேலங் கசாயத்தா லரைத்தி டாயே. 1634

அரைத்ததொரு மருந்ததனைக் கொதிக்க வைத்து
அப்பனே புறவளைதான் போடு போடு
நிரைத்ததொரு நேத்திரநோய்க் கெல்லா மாகும்
நேரான யின்னமொரு வழியைக் கேளு
விரைத்ததிரி கடுகுடனே வேளை வேரும்
வெந்நீரை விட்டரைத்துக் கயிறு பண்ணி
கரைத்ததொரு வெந்நீரிற் கலக்கிக் கொண்டு
கட்டாகப் பஞ்சிலே துவைத்தி டாயே. 1635

## 20. பத்திய முறைகள்

கண் நோய் உள்ளவர்கள் பின்பற்றவேண்டிய சில பொதுவான பத்திய விதிகள் பல சுவடிகளிலும் கூறப்படுகின்றன அவற்றைப் பின்வருமாறு காணலாம். (1636-1780)

பொது

1. உணவில் கீரை, பசுவின் நெய், பால் இவற்றை அதிகமாகச் சேர்க்க வேண்டும்.
2. கால் வலிக்கும்படியாக நீண்ட தொலைவு நடத்தல் கூடாது.
3. பெண்கள் அருகிருந்து பேசுதலும் கூடாது.
4. வெற்றிலை, பாக்கு, புகையிலை இவற்றை அதிகமாகப் பயன் படுத்தக் கூடாது.
5. பெண்களிடம் சேருவதும். மற்றவர்களிடம் அதிகம் பேசுவதும் கூடாது.
6. குடிப்பதற்கு நன்குக் காய்ச்சிய நீரையே பயன் படுத்தவேண்டும். சுக்கு, மிளகு இவை கலந்து காய்ச்சிய நீர் மிகவும் நல்லது.
7. கள், மதுபோன்ற போதைப் பொருட்களை உட்கொள்ளக் கூடாது.
8. கட்டித் தயிறும் சோறும் ஆகாது.

9. மீன், இறைச்சி இவையும் ஆகா.

10. தகரை, சிறுகீரை,முருங்கைப்பிஞ்சு, பயறு, பால் இவைகளை வேண்டிய அளவு உணவில் சேர்க்கவேண்டும்.

11. கண்களுக்குத் தேவையான ஓய்வும், நல்ல தூக்கமும் தேவை.

12. நான்கு நாட்களுக்கொரு முறை எண்ணெய் தேய்த்து முழுகி வரவும்.

13. உள்ளங்காலில் நெய், சந்தனம் இவற்றைப் பூசுதல்வேண்டும்.

14. மலம், சிறுநீர் இவற்றைக் குறிப்பிட்ட காலங்களில் முறைப் படி வெளியேற்றல் வேண்டும்.

15. முறைப்படியான பல்துலக்கல் போன்றவையும் கவனிக்க வேண்டியவனவாம். பல்லைச் சுத்தம் செய்ய, ஆலம், துத்தி, கருவேலம், வேம்பு, நீர்ப்பூலா, மருதம், நாயுருவி இவற்றின் குச்சிகளைப் பயன்படுத்துதல் சிறப்பாகும் என்பர்.

16. கடுக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, இந்துப்பு இவற்றுடன் எலுமிச்சம்பழச்சாறு. தேன் இவையும் கூட்டிய நீரில் வாய் கொப்புளித்தல்வேண்டும்.

17. இரவில் விண்ணில் காணப்படும் சந்திரனை முறைப்படிப் பார்த்தல் வேண்டும்.

18. சாப்பிட்ட பிறகு கை, வாய் இவற்றைச் சுத்தம் செய்வதுடன் கண்ணிலும் நீர்விட்டுக் கழுவவேண்டும்.

19. ஆறு மாதத்திற்கொருமுறை கக்கல் மருந்தும், இரண்டு மாதத்திற்கொருமுறை கழிச்சல் மருந்தும் ஒரு மாதத்திற் கொருமுறை நசிய மருந்தும், மூன்று நாட்களுக்கொருமுறை கண் மருந்தும் நோய்க்கேற்றவாறு பயன்படுத்த வேண்டும்.

20. ஏலம், கிராம்பு, நெல்லி முள்ளி, கோட்டம், வாய் விளங்கம், கோரைக்கிழங்கு, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், சிவதை வேர் இவற்றைப் பொடித்து அத்துடன் சர்க்கரை சேர்த்துக் காலையில் சாப்பிடவும்.

திரிகடுகு, சிவதைவேர் இவற்றின் தூளொடு தேன் கலந்து உட்கொள்ளவும்.

கடுக்காய், நெல்லி முள்ளி, தான்றிக்காய், நேர்வாளம் இவை சேர்த்துப் பொடித்து, தேன் கலந்து உட்கொள்ளவும்.

இம்மருந்துகளால் வயிற்றிலுள்ள தீமைகள் நீங்கி' முக்குற்றங்களால் ஏற்படும் கண்நோய்கள் விலகும்.

## முக்குற்ற நோய்களும் பத்தியமும்

வாதம், பித்தம், கபம் என்னும் இவைமாறுபடுவதனாலேயே உடலில் பல்வேறு நோய்கள் தோன்றுகின்றன என்பர். இயற்கையிலேயே சிலருக்கு வாத உடம்பாகவும், பித்த உடம்பாகவும், கப உடம்பாகவும் அமைந்திருக்கும். எனவே, இவர்கள் தங்கள் உடலிற்கேற்றவாறு உணவுப் பொருள்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இதன் வழியும் நோய்களைத் தடுக்க இயலும் என்பர்.

### 1. வாத உடம்புள்ளவர்க்கான உணவுப் பொருள்கள் (1684-1695)

**காய்கள்:** கத்தரிக்காய், பாகற்காய், சிறுவழுதளங்காய், பூசணிப்பிஞ்சு, துவர்பலா, முருங்கைப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு போன்றவை.

**தானியங்கள்:** நெல், கோதுமை, கொள்ளு, உளுந்து, சாமை, எள்.

இத்தானியங்களுடன் எண்ணெய், நெய், வெல்லம் இவை சேர்ந்த பணியாரங்களும் ஆகும்.

**கீரைகள்:** தளிரி, முருங்கை, தூதுவளை, பொன்னாங்காணி, தண்டிளங்கீரை. சர்க்கரவர்த்திக்கீரை,காரை, சாரடை, நெருஞ்சில் கோவை, முக்குறட்டை, அப்பை, வேலிப்பருத்தி, புளி மணித் தக்காளி, பசிரி, முன்னை, சுரை, முசுமுசுக்கை, வேளை, குப்பை மேனி.

**வற்றல்கள்:** பிரண்டை, சுண்டக்காய், பேய்ப்புடல், நெல்லி, மணித்தக்காளி, தூதுவளை, கோவைக்காய் இவற்றை உலர்த்தி வற்றலாக உட்கொள்ளவும்.

**ஊறுகாய்:** கடுக்காய், தேற்றான், முற்றிய இஞ்சி, சிறிய நாரத்தங்கச்சல், மாம்பிஞ்சு, கிளாக்காய், தான்றிக்காய்.

**இறைச்சி:** வாரணம், வெள்ளாடு, முயல், உடும்பு, சிட்டு, மான், பன்றி, ஊர்க்குருவி, உள்ளான், குயில், அடையான் கொக்கு இவற்றின் இறைச்சி, உலர்ந்த குறவைமீன், உளுவைமீன், வரால், கெளுத்தி, இரால்மீன்.

**பால்:** வெள்ளைப் பசுவின் பால், தயிர், வெண்ணெய், நெய்.

மேலும், தேங்காய்ப்பால், வெல்லம், மலைத்தேன், பனை வெல்லம், வாழைப்பழம், பலாப்பழம் போன்றவையும் வாத உடம்புள்ளவர்க்காம்,

## 2. பித்த உடம்புள்ளவர்க்கான உணவுப் பொருள்கள்: (1696-1706)

**காய்கள்:** உள்ளம், வெள்ளுள்ளீ, கந்தம், புடோலம், வாழைக் கச்சல், முள்ளி, கண்டங்கத்தரி, முருங்கை, பூசணிக்காய், வெள்ளரி, கதலித்தண்டு, கத்தரிப்பிஞ்சு, கக்கரிக்காய், பலாக்காய், வழுதளை, வாழைப்பூ, பீர்க்கம்பிஞ்சு, பழுபாகற்காய், அவரைப் பிஞ்சு, தூதுவளங்காய், மாம்பிஞ்சு, சிறுகளாக்காய்,

**தானியங்கள்:** சென்னமுத்தம், கோதுமை, சாமை, கடலை, பச்சைப் பயறு,

இவற்றுடன் சர்க்கரை, நெய், பால் இவை சேர்ந்த பணி யாரங்களும் ஆகும்.

**கீரைகள்:** முசுமுசுக்கை, தாளி, வல்லாரை, முசுட்டை, தூதுவளை, வள்ளி, பசரி, அப்பை, புன்முருங்கை, சிறுகீரை, பாலை, புளியாரை, பொன்னாங்காணி, திராய், அகத்தி, பசளை, சீதேவி, அமுக்குரா, சர்க்கரவர்த்தி, வேளை, மணித்தக்காளி, கோவை.

**வற்றல்:** பேய்ப்புடல், அவரை, கத்தரை, தூதுவளைக்க, சுண்டக்காய், கண்டங்கத்தரி, மணித்தக்காளி, பயத்தங்காய், தாமரை.

**ஊறுகாய்:** ஈரமுள்ள இஞ்சி, நெல்லி, கடுக்காய், தான்றிக் காய், விளாம்பிஞ்சு, முதிர்ந்த எலுமிச்சை, தூதுவளைக்காய் தாமரை.

**இறைச்சி:** ஆற்றுமீன்கள், கடல்மீன்கள் இவற்றில் காய்ந் தவை. விரால் நன்று, இரால், உளுவை, குறவை, அயிரை, போன்ற மீன்களும் ஆம். வாளை மீன் ஆகாது. வெள்ளாடு, ஆமை, வெள்ளெலி, கோழிக்குஞ்சு, முயல், உடும்பு, மடையான், உள்ளான், கொக்கு, மான், காட்டுப்பன்றி, புறா, கவுதாரி காணாங்கோழி, மயில் இவற்றின் இறைச்சி ஆம்.

**பால்:** கருநிறமுள்ள பசுவின் பால், தயிர், வெண்ணெய்,

மேலும், முந்திரிகை, பேரீச்சம்பழம், வருக்கைப்பழம், எலுமிச்சம்பழம், மாதுளங்காய், தேன், சர்க்கரை, கற்கண்டு இவற்றோடுண்ணவும் பித்தம் நீங்கும்.

## கப உடம்புள்ளவர்க்கான உணவுப் பொருள்கள் (1707-1716)

**காய்கள்**: முள்ளி, தூதுவளை, கண்டங்கத்தரி, முருங்கை, வாழை, வெள்ளரி, புடல், வாழைப்பூ, பழுபாகல், மாம்பிஞ்சு, பூசணி, வருக்கை, அவரை,

**தானியங்கள்**: செஞ்சாலி, சம்பா, உளுந்து, கோதுமை, தினை, துவரை, சாமை,

இவற்றுடன் சர்க்கரை, நெய், வெண்ணெய், தேன் இவை சேர்ந்த பணியாரங்களாம்.

**கீரைகள்**: பொன்னாங்காணி, சிறுகீரை, அப்பை, நெருஞ்சில் கோவை, வல்லாரை, கொத்தமல்லி, சர்க்கரவர்த்தி, பாகல், பசரி, தூதுவளை, வேளை, குப்பைமேனி, அகத்தி, முக்குறட்டை, வெந்தியம், மாஞ்சில், முருங்கை, இளங்கீரை, ஆரை, பொன்னா வாரை, சாரடை, சதகுப்பை.

சுண்டி, சுரை, முசுக்கை, பூனை, குறிஞ்சில், பாலை, நீர் முசுட்டை, சீதேவி, முன்னை, தும்பை, பரட்டை,

**வற்றல்**: மணித்தக்காளி, பேய்ப்புடல், ஆதெண்டை, பிரண்டை, சுண்டக்காய், தூதுவளை, முள்ளி, நெல்லி, நாரத்தங் கச்சல், கண்டங்கத்தரி, அவரை, கோவை.

**ஊறுகாய்**: கோவை தூதுவளைக்காய், சுண்டை, குளைஞ்சி, மாதுளை, மாம்பிஞ்சு, கடுக்காய், தான்றிக்காய், பசுமஞ்சள், இஞ்சி, தேற்றான், மிளகு, மூங்கில், திப்பிலி, நாரத்தம்,

**இறைச்சி**:

வெள்ளெலி, வெள்ளாடு, ஆமை, உடும்பு, காடை, கொக்கு, மான், கவுதாரி, சிட்டு, உள்ளான், பன்றி, சிறுமுயல், மடையான் இவற்றின் இறைச்சியும், சிறுவிரால், குறவை, செவ்வரால், உளுவை, போன்ற மீன்களும்.

**பால்**: சிவந்த நிறமுள்ள பசுவின் பால், தயிர், மோர், வெண்ணெய்.

இவற்றுடன் உணவருந்துபவர்க்குக் கபம் நீங்கும்.

## தண்ணீரின் குணம் (1717—1723)

அடவி நீரை உட்கொண்டால் சுரம், சொறி, வறட்சி, சீதம், போன்றவை வரும்.

சுனைநீர் உட்கொண்டால் பித்தமாகும்.

மலையருவிநீர் வாயு, கப, சுரம், மலத்தைக் கட்டும்.

மடுநீர் மிகவும் ஐய்யாம்

பாசி நீரை உட்கொள்ள கண்ணொளி மங்கும். வெப்பு நோயுண்டாகும்.

தடநீர் மந்தமும், வெப்புப் பார்வையு முண்டாக்கும்.

ஏரிநீர் அதிக தாபத்தை நீக்கும்.

உப்புநீர் வாயு, குன்மம், பெருங்கபம், பித்தம் இவற்றை நீக்கும்.

ஆற்றுநீர் இளமையைக் காக்கும், பிணிபோக்கும். மேனி பொன்னிற மாக்கும். முப்பிணிகளும் நீங்கும்.

வெந்நீர் குடிக்கும் பாண்டத்தின் குணம்:

செம்புப் பாத்திரத்தில் வெந்நீர் வைத்து உட்கொண்டால் வாயு, அனிலம், பித்தம், கபம், சிரங்கு, சத்தி இவை நீங்கும்.

பொன் பாத்திரத்தில் வெந்நீர் வைத்து உட்கொண்டால் அனிலம், பித்தம், கபம் நீங்கும்.

மண் பாண்டத்தில் வெந்நீர் வைத்து உட்கொண்டால் அனிலம், பித்தம், கபம், சத்தி, உடல் கடுப்பு, விக்கல், மேக நோய் நீங்கும்.

சமையல் செய்யும் பாண்டத்தின் குணம்:-

**மண்பாண்டம்:-** வாதம், பித்தம், கபம் போன்ற முக்குற்றங் களும் உடலில் பற்றாது.

**வெண்கலப் பாண்டம், செப்புப் பாண்டம்:-** அனிலர்க்காகும்.

**மண்ணாலானபாண்டம்:-** பித்தர்க்காகும்.

**கஞ்சத்தாலான பாண்டம்:-** கபத்தவர்க்காகும்.

உணவு உண்ண வேண்டிய முறை (1729—1737)

1. நன்குப் பசித்த பின்பும், பசி தணியும் முன்பும் சாப்பிட வேண்டும்.

2. உண்பதற்கு முன்னர் கண், வாய், கை, பாதம் இவற்றை நன்கு சுத்தம் செய்ய வேண்டும்.

3. நல்லதொரு இருக்கையில் அமர்ந்து, இறைவனைத் தொழுத பின்பே உண்ணவேண்டும்.

4. பொன், வெள்ளி, வெண்கலம் போன்ற மூவகையான பாண்டங்களில் சமைத்த உணவையே உட்கொள்ள வேண்டும்.

5 உணவில் கீரை, காய் இவற்றின் சாறுகளுடன் அறுசுவையும் கலந்திருக்க வேண்டும்.

6. உணவுக்கு முன்னர் அதிகமாக நீர் அருந்தினால் உடல் இளைக்கும்.

7. உணவுக்கு முன்னர் அதிகமாக நீர் அருந்தாமல் இடையில் சாறுகளை உட்கொள்ளுதல் உடலுக்கு நல்லதாகும்.

8. சூடான சோற்றுடன் இருகூறு கறிகொள்ள வேண்டும்,

9. வெந்நீரில் மிளகு கூட்டியும், பாலைக் காய்ச்சியும் அருந்த வேண்டும்.

10. ஒருநாளைக்கு ஒருபொழுதுண்ண உடல் வலிவும் சுகமும் உண்டாகும்.

இருபொழுதுண்ண உடல் பலம் பெரும். மூன்று பொழு துண்ண பிணிகள் அதிகமுண்டாகும்.

11. அறம், பொருள், இன்பம் என்னும் மூவகை உலக இன்பங் களை இத்தகைய உணவின் மூலமே அடைய முடியும்.

## இளநீரின் குணம்

உணவு உண்ட பின்பு இளநீர் ஒரு உழக்கு உட்கொள்ள வாதம், பித்தம், சிலேத்துமம், கண்ணோய், பாண்டு போன்றவை தீரும்.

உணவுக்கு முன் இளநீர் அருந்த வாத குணம் போகும், மாலையில் அருந்த மெய்யிற் பித்தம் போகும் காலையில். அருந்த கபம் அறும்.

செவ்விளநீர் காசம், சிலேத்துமம், எரிவு இவை தீர்க்கும். (1738-40)

## எண்ணெய் முழுக்கின் குணம்

உடலிலுள்ள எலும்பு, தசை, நரம்பு, இரத்தம், மேதை, தோல், ரோமம் இவற்றின் வழியே உள்ளே செல்லும் வகையிலும்

தக்க பருவகாலங்களில் முறைப்படி அறிந்தும் எண்ணெய் முழுகி வெந்நீரில் குளிப்பது மிக்க பயனைத் தரும் எனக் கூறப்படுகிறது.

இவ்வாறு எண்ணெய் தேய்க்கும் பொழுது, தலை உச்சியில் தேய்ப்பது கால் பாதத்திற்கும், பாதத்தில் தேய்ப்பது கண், காது, பல் இவற்றிற்கும் நன்மை பயக்கும். தலையில் தேய்க்கும் எண்ணெய் உடற் பிணியைப் போக்கும். பாதத்தில் தேய்க்க விழி நோய்தீரும், கண்ணில் தேய்க்கச் செவிநோய் தீரும். காதில் தேய்க்கத் தலை நோய் தீரும் எனக் கூறப்படுகிறது. (1741—1753)

## குளிக்கும் தண்ணீரின் குணம்

தலையில் எண்ணெய் தேய்த்து முழுக வெந்நீரே சிறந்ததாகும்.

பித்த உடலுள்ளவர்க்கு ஆற்று நீரும் குளத்து நீருமாகும். வேப்பம் பாசிகள் வளர்ந்த ஓடை நீர் அனிலர்க்காகும். கபத்தவர்களுக்குக் கேணி நீர் ஆகும்.

கிணற்றுநீர் வெந்நீரானால் பித்தம் தீர்க்கும். கேணிநீர் வெந்நீரானால் வாதம் தீர்க்கும். ஆற்றுநீர் வெந்நீரானால் கபம் போகும். குளத்துநீர் வெந்நீரானால் தாகம் போகும்.

தேங்கி நிற்கும் குளத்து நீர், சருகு போன்றவை நிறைந்த நீர் இவற்றைப் பயன்படுத்தினால் நோய்கள் சேரும்.

உடலில் ஈரம் போகும்படியாக வெண்துகிலால் நன்குத் துடைக்க வேண்டும். பின்பு சந்தனம், துருக்கம், கும்பஞ்சான் இவற்றின் தூபம் காட்டல் நன்று.

நோய் அண்டிடாமலிருக்கச் சுத்தமான நல்லாடைகளையே அணிதல் வேண்டும், (1754—1760)

## எண்ணெய் முழுகக் கூடாத காலங்கள்:-

கடுமையான அனலில் நின்றும், நடுப்பகல் நேரத்திலும், இரவுக் காலத்திலும், உறங்கும் பொழுதும் எண்ணெய் முழுகுதல் கூடாது. (1761)

## எண்ணெய் முழுக வேண்டிய காலங்கள்:-

மார்கழி, தை மாதங்களில் 2 கடிகை நேரமும், மாசி, பங்குனி 3 கடிகையும். சித்திரை, வைகாசி 5 கடிகையும், ஆனி ஆடி, ஆவணி 6 கடிகையும், மற்ற மாதங்களுக்கு 3 கடிகை நேரமும் எண்ணெயைத் தலையில் ஊற வைத்து தலை முழுக வேண்டும். (1762)

களப கத்தூரியின் குணம்:-

சந்தனம். கற்பூரம், கத்தூரி, குங்குமப்பூ, அம்பர், செழுஞ் சாந்து, சவ்வாது, புனுகு, கோரோசனை இவற்றை உடலில் பூசவும் இன்பமாகும்.

கத்தூரி, புனுகு, சாந்து, சாம்பிராணி இவைகள் அனிலர்க்கு நன்றாம்.

சந்தனம், கற்பூரம், குங்குமம், கத்தூரி, பன்னீர், சவ்வாது கோரோசனை இவை பித்தர்க்கு நன்றாம்.

சந்தனம், சவ்வாது, புனுகு, அம்பர், குங்குமப்பூ, கோரோ சனை இவை கபத்தவர்க்கு நன்றாம்.

சந்தனத்தை உடலில் பூசவும், வாதம், பித்தம், கபம் போன்ற முக்குற்றங்களும் நீங்கும் தாது உண்டாகும். அறிவுக் கூர்மை, செல்வம், களிப்பு இவை மிகும். தினவு, பிரமேகம் இவை தீரும்,

சவ்வாது பூசவும் வசீகரமாகும். வெண் குட்டம், உடல் துர்நாற்றம் போகும்.

கத்தூரி பூசவும், கபம், பித்தம், வாதம் நீங்கும்.

கற்பூரம் பூசவும், உடல் அழகும், வாசனையும் பெறும் மந்தம், துர்க்கந்தம் இவை நீங்கும்.

பூக்கள்:-(1771—1777)

**மல்லிகை:** கண்ணோய் தீரும், ஐயம், அனிலம், பித்தம் இவை தீரும்.

**குடமல்லி:**—முப்பிணி போக்கும்

**சண்பகப்பூ:**—பித்தம், அனிலம் போக்கும்

முப்பிணியோர்க்கும் ஆவன:-

குறுக்கத்தி, அலரி, செவ்வந்தி, மல்லிகை, முருக்கு, மகிழமலர் கழுநீர், பாதிரி,

அனிலர்க்காவன:-

சாதி, செவ்வந்தி, குடமல்லிகை, புன்னை, வெண்டாமரை, குருக்கத்தி, வீரம், கேதகை, வெட்டி வேர், சண்பகம்.

பித்தர்க்காவன:-

இருவாட்சி, பிச்சி, வேர்கொழுந்து, செவ்வந்தி, முல்லை செங்கழுநீர், பன்னீர்பூ,

ஐயர்க்காவன:-

பிச்சி, இருவாட்சி, மகிழம், முல்லை, சாதி, கோங்கு, நீலம், மல்லி, புன்னை, கேதகை,

படுக்கும் மெத்தை

வாதத்தவர்க்கு—சந்தனமாகும்.
பித்தர்க்கு—இலவு வெண் பருத்தியாகும்.
கபத்தவர்க்கு—பூளைப் பஞ்சாகும்.

முலைப்பாலின் குணம்

சீதளம், சிலேற்பனம், வாதம், பித்தம், சன்னி, சத்தி, விக்கல்' காது நோய், கண்ணோய், புண்ணோய், வெப்புநோய் போன்ற பல நோய்களும் போக்கும்.

வாத உடலுள்ளவளின் பால் ஐயம், பித்தம் போக்கும். பித்த உடலுள்ளவளின் பால் வாயுவை உண்டாக்கும். ஐய உடலுள்ள வளின் பால் கண்ணோய் போக்கும்.

கறுத்த நிறமுள்ளவளின் முலைப்பால் கண்நோய்களுக்கு மட்டுமே ஆகும். மற்றவற்றிற்கு ஆகாது. சிவந்த நிறமுள்ள வளின் முலைப்பால் எல்லா நோய்களையும் போக்கக் கூடியதாகும். (1778—1780)

(பத்திய முறைகள்)

செங்கயற் கண்ணோய் வந்தால் திண்ணயிலைக் கரிநெய் பாலும்
பங்கயச் சிற்றடி நோக பருக்கை யுறுத்த நடவாதே
அங்கயற் கண்ணியி னோடு அருகி ருந்து பேசாதே
மங்கை யுவப்பது வாமென்று மருவிச் சொன்னார் புவிமீதில் 1636

பங்கயற் கண்மிக நொந்தால் பருக்கை யுறுத்த நடவாதே
செங்கயற் கண்மட வாய்கேள் திண்ணா ரிலைக்கறி மாங்காய்
அங்கையில் வெற்றிலை யேந்தார் அருகிருந் தாரொடும் பேசார்
மங்கைய தப்பதும் பாலே மருத்துவன் சொல்வதும் பாலே 1637

செங்கயற் கண்மிக நொந்தால் சேர்க்கே ணிலைக்கறி நீர்மோர்
பங்கயச் சீரடி நோகப் பருக்கையு முறுத்திட நடவேன்
அங்கயற் கண்ணியினைச் சேரேன் அருகிருந் தாலும் பேசேன்
மங்கையை யுகப்பது மப்பாலே மருத்துவன் சொல்வது போலே

குடிப்பது வெந்நீ ராகும் கொள்வது சாறு மாகா
பொடிப்புறு மிளகு சுக்கும் பொருத்திய குளமுங் கூட்டி
தடிப்புறு தயிருஞ் சோறுந் தானது மிகவு மாகா
வெடிப்பது மீனிறைச் சியிவை பத்திய மாகா தென்னே 1639

குடிப்பது வெந்நீ ராகும் கொள்வது மிளகு சாறு
பொடிப்புற மிளகி லானும் பொருந்தொரு போது கொள்க
தடிப்புள தயிர்சோ றுள்ள தானது மிகவு மாகா
வெடிப்புள மீனி றைச்சி மிகமிக ஆகா தென்னே 1640

சுக்கது நீரிற் காய்ச்சிச் சுகம்பெறக் குடிக்க நன்று
மிக்கதோர் வழுத லங்காய் விரும்பிய தகரை மற்றும்
புக்கது சிறிய கீரை புனல்மு ருங்கைக் காணி
தக்கது பயனும் பாலும் தானிதுக் கமுது கொள்ளே 1641

புலத்திய பின்பருந்து போச னந்தனிற் புளிப்பு மிக்க
சலத்துரு ததிபால் பாகல் சாகம்மீ னிறைச்சி யச்சம்
நிலத்தெழு பிரும்ம பத்திரி நித்திரை மடவா ரின்னும்
நலத்துறா வகைநீக் கிப்பின் நாளும் பத்தியத்து நில்லே 1642

கலம்போக்கும் திலகுமஞ்சட் புகையைக் காட்டி
கால்கடுக நடவாம விருப்பீ ராகிற்
தலம்புகழ் நாலுநாளைக் கொருக்கால் மூழ்கிச்
சந்தனமும் பூசிவரத் தணியுங் கண்ணோய்
பிலங்கனுடை யெண்திசையு மன்னர் போற்றும்
பெரியமா லவதார சிங்க மன்னன்
மலங்காத ராசாக்கள் தங்கள்முன் னெதிர்க்க
வரும்படைபோ லோடிவெளி யேறுங்கள் தானே.

(வேறு)

நீரும் விழுந்து கண்புகைந்து
நிறைய முகத்தி லனலாகிற்
சேரும் பதத்தில் நறுநெய்யைச்
சேர்ந்தே தருமா வுருட்டி
வாருங் காடி கால்கழுவி
வளர்சந் தனத்தை மத்தித்து
பாரு மிலங்கை சிங்கத்தைக்
கண்ட படைபோல் பறந்திடுமே. 1644

(வேறு)

பெருமையா முலகத் துள்ளோர் பேணியே நடக்கி லன்னோர்
அருமையா யிடர்கள் செய்வான் அதன்க ருத்த வாலே
ஒருமையாய்ப் பிணிசேர்ந்து ஒன்றோ டொன்றெழு ந்திடினு நீக்குங்
கருமையாஞ் சமனு மஞ்சுங் கதிர்முன்செய் கருமஞ் சொல்வாம்.

மலசுத்தி

ஆமமுந் தெழுந்த வாயு அதிகரித் தனத்தை யூட்டித்
தூமமுற் றிடுதி முட்டித் துவன்றிரை சூட்டு பித்தாற்
சேமமுற் றிடும லத்தைச் சேர்த்தது பிரித்துத் தள்ள
காமமுற் றிடுத்தெழுமுன் தானே வெந்தவ ரழுந்தார் கண்ணோய்

கதிரவ னெழுமுன் னியாமத் தெழுந்துகண் ணதலை நாடி
விதிமுடை வடபால் சென்று வெவ்விய மலத்தை வீழ்த்திப்
பதிபெறு சவ்வு சுத்தி பகர்விதப் படியே செய்து
துதிபெறு வாரஞ் சுத்தித் தூயத் தானே செய்வாம் 1647

செய்யுமுத் தகைமை யாலே சேருமுப் பிணியுந் தீரும்
உய்யுநற் குறிப்பிற் செல்லும் உள்ளமும் மாயை நீங்கும்
பொய்யுமின் சொல்லா மாயிசு பெருகிடும் பேறு முண்டாம்
வெய்த்தடற் தோளாய் மேவு வெவ்வினைச் சார்பி லார்க்கே 1648

ஆர்ந்தன மலங்கள் சுத்தி யாவன வுறுகா லைக்கே
சார்ந்தன பித்தந் தாழுந் தனர்பதி வனத்தி லங்கள்
சேர்ந்தன விதங்க டாழுஞ் செழுந்தசெவ் வந்திப் போதில்
கூர்ந்தனை வாதந் தாழுங் கொடுத்திடும் பசிக்குப் பண்பாய்

பலந்தரு சைவ நீதிப் படிவரு சுகியி னாலும்
மலந்தரு விகற்பம் நீங்க மருவுறு சவுத்த தாலும்
சலந்தரு குணத்தின் மிக்க தனிவெந்நீர் குளித்த லாலும்
நலந்தரு சுகமுண் டாகும் நற்தந்த சுத்தி சொல்வாம் 1650

தந்த சுத்தி

சீர்பெறு நயனந் தன்னிற் சேர்ந்துநோய் வாரா வண்ணம்
கார்செறி குழலி னாளே கருதிய தந்த சுத்தி
நீர்கொள வெருக்கு வேரும் நிறைந்தவேல் மருது பூலா
ஓசரிடப் பாக முந்தித் தேய்த்திடும் வலத்திற் பின்னே 1651

பல்லுறத் தேய்க்கும் போது பசையுமென் றிடத்தில் மீதே
மெல்லவே வீரிற் தேய்த்து விடுகையின் வலத்தே யென்க
நல்லுற நாவ ழித்து நலம்பெறு வண்ணஞ் செய்து
அல்லுறச் சுத்தி பண்ணி அலசிகொப் பளிப்ப தென்றே 1652

வாயில்நீர் நிரம்பக் கொண்டு வானுற விழித்து நோக்கி
நீயிரு கையில் ஏற்றி நீர்முகந் தன்னி லப்பித்
தீயதிப் பிலியு மிந்து திரவிய பூரங் கூட்டி
மேயிடு நயன ரோகம் மாறிடு மென்று கூறே. 1653

கையது தன்னில் நீரைக் கனக்கவே யெடுத்துக் கொண்டு
வைவற விழித்து நோக்கி அந்தநீர் கண்ணி லப்பித்
தெய்வீக நீர ணிந்து திரவிய பூரங் கூட்டி
மெய்விடு மஞ்சனந் தானும் வினையற நயன மீதே 1654

தெரிந்திடும் நயனம் நன்றாய்த் திகழ்முனி யுகந்தே கேளாய்
வருந்திடும் வலத்துப் பின்னும் வாய்த்திடு தந்த சுத்தி
இருந்திடுங் கண்ணி னாளே அம்புவி மனுவோர்க் கெல்லாம்
பெருந்திடும் வெந்நீர் நன்று பிசைந்திடும் நயன நோயே. 1655

சொல்லிய வாலெ ருக்குத் துத்திகரு வேல்நீர்ப் பூலா
நல்லிள மருது வேம்பு நண்ணுநா யுருவி யான
பல்வித மாமி வற்றின் பகையுனோ டற்றுப் பண்பாய்
எல்லையெட் டங்கு லத்தால் இருந்துபற் சுத்தி செய்வான். 1656

செய்யபற் கொம்பு தானும் சேர்ந்திடு முலகோர்க் கெல்லாம்
துய்யவங் குலமீ ராறாம் சூழ்தவத் தோர்களுக் கெட்டாம்
வெய்யவ னெழுந்தி காதல் வீறுசேர் மன்றிக் காதல்
பைய்யவ முகமாய் நோக்கி பலவினக் கிடுத லின்பாம். 1657

இருந்துசுத் திகள்செய் கோதில் இடமுதல் வலமாய் சூழத்
திருந்துபல் விளக்கி நன்றாய்த் தீதற சுத்தஞ் செய்யில்
வருந்தமுப் பிணிகள் தானும் வருந்திடா தரும நாவைப்
பொருந்துமா சறவே வேண்டி வழித்திடிற் கண்கள் பொன்னாம்.

பொன்னுரு மாவிற் கென்றும் போகமாம் பூலா விற்கே
நன்னுதல் வசிய மாகும் நாயுரு விக்கே நாக்கும்
பன்னுசேர்ந் திருந்தும் வேம்பு மாவுறா தெருக்குல வாதம்
பின்னிடு மருதிற் பித்தம் பெரிதும்வே லுறமாந் தந்தம் 1659

தந்தமே விளக்கிப் பின்புத் தாளினைக் கல்விற் தேய்த்துச்
சிந்தையால் மாசு போக்கித் திகழ்வெந் நீர்வா ய டக்கி
அந்தமா யங்கை நீர்க்குள் ஆனதோர் வதனம் வைத்து
முந்தவே கண்ணி ரண்டு விழித்து தீரு மிவைகள் முற்றும், 6160

மும்முறை யிந்த வாறு முயன்றுவெந் நீரால் மெய்யில்
மும்முறை குளித்துத் தேய்த்தங் குலர்த்திய யாடை தன்னை
தம்முறை புனைந்து தெய்வத் தபஞ்செபந் தவறா தெய்தி
இம்முறை செய்வா ரவர்கட் கிருள்வினை யெய்தா தென்று. 1661

## வாய் கொப்பளித்தல்

தக்கதோர் மருந்து சொல்வேன் தானிது வாய்க்கொப் பளிக்க
மிக்கதோர் கடுக்காய் சுக்கு மிளகுதிப் பிலியிந் துப்பு
புக்கதோர் தேசிச் சாற்றில் புறவற நறுக்கித் தேனும்
ஒக்கவே கூட்டிப் பின்னை ஒளிபெற நிறுத்திப் போடே, 1662

அடக்கிநீ நிறுத்திப் போட்டு அடைவுற வெந்நீர் கொண்டு
சடக்கென கொப்ப ளித்து சலிப்பற மாற்றிப் பின்னை
மிடற்றினி லெண்ணெய் கொண்டு மிகவதி ஒற்று மென்று
படித்திடும் புலவோர்க் கீது பரிவுடன் செப்பி னாரே. 1663

வாயில்நீர் நிறைய வார்த்து மண்ணினிற் கொப்ப ளித்து
தீதற யிரண்டு கையில் நிறையநீர் முகர்ந்து தேய்த்து
மூதறி முனிவன் சொன்ன மொழிப்படி நயன மீதில்
மேவுசந் தனத்தைப் பூசில் வினையறும் நயன மாமே. 1664

## கண்களின் பார்வை அதிகரிக்க அமிர்த யோகம்

அஞ்சன மெழுதுக உண்டகை நீர்விழி
செஞ்சிறு காலையே சீத மரைத்திடு
மஞ்சுறு மதியம் பார்மஞ் சுவற்கிழை
அஞ்சவே கண்ணுக் கமுத மாகுமே. 1665

உண்டுகை விளக்கியே உற்றமங் கண்ணிலும்
மண்டல முகத்திலும் வயிற்றி னும்மிடு
பண்டுபல் விளக்கியே பலபல காலமும்
அண்டர்சேர் கண்ணிற்கு அமிர்த யோகமே. 1666

உண்டுகை கழுவிப் பின்னை உண்மையாய் மூன்று துள்ளி
வண்டளி குழலாய் வார்த்து வளமிகு மிமையிற் தேய்த்துக்
கொண்டொரு கடிகை நேரங் குணமிகு கதிரைப் பார்த்துப்
பண்டுபோ லிருக்கும் போது பரிவுகண் ணமுத யோகம். 1667

அமிர்தமாய் யோக மென்னும் வகையிது கண்ணுக் காக
குமுதமாய் மாயன் சொல்ல கொண்டவ னருளிச் செய்தான்
விமுதமா யஞ்சு காலம் விரவியே விதம தாக
அமுதமாய்ச் சார்ந்து நிற்கும் தானிது கூற லுற்றேன். 1668

ஒற்றியே அமுதயோக மென்னுங்கண் ணுக்கு முன்னம்
பற்றியே காந்தி பார்த்து பரிந்துடன் மூன்றே முக்கால்
பற்றமாய் மதியை நன்றாய்ப் பார்த்திடு கின்ற காலம்
முற்றுமே யமுத யோகம் முறையுடன் சொல்ல லுற்றேன். 1669

உண்டிடு பின்முகத் தில்நீ ரையிடில்
கண்டிடு மதியமுங் கருது மஞ்சனம்
வெண்டிட விரவியே தந்த சுத்திசெய்
வண்டுறு கண்ணிற்கு அமுத மொக்குமே. 1670

## நிலவைப் பார்த்தல்

கைவிரல் தன்னைக் கோர்த்துக் கலந்து பலகணி போல்விட்டு
துய்யெழு மதியந் தன்னைத் திகழவே நோக்கிப் பாரு
மெய்யெழ வுண்டு நீயு மிரவிய கையில் நீரைத்
துய்யமாங் கண்ணி லிட்டுச் சுகம்பெறத் தேய்த்தி டாயே. 1671

இப்படிச் செய்யிற் கேளாய் இசைந்ததோ ரமுதம் போல
மெய்ப்பொரு ளாகி நின்று விளங்கிடு நயனங் கண்டாய்
தப்பிடா வண்ணம் நின்று தனித்தனி கிரிகை செய்ய
அப்படி யறிந்து நீயும் அதன்படி செய்தி டாயே. 1672

எண்ணிய வமுத யோகம் இடைவிடா தென்றுஞ் செய்தாற்
கண்ணிய கழுநீ ரேற்றுக் கலந்திடா ரோக மென்று
திண்ணிய கால்கள் தன்னில் திடம்பெற நெய்யைத் தேய்க்கில்
நண்ணிய யிருள்கள் மாறி நலம்பெறும் நயனந் தானே. 1673

கண்ணது பலகால் நொந்து கடுகியே அழன்று வந்தால்
நண்ணிய உள்ளங் காலில் நறுநெய்யை மிகவு மூட்டி
திண்ணிய தவிடு மாவாற் தெளியவே பூசி யங்கே
கண்ணினைக் காடி யாலே கழுவியே பட்சம் பாரே. 1674

வெப்புறு நயனந் தானும் விளம்பியே யழன்று வந்தால்
செப்புவன் உள்ளங் காலில் செய்வது குளிர்ச்சி தன்னை
மைப்பொரு கண்ணி னாளே மருவிநோய் வந்த நாளில்
ஒப்புடன் செய்வ தன்றோ ஒழிவது ஆறுந் தானே. 1675

பாதமே கல்லி லுற்றுப் பலகாலு முறவே தேய்த்து
போதவே ஆவின் நெய்யும் புகழ்சந்தனம் பூசு மாகில்
ஆதமே தினியி லுற்று அவ்வொளி விளங்கு மென்று
வேதமே யுரைக்குங் கண்டாய் மெய்யிரு பாக னாரே. 1676

(காலங்கள் கூறல்)

நிலமிசை மாந்தர் நோய்கள் நீங்கிடத் திங்க ளாறில்
சலமறச் சத்தி செய்யத் தக்கதாம் திவிமா தத்தில்
மலமற பேதி செய்ய மாதமொன் றினிலே நசியம்
பலமுற மூன்றாம் நாளஞ் சனமிடப் பகர்ந்த தாமால். 1677

ஆதிமுப் பிணிகள் தீர அமைத்திடுந் தொழில்கள் நான்கில்
பேதியிற் தாழும் வாதம் பித்தம்சத் திக்கத் தாழும்
ஓதிய நசியத் தாலே உயர்கபந் தீரும் மிக்க
நீதியஞ் சனத்தால் கண்ணில் நிகரில்லா ஒளியுண் டாமே. 1678

செய்யநற் பேதி தானும் செய்வது கால மேற்க
உய்யுமோக் காளத் திற்கே உகந்ததோர் சாமத் துள்ளாம்
பொய்யுமா நசியந் தானும் பெரும்பதி னேழுக் குள்ளாம்
மெய்யுறு மருந்தே கண்ணில் மிகுந்திடும் அந்தி மிக்காம். 1679

மல சுத்திக்கான சில மருந்துகள்

ஏல மிலவங்கம் நெல்லிமுள்ளி இசைந்த கோட்டம் வாய்விளங்கம்
மூல முத்தந் திரிகடுகு மூரிக் கடுக்காய் சமனாகச்
சாலச் சிவதை சமன்கொண்டு சரியாய்ச் சர்க்கரை தான்கூட்டிக்
காலைப் பொழுதே கொண்டாக்கால் கண்ணில் ரோக
மழிந்திடுமே. 1680

(வேறு)

திரிகடுகு சிவதை செய்ய சூரணம்
குறிபடு சர்க்கரை கொள்ளுந் தேனதில்
மருவிடும் பைத்தியம் வாய்வு நயனநோய்
தெரிகெட ஓடிடுந் திண்ணந் திண்ணமே. 1681

(வேறு)

கடுவும் நெல்வி தான்றிக்காய் கனத்த நேர்வா ளஞ்சேர்த்துப்
பொடியுங் கழஞ்சு தேனுடனே பொருந்திக் கொள்ள வேகண்ணீர்
வடியும் வாய்வு வயிறுகழிந்து வளமே யாகும் வகையிந்தப்
படியுஞ் செய்ய யிம்முறையைப் பாரீ ரிதனைப் பாரீரே. 1682

(வேறு)

கொன்றைக் கொழுந்துந் திரிபலையும்
கூட்டி யிடித்துப் பொடியாக்கி
நன்றாய்க் காய்ந்த வெந்நீரில்
நாளுங் காலை யிதைப்பருகில்

கண்ணைக் கடுக்குந் தலைநோவும்
கனத்த மலமும் பைத்தியமும்
மண்ணுக் கிரைய தாய்ப்போகும்
வயிறு கழியுங் கண்டூரே. 1683

காய்கறி

செய்யகத் தரிக்காய் பாகல் சிறுவழு தளங்காய் தீதத்
துய்யபூ சணியின் பிஞ்சு துவர்பலா முருங்கைப் பிஞ்சு
வெய்யநற் கருணை காட்டு யுள்விரை முற்றும் முன்னே
கொய்திடும் அவரைப் பிஞ்சும் அனிலர்க்காய் கறியாய்க் கொள்க.

எள்ளொடு புராண சாலியும் இசைந்த கோதுமை வெய்ய
கொள்ளுட னுளுந்து சாமை குலவிய துரையே பன்னல்
தெள்ளிய திலத்தி லெண்ணெய் செய்யநெய் வெல்ல மெல்லாம்
ள்ளிய வனிலர்க் காகும் உயர்வகை பணியா ரங்கள். 1685

கொண்டிடுஞ் சாறு கொள்மின் குளிர்ந்த தளிரி முருங்கை
வண்டிலை மக்க தூது வளைபொன்னாங்கா ணியுமே
தண்டிளங் கீரை பாகல் சக்கர வர்த்தங் காரை
மிண்டுசா ரடையின் சாறாம் விளம்பிய வனிலர் தீபனம். 1686

இன்புறு நெருஞ்சில் கோவை இசைத்தமுக் குறட்டை யப்பை
வன்புறு வேலிப் பருத்தி வளர்புளி மணித்தக் காளி
துன்புறு பசிரி முன்னை சுரைமுசு முசுக்கை வேளை
முன்புறு குப்பை மேனி முதலிலைக் கறிவா தர்க்கார்க். 1687

வாதத்தே கர்க்கே வற்றல் வழித்திடும் வண்மை கேள்மின்
போதவே பிரண்டை சுண்டை பொருந்துபேய்ப் புடலே நெல்லி
நீதமா மணித்தக் காளி நிறைந்ததூ துவளை கோவை
ஓதல்சேர் காயு லர்த்தி உட்கொளப் பொரித்தே நித்தம். 1688

நித்தமு மூறு காயாம் நீடிய கடுக்காய் தேற்றான்
சித்தமுற் றிட்ட இஞ்சி சிறியநா ரத்தங் கச்சல்
உத்தம மானமாம் பிஞ்சு உயர்பெருங் கிளாக்காய் தான்றி
மத்திம மன்று நன்றாம் மாருதர்க் கிசைந்த வண்ணம். 1689

வண்மைவா ரணம்வெள் ளாடு முயலு டும்பு சிட்டு
தண்மைசொல் மரைமான் பன்றி தருதானப் பன்றி தாரு
உண்மையூர்க் குருவி யுள்ளான் குயிலுடன் மடையான் கொக்கு
திண்மையா யுலர்ந்தி வாதர் தின்பது யின்பம் வைத்தே. 1690

வைத்தநற் தடாக மீதில் மயரொடு குறவை தேளி
தேய்த்திடு முளுவை யாறால் நெடுவரால் கெளித்தி ராலும்
உத்தம மிவைகள் மீன்கள் உலர்த்தியே கூட்டில் வாதர்ச்
சித்தமே யிசைந்த தாகி சீரண மாகு மிக்காய். 1691

விதம்பெறு மாருதர்க் கினிய வெண்பசு
நிதம்பெறு பால்நிறை நீர்விட் டேமிகப்
பதந்தரு கட்டியி லேடு பற்றிடா
நிதம்பெறக் காய்ந்துண் தீபனந் தரும். 1692

தந்திடும் பால்தயிர் தளவில் வெண்ணெய்நெய்
இந்துவி னிறம்பெறும் இனிய மோருடன்
கொந்தலர் தழைபல கொள்ளுஞ் சாகத்தில்
வந்தபால் தயிர்மோர் வனிலர்க் காகுமாம். 1693

ஆனதோ ரவனி லர்க்கே தேங்கா யின்பால் வெல்ல
மானநற் கண்டினமில் மலைத்தேன் தெங்கு சர்க்கரை யென்றும்
பானி லந்தரும் பழமும் பனைவெல்லம் வாழை தானும்
மனப் பலாமரந் தானே தருகனி யருந்த லாகும். 1694

தருமலி மாந்தர்க் கிசைந்த தானது சாற்றுங் காலை
வருமிதஞ் சென்ன முத்தம் மருவு கோதுமை சாமை
திருவிதக் கடலை பச்சைப் பயறுசர்க் கரையா நெய்பால்
ஒருவித மறைவெவ் வேறு உயர்பணி யாரஞ் செய்வாய். 1695

உள்ளம்வெள் ளுள்ளி கந்தம் உயர்புடோட வாழைக் கச்சல்
முள்ளி கண்டங் கத்தரி முருங்கைபூ சணிக்காய் மூறல்
வெள்ளரி கதலித் தண்டு விரும்புகத் தரியின் பிஞ்சும்
வள்ளிகக் கரிப லாக்காய் வழுதளை வாழைப் பூவும். 1696

பூவுநீர் பீர்க்கம் பிஞ்சும் புகல்பழு பாகற் காயும்
மேவிய அவரைப் பிஞ்சும் விளம்புதூ துவளங் காயும்
காவுயர் மாவின் பிஞ்சும் கதிர்சிறு களாவின் காயும்
நாவினுக் கிதமாம் பித்தர்க் கிசைந்தன நயந்து கொள்வார். 1697

நன்முசு முசுக்கை தாளி நயந்தவல் லாரைக் கீரை
வன்முறு முசுட்டை தூது வளைவள்ளி பசரி யப்பை
புன்முறு முருங்கை பொருவி லொரிதடக் குஞ்சஞ் சால
மின்சிறு கீரை பாலை மிகுபுளி யாரை காணி. 1698

காணியித் திராய கத்தி கதிர்ப சளைசீ தேவி
தாணுவி ரசுமை வழுக்கை சக்கர வர்த்தம் வேளை
நாணிய மணித்தக் காளி நலமுறுப் பாகல் கோவை
பாணியில் கலந்த சாகம் பருகிடப் பண்பாம் பித்தம். 1699

பித்ததே கர்க்காம் வற்றல் பேய்ப்புடோ லவரை முள்ளி
கத்தரை அழைத்த தூது வளையின்காய் சுண்டை கண்டங்
கத்திரி மணித்தக் காளி கதிர்பயத் தங்காய் வற்றல்
நித்தமா மிவைகள் மிக்க நேர்மைதா மரையின் வற்றல் 1700

வற்றிடா யிஞ்சி நெல்லி மாற்றிடு கடுக்காய் தான்றி
முற்றிடா விளாம்பிஞ் சோடு முதிரெலு மிச்சை பித்தஞ்
சுற்றிட குழைஞ்சி தூது வளைதம ரத்தை சொல்கார்
உற்றிடா மாது ளங்காய் ஊறுகாய் பித்தர்க் காகும். 1701

காய்ந்திடும் பித்தர்க் காகும் கருதிய யாற்று மீன்கள்
வாய்ந்திடுங் கடலின் மீன்கள் வளம்பெற காய்ந்த தாகும்
பாய்ந்திடும் வாளை யாகா பருமையில் விராலே நன்றாம்
மேய்ந்திடு மிரா லுளுவை குறவையோ டயிரை மிக்காம். 1702

மிக்குயர் வெள்ளா டாமை வெள்ளெலிக் கோழிக் குஞ்சொடு
ஒக்கவே முயலு டும்பு உலாவிய மடையா னுள்ளான்
கொக்குமான் காட்டுப் பன்றி குளிர்புறாக் கவுதா ரிப்புள்
தக்கதோர் காணாங் கோழி தகுமயில் பித்தர்க் காகும். 1703

காயமே கருமை யான்பால் கருதியே கறக்கும் போது
தோயமே சமனாய் விட்டுச் சுண்டவே காய்ந்த பாலை
நேயமாய் பித்தத் தோர்கள் நித்தமு மருந்த லாகும்
ஞாயமா மிதனின் வெண்ணெய் எந்தெந்த நாளு மாகும். 1704

நாளுமே காலை யுண்டி நாமென நவின்ற நூலைக்
கேளுநன் மேதி மோருத் தயிரது கடைந்த தாகில்
மீளுமே பித்த முண்டி விரும்பியுண் டிதலால் மேவல்
வாளுனோர் கண்ணுறக் காண மகிழ்ச்சியு மவர்க்கே வைப்பாம் 1705

வாய்த்தமுத் திரிகை பேரீச் சம்பழம் வாழை யேன
சாத்திய விளா வருக்கை தனங்கண்ணி முதிர்தல் நிம்பம்
காய்ந்தமா துளங்காய் முற்றிக் கனிபழம் சிறுதே னோடு
தேய்த்தசர்க் கரைகற் கண்டோ டுண்டிடத் தோற்கும் பித்தம் 1706

வல்லநற் கபத்தோர்க் கான வகைப்படி வழுத்தக் கேள்மின்
நல்லீர்செஞ் சாலி சம்பா நலம்பெரு உளுந்து மூர்க்கம்
சொல்லரி தான கோது மைதினை துவரை சாமை
செல்லஞ்சர்க் கரைநாட் சென்ற ஆவினெய் வெண்ணெய் தேனாம்

முள்ளிதூ துவளை கண்டங் கத்தரி முருங்கை வாழை
வெள்ளரி புடல்வா ழைப்பூ பழுபாகல் விளங்கு மாம்பிஞ்சு
உள்ளுபூ சணிவ ருக்கை அவரையே டிருகத் தூது
எள்ளிய சேற்று மத்திற் காமெ னவுமுண் பாரே, 1708

உண்பவர்க் கின்ப மான கறிவகை யுகந்து கேள்மின்
கண்பயல் பொன்னாங் காணி கதிசிறு கீரை யப்பை
மண்பயில் நெருஞ்சில் கோவை மணலிவல் லாரை சிகை
தண்பயில் கொத்த மல்லி சக்கர வர்த்தம் பாகல். 1709

பாகமாம் சமதாக முமே பசரிதூ துவளை வேளை
ஆகமாங் குப்பை மேனி அகத்திமுக் குறட்டை வெந்தி
காகமாஞ் சிறுமு ருங்கை கருதிளங் கீரை யாரை
சாகமாம் பொன்னா வாரை சாரடை சதகுப் பையும். 1710

சலமுறு கபம்வந் தெய்தா தனிவிலி சுண்டி வண்டில்
இதமுறு சுரைவன் னெற்றோடு இனந்துராய் முசுக்கை பூனை
நிதமுறு குறிஞ்சில் பாலை நீர்மு சுட்டைசீ தேவி
பதமுறு முன்னை தும்பை பரட்டைகோ ழையர்க்கே யெய்தும் 1711

எய்திடு மணித்தக் காளி இசைந்தபேய்ப் புடலா தண்டை
கொய்திடும் பிரண்டை சுண்டை குலவுதூ துவளை வற்றல்
உய்திடு முள்ளி நெல்லி உலர்த்துநா ரத்தங் காய்ச்சல்
வைத்திட மறுக்குங் கண்டங் கத்தரி யவரை கோவை. 1712

கோவைதூ தூவளை சுண்டை குளைஞ்சி மாதுளை மாம்பிஞ்சு
பாவையாங் கடுக்காய் தான்றி பசுமஞ்ச ளிஞ்சி தேற்றான்
தேவையா மிளகு மூங்கிற் திப்பிலி சிறுநா ரத்தை
ஈவையாங் கபத்தோர்க் கிஞ்சி இந்துபொ டிவைகள் ஊறல். 1713

ஊறிய லவணத் தோடு உலர்ந்தவூண் கபத்தோர்க் காகும்
வீறிய பச்சை பருவூண் வெள்ளெலி வெள்ளா டாமை
கூறிய உடும்பு காடை கொக்குமான் கவுதா ரிப்புள்
சீறியசிட் டுள்ளான் பன்றி சிறுமுயல் மடையா னாகும். 1714

சிறுவரால் குறவை நன்னிற் செவ்வரா லுளுவை யாமாற்
பெறுவரால் நிணமு மின்பம் பிணிவாராக் கடல்வாய் மீனிற்
குறுவரால் சமைபி ராலும் கொழுப்பில்லா தாகு மூப்பில்
மறுவரா துலர்ந்த தாகும் வாய்த்தசேத் துமர்க்கி ரண்டு 1715

தேற்றமா மடையா வாராஞ் சிவந்திடும் பசுவின் பாலும்
மாற்றுமுப் பிணியை நாரை மருவிய கவிலை வெள்ளாடு
ஏற்றிடு மினிய மேவில் இசைந்திடுந் தயிர்மோர் வெண்ணெய்
சாற்றிடும் நெய்யோ டின்னஞ் சாரஉண் டிருப்போர்க் கென்றும்.

## தண்ணீரின் குணம்

சொல்லிய அடவி நீர்தான் சுரஞ்சொறி வறட்சி சீதம்
மெல்லிய வுடற்கம் பார மிகவுமாந் தீப னம்போம்
அல்லறஞ் சுனைநீர் பித்த மாங்கப மடவி போலாங்
கல்மலை யருவி வாயுக் கபசுர மலத்தைக் கட்டும். 1717

கட்டிடா மடுநீர் குணமே கவிசை வாயுற லய்யம்
ஒட்டிய பாசி நீர்கண் ணொளித் தழலுள் வெப்பாம்
அட்டலித் தடநீர் மந்த வயிறிழி வெப்புப் பார்வை
கட்டமா ரோக மாகும் கடுங்கின்ற நீரா காதே. 1718

ஆகிய யேரி நீர்தான் அதிகதா பத்தை நீக்கும்
வேகிமறஞ் சேரோ டய்யாம் விளம்பிய வுப்பு நீர்க்குப்
போகுமே வாயு குன்மம் பெருங்கபம் பித்த மப்பால்
ஏகிடு மாற்று நீர்க்கு மிளமையாம் பிணிபோ மென்றே. 1719

அண்டுதா மரைத்த உரகம் பருத்தஅனிலம் பித்த
நின்றதாம் தாது மாமாம் நவின்றமெய் தூல மாகும்
நின்றவெள் ளோடை நீர்க்கு நிறைமதி மருவா மேனி
என்றுமந் நிலையாம் நாடி ஏகிடும் வாதந் தானே. 1720

வழுத்திய தாதோ ரேழும் வளம்பெற குளிரு மிக்காய்
வழுத்திய மொழிக ளோசை வாய்த்திடு ஞான முண்டாம்
வழுத்திய தாபந் தீரும் வருமுப் பிணியுந் தாழும்
வழுத்திய சிவனார் கங்கை வைத்தனர் குணமென் றாமே. 1721

மேனிபொன் னிறமே யாகும் மிகுபழ வினையை நீக்கும்
நானிலத் துறவி யாதி யகத்துற நயனம் நன்றாம்
மானெனும் விழியா ரின்பம் மருவவெ ளுருவம் நல்கும்
ஆனவா னிழிந்த கங்கை அருமையா ரறிவார் மேன்மை. 1722

மெய்யுற குளிர்ந்த நீரை விரும்பியே யருந்திற் சால
நைய்யுறு பித்தந் தீரும் நயனமந் தமும்வந்தெய் தாது
உய்துறும் வயதா மேனி உரம்பெருந் தாதுண் டாகும்
உய்புரு மிருமல் மாற்று மகத்துறும் நாடிக் குற்றம். 1723

## வெந்நீர் குடிக்கும் பாண்டத்தின் குணம்

அட்டிடும் வெந்நீர் செம்பில் அருந்திட வனிலம் பித்தம்
கட்டிய கபமுந் தாபங் கறிசிறு சிரங்கு சத்தி
முட்டிய வாயு மந்த மோடுபொற் கற்க நீற்கு
மட்டிலா வனிலம் பித்தம் வளர்கபம் போகுந் தானே. 1724

ஆனமண் கற்க நீரை அருந்திடி லனிலம் பித்தம்
தானதாங் கபச்சு வாசங்கள் சத்திமெய்க் கடுப்பு விக்கல்
ஊனமெய் மேகம் போக்கும் உயரியக் கற்க நீர்தான்
தானெரி பாண்டு சோகை தவிர்த்தழகு கொடுத்த தாமே. 1725

## சமையல் செய்யும் பாண்டம்

சாத்தியம் மண்பாண் டத்திற் சமைத்திடிற் கொடிய தோடந்
தோற்றிய வாத பித்தம் துலங்கிய வானக் கோழை
ஏற்றிய பித்த வாதம் எரிகபங் கபத்தில் வாதம்
போற்றிய கபத்திற் பித்தம் பொருந்திடா துடலிற் சற்றும். 1726

சமைக்கும்பாண் டங்கள் செப்பில்
தளர்வில்வெண் கலங்கள் செம்பில்
அமைக்கும்பாண் டத்தில் வெந்த
அடிசிலு மனிலர்க் காகும்
இமைக்குமுன் வகுத்த மண்பாண்
டத்தினிற் பித்தர்க் கின்பாம்
உமைக்குரைத் திட்ட வாராம்
உயர்கபத் தவர்க்கே கஞ்சம். 1727

(வேறு)

மறுவுறு பிணிவாய் வாத மாற்றிடுந் தனையே நெல்லி
சறுவுறுங் கைப்பால் பித்தந் தாழ்ந்திடும் புடோலுட் கொள்ளில்
பெருகுந் தித்திப்பா லய்யாம் பேதக மாற்றுஞ் செந்தேன்
அருவினை மூன்றின் கோபம் அருந்திட வகலு மன்றே. 1728

## உணவு உண்ணும் இலக்கணம்

உண்பதற் கியல்பு கேள்மின் உறுபசி தணியா முன்னம்
கண்பெரு வாய்கை பாதம் கழுவிநீ ரணிந்து தூய
நண்பரஞ் செழுத்தை யோதி நல்விரையா சனத்தின் மீதே
பண்புறு குண்ணல் தேன்பால் பாதத்திருந் தானை ஏற்றி. 1729

எய்துபொன் வெள்ளி மற்றும் இசைந்துவெண் கலமா மூன்றிற்
செய்திடும் பலங்கள் செய்யிற் சிறந்தமு வைந்து முப்பான்
எய்திடும் சாற்றோ டெட்டி இனிதுணல் கலம்நீ ராட்டி
உய்திடு மமுதத் தோடாறு சுவையோ டேபோ சனமுண். 1730

உண்பவ ருண்ணா முன்னம் உகந்துநீ ரதனை மிக்காய்
உண்பவர் தமக்கு வன்னி ஒடுங்குமெய் யிளைக்கு மென்றும்
உண்பவர் நீருண் ணாம லுண்டுமத் தியிலே சாற்றை
உண்பவர் தமக்குத் தாது உற்பவத் திரமுண் டாகும். 1731

உண்டிடு மன்னஞ்சுட் டோடு இருகூறு கறியோ டுண்ண
கண்டபங் கோடும் வெந்நீர் மிளகுநீர் காய்ந்த பாலிற்
கொண்டிடி லனுகா நோய்கள் கொதித்தநீ ருண்பின் நோய்கள்
அண்டிடா தழகு மிக்காம் ஆயிசுநூ றாகுந் தானே. 1732

தாலம்பொன் னதிலூண் மிக்கத் தாதுவாம் வெள்ளித் தாலம்
கோலமுண் டியிற்குற்றம் போன்ற குறித்தவெண் கலமே புத்தி
காலநா ழிகையெட் டெடருண் கடுநிசி கடுகை பத்தில்
பாலில்நற் படியோ டுண்ணில் பற்றுறும் பிணியூ றாதே. 1733

இடும்புறு பசிமந் தத்தில் இதயமாங் கமல மூடி
இடும்பறக் குலாச நிற்கு மாகையா லின்பமெய் தாதி
இடும்புறும் பசியே யாகி இதயமே மலர்ந்து தோன்றும்
இடும்புறப் பசித்த வூணும் இசைந்தயின் பத்தை யிட்டும் 1734

உண்பதோர் கால மாகில் உரமொடு சுகமுண் டாகும்
உண்பதோ ரிருகா லுண்ணில் உயர்பல னெழுந்தா னெய்தும்
உண்பது மூன்று காலம் உண்டிடிற் பிணியுண் டாகும்
உண்பதோ ரிரண்டு காலம் உரைத்ததா மூலத் தோர்க்கே. 1735

அறம்பொரு ளின்ப மெய்தும் ஆகையா லளமே வேண்டும்
அறம்பொரு ளின்ப மூன்றும் அன்னத்தா லாகு மென்ப
அறம்பெறு மின்பத் தாலே அருளிவீர் மெய் யிதும்
அறம்பொரு ளின்ப முள்ளாது அடைவரோ அடவார் வன்னோய்

அய்யர்கங் காத ரர்க்கும் அனிலர்க்கா மன்பர் யென்றும்
வெய்யபித் தர்க்கும் நன்றாம் விரக லீலைக்கும் வித்தாய்
செய்யஉஷ் ணத்தை மாற்றுஞ் சீனிசர்க் கரைபால் நெய்யில்
கைய்யவைத் திடுமன் னத்தின் நலம்பெரு குணத்தை நாடி. 1737

## இளநீரின் குணம்

நாடியே யுண்ட பின்பு நல்லிளநீ ருழக்கு கொள்ளில்
ஓடிய வாத பித்தம் உயர நிற்கும் சிலேத்துமம்
கூடிய மலம்போம் தாதாங் குறித்தகண் ணோய்பாண் டேகும்
நீடிய லளக்க மேனி நிறைந்ததீ பனமு மாமே. 1738

ஆனவுண வுக்கு முன்னர் அளிணியை யருந்தி வண்ணம்
ஈனமா மவுலி குணம்போம் இவ்விள நீரந் திக்குப்
பானமே செய்யில் மெய்யிற்குறு மீப்போம் பழக்காய் நீர்தான்
தானமாம் பீலிகை வாய்வு சத்திபோம் கலனாங் காணே. 1739

காலைநல் லிளநீர் கொள்ளில் கபமறுஞ் சுகமாம் மேனி
சோலைவிட் டிழுத்து தங்கிச் சுருங்கிநீர் பித்த முண்டாம்
சீலச்செவ் விளநீர் காசம் சிலேத்தும மெரிவு தீர்க்கும்
மேலுறு கேளி தாகம் மெய்யனல் பித்தம் போமே. 1740

## எண்ணெய் முழுக்கின் குணம்

என்பொடு தசைந ரம்பங் கிரத்தமா மேதை தொக்கு
வன்படு மூளை ரோமம் வழிபுகு மெண்ணெய் யாலே
அன்படு கால தேசம் அறிந்துவெந் நீரால் மூழ்க
முன்படு வினைகள் தாழ முதிர்சுகம் விளைத்தல் சொல்வாம். 1741

சொல்லிய திரமா ராய்ந்து தோலறத் துகைத்து நீரால்
புல்லிய கறைகள் போக்கிப் புனிதமாம் பாயல் மீது
மெல்லிய துகளெய் தாமல் விரித்தவை யுலர்த்திப் பின்பு
மல்லிகை முல்லைச் சாதி வகுளஞ்சண் பகங்கள் மற்றும். 1742

மற்றுமே முளரி நீலம் மருவிரு வாட்சி வேரோடு
ஒற்றுமே புன்னை பன்னீர் ஒதுகே தகைசெவ் வந்தி
பெற்றுமே துகிலால் மூடிப் பெருநறை நிறையக் கூட்டி
முற்றுமே செக்கி லாட்டி முந்திபின் சினேக மாமால். 1743

ஆட்டிய சினேகந் தன்னை ஆதவன் காணக் கண்முன்
காட்டிய குறிப்பி லிம்பங் கலந்திடப் படத்தால் மூடிக்
கூட்டியே வெப்பந் தீர குளிர்நிறை நறைப்பூப் பெய்து
நாட்டிய சிறப்பி னாலே நடுங்குமுப் பிணியு மஞ்சில். 1744

சினமுறு பிணிகள் தீர்க்குஞ் சினேகமேற் சினேக மாகும்
கனமுறு சட்ட மிட்டுக் காற்குலப் புகையுங் காட்டி
வனமுறு மலர்கள் சூட்டி வங்கமாத் திறத்திற் கூட்டி
தனமுறு பதிபால் வைத்த தைலத்தா லின்ப மெய்தும். 1745

எய்திடு மெண்ணெய் தன்னால் எழுந்திடுங் குணங்கள் செப்பில்
எய்திகள் சிரத்தின் மத்தித் திடிலுட னடிக்கே மேவும்
பெய்திரு வடியிற் தேய்க்கிற் பெருதிருக் கண்ணிற் போட
உய்திடும் விழியிற் சேர்க்கில் செவிதந்தத் துள்ளா யோங்கும். 1746

ஓங்கிய சிரத்தி லெண்ணெய் உடலுறுப் பிணியை மாற்றும்
தாங்கிய பதத்தி லெண்ணெய் தடமுறு விழிநோய் தீர்க்கும்
ஆங்குருக் கண்ணி லெண்ணெய் அழகிய செவிநோய் போக்கும்
பாங்கிரு காதி லெண்ணெய் பகர்சிர நோய்வி லக்கும் 1747

வில்லோ மகர மாத மிரண்டாகு மீனங் கும்பம்
சொல்லுயர் கடிகை மூன்றாம் தூயவா டெருதோ டைந்தாம்
நல்லுர மிதுன மிரண்டு நாழிகை கன்னி யாறும்
வல்லரி மின்கோள் தோளி மாற்றுவப் பொழுதே யன்பாய். 1748

அனுதின மெண்ணெய் மூழ்கி ஐந்துநா ழிகையில் மாற்றம்
கனமுறு காலை யெண்ணெய் கடிகையீ ரெட்டில் மாற்ற
மனமிகு நாளெட் டெண்ணெய் மருவிலீ ராறில் மாற்றத்
தனதொரு திங்கட் கெண்ணெய் தருமொரு நாளே மூத்த. 1749

முன்னுரைத் திட்ட முக்கூட் டாவது மோயுங் காலை
முன்னுரைத் திட்ட சிற்றா மணக்கொள் ளாவின் நெய்யும்
முன்னுரைத் திட்ட பானு முகத்தினில் வைத்துப் பின்பு
முன்னுரைத் திட்ட காண வணிந்தது மோநாள் மூத்த. 1750

முறையின்முத் தினத்துக் கோர்நாள் முழுகிடீர் சுகமே மிக்காத்
திறைபதி னைந்துக் கெண்ணெய் நிகழ்சுகம் நாள்மூ வைந்தாம்
மறைசொல்லார் மாத வத்தி மண்டல சுகமே யெண்ணெய்
உறைவதே மறைமேல் மாற்ற உரைத்தன குரைமுக் கண்ணன்.

கண்ணுறு பிணிக டும்மற் கருதிய கபங்கள் பித்தம்
தண்ணுறு வாதம் வாந்தி தருமரோ சிகஞ்சேர்த் தந்தம்
நண்ணிய ரோக மற்று மாற்றிடும் நயன மெய்போன்
வண்ணமாம் பிலனு முண்டாம் வாய்த்த முத்த யெண்ணெய். 1752

உத்தம மஞ்சிகை நெல்லி உயரெலு மிச்சை மூர்கம்
பித்ததே கர்த்தர்க் காகும் பெருகபத் தவர்க்குச் சீனம்
மத்திப மிலுப்பைக் கட்டி வாததே கர்த்தர்க் காகும்
சுத்தமா மெண்ணெய் மாற்றிச் சுகம்பெறு சீலை மாசால் 1753

## தண்ணீரின் குணம்

மாற்றிடு மெண்ணெய் போக மருவுவெந் நீரில் மூழ்க
ஏற்றிடு மடுநீ ரெல்லாம் இசைந்திடுந் தண்ணீர் செப்பாம்
ஆற்றுநீர் பித்தர்க் காகும் அனிலர்க்காங் கின்றே கேணி
சேற்றுமர்க் காகு மோடை சிறுகுளத் தினல்லி நீரும் 1754

அல்லிசெங் கழுநீர் கொட்டி அரவிந்தம் நெய்தல் நீலம்
புல்லிய குளத்திற் தண்ணீர் பொருந்திய பித்தர்க் காகும்
வல்லிய குளரி வேப்பம் பாசிகள் வளர்சல் லோடை
சொல்லிய வனிலர்க் காகும் சூழ்கபத் தவர்க்காங் கேணி 1755

கேணிநீர் வெந்நீ ராகிற் கிளர்ந்திடும் பித்தந் தீர்க்கும்
வேணிநீர் வாதந் தீர்க்கும் விளம்பிய வெந்நீ ராகில்
நீணிலத் தாற்று வெந்நீர் நிகரில்லாக் கபமே மாற்றும்
பேணிய குளத்து வெந்நீர் பெரிதுறு தாகம் போக்கும் 1756

போக்குலா மடுநீர்ச் சேற்றை பொருந்தியக் குளத்துத் தண்ணீர்
தூக்கமாஞ் சருகோ மூறல் துவர்ப்பொய்கை நீரி வற்றை
வாக்கினா லுரைக்கி லுண்ணில் மருவியே குளிக்கில் மூழ்கிற்
நோக்கினால் மெய்யில் மெத்த நோய்கள்வந் தையாம் வாரே.

வளம் பெற மூழ்கு மீரம் வாய்ந்தவெண் துகிலால் மாற்றி
இளம்பிறை நுதலாங் கூந்த லீர்மே லாற்றுந் தூபம்
விளம்புகி லனிலர்க் காகும் மேவுசந் தனம்பித் தர்க்கே
களம்பெறு கபத்தோர்க் காகுந் துருக்குடன் குமஞ்சான் கட்டி

தூபமேற் படுத லாலே துயரறு கண்ணென் றெய்தாது
ஏமமே யென்ன மேனி எழிலுறுஞ் சுகந்தம் மெய்தாம்
சேமமே ...லை யத்திற் சேறளைந் திடவே போகுங்
கோமமே வளையு நீறு காரகிற் புகையின் தூசால் 1759

தூசற பறவாம் மாதர் சுகமுற புனையி லன்பாம்
மாசுபற் றியதோ ராடை புனைந்திடில் மருவு மன்நோய்
தேசுபெற் றிடுங்க லன்கள் செய்யநற் பட்டோ டாடை
பேசு மிவையே யணிந்தால் பெருகிடு மாயிசும் பேராம் 1760

கடுகிய அனலில் நின்றும் கதித்திடு மதியத்தில் தானும்
விடமது இரவு தன்னில் மிகுத்தநித் திரையில் தானும்
கொடியநல் வினைக ளான குழறவே நடந்த போதும்
முடுகவே யெண்ணெய் தானும் முழுகவு மாகா தன்றே. 1761

மார்கழி தையி ரண்டாம் மாசிபங் குனியே மூன்றாம்
சீருடன் மேட ராசி சிறந்தவை காசி யைந்தாம்
ஆறிட வானி யாடி ஆவணி கடிகை யாறாம்
வாருட னெண்ணெய் தன்னில் மற்றிவை கடிகை மூன்றே 1762

## களப கத்தூரியின் குணம்

எய்துசந் தனம்கற் பூரம் இணையிலாங் கிலகத் தூரி
செய்யகுங் குமப்பூ வம்பர் செழுஞ்சாந்து சவ்வாது மிக்கத்
துய்யநற் புனுகு கோரோ சனையுடன் தொகுத்துக் கூட்டி
மெய்யினி றின்னீற் கொண்டு விரகுறப் பூச லின்பாம் 1763

இன்புறு மகிழ்கத் தூரி இனியநற் புனுகு சாந்து
முன்புறு சாம்பி ராணி முதிர்ச்சிநற் தைலத் தோடு
வன்புறு கந்த ராசி வளம்பெறு மிவைக ளெல்லாம்
அன்புற நிதமு மெய்யில் அனிலரே யனைவா னம்பால். 1764

அணியுநற் தகமை கேள்மின் ஆனதோர் பித்தந் தாழப்
பணியுஞ்சந் தனங்கற் பூரம் பகருங்குங் குமங்கத் தூரி
தணியுந்தன் பனீநீர் வாச வாதுகோ ரோசனைமெய்ப் பூசிற்
பிணியும்வந் தெய்தி டாது பெருகுந்தா துவும்பிந் தாது 1765

பிந்துறு கபத்தோர்க் கென்றும் பிரியமா காகத் தூரி
விந்துசந் தனஞ்சவ் வாதோ படிசலம் புனுகோ டம்பர்
கொந்துகுங் குமப்பூக் கோரோ சனைகுளிர் கலவை கூட்டி
முந்துறப் பூசி லின்ப முதிருமெய் முதிரா முற்றும். 1766

மருவிய குளிகை யாகும் வாய்த்தசந் தனமெய் பூசில்
மருவிய வாத பித்தம் சேத்துமந் தினவு மாறும்
மருவிய தாது புத்தி மலருறு திருவுமுண் டாகும்
மருவிய பிரமே கம்போம் மனமிகுக் களிப்பு மாகும். 1767

ஆனநற் சவ்வாது பூசில் அழகுநல் வசிய மோகந்
தானுறும் வெண்குட் டம்பூ தமுடற் துர்க்கம் போகும்
கானகத் தூரி பூசிற் கபம்பித் தனிலம்போங் கண்ணின்ற
தானமா முரைகைப் புற்ற ததுவா போன்றே யோதும் 1768

ஓதுகற் பூரம் பூசில் ஒளியுடல் வசியந் தாதாம்
மீதுதுர்க் கந்தஞ் சத்தி மெய்யனல் மந்தம் போக்கும்
நீதிகைப் புறைப்பா மப்பால் நிறைதிரு கமலச் செய்கை
மாதய்ய மிரத்த பித்த வாந்திமெய் யெரியுந் தாகம். 1769

தாகமு மயக்கந் தீரும் தருமது ரமது வர்ப்பாம்
ஆகுமல் லிகைப்பூ வைய்யம் அனிலம்நற் கண்ணோய் ரத்தம்
ஏகிடும் பித்தம் லீலைக் கேற்கும் நல்தரங் கைத்தல
ஓதுரைப் பாகும் புவியி லுயர்குடம் மல்லி சொல்வாம். 1770

## புஷ்பதாரைப் பிரமாணம்

சொல்லிட விரகம் கந்தம் தோன்றும்மும் பிணிதா கம்போம்
வல்லிய கசப்புக் கையித மலரனல் கசப்பாங் கந்தம்
புல்லிய கபம்வா தத்தைப் போக்கும் சண்பகம் பூணில்
மல்லிய ரத்த பித்த வனிலம்போ மருவு மாமே. 1771

ஆகுமுப் பிணியோர்க் கென்றுங் குறுக்கத்தி அலரிசெவ் வந்தி
வாகுமல் லிகைமு ருக்கு மகிழ்மலர் கழுநீர் மிக்கத்
தாகுபா திரிபூ வாகுந் தருமணி லர்க்குச் சாதி
போகநல் மகிழ்செவ் வந்தி புனைகுட மல்லி கைப்பூ. 1772

மல்லிகைப் புன்னை வெண்டா மரைகுருக் குத்தி வீரம்
வெல்லுகே தகைசேர் வெட்டி வேருசண் பகப்பித் தர்க்கும்
செல்லிரு வாட்சி பிச்சி வேர்கொழுந் துடன்செவ் வந்தி
முல்லைசெங் கழுநீர் பன்னி முடித்தலாம் மொழிவோ மைய்க்கே

அய்தனக் காகும் பிச்சி இருவாட்சி மகிழம் முல்லை
கொய்திரு வந்தி சாதி கொங்குநீ லங்கொ ழுந்து
செய்யிரு மல்லி புன்னை செருந்திகே தகையே யாகும்
மெய்யிலிம் மலர்கள் சூட விரித்துநா ழிகையைச் சொல்வாம்.

சொல்சிறு சண்ப கப்பூச் சூடில்மூன் றேமுக் கால்பின்
நல்லசண் பகப்பூ விற்கு நாழிகை யீரெண் டாகும்
மல்லிகை கதிரொன்பால் பினையிரு மல்லிக் காகும் சாமம்
முல்லைநா ழிகைரண் டாகும் முதுகழு நீர்நாள் மூன்றே 1775

நாளிரண்டிற் குருக்கத் திப்பூக் காகிடும் நவில்செவ் வந்திக்
கேளுதின மிரண்டே மிக்க கேதகைக் கைந்து நாளாம்
வேளுகத் தூரிப் பூவிற் கிரண்டுநாள் விதிவத் தாகும்
வாளினை வென்ற கண்ணா ருடன்சுகம் வளர்க்கு மாமால். 1776

வண்ணமா மேடை மீதில் வளரிளந் தென்றல் வீச
சந்தமாம் வாதத் தேகர்க் கீய்ந்திடுஞ் சயன மெத்தை
எண்ணமாம் பருத்தி யாகும் இலவுவெண் பித்தர்க் காகும்
திண்ணமாம் கபத்தோர்க் கேறுந் திகழ்பெறு பூளைப் பஞ்சாம்

## முலைப் பாலின் குணம்

சீதளந் தன்னைப் போக்கும் சிலேற்பன வாத பித்தம்
மீதுள சன்னி சத்தி விக்கலோ டிவைகள் மாறும்
காதுநோய் கண்ணோய் புண்ணோய் கடுகிய வெப்பு மாறும்
மாதுதன் முலைப்பா லாலே வளர்பிணி யனைத்தும் போமே 1778

வாத சரீர மாதுதன்பால் வளரு மையம் பித்தம்போம்
மாது சரீரம் பித்தமெனில் வாத முடனே வாய்வுவரும்
ஓது சரீர மையமெனில் உண்மை நயன நோய்நீரும்
சீதை யனையார் முலைப்பால்தான் தீரா நோவுந் தீர்ந்திடுமே

கறுத்ததோர் மேனி யான காரிகை முலைப்பால் தானும்
உறுத்திடு கண்ணின் நோவு ஒன்றுக்கே யாகு மல்லால்
சிறுத்திடை சிவந்த மின்னாள் சீரிய முலைப்பால் தானும்
குறித்திடு மூன்று தோடம் குட்டமுங் குலைந்து போமே. 1780

## மருந்துப் பொருள் குணம்

தமிழ் மருத்துவத்தில், நோய்க்கேற்ற மருந்துகளைத் தேர்ந் தெடுக்குமிடத்து, உலகில் இயற்கையாகக் கிடைக்கக் கூடிய செடி, கொடி, மரம் இவற்றின் வேர், தண்டு, இலை, காய், பூ, கனி போன்றவைகளும், விலங்கினங்களின் இறைச்சி, எலும்பு போன்ற வைகளும், உலோகங்கள், இரத்தினங்கள், சில பாடாண வகைகள் போன்றவைகளும் மருந்துப் பொருட்களாகப் படுத்தப்படுகின்றன

இவை யாவும் ஐம்பூதச் சேர்க்கையால் உண்டான பொருட்க ளாதலாலும், ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு சுவை, குணம் எனத் தனித் தன்மை இருப்பதாலும் நோய்க்கேற்ற மருந்துப் பொருட்க ளாக இவற்றைப் பயன்படுத்துவது சிறப்பாகும்.

பொதுவாக நோக்குமிடத்து, இப்பொருட்களில் பலவும் தொடர்புள்ள சில நோய்களை தீர்க்கும் என்னும் அடிப்படையி லேயே பல நோய்களுக்கும் அவற்றின் தன்மைக்கேற்பப் பயன் படுத்தப்படுகின்றன. கண் மருத்துவத்தில் மட்டும் 500க்கும் மேற் பட்ட மருந்துப் பொருட்கள் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றுள் சில கண் நோய்களுக்கென்றே குறிப்பாகக் கூறப்படுகின்றன. சில பொருட்கள் முக்குற்ற நோய் போக்கும் அடிப்படையிலும், விரணம், சூடு இவற்றைத் தீர்க்கும் முறையிலும் சேர்க்கப்படு கின்றன எனலாம்.

உடல் நோய்கள் பலவற்றின் கிளை நோயாக கண்நோயும், கண்நோயின் காரணமாக வேறு நோய்களும் தோன்றுவதை நோக்குமிடத்தும் இப்பொருட்கள் அவற்றிற் கேற்ப பயன்படுவதை அறியலாம்.

பதார்த்த குண சிந்தாமணி, பதார்த்த குண விளக்கம், பதார்த்த குண மஞ்சரி போன்ற பழைய நூல்கள் இப்பொருட்களின் குணங்களை நன்கு விளக்குகின்றன.

கண் மருத்துவத்தில் பயன் படுத்தப்படும் மருந்துப் பொருள்களின் குணங்களை மட்டும் பின்வருமாறு தொகுத்துக் காணலாம்.

### அக்காரகாரம்

இது ஒரு கடைச்சரக்கு இதனால் கொடிய கால தோடமும் தாக சுரமும் நீங்கும்.

அக்கார கார மதன்பே ருரைத்தாக்கா
லுக்கிர காலத்தோட மோடுங்காண்—முக்கியமாய்
கொண்டாற் சலமூருங் கொம்பனையே தாகசுரங்
கண்டாந் பயந்தோடுங் காண்.

### அகத்தி

இது ஒரு மரம். இதன் வகை சிற்றகத்தி. செவ்வகத்தி. சாழையகத்தி.

அகத்தியிலையை உண்ணில் இடுமருந்தும் பயித்திய தோடமும் நீங்கும். கடுவானும் வாய்வு முண்டாகும். உணவு சீரணமாகும்,

மருந்திடுதல் போகுங்காண் வண்கிரந்தி வாய்வாந்
திருந்த வசனஞ் செரிக்கும்—வருந்தச்
சகத்திலெழு பித்தமது சாந்தியாம் நாளு
மகத்தியிலை தின்னு மவர்க்கு

### அகில்

இது ஒரு மரம். அகில் கட்டை விருத்தர்களுடைய தளர்ந்த தேகத்தையும் இறுக்கும். இதன் வாசனையால் சிற்சில சுரம் நீங்கும். புகையால் வாந்தியும், அருசியும், அயர்ச்சியும் நீங்கும்.

தளர்ந்த விருத்தருக்காந் தக்க மணந்தா
லுளைந்த சுரமுழுது மோடும்—வளர்த்திகழு
மானே யகிற்புகைக்கு வாந்தியரோ சிகம்போந்
தானே தளர்ச்சியறுஞ் சாற்று.

## அசமோதகம்

இதுவே ஓமம். இது ஒரு கடைச் சரக்கு. இதனால் குளிர்ச்சி சுரம், இருமல், அசீரணம், வயிற்று உப்பிசம், அதிசாரம், குடலெரிச்சல், ஆசனக் கடுப்பு, சுவாச காசம், தந்தரோகம், தந்த மூலரோகம், குய்யரோகம் இவை விலகும்.

சீதசுரங் காசஞ் செரியா மந்தம் பொருமல்
பேதியிரைச் சற்கடுப்பு பேரா—மோதிருமற்
பல்லோடு பண்மூலம் பசுமில்நோ யென்செயுமோர்
சொல்லொடு போமெனச் சொல்.

## அசுவகெந்தி

இதுவே அமுக்கிராக் கிழங்கு என்றும் கூறப்படும். இது ஒரு செடியின் கிழங்கு வகை. இதனால் சயம், வாத சூலை, வாதக் கரப்பான், பாண்டுசுரம், வீக்கம், சலதோஷம் போகும்.

கொஞ்சந் துவர்ப்பாங் கொடியாஞ் சூலையரி
மிஞ்சுகரப் பான்பாண்டு வெப்பதப்பு—விஞ்சி
முசிவுரு தோடமும்போ மோகமன லுண்டா
மசுவகந் திக்கென் றறி.

## அஞ்சனக்கல்

அஞ்சனக்கல்லை முறைப்படி உபயோகிக்கக் கண்சிவப்பு, கண் கூச்சம், கண்களில் உண்டாகும் விரணம், கண்மறைப்பு முதலியவைகள் நீங்கும்.

கண்ணி னழலையுடன் காணவொணா கூச்சம்போ
பண்ணும் புரையும்போம் பொய்யல்ல—மண்ணுலகில்
அஞ்சனக் கல்லதனா லாம்பயனை ஈதென்று
பிஞ்சு மதிநுதலாய் பேசு.

சன்னிசுரம் மேகச் சயந்தாகம் நேத்திரநோய்
வன்னிரச வேகம் மறைவதன்றி—மன்னுடலம்
விஞ்சு குளிர்ச்சியோடு வீறழகு காந்தியுமாம்
அஞ்சனக் கல்லுக் கறி.

அஞ்சனக் கல்லை மிருதுவாக அரைக்கக் கறுப்பு நிறமாக இருக்கும். இது சூரியனுடைய வெப்பத்தைத் தணித்துக் கண் களுக்குக் குளிர்ச்சியைக்கொடுக்கும். இந்தத் துகளை இரத்தம் சொரியும் படியான புண்களின் மீது தூவிவர விரணம் மாறும்.

அஞ்சனக்கல் பற்பம், நீலாஞ்சனக்கல்மை போன்ற மருந்துகள் இதனைக் கொண்டு செய்யப்படுகின்றன.

## அடப்பம் விதை

இதுவே வாதுமைப் பருப்பு எனப்படும். இது ஒரு மரத்தின் வித்து வகை. இதனால் விழிப் படலமும் விரண கொழுமையும் நீங்கும்.

அடப்பம் விதையாம் வாதுமைப் பருப்பினும்
மடற்பெரிய கட்படல மாறுஞ்—சடக்கெனவே
புண்மேற் கொழுப்பகலும் போகமு முண்டாமென்றே
மண்மேற் றுணியாய் வழுத்து

## அத்தி

இது ஒரு மரவகை, இதன் வகை ஊழலத்தி, மலையத்தி, சீமையத்தி, நீரத்தி, கொடியத்தி, கல்லத்தி, பேயத்தி

காரமும் உட்ணமுமுள்ள அத்திப்பால், பித்தம், நீரிழிவு, சூலை, இரத்த மூத்திர கிரிச்சரம் இவைகளை நீக்கும்.

காரமோ டுட்டிணமாங் காறுகின்ற பித்தத்தை
நீரிழிவைச் சூலைகளை நீடிரத்தஞ்—சேருங்
கிரிச்சரத் தைப்போக்குங் கிளர்கோளி யென்னும்
மரச்சருமப் பாலதனை வாங்கு

**அத்திக்காய்** :- அத்திக்காயால் பிரமேகம், வாதநோய், சூலை சரீர வெப்பம், விரணம் இவைகள் தீரும்.

அத்திக்காய் தன்னை யருத்தினா லாரணங்கே
யெத்திக்கு மேக மிருக்குமோ—சத்திக்கும்
வாத மகலு மலங்கழியுஞ் சூலையொடு
மீதனலும் புண்ணும்போம் விள்

**அத்திப்பிஞ்சு** :- துவர்ப்புச் சுவையையுடைய அத்திப் பிஞ்சால் மூலவாய்வு, கிராணி, ரத்தமூலம், வயிற்றுக் கடுப்பு விலகும்.

மூலக் கிராணியறு மூலவிரத் தந்தீரும்
சாலக் கடுப்புந் தரிக்குமோ—மாலரவத்
துத்திப் படவல்குற் றோகாய் துவர்ப்பையுறு
மத்திச் சிறுபிஞ் சருந்து

**அத்திவேர்:**-அத்திமர வேரிலிரங்கிய கள்ளில் சீனிச் சருக்கரை யாவது பேயன் வாழைக்கனியாவது கலந்து தினமும் சூரியோதய காலத்தில் உண்டுவர அத்திமேகம், உட்சூடு, மூர்ச்சை, தாகம் இவை நீங்கும்.

அத்திமே கஞ்சூ டதிமயக்கந் தாமும்போ
மத்திமர வேரிலுண் டாமதுவில்—நித்தியமுஞ்
சீனியெ னும்பேயன் செங்கனியே னுங்கலந்தே
பானுவுதயங் குடித்துப் பார்

**அத்திப்பட்டை:**- அத்திமரப் பட்டைக்கு ஆசனக் கடுப்பு, உதிரப் போக்கு, சீதரத்த பேதி, புண், பிரமேகம் இவைகள் நீங்கும்

வீறு கடுப்பிரத்தம் வெண்சீத ரத்தமொடு
நாறுவிர ணங்களெலா நாடாவாங்—கூறுங்கா
லத்திதரு மேகம்போ மாயிழையே யெஞ்ஞான்று
மத்திப்பாற் பட்டைக் கறி

## அதிமதுரம்

இது ஒரு கடைச் சரக்கு வகை, இதனால்கண்ணோய்,விக்கல், வலி, வெண்குட்டம், பித்தம், காமாலை போன்ற பல நோய்களும் தீரும்.

கத்தியரி முப்பிணியால் வருப்புண் டாகுங்
    கண்ணோயுன் மாதம்விக்கல் வலிவெண் குட்டம்
பித்தமெலும் புருக்கிரிச் சரமா வாத்த
    பித்தமத மூர்ச்சைவிட பாகம் வெப்பந்
தத்திவரு வாதசோ ணிதங்கா மாலை
    சருவவிடங் காமியநோய் தாது நட்டம்
குத்திரும லாசியங்க மிதழ்நோ யிந்து
    குயப்புணும்போ மதூகமெனக் கூறுங் காலே

மதூகம்—அதிமதுரம்

## அதிவிடையம்

இது ஒரு கடைச் சரக்கு வகை. இதனால் விரணம், சுரம், தேக மூள் அதிசாரம், போன்ற பல நோய்களும் நீங்கும்.

அதிவிட யஞ்சருக்க ரார்ப்புதநோய் வெப்பு
கொதிமருவு பேதியொடு கோழை—யெதிர்வாந்தி
யென்றுரைக்கு நோய்க்கூட்ட மில்லாத கற்றிவிடுங்
குன்றைநிகர் முலையாய் கூறு

## அப்பைக்கோவை

இது ஒரு கொடி வகை. இதனால் மேக விரணம் நீங்கும்.

வீக்க மகற்றுநஞ்சை விட்டுநீர்ப் பேதிதரும்
போக்கு மதுவையுழற் புண்ணொழிக்குந்—தேக்குறுகற்
கோவைவரிக் கோவையப்பைக் கோவைசெங்
கோவைகருங்
கோவை முறையே யுணர் குணம்

இதில் கற்கோவை சோபையையும், வரிக் கோவை விஷத்தை யும் நீக்கும்.

## அபினி

இது ஒரு கடைச் சரக்கு வகை. இதனால் வயிற்றுநோய், வாதாதிக்கம், கர்ணசூலை, பல்நோய், அதிசாரம், அசீரணம். எலும்பிற்குடைச்சல், நாசிகாரோகம் இவைபோம். சாதிலிங்க நிறமுள்ள உதிரச் சுத்தியும் உண்டாம்.

நல்லபி னிக்குணத்தை நாடறிய நாம்புகல்வ
தல்குன்ம வாத மருஞ்செவிநோய்—பல்லின்வலி
பேதியந்த மத்திநோய் பீனிசம்போம் வன்மையுண்டாஞ்
சாதியுதி ரச்சுத்தி காண்.

## அம்பர்

இது ஒரு கடைச் சரக்கு, நல்ல வாசனையுள்ள அம்பர் சுக்கில விருத்தியும் அழகையும் பலத்தையும் தரும். அளிவிரணத்தையும் கரப்பனையும் நீக்கும்.

அளகமுள வாரமிர்தே யாண்மையை யுண்டாக்கும்
பளபளென மெய்யுரப் பாக்குங்—குளகுளத்த
புண்ணாற்று மம்பர் பொரிகரப்ப னைப்போக்கும்
விண்ணார்க்கும் வாசனையாம் விள்.

## அய்யிரை

இது ஒரு மீன் வகை. இதன் க்றி உடலையும் உரோமத்தையும் வளர்க்கும், தேகசாட்டியத்தையும் அருசியையும் நீக்கும்.

உயிரை வளர்க்கு முடற்பிணியை நீக்கும்
மயிரை வளர்க்கும் ருசிமாற்றும்—வயிரம்
செயிரையுறாச் சற்குணநற் றெள்ளமிர்தே நாளு
மயிரை யெனுமீ னது.

## அரசு

இது ஒரு மரவகை. அரசமர வேர்பட்டை விரணத்தையும், விதை சுக்கிலக் கெடுதியையும், கொழுந்து தொண்டையை வறட்டுகின்ற தாகத்தையும், மகரந்தம் உடல் வெப்பத்தையும், திரிதோடத்தையும் நீக்கும்.

அரசம்வேர் மேல்விரண மாற்றுமவ் வித்து
வெருவவருஞ் சுக்கிலநோய் வீட்டுங்—குரல்வரளுந்
தாகமொழிக் குங்கொழுந்து தாதுதரும் வெப்பகற்றும்
வேதமுத் தோடம்போக்கு மெய்.

## அரத்தை

இது ஒரு கடைச் சரக்கு, இது நெஞ்சுக்கோழை, சீதளம், கரப்பான், ஈளை இருமல், மூலம், வீக்கம், தந்தநோய், வாத சோணிதம், தீச்சுரத்தால் பிறந்த கபம் இவைகளை நீக்கும். பசியைத் தரும்.

தொண்டையிற் கட்டுங் கபத்தைத் துரத்திவிடும்
பண்டைச்சீ தத்தைப் பறக்கடிக்குங்—கெண்டைவிழி
மின்னே கரப்பனைவே றாக்கும் பசிகொடுக்குஞ்
சொன்னோ மரத்தைச் சுகம்.

மார்பை யடர்பிணி மாசுவாச காசமூலஞ்
சேர்சோபை தட்டச்சூர் வாத—சோணிததி
சுரத்தை யடுபடாமற் றூறுக ணேரி
னரத்தை யெடுத்துகளி தாம்.

**பேரரத்தை:** பேரரத்தையினால் வாதநோய், பின்னிசிவு, வலிப்பு, சன்னிபாதம், பித்தகபம், நடுக்கற்சுரம், கிளைக்கின்ற புண், தலையில் நீரேற்றம், சலவிஷம் இவை நீங்கும்.

வாத மிசிவுவலி சன்னிபா தத்தையும்
சீதசுரந் தாவிரணஞ் சொன்னநீ—ரோதுபல
வாங்கடுப் பூப்படரு மாறு மொளியாரு
மீங்கடரும் பேரரத்தை யால்.

**சிற்றரத்தை:** சிற்றரத்தையால் சர்த்தி, பயித்தியம், கரப்பான் வாயு, சிலேட்டுமம், பலசுரம், காரமும்போம்.

வாந்திபித் தங்கரப்பான் வாதஞ் சிரரோகஞ்
சேர்ந்தகப முத்தோடஞ் சீதமொடு—நேர்ந்தசுர
மற்றரத்தைக் காட்டி வருமிரும லுந்தீருஞ்
சிற்றரத்தை தன்மருந்தாற் றேர்.

## அரிதாரம்

இது ஒரு பாடாணம். இதன் வகை பொன்னரிதாரம், தாளகம் கட்டியரிதாரம், கரட்டரிதாரம், தகட்டாரிதாரம், மடலரிதாரம், வைப்பரிதாரம், கனத்தீ.

அரிதாரத்தினால் சயகாசம், சிலேத்தும வாதம், கண்நோய், அட்டகுன்மம் முதலியவைகள்போம்.

தாளகத்தின் பேருரைக்கத் தாலுகவு ணோய்குட்ட
நீளக் குளிர்காய்ச்ச னீர்க்கபங்க—ணாளகங்கொள்
துட்டப் பறங்கிப்புண் சூழழுகண் மண்டைநோய்
கிட்டப் படுமோ கிளத்து.

**பொன்னரிதாரம்**

மந்தாரத் தாலே வளருஞ் சுவாசநோ
யுந்திவரு தீச்சுரநோ யோடுங்காண்—முந்து
தொனிக்கயஞ்செய் யான்கடியுந் தோற்குட்டு மேகுந்
தனிப்பொன் னரிதாரத் தால்.
காச முடனே கயநோய் கபவாதம்
பேசரிய குன்மமெட்டும் பேருங்காண்—மாசகன்ற
கீற்று மதிநுதலே கேளாயுள் வேதமது
சாற்று மரிதாரத் தால்.

**மடலரிதாரம்**

ஈளை யுடனே யிருமல் குடிவிலகுங்
கோழை மலமகலுங் கொம்பனையாய்—நாளு
மடலுறுக யங்கரப்பா னாறுப்புண் ணும்போ
மடலரிதா ரத்தை மதி.

மடலரிதா ரத்தில் வருங்கரடி ரண்டு
முடல்விடங்க ளைக்களையு முண்மை—கடல் சூழும்
வையகத்தி லிச்சரக்கை வன்றீயில் வைத்தெடுக்க
ஐயமிலை யென்றே யறி.

**சிவந்த அரிதாரம்**

சிவந்தவரி தாரமது செஞ்சிலைபோற் காட்டு
முவந்ததனை யுண்முறையோ டுண்டா—லிவர்ந்தாழ்
சுரங்குளிர்மா வாதமுடற் சூலைநமை குட்ட
மிரங்குமென நாளு மிசை.

## அரைக்கீரை

இது ஒரு கீரை. இதனால் சுரம், நடுக்கல், சன்னிபாதம், கபநோய், வாதநோய் இவை நீங்கும்.

காய்ச்சல் குளிர்சன்னி கபநோய் பலபிணிக்கும்
வாய்ச்ச கறிகாய் வழங்குங்காண்—வீச்சாயக்
கறுவுமோ வாயுவினங் காமமிக வுண்டா
மறுகீரை யத்தின் றறி

## அல்லி

இது நீரில் வளரும் ஒரு கொடியாகும். இதன் பூ, மேகம், புண் விரணம், வெப்பம், நீரிழிவு, தாகம் இவற்றை நீக்கும்.

மேகமறும் புண்ணாறும் விட்டேகு நீரிழிவு
தாகந் தணியுந் தழலகலும்—வாகான
மெல்லியலே யாயுண் மறையே யெலாமுறைக்கு
மல்லி மலரா லறி.

## அலரி

இது ஒரு செடியாகும். இதன் பூவால் சுரம், அரோசகம், குட்டம், கிரந்தி, இரத்தக்கட்டி, பித்தநோய், தலை எரிவு இவை நீங்கும்.

வெப்பருசி குட்டம் விதாகஞ் சொறிசிரங்கு
செப்பிரத்தப் புண்பித்தஞ் சென்னியெரி—விப்படியிற்
றங்குமோ கும்பத் தனத்தணங்கே வாசஞ்சேர்
கொங்கலரிப் பூப்பெயரைக் கூறு.

## அவரை

இது ஒரு மரவகை. விதை முதிராத வெள்ளையவரைப்பிஞ்சு இரவு உணவிற்கும் மருந்துண்பவர்க்கும் ஆம். முக்குற்றம் விரணம், சுரம், விழிக்குள் முதிர்ந்த சிலேத்தும பில்லம் முதலிய வற்றை நீக்கும்.

கங்குலுண விற்குங் கறிக்கு முறைகளுக்கும்
பொங்குதிரி தோடத்தோர் புண்சுரத்தோர்-தங்களுக்குங்
கண்முதிரைப் பில்லநோய்க் காரருக்குங் காழிறையா
வெண்முதிரைப் பிஞ்சாம் விதி.

(உறை-மந்து, வாழ்-விதை, முதிரை-அவரை)

இதில் அவரைக்கொடி, காட்டவரை, காட்டுமொச்சை, கொத்தவரை, சீனியவரை, கோழியவரை, செவ்வவரை, தீவாந்தர அவ்வரை, நகரவரை, பேயவரை, பேரவரை, முறுக்கவரை, வாள வரை, வெள்ளவரை எனப் பல வகைகளும் உள்ளன.

கொள்ளு, துவரை, முதிரை முதலானவையும் அவரை எனப் படும்.

## அவுரி

இது ஒரு செடி வகை. இதுவே அவரி, அவுரி, நீலி, நீல அவுரி என்றும் கூறப்படுகிறது. இதன் வேர் விஷங்களை முறிக்கத்தக்க சக்தியுடையதென எண்ணப்படுகின்றது இதனால் மூர்ச்சை, வெள்ளை, வயிற்றுநோய் போன்ற பலநோயும் தீரும்.

எல்லா விஷங்களுக்கு மேற்ற குறிப்பாகும்
பொல்லாச் சுரமூர்ச்சை பொங்குவட்டை—நில்லாப்
பவுரிதருங் குன்மமுதற் பன்னோ யொழிவு
மவுரிதரு வேருக் கறி.

**அவுரியிலை:** அவுரியிலை தாவரக் கந்தமூல விஷங்கள் 18ம் வாதசுரம், காமியம், மாந்தம், சீதளம், சன்னிபாதங்கள், கீல் வாதம், விஷக்கடி இவைகளையும் நீக்கும். உடற்குப் பொன் நிறந்தரும்.

உரியவவு ரித்தழைதா னோது பதினெண்
ணரியநஞ்சைத் தின்றவர்க்கு மாகுந்—தெரிவரிய
வாதவெப்பு காமாலை மைந்தர்க் குறுமாந்தந்
தேக மகற்றுந் தெரி.

சன்னிப் தின்மூன்றுஞ் சந்தொடித்த வாதமுத
லுன்னு விஷக்கடியு மோடுங்காண்—மின்னுங்
கவுரிநிற முண்டாகுங் காசினியு ளேநல்
லவுரி யிலையா லறி.

## அழிஞ்சில்

இது ஒரு மரவகை. இதனால் வாதகோபம், கபம், சீழ்வடியும் பெருநோய் இவை நீங்கும். பித்தாதிக்கத்தைச் செய்யும்.

அழிஞ்சிலது மாருதத்தை ஐய்யத்தைத் தாழ்த்து
மொழிஞ்சபித் தத்தை யுயர்த்து—விழுஞ்சீழாங்
குட்டமெனு நோயகற்றுங் கூருமருந் தெய்திடில்
திட்டமென வறிந்து தேர்.

## அறுகம்புல்

இது ஒரு புல் வகை. இதனால் முக்குற்றம், கோழை, கண்ணோய், தலைநோய், இரத்த பித்தம், மருந்துச் சூடு இவை நீங்கும்.

அறுகம்புல் வாதபித்த ஐய்யமோ டளை
சிறுக வறுக்குமின்னஞ் செப்பி—லறிவுதருங்
கண்ணோ யொடுதலைநோய் கண்புகை யிரத்தபித்த
முண்ணோ யொழிக்கு முறை.

அறுகங் கிழங்கால் தணியாத பற்பல வெப்பமும், முக்குற்ற நோய்களும் நீங்கும். உடல் வனப்புண்டாகும்.

ஆறா வழலெல்லா மாறுமுத் தோடமது
வீறா திருக்குநல்ல மேனிதரும்-மாறாக்
கடியமா லங்கலணி காரளக மின்னே
கொடியறுகம் புற்கிழங்கைக் கூறு.

## ஆடாதோடை

இது ஒரு செடி வகை. இதன் இலை கபாதிக்கம், வாத தோடம், பற்பலசுரம், சன்னிபாதம் 13, வயிற்று நோய் இவற்றை நீக்கும்.

ஆடாதோ டைப்பன் னமையலுக்கும் வாதமுதற்
கோடாகோ டிச்சுரத்தின் கோடொழிக்கு - நாடின்
மிகுந்தெழுந்த சன்னிபதின் மூன்றும் விலக்கு
மகத்துநோய் போக்கு மறி.

ஆடாதோடை வேரினால் இருமல், அக்கினிமந்தம், சுவேத பித்தம், மகசுவாசம், க்ஷயரோகம் முதலிய நோய்கள் தீரும்.

காசமொடு மந்தங் கதித்தபித் தங்கொடுஞ்சு
வாசங் கழுத்து வலிமுதநோய் - கூசி
யோடா திராதிங் கொருநாளு மொண்டொடியே
யாடா தொடைத்துருக் கஞ்சி.

## ஆடுதீண்டாப்பாளை

இது ஒரு செடி வகை. இது ஒரு சிறந்த புழுக் கொல்லியாகும். இதனால் கிருமிகள், சிலந்திப்பூச்சி விஷம், கருங் குட்டம், கரப்பான், வாதரோகங்கள் போன்ற பல நோய்களும் தீரும்.

ஆடுதொ டாப்பாளைக் கக்கிருமி வன்சிலந்தி
நீடுகருங் குட்டம் நிறைகருப்பான் ஆடிடச்செய்
யெண்பது வாய்வுமிக்க குட்டமுந் தீருந்
திண்பெறுநற் றாதுவுமாஞ் செப்பு.

## ஆதொண்டை

இது ஒரு கொடி வகை. இதனால் மண்டை குடைச்சல், வாதபீனிசம், நெஞ்சிற் கபாதிக்கம், வாதக் குடைச்சல் போன்ற நோய்கள் தீரும்.

மண்டைக் குடைச்சலறும் வாயுவழிப் பீனிசம்போந்
தொண்டைக் கபமுந் தொலையுங்காண் - மீண்டுசெய்யும்
வாதக் கடுப்பகலு மாதேஆ தொண்டைக்குப்
போதப் பலபிணியும் போம்.

## ஆமணக்கு

இது ஒரு செடி வகை. இதில் பல வகைகளும் உள்ளன. அவை, செவ்வாமணக்கு, சூரியகாந்த ஆமணக்கு, மலையா மணக்கு, கடலாமணக்கு, காட்டாமணக்கு, ஏரிக்கரை காட்டா மணக்கு, எலியாமணக்கு, புல்லாமணக்கு, பறங்கியாமணக்கு, மணியா மணக்கு, பேராமணக்கு, படுக்கையாமணக்கு, அறுப்தாங் கொட்டை, சிற்றாமணக்கு.

இதனால் வாதம், குன்மம், குடலேற்றம், உடல், கண், மூக்கு, செவி, வாய் இவைகளிலுண்டாகின்ற எரிச்சலும் நீங்கும். பொன் னிறமும் தாது விருத்தியு முண்டாகும்.

ஆமணக்கு நெய்யா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே - வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில்வரு குன்மம்போ மோர்.

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறு
மைம்பொறிச் சூடெறிவு மாறுங்காண் - அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் நலஞ்செறித்த
ஆமணக்கின் நெய்யுண் டறு.

சிற்றாமணக்கு நெய் பற்பல மருந்துகளின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்திலுண்டாகின்ற வெப்பங்களையும் நீக்கும்.

மருந்தி னழலும் வளியான் மூலத்துப்
பொருந்து மழலுமறப் போக்குங் - குருந்திற்கு
நற்றா யெனவளர்க்கு நாளுமழ லைத்தணிக்குஞ்
சிற்றா மணக்கினெய் தான் தேர்.

## ஆவாரை

இது ஒரு கீரை வகை, இது பித்த நோயையும் அதிமூத்திரத்தையும் இரத்த பிரமேகத்தையும் போக்கும்.

தின்றா லுரிகைதருந் தீராப் பயித்தியத்தைப்
பொன்றாத நீரிருவைப் புண்ணாரை யென்றுமிந்த
வூராரைச் சாராம லோட்டிவிடு நாவிதழார்
நீராரைச் கீரையது நீ.

## ஆலம்

இது ஒரு மர வகை. ஆலமரத்தின் பால், விழுது, பழம். விதை, பூ, பட்டை, இலை இவைகள் வயிற்றுக் கடுப்பு, மேகநீர் இவைகளை நீக்கும்.

சொல்லுகின்ற மேகத்தைத் துட்ட வகக்கடுப்பைக்
கொல்லுகின்ற நீரிழிவைக் கொல்லுங்கா - ணல்லாவின்
பாலும் விழுதும் பழமும் விதையும்பூவு
மேலு மிலையுமென விள்.

ஆலமரத்தின் விழுது தந்தங்களை இறுகச் செய்யும். பிரமேகத்தை நீக்கும். கொழுந்து ரத்தாதி சாரத்தை விலக்கும். இம்மரத்தில் முளைத்த புல்லுருவியால் விஷபாக ரோகம் நீங்கும்.

வடமரவீழ் பல்லிறுக்கி மாமேகம் போக்கு
மடர்கொழுந்தி ரத்தப்போக் காற்றும் - படரதிலாம்
புல்லுருவி யென்றெய்திற் பொல்லா விடபாக
வல்லுருவி லுண்மை மதி.

ஆலம்பால் தலைக் குளிர்ச்சியையும் தாது பெருக்கத்தையும் தரும்.

ஆலம்பால் மேக மறுந்தசையும் பல்லிறுக்குங்
கோல முடிக்குவெகு குளிர்ச்சிதரும் - ஞாலமதில்
மெத்தவுமே சுக்கிலத்தை விர்த்திசெய்யுந் தப்பாமற்
சுத்தமதி முகத்தாய் சொல்.

ஆவாரை

இது ஒரு செடி வகை. இதனால் மேகநீர் நோய்கள் நீங்கும்

சொல்லுதற்கு மட்டோ தொலையாத மேகநீ
ரெல்லா மொழிக்கு மெரிவகற்று - மெல்லவச
மாவாரைப் பம்பரம்போ லாட்டுந் தொழிலணங்கே
யாவாரை மூலி யது,

பொன்னாவரைச் செடியினால் உடலில் வெடிப்பு, மேகப் புடைகள், தடித்தல், நமைச்சல், கடி போன்றவை நீங்கும்.

வெடிப்பு துவக்குதிரல் மேகப் புடைகள்
தடிப்பு தினவுதடி தங்கா - அடிக்கடியிங்
கென்னா வறைய விசையா லெழிலணங்கே
பொன்னா வரையதனைப் போற்று.

ஆவாரைச் செடியின் வேர், இலை, பூ, காய் என்னும் ஐவகை அங்கங்களால் பிரமேக மூத்திரம் வெள்ளை, உட்சூடு, விரணம், வாதகிராணி, அத்திதாது, கதசுரம், தாகம் இவை நீங்கும்.

மேகத்தி னாலே விளைந்தசலம் வெட்டையன
லாகத்தின் பண்ணோ யருங்கிரணி - போகத்தால்
ஆவாரைப் பஞ்சகங்கொ ளத்திசுரந் தாகமும்போ
மாவாரைக் கண்மட மாதே.

ஆவாரம்பூ, பிரமேகநீர், வறட்சி, உடம்பிற் குத்தல், கற்றாழை நாற்றம் இவை நீக்கும். மெய்க்குப் பொற் சாயலைத் தரும்,

தங்க மெனவே சடத்திற்குக் காந்திதரு
மங்காத நீரை வறட்சிகளை - யங்கத்தா
மாவைக்கற் றாழை மணத்தை யகற்றிவிடும்
பூவைச்சே ராவாரம் பூ.

## ஆற்றுநீர்

ஆற்று நீரானது வாதம், பித்தம், சபம், தாகம் போன்ற பல நோய்களையும் போக்கும்.

ஆற்றுநீர் வாத மனலங் கபத்தோடு
தோற்றுகின்ற தாகந் தொலைக்குமே - வூற்றமிகுந்
தேகத்தி னோயையெல்லாஞ் சீறித் துரத்திவிடும்
போகத்திற் றாவுமாம் போற்று.

## ஆனைத் திப்பிலி

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் வாதகோபம், சிலேத்துமம், கரப்பான், சுரசாதரோகம், இரைப்பு இவை நீங்கும்.

வாதமறுந் தீபனமா மாறாக் கபங்கரப்பா
னோதுகுரற் கம்மலிவை யோடுங்காண் - பூதலத்திற்
சோனையைநேர் நாசியினீர் தோலாச்சு வாசமும்போம்
யானையினற் றிப்பிலியா லாய்.

## ஆனை நெருஞ்சில்

இது ஒரு கொடி வகை. பெருநெருஞ்சி, புளியரனை என்றும் கூறப்படும். இது மிகவும் குளிர்ச்சி உடையது. இதன் சாற்றால் வெள்ளை வீழல், வெண்குட்டம், நீர்க்கடுப்பு, நீரெரிவு, நீரடைப்பு உடலெரிவு, உழலை தாகம், பித்த மயக்கம் இவை நீங்கும்.

மேகத்தைப் போக்கிவிடும் வெண்குட்டந் தானொழிக்குந்
தேகத்திற் கல்லடைப்பைத் தீர்க்குங்காண் - மேனிதனில்
தேனையரும் பாகைத் திருத்துங் கிளிமொழியே
யானை நெருஞ்சி லது.

யானை நெருஞ்சி லதுசீ தளமாகும்
மானே யெலும்புருக்கி மாற்றுங்காண் - மேனிதனி
லுள்ள வெரிச்ச லுழலையுட் டாகமொடு
தள்ளுபித்த மும்போகுந் தான்.

## இஞ்சி

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இதனால் காசம், கபம், வெள்ளோக்காளம், சன்னிபாதசுரம், அதிசாரம், வாதசூலை, வாதகோபம் இவை நீங்கும். பசியுண்டாகும்.

இஞ்சி யதனுக் கிருமலைய மோக்காளம்
வஞ்சிக்குஞ் சன்னிசுரம் வன்பேதி - விஞ்சுகின்ற
சூலையறும் வாதம்போந் துண்டாத தீபனமாம்
வேலையுறுங் கண்ணாய் விளம்பு.

## இண்டங் கொழுந்து

இது ஒரு கொடி வகை. இதனால் பீனசம், தலைக் குடைச்சல் முகசன்னி, வாதத்தடிப்பு, பிரேமகம், சூதக வாய்வு, சுவாசம், கீல்பிடிப்பு, தீச்சுட்ட விரணம் ஆகியவை நீங்கும்.

பீனசத்தைப் போக்கும் பெருகியதோர் நீரேற்றந்
தானசிக்கச் செய்யுமது சத்தியங்காண் - வானசைக்கும்
மண்டைக்குடைச்சலொடு வாய்ச்சன்னி யும்விலக்கும்
பண்டையுற்ற விண்டிதனைப் பார்.

கட்டுவா தங்களறுங் காரிகையே மேகம்போ
முட்டுவா தங்களெல்லா முன்பொழியுங் - கிட்டும்
புனலினறுந் தண்டுக்குப் போரீளை சூலை
யனலிலெழு புண்ணு மறும்.

## இந்துப்பு

இது ஒரு கடைச் சரக்கு. ஐந்துப்பு(பஞ்சலவணம்) களில் ஒன்று இது முக்குற்றங்களையும் நீக்க வல்லது. எண்வீதக் குன்மம், அலசம், பித்தம், கபம், நரம்புச் சிலந்தி, விஷம், தலை, விழி, நா, தந்தம் இவற்றிலுண்டாகும் நோய்கள், மூலம், காது, கழுத்து, யோனி இவற்றிலுண்டாகும் நோய்களையும் நீக்கும். கடி விஷங்களையும் போக்கும்.

அட்டகுன்ம மந்த மசிர்க்கரச்சூர் சீதபித்தந்
திட்டவைய நாடிப்புண் டோடங்கள் - கெட்டமலக்
கட்டுவிட விந்துப்பைக் காமியநோய் வன்கரப்பான்
விட்டுவிட யிந்துப்பை விள்.

சென்னிகண்ணா பற்றூர் செவிகள்கண் டம்பகநோய்
சன்னியாசங் காசந் தாகமிரைப் - புன்னிரத்த
மூலஞ் சிலந்திநளி மூடிகநஞ் சூதைவலி
சூலஞ் சிதையுமிந்தாற் சொல்.

கண் மருத்துவத்தில் மிகுதியாகப் பயன்படுத்தப் பெறும் மருந்துப் பொருட்களில் இதுவும் ஒன்றாகும்.

## இரசம்

இது ஒரு கடைச் சரக்கு. இதுவே இரதம் (பாதரசம்) என்றும் கூறப்படும். சிவ வீரியமென்றும் கூறப்படும். இரசத்தை முறைப்படி சுத்தம் செய்து பயன்படுத்தக் கண்நோய், கிரந்தி, அட்ட குன்மம், கீல் பிடிப்பு, விரணங்கள், பெரு வியாதிபோன்ற பலநோய்களும் நீங்கும்.

விழிநோய் கிரந்திகுன்ம மெய்ச்சூலை புண்குட்
டழிகாலில் விந்துவினா லத்தை—வழியாப்
புரியும்விதி யாதும் புரியினோ யெல்லா
மிரியும்விதி யாது மிலை

## இரும்பு

இது ஓர் உலோக வகை. இதனாலான மருந்தானது பித்தப் பாண்டு, சிலேத்தும வெள்ளைக் குட்டம், வீக்கம், வயிற்று நோய், சுக்கில நட்டம் ஆகிய இவைகளை நீக்கும். மலவிருத்தியும் தீபனமும் உண்டாக்கும்.

பாண்டுவெண் குட்டம் பருந்தூல நோய்சோபை
மாண்டிடச்செய் மந்தங்கா மாலைகுன்மம்—பூண்ட
பொருந்தாது நட்டமும்போம் பேதிபசி யுண்டாங்
கருந்தாது நட்டமிடுங் கால்

## இரும்புச் சிட்டம்

இரும்புச் சிட்டத்தினால் வாத சோபை போன்ற வீக்கங்கள், அத்திசுரம் விஷப்பாண்டு, இரைப்பு, கபகோபம், உடல் வெளுப்பு, காசம், நீராமைக் கட்டி போன்ற பல பிணிகளும் நீங்கும்.

கிட்டமொன்றாற் சோபை கிளைவீக்க மத்திசுரந்
துட்டவிட பாகஞ் சுவாசமையாங்—கெட்டகொடும்
பாண்டிரும னீராமை பாழும் பிரமியமுந்
தாண்டிவிடு முண்டிரத்த தாது

பாண்டுவுடன் சோபை பகருங்கா மாலைகுன்மம்
பூண்டவெண் மேகமொடு பூவையரே—நீண்டளவி
லோங்குங் கபமிரைப்பு முறுநீர்க் கட்டிவகை
நீங்குமண்டு ரத்தால் நினை

## இருவாட்சி

இது ஒரு மரவகை. வெப்பும் கார்ப்புச் சுவையுமுள்ள இருவாட்சி மரத்தால் கண்ணொளியும், உடலில் மணமும், வனப்பும் உண்டாகும். உடல்குத்தல், வலி இவை நீங்கும்.

கண்ணொளிவு மெய்யிற் கமழ்மணமு நீடழகு
நண்ணும் வலிமூர்ச்சை நாசமாம்—பண்ணளியுங்
கங்குலும் வாழ்வார்குழலே காரமொடு வெப்புமிகத்
தங்குமிரு வாட்சிமரத் தால்

## இருவேலி

இதுஒரு செடியின் வேர்வகை. இதுவேவெட்டிவேர். இதனால் விழி நோய், பித்தத்தாலுண்டாகும் தாகம், காமாலை, பித்தம், சுரம், குட்டம், தலைநோய், கழுத்து நோய், சுக்கில நட்டம், தீப் புண், முலைச்சிலந்தி, கட்டி இவை நீங்கும்.

பித்தவி தாகஞ் சசிகா மிலங்கறைப் பித்தமனம்
தத்திடு குட்டஞ் சிரநோய் களமடி தாதுநட்ட
மத்தம னற்புண் டடைப்புண் வண்மூர்ச்சை வரிவிழிநோய்
வித்திர மேகத்தின் கட்டியும்போம் வெட்டி வேரினுக்கே

## இலந்தை

இது ஒரு மரவகை. இதன் வேரினால் அயர்ச்சி நீங்கும். இரத்தாதிசாரம், உடல் எரிச்சல், வயிற்றுக் கடுப்பு, பித்தமேகம் இவை நீங்கும்.

வேருக்கா யாசம் விலகும் பசியுண்டாஞ்
சீரொத் திடுமிலைக்குக் கீழ்மூலஞ்—சோரிவிழல்
மேலெரிச்ச லுங்கடுப்பு மேகபித்த மும்போகுந்
தாவும் விழியா யிலந்தை

இலந்தைப் பழத்தால் பித்த மூர்ச்சை, அரோசிகம், முக்குற்றம் வாந்தி, வலி வாதம் போகும்,

பித்த மயக்கருசி பேராப் பெருவாந்தி
மொத்தனில மெல்லா முடிந்திடுங்காண்—மெத்த
உலர்ந்த வெறுவயிற்றி லுண்டா லெரிவா
மிலந்தை நறுங்கனியை யெண்

## இலவம்பிசின்

இது ஒரு மரத்தின் ரசமாகும், இதனால் பிரமேக வெள்ளை, மூத்திரக் கடுப்பு, உட்சுரம், பேதி ஆகியவை நீங்கும்.

மேகவெட்டை நீர்ச்சுருக்கு மெய்யனற்கி ருச்சரத்தின்
வேகமதி காரமென விள்ளுநோ – யேகவென்றால்
வாரணியுங் கும்பமுலை மாதே மறைப்பின்றிப்
பூரணி ரசுத்தைப் புகல்

## இலிங்கம்

இது ஒரு பாடாண வகை. இதுவே சாதிலிங்கம். சிவந்த சாதி லிங்கம் முதலில் பாதரச உருக்காகையால் அந்த ரசகுணத்தைக் கொண்டு, அதிசாரம், சன்னிபாதம், அற்புதப்புண், அதிமூத்திரம், காணாவிஷம், இருமல், கரப்பான், சிரங்கு, கிரந்தி, குட்டம், உடல் குத்தல், வாத நோய் போன்றவற்றை நீக்கும்.

பேதிசுரஞ் சன்னி பெருவிரண நீரொடுக்
காதகடி காசங் கரப்பான்புண்—ணோத
வுருவிலிங்க சங்கதமா யூறுகட்டி யும்போங்
குருவிலிங்க சங்கமதைக் கொள்

ஆதி யிரதவுருக் காதலாற் சாதிலிங்க
மோதி விரதகுண முற்றுடலிற்—றீதுபுரி
குட்டங் கிரந்தி கொடுஞ்சூலை வாதமுத
லுட்டங்கு நோய்களை யோட்டும்

## இலுப்பை

இது ஒரு மரவகை. இதன் பூவினால் பித்த சுரம், தாக நோயும் நீங்கும்.

குன்றா விலுப்பையின்பூ கூர்மதுரம் வாசனையாற்
தின்றாற் பயித்தியமுஞ் சேருங்காண்—வன்றலுறுந்
தார்குழலே பித்தசுரந் தாகந் தணிந்துவிடும்
வார்தயக்க மெய்தும் வழுத்து

**இலுப்பை நெய்:**-இலுப்பை நெய்யால் கரப்பான், கடி விஷம், சிரங்கு, விரணம் இவையும், சகல வாதமும் நீங்கும்.

கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணு
முரப்பா மிடுப்புல்லி யோடு—கரப்பான்
பாகுமொழி மாதே பலமுண்டாந் துற்பலம்
போகுமிலுப் பையினெய்க் கே

**இலுப்பைப் பிண்ணாக்கு:**- இலுப்பைப் பிண்ணாக்கு கடுவன், விரணம், கரப்பான், வீக்கம், முக்குற்றம், எண்ணெய்ச்சிக்கு இவை நீக்கும்.

பொத்திக் கடுவனொடு புண்ணுங் கரப்பனும்போம்
வித்தைப்பு தோடமிவை வீறாவா—மெத்தெனவே
எண்ணெய்க் கசிவுகளு மேகு மிலுப்பைவிதைப்
பிண்ணாக்குக் கென்றியப் பேசு

**இலுப்பை விதை:**- இலுப்பை கொட்டை அந்தர வாயுவையும் விஷத்தையும் நீக்கும்.

இலுப்பைவிதை யந்தரவாய் விற்கும் விஷத்திற்கு
மலுப்பை புண்டாக்கி யகற்று—நிலத்திற்
றொழுஞ்சுக மோகக் கரப்பில்சொல் லஞ்சனமா
மழிஞ்சில் விதையென் றறி

**இலுப்பை வேர்:**- இலுப்பை வேரினால் விரணம், புரை, வயிற்றுக் கடுப்பு, அதிமூத்திரம், இரத்த கிரணி, அக்கினி மாந்தம் அருசி, வாத சூலை, சுரம், தாகம், உடல் அயர்வு ஆகியவை நீங்கும்.

புண்ணும் புறையுமறும் போதைத் துவர்ப்பாகு
மெண்ணு மகக்கடுப்பி ருக்குமோ—பெண்ணேகேள்
நீரிழிவு மேகும் நெடுமோமை மூலத்தாற்
பேரிடா கடுப்பிரத்தம் போம்
(ஓமை—இலுப்பை)

மந்த மரோசி மகாசூலை சர்வசுரம்
விந்து நட்டந் தாகமொடு மெய்யுளைப்பும்—முந்த
அலுப்பைப்பெற் றேகு மளகத்திற் காகா
விலுப்பைக்குச் சூடதிக மெண்

## இளநீர்

இது தென்னை மரத்தின் காயிலுள்ள நீராகும். முறையாக இளநீரைப் பருகினால் வாதகோபம். பித்தம், வெப்பம்,

கபாதிக்கம் போன்றவை நீங்கும். கண்ணில் தெளிவும் குளிர்ச்சியும் உண்டாகும். மூத்திரப் பெருக்கும் மலப் போக்கு முண்டாகும்

இளநீரால் வாதபித்த மேகு மனதுந்
தெளிவாய்த் துலங்குமிரு திருட்டிக்—கொளிவுங்
குளிர்ச்சியு முண்டாகுங் கொடியவன னீங்குந்
தளிர்த்தகன நொய்தாகுஞ் சாற்று

என்றுமிள நீர்நீ ரிறக்குங் கபமறுக்குந்
துன்றனலாஞ் சீதமெனச் சொல்லுவார்கா—
னின்றெழும்பும்
பித்தமொடு வாந்தியும்போம் பேதிகட்டி ரண்டுமுண்டாங்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு

**செவ்விளநீர்:-** செவ்விளநீரை அருந்தினால் பித்த விருத்தி, தாகம், வழிநடையாலாய இளைப்பு, அயர்வு, பற்பல சயம் ஆகியவை நீங்கும்.

பித்தமொடு தாகம் பெருத்த வழிநடையா
லெத்தலா யாச மிவையேகு—நித்தியமுஞ்
செவ்விளநீ ருண்டைக்காற் றீறும் பலகயமு
மவ்விளநீர் கொங்கைமின்னே யாய்

இளவழுக்கையுடைய புதிதாகப் பறிக்கப்பட்ட இளநீரை உண்பவருக்குப் பித்த கோபம் விலகும். பழைய இளநீரையுண்டால் சலதோஷம் முதலிய பற்பல நோய்களும் உண்டாகும்.

புதியிளநீர் பித்தமறும் பூதலத்தோ ருண்ணும்
பதமுடனே யுண்பார் பரிவாய்—நிதநிதமு
முண்ணப் பழவிளநீ ருண்டா பலவகைநோ
யெண்ணி நீயறிவா யினி

**பச்சை இளநீர்:-** பச்சை இளநீர் சீழ்ப்பிரமேகம், பழைய சுரம், கபாதிக்கம், எறிகிருமி, யானைச் சொறி, கண்ணோய் ஆகியவற்றை நீக்கும்

பச்சிளநீர் மேகம் பழஞ்சுரங்க ளைப்போக்குங்
கச்சிமுலை மாதே கபமறுக்கு—மெச்ச
வயிற்றிற் கிருமியொடு வன்செறிகண் ணோயும்
அயர்த்தோடச் செய்யு மறி

**தேளி இளநீர்:-** தேளிஇளநீரை உண்பவர்க்கு இரத்த மேகம், மலக்கிருமி, தாகம், மந்தாக்கினி, கரப்பான், அதிசுரம் ஆகியவை நீங்கும்.

தேளியுண்ண மேகம்போங் கேளாய் மடமயிலே
நீளகட்டுக் கீடநிலை யாவாந்—தாளாத
தாகமொடு மந்தமறுந் தானே கரப்பனும்போம்
மேகவன லுந்தணியு மே

**மஞ்சள் கச்சி இளநீர் :-** மஞ்சள் கச்சி இளநீரினால் பித்தம், சோபை, சிலேத்துமாதிக்கம், பழைய சுரம் இவை விலகும்.

பித்தம்போஞ் சோபையறும் பேருலகில் யாவருக்குந்
தொத்து கபமுந் தொலையுங்காண்—தத்துகின்ற
பொல்லாப் பழஞ்சுரமும் போகுமஞ்சட் கச்சிக்குப்
பொல்லாப் பொன்றில்லைப் புகல்

**அடுக்கிளநீர் :-** அடுக்கிள நீரையுண்டால் கபநோயும் மலப் பையைப் பற்றிய கிருமியும் போம். நண்மையுண்டாகும்.

அடுக்கிள நீர்கபத்தை யண்டா தகற்றும்
வடுக்கண்ணா யின்னும் வகுப்போம்—படுக்கும்பேர்
துண்டாற் சுகமெய்து முள்ளாங் கிருமியிதை
கண்டா லிறந்துவிடுங் காண்

**கருவிளநீர்:-** கருவிளநீரினால் கபாதிக்கமும், புழுநெளிகின்ற கரப்பானும் நீங்கும். உடல் வனப்பும், மகிழ்ச்சியுமுண்டாகும்.

மருமலர்வாழ் மானே வையகத்தோர் நித்தங்
கருவிளநீ ருண்ணக் கபமுங்—கிருமிநெளி
புண்ணுங் கரப்பானும் போகுமிகக் காந்தியுறு
மெண்ணுமனப் பூரிப்பா மென்

**சிவப்பிளநீர்:** இரத்தவண்ண இளநீரால் வீக்கமும் வயிற்றி லுள்ள பூச்சியும் நீங்கும்

காரிருட் கூந்தற் கருங்கண் மடமயிலே
சேரரியிள நீரருந்தச் சோபையருங்—கூறியதோர்
பாச்சி கிருமியறும் பொன்மேனி யாமுடலாம்
பேச்சிற் தெளிவுண்டாம் பேசு.

**ஆயிரங்கச்சி இளநீர்:** ஆயிரங்கச்சி இளநீரால் வெப்பம், பசி, வாதம், கபம், தொந்தம், நமைச்சல், விரணம், குன்மம் இவை நீங்கும்.

வேகமுறுந் தீபனமாம் விட்டோடு வாதகப
மாகமதிற் சேர்ந்த வரிப்பும்போம்—வாகுறுபுண்
வாயிரங்கு சீழும் வயிற்றுவலியுந் தொலையும்
ஆயிரங் கச்சிக் கறி.

**குண்டற்கச்சி இளநீர்:** குண்டற்கச்சி இளநீரால் அருசி, தாகம், பழைய மலம் நீங்கும்.

அண்டையிலே நின்றார்க் கரோசிகெடுந் தீபனமாங்
கெண்டைவிழி மாதரசே கேளின்னும்—கண்டபடி
குண்டற்கச் சிக்குக் கொடுந்தாக மாறிவிடும்
பண்டைப் பழமலம்போம் பார்.

மட்டைசீவித் தண்ணீரில் போட்டுக் காய்ச்சியாற்றிய இளநீரானது இருமல், வறட்சி, சுரம் இவைகளைப் போக்கும்.

காய்ந்தா றியவிளநீர் காசங் கபந்தீர்க்கு
மாய்ந்திடாத் தாகசுர மாற்றுங்காண்—ஆய்ந்ததொரு
செவ்விளநீர் பித்தஞ் சிதைக்குங் கெவுளிகண்டால்
எவ்வளவுந் தாபமில்லை யெண்.

காலையில் இளநீருண்டால் பசிநீங்க லன்றிக் குன்மம் ஆம். மாலையில் உண்டால் எரிகிருமிகள் ஒழியும்.

ஊனுக்கு முன்பிளநீ ருண்டாற் பசிபோகும்
வீணுக்குக் குன்மம் விளையுங்காண்—பேணியிதை
மாலை தனிலிருந்த மன்னுபுழுச் சாகும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

உண்டபின்பு இளநீரையுண்டால் வாத பித்த கோபம் தணிவதுமன்றித் தனிப்பித்த தோடம் விலகும். மலம் கழியும். அதிதீபனமுண்டாகும். நோய் அணுகாது.

வாதபித்த மீறாது வன்பயித்தி யந்தீருங்
கோதின் மலஞ்சாயுங் கொடும்பசியா—மாதரசே
மண்டியதோர் வாராது மேனி மினுமினுக்கும்
உண்டபின்பு நல்லிளநீ ருண்.

## இளமட்டைச்சாறு

தெங்கு, பனை இவற்றின் மட்டைகளிற் பிழிந்த நீரினால் மூத்திரக்கிரச்சரம், நீரிழிவு, பவுத்திரம், விரணம், வயிற்றுக்கடுப்பு ஆகியவை நீங்கும்;

மட்டைநீ ராற்கிரிச்ச மாறு மடமயிலே
யொட்டிநின்ற நீரிழிவு வோடுங்காண்—கெட்ட
பவுத்திரமும் புண்ணும் பறக்கும் பயந்தே
புவிக்குள் வயிற்றுக்கடுப்பும் போம்.

## இளவாழைநீர்

வாழைக்கிழங்கில் ஊறுகின்ற நீரினால் வெப்பம், விரணம், எரிவு, அயர்வு, உழலை நோய், பாண்டு போன்றவை நீங்கும்.

வாழைநீர் சீதவெப்பு வல்லபல முண்டாக்கும்
பேழை வயிறுடைக்கும் பெண்மயிலே—யீழும்மல்லி
ரத்தக் கிரிச்ச மெரிநீ ரிவையுடனே
சிற்றிரணம் போக்குந் தெரி.

சோமரோ கங்க டுலையுமி ளைப்பழலை
நாமமறும் பாண்டுவகை நாடாதே—பூமிதனில்
காழை யெலும்புருக்கி காணா வணங்கரசே
வாழைநீர்க் கென்றுளத்தில் வை.

## இறால்

இது ஒரு மீன் வகை. இதன் கறியினால் வாய்வு, அக்கினி மந்தம், சீதளம், நமைச்சல், இரத்தம் இவை உண்டாகும்.

வாதமொடு மந்தமுறு மாறாப் பொருமன்மிகுஞ்
சீதம் விளையுந் தினவுண்டா—மாதே
உதிர மிகப்பெருகு மோங்குமிறா லுண்டா
லெதிரிலங்க ராங்கிசமா மெண்.

## உகா

இது ஒரு கொடி வகை. இதன் விதை முக்குற்றங்களையும் நீக்கும்.

வாதமுதன் முப்பிணியால் வந்தபிணியை யெல்லாங்
கோதிற் சமப்படுத்துங் கூறவொண்ணாச்—சீத
மகாவனச மண்டபத்தில் வாழ்ந்திருக்கு மாதே
யுகாவிதையை நன்றா யுரை.

## உசிலம்

இது ஒரு மரம். இதன் வேர்ப்பட்டை அள்ளு மந்தத்தையும், இலையின் தூள் எண்ணெய்ச் சிக்கையும், பிசின் பித்த மேகத்தையும் நீக்கும். கட்டை குடிக்கும் எண்ணெய் காய்ச்சுவதற்கு விறகாகும்.

அள்ளுமந்த நெய்ச்சிக் கழன்மேக நீங்குநிதங்
கொள்ளு தயிலக் கறைக்கு கொள்விறாகம்—விள்ளுமதி
லோதியடை வாளினமென் றொன்றுகுழ லேகவிகை
யாதி யடைபிசின் கட்டை.

## உடும்பு

இது ஒரு பல்லி வகை. இதன் இறைச்சியால் வீக்கம், சொறி, தலை, காதுகளிலுண்டாகும் பிணிகள், கணச்சூடு, விரணம், குட்டம், சயம், பிரமேகம், வெள்ளை, மூலம், குடல் வாதம், வாத பித்தம், பேதி இவை விலகும்.

தொன்மைத் துவர்ப்பினிப்பாற் றுர்ப்பலம் தடிப்புநன்மை
வன்மைக் கிராணி வலியிவைக—ளின்மையுறு
மேற்றழல்புண் குட்டுகப மேகம்வெட்டை மூலமண்டங்
காற்றழல் விட்டிற்றடிக்குச் காண்.

சொலும்வாத பித்தமொடு தொல்வறட்சி யும்போம்
பலமிலாத் துர்ப்பலர்க்கும் பாரில்—பலம்வந்
திடுந்துவர்ப்பி னிப்பும் இயற்கையிலே யுள்ள
உடும்பின் இறைச்சிதனை யுண்.

கிட்டு முடும்பிறைச்சி கேள்விநோய் மூலமுளை
வெட்டைசிர நோய்சோபை மேகம்புண்—குட்டகய
சீதமிரத் தக்கடுப்புத் தீராக் குடல்வாதம்
பேதியிவை போக்குமெனப் பேசு.

## உத்தமதாளி

இது ஒரு கொடி வகை. இதுவே உத்தாமணி, வேலிப்பருத்தி என்றும் கூறப்படும். இதன் இலையால் வாதநோய், விஷம், சன்னி. முக்குற்றம், வாத குன்மம், உடல் குடைச்சல், குத்தல், நடுக்கல், தடிப்பு போன்ற பல நோய்களும் நீங்கும்.

ஆலித் தெழுந்தநோ யத்தனையுந் தீருமே
வேலிப் பருத்தியதன் மெல்லிலையால்—வேலொத்துக்
கண்டிக்கும் வாதஞ் சன்னிதோட மும்போ
முண்டிக்கும் வாசனையா மோது.

உத்தா மணியிலையா லுள்வயிற்றுக் குன்மமொடு
குத்தாம் வலியுங் குளிரும்போம்—பற்றி
இசுக்கும் வலியிரைப்பு மெத்தடிப்பு மேகும்
பசிக்குமதி மந்தமும்போம் பார்.

## உப்பிலாங் கொடி

இது ஒரு கொடி வகை. இதனால் குழந்தைகளின் மாந்தமும் நீங்காத சுரமும் நீங்கும். இது தங்கத்தைப் பற்ப மாக்கும்.

பிள்ளை மந்தபேதி பேராத ரூட்சையும்போம்
வெள்ளைசெய்யுந்தங்கத்தைமென்மலராற்-றொள்ளைபுரி
வேளு நடுங்குவடி வேலைநிகர் கூர்விழியாய்
நாளுமுப் பிலாங்கொடியி னால்.

உப்பிலி - புலி தொடக்கி, ஈங்கை, ஈண்டு.
உப்பிலிக் கொடி - ஈர் கொல்லிக் கொடி.

## உப்பு

இது ஒரு கடைச் சரக்கு. அளத்திலுள்ள நல்ல உப்பு வெப்ப வாதம். கண்ட வாதம், எண் குன்மம் இவற்றை நீக்கும்.

அளத்திலுறை நல்லுப் பனல்வாத மாற்றுங்
களத்துநோய் தன்னைக் களையுங்—கிளைத்தகப
வாசுடைய வல்லைநோ யட்டகுன்ம மும்போக்குங்
காசினியுண் மாதே கழர்.

## உப்புநீர்

இதன்ால் குடல்வாதம் விலகும். உடலில் குத்தும் வாயுவும் பித்தமதிகரிப்பும், வாயில் துவர்ப்பாக ஊறும் நீரும் அதிகரிக்கும்.

உப்புநீ ராலுணவை யுள்ளிலோ டிக்குத்தும்
எப்பசன மாம்பித்த மேறிடுங்காண்—செப்புகின்ற
வாயுலூ றுஞ்சலமு மாதுவர்ப்பா மாதரசே
யோயுங் குடல்வாத மோர்.

## உமரிச் சாரம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் வாத குடல் விருத்தி, குத்தல், வாத குன்மம். வாத மூத்திரச் கிரிச்சுரம் ஆகியவை விலகும்.

குடல்வாதஞ் சூலை கொடுங்குன்ம மோடும்
விடலரு நீர்க்கட்டும் விலகு—மடவார்
கமல வதனக் கனங்குழலே நாளு
முமரிச் சாரத்தை யுரை.

## உருத்திராட்சம்

இது ஒரு வகை மரத்தின் வித்து. இதனால் அதிக தாகம், முக்குற்றம், விக்கல், பித்தகோபம் போன்றவை நீங்கும்.

நீளுமதி தாகத்தை நீங்காமுத் தோடத்தை
யாளும் விக்கல் பித்தத்தை யகற்றுங்கா—ணாளு
மிருத்திரா மற்பகத்தை விட்டுமே நல்ல
வுருத்திராக் கத்தன்வலி யுன்.

## உள்ளான்

இது ஒரு வகை பறவை. இதன் கறி பத்தியத்திற்கு நல்லது. இதனால் வாதபித்தம், பிரமேகம், அசீரணம் இவை நீங்கும். நற்பசியைத் தரும்.

உத்தமமாம் பத்தியத்திற் கொவ்வுமுள் ளான்கறிதான்
சத்தியங்காற் பித்தத்தைச் சாந்திசெய்யு—முத்த
நகையீர் மேகம்போக்கு நற்பசி யுண்டாக்குந்
தகைமந்தந் தீர்க்குமிது தான்.

## உளுந்து

இது ஒரு காய்த் தானிய வகை. நல்ல உளுந்திற்கு கபவாதம், இடுப்புறுதி, மிகுவீரியம் இவை உண்டாகும், பயித்தியமும் எலும்புருக்கியும் போகும்.

செய்ய வுழுந் திற்குச் சிலேத்ம வனிலம்பிறக்கும்
வெய்யபித்தம் போமந்தம் வீறுங்காண்—மெய்யதனி
லென்புருக்கி தீரு மிடுக்க திபலமா
முன்பு விருத்தியுண்டா முன்.

## உளுவை

இது ஒரு வகை மீன். இதன் கறி முள் இல்லாதது, இதனால் உடலிலுள்ள பல நோய்களும் பழைய மலமும் நீங்கும்.

முழுதும் புசிக்கலா முள்ளுமில்லை யந்த
வுழுவைக் குடர்பிணி விட்டோடும்—வழுவான
முன்மலமுஞ் சாறு முதிர்க்கரப்பா னுண்டாகும்
வன்முலையாய் நீயறிந்து வை,

## ஊசி மல்லிகை

இது ஒரு கொடி வகை. காட்டிலுள்ள ஊசிமல்லிகைக்கு கண மாந்தம், வயிற்றுப்பிசம், குழந்தைகளுக்குண்டாகும் இரத்தத் தொடர்பான பிணிகள், சுரம், சோகை இவை நீங்கும்.

மாந்த குணம்பொருமல் வாராது மைந்தர்களுக்
கூர்ந்தே யிரத்தகண மோடுங்காண்—கூந்தன்முடி
மானே சுரந்தணியும் வாங்காத வீக்கம்போங்
கானூசி மல்லிகைக்குக் காண்.

## ஊமத்தை

இது ஒரு செடி வகை. இது பலவகைப்படும். வெள்ளூமத்தை கருவூமத்தை, அடுக்கூமத்தை, பேயூமத்தை, மருளூமத்தை, பொன்னூமத்தை,

பொதுவாக, ஊமத்தையினால் நாய்க்கடி, புண், குழிவிரணம், கட்டிகள், நஞ்சு, முக்குற்றம் இவை விலகும்,

நாய்க்கடியால் வந்து நலிசெய்யு விரணமும்போம்
வாய்க்குழிப்புண் கட்டிகளு மாறுங்கண்—தீக்குணத்தைச்
சேமத்தில் வைத்தவிடந் தீருமுத் தோடமறும்
ஊமத்தையின் குணத்தை யுள்.

**கருவூமத்தை:-** கருவூமத்தை சுக்கிலத்தையும் பாதரசத்தையும் கட்டும். உடலுக்கு அழகையுண்டாக்கும். பெருவியாதி வியர்வை, தினவு, பயித்தியம், சுரம் இவற்றை நீக்கும்.

வந்துவிர தங்கள்கட்டு மேனிதருங் குட்டமொடு
வந்தவி யர்ப்பரிப்பை மாற்றுங்காண் —முந்தப்
பெருமத்தஞ் செய்சுரத்தைப் போக்குங் கயப்பாங்
கருவூ மத்தைமூலி காண்.

**பொன்னூமத்தை:-** பொன்னூமத்தையினால் விரணக்கிரந்தி, நாட்சென்ற கிராணி, அதிசாரம், பித்த விஷ சுரங்கள், பேதி, இவை நீங்கும்

பொன்னூமத்தை முண்டாகிற் பூவையரே புண்கிரந்தி
தொன்மைக் கிராணி வருகரும்—வன்பேதி
சுத்த சுரத்துடனே போர விடச்சுரமுஞ்
சத்தவதி சாரமும்போஞ் சொல்.

**மருளூமத்தை.**- மருளூமத்தைக் குளிர்ச்சுரம், உடலில் நீர்க் கோவை, அக்கினி மந்தம், வாதம் இவற்றை விலக்கும்.

சீதசுரம் நீரேற்றஞ் சிலவிடங்கள் மந்தத்தோ
டுதையிவை யெல்லா மொழியுங்காண்—போத
இருளூருங் கூந்த லெழின்மாதே கான
மருளூமத் தைக்கறிந்து வை.

**ஊமத்தங்காய்:**-ஊமத்தங்காய்க்கு வாத நோய், கரப்பான், கிரந்தி, சொறி இவை நீங்கும். பித்த மயக்கம் உண்டாகும்.

வாதமறும் பித்த மயக்கமுறு மாநிலத்திற்
றீது கரப்பன் சிரங்ககலும்—கோதாய்கேள்
மாமத்த மாகும் வறட்சியெல் லாம்போகு
மூமத்தங் காய்க்கென் றுரை.

**ஊமத்தம்விதை:**- ஊமத்தம் விதையினால் சுரம், தாவர, சங்கம், விஷம், சன்னிபாததோடம், அதிசாரம் ஆகியவை போகும்

சுரம்போம் விஷம்போந் தொலையாத சன்னி
யுரம்போ மதிசார மோடு—நிரம்பவே
மாமத்த முண்டாம் வளரிளங்கொங் கைத்திருவே
யூமத்தை யின்விதையை யுண்.

## ஊர்க் குருவி

இது ஒரு பறவை. இதன் கறியால், வாத பித்தம். கபம், சுரவெட்டை, கருமைநிறம் இவை நீங்கும். இடைவிடாத கோபம், வாலிபத்தன்மை, பொன்னிறம், உடல் வலிமை இவை உண்டாகும்.

மருவிய திரிதோடம்போ மறப்புறாப் புணர்ச்சியுண்டாம்
பெருகிய சுரமேகம்போம் புறந்திடு மிளமைமெய்யிற்
கருகிய வன்னநீக்கிக் கனகம்போ லொறிவுசேரு
முருவமுந் திரமாநாளு மூர்க்குருவி யின்றசைக்கே.

## எட்டி

இது ஒரு மரவகை. விஷமுட்டி என்னும் எட்டி மரம் ஆல விஷம் போன்றது இதன் வேரால் கொடிய பாம்பு விஷங்களும் பயித்திய குணங்களும் நீங்கும்,

ஆலவிஷ மொக்கு மருந்தக் கடிதீரு
ஞால'மதிற் பித்தகுண நாசமா—மாலைக்கோ
லட்டிய பாகுமொழியே யானவிஷ முட்டியெலு
மெட்டி மரவே ரிது.

**எட்டி விதை:-** எட்டிக் கொட்டையால் கருமேகம், சன்னி **விஷக்கடி**, குட்டம், வாதவலி, தாதுநட்டம், பிடகம், கரப்பான், மூர்ச்சை, பயித்தியம் இவை நீங்கும்,

கைக்கறுப்பு சன்னி கடிவிஷங் குட்டவலி
யெய்க்கவரு தாதுநட்ட மென்பவைபோ-மைக்கண்ணாய்
கட்டி கரப்பான் கனமயக்கு பித்தமுமி
லெட்டிமரக் கொட்டையினால்

## எருக்கு

இது ஒரு செடி வகை. இதன் இலையினால் எலிவிஷம், பெருவியாதி, சிலேத்துமநோய், கிருமி நோய், ஐவகை வலி கீல் வீக்கம், தனியாத கோபம், பாம்பு நச்சு,அக்கினிமாந்தம், மலக்கட்டு இவை நீங்கும்

எலிவிஷங் குட்டமைய மேறு கிருமி
எலிசூலை வாயு விஷமந்தம்—மலபந்த
மெல்லா மகலு மெருக்கிலையைக் கண்டாக்கால்
வில்லாரு நன்னுதலே விள்.

**எருக்கம்பால்:-** எருக்கம் பால் வாத கட்டிகளைக் கரைக்கும். வாதநோய், சன்னிபாதம், ஐவகைவலி இவைகளைப் போக்கும். பற்பல சரக்குகளைச் சிந்தூரஞ் செய்ய முடிப்பிக்கும்.

எருக்கம்பாற் கட்டிகளை யேகரைக்கும் வாய்வைத்
திறக்கறவே கொன்றுவிடுந் தீராச்—செருக்கான
சன்னிவலி தீர்க்குமே சார்ந்தபல சிந்தூர
முன்ன முடிக்குமென் றோர்.

## எருமை

**எருக்கம்பட்டை :** எருக்கம் பட்டை சன்னிபாதம், வாதம், பலவிஷம் இவை போக்கும்,

மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சன்னிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் பாறுமே—மாவெருக்கம்
சடைசன்னிவாதம் பலவிஷம் போக்குங் கருவேற்
பட்டைநா நோய்தீர்க்கும் பார்.

**எருமைச் சாணம்:-** எருமைச் சாணத்தால் வயிற்று பொருமல், இரத்த வாந்தி, காமாலை, பெரும்பாடு, புண் இவை நீங்கும்,

வயிற்றுப் பிரமிரத்த வாந்திகா மாலை
நியமித் தபெரும்பாடுபுண் ணீங்கும்—வியத்த
கருமைச்சா ரங்க விழிக்காரிகையே நாளும்
யெருமைச்சா ணத்தி னியல்பு.

**எருமைத்தயிர் :-** இதனால் எரிச்சலும், பித்தநோயும் போகும். கபம் பற்றிய கரப்பான், வாதரோகம், புத்திமந்தம், கண்ணுக்கு குளிர்ச்சி இவை உண்டாகும்.

எருமைத் தயிரும் கெவுரிபித் தம்போம்
வருமைக் கரப்பனொடு வாதம்—பெருமிதஞ்சேர்
தூல வுடலுமாந் தூயறிவு மந்தமுறுங்
கோலவிழி குளிருங் கூறு

**எருமை நெய்:-** இதனால் அறிவு, அழகு, கண்ணொளி இவை மத்திபமாம், வாத பித்தம், கரப்பான் இவையுண்டாகும்.

புத்திகெடு மெய்யழகு போதக் கெடுநயனம்
மெத்தவொளி மாறிவிடு மேதினியிற் – சத்தியமா
முறுவாத மொடுபித்த மாறாக் கரப்பானாங்
கோதெருமை நெய்யருந்திற் கூறு.

**எருமைப்பால்:-** திமிர் வாயுவைத் தருவிக்கும், தெளிந்த அறிவுக் கூர்மையையும், நல்ல மருந்தின் குணத்தையும் கெடுக்கும்.

வாதத் திமிரை வரவழைக்கும் புத்தியினற்
போதத் தெளிவைநனி போக்குங்காண்—கோதற்றே
யங்கத் துருமருந்தை யன்றே முறித்துவிடும்
பங்கத் துறுமேதிப் பால்.

**எருமை வெண்ணெய் :-** இதனால் பித்த மூத்திர கிரிச்சரம் நீங்கும். அக்கினி மாந்தம், வாதரோகம் இவை உண்டாகும்.

எருமைவெண் ணெய்க்கில் லெரிநீ ரிழிவு
பருவமயி லேகேளிப் பாரிற்—கிருமியுறும்
மந்தமாம் வாதமிகு மாரக்க பங்கரப்பான்
றெந்தமா நோயருடஞ் சொல்.

## எலியால்

இது ஒரு செடி வகை. இதுவே காட்டாமணக்கு. இதன் இலையால் கட்டி, விரணம், கரப்பான், பீலிகம், குன்மக்கட்டி, தலைநோய், பெருவிரணம், கிரந்தி, உள்மூலம் போன்ற பல நோய் களும் தீரும்.

*கட்டி விரணங் கரப்பான் பிலீகமதி*
*கொட்டியுறு குன்மங் கிளைத்தசிரங்—கொட்டுமோ*
*கூட்டோ டொழியுங் குவடனைய கொங்கைமின்னே*
*காட்டா மணக்கிலையைக் கண்டு*

*காட்டா மணக்காற் கபவாத சூலையுடன்*
*வீட்டு தலைநோய் விரிகிரந்தி—வாட்டுகின்ற*
*உண்மூலம் போகு முடம்புதலால் வெட்டையறும்*
*திண்மூல தாதுவுமாஞ் செப்பு*

**காட்டாமணக்குப்பால் :-** காட்டாமணக்கம் பாலால் மேக வெள்ளை, வயிற்று வலி, மேல் விரணம், தோலில்கட்டி போன்ற நோய்கள் விலகும்.

*விழுமேக வெள்ளைகுன்ம மேல்விர ணந்தோலி*
*விழுமேருக் கட்டியிவை யெல்லாந்—தொழுதோடுங்*
*கூட்டா மணக்குழம்பைக் கொண்டவனக் கொங்கை மின்னே*
*காட்டா மணக்கம்பாக் கண்டு.*

## எலுமிச்சம்

இது ஒரு மரவகை. இதன் காயும் பழமும் சிறந்த மருந்துப் பொருளாக எண்ணப்படுகிறது. அன்றாட உணவிலும் எளிதாகச் சேர்க்கப் படுகின்றது.

எலுமிச்சங்காயினால் வாதம், பித்தம், கபம் என்னும் முக்குற்ற நோய்களும், குன்மம். இடுமருந்து, பித்த வெப்பம் இவைகளும் நீங்கும்.

*தீதிலெலு மிச்சங்கால் சேர்முத்தோ டத்தையமுள்*
*வாதகபஞ் சூலையையு மாகொடிய—சாதியெனுஞ்*
*சர்த்திகுன் மத்தையுமுட் டங்கமருந் திட்டத்தையும்*
*பித்தவெப்பை யுந்தணிக்கும் பேசு.*

எலுமிச்சம் பழத்தால் தாகம், நகச்சுற்று, யானைக்கால், பித்தம், கண்ணோய், காதுவலி, வாந்தி இவை நீங்கும்.

தாகம் நகநோய் தாழாச் சிலிபதநோய்
வேகங்க ளுண்மாதம் வீறுபித்தம்—மாகண்ணோய்
கன்னநோய் வாந்தியும்போங் கட்டுவாதித் தொழிலின்
மன்னெலுமிச் சங்கனியை வாழ்த்து.

கண் மருத்துவத்தில் மிகுதியாகப் பயன்படுத்தப்படும் மருந்துப் பொருட்களில் இதுவும் ஒன்றாகும்.

## எவச்சாரம்

இது ஒரு உப்பு வகை. இதனால் விரணம், பிரமேகம், புண், கிராணி, அட்டகுன்மம், சூலை, வாத நோய், உதிரநோய், நீரடைப்பு, பீலிகம் போன்ற பல நோய்களும் நீங்கும்.

குய்யங் களநா கொடிறுவா யிவ்விடநோ
யைய்ய மிரைப்பிரும லாசனப்புண்—பைய்யவுறு
கீடவிடஞ் சோபை கிராணியையும் பம்பரம்போ
லாடவிடு மெய்யவசா ரம்.

அட்டகுன்மஞ் சூலை யதிதூல முட்டிணத்தா
லொட்டிவரு வாதமுதரநோய்—துட்டமந்த
நீடுகப நீரடைப்பு நீங்காப்பி லீகமிவை
யோடுமவா சாரத்தா லுண்.

## எள்

இது ஒரு காயின் தானிய வகை. மிகவும் வெப்பம் தருவது, கண்ணுக்கு ஒளி தரும். பலம், கபம், காசம், பித்தம் இவைகளை வருவிக்கும்.

எள்ளுமருந் தைக்கொடுக்கு மேறனலாந் திண்மைதரு
முள்ளிலையைச் சேர்க்கு முதிரத்தைத்-தள்ளுமிரு
கண்ணுக் கொளிகொடுக்குங் காசமுண்டாம் பித்தமுமாம்
பண்ணுக் கிடர்புரியும் பார்.

காட்டெள்ளு, சிற்றெள்ளு, பேரெள்ளு, வெள்ளெள்ளு எனப் பலவகைப்படும். எள்ளின் நெய்யே எண்ணெய் எனப்படும்.

எள்ளின் நெய்யால் அறிவுத் தெளிவு, விழிக்குக் குளிர்ச்சி, மனமகிழ்ச்சி, தெளிவு, வாலிபத் தன்மை இவை உண்டாம் கண்ணோய், தலை வெப்பம், விரணம் இவைகள் நீங்கும்.

புத்தி நயனக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புகளஞ்
சத்துவங் காந்தி தனியிளமை—மெத்தவுண்டாம்
கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்
புண்ணோய்போ மெண்ணெய்யாற் போற்று.

எண்ணெய்யிற் குணமே தென்னில்
இளமையு மொளிவுண் டாகும்
கண்ணினில் விழியும் நோயும்
காசமுங் கனிவு மற்றும்
புண்ணினிற் நோவு போக்கும்
புணிற்றடற் பொறிவு மாறும்
திண்ணிய கயமுங் காந்துஞ்
சிரசினில் ரத்தம் போமே.

## எ.ஃ.கு

இது ஒரு உலோக வகை. இதனால் கண்ணோய், பல்நோய், வீக்கம், உடல்வெளுப்பு, சயரோகம் போன்ற நோய்கள் நீங்கும்

தந்தமந்த மூலவுரு தாதுநட்டஞ் சோபை கண்ணோய்
வந்தமந்தம் பாண்டுவினை வன்மைகுன்றன்—இந்த
பெருக்கிடையாய் நீட்டுகப பேத மிவைகட்
குருக்கிடையா தோட்டு முரை.

## ஏலம்

இது ஒரு மரவகை. இது, பெரிய ஏலம், சிறுஏலம், மலைஏலம், காட்டு ஏலம் எனப் பல வகைப்படும்.

பெரிய ஏலம் வெப்ப பேதி, இருமல், கோழை இவற்றை நீக்கும், சிறுஏலம் தலைவலி, வியர்வை, தாகம், மிகுசுரம் இவற்றை நீக்கும். மலை ஏலம் நீர் கடுப்பு, நாவறட்சி, அரோசிகம் நீக்கும். காட்டுஏலம் தீவிர வாந்தி, அதிசாரம், பித்தம் இவற்றை நீக்கும்.

ஏலரிசி மலையாள நாட்டிலிருந்து அதிகமாகப் பெறப்படு கிறது. இது சூடும் மணமும் உள்ள பொருளாகும்.

## ஐந்தெண்ணெய்

ஆமணக்கு, எள், வேம்பு, புன்னை, புங்கு இவை ஐந்தின் நெய் களை கலந்து தைலமாகச் செய்து பயன்படுத்தப் ஒற்ற பின்னிசுவு, வாதம், சன்னிபாதசுரம், கபம் இவை நீங்கும்.

அஞ்செண்ணெய்க் காணிலா வித்த பின்னிசிவுந்
தஞ்சுமென வாய்வுந் தணியுங்காண்-பஞ்சாய்ப்
பறக்குமே சன்னிசுரம் பாரிலையைச் சேட்டை
யிலக்குமே நன்றா யியம்பு.

## ஓதி

இது ஒரு மரவகை. இதன் வேரினால் விரணம், புரை, கிராணி இரத்த பேதி, கடுப்பு, தாகம், மூர்ச்சை போன்ற நோய்கள் நீங்கும்

புண்புரை கிராணிரத்தப் போக்கதி சாரக்கடுப்புந்
தின்பெறு தாகஞ்சோபஞ் சீதளமும்-நண்பி
லதிவிரைவாய்த் தாண்டு மணங்கே பருத்த
ஓதிமரத்தின் றூரினா லோர்.

## ஓரிதிழ்த் தாமரை

இது ஒரு செடி வகை. இதனால் மேகநோய், சீதம் இவை நீங்கும். சுக்கிலத்தையும், உடல் அழகையும் கொடுக்கும்.

தாதுவையுண் டாக்குந் தனிமேகத்தை தொலைக்கு
மாதரவர் மேனிக் கழகுதருஞ்--சீதம்போஞ்
சீரிதழ்த் தாமரைவாழ் செய்ய மடவனமே
ஓரிதழ்த் தாமரையை யுண்.

## ஓரிலைத் தாமரை

இது ஒரு செடிவகை. இதனால் வாதமேகம் போன்றவை விலகும். தாய்ப்பால் சுரக்கும்.

ஓரிலைத் தாமரையு ளுற்றகுணத் தைக்கேளாய்
மார்பிற்பா லில்லாத மங்கையர்க்கு—மோரிற்
குடிக்கப்பா லுண்டாகுங் கோரவன் மேகம்
படிக்கு ளிருக்குமோ பார்.

## கக்கரிக்காய்

இது ஒரு கொடியின் காய் வகை. சிறு வெள்ளரிக்காய், முள்ளெரிக்காய் எனவும் பெயர் பெறும். இதனால், பித்தம், மூலச்சூடு, இரத்தபித்தம் போன்றவை நீங்கும். குளிர்ச்சி உண்டாக்கும்,

கக்கரிக்காய் பித்தங் கடியுங் கபமுயர்ந்து
மெய்க்குக் குளிர்ச்சிதரு மெல்லியலே-முக்குகின்ற
மூல வழறணிக்கு மூடிரத்த பித்தத்தை
சால வகற்றிவிடுஞ் சாற்று.

## கஞ்சா

இது ஒரு செடி வகை, கடைச் சரக்காகக் கிடைக்கும். பூக் கஞ்சா, சடைக் கஞ்சா என இரு வகைப்படும், இதனால் மூல வாய்வு, கிராணி, கபம், கரப்பான் இவை நீங்கும். மிகு மயக்க மும், தீபனமும் உண்டாகும்.

மூலக் கிராணியறு முன்புள்ள பேதிகட்டுஞ்
காலமயக் கும்பசியுஞ் சாருங்காண்-தூலஞ்செய்
வாத மொடுவன் கரப்பான் தொலையுங்
கோதறு கஞ்சாச் சடைக்கு.

## கஞ்சாங் கோரை

இது ஒரு செடி வகை. காட்டுக் கஞ்சாங் கோரை, சிறு கஞ் சாங் கோரை என இரு வகைப்படும். இதனால் மாந்தபேதி, கணச்சூடு, தினவு, பிரமேகம், காசம் இவை நீங்கும்.

மாந்தக் கழிச்சலரும் மாந்தஞ் சுரங்கணம்போஞ்
சேர்ந்த மூலத்தின் றினவடங்கும்-பூந்தடக்கை
யன்னமே மேகமறுங் கஞ்சாங் கோரையினை
யுன்ன இருமலிலை யோர்.

## கடப்பம் விதை

இது ஒரு மரத்தின் வித்து வகை. இதனால் விஷக்கடி, மண்டைநீர், வாதம், மாந்தம் போன்ற நோய்களும் தீரும்.

கடப்பம் விதைக்குக் கடிவிஷமு முண்டோ
தொடுப்பு மண்டைநீருத் தொலையு-மிடக்கான
வாத வகையொழிவு மாந்தங்க லேகிவிடுங்
சீதமொழி மாதே கேள்.

## கடல்நுரை, காவிக்கல்

இது கடலிலிருந்து பெறப் படுவது. கடைச் சரக்காகக் கிடைக்கும். இதனால் கண்ணோய், புண், சயம். குடைச்சல் இவை விலகும்.

இவ்வாறே காவிக் கல்லும் கண்ணோய், நீர் போன்றவற்றை நீக்கும்.

அடலுறுநற் காவிக்க லட்சுநோய் மேகம்
வெடியக்கி வாந்திபித்தம் வீட்டுங் - கடனுரையே
நேத்திர நோய்விரண நீடுகபங் குன்மமிவை
தீர்த்திடுங்காண் டப்பாது செப்பு

## கடுக்காய்

இது ஒரு கடைச் சரக்கு. இது தாயைக் காட்டிலும் சிறந்த தென்பர். உடற் பிணிகளை நீக்கி உடலை வளம் பெறச் செய்வ தாலேயே இதற்கு இச் சிறப்பு கூறப்படுகின்றது.

கடுக்காயுந் தாயுங் கருதிலொன் றென்றாலும்
கடுக்காய்த் தாய்க்கதிகங் காணீ-கடுக்காய்நோ
யோட்டி யுடற்றேற்று முன்றவன்னை யோசுவைக
ளூட்டியுடற் றேற்று முவந்து

பொதுவாக, கடுக்காயினால் கன்னம், நா, கண் இவற்றி லுண்டாகும் நோய்களும், புண், விஷக்கடி இவைகளும் நீங்கும்.

தாடைக் கழுத்தக்கி தாறி குறியிவிடப்
பீடை சிலிபமுதற் பேதிமுட-மாடையெட்டாத்
தூலமிடி புண்வாத சோணி காமாலையிரண்
டால மிடிபோம் வரிக்கா யால்

(வரிக்காய்-கடுக்காய்)

கடுக்காய்ப் பிஞ்சை ஆமணக்கு நெய்யில் தோய்த் தெடுத்துத் தீயில் வறுத்துத் தூள்செய்து உண்ண மலச்சிக்கல், சீதம் இவை நீங்கும்.

வனதுர்க்கிச் சேய்க்கு மணித்தைலம் பூசி
அனலிற் பொரித்தாங் கருந்தத்-தினமுமலச்
சுக்கிலக்க டுப்பநின்ற சீதமறுங் காற்றுகைத்த
முக்கலக்க டுப்பிருக்கு மோ.

(வனதுர்க்கி-கடுக்காய் மரம்)

கடுக்காய் ஏழு வகைப்படும். அவை விசயன், அரோகிணி, பிரிதிவி, அமிர்தை, சிவந்தி, திரவிருத்தி, அபயன் என்பன வாம்.

ஆதிவிசயன் ரோகணி யோடே பிருதிவி
தீதி லமிர்த சிவந்திமலை-மீதார்
திரிவிருத் தியபயன் செப்பிலிவை
மரிதகியின் பேர தறி

(அரிதகி-கடுக்காய்)

**விசயன்:-** விசயன் கடுக்காய் வாத ரோகத்தைப் போக்கும். பேய்ச் சுரைக்காய் குறியுள்ளது. அவந்தி போன்ற விடங்களில் உற்பத்தியாவது.

விசயனெ னுங்கடுக்காய் வீரியத்தைச் சொல்வோம்
நிசமதுதான் வாதத்தை நீக்கு-மிசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய் போலிருக்கும் பேரவந்தி யாதேசம்
வாய்ச்சிருக்கு மக்காயை வாழ்த்து.

**அரோகிணி:-** அரோகிணிக்கடுக்காய் சன்னி பாதம், சீதம் இவற்றை நீக்கும். 4 வரை போல் குறியுள்ளது. கன்னியாகுமரி போன்ற விடங்களில் கிடைப்பது.

ஓது மரோகிணிக்கா யொன்றுண்டா னாற்சன்னி
பாதமொடு சீதம் பறக்குங்காண்-மீதுகுறி
நான்கு வரியாய்த் தோற்று நங்கா யதன்றேச
மாங்குகன்னி யாகுமரி யாம்.

**பிருதிவி:-** பிருதிவிக் கடுக்காய் பித்த நோயை நீக்கும். சவுராட்டிரம் போன்ற இடங்களில் கிடைப்பது.

தோற்றும் பிருதிவிதான் றோலாப் பயித்தியத்தை
மாற்றும் வயதை வளர்க்குமதன்-மேற்றோலோ
மெல்லியதா மக்கால் விளைழுத மேதென்னில்
வல்லசவு ராட்டிகமாய் வாழ்த்து.

**அமிர்தம்:-** அமிர்தக் கடுக்காய் கபத்தை ஒழிக்கும். விம்மி தசை மிகுந்து காணும். காசி போன்ற இடங்களில் கிடைப்பது.

அமிர்த மெனுங்கடுக்கா யம்புவியி லுள்ள
திமிர்த சிலேட்டுமத்தை தீர்க்கும்-வமிதச்
சதைப்பற்றுண் டாயிருக்குஞ் சாற்றிலதன் றேசங்
கதிக்கொத்த காசி யென்பார் காண்

**சிவந்தி:-** சிவந்திக் கடுக்காய் வாத மூல நோய்களை விலக்கும் மிகு சிவப்பும், தங்க நிறமும் கொண்டது. காடுகளில் உற்பத்தியாவது.

சிவந்தியெனுங் கடுக்காய் செய்குணத்தைக் கேட்பாய்
விவர்ந்தமூ லத்தையெலா மேய்க்குஞ்-சிவந்ததிகப்
பொன்னிறம தாயிருக்கும் பூங்குழலே யக் கடுக்காய்
துன்னுவனந் தோறுமுண்டாஞ் சொல்.

**திரிவிருத்தி**:- திரிவிருத்திக் கடுக்காய் எல்லா விரணங்களையும் போக்கும். ஐவண்ணங்களையும் மூன்று வரிகளையும் உடையது. மலைகளில் உற்பத்தியாவது.

திரிவிருத் திக்கடுக்காய் தேகக்தி னாளும்
வருவிரணம் போக்குமதன் வண்ண-மொருவிதமோ
பஞ்சவண்ண மூவரம்பு பற்றி யிருக்குமது
விஞ்சுமலை தோறுமுண்டாம் விள்

**அபயன்**:- அபயன் கடுக்காய் எலும்பு பற்றிய நோய்களை நீக்கும். கருமை நிறமுடையது. பொதிய மலையில் உற்பத்தி யாவது.

அபயனெ னுங்கடுக்காய் யங்கநோ யெல்லா
மபயமிட் டோட வடிக்கு-மபயங்
கதிக நிறங்கறுப்ப தாகும் விளைபூமி
பொதிய மலையாம் புகல்

**சங்கரசாதி**:- சங்கரசாதிக் கடுக்காய் நான்கு வகையாம் அவை, கருங்கடுக்காய், செங்கடுக்காய், வரிக்கடுக்காய், பால் கடுக்காய் என்பன.

**கருங்கடுக்காய்**:- கருங்கடுக்காய் பழைய மலக்கட்டையும், முக் குற்ற நோய்களையும் போக்கும். அழகையும் அறிவையும் தரும்.

பழமலத்தைப் போக்கும் பகரி லுடலுக்
கழகுதரும் புத்தி யளிக்கும்—பழைய
மருங்கடுத்த வாதபித்த வன்கபத்தைத் தீர்க்குங்
கருங்கடுக்கா யென்றுளத்திற் காண்.

**செங்கடுக்காய்**:- செங்கடுக்காய் உடலில் பொன்னிறமளிக்கும். கோழை, இருமல், மலக்கட்டை விலக்கும்.

சுத்தியொடு புத்தி சுகமும் புகழுமுண்டா
மெத்த வொளிர் பொன்னிறமா மேனியெல்லாஞ்· சுத்தகப
வங்கடுத்த வீளைபல வன்காச மும்மலமுஞ்
செங்கடுக்காய்க் கில்லையெனத் தேர்

**வரிக்கடுக்காய்**:- வரிக்கடுக்காய் தாதுவளம், உடல் வளர்ச்சி தரும். வாத பித்தத்தைப் போக்கும்.

மிடுக்காக்குந் தேகத்தை விந்துவை யுண்டாக்குஞ்
சடக்கெனவே யுண்டியையுட் சாடுந்—துடுக்கான
வாதபித்த வையகற்றும் வன்னியொடு நவ்விதருஞ்
சாதிவரிக் கடுக்காய் தான்.

**பால்கடுக்காய்:-** பால் சுடுக்காயால் சீதகிராணி நீங்கும். வனப்பும் வன்மையும் உண்டாகும்.

ஆமங் கெடுங்கா ணழகும் பொலிவுமிகுஞ்
சேமம் யெருமலமுஞ் சேருமே—தாமனெடும்
வேர்க்கடைக்கண் கும்பமுலை மெல்லியலே யெப்போதும்
பாற்கடுக்கா யுண்பவரைப் பார்.

## கடுகு

இது ஒரு செடி வகை. இது சிறு கடுகு, நாய்க்கடுகு, செங் கடுகு, வெண்கடுகு என நான்கு வகைப்படும்.

**செங்கடுகு:-** செங்கடுகினால் தலையிடி, இருமல், பீனிசம் கோழை, பித்தம், விஷக்கடி, குடைச்சல், வயிற்றுவலி போன்ற பல நோய்களும் நீங்கும்.

இடிகாச நாசிச்சு ரீளைகபம் பித்தங்
கடிவாத சிதங் கடும்போ—டுடலீற்
பங்கோட்டு நோயென்னும் பங்கி வளைச்செங்
கடுகோட்டு மேன்மருந்து காண்.

பந்தமயக் கம்வாதம் வாய்நீர்ச் சுழற்றலது
முந்துற சுப்பிரச வங்களுண்டா—மிந்துநுதன்
மானே கிராணிக்கு மாறுமுத் தோடமறுந்
தானே கடுகிற்கு தான்.

**வெண்கடுகு:-** வெண்கடுகு விஷக்கடி, வண்டுகடி, வாதம் இவைகளை நீக்கும்.

பால்கிரகம் பூத பைசாச மோட்டிடு
மால விஷங்கடிக ளாற்றுங்காண்—கோலமிகு
வள்ளைச் செவிமாதே மாபங்க நோய்விலக்கும்
வெள்ளைக் கடுகின் விதி.

**சிறுகடுகு:-** சிறுகடுகு விஷம், சிலேத்துமம், வயிற்று விம்மல், உடல் விரணம் இவற்றை நீக்கும்.

தோலிரத நெய்யூன்மே தோதாறு வின்வளிக்கு
மேலிரணப் பூச்சு விடங்கபநோய்—காலிங்
கெறிய விருமலும்போ மேந்தெழிலார் மாதே
சிறியகடுகின் குணத்தைத் தேர்

**நாய்க்கடுகு**:- நாய்க்கடுகினால் வாதக்கடுப்பு,குன்மம் போன்ற நோய்கள் விலகும்.

சூதக வாயுவொடு சோணிதத்தின் வாதமும்போம்
வாதவலி குன்ம மடியுங்காண்—மாதுநல்லாய்
பேய்கட் புகைபோடப் பேசா தொழிந்துவிடு
நாய்க்கடுகை நீவிரும்பி னால்

## கடுகுரோகணி

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் மாந்தம், சுரம், ஐயம், வாயு, கரப்பான், மலக்கட்டு, விரணம்,வயிற்றுவலி இவை நீங்கும்.

மாந்தஞ் சுரமையம் வாயுகரப் பானாமச்
சேர்ந்த மலக்கட்டு திரிதோடம்—பேர்ந்தபொட்சிப்
புண்வயிறு நோயிவைபோம் பொற்கொடியே
பேதியுண்டாந்
திண்கடுகு ரோகணிக்குத் தேர்.

## கண்டங்கத்திரி

இது ஒரு செடி வகை. இதனால் காசம், சயம், அக்கினி மாந்தம்,சீதச் சுரம்,சன்னிபாதம் போன்ற பல நோய்களும் தீரும்.

காசஞ் சுவாசங் கதித்தசய மந்தமனல்
வீசுஞ் சுரஞ்சன்னி விளைதோச—மாசுறுங்கர
வித்தரையு ணிற்கா வெரிகாரஞ் சேர்கண்டங்
கத்தரியுண் டாமாகிற் காண்

வேரிலைபூ காய்பழமவ் வித்துமேற் பட்டையுமிவ்
வூரிலி ருக்க வுடற்கைப்பும்—நீராய்
வரும்பீ னசகயஞ்சு வாசமுந் தங்காவே
யருங்கண்டங் கத்திரியுள் ஆய்

ஐயமறுந் தீபனமா மாமலக் கட்டும்
பையவெளி யாகிவிடும் பார்மீதிற்—செய்யமலர்த்
தொத்திரிக்கும் வார்குழலே தூமணலா ருங்கண்டங்
கத்திரிக் காயைப்புசிக்குங் கால்.

## கண்டில் வெண்ணெய்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் தொண்டையின் நீர்க்கட்டு நீர்க்கடுப்பு இவை நீங்கும். இது மலையாள நாட்டிலிருந்து கிடைப்பதாகக் கூறப்படுகிறது

கண்டில்வெண்ணெய் மாதேகேள் காந்திப் பிரதாபமுந்

தொண்டையினுண் ணீர்க்கட்டு தூரிருமன் – மிண்டிவரு
நீர்க்கடுப்ப லக்ஷித்து ணீர்க்குத்தலும் போக்கும்
பார்க்கு ளறியப் பகர்

## கத்தரி

இது ஒரு செடி வகை, இதன் காய் பித்தத்தால் வந்த கபத்தை நீக்கும். சிரங்கையும் நமைச்சலையும் உண்டாக்கும். கத்தரிப் பிஞ்சு முக்குற்ற நோய்களையும் விலக்கும்.

பண்டு மாண்ட கிரந்தையைப் பாலிக்கு
முண்ட கைக்குந் தினவை யுண்டாக்கிடு
நண்டு கட்டுங் குரங்கென நாளுமாங்
கண்டு விண்டது கத்திரிக் காயதே.

கத்தரிக்காய் பித்தங் கனன்றகபந் தீர்த்துவிடும்
தொத்து சொறிசிரங்கைத் தூண்டிவிடு—மெத்தவுந்தான்
பிஞ்சான கத்தரிக்காய் பேசுமுத் தோடமும்போக்கு
வஞ்சார் குழலே வழுத்து

## கத்தூரி

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் தலைநோய், கபம், மூலம், சன்னி சுரங்கள் போம். மாதர்க்கு நாதவிருத்தியும், வன்மையும் உண்டாகும்.

சொல்லரும் வசியங்காந்தி சுகமுத லணிகும்பின்னு
மெல்லியார் தமக்குவாத விருத்தியாந் தலைநோயாகும்
பல்லுரு கபமுந் தீரும் பகரொணாப் பலமுமுண்டாம்
பல்லடர் சன்னிருட்ட மாறுங் கத்தூரிக் காமே.

கத்தூரி ஐந்து வகைப்படும். அவை, கரிகை, திலகை, குளுந்தை, பிண்டகை. நாயகை என்பன. கரிகை சிவப்பு நிறமும்,

திலகை எள்ளின் உருவமும், குளுந்தை கொள்ளினது வடிவமும், பிண்டகை கட்டி கட்டியாகவும், நாயகை சிறிய பெரிய உருண்டைகளாகவும் இருக்கும்.

கத்தூரியைந் தாங்கரிகை திலகை குளுந்தை
கைத்தபிண்ட நாய கைமுறையே—மொய்த்தசிவப்
பெள்ளுகொளு கட்டி சிறிதுபரு மங்களென
விள்ளு மிவைக்கேகும் வினை

## கத்தூரி மஞ்சள்

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இதனால் பெருவிரணம் கரப்பான், கிருமிநோய் இவை நீங்கும்.

புண்ணுங் கரப்பானும் போகாக் கிருமிகளும்
நண்ணுமந் தாக்கினியு நாசமாம்—வண்மலர்த்த
கொத்தே றளகமின்னே சுக்கிலகும் புத்தியுமாங்
கத்தூரி மஞ்சளுக்குக் காண்.

## கம்மாறு வெற்றிலை

இது ஒரு கொடி வகை. இதனால் நீரேற்றம், தலை பாரம், சன்னி, மந்தாக்கினி, குரல் கம்மல்,வயிற்றுவலி போன்றநோய்கள் தீரும்.

ஏட்டிலொன்றி கிட்டினீ ரேற்றஞ் சிரோபார
மாட்டி விடுசன்னி மாந்தமொடு—நாட்டிற்
பரியகுரற் கம்மல் வலிபண்டி யுப்பிசம்போ
மரியகம் மாறுவெற் றிலை.

## கரந்தை

இது ஒரு செடி வகை. இது கொட்டைக் கரந்தை, சிவ கரந்தை எனவும் கூறப்படும். கொட்டைக் கரந்தைக்கு வெள்ளை ஒழுக்கு பிரமேகம், சொறி, சிரங்கு, கரப்பான் இவை நீங்கும்.

கொட்டைக் கரந்தைதனைக் கூசாம லுண்டவர்க்கு
வெட்டை தணியுமதி மேகம்போந்—துட்டச்
சொறிசிரங்கு வன்கரப்பான் றோன்றா மலப்பை
மறிமலமுந் தானிரங்கு மால்.

சிவகரந்தையால் மந்தவாதம், கரப்பான், காசம் இவை நீங்கும்.

வாந்தி யசோகத்தை மாற்றும் பசிகொடுக்குஞ்
சாய்ந்தவிந்து வைக்கட்டுந் தப்பாலே-ஏந்தழைகைத்
தண்டா துறச்சேர்க்குஞ் சாந்த பரிமளத்தைத்
தண்டாச் சிவகரந்தை தான்.

கந்தநாறு கரந்தை யதன்குணம்
மந்தவாதங் கரப்பனை மாற்றிடும்
தொந்த ரோகந் துடைக்கு மிருபல
மந்த நோயுந் தணிக்கு நம்மாணையே

## கரிசலாங்கண்ணி

இது ஒரு கொடி வகை. இதுவே கரிசாலை, கையாந்தகரை என்றும் கூறப்படும். இதனால் குரல்கம்மல், காமாலை, குட்டம். பாண்டு, பல்நோய் போன்ற நோய்கள் தீரும்.

குரற்கம்மற் காமாலை குட்டமொடு சோபை
யுரற்பாண்டு பன்னோ யொழியு—நிறற்சொன்ன
மெய்யாந் தகரையொத்த மீளியண்ணு நற்புலத்துக்
கைய்யாந்த கரையொத்தக் கால்.

பொற்றலைக் கையாந்தகரை உடலுக்குப் பொற்சாயலையும் விழிக்குள் ஒளியையும், அறிவுத் தெளிவையும் உண்டாக்கும் குன்மக் கட்டியைப் போக்கும். இதுபல சிந்தூரஞ் செய்ய ஆம்.

பொற்றலைக்கை யாந்தகரை பொன்னிற மாக்குமுடலை
சுற்றமுறக் கட்குச் சுகங்கொடுக்குஞ்—சிற்றிடையாய்
சிந்தூரங் கட்காகுஞ் சிந்தனையுந் துலக்கு
முந்திவளர் குன்மமொழிக் கும்.

கையாந்தகரையும் பொன்னாங்காணியும் கண்ணுக் கினியான் என்ற பெயரில் அழைக்கப்படும்.

## கரிய போளம்

இது ஒரு கடைச் சரக்கு. கருப்புக் குங்கிலியம் என்றும் கூறப், படும். இதனால் வீக்கம், மார்புவலி, வயிற்றுவலி, மேகக்கட்டி போன்ற நோய்கள் நீங்கும்.

மார்புவலி வீக்கம் வயிற்றுவலி பக்கநோய்
வார்மேகக் கட்டியொடு மாவாதம்—பாருலகி
நீளங் கைகாலி நிலைகூ லியங்கறுத்த
போளந் தனைக்காணிற் போம்.

## கருஞ்சீரகம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் மண்டைக் கரப்பான், விரணம், தலைவலி, கண்ணோய் இவை நீங்கும்.

கருஞ்சீர கத்தாற் கரப்பனொடு புண்ணும்
வருஞ்சீராய்ப் பீனசமு மாறு—மருந்தினாற்
காய்ச்சல் தலைவலியுங் கண்வலியும் போமுலகில்
வாய்ச்ச மருந்தெனவே வை,

## கருஞ் செம்பை

இது ஒரு செடி வகை. இதன் இலையினால் விப்புருதிக் கட்டி, கரப்பான், பிரமேகம், பித்தம், கபம் போன்ற நோய்கள் நீங்கும்.

விப்புருதிப் புண்ணாறும் வீறுகரப் பானும்போந்
தப்பாமன் மேகந் தணியுங்காண்—வெப்பார்
கபரோக மேகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமா முலைமாதே யெண்.

இதன் பூவால் தலைக் குத்தல், சூலை, நீரேற்றம் போன்ற பல நோய்களும் நீங்கும்.

தலைக்குத் தலையஞ் சலதோடம் வாத
முலைப்பீ னசமிகுந்த வூர்க்குண்—ணிலைக்கா
தருஞ்சண் பகநாசி யாயிழையே சுத்தக்
கருஞ்செம்பைப் பூவிருக்குங் கால்.

## கருடன் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்காகும். இதுவே பேய் சீந்தில் எனப் படும். இதனால் அரையாப்புக் கட்டி, வெள்ளை, விரணம் இவை நீங்கும். இதற்குப் பாம்பும் நடுங்கு மென்பர்.

அரையாப்பு வெள்ளை யகலாக் கொறுக்கை
கரையாத கட்டியிவை காட்டினார்—வறையிற்
றிருடரெனச் சொல்லும்விஷஞ் சேர்பாம்பு மஞ்சுங்
கருடன் கிழங்கதனைக் கண்டு

## கருணைக் கிழங்கு தண்டு

இது ஒரு கீரை வகை. இது பத்தியத்திற்காகாது. இதன் தண்டால் மூலம், கபம் நீங்கும். சீரணமும் பசியும் உண்டாகும்.

சித்த குதாகுரத்தைத் துட்டகப மேதையதி
கத்தை விலக்குங் கறியமைக்கிற்—பத்தியமாஞ்
சீரணத்தை யும்மிகுந்த தீபனத்தை யுங்கொடுக்கு
சூரணத்தின் றண்டெனவே சொல்.

சூரணம் தண்டு—கருணைக் கிழங்கு தண்டு.

## கரு நெய்தல்

இது ஒரு கொடி வகை இதையே நிலோற்பலம் என்பர். இதனால் கபநோயும் விஷபாகமும் நீங்கும். பிரவிசத்த மாதர் களைத் தேற்றும்

பிரசவித்தா ரைத்தேற்றும் பேரசிர்க்கை மாற்றும்
வருசிலேத் மப்பிணியை மாட்டுந்—துருசாம்
விடராக ரோக விலக்கும் புவியிற்
றடமாக்கு நெய்தற் றான்.

## கரு நொச்சி

இது ஒரு செடி வகை. இதன் இலையினால் வாதவலி, மூக்கு நோய், கபம், மண்டைக் குடைச்சல், தலைநோய் இவைகள் நீங்கும்.

வாதக் கடுப்பகலு மாறாத பீனசம்போ
மோதப்பே யோடி யொளிக்குங்காண்—வேதைசெய்யு
மண்டைக் குடைச்சலறும் மாசில்கரு நொச்சிலுக்கும்
பண்டைத் தலைவலிபோம் பார்.

## கருமணத் தக்காளி

இது ஒரு செடி வகை. இதனால் பித்த வெப்பம், சுரசாத ரோகம், பாத தோடம் இவை போம் பாலர்களுக்கு ஆம்.

வெவ்வழலு மாறும் விரிகுறர்க்கம் மற்போடி
மொவ்வ சிசுவுக்கா முலவைவிடுஞ்—செவ்வி
யருமணிக் கச்சுமுலை யாயிழையே கேளாய்
கருமணத் தக்காளிதனைக் கண்டு.

## கரும்புச்சாறு

இது ஒரு மதுர வகை. செங்கரும்பின் சாற்றால் பித்தம் நீங்கும். இரசதாளிக் கரும்பின் சாற்றால் தாக வெப்பம் போம். புல்லக்கண்டம் என்னும் கரும்புச் சாற்றால் வாதம் நீங்கும்.

செங்கரும் பதனற்சாறு தீர்த்திடும் பித்தமெல்லாம்
அங்குறு மிரசதாளிக் ககன்றிடுந் தாகவேகம்
மங்குறாப் புல்லகண்டம் வாதகோபத்தைப் போக்கும்
கங்குல்வார் குழலினாளே காரிய மறிந்து கூரே,

## கரு வாகை

இது ஒரு மரவகை. இதனால் புண், வெப்பம், கிருமி நோய்கள் சயம் போன்றவை நீங்கும்.

விரணமோ டட்டிணமுன் வீறுகின்ற வாய்வுந்
திரண மெனுங்கிருமிச் சேர்வு — மரணமுறச்
செய்யுங் கபத்தின் செயலுங் குடிவிலகும்
வெய்ய கருவாகைக்கு விள்.

## கருவாழை

இது ஒரு மர வகை. இதனால் மூன்று தோடங்களும் நீங்கும்

நாட்டுக் கதலியது நாளுந் துவர்ப்பதனாற்
றீட்டுங் பித்தமையஞ் சேருகாண்—நீட்டுகரு
வாழை திரிதோட மாற்று மதன்கிழங்கா
லாழுஞ் சுரம்விருத்தி யாம்.

## கருவேப்பிலை

இது ஒரு மர வகை. இதனால் அருசி, வயிற்றுளைச்சல், சுரம் பித்தம், போன்ற பல நோய்களும் தீரும்.

வாயி னருசி வயிற்றுளைச்ச னீடுசுரம்
பாயுகின்ற பித்தமுமென் பண்ணுந்தான்—தூய
மறுவேறு காந்தளகை மாதே யுலகிற்
கருவேப் பிலையருந்திற் காண்.

## கருவேல்

இது ஒரு மரவகை. இதன் வேரினால் இரத்தப் கடுப்பு,அக்கினி மாந்தம், வாதம், கரப்பான் போன்ற நோய்கள் நீங்கும்.

கருவேலின் வேர்க்குக் கடுப்பிரத்தம் மாந்தம்
பருவாத மூறு கரப்பானும்—பெருகும்
பெரும்பேதி யும்போக்கும் பேச வினிக்குங்
கரும்பே யிதனைக் கருது.

**கருவேலம் பட்டை:-** கருவேலம் பட்டையினால் வேக்காடு, விரணம், சுரம், பித்த நோய் இவை விலகும். பல்லிறுகும்.

தந்த மிறுகுந் தனிச்சூதம் புண்ணாறு
மந்தசுரம் பித்தம் மடியுங்காண்—பந்த
மருவே யகல மலரளக மாதே
கருவேலம் பட்டைக்குக் காண்.

**கருவேலம்பிசின்:-** கருவேலம் பிசினால் சுக்கிலம் இறுகும். எரிச்சலுடன் விழும் சீழ்ப்பிரமேகத்தை நீக்கும். அழகையுண்டாக்கும்.

நீத்தொழுகும் விந்துவை நிலைக்கப் புரியுமெரி
பூத்தொழுகும் வெள்ளைதனைப் போக்குமிம்-மாத்திரமோ
தேசுதரு முரமுஞ் செய்யும் பெரியோராற்
பேசு கருவேலம் பிசின்.

**கருவேலங் கொழுந்து -** கருவேலங் கொழுந்தைத் தயிரிலரைத்துக் குடிக்க பாடாண வேகம் நீங்கும். முலைப்பாலிலரைத்து அடைதட்டிக் காய்ந்த சட்டியிலிட்டு வெதுப்பி ஒற்றடமிடில் கண் சிவப்பு மாறும்.

கண்டாலு வின்றளிரைக் கல்லிலரைத் துத்தயிரி
லுண்டாற்பா டாணவெப்ப மோடுங்காண்—கண்டாவி
வந்தசிவப் பேகுமதை மாதர்பா லாலரைத்து
வெந்தவடை கண்ணிலொற்ற வே.

## கல்நார்

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் பித்தகாசம், வாதம், பற்குடைச்சல், பல்லரணை, நீர்க்குறி, எரிச்சல், பித்தவாந்தி போன்ற நோய்கள் தீரும்.

காசபித்தம் வாதம் கடுப்பீறு நோயெரிவு
வீசுசர்த்தி நீரடைப்பு விந்துநட்டம்—பேசுமசை
தின்னாரைக் கூவுமந்தந் தீக்குடற்கல் தாகமிவை
கன்னாரைக் கூவவிடுங் காண்.

## கல்மதம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் கண்டத்தின் பிணிகள், கல்லடைப்பு, சதையடைப்பு, நீரடைப்பு, தாதுநட்டம், மேகம் இவை நீங்கும்.

கண்ட பிணிமேகங் கல்லோடுநீ ருடைப்பு
வண்டற் கிரிச்சுரநோய் மாபிரமி—யுண்டலினாற்
பன்மதஞ்சேர் தாது நட்டம் பன்னுமிந்த நோய்க் கூட்டத்துப்
கன்பதஞ்சே ரக்கரக்குங் காண்,

## கல்லுப்பு

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் கபம், குத்தல், அருசி, பித்தம், வாந்தி, உட்ணவாயு, எண் குன்மம், வாதநோய், நாவறட்சி, மலபந்தம் இவை நீங்கும்.

ஐயமறுஞ் சூலை யரோசிபித்தஞ் சர்த்தியொடு
வெய்யபிணி யட்டகுன்மம் விட்டேகும்—பொய்வளையே
வாதமதி தாக மலக்கட்டும் போமுலகிற்
கோதறு கல்லுப்பைக் கொடு.

## கலியாண முருக்கம்

இது ஒரு மரவகை. இதுவே முள்முருக்கம் எனப்படும். இதனால் வாந்தி, வயிற்றுவலி, பித்தசுரம், அக்கரம், அனல், வாய்வேக்காடு, ஆகியவை நீங்கும். வன்மையுண்டாகும்.

முள்ளு முருக்கதுதான் மோதுகின்ற சாத்திகுன்மங்
கள்ளமறத் தீர்க்குக் கனற்சுரமும்-விள்ளறிய
அக்கரமும் போக்கு மனல்வாய் வேக்காடகற்று
மிக்கவலி கொடுக்கும் விள்.

இதன் பூவானது கருப்பப்பையிற் கட்டிய இரத்த குன்மத்தை விலக்கும்.

கருப்பா சயத்திற் கறுத்துத் தடித்தே
பருத்தவுதி ரத்திரளைப் பஞ்சாய்த்—துரத்திவிடும்
பண்முறுக்கு மின்பமொழிப் பாவா யுலகறிய
முண்முருக்கம் பூவை மொழி,

## கலைமான் கொம்பு

இதுஒரு கடைச்சரக்கு. இதனால் கை கால்களில் அரிவு, மேகம், முக்குற்ற நோய்கள், பெருந்தாகம், கண்ணோய் இவை விலகும்.

அவயவத்தின் வெப்ப மதியத்தி மேகங்
கவிழ்திரி தோடம் பெருந்தாகங்க-ளிவைதர
னிலைக்குமோ மார்புநோய் நேத்திரநோய் நீங்கும்
கலைக்கொம்பாற் பேயுமிலைக் காண்.

## கவடி

இது ஒரு கடைச் சரக்கு இதுவே பலகறை எனப்படும். வெண் பல கறையினால் மாந்தம், கிராணி, விடம், சுரம், கண்ணோய், தொந்தம். சூலை, சயம் போன்றவை விலகும்.

மாந்தங்கிராணி மவிடாச் சுரங்கண்ணோய்
தொந்தம் வரிநாமச் சூலைகப-மிந்த
வுலகறையக் காலொடிவை யோடு கரைத்த
பலகறையைக் காணினியம் பார்.

## கவுதாரி

இது ஒரு பறவை வகை. இதன் கறியினால் பித்தம், கபம். மந்தம், வாதம், மலக்கட்டு இவை நீங்கும்.

சிவலிறைச்சி பித்தஞ் சிலேத்மமந்தம் வாதக்
கவலையற வோட்டியடல் காக்கும்-புவனமதின்
மெய்க்குப் பலஞ்செய்யும் வீரியமு முண்டாகுஞ்
சிக்கிய மலங்கழிக்குஞ் செப்பு.

சிவல்—கவுதாரி.

## கழற்சி

இது ஒரு கொடி வகை. இதன் இலையால் விரைவாதம்,சூலை பிரமேகம், சுரம், குன்மம், உள் அழலை இவை நீங்கும்.

விரைவாதஞ் சூலையறும் வெட்டை யனலேகு
நிரைசேர்ந்த குன்ம நிலையா-துரைசே
ரழற்சி விலகு மருந்திற் கசப்பாங்
கழற்சியிலை யென்றுரைக்குங் கால்.

## கழுதைப்பால்

இது பால்வகைகளில் மிகவும் சிறப்பானது.மிகுமதுரமுடையது. இதனால் வாதம், கரப்பான், புண், விரணம், சீழ்மேகம், சொறி சிரங்கு, கட்டி, கிரந்தி போன்ற பல நோய்களும் தீரும்.

கழுதைப்பால் வாதங் கரப்பான் விரணந்
தழுதனையும் வித்திரதி தானே-யெழுகின்ற
ஒட்டியபுண் சீழ்மேக மோடு சொறிசிரங்கு
கட்டியிவை போக்குங் கழறு.

## கழுநீர்

இது ஒரு கொடி வகை. இதுவே செங்குவளை எனப்படும் இதன் பூவினால் தாகநோய், கபம், அரோசிகம் இவை நீங்கும். உடலுக்குக் குளிர்ச்சியை அளிக்கும்.

உடற்குக் குளிர்ச்சியதா முள்ளுழலை மாற்று
மடற்கபவ ரோசகத்தை யாற்றுங்-கடற்கு
ளெழுநீர்க் குமிழி யிகழு முலையாய்
கழுநீர் மலரெனவே காண்.

## கள்ளிப்பால்

இது ஒரு மரத்தின் பாலாகும். இதனால் வாதம், கிரந்தி பெருவியாதி, கிருமிநோய், பக்கசூலை, கரப்பான் இவை நீங்கும்

வாத முடக்கலும் வன்கிரந்தி குட்டம்போஞ்
சீதமொழி யுங்கிருமி சேராவாம்-மாதே
பருபக்க நோயுடனே பாழ்க்கரப் பான்றீரும்
திருகுகள்ளிப் பாலாற் றெளி.

## களாக்காய்

இது ஒரு செடியின் காய்வகை. இதனால் காதடைப்பு, தாகம், பித்தம், வாந்தி, அருசி, இரத்தபித்தம் இவை நீங்கும் பசியுண்டாகும்.

காதுவிடாய் தாகங் கடியபித்தம் வாந்தியும்போம்
மாதே யரோசகமு மாறுங்காண்—டீதா
மிரத்தபித்தம் போகு மினிய களாக்காய்க்
குரத்த பசியுமுண்டோ மோர்.

## களிப்பாக்கு

இது ஒரு மரத்தின் விதை வகை. இதனால் நெஞ்சில் கோழையும், அதிசாரமும் மனமகிழ்ச்சியுமுண்டாம். பித்த அருசி ஒழியும்.

களிப்பாக்குத் தின்றாக்காற் கண்டத்துட் கோழை
யொளிப்பாகக் கட்டுமிஃ துண்மை—தளிப்பான
பித்தவ ரோசகம்போம் பேதிமிக வுண்டாகுஞ்
சித்த மகிழ்ச்சியுறுஞ் செப்பு.

## கற்கண்டு

இது ஒரு மதுரவகை, இதனால் பல்லரணை, காசம், வாந்தி, கபநோய், வெப்பம் இவை நீங்கும்.

ஈறின் தடிப்பு மிருமலும்பல் வாந்திகளுஞ்
சீறுகப முட்டிணமுஞ் சேராதே—தேறியநற்
சொற்கண் டிளங்குயில்கள் சூழு மடவனமே
கற்கண் டெனவுரைக்குங் கால்.

## கற்பூரவல்லி

இது ஒரு கொடி வகை. இதனால் காசம், இருமல், அம்மைக் கொப்புளம், கபநோய், நீர்க்கோவை, மார்பிற் கட்டு, வாதக் கடுப்பு இவை நீங்கும்.

காச மிருமல் கதித்தம்மை சூரிஜயம்
பேசுபுற நீர்க்கோவை பேருங்காண்—வீசுசுரங்
கற்பாறை யொத்துநெஞ்சிற் கட்டுகபம் வாதமும்போங்
கற்பூர வள்ளிதனைக் கண்டு.

## கற்றாழை

இது ஒரு புல் வகை. இதனால் வாதமேகம், கபமேகம், கிருமி குற்றம், பெருவியாதி, மூலம், வயிற்று நோய், பித்தம், எரிச்சல் போன்ற பல நோய்களும் தீரும்.

பொல்லாமே கங்கபம்பு ழச்சூலை குட்டரச
மல்லார்மத் தம்பகந்த ரங்குன்ம—மெல்லாம்விட்
டேகு மரிக்கு மெரிச்சற் கிரிச்சரமு
மாகு மரிக்கு மருண்டு.

## கறியுப்பு

இது ஒரு கடைச் சரக்கு இதனால் அசீரணம், வயிற்று மந்தம், கபம், நீரடைப்பு இவை நீங்கும்.

மந்தம் பொறுமலரும் வாய்வும்போந் தீபனமாந்
தொந்தித்த வையந் தொடருமோ—சந்ததமு
மக்கினியின் புட்டி யடருங் கறியுப்பாற்
சிக்குகின்ற நீரிறங்குஞ் செப்பு.

## காக்கணம்

இது ஒரு கொடிவகை. இது காக்கட்டான், கருங்காக்கணம், வெள்ளைக் காக்கணம், குத்துப்பாலடை என்றும் கூறப்படும்.

கருங்காக்கணான் வேரினால் மாந்தம், மலக்கிருமி, வாதம், கபம், மலக்கட்டு இவை நீங்கும்.

மாந்தங் கிருமியடல் வாதங் கபமினமுஞ்
சேர்ந்தமலக் கட்டுஞ் சிதையுங்காண்—சூழ்ந்த
அருங்கா குவடுகளி லண்டா மயிலே
கருங்காக்கட் டான்வேரைக் கண்டு

வெண்காக்கணன் வேரினால் வெள்ளை, பிரமேகம், தலை நோய், சுரம், கண்ணோய் இவை நீங்கும்.

மாதரால் வந்தவெட்டை வன்மேகஞ் சென்னிவலி
யோதுசுரம் விழிநோய் யோடுங்காண்—பேதியோடு
மாக்கட்டாஞ் சீதமறு மாமூலி யாம்வெள்ளைக்
காக்கட்டான் வேரைக் கருது.

## காசினிக் கீரை

இது ஒரு கீரை வகை. இதனால் சுரம், வெப்பம்,வீக்கம் இவை நீங்கும். இரத்தப் பெருக்குண்டாகும்.

அத்திவெப்பம் நீக்கு மடர்சோபை யைத்தொலைக்கு
மெத்தவுதி ரத்தமுக்கை விலக்கு—மத்தரத்தின்
மாசினியி லைங்காத வார்த்தையெனப் பேசுவிக்குங்
காசினியி லைக்குணத்தைக் காண்.

## காட்டாத்தி

இது ஒரு மரவகை. இதனால் அதிசாரபேதி, அக்கினிமாந்தம், இருமல், தாவரசங்கம், விஷம் இவை நீங்கும்.

அதிசார மந்தமிக வாலித்த காசம்
விதிராம் விஷமும் விலகு—மெதிரொருவர்
மூட்டாத்தீ யென்றுமதி மோகந் தருமணங்கே
காட்டாத்திக் கென்றுள்ளத்திற் காண்.

காட்டத்திப் பூவினால் மத்தகடுப்பு, இரத்தாதிசாரம், வெளுத்த மலக்கழிச்சல், பிரமேகம் இவை நீங்கும்.

உதிரக் கடுப்போ டுதிரக் கழிச்சல்
விதிரக் கடும்பேதி மேக—மெதிர்நிற்க
மாட்டா தகலும் வனசம லர்த்திருவே
காட்டாத்திப் பூவுக்குக் காண்.

## காட்டு மல்லிகை

இது ஒரு கொடி வகை. இதனால் சுரம், நாவறட்சி, அக்கினி மாந்தம், அதிசாரம், தாகம் இவை நீங்கும்.

சுரங்களொடு நாவறட்சி தொந்திமந் தம்பேதி
புரங்கதித்த தாகமிவை யோட்டும் - வருஞ்சேரார்
தாமல்லி லோடுந் தகமைபோ லோடிவிடுங்
காமல்லிகை வேராற் காண்.

## காடிநீர்

பழைய காடி நீரினால் பித்த மயக்கம், அசிரணம், பேதி இவை நீங்கும். மருந்து முறிவுண்டாகும்.

பித்த மயக்கமறும் பேரவுட தம்முறியும்
உற்றபிணி யிற்சிலவை யோடுங்காண் - சற்றும்
வழங்காவ சீரணமும் வன்பேதி யும்போம்
பழங்காடிக் குள்ள பயன்.

## காடை

இது ஒரு பறவை வகை. இதன் கறி படுக்கையில் விழுந்து நோயுற்றவர்களைத் தேற்றும். சோறு ஏற்கும். மேகம், வீக்கம், மெலிவு இவை நீக்கும்.

கட்டிற் கிடப்பார்க்குக் காட்டிற் படுங்காடை
மட்டவிழுங் கோதாய் மருந்தன்றோ - விட்டமுறச்
சோறுபுகுஞ் சோபையறுந் துன்னோ யெலாமேகும்
மேகமறுந் தேற்றுவதேன் விள்.

## காந்தம்

இது ஒரு உலோக வகை. இதனால் விழிநோய், வீக்கம், முக் குற்ற நோய்கள், காமாலை, கட்டி, பாண்டு போன்ற பல நோய் களும் தீரும்,

காந்தத்தாற் சோபைகுன்மங் காமிலமே கம்பாண்டு
சேர்ந்திரிதோ டம்வெட்டை சீதங்கா - லோய்ந்த
பேருதரங் கண்ணோய் பிரமியநீ ராமையும்போ
மோரினிறை யாயுளுறு முன்.

## கார்போகரிசி

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் விரணம், கடுவன், கரப்பான் புண், நஞ்சு, பித்தம், நமைச்சல், சொறி சிரங்கு, கிரந்தி இவை நீங்கும்.

கார்போக மாவரிசி கண்டாற் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவை பித்தமுறும் - பார்மீதில்
வாத கபநமைச்சல் வன்சொறி சிரங்குமறும்
சீத மலர்க்குழலாய் செப்பு,

## காரீயம்

இது ஒரு உலோக வகை. இதுவே கருநாகம் எனப்படும். நஞ்சு, கண்ணோய், விரணம், குன்மம், குத்தல், மேகம், சுரம் போன்ற பல நோய்களும் நீங்கும்.

பன்மரநஞ் சக்கிநோய் பாகர்த் தபிவிரணங்
குன்மங்கால் சூலங் குதவிரணஞ்—சன்மம்
பெருநாக மேகப் பிணிசுரமி வற்றைக்
கருநாகமே நீக்குங் காண்.

## கானாங் கோழி

இது ஒரு பறவை வகை. இதன் கறியால் வாத கப நோய்கள், காசம், கரப்பான் இவை நீங்கும்.

உத்தமனே நோயனைத்து மோடு மிறுமலமும்
பத்திய மாங்கரப்பான் பாருமே - முத்தவொளி
கானாங் கனிமொழியே சார்ந்த மறுவகலுங்
கானாங்கோ ழிக்கறியைக் காண்.

## கிச்சிலிக் கிழங்கு

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் கபம், கீல்பிடிப்பு, விரணம் இவை நீங்கும்

பச்சிலையால் பித்த கபம், விரணம், இரத்த கபம், மலம் இவை பற்றிய கிருமிகள் ஒழியும்.

பச்சிலைக்குக் காந்தம் பரிமளிக்கு மவ்விலையோ
வெச்சைக் கிரந்திதனை மெய்ப்புழுவைச் - சொச்சமற
வோடுநற் கிச்சிலியு னொண்கிழங் குக்கபமும்
யூட்டுமுட முப்புண்ணும் போம்.

## கிரந்தி தகரம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் பித்த நோயும், சுவாச நோயும், விரணமும் நீங்கும்.

சீறுபித்த நோயுந் திரைபெரிதல் மோலுமெறிந்
தேறுஞ் சுவாசநோ யென்பதுவும் - வீறிப்
பரந்தசர்க் காப்புதமும் பன்னப் புகுங்காற்
கிரந்தி தகரத்தாற் கெடும்.

## கிலுகிலுப்பை

இது ஒரு செடி வகை. இது வட்டக்கிலுகிலுப்பை, வெள்ளைக் கிலுகிலுப்பை என இருவகைப்படும்.

வட்டக் கிலுகிலுப்பைச் செடி சொறி கிரந்தி, கண்டமாலை, பற்பல சோகை, விரணம், அக்கினி மாந்தம் இவற்றை நீக்கும்.

வட்டக் கிலுகிலுப்பை மாறாச் சொறிகிரந்தி
துட்டகண்ட மாலைபல சோபைநோ - வட்டமுலை
மானே விரணவகை மாந்தமுத னோயெல்லாந்
தானே யகற்றுமெனச் சாற்று.

மலையில் விளையும் வெள்ளைக் கிலுகிலுப்பை தாவர விஷம், சன்னிபாத நோய் இவைகளை நீக்கும்.

விடவினங்க ளைப்பிடித்து விண்ணேற்றும் வந்த
விடசன்னி நோயை விரட்டுந் - தடமாரும்
வெள்ளைக் கிலுகிலுப்பை மென்பூண் டதுபுவிக்கும்
கிள்ளைக் குதலைமின்னே கேள்.

## கிளியூரற் பட்டை

இது ஒரு மரத்தின் பட்டை வகை. சிறந்த மணமுடையது. சுரத்தையும் வெப்பத்தையும் போக்கும்.

மணவருக்க மாகும் வருசுரத்தைப் போக்குந்
தணலாய வெப்பத் தணிக்குங் - குணமா
கிளியூரற் பட்டையது கீதம் பயிலு
மளியூருங் கூந்தன்மின்னே யாய்.

## கீழ்வாய் நெல்லி

இது ஒரு செடி வகை. கீழ்க்காய்ச்சி, கீழாநெல்லி எனவும் கூறப்படும். இதனால் விழிநோய், பித்தம், இரத்தப் போக்கு, மது மேகம், காமாலை, விரணம் போன்ற பல நோய்களும் நீங்கும்.

சீதமதி பித்தவடஞ் செவ்விழிநோய்க் கூட்டம்
பூதமொடு பேயிரத்தப் போக்குகளும் - பூதலத்துட்
டாழ்வாய்ப் பணிந்தேகுந் தப்பாது நற்புலத்துக்
கீழ்வா யெனுநெல்லிக் கே.

கீழாநெல்லி குணந்தான் கேளாய் மதுமேகந்
தாழாக்கா மாலைகளைச் சண்ணுந்தா—தேழனலுந்
தொக்கி னனலுந் தொலைக்குந்தொன் மேகம்போம்
தக்க விர ணங்கெடுக்குந் தான்.

## குக்கில்

இது ஒரு கடைச்சரக்கு. கருமை, செம்மை என்னும் இருவிதக் குக்கிலால் மூக்கு நோய், கட்டி, மேகம், புண், வாத நோய், சூலை கீல்பிடிப்பு, நகவிரணம் போன்றவை தீரும்.

காததர நாசிநோய் கட்டிகடி மேகப்புண்
வாதவித்தி ரஞ்சூலை வன்குநக - மேதிவையித்
திக்கி லிருக்கத் திடமுளவோ வுபயக்
குக்கி லிருக்கநமக் குள்.

## குங்கிலியம்

இது ஒரு கடைச் சரக்கு. நீரையிழுக்கின்ற குங்கிலியத்தால் பெரும்பாடு, மேகவிரணம், சீழ்விரணம், புண் இவை நீங்கும்.

பெரும்பாடு மேகம்போம் பேரா துடலி
லரும்பிய புண்ணாற்று மிவையல்லாற்—றுரும்பா
மெலும்புருக்கி புண்சீழ் மேகு மூலகிற்
சலம்பருகுங் குங்கிலியத் தால்.

வெள்ளைக் குங்குலியத்திற்கும் இத்தகைய விரணம் போக்கும் குணம் உண்டு.

வெள்ளை யளித்த விரணநா பிக்கமலத்
தொள்ளை விரணமேகந் தோற்றுகினு - முள்ளே
வருவரசே மேற்புண் வரினுஞ் சுவேதச்
சருவரச மேற்பழியைச் சாற்று.

(சருவரசம் - குங்கிலியப்)

## குங்குமப்பூ

இது ஒரு கடைச்சரக்கு, இதனால் சீரணம், கருவிழியிற் படரும் பூ, கண்ணோவு, பித்தம், மண்டைவலி, செவி நோய், நீரேற்றம், மாதர் கருப்ப உதிர தோடம் இவை நீங்கும்.

விந்துநட்டந் தாகமண்டம் மேகசலஞ் சூலைகப
முந்துசுரம் பித்தங்கா லுச்சிவலி - முந்துகண்ணிற்
றங்குமப்பூ வொடுறுநோய் சாத்தியிவை நீங்கவென்றார்
குங்குமப்பூ வோரிதழைக் கொள்.

குங்குமப் பூவைக்கண்டாற் கூறுகொண்ட பீனசநோய்
தங்குசெவித் தோடஞ் சலதோடம் - பொங்கு
மதுரதோ டந்தொலையு மாதர் கருப்ப
வுதிரதோ டங்களறு மோர்.

## குதிரைக் குளம்படி

இது ஒரு செடி வகை. இதனைக் குளித்தி பூண்டு என்றும் கூறுவர். இப் பூண்டுக்கு வாயு, சன்னி, தினவு இவை நீங்கும்,

பூவில் எரிசாலைப் பூண் டிக் கிழுப்புவலி
கூவியழுஞ் சூலையனி லங்குறையுந் - தாவு
குதிரைநடை வாயுசன்னி கூறுதின வும்போங்
குதிரைக் குளம்படியைக் கூறு.

## குதிரை வாலி

இது ஒரு கொடி வகை. இதுவே மிரியார் கூந்தல் எனப்படும். இதனால் மூலக்கடுப்பு, கழிச்சல், சுரம், தாகம், இடுப்பு வலி, வாதம், மேகம், இருமல், காசம், கட்டி, படுவன், கண் மங்கல், சொறி, தினவு போன்ற நோய்கள் நீங்கும்.

கடுப்பு கழிச்சல் கனன்ற சுரதாக
மிடுப்புவலி வாத மிவற்றோ - டடுப்ப
வீதிரைவர வென்றழைக்கு மேகமிரு மலும்போங்
குதிரைவா லிக்குக் குலைந்து.

காசம் பருப்படுவன் கண்மயக்க மீளையொடு
வாசங் கமழ்குழலாய் மாந்தமும்போம் - பேசத்
தரியாது வாதகபந் தானே சொறிபோம்
மிரியார்கூந் தற்கு விரைந்து.

## குந்திரிக்கம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் இருமல். இரைப்பு, மேகம் கட்டி, விஷம், குட்டம், படர்தாமரை, சிரங்கு, விரணங்கள் இவை நீங்கும்.

காச சுவாசங் கனத்தமே கக்கட்டி
வீசு விடக்கடிவி றுச்சுகுட்டம்—பேசு
படர்தா மரைசிரங்கு பண்டைவிரணங்க
ளிடர்செய்யிற் குந்திரிக்க மேந்து

## குப்பைமேனி

இது ஒரு செடி வகை, எங்கும் எளிதாகக் காணக் கூடியது. இதனால் தந்தமூலநோய், தீச்சுட்டபுண், தாவர விஷங்கள், வயிற்றுவலி, வாதரோகம், இரத்த மூலம், நமைச்சல், குத்தல், இரைப்பு, பீனசம், கபம் போன்ற பல நோய்களும் தீரும்.

தந்தமூ லப்பிணிதீத் தந்திடுபுண் சர்வவி ஷ
முந்துகுன்மம் வாத முதிரமூ—லந்தினவு
சூலஞ் சுவாசா தொடர்பீ னசங்கபம்போம்
ஞாலங்கொண் மேனியத னால்.

## குயில்

இது ஒரு பறவை வகை இதன் கறி சிறந்த பத்திய உணவாகும். வாதபித்தம், பிரமேகம், வயிற்றுவலி இவை நீங்கும்.

நல்லதொரு பத்தியமா நாடாது வாதபித்தஞ்
சொல்லரிது தானே சொறியேகும்—வல்ல
குயிலருந்த மேகம்போங் குன்மவலி தீருந்
துயிலிமதி போகமுறுஞ் சொல்

## குருக்கத்திப் பூ

இது ஒரு மரத்தின் பூ வகை. இதுவே மாதவி எனப்படும். தலைநோய், தாகம், கபவிரணம், பித்தகோபம், பலவிஷங்கள் இவை நீங்கும்,

சிரரோகந் தாகஞ் சிலேஷ்ம விரணம்
பொருபித்தம் பலவிஷமும் போக்கும் - வரிசேர்
பருக்கொத்த வாள்விழியாய் கைப்புமது கஞ்சார்
குருக்கத்திப் பூவின் குணம்.

## குரோசானி ஓமம்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் வெகுநீர்ப்பெருக்கு, வாதம் விந்து நட்டம், விரணம், கரப்பான் இவை நீங்கும்.

வெகுமூத் திரவாதம் வீரியநட் டம்புண்
ணுகுபேதி யுட்கடுப்பி னோடே - மிகுகரப்பான்
தீராக் கபமிவைபோஞ் செய்யகுரோ சானியென்றால்
வாரா மயக்கமுற்று மால்.

## குழி மீட்டான்

இது ஒரு செடி வகை, குருமீட்டான் எனவும் கூறப்படும் இதனால் கணமாந்தம், உள்வெப்பம் இவை நீங்கும். முலைப் பாலைச் சுரக்கச் செய்யும்.

கணத்திலெழு மாந்தத்தை காணாவுட் சூட்டைக்
கணத்திலே வேரைக் களையும் - பணத்தமுலைப்
பாலைச் சுரப்பிக்கும் பாரிற் குருமீட்டான்
காலைத் தொழுதுண்ணுங் கால்.

## குறவை மீன்

இதனால் குடலுக்குள் குத்தும் வலி தீரும். காசம் நீங்கும்.

முட்டு குடல்வலிபோ மூடிரும லேகுமலக்
கட்டுரக்கம் வாயருசி காணுங்கான்—முட்டத்
துறவைப்பெற்றோருந் துதிக்குமெழின் மாதே
குறவைமீ னின்குணத்தைக் கூறு

## குறிஞ்சா

இது ஒரு கொடிவகை. சிறுகுறுஞ்சா, பெருகுறிஞ்சா என இரு வகைப்படும். இதனால் வாதம், சீதம், விஷம், சுரம், தாகம் இவை நீங்கும்.

சிறுகுறிஞ்சா வாதமொடு சீதத்தை நீக்கும்
மறுவுதிர மில்லாத மாதர்க் - குறுமுலகி
லத்தி சுரமு மகலாக் கடிவிடமுந்
தத்தியக லத்தகர்க்குந் தான்

## குறுந்தொட்டி

இது ஒரு செடி வகை. இதுவே சிற்றாமுட்டி எனப்படும். இதன் வேரினால் அத்திசுரம், பித்த நோய் தீரும். இது கண்ணுக்கு ஒளி தரும். தைலத்துக்காம்,

*அத்தி சுரமுதல னந்தசுரம் பித்தமும்போ*
*மெத்த விழிக்கொளியாம் வீறுதைல—லத்திற்காம்*
*நற்றா மரைத்தருவு நாடுமொழிற் றிருவே*
*சிற்றாமுட் டித்தூரைச் செப்பு*

## குன்றி மணி

இது கொடியின் வித்து வகை. சிவந்த குன்றிமணிப் பருப்பினால் கண்நோய், பித்தநோய், காமாலை, வேர்வை, வெப்பம் மூர்ச்சை போன்ற நோய்கள் தீரும்.

நேத்திரநோய் பித்த நிறமமுமாங் காமாலை
வேர்த்திடுதா பச்சோப வெப்புடனே - கோத்திட்ட
வையமும்போம் விந்துவா மாயிழையே காட்டிலுறை
செய்யகுன்றி யின்விதையைச் சேர்.

## கூகைநீறு

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் யோனி நோய், காசம், கிருமி நோய் இவை நீங்கும்,

*கூகைநீற் றான்மாதர் குய்யநோய் வுத்திரிதி*
*யாகமெனு மார்பினோ யண்டுமோ—போகமதில்*
*வீரியமு முண்டாக்கும் வீழ்கிருமி நோயொடுத்*
*தூரிரும வீளையும்போம் சொல்*

## கொட்டிக் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இது குளிர்ச்சித் தன்மையுடையது. இதனால் தேமல், பிரமேகம், உடல் கடுப்பு, உட்சூடு இவை நீங்கும்.

கொட்டிக் கிழங்கு குளிர்ச்சியென்பார் தேமலுடன்
ஒட்டிநிறை மேகமொ ழிக்குங்காண் – வட்டமுலை
மானே யகக்கடுப்பும் வந்தவழ லுந்தணிக்குந்
தானே யிதையறிந்து சாற்று

## கொட்டைப் பாசி

இது ஒரு கொடி வகை. இதனால் பிரமேகம், பித்த சுரம், தேமல், கரப்பான், கக்கிருமல், கிரந்தி, கபவாதம் இவை நீங்கும்.

மேகமறுந் தீபனமாம் வெஞ்சரமு மேகிவிடுந்
தேகமதிற் றேமலினஞ் சேருமோ—பாகுமொழி
மின்னே வெகுகுணஞ்செய் மென்கொட்டைப்பாசியினாற்
றுன்னுகரப் பானும்போஞ் சொல்

மிக்குசக்கு வானகலும் வெய்ய கிரந்தியறுந்
தக்க ஐயதாகந் தணியுங்காண்—மிக்ககிலின்
மட்டைப்பாய்ச் சுங்கூந்தல் மாதே யுலகத்திற்
கொட்டைப்பா சிப்பெயரைக் கூறு

## கொடிக்கள்ளிப்பால்

இதனால் கரப்பான், சொறிசிரங்கு, பெருவிரணம், புண்' குட்டம், குன்மவலி போன்றவை நீங்கும்.

துய்ய கரப்பான் சொறிசிரங்கும் புண்ணும்போஞ்
செய்யகடி குட்டநோய் சேருமே—மெய்யி
லடிக்கடியாங் குன்மவலி யத்தனையுந் தீருங்
கொடிக்கள்ளிப் பாலுக்குக் கூறு

## கொத்துமல்லி

இது ஒரு கீரை வகை. இதனால் வாதம், அரோசகம், பித்தம், சுரம் நீங்கும்.

கொத்துமல்லிக் கீரையுண்ணிற் கோர வரோசகம்போம்
பித்தமெல்லாம் வேருடனே பேருங்காண்—சத்துவமாம்
வெச்செனவே போகம் விளையுஞ் சுரந்தீருங்
கச்சுமுலை மாதேநீ காண்

கொத்துமல்லி விதை என்பது உருள் அரிசி எனவும் கூறப்படும். இது உட்சூடு, குளிர்க்காய்ச்சல், பித்தம், மந்தம் விக்கல், அசீரணம், வாந்தி, நாவறட்சி, விரணம் போன்றவற்றை நீக்கும்.

கொத்துமல்லி வெப்பங் குளிர்க்காய்ச்சல் பித்தமந்தஞ்
சர்த்திவிக்கல் தாகமொடு தாதுநட்டங்—கத்தியெழும்
வாதவி காரமடர் வன்கர்த் தபிவிரணம்
பூதலத்தில் லாதகற்றும் போற்று

## கொத்தான்

இது ஒரு கொடி வகை, மிகவும் குளிர்ச்சி பொருந்தியது. இதனால் பிரமேகம், பித்தம், இளைப்பு போன்றவை நீங்கும்.

சித்த ரறிவார் சொறிகுழலாய் நீகேளாய்
கொத்தான் மிகக்குளிர்ச்சி கொண்டக்காற்—சுத்தப்
பிரமேக முட்டுகிரிச்சம் பித்த மிளைப்பு
மறுமே தவறா தறி

## கொன்றை

இது ஒரு மரவகை. இது, சரக்கொன்றை சிறுகொன்றை, புலிநகக் கொன்றை பெருங்கொன்றை, மந்தாரக் கொன்றை, மயிர்க் கொன்றை பொன் மயிர்க் கொன்றை, செம்மயிர்க் கொன்றை, முட்கொன்றை என பல வகைப்படும். இதனால் மலக்கிருமி, மதுமேகம், பிரமேகம், சலமேகம் இவை நீங்கும்.

மலக்கிருமி யோடு மதுநீர் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயு - நிலத்திற்கு
ளென்றைக்கும் வாடாத வின்பமலர்க் கொம்பே
கொன்றைப் பசுமலரைக் கொள்

மைக்கண்விழி யனமே வையகத் திலெப்போது
மைக்கொன்றைப் பூமேக மாற்றுங்காண் —மிக்கதனைக்
கொண்டாற் சலமேகங் கூகூவென் றேபதறி
யண்டாதி துண்மை யறி

## கோட்டம்

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் கண், தாடை, வயிறு, கழுத்து, தலை, நா, வாய் போன்ற இடங்களில் உண்டாகும் நோய்களும், சுரம், விக்கம், ஈளை, இருமல், விஷம் போன்ற பல நோய்களும் தீரும்.

திட்டகவுள கடுகளஞ் சென்னி நாவா
    தெறிபினவெப்ப தைப்புதா வார்த்த மூதை
முட்டியெழு முளைவிரணஞ் சுவாச காச
    மூடித்தோ டரவுமர விடங்கண் மேகக்
கட்டிய கல்லிவிட பாகம் பூத
    கணம்பால கிரகமொடு தாது நட்டஞ்
சொட்டிவரு பிரமிபித்த மிவையொ ருங்கோ
    தொலையும் விரணாரிக்குச் சுகப்பே ராமே

(விரணாரி—கோட்டம்)

## கோமூத்திர சிலா சத்து

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் கிரிச்சரம், புண், மேகம், வெப்பு, உள்விரணம், நாவிற் சூடு, இரத்தக் கொதிப்பு இவை நீங்கும்.

கோமூத் திரசிலா சத்தாற் குறுகிப்
போமூத் திரமெரிவுட் புண்மேகம்—நாமேவு
வெப்புதிர வெப்புமறும் வீழிமுனி விம்பந்
துப்புமஞ்சு மெல்லிதழாய் சொல்

## கோமேதகம்

இது நவரத்தினங்களில் ஒன்று. இதனால் வாத பித்த கோபம், மலக்கட்டு, சுரம். மந்தாக்கினி இவை நீங்கும். மினு மினுப்பைத் தரும்.

வாதபித்த கோபத்தை மாற்றுவலக் கட்டறுக்கு
மோதுமந் தாக்கினியை யோட்டுங்காண்—மீதி
லழலருவி கார மகற்று மொளிசெய்யுங்
கழறுகின்ற கோமேத கம்

## கோரைக் கிழங்கு

இது ஒரு வகைப் புல்லின் கிழங்கு. இதுவே முத்தக்காசு எனப்படும். இதனால் குளிர்சுரம், இரத்த பித்தம், வாதசுரம், பித்தகாசம், மூர்ச்சை, வாந்தி போன்ற பல நோய்களும் தீரும்.

சீதசுரந் தீர்க்குஞ் செம்புனற்பித் தம்போக்கும்
வாதசு ரந்தணிக்கும் வையகத்தில்—வேதைசெய்ய
வந்த பிணியையெல் லாம்வாட்டும் முத்தக்காசு
கொந்துலவும் வார்குழலே கூறு

அதிசாரம் பித்தமென்ற றாக மையரங்
குதிவாதஞ் சோபக் கொடிய—முதிர்வாந்தி
யாரைத் தொடர்ந்தாலு மவ்வவர்க்கே லாங்குலத்துக்
கோரைக் கிழங்கைக் கொடு

## கோரோசனை

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் நீரழிவு, மேகம், சுரம், பித்த கோபம், குழந்தைகளின் நோய், புண்கள் போன்றவை நீங்கும்.

நீரழிவு மேகசுர நீங்காக் கனல்வேகற்
கூறியவுன் மாதங் குழந்தைகணோய்—பாரகபம்
வீரி மசூரியும்போம் வேதாந் தனிலிரண்டாய்
கூறுங்கோ ரோசனை கட்கு

## கோவைக் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இதனால் முக்குற்ற நோய்களும், குத்தல், பித்தகோபம், குட்டம் இவையும் நீங்கும். குளிர்ச்சி யுண்டாகும்.

முத்தோடஞ் சூலைபித்த முடுகுட்டஞ் சிக்குவைநோ
யெத்து சுவாசங் கபமினிப்பு—யித்தனையுங்
கூட்டோட கற்றுங் குளிர்ச்சியொடு காரத்தைக்
காட்டிய கோவைக் கிழங்குகாண்:

கோவை யிலையால் இருமல், சிரங்கு, உடற்சூடு, நீரடைப்பு இவை நீங்கும். கண்குளிர்ச்சி உண்டாகும்.

கண்ணுங் குளிர்ச்சிபெருங் காசமொடு வாயுவுறும்
புண்ணுஞ் சிரங்கும் புரண்டேகும்—நண்ணுமுடல்
மீதிலார் வெப்பகலும் வீழாநீர்க் கட்டேகும்
கோதிலாக் கோவை யிலைக்கு

## கோழி முட்டை

இதனால் வாதம், விரணம், கபப்பிணி, புண் இவை நீங்கும். தாது, கரப்பான் இவை உண்டாகும்.

வாதபித்தஞ் சேர்ப்பிக்கும் வன்றோடம் புண்போக்குந்
தாதுவை மெத்தத் தழைப்பிக்கு-மோது
கபத்தை யடக்குங் கரப்பனுண் டாக்குவையு
மிபத்தையுறுங் கோழிமுட்டை யெண்

## கோழியவரை

இது ஒரு கொடி வகை. இதன் இலையால் வயிற்றுக்கட்டி, குடல் வாதம் போன்றவை நீங்கும்.

ஆழிசுற்றும் வையத் தடர்ந்தபே ராமையொரு
நாழியினிற் கெட்டு நலியுங்காண்-தோழிகேள்
கோழியவ ரைத்தழைக்குங் குன்மங் குடல்வாத
மூழியவரைக் கும்வாரா தோர்.

## கௌரி பாஷாணம்

அவுரி, பாகல் இவ்விலைகளின் சாற்றால் சுத்தி செய்த கௌரி பாஷாணத்தால் வாதநோய், மந்தம், சுரம் இவை நீங்கும்.

அவுரியொடு பாகலிவை யாற்சுத்தி செய்த
கவுரிபா ஷாணத்தைக் கண்டாற்—சவுரியஞ்செய்
வாதநோய் மந்தமொடு வந்தசு ரங்களெலாம்
காதிவிழுந் தோடுமெனக் காண்,

## சங்கங் குப்பி

இது ஒரு செடிவகை. இதனால் சிரங்கு, கீல்வீக்கம், வறட்டிருமல், சர்ப்பவிஷம், ரத்தக்கிருமி இவை நீங்கும்.

கரப்பான் கிரந்தி கருங்குட்ட ரோக
முரப்பான மேக மொழியுங்-கருப்பக்
கருங்கிரந்தி செவ்வாப்புக் கட்டிகளு மேகு
மருஞ்சங்கங் குப்பிக் கறி.

## சங்கஞ்செடி

இது ஒரு செடி வகை. இதன் வேர்கட்டையை சீவிப்பிழிந்த பால் சோபை, நீரேற்றம், சுரவேகம், விரணம் இவற்றை நீக்கும்.

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமிலை-கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்.

இதன் வேரும், இலையும் சோகை, கரப்பான், வாதம், பித்தம், ஆகியவற்றைப் போக்கும். இரத்தவிருத்தி ஆகும். பசி அதிகரிக்கும்.

வீக்கங் கரப்பான் விதாகக் கிரந்திகுன்ம
மூக்குமிகு சூலைவாய் வோடுபித்தந்-தாக்குவிஷம்
வீறுமோ கண்டுலங்கும் வீசுபசி ரத்தமுண்டாங்
கூறுசங்கு வேரிலை கட்கு.

இதன் வேர்ப்பட்டை, கோழை, காசம், வாதம், சோகை உட்சுரம் நீக்கும்.

சங்கம்வேர்ப் பட்டை சளியிரும லைச்சுரத்தை
யங்கவா தக்கடுப்பை யாடத்தைப்-பங்கே
செய்யுங் கிரந்தியையுட் டீகால் கிருமியையிவ்
வையந்த னிலொழிக்கு மால்

## சடாமாஞ்சில்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் குட்டம், உட்சூடு, வாய்வு, விழிநோய், காசம் இவை நீங்கும்.

குட்டம் சிலந்திவிடங் கோர புராணசுர
முட்டினங்கால் பேதிகண்ணோ யொட்டிருமல் சொட்டி ரத்த
பித்தமுரைப் போகும் பெருங்கோரை யென்றுரைக்குஞ்
சுத்தசடா மாஞ்சிதனைச் சொல்

## சண்பகம்

இது ஒரு மரவகை, சண்பக வேரானது வெப்பம், சுரம் கண்நோய் ஆகியவைகளை நீக்கிப்பசியையுண்டாக்கும்.

தீராத வுட்டிணத்தைத் தீர்க்குஞ் சுரம்போக்கும்
நேரே பசியெழுப்பு நிச்சயமே-யோருங்கால்
பண்புறுகண் டோடத்தைப் பற்றறுக்கும் வாசமுள்ள
சண்பகம ரத்தின்வேர் தான்.

சண்பகப் பூவால் வாதம், பித்தம், அத்திசுரம், அழற்சி, சுக்கில நட்டம் இவை நீங்கும்.

வாதபித்த மத்திசுர மரமேகஞ் சுத்தசுரந்
தாதுநட்டங் கண்ணழற்சி தங்காவே-மாதேகேள்
திண்புறும னக்களிப்பாந் திவ்யமண முட்டணஞ்சேர்
சண்பகப் பூவிற்குத் தான்

## சத்திசாரம்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் வயிற்றுவலி, சயகாசம் போகும்.

மந்தமொடு தங்கு மலசலம் பீலிகமடி
யுந்திவரு கின்ற வொலியிருமல்-குந்தவைக்கும்
வாதவலி குன்ம மகோதரங்கி ராணியும்போம்
மோதுசத்தி சாரத்தை யுண்.

## சதகுப்பை

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் வாதரோகம், தலைவலி கர்ணசூலை, ஆசனக்கடுப்பு இவை நீங்கும்.

வாதமொடு சூதிகா வாதஞ் சிரசுநோய்
மோதுசெவி நோய்கபநோய் மூடுசுர-மோதுகின்ற
மூலக் கடுப்பு முதிர்பீன சம்போக்கு
ஞாலச் சதகுப்பை நாடு.

## சதுரக்கள்ளி

இது ஒரு புல்வகை. இதனால் கரப்பான், நமைச்சல், கபம், வாதகுன்மம் இவை நீங்கும்.

கரப்பான் சொறியுங் கடியுங் கபமு
முரப்பாங்குன் மத்தையு மொழிக்கும்-நிரைப்பான
பேதிதருஞ் சீதமென்ற பேச்சகற்றும் பூவுலகிற்
சாதுசது ரக்கள்ளி தான்

சதுரக்கள்ளியின் பாலால் குட்டம், வாதம், கரப்பான், கடி சூலை இவை விலகும்.

குட்டங் கடிசூலை குன்மமே கம்வாரி
துட்டக் கிருமியொடு தூறுபுண்ணு-முட்ட
முதிரக் கரப்பனுபோ மெய்குழலே நாளும்
சதுரக்கள் ளிப்பாற்குந் தான்.

## சந்தனம்

இது ஒரு மரவகை. சந்தன மரக்கட்டை மனமகிழ்ச்சியும், சருமதாது ஒளியும், நல்ல விவேகமும் தரும்.

நற்சந் தனமரத்தா னல்லறிவு மின்பமெழிற்
பொற்செந் திருவருளும் பூமிதத்துண்-மெச்சுஞ்
சரும வழகுந் தனிமோ கமுமாம்
மிருமுநோ யேகும் பிறழ்ந்து

கோதில் சந்தனஞ் சீதோட்சணங் கொண்டிருக்கு
மச்சந்தம்
வாதபித்த வையமனப் பிரமை-யோதுசுரம்
மேகந் தனிதாகம் வெப்பு சொறியும்போ
மாகந் தனக்குருதி யாம்

சந்தனத்தில் மூன்று வகை உண்டென்பர். அவையாவன சிவப்பு, மஞ்சள், வெள்ளை என்பனவாம். இவற்றுள் சிவப்பே மருந்துகளுக்கு நல்லதென்பர்.

மும்மையெனச் சொல்வார் முருகுசந்தப் பேதமவை
செம்மைமஞ்சள் வெண்மையெனத் தேர்முறையே-
நன்மைதரு
முத்தமமு மத்திபமு மோததம் மும்மாகுந்
தத்தை மொழியணங்கே சாற்று

## சமுத்திர சோஷிவிதை

இது ஒரு கடைச்சரக்கு. இது கபதோடம், அதிமூத்திரம். வாதம் இவை நீக்கும்.

ஐய்ய மகற்றும ரோசகத்தை மாற்றிவிடும்
பைய்யுதிர வாயுவையும் மற்றறுக்கு-மெய்யை
யமிழ்த்துகின்ற நீரை யனிலத்தைப் போக்குஞ்
சமுத்திரநற் சோஷிவிதை தான்

## சருக்கரை

இது ஒரு மதுரவகை. வாந்தி, பித்தம் நீக்கும். கபம் இளகும்

அருந்து மருந்திற் கனுபான மாகப்
பொருந்துமடை வாந்திபித்தம் போக்கும்-வந்தருசி
நீக்கு மதிகபத்தை நின்று மகிழ்ச்சியையுண்
டாக்கு நறுஞ்சருக்க ரை.

## சவுக்காரம்

இது ஒரு கடைச்சரக்கு. இது கடுவன், சீதளம், வாதகோபம், உட்சூடு இவற்றைப் போக்கும்.

கரப்பானை சீதத்தைக் கண்டிக்கும் பேதி
யுரப்பாக்கும் வாயுவைவிட் டோடுந்-தரைக்குள்
வழலை யெனப்பேர் வகித்த சவுக்கார
பழலைகுன்மம் போக்கு மறி.

## சவுரி

இது ஒரு பழவகை; இதனால் தலைநோயும், உடற்கடுப்பும் நீர்ப்பீனசமும் விலகும்.

தலைவலிகு டைச்சல் சலப்பீ னசங்கள்
குலைகுலைந்தே காட்டிற் குடிபோ-நிலையா
னவரிப் படிமாதென் றையுறு மாதே
சவரிப் பழத்தினாற் றான்.

## சவ்வாது

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் தலைவலி, சுரம், வாதம் நீங்கும்,

சுரமுந் தலைவலியுந் தூண்டத் தடைப்பு
முரமுந்து நோயோ டுடற்குட-யரவிமிக்க
குத்துகின்ற வாயுவும்போங் கோதிற்சவ் வாதினுக்கு
மெத்த வசியமுமாம் விளை.

## சன்ன லவங்கப்பட்டை

இது ஒரு கடைச்சரக்கு. இது வயிற்றுநோய், மூலநோய் நீக்கும். குளிர்ச்சி தரும்.

சன்னலவங் கப்பட்டை தான்குளிர்ச்சி யுண்டாக்கு
மின்னுமிரத் தக்கடுப்பை யீர்க்குங்காண்-முன்னமுறு
முந்திக் கடுப்பகற்று முண்மூலப் புண்போக்குங்
கந்தமிகு பூங்குழலே காண்.

## சாதிக்காய்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் தலைநோய், இருமல், அதிசாரம் விலகும். பித்தமும், மயக்கமும் அதிகரிக்கும்.

தாதுநட்டம் பேதி சருவாசி யஞ்சிரநோ
யோதுசுவா சங்காச முட்கிரணி—வேதோ
டிலக்காய் வரும்பிணிபோ மேற்ற மயல்பித்தங்
குலக்கா யருந்தவர்க் கூறு

## சாதிப் பத்திரி

இது ஒரு கடைச் சரக்கு. இது அழற்சுரம், சலமந்த பேதி நீக்கும்.

சாதிதரும் பத்திரிக்குத் தப்பாச் சுரந்தணியு
மோதுகின்ற பித்த முயருங்காண்—தாதுவிர்த்தி
யுண்டாங் கிராணியோ டோதக் கழிச்சலுறும்
பண்டாங் குறையே பகர்.

## சாதிப்பூ

இது ஒரு கொடியின் பூ வகை. இதுவே பிச்சிப்பூ எனப்படும். தலைநோய், உடல் வெப்பம், கண்படலம் இவற்றை நீக்கும்.

முத்தோடஞ் சென்னிவலி மூடுஞ் சரீரவெப்ப
மொத்த விழியினோ யோடுங்கா—ணித்தம்
விலகாத காத்தியுண்டா மேனிதனில் வாசங்
குலவுசா திப்பூவுக் கு.

## சாம் பிராணி

இது ஒரு கடைச் சரக்கு. இது வாதகபம், விழிநோய், நீங்காத சிரநோய் இவை நீக்கும்.

வாதசீதங் கண்ணோய் மாறாத சென்னிவலி
யோதமுறு பீனசத்துண் யோட்டுங் காண்—பூதலத்தில்
வேம்பிது தானென்ன மிகுகசப்பைத் தானளிக்குஞ்
சாம்பிராணி சரக்குத் தான்

## சாமை

இது ஒரு நெல் வகை. இதனால் தாகசுரம், பிரமேகம் நீங்கும். உடல் வளர்ச்சி உண்டாகும்.

உடலிறு தாக சுரமொடுமே கம்போ
மடலுறு கால்வீக்க மகலுங்—கடலிலிறை
யாமை மனையபதத் தன்னமே மேனியிடுஞ்
சாமை யரிசிக்குத் தான்.

இதன் கஞ்சால் வாதநோய், சயம் போகும் பித்தம், சுக்கில மும் பெருகும்.

சாமைச்சோ றுண்டாற் றனிவாதங் கோழைகபந்
தீமைக்கா தாரமாய்ச் சேர்சோபை—போமெத்தப்
பித்தமொடு தாதுவுமாம் பேசுமதன் கஞ்சிக்கு
முத்தோடம் போகு மொழி.

## சாரடைக் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இக் கிழங்கால் சீதளம், நீரேற்றம், தேமல், தடிப்பு, இருமல் இவை நீங்கும்.

சீதஞ் சலதோஷம் தேமல் தழும்புகுன்மம்
வாதஞ் சிறுசிரங்கு வன்மேக—மோதரிய
காசமுத னோயெல்லாங் கான்சா ரடைக்கிழங்கால்
நாசமுறு மென்றே நவில்,

## சிட்டு

இது ஒரு பறவை. இதன் கறி ஆண்குறி மலரின் புண்ணையும், மலக்கிருமிகளையும் நீக்கும்.

பூவிரணம் போக்கிவிடும் பொல்லாக் கிருமிகளைப்
பாவுமலத் தோடிறங்கப் பண்ணுங்காண்—பூவணையாற்
கட்டுற்ற மாதர்களைக் கைவித்துக் கொஞ்சுவிக்குஞ்
சிட்டுக் குருவித் திறம்.

## சிலாச் சத்து

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் சீழ்மேகம், அதிதூலம், விந்துநட்டம் போகும்.

கல்லடைப்பு மேகங் கனதூலம் வித்திரிதி
சொல்லடைக்கு நீருரகற் சோணிதந்தான்-மெல்லிடை யார்க்
கில்லகச்சத் தில்லையெனு மிந்திரிய கட்டமுமாங்
கல்லகச்சத் தில்லையெனுங் கால்.

## சிவதை

இது ஒரு கடைச் சரக்கு இதனால் பழைய மலம், பித்தம் வாதம், பாலகிரக தோஷம் ஆகியவை விலகும்.

உள்ள மலமு முதாவர்த்த மும்வயிற்றை
கொள்ளுபித்த வாதமும் போங் கூறுங்காற்-பிள்ளைகட்குச்
செப்பு கிரகமும்போந் தேனே யுலகத்துட்
டப்பிற சிவதைக்குத் தான்.

வெண் சிவதைவேர் பைத்திய கோபத்தையும், மலாசயக்கிருமி யையும் போக்கும்.

கைப்புந் துவர்ப்புங் கலந்திருக்கும் பித்தத்தை
யிப்புவியி னாடொட்டா திவ்வளவே—செப்புதரத்
தொள்ளைக் கிருமி தொலைக்குமிகு பேதிதரும்
வெள்ளைச் சிவதைனை விள்.

## சிற்றாமணக்கு நெய்

இது பற்பல மருந்துகளின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்திலுண்டாகின்ற உஷ்ணங்களையும் நீக்கும். உடலை வளர்க்கும்.

மருந்தி னழலும் வளியான்மூ லத்துட்
பொருந்து மழலுமறப் போக்கும்—குருத்திற்கு
நற்றா யெனவளர்க்கு நாளுமழலைத் தணிக்குஞ்
சிற்றா மணக்கிணெய்தான் தேர்.

## சிறுகாஞ் சொறி

இது ஒரு செடி வகை. இது முக்குற்றம், கரப்பான், தாக ரோகம் இவை நீக்கும்.

சிறுகாஞ் சொறிவேர் சிலேஷ்மவா சத்தைக்
குறியாத முச்சுரக் குழரத்தைச்—சொரியுங்
கரப்பான் சிறுசிரங்கைக் காலைத்தா கத்தே
யுரப்பாகச் சாடுமென வோது.

## சிறுகீரை

இது ஒரு கீரை வகை. இது காசம், படலம், பித்தநோய்' நாவி பாஷாண முதலிய விஷங்கள் ஆகியவை போக்கும்.

கண்புகைச்ச நேத்திரநோய் நாசம் படலம்ரசப்
புண்கிரிச்சு ரஞ்சோபை பொங்குபித்த-மண்பரவு
தாவரவி ஷங்களும்போந் தாழாக் திருவுமுண்டாங்
கூறுசிறு கீரைதனைக் கொள்.

## சிறு தேக்கு

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் முக்குற்றம், சுவாசகாசம், பயித்தியம், நாசிநோய், குளிர்ச்சுரம், உடல்வலி நீங்கும்.

கண்டுபா ரங்கியெனுஞ் சிறுதேக் குண்டேற்
காலெங்கே பித்தமெங்கே கபந்தா னெங்கே
தொண்டு தொட்டுத் தொண்டர்சுவாச காசமெங்கே
சுரமெங்கே வெறியெங்கே தொனிநோ யெங்கே
மிண்டுபுரி பீசநீர்க் கோவை யெங்கே
வெளிநீருண் ணீரெங்கே விரற்கா லெங்கே
யண்டுபடாச் சீதசுரங் கடுப்பு மெங்கே
யழலைநக நோயெங்கே யறைகு வீரே

## சிறு நாகப்பூ

இது ஒரு கடைச்சரக்கு. இது வாதம், காசநோய் ஆகியவற்றை நீக்கும்.

சிறுநாகப் பூவினது செங்கைதனைச் சொல்வோங்
குறியாடு மேகத்தைக் கொல்லு—நெறியைவிட்டு
நீதாற்செல் வாயுவைந் தீர்க்குமிரு மற்போகுங்
கோதா யிதையறிந்து கொள்.

## சிறுநீர்

இது மூத்திர வகையைச் சாரும். இதனால் காணாக்கடி விஷமும், வாத தோடமுந் தீரும். இதை முறைப்படி பருகில் இருமல், சுவாசம், கிரந்தி, விரணம் போகும். இந்த நீராற் கழுவினால் விழி, முகம், செவி இவ்விடங்களில் பிறக்கின்ற கட்டிகள் விலகும். காய சித்திக்கு உதவும்.

காணாக் கடியோங் கதித்தெழுந்த வீக்கமது
காணாது காயசித்தி கைக்குளநல்—பூணே
பதித்தகொங்கை மாதே பகர்மாந் தருக்கு
ளுதித்த சிறுநீர்க்கென் றோர்.

அங்கியுவ ருரைசிறுநீர் வாசம் போக்கு
மதைப்பருகி லுருமலிரைப் பரத்த நோயு
பொங்கிவரு மேக விகாரங் கிரந்திப்
புண்களும்போ மதைநசியம் புரியிற் சூடுந்
தங்கியதோர் பஸ்மாரஞ் சந்நி யாசஞ்
சருவவிடம் விடசுரமுந் தவறுண் டோடும்
மிங்கதனைத் தொட்டலம் பிற்கண்மு கங்கா
திவ்விடத்து ளெழும்விரண மிரியுங் கரணே

## சிறு பயறு

இது காய்த்தானிய வகையைச் சேர்ந்தது. இது கபகோபத்தையும், பயித்தியத்தையும் போக்கும். பித்த வாதம் உண்டாக்கும்.

ஐய்யைப்பித் தத்தை யரோசகத்தைப் போக்கிவிடும்
வெய்ய வாதத்தை விளைவிக்கு—மைய்ய
மறுவொழிந்த தூய வதிவதன மாதே
சிறுபயறு செய்யுஞ் செயல்

சிறுபயறும், பச்சரிசியும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சி பித்த கோபத்தை விலக்கும், வாத சிலோத்மத்தைப் போக்கும்.

சிறுபருப்புக் கஞ்சிபித்தந் தீர்க்கு முழுந்தி
னுருபருப்புக் கஞ்சிவளிக் கூக்க—முறியகபம்
பச்சரிசிக் கஞ்சி பவனகபத் தைப்போக்குங்
கச்சிறுக்குங் கொங்கைமின்னே காண்.

## சிறு புள்ளடி

இது ஒரு கொடிவகை. இதனால் எண்வகை மாந்தம், சீதக் கட்டு, வாதசலம், நீங்கும். வற்றிய முலைப்பால் பெருகும்.

மாந்தகணம் போராமல் வன்மந்த நீக்கிவிடு
மேய்ந்த முலைப்பாலு மொழுகுங்காண்—மோந்தே
சிறுபுள் ளடிதுதையாத் தேமலர்ப்பூங் கோதாய்
சிறுபுள் ளடியைநிதஞ் சேர்.

## சிறு பீளை

இது ஒரு செடிவகை. இதனால் முக்குற்றம், மூத்திரச்சிக்கல், பித்தவாதம், சோணிதவாதங்கள் நீங்கும்.

பாண்டு பெரும்பாடு பகர்மூத்திரக் கிரிச்சரம்
பூண்டதிரி தோடமிவை போகுங்காண்—வாரிறுக்கும்
பூண்முலையே கேளாய் பொருந்துஞ் சிறுபீளை
யாமிது கற்பேதி யறி.

நீரடைப்பு கல்லடைப்பு நீங்காக் குடற்சூலை
பேரிட ரிரத்தகணம் போக்குங்காண்—வாரிறுக்கும்
பூண்முலையே கேளாய் பொருந்துஞ் சிறுபீளை
யாமிது கற்பேதி யறி

## சின்னிக்கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்குவகை. மூலநோயையும் இரத்தமய கிராணியையும் போக்கும். பொடிக்கிரந்தியையும், புண்ணையும் விளைக்கும்

சின்னிக் கிழங்கு சிறுசிரங்கு புண்வளர்க்கு
முன்னிலது வூன்பன்றிக் கொவ்வுங்கா—ணன்னமே
மூல மறுக்குமினி மோதிரத்தஞ் சீழ்மாற்றுந்
தால மறியுணிசந் தான்.

## சீக்காய்

இது ஒரு கொடியின் காய்வகை. இது மூக்கிலிடும் நசியங் களுக்குச் சிறந்த மருந்தாயிருக்கும். பேதி, வாந்தியையுண்டாக்கும்

மூக்கின் சிகிச்சைகட்கு முக்கியமாம் பேதியையுண்
டாக்குவம னத்தையும ழைப்பிக்குந்—தேய்க்கும்
வகைநெய்ச்சிக் கைப்போக்கு மாதரசே நாளுஞ்
சிகைக்கா யதனைத் தெரி.

## சீந்திற்கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்குவகை. இதனால் மேகம், ரத்த பித்தம், பேதி, பாம்பு விஷம் நீங்கும்.

சீந்திற் கிழங்கருந்த தீபனமா மேகவகை
போந்த வுதிரபித்தம் பொங்குசுர—மாந்த
மதிசாரம் வெய்யகண மாம்பல நோயோடே
கதிவிஷமுங் கெட்டுவிடுங் காண்.

## சீரகம்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் பித்தசாந்தி, வயிற்றுவலி, மூலரோகம், காசம், பயித்தியம் விலகும் சரீரத்திற்குறுதியும் கண்ணுக்குக் குளிர்ச்சியுமாகும்.

வாந்தி யருகுகுன்மம் வாய்நோய் லீகமிரைப்
பேந்திருமல் கல்லடைப்பு லாஞ்சனமுட்—சேர்ந்தகம்ம
லாசன குடாரியெனு மந்தக் கிரகணியும்
போசனகு டாரியுண்ணப் போம்.

வாயுவொடு நாசிநோய் வன்பித்தஞ் சேராது
காய நெகிழாது கண்குளிருந்—தூயமலர்க்
காரளகப் பெண்மயிலே கைகண்ட தித்தனையுஞ்
சீரகத்தை நீதினமுந் தின்.

## சீலைச் சாம்பல்

இதனால் என்புருக்கியும், கீறிரத்தமும் போம்.

அத்திபிர மேகம்போ மாடையின்றன் சாம்பலுக்குத்
தத்திவரு ரத்தந் தடைப்படுங்காண்—சத்தியமாய்
கம்பளச்சாம் பல்சன்னி காதுமைஞ்ஞைத் தோகைபஸ்பங்
கும்புவிக்கல் வாந்தி கெடுக்கும்.

## சீனக்காரம்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் கண்நோய், பல்நோய், உட்சூடு, வாதம், குன்மம் நீங்கும்.

சீனமெனுங் காரமது சீறிவரு பல்லரணை
யானைக்கால் கண்ணோ யனிலமொடு—மானிலத்திற்
றுன்மாங்கி சம்வாய்வு தோலாத வுள்ளழலை
குன்மமிவை போக்குங் குறி.

## சீனி சருக்கரை

இது மதுர வகையைச் சேர்ந்தது. இதனால் வாதசுரம், வாந்தி கிருமிரோகம், நீங்காத விக்கல் போகும்.

சீனிச் சருக்கரைக்குத் தீராத வன்சுரமுங்
கூனிக்கும் வாதத்தின் கூட்டுறவு—மேனிற்கு
வாந்தி யொடுகிருமி மாறாத விக்கலுமே
போந்திசையை விட்டுப் புரண்டு

## சுக்கான்கல்

இது ஒரு கடைச்சரக்கு. இது புண், சன்னி, மகாவாதம் நீக்கும்.

விரணந் தனையாற்றும் வீறுசன்னி நீக்கு
மரணஞ்செய் வாயுவையும் வாட்டுங்—கரணத்தின்
மிக்கான வின்பமருண் மெல்லியலே தூயவெள்ளைச்
சுக்கானெ னுங்கல்லது சொல்

## சுக்கு

இது ஒரு கடைச்சரக்கு இதனால் அசீரணம், புளியேப்பம், சுவாசம், காசம், சலதோஷம், வாதநோய், முகநோய், தலைநோய் சீதபேதி, பாண்டு போன்ற நோய்கள் நீங்கும்.

குலைமந்த நெஞ்செரிப்பு தோடமேப்பம் மழலை
முலமிரைப் பிருமன் மூக்குநீர்—வாலகப
தோட மதிசாரந் தொடர்வாத குன்மநீர்த்
தோடமாம் போக்குஞ் சுக்கு.

வாதப் பிணிவயி றூதற் செவியாய்
வலிதலை வலிகுலை வலியிரு விழுநீர்
சீதத் தொடுவரு பேதிப் பலரோ
சிகமலி முகமக முகவடி கபமார்
சீதச் சுரம்விரி பேதச் சுரநோய்
தெறிபடு மெனமொழி குவர்புலி தனிலே
யீதுக் குதவு யீதுக்குதவா தெனும்விதி
யிலைநவ சுறுகுண முளவே சுக்கு.

### சுண்டைக்காய்

இது ஒரு செடியின் காய்வகை. கசப்புச் சுவையையுடைய மலைச்சுண்டைக்காயால் மார்புச்சளி, கிருமிரோகம், வாதம் நீங்கும்.

நெஞ்சின் கபம்போ நிறைகிருமி நோயும்போம்
விஞ்சுவா தத்தின் விளைவும்போம்—வஞ்சியரே
வாயைக் கசப்பிக்கு மாமலையி லுள்ளசுண்டைக்
காயைச் சுவைப்பவர்க்குக் காண்.

### சூரிய காந்தம்

இது ஒரு செடிவகை. இதனால் பித்த எரிவும், நீர்க்கடுப்பும், தொப்புள் வலியும், வாதநோயும், சலதோஷமும் நீங்கும்.

சந்திரகாந் திக்குத் தழலெரிச்சல் நீர்க்கடுப்பும்
உந்தவலி யாவு மொடுக்குங்காண்—சந்திலுறும்
பாரிய வாதம்பருகு நீரேற் றமும்போஞ்
சூரியகாந் திக்குச் சொல்.

### செங்கழுநீர்க் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்குவகை. இக்கிழங்கால் இருமல் பித்தநோய், சர்வமேகம் நீங்கும். விழிக்குக் குளிர்ச்சியாம்

கண்ணுங் குளிர்ந்திருக்குங் காசம்போம் பித்தமறு
மெண்ணரிய மேச மிடையுங்காண்—பெண்ணேகேள்
பொங்கமொடு மாதைப் புணர்த்தவழ லுந்தணியுஞ்
செங்கழு நீர்க்கிழங்கா றேர்

### செங்கீரை

இது ஒரு கீரைவகை. இக்கீரைத்தண்டு தீராத பித்தநோயையும், பெண்களுக்கு ஏற்படும் பெரும்பாட்டையும் நீக்கும்.

செங்கீரைத் தண்டதுதான் தீராத பித்தத்தைத்
தங்காம லோட்டிவிடுந் தையலர்க்குப்—பொங்கும்
பெரும்பாட்டை நீக்கும் பெரிய கரியாந்
தரும்பாட்டு வெப்பகற்றுந் தான்.

### செங்கொட்டை

செங்கொட்டைநெய் தடிப்பு, பரங்கிப்புண், கருங்குட்டம் வெண்குட்டம், கரப்பான், திமிர்வாதம் இவற்றை நீக்கும்.

தாதுவும்பு ரூணமுமாந் தத்துருப ரங்கிப்புண்
கோறி புரியிருமைக் குட்டிணங்கள்—காதுங்
கரிமுகி யூரர் கரப்பான் றிமிர்போ
மெரிமுகிநெய் யாலென் றறி.

## செந்நாயுருவி

இது ஒரு செடி வகை. இதனால் ஏறுவீக்கம், பாண்டு காமாலை நீங்கும்.

ஓதமுறு சோபை யுயர்பாண்டு வைப்போக்குந்
தீதுறுகா மாலைநோய் தீர்க்குமினார்—சூதகநீர்
பொய்ப்புறுகா லத்ததனைப் பொங்குவிக்குக் காரமொடு
கைப்புறு செந்நாயுருவி காண்.

## செம்பருத்தி

இது ஒரு செடி வகை. இதன் பூதாகம், மேகவெள்ளை, ரத்தப் பிரமேகம், பெரும்பாடு ஆகியவற்றை நீக்கும்.

செம்பரத்தை மேகவெட்டை தீராப் பிரமியொடு
வம்பிரத்தை வெள்ளை வழுவழுப்பும் — வெம்பும்
பெரும்பா டிரத்தபித்த பேத மகற்றுங்
கரும்பா மொருமயிலே காண்.

செம்பருத்தித் தீவழலைத் தீயரத்த பித்தத்தை
வெம்புவயிற் றுக்கடுப்பை விந்துவைநீத்—தம்பெனச்செய்
மேக வெட்டையை விழுசிமுதற் பேதியையுட்
பாகத்தை யோட்டிவிடுந் தான்.

## செம்பு

இது ஒரு உலோகவகை. செப்புப்பாத்திரத்தில் உண்டால் உடல் அழகும் நலமும் பெறும். கண்ணுக்கொளிவு உண்டாகும். இரத்த பித்தநோய் விலகும்.

செம்பு கலத்துண்ணதே காரோக் கியமாம்
பம்பிரத்த தோடம் பறக்குங்கா—ணம்புவியி
லண்ணியிடுங் காந்தி யணங்கே விழியொளியாம்
புண்ணியமு நண்ணும் புகல்.

## செம்பை

இது ஒரு செடி வகை. இதன் இலையால் வாயுவின் கட்டிகள், சோபை, வாத சிலேத்தும தொந்தம் விலகும்.

கட்டியொடு வீக்கங் காயது ணீரேற்ற
மொட்டிவரு வாதகப மோட்டுவது – தொட்டுவிடு
மம்பயிலை வேலைவென்ற வங்கண் மடமாதே
செம்பயிலை வேளையெனத் தேர்

## செம்முலைப்பால்

செம்மைநிற மாதர் முலைப்பால் வாதாதி முத்தோடங்களைப் போக்கும்.

கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் காகா—திருநிலத்துள்
நோயணுகாச் செய்ய துடக்கிடையார் தம்முலைப்பால்
தீயமுத்தோ டம்போக்குஞ் சேர்

## செம்முள்ளி

இது ஒரு செடி வகை. இதனால் கபப்பெருக்கம், கணமாந்தம், சுவாசம், கரதோஷம் போகும்.

செம்முள்ளி யென்றார் சிலேத்மம் நடுநடுங்கும்
விம்முமுலை மாதே விளம்பக்கேள்—கம்முகின்ற
மாந்தகண மைய்யமிவை மாறுஞ் சிறுவருக்குச்
சேர்ந்தசுர தோடமும்போஞ் செப்பு

## செருப்படை

இது ஒரு செடி வகை. இதனால் வாதகோபம், மந்தாக்கினி வெள்ளைவீழல், சூலை, குன்மம் போன்றவை நீங்கும்.

செருப்படைக்கு வாதமந் தஞ்சேர்வான் மேக
மிருப்படிகொன் பொல்லா இசிவும்—விருப்படிக்குஞ்
சூலையொடு வாதகுன்மந் தோன்றா தொருநாளும்
வேலையொத்த கண்ணாய் விளம்பு.

## செவ்வந்திப்பூ

இது ஒரு செடியின் பூவகை. இதனால் மூர்ச்சையும் தலைச் சுழலும் நீங்கும். கண்ணுக் கொளியும், முடிச் செழிப்பும் உண்டாகும்.

அலைமயக்கஞ் சுற்றலறு மட்சிக் கொளியாந்
தலைமயி ருண்டா மனலஞ்சாரும்—நிலைமணமா
மொவ்வந்தி வான்புறைய யொத்த நுதற்றிருவே
செவ்வந்தி பூவதனைச் செப்பு

## செவ்வல்லிக் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இது செம்பின் களிம்பை நீக்கும், தவிர அதைச் சிந்தூரமாகும். பித்தப் பிரமேகத்தை நீக்கும்.

செம்பைக் களிம்பகற்றிச் சிந்தூர மாக்கிவிடும்
வெம்புபித்த மேகம் விலக்குங்கா—ணம்புவியி
லல்லிற் கறுத்தகுழ லாரணங்கே நற்சிவப்பா
மல்லிக் கிழங்கென் பது

செவ்வல்லிப் பூவால் கண்நோய், இரத்த பித்தம் இவை நீங்கும்.

செவ்வல்லிப் பூவுக்குச் சேர்ந்திறங்கு நீர்பிணியோ
டொவ்வுமே கப்பிணியு மோய்வதன்றி—யிவ்வுலகிற்
கண்ணினோய் தீருங் கனத்தபித்த ரத்தமொடு
விண்ணினோய் பன்னோயும் போம்.

## செவ்வள்ளிக் கொடி

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் வீறு குட்டம், பெரு வியாதி, கடுவன், மூலம் போன்றவை நீங்கும்.

செவ்வள்ளி யின்கொடிக்குச் சேடித்த குட்டமொடு
கவ்வ குறைநோய் கரப்பானு—மிவ்வுலகின்
மானே குடல்வாதம் வல்ல கடுவனுட
னானபரு மூலம்போ மால்.

## செவ்வியம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் குத்தல், சன்னிபாதசுரம், நீடித்த காசம், தொண்டை நோய் நீங்கும்.

சூலை யருசிசன்னி தொல்லீரும் பீளைபித்த
மேலைக் குரற்கம்மல் வெங்களநோய்—மூலசுரங்
கவ்வியங் கத்தேறு கனதாவர விஷமுஞ்
சவ்வியங் கொள்ளவிடுந் தான்

## சேங்கொட்டை

இது ஒரு கடைச் சரக்கு, இதனால் கிரந்தி, சூலை, குன்மம், திமிர்வாதம். கருங்குட்டம். காணாக்கடி இவை விலகும்.

கிருமி கயஞ்சூலை கிரந்தி திமிர்வாதம்,
பொருமுகுன்ம முண்முலம் புண்ணைத்—தருமா
கரிமுகக் குட்டக் கடிவிடபா கம்போ
மெரிமுகிக்குச் சகமா மெண்.

## சோகி, பீங்கான், மிருகக் கொம்பு, பல்

இவை யாவும் கடைச் சரக்குகள். இவற்றால் சாதிநோயும், பற்பல விழிப்பிணிகளும் நீங்கும். சோகி—பலகறை

சோகிபீங் கானறுக்குந் துன்மாங்கி சந்தனைக்
கோகுதிரை யொட்டை. குரங்குமுவா—வேகப்
பலமிருகப் பல்லெலும்பு பல்விழிநோய் தீர்க்கும்
நலமிகு மாதே நவில்

## சோம்பு

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் யோனி நோய், அசீரணம், கபயிருமல், அதிதும்மல் விலகும்.

யோனிநோய் குன்ம முருட்சை மந்தம்பொருமல்
பேனமரு காசம் பீலிகமிரைப்—பீனவுரை
சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகந்தான்
மூக்குநோ யில்லை யொழி.

## தக்கோலம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் பாண்டுநோய், சுரம், வாதம் போகும். வீரியவிருத்தி உண்டாகும்.

பாண்டுசுரம் போகும் பகரிற் பலஞ்சேருந்
தீண்டுமுப யாசியமுந் தீருங்கா—ணீண்டதொரு
தாதுவிர்த்தி யாகுந் தளர்ந்த மலமுங்கட்டுங்
கோதகலுந் தக்கோலங் கொள்

## தகரை

இது ஒரு செடி வகை. இதனால் வண்டுகடி, நீங்காத தினவு, பித்தநோய், படர்தாமரை, சொறி, சுரம் இவை நீங்கும்.

வண்டு கடியுடனே வன்கடுவனும் பலவாம்
பண்டு நமைபுடையும் பண்டிதர்கள்—கண்டுரையாப்
பித்த கனலும் பெருத்த தகரைவிதைச்
சித்தரைய னில்லா திசை

தகரை படர்தா மரையைச் சொறியைத்
தகர வடிக்குமந்தந் தன்னோ—டிகலான
அத்திசு ரத்தையும தஞ்செய்யு மிம்மூலி
யுத்தமா மென்றே யுறை

## தசமூலம்

வில்வம், பெருங்குமிழ், யானைநெஞ்சில், முன்னை, சிறு மல்லிகை. சிறுவழுதுணம், கத்திரி, பாதிரி, பெருவாகை இப்பத்தும் தசமூலமாம். இவை கடினமான நோய்களைத் தீர்க்கும்.

வில்வம் பெருகுமிழ் மேனெருஞ்சில் முன்னையிரு
மல்லிகை சிறிய வழுதுணைவேர்—நல்லகண்டங்
கத்திரிபுன் காலிபெரு வாகையிவை வன்னோயைக்
குத்துந் தசமூலங் கூறு

## தண்ணீர் விட்டான்

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இது வெகுமூத்திரம், புராதனசுரம், வெள்ளை, உட்சூடு நீக்கும்.

நீரிழிவைப் போக்கு நெடுநாட் சுரத்தையெலா
மூரைவிடுத் தோட வுறுக்குங்காண்—நாரியரே
வெண்ணீர்பெய் சோமனோய் வெட்டை யனற்றணிக்குந்
தண்ணீர்விட் டான்கிழங்கு தான்.

## தமரத்தைப்பழம்

இது ஒரு மரத்தின் பழவகை. இதனால் வாதபித்த தொந்தம், வாந்தி, குரற்கம்மல், கண்நோய், சுக்கில நட்டம், பித்தகோபம், சித்தப்பிரமை நீங்கும்.

வாதபித்தம் வாதகபம் வாந்திகுரற்கம் மல்கண்ணோய்
தாதுநட்டம் பித்தந் தலைநோயோ—டோதுசித்தந்
துற்ற பிறமையும்போம் மொண்டொடியே மாபுளிப்பா
நற்றமரத் தம்பழத்தை நாடு

## தவசிமுருங்கை

இது ஒரு செடி வகை. இது வாதபீனசம், கபம், சுவாசம் பொடியிருமல் நீக்கும்

தவசு முருங்கைத் தழையதற்குக் கேளா
யவசியம் பீனசமுண் டாக்கு—முவசர்க்கி
யையுஞ் சுவாசகப மண்டாது குத்திருமல்
வையம்விடுத் தேகும் வழுத்து.

## தாமரைக் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இதனால் கண் ஒளியும் குளிர்ச்சியும் உண்டாகும். பித்தகாசம், சொறி, வயிறு கடுப்பு நீங்கும்.

கண்ணுக் கொளிகொடுக்குங் காசபித்தம் போக்கு
வெண்ணும் குளிர்ச்சிதரு மேந்திழையே—மண்ணுலகிற்
றாமரைப்புண் ணும்போக்குந் தொந்திக் கடுப்பகற்றும்
தாமரைக் கந்தமது தான்

## தாமரைப்பூ

இது ஒரு கொடியின் பூ வகை. இது பலவிதமான நோய்கள், விழி எரிச்சல், சுரம் போன்றவற்றைப் போக்கும்.

பருத்தநற் றாமரைப்பூ பல்வாந்தி நோயைத்
துரத்திவிடு மின்னுஞ் சொலவோ—கரத்தி
லெடுத்தணைக்கக் கண்குளிரு மேகுஞ் சுரமு
மெடுத்தவி தாகமும்போ மெண்.

## தாமரை விதை

தாமரை விதை எல்லா நோய்களையும் போக்கும்.

மந்தத் துவமகற்றும் வல்லருசி நீக்கிவிடு
மந்தத் துறைதாது விற்கடலே—தந்திடும்பின்
னுன்னிலின்னுந் தோடகுண மியாவுமோட் டுஞ்சலந்
தன்னிலண் ணக்கிரவஞ் சம்

## தாமிரக்கிண்ணி வெந்நீர்

இது கண் புகைச்சலையும் ரத்தபித்தப் பிணியையும், கப நோயையும் நீக்கும் உதிரத்தைப் பெருக்கும்.

இரவிவட்டிற் காம்பிரத்த பித்தங்கள் போக்கும்
இரசிவட் டிற்கைய மேகும்—வருகலப்பு
வட்டிலறல் முத்நோட மாற்றும்வெண் கலச்சலமெய்க்
கொட்டிரத்த தாதுவைச்சேர்க் கும்

## தாமிரபஸ்பம்

இது மருந்துவகையைச் சார்ந்தது. இது பலத்தையும், ஆயுள் விருத்தியும் தரும்.

உருவங் குருபசியும் பெறுமரமும் பெறுமிரமா
மிருகண்ட ருடநயன் பெறுமிகையும் பெறுகுவரே
வறுசெம் புறுமனலிந் தெரிவகையும் கபாடிவகையும்
மருகும் பெருவிதமும் தெரிபவரம் புவிமிசையே.

தாமர பஸ்பஞ் சகலகுட்டங் குறைநோய்
சோம்புகுட்ட மெல்லாந் துரத்துமென்பார்-தேம்பி
யிருக்கின்ற பித்தமுட னீளை சுரஞ்சன்னி
குருக்கின்ற வாயுவும் போக்கும்.

## தாமிரம்

இது ஒரு உலோக வகை. இதனால் ரத்த பித்தம், மகோதரம், கபாதிக்கம், பீலிகம், அசீரணம், வெண்குட்டம், விழிநோய் நீங்கும்.

தாம்பரத்தாற் சோறிபித்தஞ் சன்னி வழுவைகபம்
வீம்பார பீலிகமந்தம் வெண்மேகந்—தேம்பமலை
சூதகநோய் புண்கிரந்தி தோடகவா சக்கிருமி
தாதுநட்டங் கண்ணோய்போஞ் சாற்று.

## தாழை

இது ஒரு மரவகை. இதனால் விந்துவும், ரத்தமும் பிரகாசமா இதன் பூ தீபாக்கினியைத் தரும்.

மடிச்சோற்றான் மங்கையற்கு மாதாந்த பூப்பாம்
வெடிச்சபூ நற்பசி வினைக்குந்-தடிச்சமுலை
சுக்கிலத்தை நெய்யைத் துலக்குவிக்குஞ் சோபையெனு
மக்குலத்தை நீக்கு மறி.

## தாளிச பத்திரி

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் பீனசம், நாட்சென்ற இருமல், வாந்தி, வாய்வு, அசீரணம் நீங்கும்.

நாசிகளுக்குப் பிணிக ணாட்பட்ட காசஞ்சு
வாச மருசிவாம னங்கால்-வீசிவரு
மேகமந்த சுத்திசுரம் விட்டேகுந் தாளிசத்தா
லாகுஞ் சுகப்பிரச வம்.

## தாளிப்பனை

இது செடியின் சமூலவகை. இதன் சோறு மலங்கட்டும். பிழி என்கிற கள்ளு மாமிசத்தை வளர்ப்பிக்கும்.

எழுத்திற் கிடமா யிருக்குநெடுங் காலம்
வழுத்தில்தன் மாழை மடலாற்-கழுத்திலுறுஞ்
சோறு மலமிருக்குந் தூறுமாளைப் பிழியா
மூறும்உடலுக் கிந்தாளிக் கோர்.

## தான்றிக்காய்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் சிலந்திவிஷம், திரிதோட சுரம், ரத்த பித்தம், உட்சூடு நீங்கும்.

சிலந்திவிடங் காமியப்புண் சீழான மேகங்
கழந்திவ்ரும் வாதபித்தங் காலோ-டடர்ந்துடலி
லூன்றிக்காய் வெப்ப முதிரபித் துங்கரக்குந்
தான்றிக்காய் கையிலெடுத் தால்

## திப்பிலி

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் காசம், கபகுன்மம், சுவாசம், சயம், கோழை, பாண்டு, மூர்ச்சை, விழிநீர்க் கம்மல் முதலியவை நீங்கும்.

இருமல்குன்ம மிரைப்ப சயப்பிணி
யீளைபாண்டு சன்னியாச மரோசகம்
பொருமலூதை சிரப்பிணி மூர்ச்சைநோய்
பூரிக்குஞ் சலதோடம் பீலிகமும்
வருமலப் பெருக்கோடு மகோதரம்
வாதமாதி முத்தோடஞ் சுரக்குளிர்
பெருமலைப்புரி மேகப் பிடகமும்
பேருந்திப்பிலிப் பேரங் குறைக்கவே.

திப்பிலியின் றண்டுலஞ்சி லேத்மத்தைப் போக்கிவிடு
முப்பிசத்தை மேகத்தை யோட்டுங்காண்-தப்பாமல்
வாத சுரந்தணிக்கு மாகபரோ கந்தொலைக்குந்
தாதுவைவ ளர்ப்பிக்குந் தான்.

ஆசனநோய் தொண்டைநோ யாவரண பித்தமுத
னாசிவிழி காதிவைநோய் நாட்புழுநோய்-வீசிவிடு
யங்கலாஞ் சனஞ்சிதையு மப்பா யழிவிந்தும்
பொங்கலாஞ்ச நக்கையர்கோட் போல்

**திப்பிலி** மூலம்: இது ஒரு கடைச்சரக்கு. இதனால் **பித்த** தாகம், காசம், சுக்கிலரோகம், சரீரநோவு போகும்.

தாகபித்தஞ் சோகந் தணியாச் சுரமிருமன்
மேகங் குரற்கம்மன் மெய்க்கடுப்பு-வேகுங்காண்
திப்பிலி மூலங்கண்டத் திப்பிலிய தாநறுக்குத்
திப்பிலியென்றே யொருகாற் செப்பு.

## திரிகடுகு

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் பாண்டு, **தலைநோய்** கபபித்தம், பாம்பு விஷம், கோழை காசம் நீங்கும். **திரிகடுகு** என்பது சுக்கு, மிளகு, திப்பிலி ஆகும்.

முக்கடுகா லாகியநோய் மூலங் கொடிறுவிணி
திக்கடு பாண்டோடு சிரத்துறுநோ-யக்கடுக்குந்
தாவரநஞ் சென்றுலகிற் சாற்றுகின்ற நோய்முழுதுந்
தீவரநஞ் சுண்டிறக்குந் தேர்.

திரிகடுகாற் சீதபித்தஞ் சிக்குவை நோய்க்கீட
மெரிக்கடுதே வீளையிரு மன்முடுக்கு-தெரிசன்னி
யாம ழிசியப்பஸ்மார மற்புதப்புண்
வீசுசர்க் கராநோய்போம் விள்.

## திரிபலை

இது ஒரு கடைச்சரக்கு. இது வெள்ளைக் குட்டம், **புகை** யிருமல், பாண்டு, பெருவியாதி, குன்மம், மூர்ச்சை, **வயிற்றுநோய் நீக்கும்.**

வித்திரதி நாசிநோய் வெண்குட்ட மாசனப்புண்
குற்றிருமல் பாண்டுகுட்டங் குன்மமிரைப்-பொற்றுமத
மூர்ச்சைபீலி கம்பிரம மோடுறுபுண் சர்வவிட
மூர்ச்சையறு முப்பலத்தான் முன்.

## திருநீற்றுப்பச்சை

இது ஒரு செடிவகை. இது கபவாந்தி, உதிரவம்மை, பித்தசுரம் போன்றவற்றை நீக்கும்.

திருநீற்றுப் பச்சை சிலேத்ம சர்த்திதன்னை
விரிநீற்றைப் போலாக்கு மெய்யே—பெரிய
சுரத்திரத்த வாந்தி சுரம்ருசி நில்லா
வுருத்திரச் சடைக்கே யுரை.

## தினை

இதுஒரு தானிய வகை. தினைமாசாதம் சிலேத்மவாத தொந்தத்தை விலக்கும். வீரியத்தை விருத்தி செய்து வாதகோபத்தை நீக்கும். அதன் கஞ்சி வீக்கதோட வருக்கங்களை ஒழிக்கும்.

தினைமா கபவாதந் தீர்க்கு மதன்சாதம்
புனைபித்த மாயினுநற் போகந்-தனைக்கொத்து
வாதம்போக் குங்கஞ்சி மாசோபைத் தோடமிதன்
பேதம்போக் குமெனவே பேசு.

## துத்தநாகம்

இது ஒரு உலோகவகை. இது விரணப் பிரமேகம், அதிசாரம் வெள்ளை, உட்சூடு, பித்தம் போக்கும்

மேகங் கிளர்பேதி வெட்டையழலைத் தணிக்கும்
வேகங் கிராணி விலக்குங்காண்-போகாப்
பரியமுளைப் புண்ணைப் பயித்தியத்தைப் போக்கு
மரிய துத்தநாக மது.

## துத்தம்

இது ஒரு கடைச்சரக்கு. இது கரப்பான், கருவிழி மந்தார காசம், இமைப்பில்ல நோய், கண்ணோய், குந்தநோய் நீக்கும்.

முற்றிற் குறிப்புண் முனைவிரணஞ் சென்னிதனைப்
பற்றிநின்ற வாதம் படர்கரப்பான்-சுத்தவிழிக்
காசங் கணம்பில்லங் கண்ணோய்த் தொலையும்
வாசமிகு துத்தத்தால் வாழ்த்து.

## துத்தி

இது ஒரு செடிவகை. இதனால் மூலநோயும், கிருமி விரணமும் போகும். இதன் இலையை ஆமணக்கு நெய்யால் வதக்கிக்கட்ட மூலநோய் தீரும்.

மூலநோய் சட்டி முளைபுழுப் புண்ணும்போஞ்
சாலவதக்கிக் கட்டத் தையலே-மேலுமதை
எப்படியே னும்புசிக்கி லெப்பிணியுஞ் சாந்தமுறு
மிப்படியிற் றுத்தியிலை யை

துத்திப் பூவால் ரத்த வாந்தியும், காசநோயும் நீங்கும். சுக்கில விருத்தியும் உடற்குளிர்ச்சியும் உண்டாகும்.

துத்தி மலரைநிதந் துய்க்கின்ற பேர்களுக்கு
மெத்தவிந்து வும்பெருகு மெய்க்குளிருஞ்-சத்தியமே
வாயால் விழுமுரத்த மாறு மிருமலறுந்
தேயா மதிமுகத்தாய் செப்பு.

துத்திவிதையால் கருமேகம், உட்சூடு, குட்ட நோய் நீங்கும்.

கைகாலிற் படர்ந்த கரமேகம் போயொழியு
மெய்யிலுறு குட்டம்போம் வெப்பகலுந்-துய்யதிரை
யத்திதனை யொத்தவிழி யாரணங்கே நாட்டலுறுந்
துத்தி விதையைச் சுவை.

## தும்பை

இது ஒரு கொடிவகை. இதனால் விஷங்கள், வாதநோய், தலைவலி, கபதோடம் நீங்கும்.

சீறுகின்ற பாம்போடு சிலவிஷங்கள் சென்னிவலி
யேறுகப மாந்த மிருக்குமோ-நாறுமலர்க்
கொம்பனைய மாதே குளிர்சீத சன்னிவிடுந்
தும்பையிலை யென்றொருகாற் சொல்.

தும்பைப்பூவால் தாகநோய், விழிநோய்கள் நீங்கும்.

தாகங் கடிந்தொழியுஞ் சன்னிபா தங்களறு
மாகந் தனில்வருநோ யண்டுமோ-மாகந்த
வம்பைப்பீ றுங்குயத்து மாதேநின் செங்கரத்தாற்
றும்பைபூத் தன்னைத் தொடு.

### துருசு

இது ஒரு கடைச்சரக்கு. இதையே மயில் துத்தம் என்பர் இதனால் கண்ணோய், முக்குற்றம், வாதசீதசுரம் நீங்கும்.

புண்ணாற்றுங் காமியத்தின் புண்ணாற்றுங் கண்ணோயை
விண்ணேற்று முத்தோட வீறடக்குஞ்—சண்ணுகின்ற
வாந்தியொடு பேதிதரும் வாய்நோய் சுரந்தணிக்குங்
சாந்தி தருந்துரிசி காண்,

### துவரை

இது ஒரு காய்த்தானிய வகை. உப்பில்லாப் பத்தியத்திற்கும் சுரத்திற்கும் இதன் கஞ்சி உதவும்.

பஞ்சமுட்டிக் காகுமரும் பத்தியவி யஞ்சனமாம்
விஞ்சுசுரஞ் சன்னிகட்கு மெத்தநன்றாம் - பஞ்சின்
விழுந்துவரை யாதுமெ லிந்தாரைத் தேற்றுந்
கொழுந்துவரை யாயினி கொள்.

### துளசி

இது ஒரு செடி வகை. இதனால் கபதோடம், வயிறுளைதல், ருசி நீங்கும்.

ஐய்யம் வயிறுளைச்ச லத்திசுரந் தாகமும்போம்
பைய்யசுர மாந்தம் பறக்குங்காண் - மெய்யாக
வாயின ரோசகம்போய் வன்காரஞ் சூடுள்ள
தூய துளசிதனைச் சொல்.

### தூதுளை

இது ஒரு கொடி வகை; இதன் சமூலம் உண்டிக்குச் சுவை தரும். பூ சுக்கில தாதுவைப் பெருக்கும். காய் திரிதோடமும், வேரும் கொடியும் சிலேத்ம நோய்களையும் போக்கும்.

தூது பத்திரியூண் சுவையாக் கும்பூ
காது வைத்தழைப் பித்திடுங் காயது
வாத பித்த கபத்தையு மாற்றும்வே
ரோதும் வல்லி பன்னோயு மொழிக்குமே.

தூதுளைப் பூ:- தூதுளம் பூவால் உடல் வளர்ச்சி சுக்கில தாது விருத்தி, வனப்பு உண்டாம்.

புட்டியுண்டாந் தாதுவுமாம் பொங்கழகோ றன்மிகு
முட்ட நரைத்து முதிர்ந்த மனைக் - கட்டழகு
மாதுளத்தி னீங்காது வைத்திடவு மெண்ணமுற்றார்.
தூதுளத் தின்வுண்ணச் சொல்.

**தூதுளங்காய்:-** இது கபநோய், பயித்திய தோடம்' பித்த வாதம் நீக்கும்.

ஐயமுடன் பித்த மகலு மரோசகம்போந்
தையலே வாதந் தணியுங்காண் - வையமிசை
யோதுங் குடல்வாத மோடு மலமொழிந்
தூதுளங் காயுண்ணச் சொல்.

**தூதுளம் பழம்:-** இதனால் இறுகிய மார்புசளி, சயம் சல தோஷம், சர்ப்பவிஷம் நீங்கும்.

கபக்கட்டு கோழை கத்திரி தோடங்
குபுக்கென் றெழும்பு நீர்க்கோவை - கபுக்கென்
றழுத்துவிஷ மும்போ மடர்தூ துளத்திற்
பழுத்து விழும்பழத்தார் பார்.

## தெங்கு

இது ஒரு மர வகை. தெங்கின் குருத்தால் கபமும், ரத்த மூலமும் நீங்கும்.

தென்னங் குருத்தாற் சிலேத்ம வலிநீங்கு
மன்னுதிர மூலமது மாறுங்கா - ணுண்ணும்
பனங்குருத்தைத் தின்றாற் பகருதிர மூலங்
கனம்பெருகும் பேதியுமாங் காண்,

தென்னம் பூவால் பிரமேகம், உட்காய்ச்சல், ரத்த பித்தம் நீங்கும்.

மேக மகக்கொதிப்பு வீறு விரத்தபித்தம்
வேக வசிர்க்கரநோய் வீழ்பிரமி - தேகத்தில்
வின்னம்பா லிக்கும் விஷபாகம் போகவென்றார்
தென்னம்பா ளைப்பூவைத் தின்.

தேங்காய்ப் பாலினால் வாதவிகாரம், பித்தாதிக்கம், கரப்பான் நீங்கும். சுக்கிலப் பெருக்கம் உண்டாகும்.

வாதாம் பித்தமுறும் வன்கரப்ப னும்படருந்
தாதுவும்வி ருத்தியாந் தார்குழலே - யோதநல்ல
அன்ன மிறங்கு மதியுரிகை யுண்டாகுந்
தென்னங்காய் பாலாற் றெளி.

## தேவாரம்

இது ஒரு மரவகை, இது மூக்குநோய், பழைய சுரம், சலதோஷம், உடல் வெப்பம் நீக்கும்

தேவ தருக்குணந்தான் சேர்த்துவளர் பீனசத்தை
காவகத்தி லோட்டுங் காப்பலவே - பாவலர்கள்
சொல்லும் புராண சுரமொடுநீ ரேற்றத்தை
வெல்லு மணற்றணிக்கும் விள்.

## தேள்கொடுக்கு

இது ஒரு செடி வகை. இதனால் நமைச்சல், பழைய விரணம், கடுவன், கணமாந்தம் விலகும்.

தேட்கொடுக்குண்டாயிற் றினவடக்குந் தப்பாது
நாட்பட்ட புண்கரப்பான் நாசமாங் - கீட்பட்ட
மாந்த கணமுமறு மானிலத்துட் சிலவிஷம்போம்
போந்த மருந்தாகும் புகல்,

## தேற்றாங் கொட்டை

இது ஒரு மரத்தின் வித்துவகை, இதனால் பிரமேகம், வெட்டை, உட்சூடு நீங்கும். கண்ணுக்கு மருந்தாம்.

பிரமிவெள்ளை வெப்புபசி பேரராக டுப்போ
டெரிகிரிச்சு ரம் புண்ணு மின்றாம் - வருமந்தத்
தேற்றாங்கொட் டைக்கஃதோ தீட்ட மருந்தாகுந்
கூற்றாங்கண் மாதேநீ கொள்.

தேற்றான் விதையின் குணத்தைத் தெளிந்துதான்
சாற்றும் படிகேட் டிடுந்தையலே - ஆற்று
பிரமேக மடங்கலும் போற்றுவார் கண்ணின்
திரிதோடம் போக்குமே தான்.

தேற்றான் பழத்தால் வாத இருமல், இரைப்பு, முக்குற்ற நோய்கள் நீங்கும்.

தேற்றான் சனிதனக்குச் சேயிழையே வன்காசந்
தேற்றா தொழியுஞ் சுவாசமும்போம் -தின்மிகு
வாந்தி பெருகும லம்போமுத் தோடத்தைச்
சேர்ந்த பிணிகளும்போஞ் செப்பு.

## தேன்

இது ஒரு மதுரவகை. இதனால் பித்த அரோசகம், வாந்தி நீங்கும். நெஞ்சிற் கோழைகண்டுண்டாம்.

அனலா லெழுந்த வருசிசர்த்தி தாழும்
புனலாருங் கோழையது பொங்கும் - கனலாருந்
தேன்பாகுக் கென்றுமதைச் சேரொ டதியதனால்
கான்பாவ நோய்க்கூட்டங் காண்

## நத்தைக்கறி

இது ஒரு கறிவகை. இதனால் மூலமுளையும், மலாசய பிணிகளும், அசீரணமும் நீங்கும்.

நத்தைக் கறிதனக்கு நாடாது மூலமத
லொத்தமல ரோகமெலா மொடுங்கா - ணித்தநித்தந்
தின்றாற் செறியாது தேடறிய தாதுவிர்த்தி
நன்றாகு மாதே நவில்,

## நந்தியா வட்டம்

இது ஒரு செடி வகை. இதனால் விழிநோய்கள், தலைநோய் போன்றவை தீரும்.

காசம் படலங் கரும்பாவைத் தோடமெனப்
பேசுவிழி நோய்கடமைப் பேர்ப்பதன்றி - மோசைதரு
தந்திபோ லேதெரித்துச் சாருமண்டை நோயகற்று
நந்தியா வட்டப்பூ நன்று.

## நவாச்சாரம்

இது ஒரு கடைச்சரக்கு. இது வயிற்றுவலி, குடற் குத்தல், திரிதோடம், வாதநோய் நீக்கும்.

குன்மங் குடற்சூலை கொல்லு மகோதரத்தை
வன்மையுறு கல்லடைப்பை மாற்றுங்காண் - சன்மக்
கவிச்சுமுத் தோடங் கனவாத நீக்கு
நவச்சார மாதே நவில்,

## நன்னாரி

இது ஒரு செடி. இதன் வேரையரைத்துத் தேனிற்பாகுஞ் செய்துண்டால் அதிபித்தந்தீரும். தாகம், வாய்நீர்ச்சுரப்பு, சுர வேகம் போகும்.

நன்னாரி வேரை நருக்கி யரைத்துமதன்
வின்னாரி யூணால் வெதும்பியே - தின்னவெறி
தோணாது கற்றாழைச் சோற்றில் கலந்துண்ணக்
காணாது வண்டு கடி.

சலதோடம் பித்த மதிதாக முழலை
சலமேறு சீதமின்னுர் தஞ்சு - டுலகமகிற்
சொன்மதுமே கம்புண் சுரமிவையெ லாமொழிக்கு
மென்மதுர நன்னாரி வேர்.

## நாகணம்

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் தலைநோய், சலதோடம் மலட்டு நோய், நீங்காத கண்நோய் நீங்கும்.

தலைவலி நீரேற்றந் தலைவிடுப்புக் குத்தற்
றொலையாம லட்டுநோய் சோமை - நிலைவிழிநோய்
பாகனையசொன் மின்னே பருமுதர ரோகமும்போ
நாகணத்தி லேநீ நவில்.

## நாகமல்லி நாகமுட்டி வேர்

இது ஒரு கொடியின் வேர்வகை. இதனால் ஒழியாத்தினவும். கிருமியும் நீங்கும்.

சீராரு நாகல் வகைச்சினவரைக் கண்டாக்காற்
றீரா நமைச்சற் செறிபுடைக்க - ணீராருஞ்
சுன்னப் புழுச்சங்கந் தாங்காவாஞ் சாம்புனத
வன்னக் குயிலனையாய் வாழ்த்து.

## நாகப்பூ

இது ஒரு கடைச்சரக்கு. இது வாதம், காசம் இவைகளை நீக்கும.

சிறுநாகப் பூவினது கெங்கைதனைச் சொல்வோங்
குறியாடு மேகத்தைக் கொல்லு - நெறியைவிட்டு
நீதாற்செல் வாயவைந் தீர்க்குமிரு மற்போகுங்
கோதா யிதையறிந்து கொள்.

## நாணல்

இது ஒரு புல் வகை. நாணற்கரும்பின் ரசத்தினால் வாத பயித்தியம், இரைப்பு, பாண்டு நோய் நீங்கும்.

வாயுபித்தம் வாந்திநீர் மாறுமதி தூல
நோயுளெ ழும்வயிற்றி னோய்கலங்கு - மோயாத
ஈளையொடு பாண்டு மெதிரா தடங்கிநிற்கு
நாளுநா ணற்கரும்பி னால்.

## நாய் வேளை

இது ஒரு செடி வகை. நாய்வேளையால் வாதப் பொருமல், தேகக்கடுப்பு, குத்தல் நீங்கும்.

வாத முடற்கடுப்பு வன்சூலை காதிரைச்ச
லோதமிகு நேசமு மோடுங்காண் - போதெரிந்து
காய்வேளைக் காயும் விருக்காரிகை யேவையமதில்
நாய்வேளை யுண்டு நவில்.

## நாயுருவி

இது ஒரு செடி வகை. இதன் வேரால் முகம் வசீகரமாகும் இலை ரத்த மூலம் கப நோய், பிரமேகம் இவற்றை விலக்கும். விதை பசியை நீக்கும். சமூலம் சாம்பல் பிரசவித்த மாதர்க்கு உதிரச்சிக்கலை ஒழிக்கும்,

மலிகாரங் கைப்புள்ள அபமார்க்கியின் வேரால் வசிய முண்டா
மிலைமூல வுதிரமந்தம் பேதிகபம் வியர்வுதந்தி யிறங்கு மேகம்
மலையேறும் படிபுரிய முள்ளரிய பசிமாற்று மதன்சமூலம்
பலமாதர்க் குள்ளமுக்கை நீங்கும் வங்கசிந்தூர ம்பண்ணு மாதோ

## நாரத்தை

நாரத்தங்காயால் வாதநோயும், மலக்கிருமியும் நீங்கும். பசி யுண்டாம். உடற் சுத்தியாகும்.

நன்றி யறவுலகி னாரத்தங் காயருத்த
வென்றி தரும்புளிப் பான்மெச்சும்—மன்றியுமோ
வாதமொடு குன்மமறும் வாற்கிருமி யும்போகுங்
காதலுறு திபனமாங் காண்.

நாரத்தம் பழத்தாற் பித்தம் நீங்கும்.

பித்தவழிக் குன்றுமறும் பேராத தீபனமாம்
வித்தான தாதுவும் விளைந்திடுங்காண்—முத்திணைத்த
வாரத்தைத் தாங்குமுலை யாயிழையே யெக்காலும்
நாரத்தை யின்கனியி னால்.

## நாவல்

இது ஒரு மரவகை. நாவற்பட்டையால் வாயிற்பிறக்கும் நோய்கள், இருமல், பெரும்பாடு போன்ற நோய்கள் தீரும்.

ஆசிநோய் காச மசிர்க்கரஞ் சுவாசவினை
கேசமுறு பாச கிரகநோய்—பேசரிய
மாவலிங்க லாஞ்சனமிவ் வண்பிணி யெலாமேகு
நாவலறு பட்டை யதனால்.

நாவல் மரவேரால் வாதவிகாரம், கரப்பான், ரத்தசீதபேதி விலகும்.

வாத மறுங்கரப்பான் மாறும் விரணமோ
டோதமுறு நீரிழிவு முந்துரத்த சீதமுங்காய்
மாவன் சுரமும் வளர்மேக மும்போகும்
நாவன் மரவேரி னால்.

நாவற்பழத்தால் அக்கினி மந்தம், உடல்வலி, சீததாகம் நீங்கும்.

மாந்தம் வீளையும் வலிகரப்பா னுண்டாகுஞ்
சேர்ந்ததொரு நீரிழிவுஞ் சேருமே—காந்தலொடு
வாயவங்க டுப்பும் வருங்கொதிப்புந் தாகமும்போந்
தூயநா வற்பழத்தாற் சொல்.

## நாவி

இது ஒரு கடைச் சரக்கு. சுத்தி செய்த நாவியினால் வாதக் கடுப்பு, அசீரணம், சலதோஷங்கள், குட்டம் நீங்கும்.

வாதவலி மந்தமறன் மாறாக் கபப்பிணிக
ளோதுகுட்டு குன்மங்க ளோடுங்காண்—காதலர்தம்
புத்தியோ டாயிரும் பூவும் வணைகுழலே
சுத்திசெய்த நாவியின்பேர் சொல்.

## நிம்பம்

இது ஒரு மரவகை. இதுவே வேம்பு எனப்படும். இதன் இலையால் புண், புழுக்கள், பெருவியாதி, மாந்தம் நீங்கும்.

கிருமிகுட்ட மாந்தங் கெடுவிடஞ் சுரங்கள்
பெருமியவ சூரிகையின் புண்க—ளொருமிக்க
நிம்பத் திலையிருக்க நீடுலகி நீங்காமற்
கம்பத் திலையிருக்கக் காண்.

## நிமிளை

இது ஒரு கடைச் சரக்கு. பொன், வெள்ளி, வெண்கலம், செம்பு என்னும் நான்கு வித நிமிளைகளும் விந்துவை வளர்க்கும். அதி பித்தத்தையும், சன்னியையும் நீக்கும்.

தாதுவை வளர்க்குந் தனிப்பித்தத் தைப்போக்கு
போதுசன்னி பாதத்தை யோட்டுங்கா—ணோத
வொருநா வுறாதே யுயர்பொன் முதலா
மொருநால் வகைநிமிளை யும்

## நீர்ப்பூலா

இது ஒரு செடி வகை. இதனால் மாந்தம், சூடு, வயிற்றிரைச் சல் அதிமூத்திரம் ஒழியும்.

மாந்தங் கணம்பொருமல் மாறாச் சலத்துடனே
சேர்ந்த சொறிசிரங்குந் தீருங்காண்—ஏந்தெழிலைச்
சேர்ப்பாகக் கொண்ட செழிந்திருவே பூவிலுறை
நீர்ப்பூலாப் பூண்டை நினை.

## நீர்முள்ளி

இது ஒரு செடி வகை. பாண்டு, மூத்திரச்சிக்கல் போன்றவை இதனால் விலகும்.

பாண்டு குளுப்பைய றும்பாரித்தநீ ரேற்ற
மாண்டுவிடு நீர்க்கட்டு மாறுங்காண்—பூண்டதொரு
வீக்கமெலா நீதாய் விடுமேநீர் முள்ளிக்குத்
தாக்கு மயில்விழியாய் சாற்று.

நீர்முள்ளி விதையால் பிரமேகம், அதிசாரம், கபசோகை, அயர்ச்சி நீங்கும்.

வித்துயுமாந் தாதுவுமா மேகரோகந் தொலையு
முந்துமதி சார மொழியுங்காண்—வந்துளலி
லேறிபய நீர்வீக்க மிறங்கு மிளைப்புமறுங்
கூறியநீர் முள்ளி விதைக்கு.

## நிலக்குமிழ்

இது ஒரு செடி வகை. இதனால் சலமந்தப்பேதி, விழி சொருகல், வாதக்கடுப்பு, மந்தம் நீங்கும்.

பேதியொடு கண்சொருகற் பேராத சீதளமும்
வாதவலி கொட்டாவி மாந்தமும்போம்—ஓதச்
சலக்குமிழை யொத்த தனக்கருங் கண்மாதே
நிலக்குமிழைக் கையிலெடு நீ.

## நிலப்பனை

இது ஒரு மரவகை. இதன் கிழங்கால் மூத்திர வெப்பமும் வெள்ளை குட்டமும், நீலாஞ்சன நோயும் போகும்.

மேக வனற்றணியும் வெண்குட்டந் தான்விலகும்
போக மிகவுமுறும் பொற்கொடியே—போகாத
சூலைமே கங்களொடு துன்னுகரும் புள்ளியும்போஞ்
சால நிலப்பனைக்குத் தான்.

## நீலம்

இது நவரத்தினங்களில் ஒன்று. நீலத்தினால் குதிக்கால் நோவு, மேகநீர், அதிபித்தம், பாண்டு, மனச்சோர்வு நீங்கும். நல்லறிவும், மிகுசுக்கிலமும் உண்டாகும்.

குதிவலி மேகபித்தங் கூறறிய பாண்டு
மதிமயக்க மெல்லா மருளு—மதிநுதலே
புத்தியொடு மேன்மேலும் போகசுக முண்டாகுஞ்
சுத்தநறு நீலத்தாற் சொல்

## நீலாஞ்சனம்

இது ஒரு பாடாண வகை. இதனால் ரசவன்னிதோடம் பிரமேகம், விழிப்பிணி, புழுவெட்டு, ரத்தபித்தம் இவை விலகும் குளிர்ச்சி, அழகு, பலம் மிகும்.

வன்னியறு வெட்டுப்புண் மாபிரமி யக்கிச்சூர
சன்னியனங் கீடவெட்டு தாகஞ்சூ—டுன்னசிர்க்கு
நீங்கு நீலாசனத்தா னீடொளிதண் ணேருக்க
மோங்கு நீலக்குயிலே யோர்.

## நீலோற்பலம்

இது ஒரு கொடி. இதன் பூ பெரும்பாட்டையும் கபநோயையும் போக்கும்.

பிரசவித்தா ரைத்தேற்றும் பேரசிர்க்கை மாற்றும்
வருசிலேத் மப்பிணியை மாட்டுந்—துருசாம்
விபராக ரோகம் விலக்கும் புவியிற்
றடமாக்கு நெய்தற் றான்.

## நெய்ச்சட்டி

இது ஒரு செடி வகை. இதனால் வீரியவிருத்தி, கண் ஒளி, பசி, அழகு உண்டாகும். பித்தமேகம், வெள்ளை, உட்சூடு, தாகம் பித்தகோபம், அழற்சி, வாந்தி இவைகள் நீங்கும்.

நெய்ச்சட்டி யொன்றால் நிறைமெய்யுட் சுக்கிலமும்
பொய்ச்சிட்ட கண்ணொளியாம் பூவையரே-வெய்ச்சிட்ட
மேகமறுந் தீபனமாம் வெட்டை யழலுந்தணியுந்
தாகமறும் பித்தமும்போந் தான்.

தூயழ குறப்புரியுஞ் சூதகந்த மாதிகளால்
வாயழுகி நாறுபுண்ணை மாற்றிவிடுந்—தீயழலை
நீக்கிவிடு நிம்பநெய்யை நெய்யாக்கிவிடும் வமனம்
போக்கிவிடு நெய்ச்சட்டிப் பூண்டு.

## நெய்தல்

இது ஒரு செடி வகை. இதன் கிழங்கு அக்கினிப் புண், பித்த எரிச்சல், பிரமேகம் நீக்கும். விழிக்குளிர்ச்சியும், சுக்கில விருத்தியும் உண்டாகும்.

கண்ணுங் குளிருமக்கி காணாது காந்தபித்த
மெண்ணுந்தோ டம்மேக மேகுங்காண்—பெண்ணே
வயிற்றுக் கடுப்புரத்த மாறுநெய் தலுக்குப்
பயித்தியம்போம் விந்தூறும் பார்.

## நெருஞ்சில்

இது ஒரு கொடி வகை. இதன் விதை மூத்திரக்கட்டு, சதை யடைப்பு போன்றவற்றை நீக்கும்.

சொல்லவொண்ணா நீர்க்கட்டு துன்பமாமிச மருகல்
கல்லடைப்பெ ணும்பிணிகள் கண்டாக்கால்—வல்லக்
கருஞ்சினவேற் கண்மாதே காசினியிற் றோன்று
நெருஞ்சி னறும்வித்தே நினை,

## நெல்லி

இது ஒரு மரவகை. நெல்லிவேரால் வாந்தி, திரிதோட கோபம், தருணசுரம் நீங்கும்.

வமன மரோசியலும் வாதமுதன் மூன்றுஞ்
சமன முறுமலமும் சாரும்—மமனசுரம்
புல்லிவரு தோடசன்னிப் பொல்லாச் செயலும்போம்
நெல்லிமர வேரை நினை

நெல்லிக்காயால் பயித்தியம், கபநோய், பீனசம், வாந்தி, மலபந்தம், தலைச்சூழல் போகும். காமன் அழகுண்டாம். வாயுவும் கபமும் நீங்கும்.

பித்த மனலையம் பீனசம்வாய் நீர்வாந்தி
மத்த மலக்கட்டு மயக்கமுமி—லொத்தவுரு
வில்லிக்கா யம்மருங்கா மென்னாட் காலந்தேர்ந்தே
நெல்லிக்கா யம்மருந்து ணீ.

நெல்லிக்காய்க் குப்பித்த நீக்கு மதன்புளிப்பாற்
செல்லுமே வாதமதிற் சேர்துவப்பாற்—சொல்லுமையு
மோடுமிதைச் சித்தத்தி லுன்ன லனனுடனே
கூறுபிர மேகமும்போங் கூறு.

## நெல்லி முள்ளி

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் உட்சூடு, இரத்தபித்தம், பித்தவாந்தி நீங்கும். இதை அரைத்துத் தலைக்கிட்டு முழுகக்கண் குளிரும்.

ஆகவன லஞ்சசியர்க் கென்புருக்கி கண்ணோய்
தாக முதிரபித்தந் தாதுநட்டம்—மேனகத்தி
னில்லிமுள்ளி போலருக லெண்கா மியவியங்க
நெல்லிமுள்ளி யாற்போம் நினை.

நல்லநெல்லி முள்ளியது நாவுக் குரிசைதரு
மல்லல் விரிபித்த மகற்றுமதை—மெல்லத்
தலைமுழுகக் கண்குளிருந் தாவுபித்த வாந்தி
இலையிழிமே கங்களும்போ மெண்.

## நேர்வாளம்

இது ஒரு கடைச் சரக்கு. நேர்வாளப் பருப்பால் பழைய மலமும், அதைப் பற்றிய பல பிணிகளும், வாத நோயும் போகும்

ஓதி லுரதத் துறுமலம்பன் னோய்விலகும்
பேதி மருந்திற் பெரிதாகும்—வாதமறுங்
கூர்வாளை யொத்தவிழிக் கொம்பனையே—
பண்டிதர்சொன்
னேர்வாளக் கொட்டைதனை நீ

## நொச்சி

இது ஒரு மரவகை. இதன் பட்டையால் நரம்புச், சிலந்தியும், வாதமும் நீங்கும்.

நரம்புஞ் சிலந்தி நளிர்வாத சன்னி
யுரம்பெரிய வாதமிவை யோடும்—பெரும்புவியிற்
கள்ளிமறப் பட்டையினால் காரநொச்சிற் பட்டையது
துள்ளு சன்னிவாத மகற்றும்.

## பச்சைக் கற்பூரம்

இது ஒரு கடைச் சரக்கு. இது பயித்தியம், மயக்கம், நாசி நோய், தாக நோய் நீக்கும், வசியத்துக்கு உதவும்.

ஈசனென் னும்பூரம் வெண்மையும் காரமுமாம்
பேசரிய சீதமுட்ணம் பித்தமயல்—வீசுகின்ற
பீனசமுட் டாகமிவை பேர்த்துவி டுங்காந்தி
யான ததுவசிய மாம்

## பச்சைப்பயிறு

இது ஒரு காய்த் தானிய வகை. இது பித்தத்தை நீக்கும் வாயுவைத்தரும்.

பச்சைப் பயறதுதான் பாரிற் பயித்தியத்தை
யச்சமற நாளு மகற்றுங்காண்—கச்சுலவு
கொங்கைமட மாதே குளிர்ச்சியென்பா ரெப்போதுந்
தங்குவா தத்தைத் தரும்.

## பச்சை உடை

இதனால் உட்சூடு, சிலேத்ம தோடம் போகும். கண்ணுக்குக் குளிர்ச்சி ஆகும்.

மெய்யழலை யேகும் விழிக்குக் குளிர்ச்சியுண்டாம்
பொய்யி லுடலமெல்லாம் பூரிக்கு—மைய்யமுறு
நஞ்சை நிகரு நளினவிழிப் பெண்ணமிர்தே
பச்சையுடை யின்குணத்தைப் பார்

பசலை

இது ஒரு கீரை வகை. மிகு சுவையுள்ள இக்கீரை தாகத்தையும் சூட்டையும் தணிக்கும். மலம் இளக்கும்.

போகமிகக் கொடுக்கும்போர் செய்கபத் தைப்பெருக்கு
மாகமதிற் றாகமன லைத்தணிக்கு—மாகுடரின்
மன்னு மலமிளக்கு மாறா வுரிசைதருந்
தின்னுஞ் சிறுபசலைத் தேர்.

பசு

பசுவின் பால், தயிர், நெய், வெண்ணெய், நீர் போன்ற பல பொருட்களும் கண் மருத்துவத்தில் பயன்படுத்தப் படுகின்றன.

பசுவின்பால் : பொதுவாக, பசுவின் பாலால் பழைய சுரம், விரணம், சூலை போன்ற பல நோய்களும் தீரும்.

பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணாளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர்— ஏலுமிவர்
எல்லார்க்கு மாகு மிளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய்ப் பசுவின்பால் நாட்டு

வெண்ணிறப் பசுவின்பால் பித்தகோபத்தையும், செம்மை நிறப் பசுவின்பால் வாத நோயையும், கருமை நிறப் பசுவின்பால் கபநோயையும், கருமையும் பொன்னிறமும் கலந்த பசு (கபிலை) வின்பால் முக்குற்ற நோய்களையும் போக்கும்.

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வன்பசுவின் பால்போக்கும் வாதத்தைக்—கண்சிவந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோட மறுக்கும்

காராம் பசுவின்பால் விழிப்பிணிகளையும், சயம், மற்ற பால்களின் தோடங்கள், இரத்த பித்தநோய் இவற்றையும் நீக்கும்.

கண்ணோ யகற்றுங் கயரோகந் தான்போக்கு
மண்ணிலுள்ள பால்தோடம் மாற்றுங்காண் பெண்ணே
இரத்தபித்தம் போக்கு மிராச வசியங்
கறுத்தபசும் பாலதனைக் காண்.

இரவில் பசுவின் பாலை அருந்தக் கண்ணெலெழும் நோய்கள் நீங்கும். கண் குளிர்ச்சி பெறும்.

நெய்யருகிற் கண்குளிரும் நீள்சுக்கில முண்டாம்
வெய்யபசி யுண்டாய் விடும்பித்தம்—மொய்குழலாய்
உள்வெக்கைப் போக்கு முயிரை நிலைநிறுத்துங்
கொள்வித்தன் தன்பால் குணம்

இரவில்பால் கண்ணி லெழுநோ யகற்றும்
பரகமுமாய் நோய்தணியப் பார்க்கும்—கரதலமேல்
அத்திவம் பன்னவிழி யாயிழையே மாந்தர்க்குப்
பத்தியமா மென்றே பகர்.

**பசுவின் தயிர்** : பசுவின் தயிரால் நல்ல சீரணமும் பசியும் **உண்டாகும்** உடல் அயற்சி, காசம், எரிச்சல் இவை நீங்கும்.

பசுவின் தயிராற் பசிமிகவு முண்டா
மிசிவுறும் சீரணநோ யேகும்—பசையகன்ற
தாக மிளைப்பிருமல் தாங்கொணா மெய்யெரிவு
மேகு முலகி லியம்பு

**பசுவின் மோர்** : பசுவின் மோரால் வீக்கம், மகோதரம், பாண்டு நோய், பித்தம் போன்றவை நீங்கும்.

வீக்க மகோதரமுள் வீறுகுன்மம் பாண்டுபித்தந்
தாக்குமருந் திட்டததி சாரமொடு—கூக்குரலே
மாறாத் திரிதோட மந்தமனற் றாகம்போம்
வீறாவின் மோருக்கு மெய்,

**பசுவின் வெண்ணெய்**; பசுவின் வெண்ணெய்யால்கண்ணோய் கண் எரிச்சல், பிரமேகம் போன்றவை நீங்கும்.

கண்ணி லெழுநோயுங் கண்ணெரிவும் பீளையும்போ
மெண்ணும் பசியு மெழும்புங்காண்—நண்ணரிய
ஆவினறும் வெண்ணெய்க் ககலும்வன் மேகமெல்லாம்
பூவினர்க் கெல்லாம் புகல்

**பசுவின்நெய்** : பசுவின் நெய்யால் கண்ணொளியும் உடலில் பொன்னிறமும் உண்டாகும். மேலும் இது வலிப்பு, பித்தம், வாந்தி, தாகம், இருமல், வயிற்றுவலி, மூலநோய் இவற்றையும் நீக்கும்.

நெய்யதனிற் குணமே தன்னில்
நைப்பொடு குளிர்ச்சி யுண்டாம்
செய்யகண் புருவம் நெற்றி
சிறந்தநீர் வலிப்புப் போகும்
மெய்யெல்லாங் கழையுண்டாகும்
விழியினி லொளியுண் டாகும்
பைய்யபொன் னிறமே யாகும்
பற்றிய நோய்கள் போமே

புத்திதரும் மெய்யழகு போதந் தறுநயனம்
மெத்தவெளி யுண்டாய் விடும்பித்தம்—சத்தியமே
வாதமுட னய்யம் வறட்சியும்போம் மாதுநல்லாய்
கோதில்லா நெய்யின் குணம்

தாகமழ லைசுட்சம் வாந்திபித்தம் வாயுபிர
மேகம் வயிற்றெரிவு விக்கலழல்—மாகாசங்
குன்மம் வறட்சி குடற்புரட்ட லத்திகுட்டஞ்
சொன்மூலம் போக்குநிறைத் துப்பு

காராம் பசுவின் நெய்யாற் கண்ணில் ஒளியும் குளிர்ச்சியும் மிகவுண்டாகும். கண், புருவம், நெற்றி, தலை இவைகளைப் பற்றிய நோய்கள் விலகும்.

காராம் பசுநெய்யாற் கண்ணுக் கொளியுண்டாம்
நீரார் விழுபுருவ நெற்றிசிரச்—சூரொழியும்
மெய்யிற் குழைவு மிளிர்பொன் னிறம்வரும்
நெய்யா லிதுமேலா நிகழ்த்து

**பசுவின்நீர்:** பசுவின் நீரினால் பாண்டுநோய், சோபை, பலவீக்கம், காழாலை போன்ற பல நோய்களும் தீரும்.

விடபாண்டு சோபைபல வீக்கஞ் சகல
விடமுதிர மாலையென மெத்தப்—புடவிதனிற்
பேசலக்க ணோடுதந்தப் பீடையு மகன்றிடுமே
கோகலசத்தா லாரணங்கே கூறு.

## பஞ்ச லவணம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் கட்டி, விரணம், முக்குற்ற நோய்கள் பலவும் நீங்கும்,

நீராமை யர்ப்புதமை னெஞ்சுவலி மாகுன்மம்
பேராக் கிராணிபி லீகமந்தந் — தீராக்கல
விஞ்சவுப்பைக் குக்கிநோய் மெய்ச்சூலையும் பறக்கும்
பஞ்சவுப்பைத் தின்பையெனிற் பார்

பஞ்ச லவணம்ப யித்தியகுன் மம்போக்கும்
விஞ்சிய சிலேட்டுமத்தை வீழ்க்குங்காண் — கிஞ்சுகமே
தீபனமுண் டாகுந் திரிதோடம் போக்கிவிடுஞ்
சோபனமா மிம்மொழியைச் சொல்

## பஞ்சலோகம், ஐந்தெண்ணெய்

பொன், காரீயம், செம்பு, இரும்பு, துத்தநாகம் என்னும் ஐந்து உலோகங்களும், வேம்பு, புங்கு, புன்னை, ஆமணக்கு என்னும் ஐந்தெண்ணெய்யும், குதிரை, கழுதை, போன்ற விலங்குகளின் குளம்புகளும் எருமை முதலியவற்றின் கொம்புகளும் கண் நோய்களை நீக்கும்.

பஞ்சலோ கக்சார்வ பற்றறுக்குங் கண்ணோயை
யஞ்செண்ணெய் வாதசன்னி யைப்போக்கும் — விஞ்சு
குதிரைக் கழுதைக் குளம்பெருமைக் கொம்பும்
குதிரைவலி நீக்குங் குறி

## பண்ணை

இது ஒரு கீரை வகை. இது கரப்பான், கிரந்தி, விரணம் நீக்கும் மலத்தை யிளக்கும்.

பண்ணையிளங் கீரையது பற்றுமல மிளக்கு
மெண்ணும் குடருக் கிதங்கொடுக்கும் — பெண்ணேகேள்
சீதங் கரப்பான் சிரங்குபுண் மாற்றுவிக்கும்
கோதச் சிலையதனைக் கொள்.

## பயற்றங்காய்

இது ஒரு கொடியின் காய்வகை. இது கபாதிக்கம், அருசி, ரத்த வாந்தி, குன்மம் விலக்கும்.

ஐய மகலு மரோசிகெடுந் தீபனமாம்
பைய்யுதிர வாய்வும் பறக்குமென்பார் — செய்யு
நயத்த வவுடதமும் நாச மடையும்
பயற்றங்காய் தன்னையுண்டு பார்.

## பருத்தி

இது ஒரு செடி வகை இதன் இலையால் சீழ்மேகம் முதலிய மேகங்களும், ரத்த பித்தமும் நீங்கும்.

பருத்தியிலை மொட்டிரண்டைப் பாலிலரைத் துண்ண
வருத்துகின்ற மேகமெல்லா மாறும்—பருத்த
விரத்தபித் தத்தோடு விரணவீக் கம்போ
மரத்தவிதழ் மாதே யறை.

## பலாக்காய்

இது ஒரு மரத்தின் காய்வகை. இதற்கு அக்கினி மந்தம், வாத கோபம், ஆயாசம், சுவாசம், சுக்கிலம் உண்டாகும்.

உண்ணின் மிகுமந்த முறுதியாம் வாதநோ
யண்ணி மிளைப்பிரப்பு மண்டுங்காண்—வண்ணப்
பலாக்காய்க்கு விந்துவுமாம் பாரி லுவமை
சொலாக்காம் வாரிதியே சொல்.

## பவளக்குன்றி

இது ஒரு கொடிவகை. இது வெள்ளை, ரத்தபித்தம், கரப்பான், சிரங்கு போக்கும்.

பவளக்குன் றிக்கொடிக்குப் பற்றிநின்ற மேகங்
கவிழிரத்த பித்த கயமும்—நவமாஞ்
சொறிகரப்பான் புண்கிரந்தி தேலோர் கடுவன்
மறுகரப்பான் போமே மலைந்து.

## பவளம்

இது நவரத்தினங்களில் ஒன்று. இதனால் சுரம், கபம், இருமல் நீங்கும்.

சுரதோட மையமுத் தோட சுரங்காச
மருசிகீ டத்தாலா மாதம்—பெரும்விந்து
நட்ட மதிதாக நாவறட்சி போமொளியுங்
கிட்டும் பவளத்தாற் கேள்.

## பழம்புளி

இதனால் திரிதோடம், வாந்தி, விழிநோய், பயித்தியம் நீங்கும்.

தீதிற் பழம்புளியைச் சேர்க்கத் திரிதோடம்
வாதமொடு சூலைகப மாறுங்கா—ணோதுகுரஞ்
சாத்தியென்ற தோடமிவை சாந்தமாங் கண்ணோய்
போம்
பித்தமென்ற பேரொழியும் பேசு.

### பழைய தேன்

இதனால் வாதநோய், வயிறுஎரிச்சல், வாதமூலம் உண்டாகும். மருந்தின் குணத்தைக் கெடுக்கும்.

வாதம் பெருக்கை வயிற்றெரிவைத் தந்துறையைச்
சேதப் படுத்துமின்னுஞ் செப்பவோ—மாதரசே
சக்திப் புறமரசந் தன்னைத்தூண் டும்புவிப்புத்
தித்திப் புறும்பழைய தேன்.

### பற்பாடகம்

இது ஒரு செடிவகை இது சீதவாதசுரம், பித்தகாச நோய் போக்கும். விழிக்குக் குளிர்ச்சி உண்டாக்கும்.

சீதவா தச்சுரமுந் தீராத தாகமும்போம்
போதவிரு கண்குளிரும் பொய்யலவே—பூதலத்துள்
வற்பரம்ப யித்தியமு மாபித்தமுந் தொலையும்
பற்படா கத்தையுன்னிப் பார்.

### பன்னீர்

இது ஒரு பரிமளவகை. இதனால் சன்னிபாதமும், திரிதோடமும் நீங்கும்.

பன்னீர் மிகக்குளிர்ச்சி பாராய் சுகசன்னிக்
கின்னீருண் ணேரு மிளைப்புமறுஞ்—சன்னிகளும்
வாதபித் தைய்யமொடு மானே வியாகுலமும்
பூதலம் விட்டேகும் புகல்.

### பன்னீர்பூ

இது ஒரு மரத்தின் பூ இதனால் வாந்தி, ருசி, நாவறட்சி, பித்தகோபம் போகும்.

சர்த்தி யரோசகமுட் டாதுகட்ட மேல்வறட்சி
யொத்த வழலு மொதுக்குங்கா—ணெத்தரத்துந்
தன்னீர்மை குன்றாத தளிர்வண்ண மாதரசே
பன்னீர் மரத்தைப் பார்.

## பனங்கிழங்கு

இது ஒரு மரத்தின் கிழங்குவகை. இதனால் பித்தமேகம், சூடு போகும். குளிர்ச்சியும் வனப்பும் உண்டாகும்.

பனங்கிழங்கா லத்திவெப்பும் பன்மேக மும்போ
மினுங்குளிர்ச்சி யோடழகு மெய்துந்—தினநமையும்
புண்ணுங் கரப்பானும் பூரிக்கு மெய்யெலா
நண்ணும் ஒடிகிழங்கி னால்.

## பனைவெல்லம்

இது ஒரு மதுரவகை. பனைவெல்லத்தால் வாத, பித்த தொந்தம், வாதகுன்மம் தீரும்.

தெங்கின்வெல் லத்தாற் செரியாக் குணஞ்சோபை
யங்கமுறு நீருமதிகரிக்கும்—தங்குபனை
வெல்லத்தால் வாதபித்தம் வீறுகபஞ் சன்னிநோய்
வல்லருசி குன்மமறு மால்.

## பாகல்

இது ஒரு கொடிவகை. இதனால் திரிதோடமும், கிருமியும் நீங்கும்.

பிரியாக் கிருமியறும் பேதியுண்டாந் தோட
முறியு மிரத முறியுங்—குறியாத
மாகற் புடைய மடமயிலே யெப்போதும்
பாகற் றழைக்குப் பயந்து.

**பாகற்பழம்:** பாகற்பழத்தால் சுரம், பிரமேகம், இருமல், இரைப்பு, மூலம், மலக்கிருமி நீங்கும்.

சுரமேகங் காசஞ் சுவாசமொடு மூலந்
திரிதோடங் குட்டமிவை தீருங்—கிருமியது
மோகப் புணரியெனு மொய்குழலே வெம்பிவிழாப்
பாகற் பழத்தையுண்டு பார்.

## பாதிரி

இது ஒரு மரவகை. இதன் வேரால் கரப்பான், உழலை, கண் எரிச்சல், பெருவிரணம், மூலநோய் நீங்கும்.

பாதிரியின் வேரினாற் பாரமது மேகம்போ
மோதுகரப் பானுழலை யோடிவிடும் – மாதேகேள்
கண்ணெரிவு காதெரிவு கையெரிவு காலெரிவு
நிண்ணயமாய்ப் போகும் நிசம்.

பாதிரிப்பூவால் தீச்சுரமும் மேகமும் நீங்கும். பெண் வசியமாம்.

பித்த சுரந்தணியும் பெண்வசிய முண்டாகும்
முற்றியதோர் வெட்டை முடியுங்காண்—மெத்தவுமே
மாதுரிய நீங்கா வசன மடவனமே
பாதிரியின் பூவையுண்டு பார்.

## பாலை

இது ஒரு மரவகை. இதனால் வாதநோய், பித்தம், திரிதோடம் நீங்கும்.

வாதப் பெருக்குபித்த மாறாச் சுவாசமுத
லோதுசர்வ தோடமும்விட் டோடுங்காண்—தீதுபுரி
வேலைப் பொழிவுவிழி மெல்லியலே காட்டிலுறை
பாலைக்கென வுன்னிப் பார்.

பாலைப்பழத்தால் கருங்கரப்பன், சிலேத்மதோடம், கிரந்தி போகும்.

வாதக் கரப்பனறும் வல்லசிலேத்ம மும்போம்
வேது கிரந்தியுஞ்சா மென்பசியா—மோதுமுதன்
கோலைப் பழித்தவிழிக் கோதா யினிமையுள்ள
பாலைப் பழத்தானீ பார்.

## பித்தளை

இது ஒரு உலோகவகை. இதனால் சுக்கிலம் பெருகும். வாதம் கபம், குன்மம் நீங்கும்.

தாதுவிர்த்தி யுண்டாகுந் தாபச்சு ரம்போகுஞ்
சீதள மாம்வாதஞ் சிந்தையுங்காண்—பூதலத்துண்
மாட்டியதோர் பித்தகுன் மமாறு மலர்த்திருவே
நாட்டியதோர் பித்தளை யினால்.

## பிரண்டை

இது ஒரு கொடிவகை. இதனால் தினவும், சத்த மூலமும், வயிற்றுவலியும், மந்தமும் நீங்கும்.

பிரண்டையை நெய்யால்வறுத்துப் பின்பரைத்து மாதே
வெருண்டிடா தேற்று விழுங்கி—வரண்டுவரு
மூலத் தினவடங்கு மூலவி ரத்தமறும்
ஞானத் தினுள்ளே நவில்.

மந்தம் வயிற்றுவலி வாயுவதி சாரமுளை
சேர்ந்தமூ லங்கபடமுட் செம்புனற்போக்- கோய்ந்தநடை
யெல்லா மகலு மெழுப்பு மதிகபசி
மல்லார் பிரண்டையுண்டு வா.

## பிரப்பங்கிழங்கு

இது ஒரு சொடியின் கிழங்கு வகை. இது தந்த மூலநோய், வாதகோபம், கீல்பிடிப்பு இவற்றை நீக்கும்.

தந்தரோ கத்தைத் தணியாத வாதத்தை
யுந்துகூ லைப்பிடிப்பை யோட்டுங்காண்—வந்து
கரப்புந் திறப்புமெனக் காட்டு நகைமாதே
பிரப்பங் கிழங்கதனைப் பேண்

## பிரமதண்டின் பால்

இது ஒரு செடியின் பால் வகை. இதனால் கண் கூசுதல், கண்ணுறுத்தல், கண்ணீர் வடிதல், கண்வலி, கண் சிவப்பு போன்றவை நீங்கும்.

கண்கூசல் கண்ணறு கல்கண் ணொழுதல்
கண்சிவத்த லெல்லாங் கடிதேகுங்—திண்ணச்
சரமதன்ற ளைப்பிளக்குஞ் சாயகக்கண் மாதே
பிரமதண் டன்பார்க்குப் பேர்ந்து.

## பீதரோகணி

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் கருவிழி நீலகாசம், நீர்ப் பில்லம் போன்றவை நீங்கும்.

படர்நீல காசம் படலமொடு பில்லந்
தொடரி மைகளிற் றோன்றுந்—தோட
மருவியெனச் சொல்லுகின்ற வக்கிநோ யேகு
மொருபீத ரோகணியை யுன்.

## பீர்க்கம்

இது ஒரு கொடி வகை. பீர்க்கம் காயால் கபமும், பித்தமும், வாதகபங்களும் நீங்கும்.

தின்றவுடன் பீர்க்கங்காய் சீதமுறுங் காண்பித்த
மொன்றுமூன் றாக வுயருமே - மன்றலணிக்
காரளகக் கச்சுமுலைக் காரிகையே வாதகப
நேரளவைத் தாண்டு நினை.

## புங்கம்

இது ஒரு மரவகை. புங்கம்பால் சுரவேகத்தையும் நீரேற்றத்தையும் நீக்கும்.

சங்கம்பால் வீக்கமதைத் தான்போக்கு நீர்வடிக்கு
மங்குசுர வெப்பகற்று மையமிலை - கொங்குலவு
புங்கம்பால் புண்ணாற்றும் பொல்லாத வாய்வகற்றுந்
தங்கம்போன் மெய்யளிக்குந் தான்.

**புங்கநெய்:** புங்க நெய்யால் கரப்பானும், சொறி சிரங்கும் ஒழியும். அழகும் ஒளியும் தரும்.

அங்க மழகிடும்வெற் பாம்புங்கி னெய்தனக்குத்
தங்கம்போற் காந்தியது தானுண்டாந் - திங்கண்முக
மானே கரப்பானும்போம் வன்சொறி யுஞ்சிரங்குந்
தானே விலகுமெனச் சாற்று.

**புங்கவேர்:** புங்க வேரால் வாதக்குடைச்சல், தாபசுரம் வாயு, புரையோடல் போகும்.

வாத கடுப்பி மகாமூர்ச்சை தாபசுரம்
வாதகுன்ம ரத்தத்தால் வந்திடுநோ - யோதுகின்ற
புண்புரையும் வல்விஷமும் போகுந்தி ரண்டுருண்டே
பண்புறு புங்கம்வேர்க்குப் பார்.

**புங்கவிதை:** புங்க வித்தால் கிரந்தி, கரப்பான், கண்ணோய் நீங்கும்.

புங்குவிதை காற்கிரந்தி புண்கரப்பான் காதெழுச்சி
யங்கசன்னி கண்ணோய்க்கு மாம்பேதி - யுங்கட்டுங்
காட்டுபுங் கின்விதைக்கு கண்டதே மற்சொறி மெய்ப்
பூட்டுப்புங் கின்வாய்வும் போம்

## புடலங்காய்

இது ஒரு கொடியின் காய்வகை. இதனால் சுக்கிலமும், கபமும், பைத்தியமும் அதிகமாகும்.

போகம் விளையும் பொருந்தி வளருமைய
மாகமதிற் பித்த மணுகுங்காண் - மேக
புடலங் கவியகப் பாவாய் கேணாளும்
புடலங்காய்க் குள்ள புகழ்.

## புரசம்

இது ஒரு மரவகை. இதனால் வாதம், பித்தம், வயிற்று நாய், மலக்கிருமி, உடற்குடைச்சல் நீங்கும்.

புரசவா தம்பித்தம் பொங்குகபங் குன்மங்
கிருமி யுடனே கிராணி - பெருவலிநோ
யோட்டிமதி தீபனத்தை யுண்டாக்கு மப்பொழுதே
தீட்டியவேற் கண்ணாய் தெளி.

புரசங்கொட்டையால் மலப்புழு, வாதவலி, சீதம், படர் தாமரை குன்மம், கரப்பான் நீங்கும்.

வயிற்றுக் கிருமிகணம் வாதமொடு சீத
நியத்தபடர் தாமரையு நீங்கும் - வயிற்று
வலியிரைச்சல் வன்கரப்பன் மாறும்பித் துண்டா
மலிபுரசங் கொட்டைதனை வாழ்த்து.

## புளி

இது ஒரு மரவகை. புளியங்காய் பித்தம், வாதம் நீக்கும்.

சோபமொடு பித்தந் தொலைக்கு முரிசைதறுங்
கோபமுற வாயுவையே கொண்டாடுந் - தாபக்
கருப்ப மடவார்க்குக் கனவிருப்ப முள்ளே
பருப்புமுதி ராப்புளியங் காய்.

**புளியம்விதை:** புளியங்கொட்டையால் சுக்கிலமேகம், மூத்திரக் கடுப்பு, வெள்ளை இவை நீங்கும்.

சுக்கில மேகநற் றன்னுமதி சாரமொடு
மிக்கரண நாக்கடுப்பு வெட்டையறுந் - தொக்கொடுவ
ருற்றபுளி வித்திற் குறுகுணத்தை மேன்மேலு
நற்றரையுண் மாதே நவில்.

**புளியம்பட்டை:** புளியம் பட்டையால் குன்மநோய், சுரம், அசீரணம் நீங்கும். பித்தமும், பசியும் அதிகரிக்கும்.

புளிய மரத்தின் புறணிதனைக் கண்டா
லுளமாந்தை குன்மவலி யோடும் - வளியார்ந்த
பேதிகட் டுஞ்சுரம்போம் பித்தமுறுந் தீபனமா
மோத வசீரணமே துன்.

**புளியம்பழம்:** புளியம்பழத்தால் மந்தபுத்தி, அங்கசலன வாதம் உண்டாகும். வாந்தியும், பித்தநோயும் விலகும்.

புத்தியு மந்தமாகும் பொருமியே யுடலுமூதும்
பத்தியத் தவறுஞ்சன்னி பாதமாஞ் சுரங்கள்வீறுஞ்
சர்த்தியும் பித்தந்தீரும் தனுவெலாம் வாதமேறு
மத்திபந் தாதுபுட்டி வருந்திசை நரைபுளிக்கே.

**புளியம்பூ:** புளியம் பூவால் பித்தகோபமும், அருசியும் நீங்கும்.

பித்தத் துடனே பெருத்தவரோ சகம்போ
மெத்தவெழும் வாந்தி மிதத்துணிற்கு - மெத்தக்
கனத்துப்பூ ரித்தமுலைக் காரிகையே வெற்பார்
வனத்துப் புளியம்பூ வால்

**புளியிலை:** இதனால் பாண்டு நோய் சிவந்த கண்ணோவு நீங்கும்.

அழுபுண்ணை நீக்கு மடற்சோபை மாற்று
மெழுபாண்டு வைப்போக்கு மிப்பான் - முழுது
மளியச் சிவந்தகண்ணோ யாற்றுங் கனலாம்
புளியிலையை நன்றாய்ப் புகல்.

## புளிப்பிரண்டை

இது ஒரு கொடிவகை. இதனால் சீதபேதி, சுவாசவிக்கல், வாதகோபம் போகும்.

தீம்பிரண்டை தன்னாற் செரியாமந் தம்ஆமந்
தேம்பிரைப்பு விக்கலையந் திண்வாதம் - போம்பலரும்
பார்க்கும் புளிப்பிரண்டை பாண்டுநோய் குன்மகயம்
போக்குமது சூடாம் புகல்.

## புளிப்புக் கீரை

இது ஒரு கீரைவகை. இதனால் வாதகோபம், அருசி, சீதளம், கரப்பான், பித்தம் நீங்கும்.

வாதமறும் பித்தமுறு மாறா வரோசிவிடுஞ்
சீதமுட னேயகலுஞ் சேயிழையே - போதப்
புளித்த விலைக்கறிக்குப் போமிரத்த பித்தங்
களித்த கரப்பனொடு காண்.

## புளியாரை

இது ஒரு கீரைவகை. இதனால் பித்தமயக்கம், மூலவாயு, கிராணி, ரத்தமூலம் போகும்.

பித்த மயக்கமறும் பேருலகின் மானிடர்க்கு
நித்தமருள் வாதகப நேருமோ - மெத்தெனவே
மூலக் கிராணிவிடு மூல வுதிரமறுங்
கோலப் புளியாரைக் கு.

## புன்னை

இது ஒரு மரவகை. இதன் நெய்யால் சன்னி பாதம், மகா வாதரோகம், விரணம் நீங்கும்.

புன்னையிலுண் டாநெய்யாற் பொங்குசன்னி பாதமுதன்
மன்னியலைக் குங்கொடிய வாயுவுமுன் - பின்னிசிவும்
பொல்லா வலியினமும் புண்கிருமி யுந்தொலையு
மல்லார் குழலே யறி.

புன்னைக் கொட்டையால் செவிப்புண், தனுர்வாதம், சூதக வாயு, சீதளவாயு நீங்கும்.

கன்ன விரணங் கடுஞ்சன்னி பாதமுட
னின்னலுறு வாதை யேகுங்காண் - புன்னைக்கொட்
டைக்கமட்டோ வென்னிலார் சூதக வாய்வுடன்
மெக்கம்மிட் டாழ்வாய்வு மில்.

## பூசணி

இது ஒரு கொடிவகை. இது பித்தம், உட்காய்ச்சல், பிரமேகம் நீக்கும்.

பெரும்பூ சணிக்காய்க்குப் பித்தமோ டுட்காய்ச்ச
லருஞ்சார நீர்க்கட் டருமே - மருந்திடுதற்
பித்தசுர மத்திசுரம் பேய்வறட்சி மேகமும்போம்
மெத்த மனில முறும்.

பூசணி விதையால் பயித்தியமும் பிரமேகமும் நீங்கும். உடலில் குளிர்ச்சியும், வலிமையு ம் உண்டாகும்.

பித்தம்போ மேகம்போம் பேரா வனலும்போம்
மெத்தவுட லங்குளிரு மேனியிடு—மித்தலத்து
ளாசினியொன் றில்லாவ லர்ந்தவச னத்தனமே
பூசினிவித் தைத்தின்னும் போது.

## பூந்தாழம்பழம்

இது ஒரு செடியின் பழவகை. இதுவே அன்னாசிப்பழம். இப் பழத்தினால் பிரமேகவெள்ளை, வாந்தி, பித்தநோய் போகும். அழகுண்டாகும்.

மேகவெட்டை வாந்திபித்த மீறாவா மேனியிடுந்
தாகமுமட் டாகுந் தலைவலிபோம்—பாகமுறு
பூந்தாழை யின்பழத்தைப் பூரிப்புடன் புசிக்க
வாந்தாழ்வு மில்லை யறி.

## பூநாகம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் தாகமும், சன்னிபாத சுரங்களும், சிலேத்மநோயும் நீங்கும்.

மாதனறு செம்வறட்சி மாறுமடங் காஞ்சன்னி
பாதவறுநோ யோடென்றும் பாறுமடல்—வாதபறு
குண்டபத மீளுமோக் காள மையமும்போம்
கண்டபத மென்னுங் கால்.

## பூமிசருக்கரைக் கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்கு வகை. இதனால் உடல் பூரிப் படையும். பிரமேகம், வெள்ளை வீழல், சுரம், மூலம் ஒழியும்.

மேகமுறு முள்ளுருக்கு வெட்டை யனற்றணியும்
போகுமே மூலம் புகலக்கேள்—பாகுமொழிப்
பொன்னனையாய் பூமிச் சருக்கரைக்கி ழங்குக்கு
வன்னவு டல்பருக்கும் வாழ்த்து.

## பூனைக்காலி

இது ஒரு கொடி வகை. இதனால் கற்றாழை நாற்றமும், கரப்பானும் நீங்கும். தாது உண்டாகும்.

தழுதனைநாற் றத்தோடு சாரிரத்தப் போக்கும்
பழுதுபரி கின்றகரப் பானு—மழுதேகுந்
தாலமிசை விந்துமாஞ் சாற்றும் கரும்பூனைக்
காலி விதையினாற் காண்.

## பெருஞ்சீரகம்

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் யோனிநோய், வயிறுவதி சுரம், அசிரணம், கபயிருமல் போகும்.

யோனிநோய் குன்ம முருட்சைமந்தம் பொருமல்
பேன மருகாசம் பீலிகமிரைப்—பீனவுரை
சேர்க்கின்ற வாதமும்போஞ் சீர்பெரிய சீரகந்தான்
மூக்குநோ யில்லை மொழி.

## பேய்ச்சுரை

இது ஒரு கொடி வகை. கசப்பு உள்ள இதன் வேரினால் மகா விஷம், கோழை, காசம் நீங்கும்.

கடுவேறு பேய்ச்சுரைவேர் கண்ட லரவின்
கடுவேறா துண்மைமுக் காலுங்—கொடுவிடமு
யீளையிரு மலும்விட்டேகு முண்டால் வாந்தி—யுண்டாம்
வாளையுறுங் கண்ணாய் வழுத்து.

## பேயகத்தி

இது ஒரு செடி வகை. இதனால் கிருமிகளும், உட்ணச் சொறியும் தினவும் நீங்கும்.

தம்மைக்கண் டாலிரத தாதுவிலாம் பொருட்களும்
வெம்மைப் புடைநமையும் வீறாநெய்—யம்மையுறுந்
தூயகத்தி யுங்கலங்குந் தோதகக் கண்மாதே
பேயகத்தி மூலிகண்ட பேர்.

## பேய்ப்பீர்க்கு

இது ஒரு கொடி வகை. இதன் விதையால் பக்க சூலையும், வயிற்று நோயும் நீங்கும்.

கழற்காய் விதைக்குக் கனவண்ட வாதந்
தழற்பக்கச் சூலைகுன்மஞ் சாந்தி—கழற்காலிற்
காய்ப்பாக்குந் துட்டக் கடிவிடமெ லாம்போக்கும்
பேய்ப்பீர்க்கின் றன்விதையைப் பேசு.

## பேய்ப்புடல்

இது ஒரு கொடி வகை. இதனால் பித்தகப சுரங்கள், காமாலை, மயக்கம் போகும்.

பித்தசரஞ் சீதசுரம் பீரிக்குங் காமாலை
யுற்ற மசூரி யழற்றாக—நித்தியமுங்
காய்ப்புடலை யண்ணக் கவிழ்க்கின்ற பித்தமும்போம்
பேய்ப்புடலை யுண்பாரைப் பேணு.

## பேராமுட்டி

இது ஒரு செடி வகை. இதன் வேரால் வாதசுரம், தாகம், குளிர்ச்சுரம், பித்தம் நீங்கும்.

வாதசுரந் தாகம் மதலைக் கணமாந்தஞ்
சீதசுரம் பித்தமெனச் செப்பணங்கு—மோதுநம்மாற்
ரோகமுட் டிக்கேகுஞ் செய்ய மடமயிலே
பேராமுட் டித்தூரைப் பேசு.

## பேரீச்சம்

இது ஒரு மரவகை. இதன் பழத்தால் பித்தம், நீர்க்கோவை நீரிழிவு நீங்கும்.

பேரீந் தெனுங்கனிக்குப் பித்தமத மூர்ச்சைகர
நீராந்த வைய்ய நெடுந்தாகம்—பேரா
விரத்தபித்த நீரிழிவு விலைப்பு மரோசி
யுரத்தகமல கட்டுமறு மோர்.

பேரீச்சங்காயையே கர்சூர்க்காய் என்றும் கூறுவர். இது உமிழ்நீர்ப்பெருக்கையும், மதுநீரையும் போக்கும். பசி உண்டாக்கும்

வாயிலுண்டா மூற்றலை மாற்றும் பசியில்லை
யாயிலுண்டா லுண்டா மதுமேக—நோயுள்
பெருநீர்ம றுக்குமினும் பெண்களைக் கூட்டுங்காற்
றருநீர் மைதருச்சூர்க்காய் தான்.

## பேவாழை

இது ஒரு மரவகை. இதனால் பயித்தியமும், உட்சூடும் நீங்கும் வாதாதிக்கமும், குளிர்ச்சியும் உண்டாகும்.

பேயன் பழமருந்திற் பித்தரோகம் போகும்
வாயு வுண்டாகு மலங்கழியு—தீயே
தகத்தி லதிகுளிர்ச்சி யாகு மணங்கே
சகத்தி லிதையறியச் சாற்று.

## பொடுதலை

இது ஒரு கொடி வகை. இது சீதபேதி, இருமல், குலைநோய், வாதநோய் போக்கும்.

பொடுதலையின் பேருரைத்தாற் போராமப் போக்கு
மடுதலைச்செய் கார முமடங்குங்—கடுகிவரு
பேதியொடு சூலைநோய் பேசரிய வெண்மேகம்
வாதமும்போ மெய்புரக்கும் வாழ்த்து.

## பொன் முசுட்டை

இது ஒரு கொடி வகை. இதனால் வாதவலி, மயக்கம், சீதம், நமைச்சல் நீங்கும்.

வாதமொடு பித்தத்தை மாற்றுமே மாநிலத்திற்
சீத மகற்றுங் தினவடங்கு—மாதேகே
ளுண்டிக்கும் வாசனையா மோங்கிவள ரனலைக்
கண்டிக்கும் பொன்முசுட்டை காண்.

## பொன்னாங்காணி

இது ஒரு கொடி வகை. இதனால் விழியைப்பற்றிய வாத காசம், மூலநோய் மற்றும் பல நோய்கள் நீங்கும். உடலில் பொன்னிறமுண்டாகும்.

காசம் புகைச்சல் கருவிழிநோய் வாதமனற்
கூசும் பீலிகங்கு தாங்குரநோய்—பேசிவையா
வென்னாங்கா ணிப்படிவ மேபாஞ் செப்பலென்னை
பொன்னாங்கா ணிக்கொடியைப் போற்று,

பொன்னாங்கா ணிக்குணந்தான் போம்பீலிகைதீபனமாம்
கண்ணாகங் காந்திதருங் காணுங்கால்—முன்னாக
மூலரோ கந்தான் முயலாது கண்ணினோய்
காலில்வாழ் வாதமும்போங் காண்.

## பொன்னாவரை

இது ஒரு செடி வகை. இதனால் உடல் வெடிப்பு, தடித்தல் நமைச்சல், காணாக்கடி ஒழியும்.

வெடிப்பு துவக்குதிரல் மேகப் புடைகள்
தடிப்பு தினவுதடி தங்கா—அடிக்கடியிங்
கென்னா வறைய விசையா லெழிணங்கே
பொன்னா வரையதனைப் போற்று.

## பொன்

இது ஒரு உலோக வகை இதனால் தாவர விஷங்கள், பித்த சயம், விழிநோய் விலகும்.

அடற்றா ரைவிடங்க ளங்கொளி மங்கல்
தடத்தாமுத் தோடகயங் காச—முடற்றாபஞ்
சேகையிருந் தாதுநட்டந் திட்டிநோ யீளையிவை
யீகையிருந் தாதாலேகு மெண்.

## மகிழம்பூ

இது ஒரு மரவகை. மகிழம்பூ உடல் வெப்பம்,அரோசக நோய் நீக்கும்.

வெகு வனலமாகு விரக மிகவுண்டா
முகர வரோசக முறியு-மிகவு
மகிழச் சுரத வகைகாட்டு மாதே
மகிழத் துருமலர்க் கு.

## மகிழம்வித்து

மகிழம் வித்தால் கண் கலிக்கம், கண்நோய், பாம்புவிடம், சுரம் நீங்கும். குளிர்ச்சியாகும்.

தாதுவைநன் மெய்யழகைச் சத்தியையுண் டாக்கிவிடுஞ்
சீதளமென் பார்கலிக்கஞ் செய்மருந்தாம்-வாதை
மலத்தை விழித்தோடத்தை வல்விஷத்தை வெப்பை
விலக்கு மகிழம் விதை.

## மஞ்சள்

இது ஒருசெடியின் கிழங்குவகை. இதனால் பித்தவாதம், தலைவலி, சலதோஷம், பிரமேகம், வண்டு கடி, விஷம் நீங்கும். உடலைப் பொற்சாயலாக்கும்.

பொன்னிற மாம்மேனி புலானாற்ற மும்போகும்
மன்னு புருடன் வசியமாம்-பின்னியேழும்
வாந்திபித்த தோடமையம் வாதம்போந் தீபனமாங்
கூர்ந்தநறு மஞ்ச டனக்கு

தலைவலி நீரேற்றஞ் சளையாத மேக
முளைவு தரு பீனத்தி னூடே-வலிசுரப்பு
விஞ்சு கடிவிடமும் வீறுவிர ணங்களும்போ
மஞ்சட் கிழங்குக்கு மால்

## மட்டிப்பால்

இது ஒரு பால்வகை. மட்டிப்பாலினால் தலைவலி,சலதோஷம் கபவாந்தி போகும்.

தலைவலி நீரேற்றந் தனித்தவுடல் வாத
மலைவுறு மேல்வாந்தி யரோசி-நிலைகுலையும்
வட்டுப்பால் வஞ்சம்வைத்த மாமுலைமா தேமணக்கு
மட்டுப்பா லிற்கு மருண்டு.

## மடையான்

இது ஒரு பறவைவகை. இதன் கறியால் கடுவனும் நமைக் கிராந்தியும். வலுத்த சிலேத்மமும் உண்டாகும்.

அன்னநடை பின்னுசடை யங்கண்மட மாதேகேள்
வன்னமடை யான்கறியை மாந்தினர்க்குத்-தின்னு
கரப்பான் சொறிசிரங்குங் காணுமைய வாத
முரப்பாக நீடு முறை

## மணலி

இது ஒரு கீரை வகை. இது வாதகபம், மார்புச்சளி, பயித்திய தோடம் நீக்கும்.

வாதமறு நெஞ்செரிவு வாதகபம் விலகுஞ்
சீதமுட னோய்பலவுந் தீருங்காண்-போதவுள்ளே
வீறு கிருமியொடு மேவாய் பயித்தியம்போங்
கூறு மணலிக்கீ ரைக்கு

## மணத்தக்காளி

இது ஒரு செடிவகை. இதன் வற்றலுக்கு நீர்ப்பேதியுண்டா வதுந்தவிர வாந்தியும் நீங்கும்.

நீர்ப்பேதி யாகு நிலைமனம் போம்வாயிற்
கூர்ப்ப விலைப்புமறுங் கூறுவதோ—பார்க்கிவினு
மிக்கான நோயோர் விரும்புகின்ற நல்லமணத்
தக்காளி வற்றலுக்குத் தான்.

மலமிளகுந் தானே மகாகபமும் போகும்
பலமிகுந்த வாதம்போம் பார்க்குண்-மலைபோற்
பணைத்தும்பூ ரித்தமுலைப் பாவாய்க்கே ணல்ல
மணத்தக் காளியை வாழ்த்து.

## மரகதம்

இது நவரத்தின வகையில் ஒன்று. இது விந்துவை விளைக்கும் 18 வித பூத பைசாசங்கள், மதுமேகம் நீக்கும்.

தாதுதரும் பூதபை சாசந் தமையோட்டு
மீதுவரு புண்ணை விலக்குங்காண்-டீதுபுரி
மச்சை யகற்றும் மதுமேகம் போக்கும்
பச்சை யதுமதுரம் பார்.

## மரமஞ்சள்

இது ஒரு செடியின் கிழங்குவகை. இதனால் மூலநோய், கணச்சுரம், உட்சுரம் நீங்கும்.

அழன்ற கணமூல மருசி யுடனே
யுழன்ற கணச்சுரமு மோடுஞ்-சுழன்றுள்ளே
வீறுசுர முந்தணியும் வீசுமர மஞ்சளுக்குத்
தேறு மொழியனமே செப்பு

## மரவள்ளிக்கிழங்கு

இது ஒரு மரத்தின் கிழங்குவகை. இது பயித்திய வாதமும், அக்கினிமாந்தத்தையும் உண்டாக்கும்.

பித்தங் கலந்த பெருவாயு வைக்கூவு
மெத்தஅனல் மந்தத்தை மேலெழுப்புஞ்-சுத்த
இரவள்ளிக் கொண்டகுழ லேந்திழையே யிந்த
மரவள்ளிக் கந்தவென மை.

## மருக்கொழுந்து

இது ஒரு செடிவகை. இது கண்படலம், கபதோடம், உட்சூடு நீக்கும்.

கண்ணிலுறு தோடங் கபஞ்சூ டிவைபோக்கும்
ஒண்ணனல்கைப் புச்சாரம் உள்ளமரும்-மண்ணிற்
கொழுந்த மருக்குணத்தைக் கொண்டிருந்த போழ்துந்
தழைத்தபசி வன்மைதருஞ் சாற்று.

## மருட்கிழங்கு

இது ஒரு புல்லின் கிழங்குவகை. இதனால் நெஞ்சைப்பற்றிய கபகட்டு, பெருவயிறு, சோகை நீங்கும்.

தொண்டைக்கட் டையுந் தொலையும் கோதரமும்
•பண்டைப்பல் வீக்கம் பறக்குங்காண்-கெண்டைவிழி
மானே மருட்கிழங்கால் மாறுமூலங்க ளெல்லாந்
தானே பசியெழும்புத் தான்.

## மருதம்

இது ஒரு மரவகை. இது வெகு மூத்திரம், பிரமியம், மயக்கம் தாகம், உதரநோய்போன்ற நோய்களைப் போக்கும்.

ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்
காதமென வோடக் கடத்துங்காண்-போத
மயக்க மெடுதாக மாறாச் சுரத்தின்
தயக்கமறுக் கும்மருதந் தான்.

குட்டரோ கங்கிருமி கோர வயிற்றுவலி
துட்ட வரட்சூலை தொலையுங்காண்-கிட்டிப்
பொருதம்பா மென்னுவிழிப் பூவையரே நாளு
மருதம்பா ரென்றளவில் மாய்ந்து•

## மல்லிகை

இது ஒரு கொடி வகை. இப்பூவானது கோழை, கண்மயக்கம், உடல்சூடு நீக்கும்.

போகமிக வுண்டாகு பொங்குகபங் கட்பிரமை
யாகவனற் சூனியமு மண்டுமோ-பாகனையாய்
மன்னு திருவசியம் வாய்க்குஞ்சூ டென்றவரும்
பன்னுமல்லி கைப்பூவாற் பார்

## மலைதாங்கி

இது [ஒரு செடிவகை. இது வாதநோய்கள், கர்ணசூலை போக்கும்.

வாதமென் பதுஞ்சுரமும் வாதச் சயித்தியமுங்
காதுவலி பாரங் கரந்திடுகாண்-போதச்
சிலைதாங்கி நின்றநுதற் செந்திருவே நீயும்
மலைதாங்கிப் பூண்டை வழுத்து.

## மலைத்தேன்

மலையில் கிடைக்கும் தேனினால் சிலேத்ம காசம், சுவாசம் விக்கல், கண் விரணம் நீங்கும்.

ஐயிரும லீளைவீக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பைய்ய வொழியும் பசியுமுறும்-வைய்யகத்தி
லெண்ணுமிசை யாமருந்திற் கேற்ற வனுபான
நண்ணுமலைத் தேனொன்றி னால்.

## மனோசிலை

இது ஒரு பாடாண வகை. இது உடலில் ஊறிய விடங்களை நீக்கும். சருமகுட்டம், சிலந்தி விடம் நீக்கும்.

மடலரி தாரத்தில் வருங்கர டிரண்டு
முடல்விடங்க ளைக்களையு முன்மை-கொடியகுட்டம்
காய்ச்ச னடுக்கலக் கள்ளியிரைப் புச்சிலந்திப்
பேச்சறு மனோசிலைக்குப் பேசு.

## மாசிக்காய்

இது ஒரு கடைச்சரக்கு. இது பித்தம், உட்சூடு, குழந்தை களின் கணச்சூடு நீக்கும்.

அக்கரங்கள் போக்கிவிடு மாறாத வெப்பகற்று
மெய்க்குறுதி மாசிக்காய் மென்மேலுந்—தக்கதொரு
பாலர்கண் நோய்போக்கும் பன்மே கமுந்தொலைக்கும்
வேலனைய கண்ணாய் விரி

## மாணிக்கம்

இது நவரத்தின வகையின் ஒன்று. இதனால் சுரங்கள், சன்னி பாத தோடங்கள், கண்ணோய் ஒழியும்.

சுரரோகஞ் சன்னிகளின் தோட மதிதாக
முரமான மேக மொழியுந் - திரமாக
வூணக்கோ ணேத்திரநோ யோடுமர வீன்றவொளி
மாணிக்கத் தால்வசிய மாம்.

## மாதுளை

இது ஒரு மரவகை. மாதுளம்பூவால் பித்தவாந்தி, ஏப்பம், ரத்தமூலம் நீங்கும்.

வாந்திபித்த தோடமொடு மாறாக் கடும்பனலஞ்
சேர்ந்துநின்ற மூலரத்தந் தீர்க்குங்காண்—மாந்தளிர்க்கை
மாதே கறைப்புஷ்டி வல்ல பலனுண்டாகும்
பூதலத்துண் மாதுளையின் பூ.

**மாதுளம்பிஞ்சால்** மலம், ரத்தம், சீதம் இவைகளினிறமாக ஆகின்ற பற்பல நோய்கள் தீரும்.

மலக்கழிச்சல் சீதத்தால் வந்த கழிச்சல்
சலக்கழிச்சல் சோரியாற் சாரு—பலகழிச்சல்
மாளும் புளிப்பான மாதுளம் பிஞ்சால்யிலை
யாளுங்கண் மாதே யறி.

**மாதுளம்பழம் :** மாதுளம்பழத்தால் வாந்தி, கபம், மிகு தாகம், பித்தநோய், விக்கல், மாந்தம் மயக்கம் நீங்கும்.

சங்கையறச் சொற்றவிர்க்குஞ் சந்நியா சஞ்சர்த்தி
யங்கையதி தாகநமைச் சாருமேர்—கங்கை
விருந்தாடி மக்கட் கிரந்தனைச்செய் நோய்போ
மிருந்தா டமக்கணிகட் கெண்

வாய்நீரு றல்கசப்பு வாந்திவிக்கண் மந்தமிகக்
காய்வெப்ப நெஞ்செரிவு காதடைப்பு—வோயா
மயக்கமுந் தீர்ந்துவிடு மாதுளம் பழத்தாற்
றயக்கமனத் தேமொழியே சாற்று.

வெடித்துவீழ் பழத்தை வாங்கி மெல்லிய சீலை கட்டிக்
கடுக்கெனப் பிழிந்து கொண்டு கண்டதற் கிணங்கக் கூட்டி
குடித்திட வெப்பு மாறுங் குளிர்ந்திடு மங்க மெல்லாம்
வடித்தநன் மொழியி னாலே மாதுளம் பழத்தின் சாறே.

**மாதுளம் விதை :** சுக்கிலத்தையும் அதிலுள்ள குற்றத்தையும் பிரமேகச் சுறுக்கையும் நீக்கும்.

சுக்கிலத்தைக் கட்டுமந்தச் சுக்கிலதோ டம்போக்கு
மக்கணமே கக்கடுப்பை யாற்றுங்கா—ணெக்காலிங்
கோதுளத்தெண் ணாதமலர்க் கொம்பனையாய் தித்திக்கு
மாதுளத்தின் பீசு வலி.

மாமரம்

மாமர வேர்ப்பட்டையால் சீதபேதி, வயிற்றுக் கடுப்பு, வாந்தி நீங்கும்.

சீதரத் தப்போக்கைச் சிக்கெனவே தான்பிடிக்கும்
போதவயிற் றுக்கடுப்பை போக்குங்கா—ணோதுகின்ற
வாந்தியையுந் தீர்க்கும்வெளி மாமரத்தின் வேர்ப்பட்டை
பூந்துகிலின் மாதே புகல்.

மாம்பிஞ்சால் முக்குற்றம், அரோசகம், சர்த்தி, அக்கினிமந்தம் நீங்கும்.

காவைவாத பித்த கபமருசி வாந்தி
கவைவறுத்த மந்தமெனுந் தோட—மிவையெல்லாங்
காதத்துக் கப்புறம்போங் கான மடமயிலே
சூதத்தின் புன்வடுவைத் துய்.

## மாவிலிங்கம்

இது ஒரு மரவகை. இதனால் சுரம், பாம்புவிடம், மகா வாத நோய் போகும்.

சுரங்கடி யின்றோட தொலையாத வாத
முரம்பெறு விஷங்க ளொழியும்—அரவுஞ்
சருமா வடுவேலுங் கண்டஞ்சுங் கண்ணா
யொருமா விலங்குக் குரை,

மாவிலிங்கப் பட்டையால் வாதநோய், சன்னி நோய், விடம், நீங்கும்.

மாவிலிங்கப் பட்டையினால் வாதமொடு சன்னிகளும்
பாவுகின்ற கல்லடைப்பும் மாறுமே—மாவெருக்கம்
சடைசன்னி வாதம் பலவிஷம்போக் குங்கருவேற்
பட்டைநா நோய்தீர்க்கும் பார்.

## மிதி பாகல்

இது ஒரு கொடி வகை. இதுபித்தம், கரப்பான் உண்டாக்கும்• பாதரசம், அரிதாரம், பாடாணம் முதலியவைமுறிக்கும்.

பித்தமொடு வாதப் பெருக்கைமிக வுண்டாக்குந்
தத்து கரப்பானைத் தருவிக்கும் — பற்றிரத
தாராபா டாணந் தமைமுறிக்குந் தப்பாது
காரவல்லி யாம்பாகற் காய்.

## மிருதார் சிங்கி

இது ஒரு பாடாண வகை. இதனால் பித்த விரணம், கரப்பான், கிரந்தி, குட்டம் விலகும்.

மிருதார சிங்கெனவே மெல்லாவுரைத் தாலு
முருவா ருடைகரப்பா னோடு — மொருவிதமோ
சாலச் சிரங்குபுண்ணு ந் தப்பாம லாறிவிடும்
வேலொத்த கண்மயிலே விள்.

## மிளகரணை

இது ஒரு செடி வகை. இது கபம், அசீரண வாயு, சயம், காசம், வயிற்றுப்பிசம் நீக்கும்.

ஐய்ய மகற்று மசீரணவா தம்போக்குஞ்
செய்யபித்த சூலதனைத் தீர்க்குங்காண் - பைய்யவரு
பீளை யிரும விரைப்புப் பிசந்தொலைக்கு
நாளு மிளகரணை நன்று.

## மிளகு

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் பாண்டு, குளிர்ச்சுரம், கபம், அரோசகம், மூலம், இருமல், பக்கவாதம், அசீரணம் நீங்கும்.

சீதசுரம் பாண்டு சிலேத்மங் கிராணிகுன்மம்
வாத மருசிபித்த மாமூல — மோது சன்னி
யாசம்பஸ் மார மடன்மேகங் காசமிவை
நாசங் கறிமிளகி னால்.

கோணுகின்ற பக்கவலி குய்யரோகம் வாத
கோணிதங் கழுத்திற்குட் டோன்றுநோய் - காணரிய
காதுநோய் மாதர்குன்மங் காமாலை மந்தமென்றீ
ரேதுநோய் காயிருக்கி லீங்கு.

## முசுட்டை

இது ஒரு கொடி வகை. வாதகோபம், கபதோடம், பிரமேகம் நீர்தினவு, படை, சிறுசிரங்கு போன்றவற்றை நீக்கும். மலத்தை யிளக்கும்.

மாதே முசுட்டையது வாதமோ டையத்தைத்
தீதே புரிநீரைத் தீர்க்குங்காண் - வேதனைசெய்
வன்மலத்தைத் தள்ளும் வறட்சி சொறிசிரங்கைச்
சன்மமறப் போக்குநிசந் தான்.

## முசுமுசுக்கை

இது ஒரு கொடி வகை. இது இறுகிய கோழை, மார்புநோய், குன்மம், பித்தாதிக்கம் நீக்கும்.

கந்தம் பரவு களிச்சளியும் புண்விடமு
மந்தம் பெறுவிடமு வாந்திகளும் — மந்தம்
பெருகுரங்குக் கிச்சூரும் பித்தமு மிருக்கா
திருகுரங் குக்கைவெருக் கே.

முசுமுசுக்கையிலையால் காசம், கோழை, சுவாசம், புகைக்கம்மல், சலதோஷம் நீங்கும்.

இருமலுட னீளை யிரைப்பு புகைச்சன்
மருவுகின்ற நீர்த்தோட மாறுந் — திருவுடைய
மானே முசுமுசுக்கை மாமூலி யவ்விலையைத்
தானே யருந்துவர்க்குத் தான்.

## முசுறுமுட்டை

இது ஒரு கடைச்சரக்கு. இதனால் மகாவாதம், மந்தம், இழுப்பு விலகும்.

துள்ளு மடல்வாதத் துன்பமந்தம் வல்லிசுவு
தள்ளு வலிக்குழிச தக்கபநோ — யுள்ளில்
விகிறுசன்னி பாதம் விலகும்தூ கத்தார்
முசுறுமுட் டைக்குணத்தை முன்

## முட்காவேளை

இது ஒரு செடிவகை. இது வாததாகம், மந்தாக்கினி, அதிசாரம், வெப்பம் போக்கும்.

தாகாகி மந்தமதி சாரநா வறட்சி
போகாச் சுரந்தாபம் போக்கமருந்—தோகையிற்
சிக்காவேளைப் பதத்தைத் தின்னச்செய் விக்கவென்றான்
முக்காவே ளைப்பதத்தை முன்

## முடக் கொற்றான்

இது ஒரு கொடி வகை. இதனால் கீல் பிடிப்பு, சினைப்பு, கிரந்தி, கரப்பான், வாதம், மலக்கட்டு நீங்கும்.

சூலைப் பிடிப்பு சொறிசிரங்கு வன்கரப்பான்
காலைத் தொடுவளியுங் கனமலமுஞ் — சாலக்
கடக்கத்தா னோடிவிடுங் காசினியை விட்டு
முடக்கற்றான் றன்னை மொழி.

## முத்து

இது நவரத்தின வகைகளுள் ஒன்று. இதனால் சுரம், வீக்கம், மெலிவு, விழிநோய், வீரியநாசம் போகும்.

அத்திசுரஞ் சோபை யருசிதுர்ப் பலங்கண்ணோய்
பித்துவிடஞ் சீதளநோய் பேசுகபஞ்—சத்தத்
தயிரிய நட்டத்தோடு தாதுநட்ட மும்போ
முயிறுநண் முத்திருந்தா லோது.

## முத்துச்சிப்பி

இது ஒரு கடைச் சரக்கு. இதனால் கபகோழை, காசம், சய ரோகங்கள் விலகும்.

ஈளை விலகு மிருமல் குடியோடுங்
கோம்விழு நங்காய்நீ கூறக்கேள்—வாளுடலிற்
கப்பிவரு மேகக் கட்டியையும் போமுகத்தின்
சிப்பிதனைக் கண்டவிடத் தே

## முந்திரிகை

இது ஒரு கொடிவகை. இதுவே திராட்சை எனப்படும். இதனால் வாதபித்த கபதோடங்களும், உடல் அழற்சியும் நீங்கும். விந்துவும் ரத்தமும் பெருகும்.

முந்திரிகை கள்ளுக்கு மூடுதிரி தோடம்போம்
விந்துறுமி ரத்தமுறும் வெப்பாலும்—இந்தவகைக்
கள்ளெல்லாங் காமமுறுங் காமமுற்றா ருண்டாக்கால்
விள்ளரி தோடமில்லை மெய்

முந்திரி கைக்கனி முந்தாதி மந்தமாம்
கந்தம லர்குழலாய்க் கண்ணுக்காம்—வந்த
சுரக்கு மிகுதாப சோபமகன்று கார்க்கும்
பிரமேகம் போகுங் காண்.

## முந்திரிப்பருப்பு

இது ஒரு மரத்தின் வித்துவகை. இதனால் பித்தவாத தொந்தம், தாது, அக்கினி மாந்தம் உண்டாகும்.

மெத்த வினிப்பாகு மென்கொடியே தின்றக்காற்
பித்த வனிலம் பிறக்குங்காண்—சத்தியமா
யிந்திரியப் புஷ்டி யிளைக்காது மாந்தமுண்டா
முந்திரியி னற்பருப்பான் முன்.

## முருங்கை

இது ஒரு மரவகை முருங்கைப் பிஞ்சால் சுரம், வெப்பம், விந்துநட்டம் நீங்கும்.

சிக்குருக்குப் பிஞ்சத்திச் சுரத்திற் குஞ்சநிக்கு
மக்குருக்கு ருப்ப மரோகிகட்குஞ்—சுக்கிலத்தின்
கொச்சை யுறவருந்திக் கூறுவற்கு மாமதனைப்
பச்சையுற வருந்திப் பார்

**முருங்கைக்காய் :** இது பல பிணிக்கு மருந்தாகும். கபம் நீங்கும். கண்குளிரும். விந்தூறும்.

சொல்லுநோய் கட்கெல்லாந்தோடமில்லை மையமுறும்
பல்லுயிர்க் குந்தாதுவிந் தூறும்—வில்லார்
பெருங்கைக்கா மன்றுதிக்கும் பெண்ணே நறிய
முருங்கைக்காய் தன்னை மொழி.

வாதமறுந் தாதுமிகு மத்தமிக வுண்டாகும்
காதலுடற் குச்சுகமாய் கண்குளிரு—மீதுநிறை
வேருங்காயு மிலையும் வெந்தநீ ரும்பூவு
மாகுங்கா ணாமுருங்கைக் காம்.

**முருங்கைஇலை, பட்டை, வேர் :** முருங்கைப் பிஞ்சால் திரிதோடம் நீங்கும். பூவினால் கண்ணுக்குக் குளிர்ச்சி உண்டாகும். இலை சுரத்தையும், பட்டை விஷத்தையும், வேர் வாத கோபத்தையும் நீக்கும்.

பிஞ்சாற் றிரிதோடம் பேரும்பூ வாற்போக
மிஞ்சிவிழிக் குக்குளிர்ச்சி யுஞ்சேரும்—பிஞ்சிலைவெப்
பாற்றுந்தோ நஞ்சறுக்கு மவ்வேர்வா தச்சினத்தை
மாற்று முருங்கை மரம்.

**முருங்கைப்பிசின் :** இது அதிமூத்திரம், குட்டமேகம், தொந்த வாதம் நீக்கும். அழகை உண்டாக்கும்.

முந்துநீ ரைத்தடுக்கு மோரைப்போ லேயொழுகும்
விந்தை தடிப்பித்து மேனிதருந்—தொந்தக்
கரியநிற வாயுதனைக் காதிவிடு நாளும்
பெரிய முருங்கைப் பிசின்.

**முருங்கைப்பூ :** இது பித்ததோடம், அரோகம் நீக்கும் கண் குளிர்ச்சி தரும்.

விழிகுளிரும் பித்தம்போம் வீறருசி யேகு
மழிவிந்து வும்புஷ்டி யாகு—மெழிலா
ரொருங்கை யகலாக் கற்புடை வாணகையே
முருங்கையின் பூவை மொழி.

**முருங்கைப்பட்டை :** இதனால் கபதோடம், சுரம், வாத, தோடம் நீங்கும்.

முருங்கைவேர் பட்டைக்கு மூடு கபத்தே
டொடுருங்குறாச் சன்னிசுர மோடு—மருங்கனக
வட்டைப் பொருமுலையாய் வாய்வொடு விஷங்களுமேற்
பட்டைக்குப் போமே பறந்து.

**முருங்கை இலை :** இது அக்கினி மந்தம், உட்சூடு, தலை நோய், கண்ணோவு நீக்கும்,

செறிமந்தம் வெப்பந் தெரிக்குந் தலைநோய்
வெறிமூர்ச்சை கண்ணோய் விலகு—மறமே
நெருங்க யிலையொத்தவிழி நேரிழையே நல்ல
முருங்கை யிலையை மொழி.

**முருங்கைவிதை :** இதனால் உடல் பலக்கும். இது நீரைப் பெருக்கும்.

நீரான விந்துவுமே நீண்ட பிசினாய்த் தடிக்குஞ்
சீராக மேனி செழிக்குங்காண்—பாராய்
முருங்கை யுறுவிதையான் மெய்த்தவிலை யீர்க்கோ
வொருங்கையுறு நீரிறக்கு முன்.

## முல்லை

இது ஒரு கொடிவகை. இது மனநோய், வெப்பம் நீக்கும்.

முல்லையெனு மூசிவல்லி மொய்த்தமல ரேவர்க்கு
மொல்லை மனநோயை யொழிக்குங்காண்—மெல்ல
வழலைத் தணிக்கு மரோசத்தைப் போக்கு
மதனைமெலழி யாயறிந்து வை.

## முலைப்பால்

இது எழுவகைத் தோடங்கள், வெப்பம், வாதம், பித்தம், திரிதோடம் விலக்கும்.

தன்னியமென் றோதிச் சருவதோ டங்களும்போம்
உன்னி யதாப மொழியுங்காண்—சன்னியொடு
வாதசுரம் பித்தசுரம் வண்பகச்சு ரந்தணியுங்
கோதில் வலுமையுண்டாங் கூறு.

இருந்தோடம் போக்கு மிகற்கிர்ச்சந் தீர்க்குங்
அருந்து மருந்தி னனுபானம்—பொருந்தும்
அஞ்சனத்திற் காகு மனல்வறட்சி நீக்கிவிடும்
பஞ்சினடி மாதர்முலைப் பால்.

## முலைப்பால் வெண்ணெய்

இதனால் கண், கை, கால், நாசி இவ்விடங்களில் உண்டாகும் எரிச்சல் நீங்கும்.

கண்ணெரிவுங் கையெரிவுங் காலெரிவு நாசிகளி
லண்ணெரிவு மண்ணி லகன்றிடுங்காண்—தண்ணா
ரலைப்பால் மாண்பது கணிசெய்யு மாதர்
முலைப்பால்வெண் ணெய்க்கு முரிந்து.

## மூக்குரட்டை

இது ஒரு கொடி வகை. இது நமைச்சல், வாத நோய் நீக்கும்.

சீத மகற்றுந் தினவடக்குங் காந்திதரும்
வாத வினையை மடிக்குங்காண்—பேதி
கொடுக்குமதை யுண்டாக்காற் கோமளமே பித்த
மடுக்குமே மூக்குரட்டை யால்

## மெருகன்கிழங்கு

இது ஒரு செடியின் கிழங்குவகை. இதனால் கட்டி, பிரமேகம் வயிற்று நோய், கபநோய் போகும். உடலுக்குக் குளிர்ச்சி தரும்.

மெருகன் கிழங்கதுதான் மேகத்தைப் போக்குந்
துருவுகுன்ம மூலந் துடைக்கும்—பெருமீனை
யத்திசுரம் ஐய்யறுக்கு மங்கங் குளிர்விக்கு
மத்திமுலை மாதே யறி.

